# அயோத்திதாசர் சிந்தனைகள்

(இலக்கியம்)

II

தொகுப்பாசிரியர்

ஞான. அலாய்சியஸ்

பிரதி உருவாக்கம்:

The Christian Institute for the Study of Religion and Society New Delhi

வெளியீடு:

நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்

தூய சவேரியார் (தன்னாட்சி) கல்லூரி

பாளையங்கோட்டை - 627 002

மின்னியமாக்கல்

**சடையப்பன் கந்தசாமி**

## இலக்கியம்

### 1. திருவள்ளுவ நாயனார் பறைச்சிக்கும் பார்ப்பானுக்கும் பிறந்தாரென்னும் பொய்க்கதா விவரம்

இந்துதேச முழுவதும் புத்த தன்மமாம் மெய்யறம் பரவியிருந்த காலத்தில் இந்திரவியார சங்கங்களில் தலைமெயாய் அறஹத்துக்கள் என்றும், பிராமணர்கள் என்றும், அந்தணர்கள் என்றும் வழங்கிவந்த ஞானகுருக்கள் நீங்கலாக, சாக்கையர் என்றும், வள்ளுவர் என்றும், நிமித்தகர் என்றும் பெயர்பெற்று அரசர், வணிகர், வேளாளர் என்ற முத்தொழிலாளருக்கும் கன்மகுருக்களாக விளங்கி தன்மகன்மங்களை நடாத்தி வந்தார்கள்.

**முன்கலைதிவாகரம்**

வள்ளுவர் சாக்கையரெனும் பெயர் / மன்னர்க்குள்

படுங்கருமத்தலைவாக்கொக்கும்.

**பின்கலைநிகண்டு**

வருநிமித்தகன் பேர் சாக்கை / வள்ளுவனென்றுமாகும்.

இவர்கள் பூர்வம் வடதேசத்தில் கணிதவல்லபத்தால் சாக்கையர் என்னும் பெயர் பெற்று கலிவாகு, குலவாகு, வீரவாகு, இட்சுவாகு என்னும் சக்கிரவர்த்தி களாக தலைத்தார் வேந்தர்களாக விளங்கிவந்த அனுபவத்தை வடநாட்டில் தற்காலம் வழங்குஞ் சாக்கையர் தோப்பென்னும் நந்தவனத்தாலும் அங்கு கற்பலகைகளில் அடித்திருக்கும் சிலாசாசனங்களாலுந் தெரிந்து கொள்ளலாம்.

**மணிமேகலை**

சாக்கையராளுந் தலைத்தார்வேந்தன் /ஆக்கையுற் றுதித்தனனாங்

கவன்றானென.

இதே குடும்பத்தார் தென்னாட்டில் வந்து குடியேறியபோதும் சாக்கையர் வள்ளுவர், நிமித்தகரென்னும் பெயரால் தன்மகன்மங்களை நிறைவேற்றி வந்தபோதினும் இவ்விடம் உள்ளோர் வள்ளுவர் என்றே பெரும்பாலும் வழங்கி வந்தபடியால் திருநெல்வேலிக்கு அருகே உள்ள ஓர் தேசத்தை நாளதுவரையிலும் வள்ளுவர் நாடென்று வழங்கி வருகின்றார்கள். இவர்களே பௌத்தமார்க்க அரசர்களுக்கு கன்மகுருக்களாக காரியாதிகளை நடாத்திவந்த விவரம்.

**சீவகசிந்தாமணி**

பூத்த கொங்குபோற் பொற்சுமந்துளா ராச்சியார் நலக் காசறுணனான் கோத்தநித்திலக் கோதைமார்பினான் வாய்த்தவன்னிரை வள்ளுவன் சொனான்.

**சூளாமணி**

நிமித்தகனுரைத்தலு நிறைந்த சோதியா / னுமைத்தகையிலாததோ ருவகையாழ்ந்து கண்

ணிமித்திலனெத்துணைப் பொழுது மீர்மலர்ச் / சுமைத்தகைநெடு முடி சுடரத்துக்கினான்.

தலைமகன்றானடக்காகச் சாக்கைய / நிலைமெகொண் மனைவியாநிமிர்ந்த பூந்துணர்

நலமிகு மக்களா முதியர் தேன்களா /குலமிகுங் கற்பகங் குளிரத்தோன்றுமே.

இத்தகைய வள்ளுவ அரசவம்மிஷ வரிசையில் வடமதுரைக்கச்சனென்னும் அரசனுக்கும் உபகேசி என்னும் இராக்கினிக்கும் செந்நாப்புலவராகும் ஓர் மகவு உதித்து நாயனார் என்னும் பெயர் பெற்று வளர்ந்து பலதேச வியாரங்களுக்குஞ் சென்று தனது குலகுருவாம் சாக்கைய முநிவரால் போதித்துள்ள திரிபீட வாக்கியங்களாம் மூன்று பேதவாக்கியங்களையும் அதன் உபநிட்சயார்த்தங்களையும் தெளிந்து.

தின்னனூருக்கு மேற்கே இந்திரவியாரத்துள்ள புத்த சங்கத்தில் சேர்ந்து சமணநிலை கடந்து அறஹத்துவாம் அந்தணநிலைபெற்று தனது குலகுருவாம் சாக்கையமுநிவர் அருளிய முதல் நூலாந் திரிபீடங்கள் என்னும் திரிபேத வாக்கியங்களும் அதனுட் பொருட்களும் மகடபாஷையாம் பாலியிலும், சகடபாஷையாம் சமஸ்கிருதத்திலும் இருந்து சங்கங்களில் தங்கியுள்ள சமணர்களுக்கும் பிராமணர்களுக்கும் உபயோகப்படுவதன்றி ஏனைய மனுக்களுக்கு உபயோகம் இல்லாமல் இருந்தபடியால் அதனை திராவிட பாஷையாம் தமிழ்பாஷையில் திரிபீடகம், திரிபேத வாக்கியம் என்னும் முதநூலுக்கு முப்பால் திரிக்குறள் என்னும் வழி நூலியற்றினார்.

**திரிக்குறள் சாற்றுக்கவி - நல்கூர்வேள்வியார்**

உப்பக்க நோக்கி யுகேசி தோண்மணந்தா / னுத்தாமாமதுரைக்

கச்சென்ப - விப்பக்க

மாதானுபங்கி மறுவில் புலச்செந்நாப் / போதார் புனற்கூடற்கச்சு.

**நன்னூல்**

வினையினீங்கி விளங்கியவறிவின் /முனைவன் கண்டது முதனூலாகும்.

முன்னோன் நூலின் முடி பொருங்கொத்து / பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி யழியாமரபினது வழிநூலாகும்.

**பின்கலை நிகண்டு**

பூமலிய சோகிநீழற் பொலிந்தவெம் மடிகள் முன்னா
ளேமமா முதநூற்சொல்ல / வள்ளுவ ரியன்றபாவாற்
றாமொரு வழிநூற் சொல்ல / சார்புநூற் பிறருஞ்சொல்ல
தோமிலா மூன்று நூலுங் துவமென வுதித்தவன்றே.

திருக்கழுகுன்றம் சீர்காழிதம்பிரான் கையேட்டுப்பிரிதியிலும் பாகு பலினாயனார் கையேட்டுப்பிரிதியிலுமுள்ள காசிநாதராம் புத்தபிரான் கூறியுள்ள முதநூலைத் தழுவி வள்ளுவர் வம்மிஷ வரிசையைச் சார்ந்த நாயனாரியற்றிய வழிநூலுக்கு புத்தசங்கத்தோருள் பொன்முடியா ரருளிய சாற்றுக்கவி.

**திரிக்குறள் சாற்றுக்கவி - பொன்முடியார்**

கானின் றதொங்கலாய் காசிபனா தந்ததுமுன்
கூனின்றளநற் குறளென்ப நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தானின்றளந்த குறள்.

**திரிக்குறள் சாற்றுக்கவி - நரிவெருத்தலையார்**

இன்பம் பொருளறம் வீடென்னு மின்னான்கு
முன்பறியச்சொன்ன முதுமொழிநூன்-மன்பதைகட்
குள்ளவரிதென் றவைவள்ளுவருகலம்
கொள்ள மொழிந்தார் குறள்.

2:1, சூன் 17, 1908

**திரிக்குறள் சாற்றுக்கவி - வெள்ளிவீதியார்**

செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே - செய்யா
வதற்குரியாரந்தணரே யாராயினேனை
யிதற்குரிய ரல்லாதாரில்.

ஆதியிற் புத்தபிரானாற் கூறிய திரிபீடவாக்கியம் என்னும் முப்பேத வாக்கியங்களும் வரிவடிவட்சரமில்லாது மகடபாஷா ஒலி வடிவாய் செய்யா மொழியாய் ஒருவர் போதிக்கவும் மற்றவர்கள் கேட்கவுமான சுருதியாயிருந்து,

மக்களின் முதல் சீர்திருத்த திரிபீடவாக்கியங்கள் செய்யாமொழியாய் சுருதியிலிருப்பதால் மனதில் தங்கி மறையும் என்று எண்ணி அவலோகிதராகும் புத்தபிரான் சகடபாஷையாம் சமஸ்கிருதத்தையும், திராவிட பாஷையாம் தமிழையும் வரிவடிவிலியற்றி திரிபேதவாக்கியங்களையும் அதின் உபநிட்ச யார்த்தங்களையும் வரைந்துள்ள போதினும் ஒவ்வோர் புத்த

சங்கங்களிலுமிருந்த சமணர்களும், பிராமணர்களும் புத்ததன் மங்களை பெரும்பாலும் சகட பாஷையில் உபயோகித்துவந்தார்கள்.

அதினால் சகல குடிகளுக்கும் மறை, மறை என்று விளங்காதிருந்ததைக் கண்ட திருவள்ளுவ நாயனார் தனது குலகுருவாம் சித்தார்த்தரின் அரசவம்மிஷ வரிசையில் வடமதுரையை அரசாண்ட கச்சனென்னும் அரசனுக்கு மகவாய் பிறந்து சகல கலைகளுங் கற்று தெளிவுற்று (உப்பக்கநோக்காம்) உள்விழி பார்வையின் ஞானக்கண்ணிலைகால் உதித்தவராதலின் தனது அரச போகங்கள் யாவையுங் கருதாது ஞானவிசாரிணையால் பலதேச புத்த சங்கங்களிலுஞ் சென்று தேற விசாரிணைபுரிந்து தின்னனூருக்கு அருகே உள்ள இராகுல வியாரத்தில் தங்கி தனது அரசாங்க பரம்பரையில் நிகழ்ந்துவந்த புத்ததன்ம அரசநீதிகளையும், அரண்களையும், அமைச்சர் விதிகளையுந் தெள்ளற விளக்கியதுமன்றி ஒழுக்கம் சீலம் ஞானம் இவைகளையும் விளக்கி பாயிரமாகும் பத்துப்பாடலிலும் புத்தபிரானாகும் ஆதியுங்கடவுளை வாழ்த்தி அவர் ஓதியுள்ள தன்மபீடம், சூத்திரபீடம், வினையபீடம் ஆகும் முப்பீடங்களாம் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்ப பேதவாக்கிய உட்பொருளாம் கன்மபாகை, அர்த்தபாகை, ஞானபாகையின் கருத்துகளைத் தெள்ளற விளக்கி ஆயிரத்தி முந்நூற்றி முப்பது அருங் குறட்பாவால் அறத்துப்பால், பொருள்பால், காமப்பாலெனவகுத்தெழுதி தனது தந்தையாகிய

கச்சனென்னும் அரசனுக்கு வாசித்துக்காட்டி அவனை மனமகிழச் செய்தார்.

**திரிக்குறள் சாற்றுக்கவி - கீரந்தையார்**

தப்பா முதற்பாவாற் றாமாண்டபாடலினான்
முப்பாலிநாற்பான் மொழிந்தவ - ரைப்பாலுந்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழ
தெய்வத் திருவள்ளுவர்.

அதே அறவோர் பள்ளியில் அறஹத்து நிலையடைந்த நாயன் மற்ற புத்த சங்கத் தோர்களுக்கும் தெள்ளற விளக்கி அவரவர்கள் கவிகளைப் பெற்று சிலநாட்சென்று சித்திரை சதுர்த்தசி பின்னாள் அமரவாசியில் நிருவாணதிசை அடைந்தார்.

அக்கால் புத்த சங்கத்தோரும் குடிகளுந் தேகத்தை தகனஞ்செய்து தாதுகோபத்தை அதே அறப்பள்ளி மத்தியில் அங்கலயஞ் செய்த சிலகாலங்களுக்குப் பின் வியார மாறுதலால் அடியில் குறித்துள்ள தியான பஞ்சுரத்தினப்பாவை நற்பலகையில் எழுதி அவ்விடம் நாட்டினார்களாம்.

**சிலாசாஸனப் பெயர்ப்பு**

**நல்லுரையூரர் நாயனாரை சிந்தித்த தியானபஞ்சுரத்தினப்பா**

மலர்கலியுலகத்துன்னிய மேலோன் வள்ளலெண்குணன றவாழி
குலகுமரபோன் கொற்றவனென்னுங் குடமதுராபுரிகச்சன்

தவமதிலுதித்த தண்டமிழ்மறையோய் சருவமுமுணர்ந்த பாவலனே
தலமெலா முதற்சீராகுல வியார சங்கமெய் நாயனேயருளே.
சங்கமெய்க்குருவாய் சாதனத்துரைந்து தரணியோர்
குறைமிகுவாற்றி
பொங்கிரு வினையின் பகுப்பினை யுணர்த்தி புத்த முதீயந்த
மெய்ப்பொருளே
தங்குமின்னமுதே தாதை முப்பால்போற் சமணமுற்றோர்க்
கருளூட்டுந்
திங்கணன் முடியோன் வழிவழிகாட்டுந் செந்ந நற்புலவ நாயகனே.
செந்நாப்புலவர் சீர்பெயர்பெற்றுத் தெண்ணிறை திரிக்குற ளருளி
நந்நாவலர்க்கு நாவுற மீயந்து நானிலத்தோர் நலமுற்றார் புந்நாவடி
யேன் போற்றவுமறியேன் புநிதமெய்ஞ்ஞான மாவமுதே திந்தநூர்
மேலோய் திருவளு ரானீர் சின்மய நாயனே யருளே.
சின்மயானந்த நாயனே நின்னை சேவை செய் தேற்றுதற் கருளாய்
முன்னுமிச்சங்க முதலவனாகி மேடமே சதுர்த்தசி பின்னாள்
துன்னிய முத்தித் தூயமெய்ப்பொருளாஞ் சுடரொளி காட்டிய
வருளே
மின்னு பூம்பிண்டி வேந்தனன் வழியோய் வள்ளலுண் நாயனே
யருளே.
வள்ளலந் நிறைந்த வள்ளுவர் வழியோய் மாதவ ரேற்று
மெய்ஞ்ஞான

உள்ள மேகொண்டா யுலகெலா முணர்ந்தாய் உமது முப்பா லதையுணர்ந்தோர்
கள்ளமே யகற்றி காட்சியை பெறுவர் கமலநாயகன் கழல் கண்டு
வள்ளுவநாயன் காட்டிய வழிநூல் மணந்திரு வள்ளுவரூரே.

என்னும் ஐந்து பாடலும் விபூதி விளக்கம் பத்தும், சகசவிளக்கம் நூறும் அடங்கியுள்ள ஓர் ஓலைச்சுவடி கொடுக்கப் பெற்றோம்.

எவ்வகையில் என்னில் இராயப்பேட்டையைச் சார்ந்த புதுப்பேட்டையில் வசித்திருந்த சித்தூர்ஜில்லா தாசில்தார்ம அஅ-ஸ்ரீ ஏ.ஜெயராம் நயினாரவர்களை இரத்தினகரண்டகம், வளையாபதி, குண்டலகேசி, அசோதரை காவியமுதலிய புத்ததன்ம நூல்கள் கிடைக்கும் ஆயின் சேகரித்துக் கொடுக்க வோண்டும் என்று கேட்டிருந்தோம். அக்கால் அவர் வீடூர் முதலிய கிராமங்களுக்குச் சென்று திரும்பிவந்தபோது சகசவிளக்கம் நூறு பாடலும் வீபூதி விளக்கம் பத்து பாடலும் பஞ்சரத்தினம் ஐந்து பாடலும் அடங்கி உள்ள ஓர் சுவடியும், அசோதரை காவியம் அச்சிட்ட சிறு புத்தகம் ஒன்றும், பாகுபலி நாயினார் பரம்பரையோரால் கிடைத்ததென்று நமக்களித்தார். அவைகளை முற்றிலும் வாசித்து இப்பஞ்சரத்தினத்தைக் கண்டவுடன் மனங்கலங்கி யாம் குடியேற்றஞ் சென்று வரும்போது திருவள்ளுருக்குச் சென்று இப்பஞ்சரத்தினப்பா

வடித்துள்ள இடங்களைத் தேடியும் கிடையாமல் அவ்விடமுள்ள விவேகந் தங்கிய சில பெரியோர்களை விசாரித்தோம்.

2:2. சூன் 24, 1908

அப்பெரியோர்கள் யாவரென்பீரேல் வேலூர் மார்க்கலிங்கப்பண்டாரம் மைத்துனர் முத்துசுவாமி ஜோஷியரவர்களும், காசி விசுவநாத முதலியாரவர்கள் சம்பந்தியாரிளவல் சௌந்திரபாண்டிய முதலியாரவர்களுமேயாம். அவ்விரு வரையும் அணுகி இச்சிலாலயத்தில் ஏதேனும் சிலாசாசனக் கவிகளுள்ள தாவென்று உசாவினோம். அதில் சௌந்திரபாண்டிய முதலியாரவர்கள் சற்று நிதானித்து வாசக சிலாசாசனங் கேட்கின்றீரா அன்று பஞ்சரத்தினப் பாக்களடித்துள்ள சிலாசாசனங் கேட்கின்றீரா என்றார். அதற்கு நாம் மாறுத்திரமாக பஞ்சரத்தின சிலாசாசனமே என்று கூறினோம்.

அப்பஞ்சரத்தின சிலாசாசனந் தோன்றிய காரணம் யாதென்றால் இத்திருவளூர் ஆலயத்திற்குப் பறையர்களே திரளாக வந்து பூசிப்பதும் அமாவாசைதோறும் அவர்களால் சேருந்தட்சணையுந் தேங்காய் பழமும், மாவும், வெல்லமும் அதிகமாக வரும் வழக்கத்தைக் கண்ட சில சாதியார் இக்கோவிலை அபகரிக்க ஏற்பட்டதினால் வள்ளுவர்களில் சிலர் அவர்களைக் கண்டித்து திருவள்ளுவர் குறிப்பு மாறாதிருப்பதற்கு நல்லுரையூரர் என்னும் பாணரால் பஞ்சரத்தின் தியானப்பா பாடி கற்பலகையில் அடித்து

முகப்பிற் புதைத்திருந்தார்களாம். அப்பஞ்சரத்தினப்பாவை முத்துசுவாமி ஜோஷியர் பாடவும் கேட்டோம். ஆனால் என்னிடத்துள்ளப் பாடலைக் கொண்டு போகாததினால் ஒத்துப்பார்ப்பதற்கில்லாமல் போயது. ஆயினும் அச்சிலா சாசனத்தை யார் கொண்டுபோய் இருக்கலாம் என்று விசாரித்ததின் பேரில் சௌந்திர பாண்டிய முதலியாரவர்கள் கூறியது யாதெனில் - அந்த சிலாசாசனத்தை எடுத்து இந்தக் குளத்தில் போட்டுவிட்டிருப்பார்கள் அல்லது பறையர்கள் வெகுவாக இக்கோவிலுக்கு அமாவசைதோறும் வருவதை மாற்றிவிடுவதற்கு அதோயிருக்கும் சிறியக் கோவிலைக்கட்டி அதற்குப் பறைப்பொருள் கோவிலென்று பெயர் வைத்து அதில் பறையர்களைப் போம்படி உத்திரவு செய்திருக்கின்றார்கள். ஒருகால் அக்கட்டிடத்திற்கு சிலாசாசனத்தை அடிப்படைப்போட்டிருப்பினும் போட்டிருப்பார்களென்று கூறினார்.

அதற்கு யாம் இஃது வைஷ்ணவர் கோவில் என்று வழங்குவதை பௌத்தர் மடமென்றும், திருவள்ளுவநாயனாரை அரசபுத்திரனென்றும் எவ்வகையில் கூறலாம் என்றோம்.

அதற்கு மாறுத்திரமாக முத்துசுவாமி ஜோஷியர் கூறியது யாதெனில் - வேலூர் வினயலங்காரர் வியாரமும், தின்னனூர் திருவள்ளுவர் வியாரமும் ஏககாலத்தில் கட்டியதென்றும் திருவள்ளுவர் நிருவாணத்திற்கு முன்பு இதை இந்திரவியாரம்

என்றும் இராகுலாவியாரம் என்றும் வழங்கிவந்த வார்த்தையைக் கொண்டே தற்காலம் அனுபவித்துவரும் வைணவசமயத்தார் இராகுலா, இராகுலர் என்னும் புத்தருடைய மைந்தன் பெயரை இராகவர், இராகவர் என்று மாற்றி வீரராகவ ராலயம் என்று பெருக்கிக்கொண்டபோதினும் இஃது பௌத்தர்மடமே என்று ரூபிப்பதற்கு உள்ளிருக்கும் பௌத்தர் நிருவாண சிலையே போதுஞ் சான்றென்று கூறினார்.

இதுவுமன்றி திருவள்ளுவநாயனார் அரசபுத்திரன் என்பதை இப்பஞ்சரத்தினம் கூறுவதுமன்றி திரிக்குறளுக்கு சாற்றுக்கவி கொடுத்துள்ள புத்தசங்கத்தாராகிய, நல்கூர் வேள்வியார் வெண்பாவிற்கு வேலூர் மார்க்கலிங்க பண்டாரமவர்கள் இயற்றியுள்ள கருத்துரையினாலுந் தெரிந்துக்கொள்ளலாம் என்று தன்னிடத்துள்ள திரிக்குறள் ஓலைப் பிரிதி ஒன்றையும் எமக்களித்துள்ளார்.

**நல்கூர் வேள்வியார்**

உப்பக்க நோக்கி கேசிதோகன் மணந்தானுத்தரமா மதுரக்கச்சென்ப - விப்பக்க

மாதானுபங்கி மறுவில் புலச்செந்நாய் போதார் புனற்கூடற்கச்சு.

கருத்துரை :உத்தரமா மதுரைக் கச்சென்ப = வட மதுரைக் கச்சனென்னுமரசன், உப்பக்கநோக்கி = தன துள்விழி பார்வை தியான காலத்து, உபகேசி தோண்மணந்தான் = மனைவி

உபகேசியென்பவளைச் சேர்ந்து, விப்பக்க = விட்டகுறையாமல், மாதானுபங்கி = உபகேசி கருப்பத்திற் கட்டுண்டு, மறுவில் புலச்செந்நாப் = உருவிற் செவ்விய நாவல்ல தெய்வப்புலவரென்று சகலராலு மதிக்கத்தக்க, புனற்கூடற்கச்சு = சாந்தநிலைக்கூடும் பாக்களை, போதார் = போதித்தார் வள்ளுவநாயனாரென்பதாம்.

தந்தை மதியல்லவோ அடண்ணே வந்தவிதிகள் எல்லாம் என்று மேதாவியர் கூறியுள்ள வாக்குக்கு ஆதாரமாய் தந்தையார் உள்விழிநோக்கின் மகத்துவக் காலத்துத் தோன்றிய மகவென்று விளக்குவான் வேண்டி நல்கூர் வேள்வியார் மேற்குறித்துள்ள வெண்பாவைக் கூறியிருக்கின்றார்.

தந்தை மதியாலுண்டாம் மைந்தன் செயலை நாயனாருந் தனது குறட்பாவில் முன்பே விளக்கியு மிருக்கின்றார்.

**குறள்**

மகன்றந்தைக்காற்று முதவியிவன் றந்தை யென்னோற்றான் கொல்லெனுஞ்சொல்.

திருவள்ளுவநாயனார் சாக்கைய அரச வம்மிஷ வரிசையைச் சார்ந்தவர் என்பது வள்ளுவர் வம்மிஷ வாளியால் விளங்குவதுமன்றி அரசர்களாகவும், ஞானகுருக்களாகவும், கன்ம குருக்களாகவும், விளங்கியதை பௌத்த சரித்திரங்களினாலும் கலை

நூற்களினாலும் திரிக்குறளின் சராம்சத்தினாலுந் தெரிந்துக்கொள்ளலாம்.

திருவள்ளுவநாயனார் தந்தை கச்சனென்னும் அரயன் வடமதுரையை ஆண்ட அனுபவம் கொண்டு நாளதுவரையில் அந்நாட்டை கச்சயம் என்றும், கச்சம் என்றும் வழங்கிவருகின்றார்கள்.

**மணிமேகலை**

கச்சயமாளுங் கழற்கால்வேந்தன் / றுச்சயனென்போ னொருவன் கொண்டன.

சிங்கள பௌத்தர்கள் வாசஞ்செய்யும் இலங்காதீவத்தைப் பறையர்கள் ஊர் என்று இராமாயணக்கீர்த்தனையில் பாடிவைத்துக் கொண்டது போல் சாக்கையர் அரசவம்மிஷத்தவரும் ஞானமிகுத்த பௌத்த பிராமணப் பரம்பரை யோருமாகிய திருவள்ளுவநாயனாரைப்பறைச்சிக்கும் பார்ப்பானுக்கும் பிறந்தார் என்னும் பெரும் பொய்க் கட்டுக்கதையை ஏன் இயற்றினார்கள் என்றும் அவற்றை எவ்வெவ்வகையாய் எவ்வெவ்வவரால் எவ்வெக்காலங்களில் வரைந்துள்ளாரென்றும் விளங்கக்கூறுவாம்.

*2.3. சூலை 1.1908*

இத்தேசமெங்கும் வேஷப்பிராமணர்கள் விரிந்து விவேகமற்றவர்களால் சிறந்த பௌத்த அரசர்களையும், பௌத்த குருக்களையும், வேஷப் பிராமணர்களை மதியாத

பௌத்தக்குடிகளையும் பறையர்களென்றுந் தாழ்ந்த சாதிகளென்றும் மதியாத பௌத்தக்குடிகளையும் பறையர்களென்றுந் தாழ்ந்த இழிவுகூறி கழுவிலுங் கற்காணங்களிலும் வதைத்துக் கொன்றதுமன்றி பௌத்த மடங்களையும் அபகரித்துக் கொண்டு பறைய ரென்னும் பெயரெங்கும் பரவவைத்து இழிவடையச் செய்தற்கு பலவகை ஜெந்துக்களுக்கும் இப் பெயரைக் கொடுத்து வழங்கிவரச் செய்தார்கள். ஈதன்றி அரிச்சந்திர புராணமென்னும் பொய்க்கதையும், நந்தன் சரித்திரமென்னும், பொய்க்கதையும், கபிலர் அகவலென்னும் பொய்க்கதையும் இயற்றி அவைகளாலும் இப் பறையனென்னும் பெயரைப் பரவச்செய்தார்கள்.

இவ்வகையாக பௌத்தர்களை இழிவடையச் செய்ததுமன்றி பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் குடியேறிய காலத்தில் சில வேஷப்பிராமணர்களே முநிஷி களாகச் சென்று தமிழ் கற்பிக்குங்கால் இப்பறையர்களையே முன்பு இழிவடையக் கூறி அருவெறுக்கச் செய்துவிட்டு பின்பே இவர்கள் பாடங் கற்பிப்பது வழக்கமாம்.

அதற்குப் பகரமாய் தமிழுக்கு இங்கிலீஷ் மொழிபெயர்ப்புள்ள ராட்ளர் டிஷநெரியில் 352-ம் பக்கம் 34-வது வரியில்,

1. வள்ளுவப் பறையர், 2. தாதப்பறையர் 3. தங்கலான் பறையர், 4 துற்சாவி பறையர், 5. குழிப் பறையர், 6. தீப் பறையர் 7. முரசப்

பறையர், 8. அப்புப் பறையர், 9. வடுகப் பறையர், 10. ஆலியப் பறையர், 17. வழிப் பறையா, 12. வெட்டியாரப் பறையர், 13. கோலியர் பறையர்களெனப் பதின்மூன்று வகைப் பறையர்களைப் பரக்கவெழுதி பிரிட்டிஷாருக்குக் கொடுத்துவிட்டு பார்ப்பானில் இத்தனை வகைப் பார்ப்பான் இருக்கின்றானென்று எழுதிக் கொடுக்காமல் விட்டிருக்கின்றார்கள்.

காரணம் யாதென்பீர்களேல் - பிரம்மாவின் முகத்திலிருந்து வந்தப் பார்ப்பானில் நூற்றியெட்டுவகைப் பார்ப்பான் ஏதென்று கேட்பார்கள் அதினால் தங்களுக்கு இழிவுண்டாமென்றஞ்சி விடுத்து பௌத்தர்களை மட்டும் பாழ்படுத்தி வந்தார்கள்.

அக்காலத்தில் பிரிட்டிஷ் இராஜாங்கத்தில் சிவில் சர்விசில் தேர்ந்துவந்த மிஸ்டர் எலீஸ் துரையவர்கள் 1825-ம் வருடத்திற்குப் பின்பு ஓர் தமிழ்ச்சங்கம் சென்னையிலேற்படுத்தி அதனை விருத்தி செய்தற்கு பலரிடங்களிலுமுள்ள ஓலைப் பிரிதிகளைக் கொண்டு வரச்செய்து அச்சிட்டு தமிழ் நூற்களைப் பரவச்செய்து வந்தார்.

அதையறிந்த ஜர்ஜ் ஆரிங்டன் துரை பட்லர் கந்தப்பனென்பவரால் தன்னிடமிருந்த ஓலைப்பிரிதி திரிக்குறள் மூலமும் திருவள்ளுவர்மாலையும் நாலடி நாநூறுங் கொண்டுபோய் மேம்பட்ட துரையிடம் கொடுக்க அவரும் சந்தோஷித்து அக்கால்

தன்னிடமுள்ளத் தமிழ் வித்வான்களாகும் தாண்டவராய முதலியாராலும் மானேஜர் முத்துசாமிப்பிள்ளை அவர்களாலும் 1831 வருஷம் அக்குறளை அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றார்.

ஆனால் திருவள்ளுவர்மாலையில் மட்டும் நூதனமாக நான்கு பாடல்களை சேர்த்திருப்பதாய் கந்தப்பனவர்கள் மேம்பட்ட துரையிடம் முறையிட்டிருப்பதாய் சூரியோதயப் பத்திரிகையில் வரைந்திருக்கின்றார்கள்.

இவ்வகையாய் 1831 வருஷம் வெளிவந்தக் குறளில் திருவள்ளுவநாயனார் பார்ப்பானுக்குப் பிறந்தார் ஏய்ப்பானுக்குப் பிறந்தார் என்னும் கட்டுக்கதைகள் யாதொன்றும் கிடையாது. அக்குறளை வாசிக்கும் பெரியோர்களும் துரைமக்களும் மிக்க ஆனந்தங்கொண்டதுமன்றி அதே தமிழ் சங்கத்து அதிபராகும்மிஸ்டர் எலீஸ்துரையவர்கள் நாயனார் குறட்பாக்களும் சில சார்பு நூற் பாக்களுஞ் சேர்த்து தன் பெயரால் இன்னொரு குறள் புத்தகமும் வெளியிட்டிருக்கின்றார். அப்புத்தகத்திலும் நாயனார் பார்ப்பானுக்குப் பிறந்தார் பறைச்சிக்குப் பிறந்தாரென்னும் கட்டுக்கதைகள் யாதொன்றும் கிடையாது.

இத்திரிக்குறளுக்கு நிகரான நீதி நூல் தமிழ் பாஷையில் எதொன்றும் இல்லாததாலும் வேப்பிராமணர்களை அறியாமலே

தமிழ்ச்சங்கத்தினின்று குறள் வெளிவந்துவிட்டதினாலும் உள்ள வேஷப்பிராமணர்கள் நிதானித்து ஆஆ, நாம் வள்ளுவர்களை முதற் பறையர்களாகக் கூறி பலவகை இழிவுபடுத்தி இராஜாங்கத்தாருக்கும் மற்றவர்களுக்கும் போதித்திருக்கின்றோமே நன்னீதி நூலை அவர்கள் பார்வையிட்டு இத்தகைய விவேகமிகுத்தோர்களை பறையர்கள் என்றும் தாழ்ந்தோர்கள் என்றும் காறுகின்றீர்களே அதன் காரணம் யாதென்று கேட்பார்களாயின் வேடப்பிராமண விபச்சாரன் கதையால் மூடலாம் என்று எண்ணி அடியில் குறித்தக் கட்டுக்கதையை அடுக்கிவிட்டார்கள்.

அதாவது - நாயனார் புத்தபிரானை சிந்தித்துள்ள முதற்பாடலில் ஆதி என்றும், பகவன் என்றும் வந்துள்ள வாக்கியங்களை எடுத்துக் கொண்டு ஆதி என்னும் பறைச்சியும், பகவன் என்னும் பிராமணனும் இருந்ததாகவும் அவ்விருவர் விபசாரத்தால் ஏழு பிள்ளைகள் பிறந்ததென்றும் அவர்களில் நாயனார் மயிலாப்பூரில் தங்கி ஓர் வைசியகுலப் பெண்ணை மணந்து இல்லறம் நடத்துங்கால் இக்குறளைப் பாடினார் என்றும் ஓர் சிறிய அகவற்பா பாடி அதைப் பாடினவர் இன்னாரென்றும் குறிக்காமல் விசாக பெருமாளையர் 1835 வருஷம் அச்சிட்டக் குறள் புத்தகத்தின் கடைசியில் அச்சிட்டு வைத்துவிட்டார்கள்.

இவ்வகையாக நாயனார் சீவிய சரித்திரத்தை அவர் புத்தகத்தின் முதலில் அச்சிடாமல் கடைசியில் சேர்த்து அச்சிட்ட காரணம் யாதென்பீரேல் - இத்திரிக்குறளை மிஸ்டர் எலீஸ் துரையவர்களும், தாண்டவராய முதலியார் முத்துசாமி பிள்ளை இவர்கள் அச்சிட்ட இரண்டு புத்தகங்களிலும் இல்லாதக் கட்டுக்கதைகள் பார்ப்பார்கள் அச்சிட்ட புத்தகத்தில் எங்கிருந்து வந்ததென்று யாவரேனும் கேட்பார்களாயின், சரிதை அங்கு கிடைத்தது இங்கு கிடைத்ததென நழுவவிடலாம் யாவரும் கேட்காதிருந்துவிடுவார்களாயின் கதையை விரித்து வலுத்துவிடலாம் என்று எண்ணி 1837 வருஷம் விசாக பெருமாளையரிளவல் சரவணபெருமாளையர் அச்சிட்ட புத்தகத்தின் முகப்பில் இப்பொய் சரித்திரத்தை விரித்து பொருந்தாப் பொய்களைப் பொருத்திவிட்டார்.

அப் பொருந்தாப் பொய்கள் யாதெனில் - விசாக பெருமாளையர் செய்துவைத்துள்ள பொய்க்கதா அகவலில் ஏழு பிள்ளைகள் பிறந்ததென்று நிறுத்திவிட்டார்.

24. சூலை 8, 1908

சரவணப்பெருமாளையர் நான்காவது அச்சிட்ட புத்தகத்தில் ஏழு பிள்ளைகளில் ஒவ்வோர் பிள்ளை பூமியிற் பிறந்தவுடன் ஒவ்வோர் வெண்பாக்களைப் பாடி விட்டதென்றும் அப்போது இச்சரவணப் பெருமாளையர் அருகினின்று ஓலை எழுத்தாணி கொண்டு உடனுக்குடன் எழுதிக் கொண்டது போலும் ஏழு வெண்பாக்களைப்

பாடி சேர்த்துவிட்டார். விசாகபெருமாளை. அச்சிட்ட புத்தகத்தில் நாயனார் வைசிய குலப்பெண்ணை மணந்தாரென்று வரைந்திருக்கின்றார். அதன்பின் சரவணப்பெருமாளையர் அச்சிட்ட புத்தகத்தில் நாயனார் வேளாளகுலப்பெண்ணை மணந்தாரென்று வரைந்திருக்கின்றார்.

விசாகப் பெருமாளையர் அகவலில் ஆறுபிள்ளைகள் பிறந்தயிடங் களையும் தங்கிய இடங்களையும் காண்பிக்காமல் நாயனார் பிறந்தயிடம் மட்டும் மயிலை என்று குறித்திருக்கின்றார். சரவணப்பெருமாளையர் அச்சிட்ட புத்தகத்தில் ஏழுபிள்ளைகளுக்கும் இடங்களைக் குறித்துவிட்டதுமன்றி ஊரிலில்லா வேதாளக் கதை ஒன்று விபரீதமாகச் சேர்த்துவிட்டார். இவ்வகையாய் இருவர் எழுதியுள்ளப் பொய்க்கதைகளுக்கு இன்னும் பெருத்தப் பொய்யாதரவுகளை 1847 வருஷம் திண்டிக்கல் முத்துவீரப்பிள்ளை உத்திரவின்படி வேதகிரி முதலியாரவர்கள் விரித்துவிட்டார்.

அதாவது விசாகப்பெருமாளையர் அச்சிட்டப் புத்தகத்திலிருக்கும் அகவலில் சோழநாட்டுள் ஓர் அந்தணனுக்கு தனது உயர் குல மனைவியால் பகவன் என்னும் மைந்தன் பிறந்து அப்பகவன் வளர்ந்து கருவூர் புலைமகள் ஆதி என்பவள் தன்னை வந்தடுக்க அவளை அடித்துத் துறத்திவிட்டுப் போய் மறுபடியும் வருங்கால்

அவளே சந்தித்து இருவரும் கூடிக்கொண்டு போய் ஏழுபிள்ளைகளைப் பெற்றதாக வரைந்திருக்கின்றார்.

1847 வருஷம் முத்துவீரப்பிள்ளை உத்திரவின்படி வேதகிரி முதலியாரவர்கள் அச்சிட்ட புத்தகத்தில் பிரமன் ஓர் யாகஞ் செய்து அதில் கலைமகள் உற்பத்தியாக அவளையே பிரமன் விவாகஞ்செய்துக்கொண்டு மறுபடியும் அகஸ்தியராகத் தோன்றி சமுத்திர கன்னிகையை மணந்து பெருஞ் சாகரனென்பவரைப் பெற்றானாம். அப்பெருஞ்சாகரன் திருவாரூர் புலைச்சியைச் சேர்ந்து பகவன் என்பவரைப் பெற்று அவர் வளர்ந்தப்பின்பு.

பிரம்ம வம்மிஷத்தில் தவமுனி என்பவர் அருண்மங்கை என்னும் பிராமணமாதைச் சேர்ந்து ஓர் புத்திரியைப் பெற்றுவைத்து விராலி மலைக்குத் தவஞ்செய்யப் போய்விட்டாராம். (தாய் எங்குபோனாளோ தெரியவில்லை) அப்பெண்குழந்தையை உரையூர் பெரும்பறையன் கண்டெடுத்து வளர்த்து வருங்கால் அச்சேரியில் உள்ளோர் எல்லாம் மண்மாரியால் மடிந்து இப்பெண் ஒருத்தி மட்டிலும் பிழைத்து மேலூர் அகரத்தில் நீதியையன்வீட்டில் வளர்ந்து பகவன் என்பவருக்கும் ஆதி என்பவளுக்கும் நீதி ஐயன் ஐந்துநாளைய விவாகமும் மங்களஸ்நானமுஞ் செய்த பின்னர் வெளியேறி ஏழுபிள்ளைகளைப் பெற்றதாக விரித்துவிட்டார்.

நாயனார் தோன்றிய காரணத்தையும் எவ்வகையில் எழுதியிருக்கின்றார்கள் என்னில்.

இன்ன அரசன் காலம், கலியுலக இன்னவருட காலம் என்னும் யாதொரு காலமுமின்றி முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கம் என்னும் நிலை யற்ற சங்கத்தோர் ஓர்காலத்தில் சிவனென்பவரை அவமதித்துவிட்டதாகவும் அந்த கோபத்தால் சங்கத்தை அழிக்க வேண்டி பிர்மாவை திருவள்ளுவராகவும், சரஸ்வதியை அவ்வையாகவும், விஷ்ணுவை இடைக்காடராகவும் பூமியில் அவதரிக்கச் செய்தாராம். அற்ப வித்வான்களை ஜெயிக்கலாகாத சிவன் அவதாரம் செய்யும் அதிகாரத்தை எவ்வகையில் நடத்தினரோ விளங்கவில்லை.

இப்பெரும் பொய்களுடன் விசாகப்பெருமாளையர் மூன்றாவது அச்சிட்டுள்ளத் திரிக்குறளில் நாயனார் வள்ளுவர் வீட்டில் வளர்ந்தாரென்று எழுதியிருக்கின்றார்.

ஆறாவது, முத்துவீரப்பிள்ளையும் வேதகிரி முதலியாரும் அச்சிட்டுள்ள திரிக்குறளில் நாயனார் வேளாளர் வீட்டில் வளர்ந்தாரென்றும் எழுதியிருக்கின்றார்கள்.

இத்தகையப் பொய்யிற்குப் பொய் பெரும் பொய்களை விரித்து அரசவம்மிஷ வரிசையோரும் பௌத்த பிராமண

பரம்பரையோருமாகிய திருவள்ளுவநாயனாரை பறைச்சிக்கும் பாப்பானுக்கும் பிறந்தார் என்னும் ஓர் கட்டுக்கதையும், திருவாரூர் புலைச்சிமகன் பகவனுக்கும், பிராமணன் பிராமணத்தி மகள் ஆதிக்கும் திருவள்ளுவநாயனார் பிறந்தாரென்னும் மற்றோர் கட்டுக்கதையும் எழுதி பாழ்படுத்தி விட்டார்கள்.

இப்பாழும் பொய்க்கதைகள் யாவும் புத்த பிரான் சரித்திரமும் அவரது தன்மங்களும் மறைந்திருந்தவரையில் மெய்யாகவே நம்பி நாசமடைந்தார்கள்.

அவருடைய தன்மம் பரவியபோது பொய்யின்னதென்றும் மெய்யின்ன தென்றும் விளங்கி இக்கட்டுக்கதையை ஒடிக்கி விளக்கியிருக்கின்றோம்.

நாயனார் பறைச்சிக்கும் பாப்பானுக்கும் பிறந்தார் என்னும் கதையை யாவரேனும் மெய்யென்று கூறி வெளிவருவரேல், திரிக்குறளை ஒவ்வொருவர் அச்சிட்டு வெளியிடுங்காலங்களில் புதுப்புது பொய்களைப் பெருக்கி யிருப்பதையும் உம்பளநாட்டு சிலாசாசனங்களையும் கொண்டு இஃது பொய்க்கதை என்றே இன்னும் விளக்க எதிர்பார்த்திருக்கின்றோம்.

2:5 சூலை 15, 1908

## 2. நாவலர் பட்டமும் பரிசு திட்டமும்

உலகின்கண் மத்திய ஆசியாகண்டமென வழங்கும் மகத நாட்டில் ஒலிவடிவமாக வழங்கி வந்த மகடபாஷையாம் பாலியினிலையால் அவலோகிதராகும் புத்தபிரான் சகட பாஷையாம் சமஸ்கிருதத்தையும் திராவிடபாஷையாம் தமிழையும் உற்பத்திச்செய்து வரிவடிவாக்கி சகட பாஷையை பாணினியாருக்கும், திராவிட பாஷையை அகஸ்தியருக்கும் போதித்து எங்கும் பரவச்செய்த காலத்து வடநாட்டில் தமிழ்பாஷை கிஞ்சித்து பரவியிருப்பினும் பெரும்பாலும் தென்னாட்டில் அகஸ்தியரால் பரவிற்று.

இவ்வகையாய்த் தென்னாட்டில் பரவிய ஓர் பாஷைக்கு எழுத்து லட்சணம், சொல்லிலட்சணம், பொருளிலட்சணம், யாப்பிலட்சணம் அணியிலட்சணமாகும் பஞ்ச லட்சணங்களையும் புத்த சங்கத்தோராகும் சமண முனிவர்கள் வகுத்துக் கூறியவைகளுள் யாப்பிலட்சண விதியில்,

> மங்கலஞ் சொல்லெழுத்தெண்ணியதானாம் வருமிருபாற்
> பொங்கிய உண்டி வருணம் பருத்திய நாட்பொருத்தம்
> தங்கிய நாட்கதி யெண்கண மென்று தமிழ் தெரிந்தோ
> ரிங்கிவை பத்து முதல் மொழியாமென்றியம்புவரே

என்னும் (சீர்கொண்ட) (சீர்பூத்த) மணி கொண்ட எனுமொழியில் பத்து பொருத்தம் அமைந்திருத்தல் வேண்டும் என்றும், அத்தகைய முதன் மொழியில் நஞ்செழுத்து கலவாமல் அமுதெழுத்து சேரவேண்டும் என்று உண்டியின் பொருத்தத்தை அதிஜாக்கிரதையில் பொருத்த வேண்டும் என்றும் குறித்திருக்கின்றார்கள்.

யாப்பிலட்சணம் கூறும் முதல் மொழி ஐந்தெழுத்துள், யா, யோ, ரா, ரோ, லா, லோ, என்னும் மூவொற்றெழுத்தும் இரண்டளபடை மகரக் குறுக்கமும் ஆய்தமுமாகிய நஞ்செழுத்துக்கள் அமைந்துள்ளதால் தென்மொழியை திராவிட பாஷை என்றும், அ, இ, உ, எ, க, ச, த, ந, ப, ம, வ. என்னும் அமுதெழுத்துக்களுள்ளதால், தென்மொழியை தமிழென்றும், இருபெயரால் அழைத்து வந்தார்கள். இவற்றுள் திராவிடம் என்னும் பெயர் வடநாட்டாராலும் தமிழென்னும் பெயர் தென்னாட்டாராலும் பெரும்பாலும் வழங்கலாயினர்.

நஞ்செழுத்தைக் கொண்டு திராவிடம் என்றும் அமுதெழுத்தைக் கொண்டு, தமிழென்றும் வழங்கிவந்த பாஷையை மலையாளுவாசிகள் வழங்குவதை கொடுந்தமிழென்றும், மண்ணாளுவாசிகளுள் தென்மேற்கு வாசிகள் வழங்குவதைக் கருந்தமிழென்றும், தென்கிழக்கு வாசிகள் வழங்குவதை செந்தமிழ் என்றும் ஆக முத்தமிழென வழங்கி வந்தார்கள்.

இம்முத்தமிழும் பௌத்த சங்கத் தோராகும் சமணமுநிவர்கள் இத்தேச முழுவதும் நிறைந்துள்ள வரையில் தமிழ்மணம் எங்கும் வீசி புலவர்கள் முயற்சி சிறப்புற்றிருந்தது, பௌத்த சங்கங்கள் அழிந்தவுடன் தமிழ்மணம் குன்றி புலவர்களும் முயற்சி இழந்தார்கள்.

தற்காலமோ பௌத்த தேசமாகும் பிரம்ம தேசத்தில் வாசஞ்செய்யும் புலவர் பெருமாள் இராயாபாதூர் பெ.மா. துரைப்பிள்ளை அவர்கள் பூர்வத்தமிழ் மணம் வீசவும் புலவர் சிறப்பவும் தனது சுயமுயற்சியால் சேகரித்த திரவியங்களில் அரையே அரிக்கால்பாகம் தமிழ் வித்வான்களுக்கே அளித்து தமிழை விருத்தி செய்து வருகின்றார்.

இத்தகைய விருத்தி பூமான் இருப்பிடஞ் சென்ற பூ. முத்து வீர உபாத்தியாயரவர்கள் ஸ்ரீமான் சபாமண்டபத்தில் சகல வித்துவான்களும் புடைச்சூழ அவதானங்களில் தச அவதானஞ்செய்து புலவர் புகழ்கோன் பெ.மா. மதுரைப்பிள்ளை அவர்களால் நாமதானம், நாவலரென்றும், ஆடைதானம் காசி பட்டாடையும், ஆபரணதானம் தங்கக்காப்பும், கழுத்தணியும், சுவர்ணதான தாம்பூலமுமளித்து சகல வித்வான்களையும் வந்துள்ள அன்பர்களையும் களிப்புறச் செய்திருக்கின்றார்.

இம்மேறைக் கட்டுப்பட்டால் கவரிமான் மயிரால் கட்டுப்படல் வேண்டும். குட்டுப்பட்டால் மோதிரக்கையால் குட்டுப்படவேண்டும் என்னும் பழமொழிக்கிணங்க சகல வித்துவான்கள் மத்தியில் நாவலரென்னும் பெயர் பெற்றதே பேராகும். அங்ஙனமின்றி யாரடாவிட்டது மானியமென்றால் நான்தான் விட்டுக்கொண்டேன் என்னும் பழமொழிக்கிணங்க தன்னைத்தானே நாவலர் என்று கூறித் திரிவது நகைப்புக்கிடம் உண்டாவதுமன்றி தமிழ்மணம் இருப்பதும் குன்றிப்போம்.

### 3. ஞானத்தாய் ஔவையார் அருளிச் செய்த திரிவாசகம்

### முதல் வாசகம்

### காப்பு

**ஆத்திச்சுவட்டில் அமர்ந்த தேவனை / ஏத்தி யேத்தித்தொழு வோமியாமே**

ஆத்தி - கல்லாத்தி, சுவட்டின் - நீழலின்கண், அமர்ந்த -வீற்றிருந்த, தேவனை ஆதிதேவனாம் புத்த பிரானை ஏத்தியேத்தி - புகழ்ந்து மகிழ்ந்து, தொழுவாம் - வணங்குவாம் யாம் - யாங்களென்றவாறு.

திராவிட பாஷையில் கல்லாலம், கல்லாத்தி என்று வழங்கி வந்தமரப்பெயர், அரசன் மரத்தடியில் வீற்றிருக்கின்றார், வீற்றிருக்கின்றார் என்னும் காரியப் பெயர்க்கொண்டு அரசமரமென வழங்கலாயிற்று.

கல்லாலங் கல்லாத்தியென்று வழங்கிவந்தப் பெயர்களை தாயுமானவர்க் கூறியுள்ள, "கல்லாலடிக்குள் வளர் சித்தாந்த முத்தி முதலே" எனும் வாக்கியத்தினாலும், மணிமேகலையில் கூறியுள்ள ஆலமர்ச்செல்வன் மதன்விழாக்கோல்கொள்' எனும் வாக்கியத்தினாலும்,

**அருங்கலைச்செப்பு-கல்லாலப்பத்து**

**ஆத்தியடியமர்ந்து வாகமங்களியந்து / சாத்தன மக்களித்த சீர்**

எனும் செய்யுளாலும் அறிந்துக் கொள்ளுவதன்றி தேவனென்னும் மொழி ஆதிதேவனையே சிந்தித்துள்ளதாதலின் அவ்வாதி தேவனென்னும் பெயர்புத்த பிரானுக்குரிய ஆயிர நாமங்களில் ஒன்றென்பதை அடியில் குறித்துள்ள தெய்வப் பெயர்ச் செய்யுளாலும் அறிந்துக் கொள்ளலாம்.

**பின்கலைநிகண்டு**

தரும ராசன் முன்னிந்திரன் சினன் பஞ்சதாரைவிட்டே
யருள் சுரந்தவுணர்க் கூட்டுந் ததாகதன் ஆதிதேவன்
விரவு சாக்கையனேசைனன் விநாயகன் சினந்தவிர்ந்தோன்
அரசுநீழலிலிருந்தோன் அறி அறன் பகவன் செல்வன்

இத்தகைய கலைவாசகத்தை தமிழ்மொழியால் அமைக்க ஆரம்பித்த ஞானத்தாய், புத்தபிரானாம் ஆதிதேவனை காப்புக்கு முன்னெடுத்தக்காரணம் யாதென்பீரேல் உலக சீர்திருத்தமக்களுள் ஆதிபகவனெனத் தோன்றி தமிழ் பாஷையை இயற்றி

அதனிலையால் சத்தியதன்மத்தைப் பரவச் செய்து தமிழர் பெருமானெனக் கொண்டாடப்பெற்றவராதலானும், "காப்புக்கு முன்னெடுக்குங் கடவுடான் மாலேயாகும்," எனப்பின்கலை நிகண்டு புகல்வதாலும், தான்கூறிய தமிழ் வாசக நூலுக்குத் ததாகதரையே காப்பாக சிந்தித்துள்ளாள்.

**வீரசோழியம்**

ஆவியனைத்துங் க,ச,த, ந, ப, ம,வ், வரியும் வவ்வி
லேவிய வெட்டும் யவ்வாறு ஞந்நான்கு மெல்லாவுலகு
மேவிய வெண்குடை செம்பியன் வீரரா சேந்திரன்றன்ஷ
நாவியல் செந்தமிட் சொல்லின் மொழி முத னன்னுதலே

**யாப்பருங்கலக்காரிகை**

திறந்திடு மின்றீயவை பிற்காண்டு மாதர் /இறந்து படிற்றெரிதாமேதம் உறந்துயர்கோன்
தண்ணாரமார் பிற்றமிழர் பெருமானை / கண்ணாறக்காணக்கதவு.

**நூல்**

**1. அறன் செயல்விரும்பு**

அறன் - அறக்கடவுளாகும் புத்தபிரான், செயல் - செய்கைகளாம், நற்காட்சி, நற்சிந்தை நல்மனம் நற்செய்கை, நல்வாழ்கை நல்லூக்கம், நற்கருத்து, நல்லமைதி இவைகளை, விரும்பு - ஆசை கொள்ளுமென்பதாம்.

இச்செயலானது ஏழைகள் முதல் கனவான்கள் வரையிலும், பெரியோர்கள் முதல் சிறயோர்கள் வரையிலும், பிணியாளர்கள் முதல் சுகதேகிகள் வரையிலுஞ் செய்யக்கூடிய பொது தன்மமாதலின் இவற்றை முதலில் விளக்கியுள்ளாள்.

அறனென்னும் வல்லினறகரமமைந்த தெய்வப்பெயர் உண்டோ என்பாருமுண்டு.

**சீவகசிந்தாமணி**

**கோ வேல் சிலைவகலக்கறை கொடிகா / நடுனானிரவின்னலைதான் டிகுமா**

**வெடு வெண்ணிலவின. விதோபரிய / தடுமாரெழினின்றறனேயருனே.**

இதர்காதாவாய் அரனை மறவேலென்னும் வாசகமுமுண்டு அறக் கடவுளின் செயலாகும் அஷ்டாங்கமார்க்கத்தை பற்றுவோர் பாசபந்த பற்றுக்கள் யாவையும் அறுத்தற்குப் பாதையதுவே ஆதலின் அறன் செயலாம் பற்றினை விரும்பு ஆசை கொள்ளும் என்றாள்.

**திரிக்குறள்**

**பற்று காற்றற்றான் பற்றினை யப்பற்றை / பற்றுக பற்றுவிடற்கு**

அறன், அறமென்னும் மொழிக்கு யீகையென்னும் பொருளை யேற்பதாயின் இல்லறம், துறவறம் நல்லறம் பொல்லறம், மெய்யறம், பொய்யறமாகும் இம்மொழிகளுக்கு எப்பொருள் பொருந்தும்.

செல்வப்பொருளுள்ளவனுக்கு யீகை என்னும் மொழி ஏற்குமேயன்றி, செல்வப்பொருள் இல்லாதவனுக்கு ஈகை என்னும் மொழி பொருந்தாவாம். ஆதலின் அறமென்னும் மொழி சகலருக்கும் பொருந்தும் சத்தியதன்ம மொழியேயாம்.

## 2. ஆறுவது சினம்

ஆறுவது - தணியத்தகுவது, சினம் - கோபமேயாம்.

அறன் செயலென்னும் பற்றற்றான் பற்றை விரும்பக்கூறி, உடனே கோபாக்கினியை தணிக்க வேண்டுமென்று கூறியக் காரணம் யாதென் பீரேல்:-

சகல நற்கிருத்திய செயல்களையும் கெடுக்கக் கூடியவை சினமென்னும் கோபமேயாதலின் அறவாழியான் செயலை விரும்புவோர், அகக் கொதிப்பாகுங் கோபத்தை ஆற்ற வேண்டும் என்று கூறியுள்ளாள்.

தன்னை சகல தீங்குகளினின்றும் தப்பித்துக் கொள்ள எண்ணமுடையவன் தன்னிடத்தெழும் கோபத்தைக் காக்கவேண்டும் என்பதாம்.

### திரிக்குறள்

தன்னைத்தான் காக்கிற சினங்காக்கக் காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்.

### பாம்பாட்டி சித்தர்

மனமென்னுங் குதிரையை வாகனமாக்கி / மதியெனுங் கடிவாளம் வாயிற் பூட்டி

சினமென்னுஞ் சீனிமேல் சிராயேறி / தெளிவுடன் சாரிவிட்டாடாய் பாம்பே.

**அறப்பளீசுரசதகம்**

கோபமே பாபங்களுக்கெலாந் தாய்தந்தை கோபமே குடிகெடுக்குங்

கோபமே யெவரையுங் கூடிவரவொட்டாது கோபமே துயர் கொடுக்குங்

கோபமே பொல்லாது கோபமே சீர்கேடு கோபமே யுரவறுக்குங்

கோபமே பழிசெயுங் கோபமே பகையாளி கோபமே கருணை போக்குங்

கோபமே யீனமாங் கோபமே யெவரையுங் கூடாம லொருவனாக்குங்

கோபமே மறவி முன் கொண்டுபோய் தீய நரகக்குழியினிற் றள்ளுமால்

ஆபத்தெலாந்தவிர்த் தென்னையாட்கொண்டருளு மண்ணலெம் தருமெய்மதவேள்

அனுதினமு மனதினினை தருசதுரகிரிவள ரறப்பளீ சுரதேவனே.

**வேமனசதகம்**

கோப முன்னநரக கூபமுஜெந்துனு / கோபமுன்னகுணமு கொஞ்சமகுனு

கோபமுன்னபிரதுகு கொஞ்சமைபோவுனு / விஸ்வதாபிராம வினரவேமா

## 3. இயல்வது கரவேல்

இயல்வது - உன்னால் செய்யத்தகுவது ஆகிய வித்தையை, கரவேல் – ஒளியாதே.

உனது அறிவின் விருத்தியினாலும், கேள்வியினாலும், விடாமுயற்சி பினாலும். இயல்பினாலும் உன்னால் தெரிந்துக் கொண்ட வித்தையை நீமட்டிலும் அனுபவித்து சுகியாமல் ஏனையோரும் அவ்வித்தையைக் கற்று சுகிக்கும் வழியைக் காட்ட வேண்டுமென்பதாம்.

இயல்பில் கண்டடைந்த வித்தையை ஏனையோர்க்கு உதவாமல் ஒளிப்பதானால் உள்ள விக்னகயம் கெட்டு விருத்தி கெடுக அன்புமிகுத்தவர்களின் செயலாகும்.

### அறநெறிதீபம்

ஐயெணத் தாம் பெருகுவதும் அறிவினால் விளங்குவதும்
உய்தவங் கேட்டுணர்வதுவும் உணர்ந்தவற்றைப் பிர ருளத்திற்
செய்தவ நன்றாக்குதலுஞ் சிறந்தார் சொற் றேருதலும்
மெய்யன்பை யுள்ளத்தில் மேவியவன் பயனாகும்.

## 4. ஈவதைவிலக்கேல்

ஈவதை-ஒருவருக்கொருவர் கொடுப்பதை, விலக்கேல்-தடுக்காதீரென்பதாம்.

மக்கள் ஒருவருக்கொருவர் உபகாரங் கருதியே சேர்ந்து வாழ்பவர்களாய் இருக்கின்றார்கள். அத்தகைய உபகாரச் சேர்க்கையை ஒருவருக்கொருவர் தடுத்து கெடுப்பதானால் மநுகுல விருத்திக் கெட்டுப்போ மென்பதாம்.

உனக்குள்ள உலோபகுணத்தை எதிரிக்குங் கற்பித்து உனக்குள்ளக் கேட்டில் எதிரியையுஞ் சேர்த்துக் கெடுத்தல் இழிவேயாகும்.

கொடுக்கும் யீகையுள்ளோன் குணத்துடன் கெடுக்கும் லோபியின் குணம் கலக்குமாயின் பொன்னுடன் பித்தளையும், சோற்றுடன் மலமும், பாலுடன் மூத்திரமுங் கலந்தது போல் அதன் பெருந்தகைய குணமுஞ், சிறந்த மதிப்பும், பரந்த கீர்த்தியும் நாசமடைந்துப்போம்.

ஆதலின் ஒவ்வோர் புருஷனும் வித்தை, புத்தி, ஈகை, சன்மார்க்கமென்னும் நான்கிலும் நிலைத்தல் வேண்டும். அத்தகைய உயர்ந்தோர் மாட்டே உலகமும் எனப்படும்.

எழியோரர்க்கு ஈவதை விலக்குவோனின் குணாகுணகதி.

**விவேகசிந்தாமணி**

நாய்வாவை யளவெடுத்துப் பெருக்கித்திட்டி நற்றமிழை யெழுத வெழுத்தாணியாமோ

மேய்வாழுஞ் சுடுகாட்டைப் பெருக்கித்தள்ளி பெரியவிளக் கேற்றிவைத்தால் வீடதாமோ
தாய்வார்த்தைக் கேளாத ஐகசண்டிக்கென் சாற்றிடினு முலுத்தகுணந் தவிரமாட்டான்
ஈயாரை யவொட்டா னிவனுமீயா னெழுபிறப்பினுங்கடையா மிவன் பிறப்பே.

பற்பல இடுக்கங்களினால் இழிய நிலைமெய் அடைந்தவர்களுக்கும் யாதொரு தொழிலுஞ் செய்ய சக்த்தியற்றவர்களுக்கும் ஈதலே பேருபகாரம். அவைகளைத் தடுத்தலே இழியநிலையைத் தரும்.

**விவேகசிந்தாமணி**

இடுக்கிலா விழிமெய் யெய்தி யிரப்பவர்க் கிசைந்துதானங்
கொடுப்பதே மிகவுநன்று குற்றமே யின்றிவாழ்வார்
தடுத்துகை விலக்குவோர்க்கு தக்க நோய் பிணிகளுண்டாய்
உடுக்கவுந் துணியுமற்று வண்ணுஞ்சோ றுதவாதாமே.

இத்தகை ஈகையை வீணருக்கும், சோம்பேரிகளுக்கும், பொய்யர்களுக்கும் கொடுப்பதானால் ஈவோர்களுக்கே இடுக்கணுண்டாய் இழிய நிலைபெற வேண்டும் ஆதலின் பாத்திரம் அறிந்து பிச்சை இடுவதே பாக்கிய பெருக்க வழியாகும்.

## குறுந்திரட்டு

பொய்யை சொல்லி பிதற்றிடும் போர்க்கும் / அய்யமேற்கவே அஞ்சாமிலேச்சர்க்கும்

துய்யஞான ஈகுணசெல்வாதியர் / இய்யுந்தான மிடுக்கத்திழுக்குமே.

ஊனமின்றி யுருபெருத்தோருக்குங் / கானமற்றுமெய் காணாகசடர்க்கும்

மோனரென்று முழுமோசக்காரர்க்கும் / தானமீவது தப்பரையாகும்மே.

## 5. உடையதை விளம்பேல்

உடையதை-உன்னிடத்துள்ள திரவியத்தை, விளம்பேல்-பிறருக்குரையாதே

படம்பத்தினால் உனக்குள்ள ஆஸ்தியை பிறரறியக் கூறுவாயாயின் தனை யொத்த திரவியவான் அவற்றைக் கருதமாட்டான். வன்னெஞ்சனும் கள்ளனும் அறிவார்களாயின் உன்னை வஞ்சித்துக் களவாடியும் துன்பப்படுத்துவார்கள்.

. ஆதலின் ஆட்கொல்லியாகும் உனக்குள்ள திரவியத்தை அனைவருமறியக் கூறுவாயாயின் அவ்வாட்கொல்லி என்னும் திரவியமே உன்னைக் கொல்லும் ஓர் ஆயுதமாகிப்போம். இது கொண்டே உள்ள திரவியத்தை உடன் பிறந்தானுக்கும் உரைக்கலாகாதென்பதோர் பழமொழி.

உனக்குள்ள திரவியத்தை உலகோர் அறியக் கூறி உலோபியாக விளங்கி உன்மத்தனாவதினும் உனக்குள்ள திரவியத்தைக் கொண்டு உலக உபகாரியாக விளங்குவாயாயின் உன் திரவியமும் பெருகி உன் ஆயுளும் வளர்ந்து உன் கீர்த்தியும் அழியாமல் நிலைக்குமென்பதாம்.

**காக்கை பாடியம்**

அறநெறிநின்று வாயுளை வளர்த்து / பிறருபகாரம் பேணிப் பெருக்கி

நிறைமொழி மாந்தரெனு நிலைநிற்கில் / துறந்தவர் கீர்த்தித் தொடர்புமீதாமே.

## 6. ஊக்கமதுகைவிடேல்

ஊக்கமது-உனக்குள்ள முயற்சியில், கைவிடேல்-சோர்வடையாதே. வித்தையிலேனும், கல்வியிலேனும் ஊக்கமாயிருந்து அவற்றைக் கைவிடுவதாயின் எடுத்த முயற்சி ஈடேறாமல் போம்.

ஆதலின் ஊக்கத்தினின்று நடாத்தியச் செயலைக் கைவிடுவதானால் வீண் முயற்சியேயாம். எடுத்த முயற்சியைக் கைவிடாது சாதித்துக் கைகண்ட தொழில்களாகும் இரயில்வே, டிராம்வே, டெல்லகிறாப், போனகிறாப், லெத்தகிறாப் , முதலியத் தொழில்கள் யாவும் கைவிடா ஊக்கத்தினால் விருத்திப் பெற்றக் காட்சிகள் எனப்படும்.

நாம் இத்தகைய வித்தியாவிருத்தியையும், புத்தியின் விருத்தியையும், ஈகையின் விருத்தியையும், சன்மார்க்க விருத்தியையும் கைவிடுத்து பொய்க் குருக்களால் போதிக்கும் பொய்ப் புராணக் கட்டுக்கதைகளை நம்பி சாமி கொடுப்பார், சாமி கொடுப்பார் என்னும் ஊக்கமற்ற சோம்பேரிகளாய் சோற்றுக்கு வழியற்று பிச்சையிரந்துண்பதே பெரும் வித்தியாவிருத்தி என்று எண்ணிப் பாழடைவோம் என்னும் வருங்கால சம்பவம் உணர்ந்த ஞானத்தாய் உருக்கவலிமெயாம் ஊக்கச்செயலை உறுதி பெறக் கூறியுள்ளாள்,

**திரிக்குறள்**

தெய்வத்தாலாகாதெனினு முயற்சிதன்/ மெய்வருந்த கூலிதரும்.

**அருங்கலைச்செப்பு**

வாழ்விப்பதேவ ரென மயங்கி வாழ்த்துதல் / பாழ்பட்ட தேவமயக்கு

**7. எண்ணெழுத்திகழேல்**

எண் எழுத்து - எட்டென்னுங் கணிதாட்சரமாகவும், எழுத்தென்னும் அகராட்சரமாகவும் விளங்கும் வரிவடிவை, இகழேல் - அவமதியாதே என்பதாம்.

அகரவட்சரமானது சகல அட்சரங்களுக்கும் ஆதியாய் தோன்றி அறிவை வளர்த்து ஞானக் கண்ணாகவும் விளங்குவது அதுவேயாதலின் அதனை அவமதியாதே என்று கூறியுள்ளாள்.

**ஔவையார் ஞானக்குறள்**

ஆதியாய் நின்ற வறிவு முதலெழுத் / தோதிய நூலின் பயன். விகாரங் கெடமாற்றி மெய்யுணர்வுகண்டால் / அகாரமாங் கண்டி ரறிவு.

அகரத்தின் சுழியானது அங்கத்தின் புருவமத்திய சுழிமுனையினின்று முதுகின் கண்டெலும்புள் அளாவி உந்தியில் முனைகூடி பூணு நூல் அணைவதுபோல மார்புட்சென்று கண்டத்தில் கால்வாங்கி நிற்கும். அதையே தாயின் வயிற்றில் குழவி கட்டுபட்டிருக்குங்கால் மூச்சோடிக் கொண்டிருக்கும் பிரமரந்தினமென்றும், குண்டலி நாடியென்றும், குண்டலி சத்தியென்றும், குறியெழுத்தென்றுங் கூறுவர்.

இத்தகைய எட்டெழுத்தாம் அகராட்சரத்தை கண்டத்திலூன்றி குண்டலியை நிமிர்த்தி குணங்குடிக்கொள்ளும் வழிக்கு ஆதியட்சரமாகலின் நாம் எப்போதும் வாசித்துவரும் அகர எழுத்து தானேயென்று அவமதித்து அறிவின் விருத்தியை விட்டுவிடாதீர்களென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

ஆதியட்சரமாம் அகாரமே அறிவின் விருத்திக்குக் காரணமாகி உகாரமாம். ப உண்மெயொளிகண்டு மகாரமாம் காமவெகுளி மயக்கங்கள் அற்று சிகாரமாம். அன்பில் நிலைப்பதே நிருவாண சுகமாகும்.

### சிவவாக்கியர்

அகாரகாரணத்துளே அநேகனேக ரூபமாய்
உகாரகாரணத்துளே வொளிதரித்து நின்றனன்
மகாரகாரணத்ததின் மயக்கமற்று வீடதாம்
சிகாரகாரணத்துளே தெளிந்ததே சிவாயமே.

### ஞானக்கும்மி

கட்டுப்படாதந்த வச்சுமட்டம் - அதின் / காலே பன்னிரண் டாகையினால்
எட்டுக்கயிற்றினால் கட்டிக்கொண்டால் அது / மட்டுப்படுமோடி ஞானப்பெண்ணே.

எட்டென்னும் கணிதாட்சரமாகவும், எழுத்தென்னும் இலக்கிய முதலட்சரமாகவும் விளங்கும் குறியெழுத்தாம் அகராட்சரத்தை அவமதியாதே என்பது அறிவுருத்தப் பலனாம்.

### ஔவையார் ஞானக்குறள்

கூடகமானக் குறியெழுத்தைத் தானறியில் / வீடகமாகும் விரைந்து.

இத்தகைய சிரேஷ்டமாம் அகராட்சரத்தை ஒவ்வோரில்லந்தோரும் வழங்கிவருதற்கு அப்பா, அம்மா, அண்ணா , அண்ணி, அக்கா, அத்தை, அத்தான், அப்பி என்று அழைப்பிலும் உச்சரிக்கும்படி செய்திருக்கின்றார்கள்.

## 8. ஏற்பதிகழ்ச்சி

ஏற்பது - ஒருவர் சொல்லும் வார்த்தையை விசாரிணையின்றி ஏற்றுக்கொள்ளுவது, இகழ்ச்சி - இழிவைத்தரு மென்பதாம்.

அதாவது ஒரு மனிதன் முன்னில் வந்து நான் பிரமாமுகத்திலிருந்து வந்தவன் நானே பெரிய சாதியினனென்று கூறுவானாயின் அவன் வார்த்தையை மெய்யென்று ஏற்றுக்கொண்டு யாதொரு விசாரிணையுமின்றி அவனைப் பெரியசாதியோன் பெரியசாதியோனென்று உயர்த்திக் கொண்டு தன்னைத் தாழ்ந்த சாதியாக ஒடுக்கி சகலத்திலும் முன்னேறுவதற்கில்லால் ஒடுங்கி தானே சீர்கெட்டு இழிவடைந்துபோகின்றான்.

இத்தகையோன் ஒருவன் வாய்மொழியை ஏற்காது அவனை நோக்கி நீவிர் பிரம்மா முகத்தினின்று பிறந்தவரானால் அப்பிரம்மா எங்கிருக்கின்றார், அவர் முகம் எவ்வகைத்தானது, உமது மனைவியார், யாவர் முகத்தில் பிறந்துள்ளார், மங்குலத்தோருள் நீவிர் எவ்வகையால் பெரியசாதி யானீர், பெரியசாதியோர் அடையாளமென்னை சிறிய சாதியோர் அடையாள மென்னையென்று விசாரிணைச் செய்வானாயின் பிரம்மாவும், பிரம்மாவின் முகத்தில் தோன்றியதும், பெரியசாதி என்னும் படாடம்பமும் பின்னிடைந்துபோம்.

அதினால் இவன் தன்னை சின்னசாதியென விசாரினை தாழ்ச்சியடையும் இகழ்ச்சி நீங்கி சகல விஷயங்களிலும் முன்னேறி புகழ்ச்சி பெறுவான்.

இத்தகைய நிகழ்ச்சி நேர்ந்து மக்கள் இகழ்ச்சி பெறுவார்களென்று வருங்காலமறிந்த ஞானத்தாய் ஏற்பதை இகழ்ச்சி என்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

சுவர்ண தானமேனும், வஸ்திர தானமேனும் ஒருவன் கேழ்க்காமல் மற்றொருவன் யீவதை ஏற்பது இழிவாகமாட்டாது.

எவ்வகையதென்னில்:- யதார்த்த பிராமணர்களுக்குரிய அறுவகைத் தொழிலாம் ஓதல், ஓதிவைத்தல், வேட்டல், வேட்பித்தல், யீதல், ஏற்றல் என்பவற்றுள் அந்தணர்கள் ஏற்றலும் ஒருதொழிலாகும். அரசன் வரி இறை ஏற்றலும் ஒரு தொழிலாகும். ஆதலின் இத்தகைய ஏற்பு இழிவடையமாட்டாது. சுயப்பிரயோசனமுள்ளோர் சொற்களைவிசாரிணையின்றி ஏற்றுக்கொள்ளுவதே இழிவைத் தருமென்பது அநுபவக்காட்சியாகும்.

## 9. ஐயமிட்டுண்

ஐயம் - புலன் தென்பட ஒடுங்கினோராகும் தென்புலத்தோர்க்கு இட்டு - வட்டித்துள்ள அன்னத்தை முன் புசிக்கக்கொடுத்து, உண் - நீயும் உண்ணுமென்தாம்.

பூர்வம் இத்தேசமெங்கும் புத்ததன்மம் நிறைந்திருந்த காலத்தில் பாசபந்தத்தில் ஐயமுற்று பற்றறுக்க முயலும் சமண முநிவர்களாகும் தென்புலத்தோர் ஒருமடங்களைவிட்டு மறுமடங்களுக்குப் போவதியல்பாம். அவற்றை உணர்ந்துள்ள இல்லறத்தோர் தாங்கள் புசிப்பதற்கு முன்பு வெளிவந்து அறஹத்தோ, அறஹத்தோ என்று ஐம்புலனொடுக்க வையமுற்றோரை அழைப்பார்கள். அவர்கள் வந்தவுடன் வட்டித்துள்ள அன்னத்தை முன்பு புசிக்கக் கொடுத்து பின்பு தாங்களும் உண்பது ஐயமிட்டுண்ணென்னும் போதனாவொழுக்கத்தை பின்பற்றியச் செயலேயாம்.

**அறநெறிச்சாரம்**

பிச்சையு மையமுமிட்டுப் பிறன்றார / நிச்சலு நோக்காது பொய்யொரீஇ - நிச்சலுங்

கொல்லாமெய்காத்துக் கொடுத்துண்டு வாழ்வதே. / இல்வாழ்க்கை யென்னு மியல்பு.

**சிலப்பதிகாரம்**

அறவோர்களித்தலும் அந்தணரோம்பலும்

துறவோர்க்கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்

விருந்தெதிர் கோடலு மிழந்தவெண்ணையும்

**ஆசாரக்கோவை**

முறுவலினிதுரைகானீர்மனை பாய

கிடைக்கையோ டிவ்வைந்த மென்பதலைச் சென்றார்

கூணெடுஞ் செய்யுஞ்சிறப்பு.

**நீதிவெண்பா**

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லென்னுமிவ
ரின்புறத்தா லுண்ட லினிதாமே - அன்பிறவே
தக்கவரை யின்றித் தனித்துண்ண றானிகமீன்
கெக்கருந்த லென்றே குறி.

**தண்டலையார் சதகம்**

திருவிருக்குந்தண்டலையார் வளநாட்டி .................

**(நாலுவரிகள் தெளிலில்லை)**

இத்தகையாய் பாசபந்தத்திற்கு ஐயமுற்று பற்றறுக்க முயலும் பெரியோர்களுக்கு இட்டுண்பதே பேருபகாரமாதலின் ஞானத்தாய் முதியோர் கருத்தை குறுக்கல் விகாரப்படுத்தி ஐயமிட்டுண் என்று கூறியுள்ளாள்.

## 10. ஒப்புர வொழுகு

ஒப்புரவு - உள்ளத்திற் சாந்தத்தை நிறப்பி முகமலர்ச்சியுடன், ஒழுகு - இல்வாழ்க்கையில் நடவு மென்பதாம்.

ஒப்புரவினின்று வார்த்தையாடலும், ஒப்புரவினின்றுணவளித்தலும், ஒப்புரவினின்று உள்ளந்திருத்தலுமே உலகசிரேஷ்டமாகக் கொள்ளுதலான் ஒழுக்கத்திற்கு உதவி ஒப்புரவென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**விவேகசிந்தாமணி**

ஒப்புடன் முகமலர்ந்தே யுபசரித் துண்மெய்ப்பேசி
உப்பிலாக் கூழிட்டாலு முண்பதே யமிர்தமாகும்
முப்பழ மொடு பாலன்னம் முகங்கடுத்திடுவராயின்
கப்பிய பசியினோடு கடும்பசி யாகுந்தானே.

**அறநெறிச்சாரம்**

மக்களுடம்பு பெறற்கரிது பெற்றபின் / மக்களறிவு மறிவரிது - மக்கள்
அறிவதறிந்தா ரறத்தின் வழுவார் / நெறித்தலை நின்றொழுகுவார்.

ஒப்பி - மனப்பூர்வ சம்மதமாய், உரவோர் - அறிவுமிகுத்தாராகும் சமண முநிவர்பால் ஒழுகு - நெறிபிறழாது வாழக்கடவா என்பதுமோர் பாடபேதம்.

திரிபீடகம், திரிக்குறளாம், முப்பாலைத்தழுவியதே திரிவாசகமாதலின் நீதிநெறி ஒழுக்கங்களையே புதைப்பொருளாக அமர்ந்துள்ளதாகும்.

## 11. ஓதுவதொழியேல்

ஓதுவது - அறிவை பெருக்குங் கலை நூற்களை வாசிப்பதில், ஒழியேல் - நீங்கிவிடாதே என்பதாம்.

ஓதலும், ஓதிவைத்தலும், கற்றலுங் கற்பித்தலுமாயவை கலை நூற்களே ஆதலின், அவற்றை ஓதுவதினின்று ஒழியேலென வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**அறநெறிச்சாரம்**

எப்பிறப் பாயினு மேமாப் பொருவதற்கு / மக்கட் பிறப்பிற் பிறிதில்லை - அப்பிறப்பில்
கற்றலுங்கற்றவை கேட்டலுங் கேட்டதன்கண் /நிற்றலுங் கூடப் பெறின்

கலைநூற்களையே கற்கவேண்டும் என்னும் காரணம் யாதெனில் சிற்றறிவின் விருத்தியால் வித்தியா விருத்திகளோங்கி உலக வாழ்க்கை சிறப்படையவும், பேரறிவின் விருத்தியால் பூரணமுற்று சுகவிருத்தி யடைவதற்குமேயாம். நுண்ணிய அறிவை விருத்தி பெறச் செய்யுங் கலை நூற்கள் ஓதுவதை ஒழியேலென்பது கருத்தாம். (சில வரிகள் தெளிவில்லை)

இதனையனுசரித்தே விவேக மிகுத்தோர் கண்டு படிப்பதே படிப்பு மற்ற படிப்பெல்லாந் தொண்டுபடிப் பென்றறி" என்றும் கூறியிருக்கின்றார்கள்.

**12. ஔவியம் பேசேல்**

ஔவியம் - ஒருவருக்கொருவர் பொறாமெயை உண்டு செய்யும் வார்த்தையை, பேசேல் - மறந்தும் பேசாதே என்பதாம்.

உலகத்தில் தோன்றியுள்ள மக்கள் வாழ்க்கைத்துணையாய் ஒருவருக்கொருவர் நெருங்கி வாழ்கவேண்டுமென்பது நீதிநூற்

சம்மதமாதலின் அத்தகைய சேர்க்கை வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் பொறாமெயை, உண்டு செய்யத்தக்க வார்த்தைகளைப் பேசி பொருந்தியுள்ள அன்பைக் கெடுத்து விரோதத்தைப் பெருக்கி வாழ்க்கைத் துணையைப் பிறித்துவிடுவதினால் ஒவ்வொருவருக்குமுள்ள உபகாரமும் கெட்டு சுகமற்றுப் போவதால் ஒருவருக்கொருவர் கேடுண்டு செய்யும் ஔவியமாம் பொறாமெ சொற்களைப் பேசேல் ஒருக்காலும் பேசாதே என்று வாழ்க்கைத்துணை நலம் கூறியுள்ளாள்.

இதை அநுசரித்தே கலை நூலோர் பொறாமெய் சொற்களால் அன்பர் உறவைப் பிரிப்போரும் களங்கமற்ற நெஞ்சினர்க்குக் களங்கம் உண்டு செய்வோரும், பிறர் தாரங்களின் மீது நாட்டமுள்ளோரும் அன்னியர் பொருளைக்கவ்விய நாய்படுங் கஷ்டம் போல் அல்லடைவார்களென்று கூறியிருக்கின்றார்கள். ஆதலின் பொறாமெசொற்களைப் புகலாதிருப்பதே புண்ணிய பலனாகும்.

**அறநெறித்தீபம்**

அவ்வியமேகூறி மிகுவன் பிநிலைமாற்றுதலுஞ்
செவ்வியவுள்ளத்தினிடந்தீங்கு நினையூட்டுதலும்
பவ்வி பிறர்தார மனைய பற்றின மமோடுதலும்.
கவ்விய கணங்கனபடுங்காட்சி அதன் பயனாகும்.

## 13. அஃகஞ் சுருக்கேல்

அஃகம் - எக்காலமிருந்தபோதினும் குறைந்து அழியக்கூடிய தேகத்தை. சுருக்கேல் - நீயே வொடுக்கி சுகங்கெடாதே என்பதாம்.

தேகமானது பாலதானம், குமரதானம், அரசதானமென வளர்ந்து மூப்புதானம், மரணதான மெனத்தேய்ந்துக் குறைந்து சீர்க்கெடுவதியல் பாதலின். குமர, அரச, தானங்களையே தேய்த்துக் குறைப்பதானால் அவ்விருதானங் களையே மூப்புதானம் என்னும் பெயர் பெற்று மரணத்திற்கு ஆளாக்கி விடுமென்பதாம்.

மக்களுக்குள்ள ஆயுள் வருடம் பதினாரைப் பாலதானமென்றும், வருடம் முப்பதை குமரதானமென்றும், வருடம் நாற்பத்தைந்தை அரச தானமென்றும், வருடம் எழுவதை மூப்புதானமென்றும், வருடம் நூற்றை மாணதானம் என்றும் வகுத்திருக்கின்றார்கள். இத்தகைய அழிவுக்குரிய ஆயுளாம் அஃதை குமரதானத்திலேயே குறைத்து சீர்கெடுப்பதானால், அக்குமரதானமே மூப்புதான நிலைப்பெற்று மரணத்திற்கு உள்ளாக்கும் என்பது கருத்து.

நாம் புசிக்கும் பதார்த்தங்களை மிதாகாரமாய் அதிகமுமின்றி கொஞ்சமுமின்றி புசிப்பதே சுகாதாரமாகும். அங்ஙனமின்றி அதிகப்புசிப்பினும் தேகம் தடிப்பேறிக் கெடும். புசிப்பை அதிகச்சுருக்கினும் சப்த தாதுக்களொடுங்கி கெடும். ஆதலின் மரணத்திற்கேதுவாம் அஃகஞ்சுருக்காது மரணத்தை

ஜெயிப்பதற்கேதுவாம் மிதாகாரம் புசித்து சதாஜாக்கிரமையின்ன்று அறிவை விருத்தி செய்ய வேண்டுமென்பதே ஆப்தர்களின் கருத்தும் ஆசீருமாதலின் அஃதை அறிந்துரைத்தலே அரும் பொருளாகும்.

**அறநெறிச்சாரம்**

மெய்மெய் பொறையுடைமெய் மேன்மெய் தவமடக்கம்.
செம்மெ யொன்றின் மெய் துறவுடைமெய் நன்மெய்
திறம்பாவிரதந் தரித்தரோடின்னும்
அறம்பத்து, மான்ற குணம்.

மேற்கூறிய, தேகக்காப்பு, மனோகாப்பு, வாக்குக்காப்பாம் விரதங்களை நோக்காது சோமவார விரதம், அது போல் மங்களவார விரதம், சுக்கரவார விரதம், சனிவார விரதமென்று விருந்தினரை ஏமாற்றிப் பணஞ் சேர்க்கும் விரதம் வாரத்திற்கு நான்கு நாளிருப்பதினால் தேகங்குன்றி சீர்கெட்டு குமரபருவத்துள் நரை தோன்றி நசிப்பார்களென்று திரிகாலமுணர்ந்த ஞானத்தாய் செய்யுளிற் கூறாது வாசகத்தில் விளக்கியுள்ளாள்.

**அருங்கலைச்செப்பு - இழிவொடுக்கப்பத்து**

சோற்றைக் குறைத்து சொரூபத்தை தானடக்கல் மாற்றான் மதியென்றுணர்.
உன்னைச் சுருக்கி வுடம்புரிக்கித் தானிருத்தல் பேணப்படுமாம் பிழை.
உற்ற னுடம்பின் குறிப் பறியாதே குறைத்தல் சீற்றச் சிறை யென்றறி

நாதனொடுங்கி ன்னவழிந்த முற்றுறவைப் போத முணர்ந்து புணர்.

## 14. கண்டொன்று சொல்லேல்

கண்டொன்று - கண்ணினாற் பார்த்த ஒன்றைவிட்டு, சொல்லேல் மற்றொன்றை சொல்லாதே என்பதாம்.

கண்ணினாற் பார்த்ததொன்றிருக்கக் காணாத மற்றொன்றை சொல்லுவதானால் அதைவிடப் பொய் வேறில்லை என்பதாம்.

ஞானத்தாய் கண்டொன்றுசொல்லேல் எனும் மொழியை வற்புருத்திக் கூறியுள்ளக் காரணம் யாதென்பீரேல் :

செல்காலம், நிகழ்காலம், வருங்கால மூன்றினையும் உணர்ந்தவளாதலின் வருங்கால சம்பவங்களில் சத்தியதன்மமாம் மெய்யறம் நிலைகுலைந்து அசத்திய தன்மமாம் பொய்யறம் நிலைத்து காணாததையே கண்டது போல் பிதற்றிப் பொய்யைச் சொல்லி போசனத்திற்கலைவார்கள்.

ஆதலின் கண்ணினாற் கண்டதைவிட்டு மற்றொன்றைக் கூறாதேயென்று வற்புருத்திக் கூறியுள்ளாள்.

### விவேகசிந்தாமணி

மெய்யதைச் சொல்லுவாராகில் விளங்கிடு மேலு நன்மெய்
வையக மதனைக்கொள்வார் மனிதரிற் றேவராவார்
பொய்யதைச் சொல்வாராகிற் போசன மற்பமாகும்

நொய்யவ ரிவர்களென்று நோக்கிடா ரறிவுள்ளோரே.

**வளையாபதி**

கல்வியின் மெயுங் கைப்பொருட்போக

நல்லில் செல்லர்களானலியுற்றலும்

பொய்யில் பொய்யொடு கூடுதற்காகுந்

...... யது கடிந்தோம்புமின். (வரிகள் தெளிவில்லை )

## 15. நப்போல்வளை

நப்போல் - தன்னைப்போல, வளை - மற்றவர்களையுஞ்சூழ வாழ்க்கைச்சுகந் தருவாயென்பதாம்.

இல்வாழ்க்கையில் தன் சுகத்தை மட்டிலும் கருதி வளைந்து ஏனையோர் சுகத்தைக் கருதாது அகற்றி வாழும் வாழ்க்கையில் தனக்கு சுகங்கெடுமாயின் ஏனையோர் அச்சுகக்கேட்டைக் கருதாது விலகிநிற்பார்கள்,

ஆதலின் இல்வாழ்க்கையில் வளையாபதியாய் நிற்றல் அவலோகிதர்கட் செயலும் சுற்றத்தோருடன் வளையும் பதியில் வாழ்தல் லோகயிதச் செயலுமாகும்.

**அறநெறிச்சாரம்**

செல்வத்தைப் பெற்றா சினங்கடிந்து செவ்வியராய்ப்

பல்கிளையும் வாடாமற் பார்த்துண்டு - நல்ல

தானமறவாத தன்மெயரே லஃதென்பார்

வானகத்து வைப்பதோர் வைப்பு.

## விவேகசிந்தாமணி

தன்மானங்குலமானந் தன்னைவந்தே யடைந்தவர்க டங்கள் மானம்
என்னாகி லென்னவல்ல வெல்லவருஞ் சரியெனவே யெண்ணம் போந்து
நன் மானம் வைத்தெந்த நாளுமவர் தங்களக்கு நன்மெய் செய்வோர்
மன்மானி யடைந்தோரை காக்கின்ற வள்ளலென வழுத்துவாரே.

## 16. சனி நீராடு

சனி - உலோக, நீர் - ஊற்றில், ஆடு - தேக முழுவது மழுந்த குளித்தெழுஉம் என்பதாம்.

அதாவது, பாலி பாஷையில் சனியென்னும் மொழிக்கு இருளென்றும், சனிமூலை என்னும் மொழிக்கு வடகிழக்கென்றும், சனிபிந்து என்னும் மொழிக்கு நீலக்கல் என்றும், சனி நீர் என்னும் மொழிக்கு உலோகவூற்று, தீர்த்தம் எனக் கூறியுள்ளபடியால் மூலபாஷையை முற்றும் உணர்ந்த மாதவி உலோகவூற்றுக்களாந் தீர்த்தமாடுதலினால் தேகத்தில் உண்டாகும் சருவரோக நிவர்த்திக்கும் ஓடதிமூலமாகும் சனிநீரில் விளையாடுங்கோளென்று கூறியுள்ளாள்.

இந்த உலோகவூற்றாம், சனி நீரின் குணாகுணத்தை உலகநாதனே தனது சங்கத்தோருக்கு கூறியுள்ளதை திருவேங்கிடமென்னும் திருப்பதியிலும் சீனதேசத்தைச் சார்ந்த கொரியா என்னும் நாட்டிலும்

தீபகற்ப மென்றவற்றுள் ஓர் உலோக ஊற்றுள்ளதை நாளது வரையிலும் காணலாம். சருவாங்க சவரம் செய்து சனிநீருள் மூழ்குவதினால் சர்வரோக நிவர்த்தி உண்டாம் என்பது சரக சாஸ்திரமூலபாடம். (சில வரிகள் தெளிவில்லை)

**சூளாமணி**

குற்றதோரிடுக்கண் வந்தாலுதவுதற் ததன்றாயிற் பெற்றவிவ்வுடம்
புதன்னால் பெறுபயனில்லைமன்னா
ஆங்கவேங்கடஞ் சேர்ந்த பினையகா
ணீங்கிவெங் கடுங்கானகத்தீடென
வேங்குநீர்கடல் வண்ணனுக் கின்னனாம்
வீங்கு வேண்டிரை வண்ணன் விளம்பினான்.

**சீவகசிந்தாமணி**

தீராவினைதீர்க்குந் தீர்த்தந் தெரிந்துய்த்து / வாராக்கதியுரைத்த வாமன்றா ளியாரே
வாராக்கதியுரைத்த வாமன் மலர்த்துய்ந்த / காரார் பூம்பிண்டி கடவுணீயன்றே.

எள்ளிநெய் கண்டுபிடித்த காலம் கானிஷகர் என்னும் அரசனுக்கு முந்தியதும், 1,000 வருஷத்திற்கு பிந்தியகாலமாகும். ஔவையார் வாசக நூலியற்றிய காலம் 1,500 வருடங்களுக்கு மேற்பட்ட காலமாகும். ஆதலின் எள் நெய் தேய்த்து தலைமுழுகென்பது வாசக

நூலின் காலவரைக்கும் பொரு மக்களுக்கும் எண்ணெய் ஸ்னானம் பொருந்தாதென்பது திண்ணம்.

### 17. ஞயம்படவுரை

ஞயம் - நியாயம், பட - இதயத்திலூன்றும்படி உரை - சொல்வா யென்பதாம், நீர் ஓதும்படியான நீதி நெறியடைந்த வாக்கியங்கள் எதிரியின் உள்ளத்தில் பட்டு உணரும்படி உரைக்கவேண்டும் என்பது கருத்தாம்.

ஓர் நியாயமுள்ளோன் கள்வனை நோக்கி அன்னியர் பொருளை அபகரிக்காதேயென்பானாயின் அக்கள்ளன் நியாயத்தை உட்கொள்ளாது கோபமீண்டு கூறியவன் களவாடானோ என்பான்.

அதேநியாயத்தைக் கள்வனை நோக்கி அப்பா நீவிர் மிக்க கஷ்டத்துடன் சம்பாதித்தப்பொருளை மற்றொருவன் அபகரித்துக் கொள்ளுவானாயின் உன் மனம் ஆறுதலடையுமோ, பொருண்மீதுற்ற அவா விடுமோவென்றால்,

விடாது ஆறுதலுமடையாதென்பான். மீண்டும் அவனை நோக்கி அதுபோல் அன்னியன் பொருளையும் கருதி அவற்றை அபகரிக்காதிருப்பது அழகன்றோ என்பானாயின் அழகென்றும், சரியென்றும் தனதுள்ளத்தில் பட்டு களவு தொழிலை அகற்றுவான்.

ஆதலின் ஓதும் நியாயமானது ஒவ்வொருவர் உள்ளத்தில் படும்படி உரைக்கவேண்டும் என்பதாயிற்று.

**திரிக்குறள்**

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று / பண்பிற்றலை பிரியாச்சொல்.

## 18. இடம்படுவீடிடேல்

வீடு - மனைக்கோலுங்கால், இடம் - அதனுள்ளமையுமில்லம், படு வீணேகெடும்படியாக, இடேல் - அமைக்காதே என்பதாம்.

வீண்டம்பத்தினால் வீட்டைப் பெருக்கக்கட்டி அதற்குத்தக்க செலவு செய்யாவிடினும் இல்லம் பாழ்படும். அதனை ஆளும் மக்களில்லாவிடில் சீர்கெடும்.

இதனை அநுசரித்தே "சிறுகக் கட்டி பெருக வாழவேண்டும்" என்பது உம் ஓர் பழமொழியேயாம். ஆங்கிலேயர்கள் பெருகக்கட்டி பெருக வாழ்கின்றார்களே அவ்வில்லம் பாழ்படுவதற்கேதுவில்லையோ என்பாருமுண்டு. தனத்தின் பேரில் வளைவென்பது போல் வரவுக்குத்தக்க செலவு செய்யுங் கனவான்களுக்கு அஃது பொருந்துமேயன்றி செலவிற்கே போதாத வரவுள்ள ஏழைகளுக்குப் பொருந்தாவாம்.

உலகத்தில் நூறு கனவான்களிருப்பார்களாயின் லட்சம் ஏழைகளிருப்பார் களென்பது திண்ணம். ஆதலின் பகவனது சத்ய தர்மத்தைப் பின்பற்றிய சங்கத்தோர்கள் யாவரும் தங்கள்

சீர்திருத்தப்போதங்களை செல்வமற்றோர் கூட்டி சிறப்புப்பெறச் செய்வதியல்பாம்.

வீதியில் போக்கு வருத்துள்ளவர்கள் பார்த்து மெச்சவேண்டிய டம்பங்கொண்டு வீதியின் பெருந்திண்ணை, சிறுந்திண்ணை, நடைத் திண்ணை, சார்புத்திண்ணை முதலியவைகளைக் கட்டிவிட்டு உள்ளுக்கு நுழைந்தவுடன் உட்காருவதற்கிடமின்றி ஓலைகுடிசைகள் போட்டுக் கொண்டிருப்பவர்களும் உண்டு. இதனனுபவம் கண்டோர் உட்சுவரிருக்கப் புறச்சுவரும் பூசுவோரென்று கூறும் பழமொழியும் உண்டு.

இத்தியாதி டம்பச் செயல்களை அநுபவத்தில் அறிந்துள்ள ஞானத்தாய் வீணேயிடம்படும்படி வீடிடேலென்று விளக்கியுள்ளாள்.

## 19. இணக்கமரிந் திணங்கு

இணக்கம் - ஒருவரை யடுத்து வாழ்கவேண்டுமாயின், அறிந்து அவரது குணாகுணங்களை நன்காராய்ந்து, இணங்கு நேசஞ்செய்வா யென்பதாம்.

குடும்பம் ஒன்றாயினும் அவனவன் தொழிலுக்குத்தக்க புத்தியாம் குணங்கள் வேறுபட்டு குடும்பம் மாறுபட்டுப்போவதையும் கண்டு வருகின்றோம்.

அதுபோல் ஒரு குடும்பத்தில் பலபேதகுணமுண்டாய் பல குடும்பமாவதைக் கண்டுள்ளோமாதலின் துற்குணமுற்ற குடும்பத்தையேனும் நேயனையேனும் அடுத்து சேர்வோமாயின் அவர்களுக்குள்ள துற்குணச் செயல்களே நம்மெயும், நம்மெய் அடுத்தோர்களையும் பற்றி நாசத்திற்குள்ளாக்கி விடும்.

அவரவர்களின் குணாகுணங்களில் நற்குணமுற்றோர் குடும்பத்தையேனும், நேயனையேனும் அடுத்து சேர்வோமாயின் அவர்களுக்குள்ள நற்குணச் செயல்களே நம்மெயும், நம்மெயடுத்தோர்களையும் சுகம்பெறச் செய்யும்.

**திரிக்குறள்**

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி / னல்லற் படுப்பதூஉமில்.

**விவேகசிந்தாமணி**

கற்பகத்தருவைச் சார்ந்த காகமு மமிர்த முண்ணும்
விற்பன விவேகமுள்ள வேந்தரைச் சேர்ந்தோர்வாழ்வார்
இப்புவிதன்னி வென்று மிலவுகாத்திடு கிள்ளைப் போல்
அற்பரைச் சேர்ந்தோர்வாழ்வதரிதரி தாகுமம்மா

## 20. தந்தை தாய்ப் பேண்

தந்தை - தகப்பனையும், தாய் - அன்னையையும், பேண் - பாதுகாப்பா யென்பதாம்.

நாம் மதலைப்பருவத்திலிருக்குங்கால் பசியறிந்து அமுதூட்டியும் ஈ, எறும்பணுகாது பாதுகாத்தும் அன்னம் ஊட்டியும், வித்தியா விருத்தி காட்டியும் சீர்பெறச் செய்தவர்களாதலின் அவர்கள் உபகாரத்தை என்றும் மறவாது யாதாமோர் தொழில் செய்வதற்கு ஏதுவின்றி தடியூன்றி தள்ளாடி கண் பஞ்சடைந்து பாலுங்கடைவாய்ப்பட்டு மூப்புதானமுற்றக்கால் அவர்களுக்கு வேணமுதூட்டி யாதோர் குறைவுமின்றி அதியன்பு பாராட்டி பாதுகாத்தல் வேண்டும். அத்தகைய பாதுகாத்த பிற்பலன் தன் மக்களாற் தானனுபவித்தல் கூடும். தன் மக்களைத் தான் மிக்க அன்புடன் காப்பாற்றுவது போல் தன்னையும் தன் தாய் தந்தையர் காப்பாற்றியிருப்பார்களென்று உணர்ந்து அவர்கள் மூப்புக் காலத்தில் யாதொரு கவலையும் அணுகவிடாமல் போஷிக்க வேண்டுமென்பது கருத்து.

**அறநெறி தீபம்**

அன்னை பிதா சுற்றத்தை அன்புமிகக் காப்பதுவும்
பின்னமறப் பெற்றோரை பிழையணுகா தோம்புதலும்
தன் மகவுந் தானுமிகு சன்மன்மா வாழ்க்கை பெறுங்
கன்மமதாம் நற்கரும் காட்சியதன் பயனாகும்.

## 21. நன்றி மறவேல்

நன்றி - ஒருவர் செய்த நல்லுதவியை, மறவேல் - என்றும் மறவாதே யென்பதாம்.

சகலராலும் இஃது நல்லுதவி, நற்போதம், நல்லீகை என்று கூறும் நன்றியென்னும் செயலால் சுகம் பெற்றும், அச்சுகத்தை அளித்தோன் செயலை மறப்பதாயின், மறுச்சுகமடைவதற்கும் அவனிடம் செல்லுவதற்கும் சங்கை, முன் செய்த நன்றியாம் உதவியை மறந்தவனாச்சுதே மறுபடியும் இவனுக்கு உதவிபுரியப்போமோ என்று மறைவான்.

ஆதலின் மக்கள் மற்றொருவர் செய்த தீங்குகளை மனதில் தங்கவிடாமல் நீக்கிவிடவேண்டியது. ஏனென்பீரேல், அத்தீங்காகிய எண்ணங்கள் உள்ளத்தில் பதிந்து மற்றவர்களுக்கும் தீங்குகளிழைத்து தாங்களும் தீங்குகளுக்குள்ளாகி மாறா துக்கத்தை அனுபவிப்பார்கள்.

அதுபோல் ஒருவர் செய்த உதவியை உள்ளத்திலூன்றி செய் நன்றியை மறவாதிருத்தலால் அந்நன்றியே ஏனையோருக்கு நன்னன்றியருளி உள்ளக் களங்கம் நீங்கி சதானந்தத்தை அனுபவிப்பார்களென்பது கருத்து.

**திரிக்குறள்**

**நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல / தன்றே மறப்பது நன்று.**

**அறப்பள சுரசதகம்**

செய்நன்றி மறவாதபேர்களு மொருவர்செய் தீமையை மறந்த பேரும்

திரவியந்தரவரிணி மொருவர்மனையாட்டி மேல் சித்தம் வையாத பேரும்

கைகண்டெடுத்த பொருள் கொண்டுபோய்பொருளாலார் கையிற் கொடுத்த பேரும்

காசியினி லொருவர்செய் தருமங்செடாதபடி காந்தருள் செய்கின்ற பேரும்

மொய்மொன்று நிதிகோடி வரினும் வழக்கழிவு பகலாக நிலைகொள் பேரும்

புவிமீது தலைபோரு மெண்ணினுங்கனவிலும் பொய்யை யுரையாத பேரும்

ஜயவிங் தியரெவாத சத்காருவதரென் றுலகி வகமகிழ்வ ரருமெத்தைலேன்

அநுதினமு மனதிவினை தருசதுரகிரிவன் ரறப்பளிகர தேவனே.

## 22. பருவத்தே பயிர்செய்

பருவத்தே - அந்தந்த தானியங்கள் விதைக்கக்கூடிய காலங்களுக்குக் காத்திருந்து, பயிர் - தானிய விளைவை, செய் - விதைக்க வேண்டு மென்பதாம்.

காரணம் கைப்பொருளுண்டாயின் வேண்டிய போது தானியங்களை வாங்கிக் கொள்ளலாம். ஆனால் வேண்டிய போது

பருவமென்னும் விளைவுக்குத்தக்கக் காலங்களை வாங்க இயலாது. ஆதலின் பூமியைத் திருத்தி பயிரிடும் ஒவ்வோர் வேளாளனும், பயிர்களை விளைக்கக்கூடிய காலங்களை எதிர்பார்த்திருந்து விளைவிக்க வேண்டும் என்பது கருத்து.

**கம்பர் ஏறெழுபது**

பருவத்தே கார்த்து நிலம் பண்படுத்தி பயிர்செய்து
உருவத்தாலாயபயன் வுழுது பயிர் செய்தளிக்கும்
பருவத்தான் வேளாளன் பக்குவத்தா லுல கோம்பும்
திருவத்தான் கோலதையுந் தேற்றுங்கோல் தாக்கோலே.

**23. மண்பறித் துண்ணேல்**

மன்று பறித்துண்ணேலென்பது மற்றுமோர் ஓலைப்பிரிதி மூலபாடம். மண் - அன்னியனுடைய பூமியை பறித்து - அபகரித்து, உண்ணேல் அதில்விளை பொருளை புசியாதே யென்பதாம்.

மன்று - அன்னியர் பொருளை, பறித்து - அவர்களை யறியாது வவ்வி, உண்ணேல் - புசியாதே யென்பது மற்றும் பாடம்.

இவ்விரண்டுவாசகங்களும் அன்னியனுடைய பொருளையோ, அவனது பூமியையோ, அவனை அறியாது மோசத்தினாலும் களவினாலும் அபகரித்துண்பது அக்கிரமமாதலின் சுத்ததேகத்தை சோம்பலினாலும், களவினாலும், வஞ்சினத்தாலும், வளர்க்காதே என்பது கருத்து. ஈதன்றி அன்னியன் பொருளை அபகரித்து அதினால்

சீவிப்போனை மற்றவர்கள் அறிந்தபோது அவனை நெருங்கி சினேகிக்கமாட்டார்கள், அவனே வந்த போதினும் வஞ்சகனென்றஞ்சி தூரவே விலகுவார்கள்.

### மேருமந்திர புராணம்

தானத்திற் குறித்து மன்று தன்கிளைக்கீயியற்சால
வீனத்து ளுய்க்கு நிற்கு மெச்சத்தை யிழக்கப்பண்ணும்
மானத்தை யழிக்குந் துயக்கு மற்றவர்க் கடிமையாக்கு
முனத்து நரகத்துய்க்கும் பிறன்பொரு ளுவக்கின்மாதோ.

## 24. இயல்பலாதன செயேல்

இயல்பு - தன்னளவில், அலாதன - செய்யக் கூடாதவற்றை, செயேல் - நீ செய்யாதே யென்பதாம்.

அதாவது தன்னா லியலாததும், தான் முன்பின் பாராததும், தன் அனுபவத்தில் வாராததுமாகியச் செயலைச் செய்வதானால் தேகத்தைக் கஷ்டப்படுத்துவதன்றி திரவியத்தையும் நஷ்டப்படுத்தி விடுமென்றுணர்ந்து ஞானத்தாய் இயல்பில்லாதச் செயலை செய்யேல் என்று கூறியுள்ளாள்.

ஒரு மனிதன் ஒருமணங்கு பாரம் ஏற்றக்கூடிய இயல்பு அனுபவமிருக்குங்கால் அவன் இயல்பை உணராது இரண்டு மணங்குள்ள பாரத்தை எடுத்துச் செல்லவியலுமோ ஒருக்காலும் இயலாது. எடுக்கலா மென்னுந் திண்ணத்தால் எடுத்துச்சென்று

கால்கழுத்து முறிந்து விழுவது திண்ணமாகும். ஆதலின் இயலுவதைச் செய்து இயலாததை யகற்ற வேண்டும் என்றுரைத்தது.

## 25. அரவமாட்டேல்

அரவம் - சீரலுள்ள விஷப் பாம்புகளை, ஆட்டேல் - மற்றவர்கள் மிரளுவதற்காக விளையாடிக் காட்டாதே யென்பதாம்.

துஷ்டர்களின் சவகாசமும், குடியர்களின் இணக்கமும், பாம்புகளின் பழக்கமும், எவ்வகையானுந் துன்பத்திற்கு ஆளாக்கி விடும். ஆதலின் கெட்டவஸ்து வென்றறிந்தும் இதனை அருந்தலும் கொடிய ஜெந்துக்களென்று அறிந்தும் அதனுடன் பழகுதலும் எவ்வகையானும் ஒர்கால் தனக்கும் பிறருக்கும் துன்பத்தை விளைவிக்கும் என்றறிந்த ஞானத்தாய் விஷ ஜெந்துக்களைக் கொண்டு பிறர் பயப்படுவிதமாய் விளையாட்டுக் காட்டாதே. அது கொடுவினையாய் முடியுமென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

### விவேகசிந்தாமணி

அரவினை யாட்டு வாரு மருங்களி ரூட்டு வாரும்
இரவினிற் றனிப் போவாரு மேரி நீர் நீந்து வாறும்
விரை செரி குழலியான வேசையை விரும்புவாரும்
அரயனைப் பகைத் திட்டாரு மாருவி ரிழப்பர்மாதோ

## 26. இலவம் பஞ்சிற்றுயில்

இலவம் - மிகு மிருதுவாம், பஞ்சியில் - பஞ்சு மெத்தையில், துயில் - நித்திறைசெய்

பருத்திப் பஞ்சு, பனைப் பஞ்சு, இலவம் பஞ்சு என்பவற்றுள் இலவம் பஞ்சே மிக்க மிருதுவானதும், சுகுணமுள்ளதுமாதலின் இலவம்பஞ்சு மெத்தையில் துயிலென்று கூறியுள்ளாள்.

அதன் சுகுணமோவெனில், பற்பல உஷ்ண ரோகங்கட்போம், மேக்காங்கையால் குடும்பப் பரம்பரையில் தோன்றும் மதுமேகம் போம், குட்டரோகத்தால் உண்டாம் நமைகள்போம் , குழவிகளு மலபந்தம் போம், குமரகண்ட வலிபோம், தாதுவிருத்தி உண்டாகும் ஆதலின் பொதுவாய சுகங்கருதி இலவம் பஞ்சில் துயிலென வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**பதார்த்த சிந்தாமணி**

பலபலவெப்பம்போகும் பற்றிய மேக்காங்கை
குலவரை தோன்று மேகங் குட்டத்தின் தினவுபாலர்
மலபந்தங் குமரம் நீங்கும் மன்மதநிலையுமுண்டாம்
இலவமெத்தைப் பதிந்த வில்லறமக்கட்கென்றும்

**27. வஞ்சகம் பேசேல்**

வஞ்சகம் - உள்ளத்தில் கெடு எண்ணத்தை வைத்துக் கொண்டு வெளிக்கு நல்லவன் போல், பேசேல் - பேசாதே என்பதாம்.

அத்தகைய வஞ்சநெஞ்சமுள்ளவன் உலகத்தில் எவ்வகையாய் உலாவுவானென்னில் நஞ்சுள்ள பாம்பானது தனக்குள்ள நஞ்சுடமை அறிந்து மற்றவர்களுக்கு பயந்து வொளிப்பது போல் வஞ்சநெஞ்சனும் மற்றவர்களுக்கு பயந்துலாவுவான்.

**அறநெறிச்சாரம்**

தன்னைத்தன் நெஞ்சங் கரியாகத் தானடங்கின் / பின்னைத்தா னெய்தானலனில்லை - தன்னைக்

குடி கெடுக்குந் தீநெஞ்சிற் குற்றேவல் செய்தல் /பிடி படுக்கப்பட்ட களிறு.

**திரிக்குறள்**

**வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க /ளைந்து மகத்தே நகும்.**

## 28. அழகலாதன செயேல்

அழகு - அந்நியர் கண்ணுக்கு ரம்மியமும், மனோரம்மியமும், அலாதன - இல்லாதவற்றை, செயேல் - என்றுஞ் செய்யாதே யென்பதாம்.

அதாவது ஓர் காரியத்தை எடுத்துச் செய்யுங்கால் அக்காரியமானது தனக்கு சுகத்தையும், நற்கீர்த்தியையும் தருவதுடன் ஏனையோர் கண்களின் பார்வைக்கு அழகாகவும், இதயத்திற்கு சுகமாகவும் விளங்க வேண்டும் என்பது கருத்து.

**அறப்பளீசுரசதகம்**

வாழ்மனைத்தனக்கழகு குலமங்கை குலமங்கை வாழ்வினுக் கழகு சிறுவர்

வளர்சிறுவருக்கழகு கல்விகல்விக்கழகு மானிலந் துதிசெய் குணமாம்

சூழ்குண மதற்கழகு பேரறிவு பேரறிவு தோன்றிடி லதற்கழகுதான்

தூயதவமேன்மெ யுபகாரவிரதம் பொறுமெய் சொல்லறிய பெரியோர்களைத்

தாழ்தல் பணிவிடை புரிதல் சீலநேயங்கருணை சாற்றுமிவை யாமென்பர்காண்

சவரிஜன கோரமரர் முநிவர்முற்சாரணர் சரண்மென் விருகைகூப்ப

ஆழ்கட லுதித்துவரு விடமுண்ட கண்டனே யண்ணலெம் தருமெய் மதவேள்

அநுதினமு மனதினினை தருசதுரகிரிவளரறப்பளீசுரதேவனே.

**நாலடி நாநூறு**

குஞ்சியழகுங் கொடுத்தானைக்கோட்டழக மஞ்சளழகு மழகல்ல - நெஞ்சத்து

நல்லம் யாமென்னு நடுவு நிலையாமெய்க் / கல்வி யழகே யழகு.

முகத்தழகு, அகத்தழகு, மயிரழகு, யாவும் வெயில்பூர்க்கும், மஞ்சள்போலும், புல் நுனி நீர்போலும் மறைவது திண்ணமாதலின் எத்தேசத்துள்ளோருங் கண்குளிர வாசித்துணரவேண்டிய அழகும் எக்காலும் அழியா உண்மெய் உணர்த்தும் மெய்க்கல்வியாம்

கலைநூற்களின் அழகேமிக்க சிறப்புற்றதாதலின் அத்தகைய அழகினை உலகோர்க்கு சிறக்கச் செய்யாது அழகலாதனவற்றைச் செய்தல் வீணே என்பது கருத்தாம்.

## 29. இளமெயிற்கல்

இளமெய் - தேகம் இளத்தையாம் பச்சை பருவத்திலேயே, கல் - கலை நூற்களை உள்ளத்துணர்த்து மென்பதாம்.

பச்சை பருவத்தினின்று பாலப்பருவம், குமரப்பருவம் வளருவதுபோல் கல்வியாம் கலை நூல் கற்றலாம் கலையென்னும் சந்திரன் நான்காம்பிறை ஐந்தாம்பிறை என வளர்ந்து பூரணச்சந்திரன் என்பதுபோல் தேகம் வளரும் போதே கலைநூற்களாம் நீதிநூற்களின் பழக்கத்தால் சிற்றறிவென்னும் பெயரற்று பேரறிவு வளர்ந்து பூரணம் பெறுவானென்னும் அன்பின் மிகுதியால் இளமெயாம் பச்சைப்பருவத்திலே கலைநூற்களைக் கல்லென்று கூறியுள்ளாள்.

### கல்லாடம்

நிலைதனிற் சலியா நிலைமெயானும் / பலவுலகாடுத்து வொருதிறத்தானும்

நிறையும் பொறையும் பெறுநிலையானும் /குறையாவள்ளற் கொடுகரத்தானும்

தவமு மன்பும் சைலத்தருளி / வவுமுந் திருவு முந்தினோன்றானும்

பலதுறை முகத்தொடு பயின்ற கோனும் / தலமுறை சீலந்தாக்கிய வளனுந்

தருதலிற் சீல முகத்தொடு தாகிய / வருபவர்க் குலகோ பிறை மூன்றருளி

திருமகள் முடித்த சிலையின்னும் / புண்ணியக் கல்வி வுண்ணுணர் மாக்கன்

கண்ணுஞ் செவியுங் காரணங்கொண்டு /குடக்கு சேரர்க் கிடைத்த மதிநிதி

யுடைத்த பதிமலி திருமுகங் கூறி / யன்புருத்துதவி னின்புறு பாணன்

பொன்னிதி கொடுகென புறவிடுத்தருளு /மாதவர் முதல்வன் வள்ள லிறைவன்

னிருசரண் பெறுகுனர்போல / பெருமதி நீடுவர் சிறுமதி நுதலே.

(ஓரிரு வரிகள் தெளிவில்லை )

## 30. அறனை மறவேல்

அரனை - அறவாழிக்கடவுளாம் புத்தபிரானை, மறவேல் - என்றும் மறவாதேயென்பதாம்.

புத்தபிரான் புவியில் உலாவியகாலத்தில் தன்னைத் தொழுவுங்கள் என்றாயினும், தன்னை மறவாதிருங்களென்றாயினும் அவர் நாவினால் கூறாதிருக்க,

நமது ஞானத்தாய் ஔவையார்மட்டிலும் அறனை மறவாதிருங் கோளென்று கூறியக் காரணம் யாதென்பீரேல்.

அறனை சிந்திக்குங்கால் அறன் மொழிந்த பொருள் முற்றுஞ் சிந்திக்க யேது உண்டாகும். அத்தகைய சிந்தனா முயற்சியால் உண்மெய்ப் பொருள் விளங்கி துக்க நிவர்த்தி உண்டாகி சுகவாரி என்னும் நிருவாணத்தை அடைவார்கள் அப்பரிநிருவாணமே பிறவிச் சமுத்திரத்தைக் கடந்து நித்திய சீவினாாய் சகானந்தத்திலிருப்பார்கள். என்பது சத்தியமாதலின், சத்தியமாம் அறனை என்றும் மறவேலென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்,

**அருங்கலைச்செப்பு - அறனார் பத்து**

**அறனன் றவித்த வாய்மெயாம் நான்கும் பிறவி கடல் கடக்கும் பேழ்**

**சீவகசிந்தாமணி**

வந்துதான் கூறிய வில்வாய்மொழியுமன்றி
முந்து வறன் மொழிந்த பொருண்முற்றும் கைநாடி
பந்து புடைப்பாணியெனப் பாயுங்காலிமான்றே
ரெந்தை திறமுள்ள முணர்ந்தின்னணம் விடுத்தேன்

## 31. அனந்தலாடேல்

அனந்தல் - அதிக வெள்ளப்பெருக்கத்தில், ஆடேல் - நீ நீந்திவிளையாடாதே.

ஆறுகளில் உண்டாகும் பெருவெள்ளப்போக்கில் நீந்திவிளையாடுவதினால், அனந்தலாம் நீர் ததும்பலிலும், சுழலிலும் சிக்குண்டு கைகால்கள் உயர்ந்து உதவியற்று வீணே

மடிவதற்கேதுவாகும். ஆதலின் அனந்தலாம் வெள்ளப் போக்கில் விளையாடலாகாதென்பது கருத்து.

அனந்தனென்பதின் பொருள் சிவன், மால், மிக்கோன், நிராயுதன், அருகனென்றுங் கூறத்தகும்.

அனந்த மென்பதின் பொருள் மிகுதி, சேடமெனக் கூறத்தகும். அனந்தலென்பதன் பொருள் நீர் ததும்பிய வெள்ளப்போக்கென்று கூறத்தகும்.

பாலிபாஷையில் அனந்தலென்னும் மொழிக்கு வெள்ளம், பேரலை, நீர்வேகமெனப் பொருளளித்திருக்கின்றார்கள்.

திரிபிடகம், திரிக்குறள், திரிமந்திரம், திரிகடுகம், திரிவாசகம் முதலிய நூற்களில் பாலிமொழிகளேமிக்க மலிவுள்ளது கொண்டு, அனந்தலென்னும் மொழிக்கு வெள்ளமென்னும் பொருளை விவரித்துள்ளோம்.

அனந்தல் என்பதற்கு நித்திறை என்னும் பொருள் கூறுவாராயின், அனந்தலாடேலென்னும் வாக்கியத்திற்கு நித்திறை வாடாதே என்னும் பொருளைத் தரும் அங்ஙனமின்றி அதி நித்திறை செய்யாதே, கொஞ்ச நித்திறை செய்யென்னும் பொருள் மொழிக்கு முற்றும் பேதமேயாகும்.

**32. கடிவது மற**

கடிவது - ஒருவரைக் கொடுமொழியால் கடிந்து பேசும் வார்த்தையை, மற - நீ எக்காலும் பேசாதே என்பதாம்.

முகம் கடுகடுத்தும் வாக்கால் சிடுசிடுத்தும் பேசுவதானால் தனது மனைவி மக்களுக்கு வெறுப்புண்டாவதன்றி, குடும்பத்துவேஷியென்னும் பெயர்பெற்று திருவென்னும் அருளும் அகலும் என்பது கருத்தாம்.

ஆதலின் ஒருவரைக் கடிந்து வேண்டிய காலம் நேறினும் அவ்வாக்கை மிருதுவாகவும் நியாயவாயலிலும் உபயோகிப்பதாயின் மாநுஷீக தருமத்தையும் அதன் சிறப்பையும் விளக்கும்.

**அறப்பளீசுரசதகம்**

மெய்யொன்றிலாமலே பொய்ப்பேசியேதிரியு மிக்க பாதகரிடத்தும்
கதியொன்று மிலர்போல மெலினங்கொளும் பழய கந்தை யணிவோரிடத்தும்
கடி நர்யெனச்சீறி யெவரையுஞ் சேர்க்காத கன்னிவாழ் மனையகத்தும்
ததி வார்த்தையின்றி மிகு கடிவார்த்தை கொண்டுலவு தண்மெய்றோ ரிடத்துஞ்
சாம்பிண முகத்திலுஞ் சோம்பியப்பீடைமு தேவிவர் ழிடமென்பர்காண்

அதிருப மலைமங்கை நேயனே யெழைதொழு மழகனெம் தருமமெய் மதவேன்

அநுதினமு மனதிநினை தருசதுர கிரிவள ரறப்பளீசுர தேவனே.

**நீதிவண்பா**

மென்மதுரவாக்கால் விரும்புஞ் சகங்கடின

வன்மொழியினாலிகழு மண்ணுலகு - நன்மெசே

ரோதுகுயி லேதங் குதவியது கந்தபந்தா **(தெளிவில்லை)**

**33. காப்பது விரதம்**

காப்பது - உனக்குள்ள நல்லொழுக்கங்களை நிலைக்கச் செய்தல், விரதம் - உடற்காப்பேயாம்.

அதாவது ஒவ்வோர் மனிதனும் உலகத்தில் சுகமாக வாழ்கவேண்டுமாயின் தேகக்காப்பு, வாக்குக் காப்பு, மனோகாப்பென்னும் தன் தேகத்தால் மற்றய சீவராசிகளுக்குத் துன்பஞ் செய்யாமல் காப்பதும், தன் வாக்கினால் மற்றோரை மனநோகப் பேசுதலும், தீங்குண்டு செய்தலுமாகிய சொற்களைச் சொல்லாது காப்பது, தன் மனதில் மற்றவர்களுக்குத் தீங்கு விளையக்கூடிய எண்ணங்களை எண்ணாமலும், உள்ளத்தில் கபடு சூது வஞ்சினமிவைகளை அணுக விடாமலும் காப்பதும் விரதமென்னப்படும்,

**அறநெறித்தீபம்**

பொய்யகற்றி மெய்புகலும் போதரடி போற்றுதலும்

வையகத்தோ ரென்றுமிகு வாழ்த்தி சுகமேற்றுதலுந்
துய்யனென் சீவனெலாந் தொண்டு நிலை யாற்றுதலும்
உய்யுமுடல் வாக்கு மனக்காப்பதனின் பலனாகும்.

## 34. கிழமெய்ப் படவாழ்

கிழமெய் - அறிவு முதிர்ந்தோன், பட - என்று சொல்லும்படியாக, வாழ் - உன் வாழ்க்கையை சீர்பெறச் செய்யும் என்பதாம்.

அறிவு மிகுத்த ஞானிகளையே கிழவரென்றும் கிழமெய் என்றும் கிழமெய்யரென்றும், மூத்தோரென்றும், முத்தரென்றும் , அற நூற்கள் முறையிடுகின்றபடியால் நமது ஞானத்தாயும் கிழமெய்ப்படும் வாழ்க்கையால் முத்தனாகக் கடவாயென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

கிழமெய் என்பது முதிர்ந்தோர், மூத்தோர் மிக்கோரென்னும் பொருட்களின் ஆதாரங் கொண்டு புத்தபிரானையும் கிழவனென்றே வழங்கி வந்தார்கள்.

**சூளாமணி**

ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை / போதியங் கிழவனை பூமிசை யொதிங்கினை
போதியங் கிழவனை பூமிசை யொதிங்கிய / சேதியென் செல்வனின் றிருவடி வணங்கினம்.

**மேருமந்திரபுராணம்**

மண்ணினுக்கிறை மெய்ப்பூண்டான்

மன்னனை சயந்தனென்றே

திண்மிர சரைந்து பின் ..

சிறப்பொடு (இங்கு சிலவரிகள் தெளிவில்லை)

குடிவாரம் - நிலவாரம் என்பதும், குடிக்கிழமெய் - நிலக்கிழமெய் என்பதும், ஓர் பலனைக் குறித்த மொழிகளாகும். அப்பலன் பிரிதி பலனைக் கருதாது ஈயும் பரோபகாரப் பலனாயுளதேல் அத்தேகியை கிழவன், மூர்த்தோன் மூப்பன் என்னும் சிறப்புப் பெயரால் அழைத்து வந்தார்கள்.

இதை அனுசரித்து நமது ஞானத்தாயும் உனது வாழ்க்கையில் கிழமெய்ப்பட வாழ்கவென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## 35. கீழ்மெயகற்று

சீழ் - தாழ்ந்த செயலுக்குரிய , மெய் - தேகி என்று சொல்லுதற் கிடங்கொடாது, அகற்று - நீங்கி நில்லென்பதாம்.

அதாவது உனது உருவை மற்றொருவன் கண்டவுடன் ஆ இவன் வஞ்சகன், குடிகெடுப்போன், பொருளாசை மிகுத்தோன், கள்ளன், கொலையாளி, குடியன் வியபசார மிகுத்தோன், பொய்யனென்னும் கீழ்மகன் இவனென உன்னை மற்றொருவன் அகற்றுதற் கிடங்கொடாது நீயே அக்கீழ்மகன் செயற்களை அகற்றும் என்னும்

கருத்தை பின்னிட்டு கீழ்மெயகற்றும் என்று முன்னிட்டுக் கூறியுள்ளாள்.

கீழ்மக்கள் மேன்மக்களென்னும் பெயர்கள் இத்தகையச் செயல்களால் தோற்றியவைகளேயாம்.

**வளையாபதி - தீவினையச்சம்**

கள்ளன் மின் களவாயின யாவையுங்
கொள்ளன்மின் கொலைகூட்டி வருமற
மெள்ளன் மின்னில் ரெண்ணியாரையு
நள்ளன் மின் பிறபெண்ணோடு நண்ணன்மின்

**மேருமந்தரபுராணம்**

பொய், கொலை, காமம் புலை சூதுகள்ள கற்றி
மெய்யறத் திசையினோடு பொருளினை வரைந்து மேனி
நையினும் வதங்கணையா வகையினா நாகராசன்
சய்யமா சய்ய மத்தின் றலைநின்றார் போலச் சென்றார்.

## 36. குணமது கைவிடேல்

குணம் - உமக்கு தோற்றிய சுகம் அது - அதினாலாய தென்றறிந்து கொள்ளுவாயாயின், கைவிடேல் - அவற்றை நழுவ விடாதே யென்பதாம்.

அதாவது நீவிர் புசித்த அவுடத்தினால் வியாதி நீங்கிவரும் குணத்தை சுகநிலையில் காண்பாயாயின் அதை கைவிடாமல்

புசிப்பாயாக.

புசித்துவரும் பதார்த்தங்களில் சுகநிலை தோற்ற, குணமுண்டாயின் அவற்றையும் கைவிடேல்.

நீவிர் ஆதுலர்க்கு அளிக்கும் அன்னதானத்தாலும், அறஹத்துக்கு அளிக்கும் போஷிப்பினாலும், அன்னியரைக் காக்கும் ஆதவினாலும், உமக்குண்டாய சுகுணநிலையால் உற்றச் செயலைக் கைவிடேல்.

உம்மால் மற்றவர்களுக்குப் போதிக்கும் நற்போதக விருத்தியால் தாமும் அப்போத நிலையினின்று சொற்சுக்குணங்காண்பீராயின் அவற்றையும் கைவிடேலென்பதாம்.

தனக்கும், பிறருக்கும் சுகுண முண்டாகச் செய்தல் நியாயகுணமும், தனக்கும் பிறருக்கும் அசுகுணம் உண்டாகச் செய்தல் தீயகுணமுமாதலின் எக்காலும் தீயகுணங்களை அகற்றி நியாய குணங்களை நிறப்புவதே நீதிநெறியினிலைகளாம் நீதிநெறி நிறைந்தவர்களையே மக்கள் எக்காலும் நாடி நிற்பார்.

**அறப்பளீசுரசதகம் - குணங்காண் குறி**

கற்றோர்களென்பதை சீலமுடனே சொலுங் கனவாக்கினா லறியலாம்

கற்புளோரென்பதை பார்க்கின்ற பார்வை யொடு கானடையினாற் காணலாம்

அற்றோர்களென்பதனை யொன்றினும் வாரா வடக்கத்தினா லறியலாம்

அறமுளோரென்பதைப் பூத்தயை யென்னுநிலையது கண்டு தானறியலாம்

வித்தோங்கு பயிரை கிளைத்துவரு துடியினால் விளையுமென்றே யறியலாம்

வீரமுடையோரென்ப தோங்கிவரு தைரிய விசேஷத்தினா லறியலாம்

அத்தர் குணத்தினால் குலநலந் தெரியலாம் அண்ணலெம் தருமெய் மதவேள்

அநுதினமு மனதிநினை தருசதுர கிரிவளரறப்பளீ சுரதேவனே.

தனக்குண்டாய குணத்தையும், ஏனையோர் குணத்தையும் ஆராய்ந்து அதன் சுகுணத்தை அறிய வேண்டில் ஓர் குடும்பத்தையே குலமென்று கூறுவர். அக்குடும்பத்தோர் ஊர்குடி கொடுப்போரும், வஞ்சினத்தோருமாயிருப்பார் களாயின் அக்குடும்பத்தில் பிறக்கும் பிள்ளைக்கும் அத்தீயகுணங்கள் உண்டாகும்.

அத்தகைய தீயகுணங்களாலும், செயல்களாலும் அவர்கள் அடையும் துக்கத்தின் பேரவாவாலும் கண்டறியலாம்.

## மூதுறை

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு - மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வங் /குலத்தளவே யாகுங் குணம்.

குலமென்னும் ஓர் குடும்பத்தில் வஞ்சின மிகுத்திருக்குமாயின் அக்குலத்து சிறுவர்களுக்கும் அக்குணமே மிகும் குலமென்னும் ஓர் குடும்பத்தில் பொய்யும் பொறாமெயும் நிறைந்திருக்கின் அக்குலத்து சிறுவர்களுக்கும் அக்குணமே மிகும்,

குலமென்னும் ஓர் குடும்பத்தில் பொருளாசை, குடிகெடுப்பு, களவு மிகுந்திருக்குமாயின் அக்குலத்து சிறுவர்களுக்கும் அக்குணங்களே மிகும். **(சிலவரிகள் தெளிவில்லை )**

## 37. கூடிப்பிரியேல்

கூடி - ஒருவரை நேசித்து, பிரியேல் - அவரைவிட்டு நீங்காதே என்பதாம்.

அவரவர்களுக்குள்ள தீயகுணங்களையும் நியாயகுணங்களையும், நன்காராய்ந்து நியாயமிகுத்தோர்பால் நேயம்புரிந்து அவர்களைக் கூடிப்பிரிவதாயின் தீயகுணநிலையே நியாய குணத்தோடு நிலைக்கவிடாது அகற்றியதென்பது கருத்தாகும்.

அதலின் நல்லோரை அடுத்து அவர்களுடன் கூடி நல்லுணர்ச்சி மிகுங்கால் அவர்களை விட்டுப் பிரியேலென்று கூறியுள்ளாள். **(சிலவரிகள் சிதைந்து போயின)**

## 38. கெடுப்பதொழி

கெடுப்பது - மற்றோர் குடிக்கு கேடுண்டாக்குதலை, ஒழி - அகற்றிவிடும் என்பதாகும். கெடு எண்ணத்தையும் கெடு தொழிலையும் ஒழித்து வாழ வேண்டிய காரணம் யாதெனில் தனக்குள் தோன்றுங் கெடு எண்ணத்தின் விரிவே தன்னுள்ளத்திற் கொதிப்பேற்றி சுடுவதுடன், தன்னை அறியாமலே வாழைப்பழத்தில் ஊசி நுழைவதுபோல் நுழைந்து கெடுத்துவிடும். தன் சுகத்தை நாடுகிறவன் தனக்குள் தோன்றுங் கெடு எண்ணத்தினரிவே தன்னுள்ளத்தில் சிலவரிகள் தெளிவில்லை எதிரியின் சுகத்தையும் கோறல் வேண்டும். அங்ஙனமின்றி தன் சுகத்தை நாடி எதிரியின் சுகத்தைக் கெடுப்பதாயின் அக்கேட்டின் பலனே தனக்குங்கேட்டையுண்டு செய்யுமாதலின் கெடுப்பதொழி யென்னும் வாசகத்தை சுருக்கி கூறியுள்ளான். **(பாடல்கள் தெளிவில்லை)**

## 39. கேள்வி முயல்

கேள்வி - உனது செவிகளால் அறநெறி வாக்கியங்களைக் கேட்பதற்கு, முயல் - முயற்சியிலிருமென்பதாம்.

பூர்வம் வரிவடிவாம் அட்சரங்கள் இல்லாத காலத்தில் புத்தபிரானால் போதித்த திரிபேத வாக்கியங்களென்னும்

திரிபீடமாம், சப்பரபஸ்ஸ அ குஸலஸ வுபசம்பதா, சசித்தபரியோதபனம், எனும் பாபஞ் செய்யாதிருங்கள், நன்மெய்க் கடைபிடியுங்கள், உங்கள் இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்னும் மூன்று பேதவாக்கியங்களையே ஒருவர் சொல்லவும் மற்றவர்கள் கேட்கவுமா யிருந்தபடியால் சுருதியென்று வழங்கிவந்தார்கள்.

இத்தகைய நீதிநெறிகளமைந்த சுருதிமொழிகளைக் கேட்டலும், அதின் அந்தரரார்த்தங்களை சிந்தித்தலும், தான் சிந்தித்துணர்ந்தவற்றால் தெளிதலும், அத்தெளிவால் துக்க நிவர்த்தியடைதலுங்கொண்டு வரிவடிவ அட்சரங்களுள்ள சகடபாஷையாம் சமஸ்கிருதமும், திராவிடபாஷையாந் தமிழும், புத்த பிரானால் இயற்றி அவர் போதித்துள்ள நீதிநெறிகள் யாவும் அட்சரவடிவிற் பதிந்துள்ள போதினும் செவிச்செல்வமாங் காதுகளினாற் கேட்டுணர்வதே தெளிவாதலின் ஞானத்தாயுங் கேள்வி முயல் என்று கூறியுள்ளாள்.

இவற்றை அநுசரித்தே நாயனாரும் தனது திரிக்குறளில் செவியால் கேட்டுணராத மக்கள் உலகில் இருந்தென்ன போயென்ன என்னும் பயனற்ற உலகின் நிலையை ஊட்டியுள்ளார்:

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்

இத்தகையக் கேள்வியில் புத்தாகமங்களை உணராதோரும், ஞான போதங்களைக் கேட்காதோரும், வினையின் பயன்களை உணராதோரும், சொல்லும்படியான போதகங்கள் யாவும் குருடனுக்குக் குருடன் வழிகாட்டுவன ஆதலின் தங்கள் வயிற்று சீவனத்திற்காயப் பொய்யைச் சொல்லித் திரிவோர் போதனைகளைச் செவிகளிற் கேளாது மெய்க்குருக்கள் போதகங்களை செவியாறக் கேட்டுத் தெளிவதே கேள்வியாம்.

**பழமொழி விளக்கம்**

அருண்மிகுத்த வாகமநூல் படித்தறியார் கேள்வியொன்று மறியார் பின்னும்
இருவினையின் பயனறியார் குருக்களென்றே யுபதேசம் எவர்க்குஞ் செய்வார்
வரமிகுத்த தண்டலைநீ நெறியாரே யவர்க்கிரியை மார்க்கமெல்லாங்

பொருள் சம்பாதிக்கும் உபாயத்தைக் கருதி பொய் சொல்லி வஞ்சிக்கும் அஞ்ஞான குருக்களின் கேள்வியில் முயலாமல் பொருளாசையற்று கண்டிப்பான நீதி நெறிகளைப் புகட்டும் மெய்ஞ்ஞான குருக்களின் கேள்வியில்
முயலவேண்டுமென்பது கருத்தாம்.

## 40. கைவினைகரவேல்

கைவினை - உனது கைத்தொழிலாஞ் செயலை, கரவேல் - கைசோர்ந்து பின்னிடையச் செய்யாதே என்பதாம்.

அதாவது - கைவினையாம் செய் தொழிலில் மேலும் மேலும் அறிவினை விருத்தி செய்து முன் செய்யும் பொருளினும் பின் செய்யும் பொருட்கள் சிறப்புக்குன்ற தோற்றுமாயின் அப்பொருள் நாளுக்குநாள் சிறப்புக் குன்றுவதுமன்றி செய்தொழிலால் கைவினையுங் கரந்து பாழடைந்துபோம். ஆதலின் செய்தொழிலை நாளுக்குநாள் சிறப்படையச் செய்யவேண்டுமேயன்றி ஒளித்துக் குன்றலாம் கரவேலென்று கூறியுள்ளாள்.

எடுத்த கருமத்தை சீர்பெற முடிக்கும் முயற்சியே சிறப்பைத்தரும். அங்ஙனமின்றி செய்தொழிலிற் சூதும், செய்தொழிலிற் களவும், செய்தொழிலில் வஞ்சமும் உண்டாயின், இழிதொழிலாற் சகலராலும், இகழ்ச்சியுண்டாம்.

**பழமொழி விளக்கம்**

இதுகரும் மிதனாலே யதை முடிப்ப தெனத்தொழிலை யெண்ணிச்செய்தால்

அதுகருமம் பாராமற் றிருடியுமள் ளியும் பிரட்டா யலைவதெல்லாம்

மதியணிந்த தண்டலையார் வளநாட்டில் நீராடு மாதர்தங்கள்

முதுகினைத் தேயெனச்சொன்னால் முலை மீது கையையிட்ட முறையீதாமே

ஆதலின் செய்தொழிலாம் கைவினையானது அறம், புகழ், நேயம், மூன்றிற்கும் ஆதாரமாயிருத்தல் வேண்டும்.

**திரிக்குறள்**

துணை நல மாக்கந் தருஉம் வினை நலம் / வேண்டிய வெல்லாந் தரும்

## 41. கொள்ளை விரும்பேல்

கொள்ளை - பொருட் கொடுத்து கொள்ளாத பொருளை, விரும்பேல் - நீ ஆசை வையாதே என்பதாம்.

முதலீய்ந்து கொள்ளாதப் பொருளே கொள்ளை என்று கூறப்படும். அத்தகையாய கொள்ளை கொடுத்தோன் மனங் குமுறவும், தேகம் பதரவும், அவன் பொருளை விரும்புவதினால் விரும்பினோன் பொருளை அவனை அறியாது மற்றொருவன் கொள்ளைக் கொள்ளுவான் என்பது அனுபவமாதலின் அன்னியன் பொருளை அபகரிக்க விரும்பாதே என்பது கருத்தாம்.

**வளையாபதி**

பீடிற் செய்திகளாற் களவிற் பிறர் / வீடிற் பலபொருள் கொண்ட பயனென

கூடிக்காலொடு கைகளைப் பற்றிவைத் தோடிலின்றி யுலையக் குறைக்குமே

**சீவகசிந்தாமணி**

(பாடல் தெளிவில்லை )

## 42. கோதாட்டொழி

கோது - உன்னை குற்றத்திற் காளாக்கும், ஆட்டு - விளையாட்டை, ஒழி - எக்காலும் நீக்கிவிடும் என்பதாம்.

தன்னைத்தானே குற்றத்திற்கு ஆளாக்கிவிடும் விளையாட்டுகள் யாதெனில், கள்ளினைக் கூடி குடிக்குங் களிவிளையாட்டும், மற்றவன் பொருளை அபகரிக்க சுருங்கி விளையாடும் சூது விளையாட்டும், அடுத்த உறவோர்கள் முன்னிலும், அதிகாரிகள் முன்னிலும் குற்றவாளியாக ரூபிக்கும் ஆட்டத்தை விளையாடேல் என்று கூறியுள்ளாள்.

**அறநெறிதீபம்**

சூதுடனே கள்ளருந்துந் தொல்லை விளையாட்டகற்றி
ஆதுலர்க்கே யன்னமளித்தானந்தமாடுதலும்
தீதகற்றி யெஞ் ஞான்றுந் தேவனென போற்றுதலும்
போதி நிழல் வீற்றிருந்தோற் போதறத்தின் பயனாகும்.

## 43. சக்கரநெறிநில்

சக்கர - அறவாழியாம் தருமச்சக்கர, நெறி - ஒழுக்கத்தில், நில் - நிலைத்திரு மென்பதாம்

புத்தபிரான் அரச புத்திரனாகத் தோன்றி சத்திய தன்மத்தைப் போதித்த படியால் அதனைக் கோனெறி என்றும், அஃது சகலருக்கும் பொதுவாய தன்மமாதலின் அறநெறி என்றும் அவர் உலகமெங்கும் சுற்றி அறக்கதிராம் சத்திய தன்மத்தை விளக்கிய படியால் சக்கர நெறி என்றும் வழங்கி வந்தார்கள்.

**மணிமேகலை**

தருமச்சக்கரம் உருட்டினன் வருவோன்

அறக்கதிராழி திரப்பட வுருட்டிய காமற்கடந்த வாமன்பாதம்.

பொன்னணிநேமி வலங்கொள் சக்கரக்கை மன்னுயிர் முதல்வன் மகனெமக்களித்த

எண்ணருஞ்சக்கர வாளமெங்கணும் அண்ணறைக்கதிர் விரிக்குங்காலை.

திரிபேதம் என்றும், திரிபீடம் என்றும் வழங்கிய சுருதிமொழிகளை கலை நூற்களில் வகுத்து பாநெறி என்றும், அரசர்கள் செவ்வியக் கோல்வழியில் வகுத்து கோனெறி என்றும், பொதுவாய நீதிநெறியில் வகுத்து நீநெறி என்றும், போதித்துள்ளவற்றில் உலகெங்குஞ் சூழ்ந்துள்ள சருவசீவர்கண் மீதுங் கருணைவைத்துக் காக்கும்

நெறியே விசேஷ நெறியாதலின் நமது ஞானத்தாய் சக்கரநெறிநில்லென வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**சீவகசிந்தாமணி**

நூனெறி வகையி நோக்கி நுண்ணுதினுழைந்து தீமெய்
பானெறி பலவு நீக்கிபரிதியங் கடவுளன்ன
கோனெறி தழுவி நின்ற குணத்தொடு புணரின்மாதோ
நீனெறி வகையினின்ற நல்லுயிர்க் காமிர்தமென்றான்.

**காக்கைபாடியம்**

பக்குவஞானம் பகர்ந்தருள்போதன் /மிக்கவர்க்கீயந்த மேதினி தன்ம சக்கரநெறியிற் சேர்ந்தவர்க்கென்றுங் கைக்கிளை காமக் காரணுகாவே.

## 44. சான்றேரினத்திரு

சான்றோர் - சகலராலும் நன்குமதிக்கும், இனத்து - கூட்டத்தாரிடத்து, இரு - சேர்ந்து வாழக்கடவா யென்பதாம்

சான்றோர் என்போர் சகலமக்களாலும் மேலோர், மேதாவியர் என்று சாற்றுதற்கு உரிய மேன்மக்களாகும் சாந்த மிகுத்தோர்களேயாவர். சகல நற்கிரித்தியங்களுக்கும் சான்றாகும் மேன்மக்களாம் நல்லினத்தோரை அடுத்து வாழ்த்தினால் தனக்குள்ள பொய்யும் களவும் கொலையும், காமமும், வெறியுமற்று மெய்யும், ஈகையும், காருண்யமும், சாந்தமும், நிதானமும் பெருகி நிருவாணமார்க்கமும் சுருக்கமாக விளங்கும்.

ஈதன்றி தன்னையீன்ற தாயானவள் எக்காலும் அன்பு கொண்டொழுகு பவளாயினும் உமது புத்திரன் மேன்மக்களாம் விவேகிகளை அடுத்து கலை நூற்களைக் கற்று சாந்தரூபியாய் சகலராலும் நல்லோன் என்று சாற்றுதற்குரியவனாயிருக்கின்றான் என்று கேழ்விப்பட்டவுடன், ஈன்றாள் அகமகிழ்வையும் அன்பையும் சொல்லத்தகுமோ, ஒருவராலுஞ் சொல்லத் தரமன்றாம் ஆதலின் நல்லினத்தைச் சார்ந்தொழுகுஞ் சாட்சியே நன்றென்று கூறியுள்ளாள்.

**திரிக்குறள்**

ஈன்ற பெழுதிற் பெரிதுவக்குந் தன்மகனை / சான்றோனெனக் கேட்டத் தாய்.

**குமரேச்சதகம் - நல்லினஞ்சேர் பயன்**

சந்தன விருட்சத்தை யண்டி நிற்கின்ற பல தருவுமவ்வாசனை தரும்
தங்கமகமேருவை யடுத்திடுங் காக்கையுஞ் சாயல் பொன்னிறமே பெறும்
பந்தமிகு பாலுட னுடைந்த தண்ணீரெலாம் பால் போல் நிறங்கொடுக்கும்
படி கமணி கட்குளே நிற்கின்ற வடிவுமப்படியே குணங்கொடுக்கும்
அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடி எடுத்ததும் பசிய நிறமாம்
ஆன பெரியோர்களொடு சகவாசம் து செய்யிலவர்கள் குணம் வருமென்பர்காண்

மந்திரநெடு கிரியை முன் மத்தாய் கடைந்தவரின் மருகமெய்ஞ்ஞான குரவா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயநீடு மலைமேவு குமரேசனே.

## 45. சித்திரம் பேசேல்

சித்திரம் - பொய்யாகிய வார்த்தைகளை மெய்போல் அலங்கரித்து, பேசேல் நீ என்றும் பேசாதேயென்பதாம்.

அதாவது தன் கண்ணினாற் காணாததைக் கண்டது போல் அலங்கரித்துப் பேசுதலும், தன் செவியினாற் கேளாததைக் கேட்டது போல் அலங்கரித்துப் பேசுதலும், தன் நாவினால் உருசிக்காததை உருசித்தது போல் அலங்கரித்துப் பேசுதலும் தன் நாசியினால் முகராததை முகர்ந்தது போல் அலங்கரித்துப் பேசுதலும் தன் உடல் பரிசிக்காதனவற்றை பரிசித்தது போல் அங்கரித்துப் சந்தகை மேருவை படுதடந்த தண்ணீரெலா படியே குணங்கொம் பேசுதலும், மனமுற்றுச் சொல்லும் பொய்யாதலின் அப்பொய்யே மேலுமேலுந் திரண்டு உண்மெய்யை மறைத்து உலகபந்தத்திற் சிக்கி மாளா துன்பத்திற்கு ஆளாக்கிவிடும். ஆதலின் தான் சொல்லும் வார்த்தைகள் பொய்யென்று அறிந்தும் மனசாட்சி உண்டென்றும் அஞ்சாது அப்பொய்யையே மெய்போல் அலங்கரித்துப்பேசுதலிலும் வாய்மெய்க்கேடு வேறில்லை என்பதாம்.

ஈதன்றியும் ஒளவையாகிய ஞானத்தாய் முக்காலமும் உணர்ந்தவளாதலின், வருங்காலத்தில் ஒளவையார் அவசரப்பூசை செய்ய அதையுணர்ந்த யானைமுகக் கல்விநாயகர் அவசரப்பூசை செய்ய வேண்டாமென்றுங் கூறி தனது துதிக்கையா லெடுத்து கயிலாயத்தில் விட்டுவிட்டா ரென்னுந் சித்திரவார்த்தையாம் கற்பனைக் கதையைக் கட்டிவிடுவார்கள். அத்தகைய பொய்யாகும் கட்டுக்கதைகளில் மெய்யுணராது மேலுமேலுந் துக்கத்திற்கு ஆளாவர் என்றுணர்ந்த ஞானத்தாய் சித்திரம் பேசேலென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**காக்கை பாடியம்**

முத்திர மாய்ந்த மூதறிவாளர் /குத்திரமியயுங் கோடுரையாது
சித்திரங்கூறி சீரழியார்க ளெத்திரத்தாலு மெய்துவர் வீடே.

## 46. சீர்மெய் மறவேல்

மெய் - தேகத்தை, சீர் - சுத்தி செய்யும் விஷயத்தில், மறவேல் - ஒருக்காலும் மறவாதே யென்பதாம்.

சீர்மெய் என்பதின் இலக்கணம் மெய் சீராதலின் புறமெய்ச் சீராம் தேகச் சுத்திகரிப்பால் தெளி நிலையும் விவேக விருத்தியுமுண்டாவதன்றி இதயசுத்தத்திற்கும் ஏதுவுண்டாம். அத்தகைய இதயசுத்தத்திலேயே சகல சுகமும் விளங்குகிறபடியால் அவற்றிற்கு மூலகாரணமாம் புறமெய்ச்சீரென்னும் சீர்மெயாதலின் தேக சுத்தத்தை திடம் பெறக் கூறியுள்ளாள்.

பிரிட்டிஷ் ஆட்சியோராய் நமது தேசத்தை அரசாண்டுவரும் ஆங்கிலேயர்கள் வெண்மெய் நிறத்தால் சுத்த தேகிகளாகவும் எக்காலுந் தங்கள் தேகத்தை சுத்திகரிப்பவர்களாகவும் சுத்த உடையை உடையவர்களாகவுந் தோன்றியபடியால், அவர்களை சீர்மெய்யர், சீர்மெயோரென்று இத்தேசத்தோர் வழங்கிவந்த வார்த்தையைக் கொண்டு இவர்கள் காணாத வைரோப்பா தேசத்திற்கு சீர்மெய் என்னும் பெயர் வாய்த்திருப்பதை தேக சுத்த தோற்றமாம் சீர்மெயென்றே தெளிந்து கொள்ளலாம்.

**அருங்கலைச் செப்பு - உள்ளொளி பத்து**

சீர்மெயதாகி சுகங்கெடா சுத்தத்தாற் /நூய்மெயதா முன்னொளி.

காய்மெயிலுற்றக் களங்கமறநீக்கில் / வாய்மெயாம் வள்ளலொளி.

மெய்மெயாலாற்ற லுடையார் தமக்கு பொய்யகன்றேற்றுமொளி.

**47. சுளிக்கச்சொல்லேல்**

சுளிக்க - வொலிக்கும் வார்த்தை பிறருக்குப் புலப்படாமல், சொல்லேல் - பேசாதே யென்பதாம்.

அதாவது பேசும் வார்த்தைகளை சுழித்து சுழித்து உள்ளுக்கொன்றும் வெளிக்கொன்றுமாக பேசுதலினும் பேசாதிருப்பது சுகமாதலின் பேசும் வார்த்தைகளை பூர்த்தியாக வெளியிடாது உள்ளுக்கே சுளித்துப் பேசலாகா தென்பது கருத்தாம்.

முகசுளிப்பால் வாக்குச்சுளிப்பும் வாக்குச்சுளிப்பால் அகச்சுளிப்பாம் வஞ்சநெஞ்சத்தின் நஞ்சு விளங்குகிறபடியால் அந்நஞ்சின் விஷமீறி இதய கோசத்தைக் கெடுப்பதுமன்றி தேகமும் பாழடைவதற்கு சுளிப்பே ஓர் மூலமாதலின் வஞ்சத்தை நெஞ்சிலூன்றி சுளிக்கச் சொல்லேலென்பது உட்கருத்தாம்.

## 48. சூது விரும்பேல்

சூது - ஒருவரை வஞ்சித்தும் குடிகெடுத்தும் தானுங் கெடுங் கரவடைச் செயலை, விரும்பேல் - நீ யெப்போதும் ஆசை வையாதே என்பதாம்.

அதாவது தான் வேறு தொழில் யாதுமின்றி மற்றொருவன் பொருளை வஞ்சக விளையாட்டையாடி பறிப்பதும், சூதென்னும் ஓர் தொழிலையே நெஞ்சிற் குடிகொளச்செய்வதுமாகிய அத்தீயவிளையாட்டையே மிக்க விரும்பி தானுங்கெடுவதுடன் மற்றவர்களையுங் கெடுத்து பாழ்படுத்துகிறபடியால் வஞ்சித்துக் கெடுக்கும் சூதை விரும்பேலென்பது கருத்தாம்.

### காக்கை பாடியம்

கோதுட்டுளமே குலநல மழிக்கும் / வாதிட்டார்ப்ப வாழ்க்கையுங் குன்றும்

சூதுற்றாடல் சூழ்கிளை யழிக்கும் / போதித்தானப் பொக்கிடம் போற்றீர்.

## 49. செய்வன திருந்தச் செய்

செய்வன - நீ செய்ய வேண்டிய காரியங்களை, திருந்த - சீர்பெற, அதாவது தானெடுத்து முடிக்கவேண்டிய காரியாதிகள் யாவும் சகலருக்கும் உபயோகமாகக்கூடியதாகவும் சகலருங் கொண்டாடுவதாகவுமிருத்தல் வேண்டும்.

அங்ஙனமின்றி எடுத்த காரியத்தை திருந்த முடிக்காது குறைந்தழியுமாயின் தனக்கு அதிகக் கஷ்டமுண்டாவதுடன் பொருளும் நஷ்டமுண்டாகிக் கெடும். ஆதலின் எத்தகைய காரியங்களைச் செய்ய முயன்ற போதினும் அவற்றைத் திருந்தச் செய்வதே அழகாகும்.

### குமரேச்சதகம் - செய்யத்தகாதவை

தானாசரித்துவரு தெய்வமிதுவென்று பொய் சத்தியஞ் செயில் விடாது

தன்வீட்டி வேற்றிய விளக்கென்று முத்தந்தனைக் கொடுத்தா லது சுடும்

ஆனாலு மேலவர் மெத்தவுந் தனதென்றடாது செய்யிற் கெடுதியாம்

யானைதான் மெத்தப் பழக்கமானாலுஞ் செய்யாது செய்தால் கொன்றிடும்

தீனானதினிதென்று மீதாண விரும்பினாற்றேக பீடைகளே தரும்

ஜகராஜ ரென்னினு மேலாத காரியஞ் செய்தான் மனம் பொறார்காண்

வாணாடு புகழுமொரு சோணாடழைக்கவே வந்தவதரித்த முதலே

மயிலேறிவிளையாடு குகனே புல் வயல் நீடு மலைமேவு குமரேசனே.

செய்யத்தகுவனவை இன்னதென்றும், தகாதனவை இன்னதென்றும் விவேகமிகுத்த மேன்மக்களால் வகுத்துள்ளபடியால் ஒவ்வொருவரும் தாங்கள் செய்யவேண்டிய காரியங்களை முன்பின் யோசித்துத் திருந்தச் செய்யவேண்டு மென்பதேயாம்.

## 50. சேரிடமறிந்து சேர்

இடமறிந்து - இஃது நல்லோரிடமா, அன்று பொல்லாரிடமா வென் றறிந்து, சேர் - கூடி வாழக்கடவாய் என்பதாம்.

தீயரென்றும், நியாயரென்றும், நல்லோரென்றும், பொல்லாரென்றும் வழங்கும்படியானக் கூட்டத்தோரைக் கண்டாராய்ந்து நல்லோருடன் சேர்தலே நன்மக்களென்பதற்கு ஆதாரமாதலின் தீயோர்களையும், பொய்யர்களையும், வஞ்சகர்களையும், குடிகெடுப்போரையும், பொறாமெயுள்ளோரையும் அடுக்காது,

நியாயர்களையும், அன்பு மிகுத்தோரையும், தன்னவர் அன்னியரென்னும் பேதமற்ற மேன்மக்களையும், ஈகை மிகுத்த தாதாக்களையும், அடுத்து வாழ வேண்டியதே விவேகமிகுக்கக் கோறுவோர் குணமாதலின் சேரிடமறிந்துச் சேரவேண்டியதே சிறப்பாகும்.

**நீதிவண்பா**

நிந்தையிலா தூயவரும் நிந்தையரைச் சேரில்வர்ய / நிந்தையது தம்மிடத்தே நிற்குமே - நிந்தைமிகு
தால நிழற் கீழிருந்தான் றன்பாலருந்திடினும் /பாலதனைச் சொல்லுவரோ பார்.

மக்களை ஒத்த ரூபமுற்றோராயினும் மிருகத்திற் கொற்ற செயல் மிகுத்தோர் மிக்கோராதலின் நல்லோரைக் கண்டிணங்கவேண்டியதும், பொல்லாரைக் கண்டோடவேண்டியதும் புதைப்பொருளாகும்.

**நீதிவெண்பா**

கொம்புளதற்கைந்து குதிரைக்குப்பத்து முழம் /வெம்பு கரிக்காயிரந்தான் வேண்டுமே வம்பு செரி
தீங்கிளர்தன் கண்ணிற் றெரியாத தூரத்து நீங்குவதே நல்லநெறி.

## 51. சையெனத் திரியேல்

சையென - கியானியென்று உன்னை மெச்சும்படியான வேஷம் பூண்டு, திரியேல் - நீயுலாவாதே என்பதாம்.

பாலி பாஷையில் ஸை என்னு மொழிக்கு ஞானமென்றும், ஸைலமென்னு மொழிக்கு ஞானக்குன்றென்றும் , ஸைவமென்னு மொழிக்குத் தன்னை அறிதலென்றும், ஸையோகமென்னு மொழிக்கு ஞானபாக்கியம் அல்லது கியானவதிர்ஷ்டமென்றுங் கூறியுள்ளபடியால் (ஸை) யெனக்கூறும் ஞானவான் போலும், மௌனி போலும் வேஷமிட்டுக் கொண்டு மற்றவர்களை வஞ்சித்தும், பொருள் பரித்து, மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசையற்றவர்போல் நடித்து மூவாசையும் முற்றப்பெருக்கி ஞானியெனத் திரிதல் யதார்த்த ஞானிகளை இழிவுபடுத்துவதற் கேதுவாகத் தோற்றலால் ஸை யெனத் திரியேலென்று சத்திய நிலையை விளக்கியுள்ளாள்.

## மேருமந்திர புராணம்

யீற்றிலாராதனை விதியிலேந்தறா / னாற்றலுக்கேற்றவா றன்னபானமும்

சாற்றியவகையினாற் சுருக்கிச் சையமே / லேற்றினான்றன்னைநின்றிலங்குஞ்சிந்தையான்

சித்தமெய் மொழிகளிற் செரிந்துயிர்க் கெலா / மித்திரனாய பின் வேதனாதியி

லொத்தெழு மனத்தனா யுவகையுள்ளுலாயத் / தத்துவத் தினாற் றனுவை வாட்டினான்.

## 52. சொற் சோர்வுபடேல்

சொல் - ஒருவருக்குச் சொல்லிய வுருதி வாக்கியத்தில், சோர்வு - தவறுதல் வுண்டாகும்படி, படேல் - செய்துக் கொள்ளாதே.

ஒருவருக்குப் பொருள்ளிப்பேன் வாவென்று கூறியும், அன்னமளிப்பேன் வாவென்று கூறியும், அவன் வந்த பின்பு சொல்லிய சொல் தவருமாயின் மிக்க அவாவால் நாடிவந்தவன் மனதுகுன்றி நாணடைந்து போவான். அவ்வகையா லவன் மனம் குன்றிப் போவதினாலும் அவனுக்குக் கொடுப்பேனென்று சொல்லியவாக்கைச் சொல்லாமலிருப்பது அழகாகும். ஒருவனுக்கு அவா மிக்கச் சொல்லி அச்சொல் சோர்வுபடுமாயின் அதனினும் வாய்ப் பொய் வேறில்லை யெனவுணர்ந்த ஞானத்தாய் தேகசோர்வினும் சொற்சோர்வுபடேலென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## 53. சோம்பித் திரியேல்

சோம்பி - ஒரு தொழிலுஞ் செய்வதற் கியலாதவனாய், திரியேல் - உலாவாதே என்பதாம்.

அதாவது ஓர்தொழிலுக்கு உதவாதவனாகவும், ஓர் வித்தைக்கு உதவாதவனாகவும் சோம்பேறி திரிவானாயின் விவேகிகள் அவனை சீவ அசீவ மிரண்டினுங் கடையாக மதிப்பர்.

மாடு, குதிரை, கழுதையாயினும் சுமைசுமந்தும், வண்டியிழுத்தும், உழவு செய்தும் மக்களுக்கு உபகாரிகளாகும். மண்ணேனும் ஓர் பலனைக் கொடுக்கும், கல்லேனும் ஓர் கட்டிடத்திற்காகும். மரமேனும் நிழலைக் கொடுக்கும். இத்தகையப் பிரயோசனங்கள் யாதுமன்றி மனிதரூபியாய் உலாவுவானாயின், அவனை மனிதனில் மாடு, மனிதனில் கழுதை, மனிதனில் மண், மனிதனில் கல் என்று கூறலாமோ. அவ்வகைக் கூறுதற்கும் ஆதாரமில்லாதவனா யிருக்கின்றான். ஆதலின் சகலவற்றினுங் கடையனென்றே கழிக்கப்படுவதினும் ஓர் தொழிலைப் பற்றுவதே அழகெனக் கண்ட ஞானத்தாய் சோம்பித்திரியே லெனக் கூறியுள்ளாள்.

**விவேகசிந்தாமணி**

கருதிய நூல் கல்லாதான் கசடனாகும் / கணக்கறிந்து பேசாதான் மூடனாகும்

ஒரு தொழிலு மில்லாதான் முகடியாகும் / வொன்றுக்கு முதவாதான் சோம்பனாகும்

பெரியோர்கண் முன்னின்று மரத்தைப் போல / பேசாம லிருப்பவனே பேயனாகும்

பரிவ சொல்லி தழுவுபவன் பசப்பனாகும் / பசிப்பவருக் கிட்டுண்ணான் பாவியாமே.

## 54. தக்கோனெனத்திரு

தக்கோன் - எடுக்குங்காரியங்களை முடிக்கத்தக்கவன், என - சொல்லும்படியாக, இரு - நீ வீற்றிருக்கக்கடவா யென்பதாம்.

ஓர் சபையில் எழுந்து பேசுவதற்குத் தக்கவன், ஓர் சுபகாரியாதிகளை முடிப்பதற்குக் தக்கவன், நீதிநெறிகளைப் போதிப்பதற்குத் தக்கவன், நடுநிலையிலும், நியாயவாயலிலும் பேசுவதற்குத் தக்கவன் எடுத்த காரியங்களை எவ்விதத்திலும் முடிக்கத்தக்கவனென்று பலருஞ் சொல்லும்படியாக வீற்றிருப்பானாயின் அவனைக்கொண்டே சகல சீர்திருத்தங்களை முடித்துக் கொள்வதுடன் மற்றவர்களும் தக்கவனென்றுமேறை நடந்து சுகம் பெறுவார்கள்.

**திரிக்குறள்**

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச் / செற்றார் செயக்கிடந்த தில்.

## 55. தானமது விரும்பு

தானம் - யீகையாம், அது - அச்செயலை, விரும்பு - நீ ஆசைக்கொள்ளு.

அன்புமிகுத்தோரிடத்து ஈகை மிகுத்து இருப்பது இயல்பாதலின், ஈகையிருக்கும் இதக்கத்தால் எல்லா சுகமுந் தோன்றுமென்பது துணிபு

இத்தகைய தானத்துள் உத்தமதானமென்றும், மத்திம தானமென்றும், அதம் தானமென்றும் மூவகைப்படும்.

இவற்றுள் உத்தம் தானமாவது மெய்ப்பொருளை விரும்பும் மேன்மக்களாகவும், முக்குற்றங்களை அகற்றும் மூதறிவாளராகவும் விளங்குவோரைக் கண்டு அவர்கள் எடுத்துள்ள முயற்சி உதவியாம் தானஞ்செய்துவருதலே உத்தமதான மென்னப்படும்.

**முன்கலைதிவாகரம்**

அறத்தினாற்றியவரும் பெரும்பொருளை புறத்துறைக்குற்ற மூன்றறுத்த நற்றவற்கு
கொள்கெனப் பணிந்து குறையிரந்தவர்வயி னுள்ள முவந்தீவ துத்தம் தாநம்.

திக்கற்று மிக்க மெலிந்த ஏழைகளுக்கும், குருடர்களுக்கும், ஊமெகளுக்கும், தொழில் செய்ய சக்தியற்ற அங்கவீனருக்கும், செவிடர் களுக்கும் ஈவது மத்திமதான மென்னப்படும்.

ஆதுலர்க்கந்தகரூம ருறுப்பிலிகள் / செவிடர்க்கீவது மத்திமதாநம்.

சகலருமறியக் கூச்சலிட்டளிப்பதும், கீர்த்தியாம் புகழ் வேண்டுமென் றளிப்பதும், நம்மெய் லோபி என்று சொல்லுவார்களென பயந்தளிப்பதும், ஒருபலனைக் கருதியளிப்பதும், பிரபுவென்று பலர் சொல்லும்படி அளிப்பதும்.

பார்ப்போர் மெச்சும்படி அளிப்பதும், ஒருவர் கேட்டுக்கொண்டதின் பேரிலளிப்பதும் அதமதானமென்று கூறப்படும்.

ஆர்வம், புகழே, யச்சங், கைம்மாறு, காரணங், கண்ணோட்டம்,

கடப்பாடென்றி வை ஏழுங் கடைப்படு வதமதாநம்.

இத்தகைய மூவகை தானத்தில் உலக சீர்திருத்தத்திற்கும், மக்கள் சீர்திருத்தத்திற்கும் ஆதியாக விளங்கி புலன் தென்படநோக்கும் தென்புலத்தோராகும் சமணமுநிவர்களுக்கு ஈவதே உத்தமதானமாதலின் அதன் சாதனங்களா லுணர்ந்த ஔவையும் தானமது விரும்பு என்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## திரிக்குறள்

தென்புலத்தார் தெய்வம் விருந்தோக்கறா னென்றாங் /கைம்புலத்தா றோம் பறலை.

## இஸ்காந்தம்

துறந்தவர்கள் வேண்டியதோர் துப்புரவு நல்கி / யிறந்தவர்கள் காமுறு மிருகங்கடனியற்றி

அறம்பலவுமாற்றி விருந்தோம்பு முறையல்லாற் பிறந்தநெறியா லுளதோர் பேருதவி யாதோ.

## 56. திருமாலுக் கடிமைசெய்

திரு - மனுமக்களுட் சிறந்த, மால் - புத்தபிரானின் அடிமை - பாத தூளி யென்றிரஞ்சி, செய் - துதி செய்யுமென்பதாம் . தன் மச்சக்கரப் பிரவர்த்தன் என உலகெங்கும் வட்டமிட்டு அறவாழியை உருட்டியது

கொண்டு மால் என்னும் பெயர்பெற்ற புத்தபிரானின் பாததூளியென்றெண்ணி சங்கத்தோர் களையே சங்கறனெனப் பாவித்து சங்க தருமத்தையே சிந்தித்து பற்றறுக்க

வேண்டு மென்னுங் கருத்தால் பற்றற்றானுக்கு அடிமையாக வேண்டும் என்பது கருத்து.

**சீவகசிந்தாமணி**

மலரேந்து சேவடிய மாலென்ப மாலா லலரேந்தி யஞ்சலி செய் தஞ்சப் படுவா

னலரேந்தி யஞ்சலி செய் தஞ்சப் படுமே /லிலரே மல ரெனினு மேத்தாவா றென்னே.

**சூளாமணி**

கருமாலை வெவ்வினைகள் காரளர நூறிக்
கடையிலா வொண் ஞானக் கதிர்விரித்தாயென்று
மருமாலை நன்னெறியை முன்பயந்தா யென்று
மடியே முன்னடி பரவு மாற்றிவதல்லாற்
றிருமா லேதேனாரு மறவிந்த மேந்துந்
திருவணங்கு சேவடியாய் தேவாதி தேவ
பெருமானே நின்பெருமெய் நன்குணரமாட்டா
பிணங்குவார் தம்மெய் வினை பிணக் கொழிக்கலாமே.

இத்தகையாய் புத்தபிரானைத் திருமால் என்று சிந்தித்திருப்பது மன்றி பின்கலை நூலாகும் நிகண்டில் காப்புக்கு முன்னெடுக்குங்

கடவுள் தான் மாலே யாகுமென்று கூறியுள்ள விதியின்படி புத்தபிரானை கண நாயகரென்றும், விநாயக ரென்றும் சகல நூலாக்கியோன்களுந் தங்கடங்கள் நூற்களின் காப்பில் சிந்தித்திருக்கின்றார்கள். இதினந்தரார்த்தம் உணராமலே சிந்தித்தும் வருகின்றார்கள்.

தேவரென்போர் யாவருக்கும் வழிகாட்டியும், ஆதிதேவனுமாக ருந்தபடியால் நாயனார் திரிக்குறளுக்குச் சாற்றுக்கவி கொடுத்துள்ள புத்த சங்கத்தோராகும் கவிசேகர பெருந் தேவனார் "தேவிற் றிருமாலெனச்" சிறந்த தென்னுந் திருவாக்கினாலும் திருமாலென்னும் பெயர் புத்தருக் குரிய சகஸ்திர நாமங்களில் ஒன்றென்றறிந்துள்ள ஞானத்தாய் தனது ஞானகுருவாம் திருமாலுக் கடிமை செய்யென்று திருந்தக் கூறியுள்ளாள்.

## 57. தீவினையகற்று

தீய - கொடிய, வினை - செயலை, அகற்று - இதயத்திற் பதியவிடாது நீக்கு மென்பதாம்.

பொய்யைச் சொல்லி வஞ்சிப்பதும், அன்னியர் பொருளை அபகரிப்பதும், பிறர் மனையாளை இச்சிப்பதும், சீவப்பிராணிகளை வதைப்பதும், மதி கெடுக்கும் பானங்களைக் குடிப்பதும் ஆகிய தீவினைகளாம் பஞ்சமா பாதகங்களை அகற்ற வேண்டும் என்பது கருத்து

**திரிக்குறள்**

வினைக்கண் விளைகெட லோம்பல் வினைக்குறை / தீர்ந்தாரிற் றீந்தன் றுலகு.

**சீவகசிந்தாமணி**

அளைவதுகாம மடு நறவு நெய்யொழுகு மூனும் பின்னும்
விளைவது தீவினையே கண்ட ரிவை மூன் முன்விடுமினென்றாற்
றளையுவிழ் கோதையார் தாமஞ்சேர் வெம்முலைபோல் வீங்கிக்
கண்சேந்
துளையவுறுதி யுரைப் பாரையோபாவமுணராரே காண்.

இத்தகையத் தீவினைகள் ஒழிந்தவிடத்து ஞானச்சுடர் விளங்குவதை அநுபவங்கொண்டு அறவாழியான் போதித்துள்ளபடியால் அவரது போதனையைப் பின்பற்றிய புத்தசங்கத்தோரும் தங்கள் தியானங்களில் விளக்கியுள்ளார்கள்

**சூளாமணி**

விண்டாங்கு வெவ்வினை வெருவுதிர நூறி
விரிகின்ற மெய்ஞ்ஞானச் சுடர்விளக்கு மாட்டிக்
கண்டார்க ணின்னில் மெய்க்கண்டொழு கயானின்
கதிர்மயங்கு சோதியாற் கண்விளக்கப்பட்டுத்
தண்டா அமரை மலரின் மேனடைந்தாயென்றுந்
தமனீயப் பொன்னணையின் மேலமர்ந்தாயென்றும்
வண்டார சோகினிழல் வாயமர்ந்தாயென்றும்

வாழ்த்தினால் வாராயோ வானவர்தன் கோவே.

## 58. துன்பத்திற் கிடங்கொடேல்

துன்பத்திற்கு - உபத்திரவமுண்டாவதற்காய, இடம் - ஆதரவை, கொடேல் - நீ எக்காலுங் கொடாதே யென்பதாம்.

அதாவது, சூதாட்டத்திற்கு இடங்கொடுத்தலுந் துன்பம், கொலைபாதகனுக்கு இடங்கொடுத்தலுந் துன்பம், கள்ளருந்துங் களியாட்டலுக்கு இடங்கொடுத்தலுந் துன்பம், வியபசாரிகளுக்கு வீடு கொடுத்துவைத்தலுந் துன்பம், பொய்யைச்சொல்லித் திரிபவனென்றுணர்ந்தும் அவனுக்கிடங்கொடுத்தலுந் துன்பம்,

சூதாட்டம், கட்குடி, வியபசாரம், திருட்டு, பொய், கொலை முதலிய ஈனச்செயலை உடையார்க்கு இடங்கொடுத்தல் கேடுண்டென்பதை உலக வழக்கப் பழமொழியால் ஈனனுக்கு இடம் கொடுத்தால் இல்லிடம் பாழென்பதையுந் தெரிந்துக்கொள்ளலாம்.

ஈனச்செயலை உடையார்க்கு இல்லிடங்கொடுப்பின் அதிகாரிகளால் அவர்களுக்குந் துன்பம், இல்லங்கொடுப்பவனுக்குந் துன்பம் உண்டாவது நிட்சயமாதலின் துன்பத்தை உண்டு செய்யுஞ் செயலுக்கு யிடங்கொடேலென்று வற்புறுத்தியுள்ளாள்.

**காக்கை பாடியம்**

வானவர்க் கரசன் வாய்மெ யுணர்ந்து / யீனச்செயலுக் கிடந்தரா தகற்றி
மோனவரம்பி லுற்று நிலைத்து / ஞானத்தானம் நல்குவரன்றே

## 59. தூக்கிவினை செய்

தூக்கி - சீர்தூக்கி, வினை - ஒவ்வோர் தொழிலையும், செய் - நீ செய்யக்கடவாய் என்பதாம்.

நீ செய்யப்படும் ஒவ்வோர் தொழிலையும் சீர் தூக்கி நிதானித்துச் செய்யவேண்டு மென்பதாம்.

### குறுந்திரட்டு

ஆராய்ந்து செய்பவனே யறிவுள்ளோனாம் / அடக்க மறிந்தடைபவனே யருளுள்ளோனாம்
பூராயம் பேசுபவன் பொறியற்றோனாம் /பொய்கூறு நாவுடையோன் புழுவுற்றானாம்
பேராயக் கீர்த்தியது வேண்டுமென்போன் / புவனத்து பேடி யெனப் போற்றுவோனாம்
தீராத வினைகடக்குந் தெப்பங்கொண்டு திறைகடலைக் கடப்பவனே தீரனாமே.

## 60. தெய்வமிகழேல்

தெய்வம் - தேய்வகமாம் உள்ளொளி கண்டோரை, யிகழேல் - நீ தாழ்வு செய்யாதே என்பதாம்.

அதாவது, மக்களென்னும் ஆறாவது தோற்றத்திற்கு மேலாம், ஏழாவது தோற்றமென்னும் தெய்வமென்போனை, ஆறாவது தோற்றமான மங்குலத்தோன் இகழ்வானாயின், அக்கொடுமொழியால் உள்ளக் களிம்பாம் வஞ்சகமிகுத்து தாழ்ந்த பிறவிக்கேகி தவிப்பானென்பது கருத்து.

மநுமக்களுள் இராகத்துவேஷ மோகமென்னும் முக்குற்றங்களைக் கழற்றி பாசபந்தப் பற்றுக்களை அறுத்து நித்திய சீவனாம் நிருவாணம்பெற்று தேவனென்றும், தெய்வமென்றும் பெயர் பெற்றோனின் ஞானசாதன சிறப்பையும், அவனது பற்றற்ற முயற்சியையுங் கண்டு புகழ்ச்சி செய்வதைவிட்டு இகழ்ச்சி செய்வானாயின் அவனை மநுபிறவி என்னாது தாழ்ந்த மிருகபிறவி என்றே கூறத்தகும்.

மக்கள் தோற்றங் கடந்து தெய்வ தோற்றம் அடைதல்.

**சீவகசிந்தாமணி**

ஊன் சுவைத் துடம்புவீக்கி நரகத்திலுரை தனன்றோ
வூன்றினா துடம்புவாட்டி தேவார யுரைத நன்றோ
வூன்றியிவ் விரண்டினுள்ளு முறுதிநீயுரைத்தி டென்ன
வூன்றினா தொழிந்து புத்தே வாவதே யுறுதியென்றான்.

**விவேகசிந்தாமணி**

ஆசாரஞ் செய்வாராகி வறிவொடு புகழுமுண்டாம்
ஆசார நன்மெயானா வவனியிற் றேவராவர்
அசாரஞ்செய்யாராகி வறிவொடு புகழுமற்று
பேசார்போற் பேச்சுமாகி பிணியொடு நரகில் வீழ்வார்.

இவற்றுள் மெய்த்தேவர்களென்றும், பொய்த்தேவர்களென்றும் இருவகை பேதமுண்டு. அவர்களுள், மக்களென சீலமிகுத்து ஒழுக்கத்தினின்று விவேகமிகுத்தோர்களை சருவ மக்களுந் தேவர்களென்று கொண்டாடி வருவதியல்பாகும் இவர்களே மெய்த் தேவர்களாவர்.

பொய்வேதப் புலம்பலாலும், பொய்ப்புராணக் கட்டுக்கதைகளாலும், ஆகாயத்தினின்று பூமியில் வந்து தோன்றினாரென்னும் பொய்த்தேவக்கதை களையும் ஆகாயத்திலிருந்த தேவர் பெண் வயிற்றிற் பிறந்தாரென்னும், பொய்தேவக் கதைகளையும், அவனைக் கொல்ல அவதரித்தான், இவனைக் கொல்ல அவதரித்தானென்னும் பொய்தேவர்களையும், அந்த மதத்தைக் கண்டிக்க அவதரித்தான், இந்த மதத்தைக் கண்டிக்க அவதரித்தா னென்னும் பொய் தேவர்களையும், விசாரணைப் புருஷர் இழிவு கூறுவதில் ஓரிடுக்கணுமில்லை, புகழ்ச்சி செய்வதால் ஓர் பிரயோசனமுமில்லை.

மக்களினின்று தேவரெனத் தோன்றியவர்கள் பிறப்பிறப்பற்று மறுபடியுங் கருவில் வந்து தோன்றார்களென்பது சத்தியமாம்.

**சீவகசிந்தாமணி - தேவர்கள் லட்சணம்**

திருவிற் பொற்குலத்திற் றேர்ந்த தேவர்தன் தண்மெய் செப்பிற்
கருவற்று சென்று தோன்றார் கானிலந் தோய்தல் செல்லா
ருருவமே லெழு தலாகா வொளியுமிழ்ந் திலகுமேனி
பருதியி னியன்ற தொக்கும் பன்மலர் கண்ணிவாடா.

பொய்க்குருக்களின் கற்பனா வேதங்களிலும் புராணங்களிலும் வரைந்துள்ள பொய்த் தேவர்கள் கதைகளிலும், அவர்கள் நம்பிக்கைகளையும் ஒழித்து மெய்த் தேவர்களும், எக்காலுந் தோற்றக்கூடிய ஏழாவது தோற்ற முடையவர்களுமாகிய மகா ஞானிகளை இகழலாகாதென்னும் பெரு நோக்கங் கொண்டு தெய்வமிகழேலென்னுந் தெளிவுபடக் கூறியுள்ளாள்.

**சொரூபசாரம்**

எங்கும் பொதுவா யிருக்குமொரு சீவன்முத்தர் / தங்கு மிடந்தானே தலவாச - மங்கவர்கள்
பார்வையே தீர்த்தமவர் பாதார விந்தமலர்ச் சேவையே சாயுச்சியம்.

## 61. தேசத்தோடொத்துவாழ்

தேசத்தோடு - தேசத்துள்ளோர் சீலத்துடனும் ஒழுக்கத்துடனும், ஒத்து - மனமுவந்து, வாழ் - நீவாழக் கடவாய் என்பதாம்.

அதாவது, தேகத்துடன், ஒத்துவாழ்தலும் தேசத்துடன் ஒத்து வாழ்தலும், ஒரு பொருளைத் தரும். தேகத்துடன் ஒத்துவாழ்தலாவது மிகு புசிப்பால் மந்தவேதனையுண்டு, மிகு போகத்தால் தாது கெட்டு நஞ்சடைதலுண்டு, மிகு அவாவால் பெருந்துக்கமுண்டு, இவற்றை நிதானித்து மிதபுசிப்பு, மித போகம், மித அவாவினின்று வாழ்தலே தேகத்தோ டொத்துவாழ்த லென்னப்படும்.

அவைப்போல், தேசத்தோருக்குள்ள பொய்யாவிரத சீலத்திலும், கொல்லாவிரத சீலத்திலும் களவாவிரத சீலத்திலும் காமமிகா விரத சீலத்திலும், மதுவால் மயங்காவிரத சீலத்திலும் ஒத்து வாழ்க வேண்டுமென்பது கருத்தாம்.

இத்தகைய பஞ்சசீலத்தோருடன் ஒத்து வாழாது பஞ்சபாதகச் செயலாம் சீலங்கெட்டு ஒத்து வாழ்வானாயின் சீலமிகுத்தோர் யாவரும் சீசீ என்றிகழ்ந்து சேரவிடாது அகற்றுவார்கள்.

அத்தகைய வாழ்க்கைத் துணையற்று வாழ்வதினும் மடிவது மேலாம். இத்தகைய சீலத்தோருடன் ஒத்துவாழ்க வேண்டுமென்பது அம்மன் கருத்தேயன்றி நீதிநெறி கெட்டு அவன் பெரிய சாதி, இவன் சிறிய சாதியென்போருடனும் அவன் சாமி பெரியசாமி, இவன் சாமி

சின்ன சாமியென்போருடனும் ஒத்துவாழ்க வேண்டுமென்னுங் கருத்தன்று. நீதியும் நெறிய மற்ற தேசம் ஒருகாலும் சீரும், சிறப்புமடையப் போகிறதில்லை . ஆதலின் சீலமாம் நீதிநெறியமைந்த தேசத்தோருடன் ஒத்து வாழ்க வேண்டுமென்பது துணிபு.

**பழமொழி விளக்கம்**

தேரோடு மணிவீதி தண்டலையார்த்திருவமைந்த தேசமெல்லாம்
பேரோடும் புகழ் படைத்த வீராதிவீரனெனும் பெரியோனேனும்
நேரோடும் உலகத்தோ டொன்றுபட்டு நடப்பதுவே நீதியாகும்
ஊரோடு வுடனோடி நாடோட நடுவோடலுறுதிதானே.

நீதி நெறியாம் நேர்வழியில் ஊரோட வுடனோடலும், நாடோடநடுவோடலும் சுகநிலையுறுதி தருவதாகும்.

## 62. தையல் சொற்கேளேல்

தையல் - கொடூரமாம், சொல் - வார்த்தைகளை, கேளேல் - செவி கொடாதே என்பதாம்.

எதிரியால் உன்னைத் தைக்கக்கூறு மொழிக்கு, செவி கொடுப்பாயாயின் கோபமீண்டு அவனுடன் போர் செய்ய நேரும். அதனால் துக்கம் பெருகும். ஆதலின் எதிரி தையல் சொற்களுக்கு செவி கொடாதிருக்க வேண்டுமென்பது கருத்து.

அதாவது, குத்திக்குற்றியிழுக்குங் கொடூரச் செயலுக்குத் தைத்தலென்றும், பனியின் கொடூரத்தால் இலையுதிரும் மாதத்திற்குத் தைமாதமென்றும்; கொடூர நெய் கலந்த வஸ்துக்களுக்குத் தைல மென்றும், புண்படயிதயத்தில் தைக்கக்கூறும் கொடூர வார்த்தைக்குத் தையல் மொழியென்றுங் கூறப்படும்.

அன்னியனாற் புண்படக்கூறுந் தையல் மொழியாங் கொடூர வார்த்தையை செவியிற் கேட்டவுடன் கோபமீறும். அக்கோபத்தால் ஒருவருக்கொருவர் கைகலக்குந் தையலுண்டாம் அத்தையலால் துன்பம் பெருகி மாளா துக்கத்திற்கு ஆளாக்கிவிடும். ஆதலின் எதிரிகளாற் கூறுங் கொடூர சொற்களை கேளாதிருப்பதே சுகமென்றறிந்த ஞானத்தாய் தையல் சொற்கேளேலென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## 63. தொன் மெய்மறவேல்

தொன் - பூர்வ, மெய் - தேகிகளாம் பழமெயாங் குடும்பத்தோரை, மறவேல் - என்றும் மறவாதே என்பதாம்.

வாழையடி வாழை போல் தொன்றுதொட்டு தோன்றி வரும் பழமெய் தங்கியக் குடும்பத்தோரை மறவாதிருக்க வேண்டுமென்பது கருத்து.

தொன்றுதொட்டு வழங்கிவரும் பூர்வகுடும்பத்தோரை மறவாமலிருப்பதினா லுண்டாகும் விருத்தியும், மறப்பதினாலுண்டாகுங் கேடும் யாதென்பீரேல்:-

தொன்மெய் மறவாச் செயலால் குடும்பம் விருத்திடைந்து அவர்களுக்குள் விவேக விருத்தியடைந்தோர் சார்பால் முன் குடும்பத்தோர் சுகவிருத்தியும், ஞானமும் பெறுவதுடன் பின் குடும்பத்தோரும் விருத்தியினின்று சுகவாழ்க்கைப் பெறுவார்கள்.

தொன்மெயாம் பூர்வ சுற்றத்தோரை மறந்து பற்றற்றவரைப்போல் நடித்தல் முன் குடும்பத்தோர் தோற்றமும், சேர்க்கையும் மறைந்து போவதுடன் பின் சந்ததிகளும் விருத்தியின்றி பாழடைந்துபோம்.

**திரிக்குறள்**

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்கமெற்றெற்றன் / றேதம் பலவுந் தரும்.

## 64. தோற்பனை தொடரேல்

தோற்பனை - உன்னால் முறியடிக்கப்பட்டோனை, தொடரேல் - பின்பற்றிச்செல்லாதே யென்பதாம்.

வில்லால் தோற்றவனுக்கும், வித்தையால் தோற்றவனுக்கும் உள்ள விரோதம் எதிரியை யெவ்வகையேனும் ஜெயிக்குமளவும் உள்ளனவாதலின் அத்தகைய தோற்பனைத் தொடர்ந்து

செல்லுவதினால் எத்தகையுந் துன்பமுண்டாமென் றுணர்ந்த ஞானத்தாய் தோற்பனைத்தொடரேலென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

இவற்றுள் (தோற்பன தொடரே) லென்னும் பாடபேதமுமுண்டு. தோற்றவியாஜியத்தை தொடர்ந்தும் ஜெயித்ததனந்தமுண்டு. தோற்றயுத்தத்தை விடாமுயற்சியால் தொடுத்து ஜெயித்த யுத்தங்களும் அனந்தமுண்டு.

ஆதலின் தோற்பனைதொடரேலென்னும் வாசகமேயன்றி தோற்பன தொடரேலென்னும் வாசகமன்று.

ஓர் வியாஜியத்திலேனும், யுத்தத்திலேனும் வாக்குவாதத்திலேனும், சுபஜெயமடைந்தோனின் உள்ள வஞ்சினத்தையும் பொறாமெயையுமுணராது மித்துரு வென்றெண்ணி தோற்றவனைத் தொடர்வதாயின் கேடுண்டென்பது கருத்தாம்.

**65. நன்மெய்க் கடைபிடி**

நன் - நல்ல, மெய் - தேகி, நற்றேகி, நல்லவன் என உலகோர் சொல்லுஞ் செயலை, கடைபிடி - முடிவாய பாக்கியமென்று பற்று மென்பதாம்.

உலகத்தோரால் நல் அவன், நன்மார்க்கன், நற்குலத்தோன், நற்புத்திரன், என்று செல்லுவதற் கேதுவாம் நன்மெய்யைத்

தோற்றிவைப்பான் வேண்டி நன்மெய்க்கடைபிடியென்று இரண்டாவது பேதவாக்கியத்தைக் கூறியுள்ளாள். அதாவது, பொய்சொல்லாமெய், பிறர்மனை நயவாமெய், களவுசெய்யாமெய், கள்ளருந்தாமெய், கொலை செய்யாமெய், ஆகிய சுத்ததேகிகளாக வாழ்தலே நன்மெய்க் கடைபிடித்தலென்று கூறத்தகும்.

நல்வாய்மெய், நல்லூக்கம். நற்காட்சியுடைய நன்மெயாம் சுத்ததேகியாக வாழ்தலே நிருவாணத்தின் சுருக்கபாதையுமாகும்.

## 66. நாடொப்பன செய்

நாட்டோர் - நஞ்சை புஞ்சை பூமியின் செயலுக்குரியோர், ஒப்ப-அவர்கள் சம்மதிக்கும்படியான செயலை, செய்-நீ செய்யக்கடவாய் என்பதாம்.

அதாவது நாடென்றும், நகரமென்றும் பிரித்துள்ள இருவகுப்பாருக்குள், நகரவாசிகள் யாவரும் அரசனது செங்கோலுக்குள் அடங்கிவாழ்தல் போல் நாட்டுவாசிகள் யாவரும் வேளாளத் தொழிலாம் ஏறடிக்குங்கோலுக்கு ஒப்பி வாழ்கவேண்டுமென்பது கருத்தாம்.

அஃது யாதென்பீரேல், பூமியை உழுதுண்போனாம் வேளாளனுக்கு ஏறும், மாடும் இல்லாவிடில் மற்றவனிடம் ஒப்பி உதவி புரிதலும், நீர் வாய்க்காலின் ஒழுங்குகளை ஒருவன் பூமிக்குப் பாய்ந்தபின்

மற்றவன் பூமிக்கு ஒப்பிப் பாயவிடுதலும் ஆகிய சருவ மேழிச்செயலையுங் கோழைப்படாது செய்தற்கு நாடொப்பச் செய்தலே நலமாகும்.

நாடொப்பாது ஒருவன் ஏறிக்கால் நீர் பாய்ச்சுமுன் மற்றொருவன் பாய்ச்சுதலும், ஒருவன் மேழிமுடியுமுன் மற்றொருவன் ஏறைப் பறித்தலுமாகிய ஒப்பாச்செயலைச் செய்தல் நாட்டுக்குக் கேட்டை விளைவிக்குஞ் செயலாதலின் உழவோராம், நாட்டோர் நாடொப்பனச் செயல் வேண்டுமென அம்மன் வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## 67. நிலையிற் பிரியேல்

நிலையில் - கியான விழிப்பினின்று, பிரியேல் - நீ நழுவாதே என்பதாம். அதாவது தோற்றும் பொருட்கள் யாவும் கெடுவது இயல்பாதலின் அத்தோற்ற நிலையிலும் அதன் அவா நிலையிலும் நில்லாது உண்மெய் உணருந் சுழிமுனை நிலையைப் பிரியேலென்பது கருத்தாம். குருவருளாற் காட்டிடுநிலையும் அந்நிலையேயாம்.

### அகஸ்தியர்

விழித்துமிக பார்த்திடவே பொறிதான் வீசும் முச்சந்தி வீதியிலே தீபந்தோன்றும்

சுழித்தியிலேபோகாது வொருமனதாய் நின்றால் சுத்தமென்ற நாதவொலிக் காதிற்கேழ்க்கும்

இழுத்ததென்று நீகூடத்தொடர்ந்தாயானால் எண்ணெண்ணா பிறப்பிறப்பு எய்தும் பாரும்
அழுத்தி மன கேசரத்தில் நின்று மைந்தா அப்பனே வலாடத்தில் தூங்கு வாயே.

**ஞானக்குறள்**

ஈரொளி யீதென றிறைவ னுரைத்தனன் /நீரொளி மீது நிலை. மயிர்முனையிற் பாதி மனத்தறி வுண்டேல் / அயிர்ப்புண்டங் காதி நிலை.

அழியும் நிலையைப்பற்றி நிற்பது அழுகைக்கும் பற்கடிப்பிற்கும் ஆதாரமாதலின், அத்தகைய துக்கத்தை யகற்றுவான் வேண்டி அழியா நிலையாம் உள்விழிநோக்க நிலையிற் பிரியே லென்று கூறியுள்ளாள்.

## 68. நீர்விளை யாடேல்

நீர் விளையாட்டு - பங்குனி பருவ நீர் விளையாட்டை, ஆடேல் - நீ விளையாடாதே யென்பதாம்.

அதாவது பூர்வ காலத்தில் சித்தார்த்தியார் காமனையுங் காலனையும் வென்ற பங்குனி மாத பருவத்தில் பௌத்தவரசர்களும், குடிகளும் ஒன்றுகூடி பெண்களும் புருடரும் நீர்விளையாடுவதும் காமன் பண்டிகைக் கொண்டாடுவதும் வழக்கமாகும்.

அத்தகைய விளையாட்டினால் மதிமயங்கி பெண்களின் கற்பு நிலை தவறுதலும், புருஷர்கள் பஞ்சவிரதங் கெடுதலுமாகிய நீர் விளையாட்டை சத்திய சங்கத்தோர் தடுத்துள்ளது மன்றி அம்மனும் அவ்விளையாட்டைக் கண்டித்திருக்கின்றாள்.

அது கண்டே சருவதேச பௌத்தர்களும் நீர்விளையாட்டை நீக்கிவிட்ட போதினும் மார்வாடிகளும் குஜிராத்தியர் மட்டிலும் பெண்களை நீக்கி புருஷர்கள் அந்நீர் விளையாட்டை நாளது வரையில் விளையாடி வருகின்றார்கள். பூர்வம் புருஷர்களும் பெண்களும் அந்நீர் விளையாடுவதனால் உண்டாகுங் கேடுகளை யுணர்ந்த ஞானத்தாய் நீர்விளையாடேலென்று காமன் விழாவையே கண்டித்திருக்கின்றாள்.

**சீவகசிந்தாமணி**

காசறு துறுவின் மக்க கடவுளர் சிந்தை போல் / மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யயனமுன்னி

யாசற நடக்குநாளு மைங்கணைக் கிழவன்லைகி பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனி பருவஞ் செய்தான்.

முழவங்கண் டுயிலாத முதுநகர் விழவுநீர் விளையாட்டு விருப்பினாற்

றொழுவிற் றோன்றிய தோமரு கேவலக் / கிழவன் முதெயில் போற்கிளர்வுற்றதே .

இன்று நீர் விளையாட்டினு ளேந்திழை தொன்று சுன்னத்திற் றோன்றிய வேறுபா
டின்றென் னாவிக்கோர் கூற்றமென்மெயா நின்று நீலக்கணித்திலஞ் சிந்தினாள்.

சீராவச் சிலம்பேந்து மென் சீரடி / யாராவக் கழலாட வரோடும் பேராவக் களம் போன்று பொன்றார் புன /னீராவும் விளைத்தார் நிகரில்லார்.

கார்விளையாடிய மின்னனை யார்கதிர் / வார்விளையாடிய மென்முலை மைந்தர்
தார்விளையாட்டொடு தங்குபு பொங்கிய / நீரவிளையாட்டணி நின்றதை யன்றே

## 69. நுண்மெய் நமுவேல்

நுண் - நுட்பத்திலறியும் விவேகமிகுத்த, மெய் - தேகியெனத் தோன்றி, நமுவேல் - அதினின்று கேடடையாதே என்பதாம்.

நுட்பத்தில் அறிந்து கொள்ளக்கூடிய விவேகமும் நுண்ணிதில் ஆய்ந்து உணரக்கூடிய விசாரணை மிகுதியிலிருந்து நமுவி விவேகமற்றோன், விசாரணை யற்றோன் என்பதாயின் முன்தேக தோற்ற சிறப்புக் கெடும். ஆதலின் நுண்ணிய அறிவை மேலும்

மேலும் விருத்தி செய்ய வேண்டுமேயன்றி அவற்றினின்று நழுவேல் என்பது கருத்தாம்.

இவற்றுள் தற்காலம் அச்சிட்டுள்ளப் புத்தகங்களில் நுண்மை நுகரேல் எனும் வாசக பாடபேதமும் ம-அ.அ-ஸ்ரீ மார்க்கலிங்க பண்டாரமவர்கள் ஏட்டுப்பிரிதியிலும் ம -அ-அ-ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை மாணாக்கர் கோவிந்தப்பிள்ளையவர்கள் ஏட்டுப்பிரிதியிலும் (நுண்மெய் நழுவேல்) எனும் வாசகபாடபேதமும் உள்ளது கண்டு உசாவுங்கால் நுண்மை நுகரேல் எனும் வாசகஞ் சிதைந்துள்ளதன்றி சகல தேச மக்களுக்கும் பொருந்தா பொருளுள்ளதால் நுண்மெய் நழுவேல் எனும் சகல மக்களுக்கும் பொருந்தும் வாசகத்தை வெளியிட்டுள்ளோம்.

அதாவது உலகெங்குமுள்ள மக்கள் சிறுதிண்டியே பெரும்பாலும் உண்பது சுவாபமாகும். நமது தென்னிந்தியவாசிகளோ துட்டை யிருகப்பிடித்துக்கொண்டு பெருந்திண்டியும் சரிவரப் புசியாமல் சோமவார விரதம், மங்களவார விரதம், சுக்கிரவாரவிரதம், சனிவாரவிரதமென ஒடுக்குவது இவர்கள் சுவாபமாகும்.

ஆதலின் சகலமக்களுக்கும் பொதுவாய் ஓதியுள்ள சத்தியதன்மத்தை பணஞ் சம்பாதிக்க வித்தையற்றவர்களும், புசிக்கப் பணச்சிலவுசெய்ய மனம்வராதவர்களுமாகி சிலரது கருத்துக்கு

இசைந்து பலருக்குள்ளப் பெரும்பலனைக்கெடுப்பது பாழ்வினைமுதலெனக் கண்டு நுண்மெய் நழுவேல் என்னும் சகல மக்கள் சுகத்தையே இவண் நோக்கிக் கூறியுள்ளோம்.

## 70. நூற்கலை கல்

நூற்கலை - அறிவை வளர்க்குங் கலை நூற்களை, கல் - நீ வாசிக்கக் கடவாய் என்பதாம்.

அதாவது காம, வெகுளி, மயக்கங்களைப் பெருக்கக்கூடிய பலவகை நூற்க ளிருக்கின்றபடியால் அவற்றை கண்ணோக்காமலும், கற்காமலும் அறிவை விருத்தி செய்யக்கூடியக் கலை நூற்களையே கற்கவேண்டுமென்பது கருத்தாம்.

### காக்கை பாடியம்

பலநூல் கற்றுப் பாழடைவதினுங் கலை நூற் கற்று காட்சி வடிவாஞ்
சிலைநுதற் காம சேட்டை யகற்றி யுலகமவர்மாட் டென்னலு
முவப்பே.

கலை நூற்கள் என்பவற்றுள் அறுபத்தி நான்குவகைகளுண்டு. அதாவது அட்சர லட்சணங்களையும், மொழிலட்சணங்களையும் விளக்கும் முன்கலை நூலாகும் திவாகரம், இலிகிதத்திற்கு ஆதரவாகும் வாசகங்களும், அதனதன் பொருட்களையும் விளக்கும் பின்கலை நூலாகும் நிகண்டு, கணிதம், ஆகமம், வியாகரணம், நீதி

சாஸ்திரம், சோதிடம், தன்மசாஸ்திரம், விருத்தி சாஸ்திரம் மதியூக சாஸ்திரம், ஆருடசாஸ்திரம் சிற்பா சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், சாமுத்திரிகள் சாஸ்திரம், ரூபசாஸ்திரம், இதிகாசம், காவியம், மதுரபாடனம், அலங்காரம், நாடகம், நிருத்தம், சப்த பிரமம், சிரோரத்னம், வீணை, மிருதங்கம், தாளம், தனுர்வித்தை, சுவர்ண பரீட்சை, ரதபரீட்சை, கஜபரிட்சை, அஸ்வ பரீட்சை, ரத்தினபரிட்சை, பூபரிட்சை, யுத்தலட்சணம் , மல்லயுத்தம், ஆக்ருஷணம், உச்சாடனம், வித்துவேஷணம், மானத சாஸ்திரம், மோகன விளக்கம், வசீகரணம், ரசவாதம், காந்தர்வவாதம், பிபீலிகாவாதம், கௌதுவவாதம், தாதுவாதம், காரூடம், நஷ்டப் பிரசனம், முஷ்டிப் பிரசனம், ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பிரகாயப் பிரவேசம், அநுர்ஷியம், இந்திரஜாலம், மகேந்திரஜாலம், அக்கினிஸ்தம்பம், ஜலஸ்தம்பம், வாயுஸ்தம்பம், திருட்டிஸ்தம்பம், வாக்குஸ்தம்பம், சுக்கிலஸ்தம்பம், ஜநநஸ்தம்பம், கடகஸ்தம்பம், அவஸ்தை ஸ்தம்பம் என்பவைகளாம்.

தற்காலம் அச்சிட்டுள்ள புத்தகங்களில் நூற்பலகல் என்றிருந்தபோதினும் புராதன ஏட்டுப்பிரிதிகளில் நூற்கலை கல்லென்று வரைந்திருக்கின்றார்கள். அதாவது கண்டு படிப்பதே படிப்பு மற்றபடிப்பெல்லாம் தெண்டப்படிப் பென்றறி" எனக்கூறியுள்ளக் கலை நூலார் கருத்தை ஒட்டியதேயாகும்.

## 71. நெற்பயிர் விளை

நெற்பயிர் - நெல்லென்னுந் தானியத்தை, விளை - நீ உழுது பயிரிடு என்பதாம். அதாவது சகலசீவருக்கும் உணவாகவிளங்கும் தானியம் நெல்லாதலின் அவற்றை வேணமுயற்சி செய்து விளைவிக்கவேண்டுமென்பது கருத்தாம்.

பௌத்தன்ம மக்கள் யாவரும் தங்கள் சுயப்பிரயோசனத்தை மிக்கக் கருதாது பலர் பிரயோசனத்தையே மிகக் கருதுவதாதலின் சகலசீவர்களுக்கும் பிரயோசனமாகும் நெற்பயிரை விளைக்கும்படி வற்புறுத்திக்கூறியுள்ளாள்.

அத்தகைய நெற்பயிரை விளைக்குமாறு வற்புறுத்திக் கூறியக் காரணம் யாதென்பீரேல், தற்காலம் இத்தேசத்தில் 10-படி, 12-படி அரிசி விற்பனை செய்தவிடத்தில் 4-படியரிசி விற்குங்கால் மழைபெய்தும் சகலருக்கும் உபயோகமாகும் நெற்பயிரை விளைவிக்காது தங்கள் சுயப்பிரயோசனத் திற்காகும் மணிலாக் கொட்டையென்னும் நிலக்கடலையை விளைவித்துக் கொண்டார்கள்.

அதினால் நல்லமழைப் பெய்தும் நெற்பயிர் விளைவிக்காது குடிகள் இன்னும் பஞ்சத்துக்குள்ளாயதை நாம் கண்டுள்ளது அனுபவமாதலின் முக்காலமுமுணர்ந்த ஞானத்தாய் மற்பயிர் யாதையுங் கருதாது நெற்பயிர்விளை என்று கூறியுள்ளாள்.

## 72. நேர்பட வொழுகு

நேர் - சகலருக்கும் நல்லவன் நேரானவனென்று, பட - காணும்படி, ஒழுகு - நீ வாழக்கடவா யென்பதாம்.

நஞ்சுள்ளப் பாம்புகள் யாவும் சகலர் கண்களுக்கும் புலப்படாமல் உலாவும், நஞ்சில்லா நீர்ப்பாம்புகளோ சகலர் கண்களுக்கும் நேர்பட உலாவும், அதுபோல் நன்மெய் கடைபிடித்து சகலர் கண்களுக்கும் நேர்பட ஒழுகவேண்டு மென்பது கருத்தாம்.

## 73. நைவன நணு கேல்

நைவன - வாக்கால் நையவுரைக்குஞ் கூட்டத்தாரும், தேகத்தால் நையப் புடைக்குங் கூட்டத்தாருமாகிய தீயரை, நணுகேல் - நெருங்கிய வாழ்க்கையை புரியாதே யென்பதாம்.

சுகதேகமும், சுகுணமும், தீயர் சேர்க்கையால் நைவது அனுபவமாதலின் அத்தகையச்செயலோரால் நைவன நணுகேலென்று கூறியுள்ளாள். தன்னிற்றானே கேட்டை வருவித்துக் கொள்ளுஞ் செயலுக்கு நையலென்றும் நைவன மென்றுங் கூறப்படும்.

## 74. நொய்ய வுரையேல்

நொய்ய - அன்புமிகுத்தோர் மனமுடைய, உரையேல் - ஓர் வார்த்தையையும் பேசாதே என்பதாம்.

அதாவது குடும்பத்தில் அன்புதிரண்டு வாழ்பவர்களையும், சிநேகிதத்தில் அன்பு திரண்டு நேசிப்பவர்களையும் அடுத்து அவர்களுக்குள் திரண்டுள்ள அன்பை நொய்ய உடைப்பதாயின் குடும்பமென்னுங் கூடிவாழும் வாழ்க்கையும் மற்று சிநயிதமென்னும் அன்புமற்று சேர்க்கை பிரிந்து போம். அத்தகைய பிரிவினால் எழ்க்கைக்கு அனந்தங் கேடுண்டாவதை உணர்ந்த ஞானத்தாய் வார்த்தைப் பேசுவதில் நொய்யவுரையேலென்று கூறியுள்ளாள்.

## 75. நோய்க் கிடங் கொடேல்

நோய் - தேகத்தில் வியாதி தோன்றற்கு, இடம் - ஓராதாரத்தைக் கொடேல் - என்றுஞ்செய்துக்கொள்ளாதே என்பதாம்.

மிதமிகுத்தப் புசிப்புக்கு இடங்கொடுத்த விடத்திலும், பலதேக போகத்திற் கிடங்கொடுத்தவிடத்திலும் வியாதி தோன்றி உடலை வதைப்பது உள்ள சுவாபமாதலின் இன்னின்னக் கொறூரச் செயல்களால் இன்னின்னான் இன்னினிய நோய் கண்டு உபாதைப்படுகின்றானென் றுணர்ந்தும், அதனை மறந்தும் வாதைப்படுவது மக்கள் இயல்பாதலின் விழிப்பான் வேண்டி நோய்க்கிடங்கொடேலென்று கூறியுள்ளாள்.

## 76. பழிப்பன பகரேல்

பழிப்பன - மற்றவர்களைப் பழித்தலும் இழிவுகூறுதலுமாகிய மொழிகளை, பகரேல் - மறந்தும் பேசாதே யென்பதாம்.

தனது குற்றங்களையுந் தனது குடும்பத்தோரிழிவுகளையும், தான்செய்யும் இழிய தொழிலாம் செயலையுங் கருதாது ஏனையோர் குற்றங்களையும், ஏனையோர் குடும்ப இழிவையும், ஏனையோர் தொழிலிழிவையும் எடுத்துக் கூறுவதாயின் ஏனையோர் இவனிழிவையும் பழியையுமெடுத்துக் கூறியேளனந் செய்வதுடன் எல்லார்க்கும் விரோதியாய் சகலராலுந் சீசீயென்று இகழப் படுவான் ஆதலின் பகருமொழிகளில் பழிப்பன பகரேல் என்று கூறியுள்ளாள்.

## 77. பாம்பொடு பழகேல்

பாம்பை - விஷப்பற் பையையுடைய, ஓடு - ஜெந்தினொடு, பழகேல் - எப்போதும் நேசிக்காதே என்பதாம்.

பற்களில் விஷப்பையைச் சேர்த்துவைத்துள்ள ஜெந்துக்களுடன் பழகுவதாயின் எக்காலத்திலேனும் ஓர்கால் அப்பையிலுள்ள விஷத்தை வெளியிடுதற்கு வழிதேடும். வழிதேடுங்காரணமோ அதன் மீறிய கோபமேயாம். அக்கோபத்தால் கடித்துவிடுத்த விஷமானது பழகியவன் தேகமுழுவதும் பரவி நஞ்சமைந்துவிடுவதுடன் நசிந்தும் போகின்றான். ஆதலின் நஞ்சுள்ள ஜெந்துக்களுடன் பழகலாகாதென்பது கருத்து.

## 78. பிழை படச் சொல்லேல்

பிழை - குற்றம், பட - உண்டாகச் சொல்லேல் - பகராதே யென்பதாம். அதாவது துஷ்டர்கள் தங்களுக்குள்ள வன்னெஞ்சங், குடிகெடுப்பு, பொறாமெய், நீச்சச்செயல் முதலிய நிறைந்து கொண்டு

குற்றமற்றப் பெரியோர்களைக் கண்டவுடன் வெகுண்டு தங்களது நீச்சகுணச்செயலால் அவர்களைப் பிழைப்படக்கூறுவது சுவாபமாகும்.

எவ்வகையிலென்பீரேல் மிலேச்சகுண மிகுத்தோர்களையும், நீச்சசெய லமைந்தோர்களையும் பெரியோர் நெருங்காமலும் தங்களிடம் நெருங்க விடாமலும் இருப்பது வழக்கமாகும்.
அத்தகைய விவேகமிகுத்தப் பெரியோர்செயலைக் காணும் அவிவேகமிகுத்த நீச்சர்கள் தங்கள் துஷ்டகுண மாறாது விவேகிகளை பழிகூறுதலும், பலவகையாய்ப் பழித்தலும் உடையவர்களாய் நிற்பர்.

அவ்வகைப் பெரியோர்களைப் பழித்தால் அவர்களுக்குண்டாகும் மனத்தாங்கலின் கொதிப்பே பழித்தவனையும், பழித்தோன் குடும்பத்தோரையும் பாழாக்கும் பழவினைத் தொடராதலின் குற்றமற்றப் பெரியோர்களைப் பழிக்கலாகாதென்பது கருத்து.

இதனந்தரார்த்தங் கண்ட ஞானத்தாய் பெரியோர்களைப் பிழைபடச் சொல்லேலென்று கூறியுள்ளாள்.

## 79. பீடு பெற நில்

பீடு - வல்லமெய், பெற - உண்டாகத்தக்க நிலையில், நில் - நிற்கக்கடவா யென்பதாம்.

தேகமானது தக்க வலுவுள்ளவரையில் யாதொரு தொழிலுக்கும், முயற்சிக்கும் அஞ்சாது எடுத்த காரியங்களை முடிப்பதற்கேது ஆவதன்றி பற்பல பிணிகளுந் தோன்றி உபத்திரவஞ் செய்யாவாம்.

பீடு குறைந்தக்கால் எடுக்கும் முயற்சிகளும் சோர்வடைவதன்றி தேகத்திற் பற்பலவியாதிகளும் தோன்றி உபத்திரவத்தை உண்டு செய்யும் ஆதலின் ஒவ்வோர் மக்களுந் தங்களது தனங்குறையினும், தானியங் குறையினும், தேகபிலங் குறையாது வாழ்தல் சுகநிலையாகும்.

சிற்றின்பப்பெருக்கத்தினால் தேகசுகத்தைக் குறைத்துக்கொள்ளுவதும், பணம் சேர்க்கும் விஷயத்தால் புசிப்பைக் குறைத்து தேக சக்தியைக் குறைத்துக் கொள்ளுவதும், அனுபவமறியா பொய் வேதாந்த வேஷத்தால் தேகசக்தியைக் குறைத்துக் கொள்ளுவதும், உள்ள வழக்கமாதலின் திரிகாலச் செயலு முணர்ந்த ஞானத்தாய் பொய் விரதங்களாலும் பொய் வேதாந்த பாலும் பொய் வேதாந்தத்தாலும் பொய் பொருளாசையாலும் புசிப்பை அகற்றி தேகத்தின் பீடுரையாது ஒடுக்கிப் பாழடைவார்களென்றுணர்ந்து பீடுபெற நில்லென்று கூறியுள்ளாள்.

## 80. புகழ்ந்தாரைப் போற்றி வாழ்

புகழ்ந்தாரை - மற்றவர்களால் புகழத்தக்க பெரியோர்களை, போற்றி நீயுந்துதி செய்து கொண்டாடி, வாழ் - வாழக்கடவா

யென்பதாம்.

அதாவது வித்தையில் மிகுத்தப் பெரியோரென்றும், புத்தியில் மிகுத்த பெரியோரென்றும், ஈகையில் மிகுத்த பெரியோரென்றும், சன்மார்க்கத்தில் மிகுத்த பெரியோரென்றும் புகழ்ந்து அவர்களை போற்றி வாழ்வது ஒழுக்க மிகுத்த உலகத்தோர் சுவாபமாகும் அவற்றைக் கொண்டொழுகும் நீயும் அவ்விவேக மிகுத்த புருடர்களைப் போற்றி வாழக்கடவாயென்பதாம். அத்தகைய விவேக மிகுத்த மேன்மக்களாம் பெரியோர்களைப் போற்றி வாழ்தல், அவர்களது வித்தியா விருத்தியின் செயலும், புத்தி விருத்தியின் செயலும், ஈகை விருத்தியின் செயலும், சன்மார்க்கவிருத்தியின் செயலுந் தங்களுக்கு விளங்கும் மற்ற பின் சந்ததியோர்களால் தாங்களும் போற்றத்தக்க வாழ்க்கை பெறுவார்கள். ஆதலின் ஒழுக்க மிகுத்தோரால் புகழத்தக்கப் பெரியோர்களை நீயும் போற்றிவாழென்று கூறியுள்ளாள்.

## 81. பூமி திருத்தியுண்

பூமி - உனது நிலத்தை, திருத்தி - கல்லுகாடுகளைப் போக்கிப் பயிர்செய்து, உண் - நீ புசிக்கக்கடவா யென்பதாம். அதாவது, சகலதொழிலிலும் பூமியைத்திருத்தியுண்ணும் வேளாளத் தொழிலே விசேஷித்ததாகும். எவ்வகையிலென் பீரேல், மகாஞானிகள்,

அரசர்கள் முதல் சீவராசிகளீராக அன்னமூட்டி ஆதரிக்குந் தொழிலாதலின் பூமியின் பலனை போதித்துள்ளாள்.

**ஏறெழுபது**

வெங்கோபக் கலிக்கடந்த வேளாளர் விளைவயலுள்
பைங்கோல முடிதிருந்த பார்வேந்தர் முடி திருந்தும்
பொங்கோதைக் களியானை போர்வேந்தர் நடத்துகின்ற
செங்கோலைத் தாங்குங்கோலேறடிக்குஞ் சிறுகோலே.

## 82. பெரியாரைத் துணைக்கொள்

பெரியாரை - வித்தையிலும் புத்தியிலும் ஈகையிலும் சன்மார்க்கத்திலும் மிகுத்த மேன்மக்களை, துணைக்கொள் - உதவி பற்றி நில்லுமென்பதாம்.

மக்களுள் மூர்க்கர் கேண்மெயால் கோபலாபமும், காமிய மிகுதியால் பிணியின் லாபமும், பெற்றுத் துன்புறுவது அனுபவக்காட்சி யாதலின் அவிவேகிகளையணுகாது விவேகிகளை அணுகவேண்டுமென்று கூறியுள்ளாள்.

**நீதிவெண்பா**

அரிமந்திரம் புகுந்தாலானை மருப்பும் / பெருங்கொளிசேர் முத்தும் பெறலாம் - நரினுழையில்
வாலுஞ்சிறிய மயிரெலும் புங்கத்தபத்தின் தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்

## 83. பேதமெ யகற்று

பேத - பலவகைக் குணங்களும் பலவகைச் செயலுமமைந்த, மெய் - நிலயற்ற தேகியென்று பிறர் சொல்லுந் செயலை, அகற்று நீக்கிக் கொள்ளுமென்பதாம்.

பேதமாகிய நிலையற்ற குணங்களும், நிலையற்ற செயலும் அமைந்தவனென்று மற்றவர் காண்பாராயின் எத்தொழிலிலும் இணங்கவிடாமல் அகற்றிவிடுவார்கள். அவற்றால் பலவகை இடுக்கங்களுண்டாகி துக்கம் பெருகிபோம். ஆதலின் உமக்குள்ள போதகுணத்தை அகற்றுமென்பது கருத்தாம்.

**திரிக்குறள்**

நாணாமெய் நாடாமெய் நாரின் மெய் யாதொன்றும் பேணாமெய் பேதை தொழில்

**84. பையலோடிணங்கேல்**

பையல் - பரியாசமாம் சிறுசேஷ்டை , ஓடு - உள்ளவர்களுடன், இணங்கேல் - சேராதே என்பதாம்.

அதாவது, மக்களுருவமைந்தும், குரங்கு சேட்டையுள்ளவர்பாலிணங்கில் விவேகவிருத்திக்குத் தக்க வார்த்தைகளுஞ் செயலுமின்றி களியாட்டும் கலகமும் பெருகி வீணே மனத்தாங்கலுண்டாகும். அம்மனத்தாங்கலால் வித்தியாபுத்தி விருத்திக் குறைந்து வீணே அல்லலடைவார்களென் றறிந்த

ஞானத்தாய் பரியாசக்காரரை அணுகலாகாதென்னும் கருத்துடன் பையலோடிணங்கே லென்று கூறியுள்ளாள்.

## 85. பொருடனை போற்றி வாழ்

பொருள் - மெய்ப்பொருள், தனை - தன்னை, போற்றி - சிந்தித்து, வாழ் - வாழக்கடவா என்பதாம்.

தன்னைத்தான் உணரலென்னுந் தனக்குள்ள நற்செயல்களையும் துற்செயல்களையும் உணர்ந்து தனக்கொரு கேடும் வராது துற்செயல்களை அகற்றி நற்செயல்களைப் பெருக்கி சுகநிலையாம் உண்மெய்ப்பொரு ளுணர்ந்துநிற்றலே நித்திய வாழ்க்கைக்கு ஆதாரமாதலின் க்ஷணத்திற்கு க்ஷணம் அழிந்து கொண்டே போகும் பொய்ப் பொருளை போற்றாது நித்திய ஒழுக்கமாம் நீடுவாழ்க்கையைத்தரும் மெய்ப்பொருளைப் போற்றி வாழென்று கூறியுள்ளாள்.

**திரிக்குறள்**

பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு மருளானா மாணாப் பிறப்பு. எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினு மப்பொருள் / மெய்ப்பொருள் காண்ப தறிவு.

**சீவகசிந்தாமணி**

உள்பொரு ளிதுவென வுணர்தன் ஞானமாந் தெள்ளிதி னப்பொரு டெளிதல் காட்சியாம்
விள்ளற விருமெயும் விளங்கத் தன்னுளே பொள்ளிதிற்றரித்தலை யொழுக்கமென்பவே.

## 86. போர்த்தொழில் புரியேல்

போர் - எக்காலும் வாதுவழக்குக் கேதுவாம், தொழில் - கன்மங்களை, புரியேல் - நீ செய்யாதே என்பதாம்.

ஓர் தொழிலை ஆரம்பிக்குங்கால் அதனேது கொண்டு எக்காலமும் வாதுவழக்கை உண்டு செய்யுங் கன்மத்தைப் புரியாதேயென்று கூறியுள்ளாள்.

## 87. மனந்தடுமாறேல்

மனம் - ஒன்றை யெண்ணி, தடு - மற்றொன்றை, மாறேல் - பிறழாதே என்பதாம்.

ஊனக்கண் பார்வையுறாது நடக்கில் உடல் தடுமாறுவது போல், உள்விழி பார்வையாம் கியான நிலை தவறி மனந்தடுமாறுவது இயல்பாதலின், எக்காலும் விழிப்பினின்று மனந்தடுமாறும் செயலாலுண்டாகும் துக்கவிருத்தி களையும், மனந்தடுமாறாச் செயலாலுண்டாகும் சுகவிர்த்திகளையும், காட்சியின்

அனுபவத்தாலுணர்ந்து கியானக் கண் நிலைப்பதற்காய் மனந்தடுமாறேல் என்று கூறியுள்ளாள்.

## 88. மாற்றானுக் கிடங்கொடேல்

மாற்றானுக்கு - வாக்கிலொன்று மனதிலொன்றுமுள்ள வன்னெஞ்சனுக்கு இடம் - நெருங்கி இல்லத்தைக், கொடேல் - நீ கொடுக்காதே யென்தாம்.

அதாவது உள்ளத்தில் மாறுபட்டவனும் மனதில் மாறுபட்டவனும் செய்கையில் மாறுபட்டவனுமாகிய வன்னெஞ்ச சத்துருக்களுக்கு இடங் கொடே லென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள். மாற்றானென்பது - கூற்றன் என்பவனுக்கும் பொருளாதலின், காலனுக்கிடங்கொடேலென்பதும் மற்றோர் பாடபேதமாகும். காலனுக் கிடங்கொடுக்கும் வழிகள் இராகத்துவேஷ மோகங்களேயாகும். இம்மூவழிகளிலும் இடந்தராது அகற்றி ஆள்வதே ஜாக்ரதையாம்.

## 89. மிகைபடச்சொல்லேல்

மிகை - துன்பத்தை, பட - உண்டாக்கத்தக்க வார்த்தையை, சொல்லேல் - மறந்தும் பேசாதே என்பதாம்.

அதாவது உன் பிள்ளை குளத்தில் முழுகிவிட்டான், உன் கணவனை அடித்துவிட்டார்களென்று வேடிக்கையாக சொல்லும் வார்த்தைகள் கொடும் வினையாக முடிந்து பலவகை துன்பத்திற்கு

ஆளாக்கிவிடுகிறபடியால் திடீரென்று மக்களுக்குக் கேட்டையுண்டாக்கத்தக்க வார்த்தையைப் பேசலாகாதென்னுந் தன்மநோக்கத்தால் ஞானத்தாய் மிகைப்படச் சொல்லேலென்று கூறியுள்ளாள்.

**திரிக்குறள்**

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி / னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

**நீதி வெண்பா**

வெய்யோன் கிரணமிகச்சுடுமே வெய்யவனில் செய்யோன் கிரணமிகத் தீதாமே வெய்யகதிர்

எல்லோன்கிரணத் தெரியினிலுமெண்ணமிலார் / சொல்லே மிகவுஞ் சுடும்.

## 90. மீதூண் விரும்பேல்

மீ - அதிக, ஊண் - புசிப்பை, விரும்பேல் - இச்சியாதே யென்பதாம்.

அதாவது மிதமின்றி மீதூண் இச்சிப்பவர்க்கு சோம்பலும், மந்தமும் உண்டாகி சருவதொழில் விருத்திகளும் கெடுவதன்றி சுற்றத்தாரும் பெருவயிற்றோன் என்றிகழப் பேரெடுப்பன். ஆதலின் மிதாகாரம் புசித்து வித்தியா விருத்தியையும், அறிவின் விருத்தியையும் பெருக்கி சுகவாழ்வைப் பெறவேண்டுமென்னும் தன்மச்சிந்தையால் அதிக புசிப்பை விரும்பாதேயுங்க ளென்று கூறியுள்ளாள்.

**நீதிவெண்பா**

ஒருபோது யோகியே யொண்டளிர்க்கைமாதே / இருபோது போகியே யென்ப - திரிபோது
ரோகியே நான்குபோ துண்பா னுடல்விட்டுப் போகியே யென்று புகல்.

## 91. முனைமுகத்துநில்லேல்

முனை - கூரிய அம்பை ஏந்தி முனைந்தோன், முகத்து - எதிரில், நில்லேல் நிற்காதே என்பதாம்.

அதாவது எய்ய வேண்டியவன் தவறி எதிர் தோன்றியவன் படவேண்டி நேரிடுமாதலின் சினந்து முனைந்தோர் எதிர் நிற்கலாகாதென்பது கருத்து.

## 92. மூர்க்கரோ டிணங்கேல்

மூர்க்கர் - கோபிகள், ஓடு - உடன், இணங்கேல் - நெருங்கே லென்பதாம்.

முற்கோப மிகுத்த மூர்க்கரை நேசிப்பதினால் இவனு மோர் மூர்க்கனென்று மற்றவர் மதிப்பதுடன் நல்லோர் நெருங்கவு மாட்டார்கள். நெருங்கினும் நேசிக்கமாட்டார்களென்பது கண்டு, நல்லவனென்று நடமாடுங்கால் மூர்க்கரது கேண்மெய் தோன்றின், நல்லவனென்னும் பெயரற்று சுகமிழப்பானென்னுங் கருணையால் ஞானத்தாய் மூர்க்கரோடிணங்கேலென்று கூறியுள்ளாள்.

## நீதிவெண்பா

நல்லொழுக்கமில்லா ரிடஞ் சேர்ந்த நல்லோர்க்கு நல்லொழுக்கமில்லாச் சொனண்ணுமே - சொல்லி விடின்
பாம்பெனவுன்னாரோ பழுதையோயானாலுந்
தரம்பமரும் புற்றெடுத்தக்கால்

## 93. மெல்லியாடோள்சேர்

மெல்லியாள் - மிருதுவாக்குடையவள், தோள் - உடன், சேர் - கூடி வாழக்கடவா யென்பதாம்.

மெல்லிய வாக்கும், மெல்லிய செயலும், மெல்லிய நடையுமுடையாளை இல்லாளாக்கி வாழக்கடவாய் என்பதாம்.

## அறப்பளீ சுரசதகம்

கணவனுக் கினியளாய் மிர்துபாஷியாய் மிக்க கமலநிக ரூபவதியாய்
காய்சி நமிலாளுமாய் நோய் பழியிலாததோர் கால்வழியில் வந்தவளுமாய்
மணமிக்க நாணமட மச்சம் பயிர்ப்பென்ன வருமினிய மார்க்கவதியாய்
மாமிமாமர்க்கிதஞ் செய்பவளுமாய் வாசல் வருவிருந் தோம்புபவளாய்
இணையின் மகிழ்நன் சொல்வழி நிற்பவளுமாயந்தி யென்பெய ரிலாதவளுமாய்
இரதியென்வே லீலை புரிபவளுமாய் பிற ரிழிவழி செலாதவளுமாய்

அணியிழை யொருத்தி யுண்டாயினவள் கற்புடைய ளாகுமெம் தருமெய் மதவே

அநுதினமு மனதிநினை தருசதுர கிரிவள ரறப்பளீசுரதேவனே.

## 94. மேன்மக்கள் சொற்கேள்

மேல் - சிறந்த, மக்கள் - மநுக்களின், சொல் - வார்த்தையை, கேள் - கேழ்க்கக் கடவா யென்பதாம்.

வித்தையிலும், புத்தியிலும் மிகுத்துள்ளதன்றி அன்பு, ஈகை, சாந்தத்தில் உயர்ந்தோர் மாட்டே உலகம் சீர்திருந்துவதின் அனுபவங்கண்ட ஞானத்தாய் மேன்மக்கள் சொற்கேளென்று வற்புறுத்தி கூறியுள்ளாள்.

சிலர் மேன்மக்களென்றால் உயர்ந்த சாதியென்றும், கீழ்மக்களென்றால் தாழ்ந்த சாதியென்றும் அதனுட்பொருளறியாது வேஷசாதியோர் வகுப்பின்படி பொருட்கூறித்திரிவர். அஃது பொருந்தாவாம். எங்ஙனமென்றால், ஒருங்கே ஓர் கூட்டத்தார் கூடித் தங்களை உயர்ந்த சாதியென்று சொல்லிக்கொள்வதும் மற்றுமோர் கூட்டத்தோரை ஒருங்கே சேர்த்து தாழ்ந்த சாதியென்று சொல்லித்திரிவதும் ஆகியப் பொருளற்ற மொழிகள் யாவும் கலையற்ற சாதிப்புறட்டுகளேயாம்.

சாதிக்கும் சாதனங்களில் நல்லோரென்னும் மேலான சாதனங்களை சாதிப்போர் மேல் சாதியினரென்றும், சாதிக்கும் சாதனங்களில் தீயோரென்னும் இழிந்த சாதனங்களைச் சாதிப்போரை தாழ்ந்த சாதியினரென்றுங் கூறத்தகும்.

அதாவது, ஐரோப்பியராயினும் சீனனாயினும், ஜப்பானியராயினும், இந்தியராயினும், வித்தை, புத்தி, ஈகை, சன்மார்க்கமென்னும் மேலான சாதனங்களில் இருப்பார்களாயின் அவர்களையே மேன்மக்களென்றும், மேலான சாதியோ ரென்றும் கூறப்படும்.

பொய், வஞ்சகம், சூது, குடிகெடுப்பு, அன்னியர் பொருளாசை முதலிய இழி செயல்களிலிருப்பார்களாயின் அவர்கள் எத்தேசத்தோராயினும் கீழோ ரென்றும், தாழ்ந்த சாதியோரென்றுங் கூறப்படும்.

ஆதலின் நல்லூக்கம், நற்கடை பிடி, நல்லுணர்ச்சி, நல்வாய்மெய் மிகுத்த மேன்மக்களாம் விவேகமிருத்தோர் சொற்படி நடக்கவேண்டுமென்று கூறியுள்ளாள்.

## 95. மைவிழியார் மனையகல்

மைவிழியார் - கண்ணில் மையிட்டு மயக்கவல்லார், மனை - வீடுகளுக்கு, அகல் - தூர நில்லு மென்பதாம்.

தூண்டிலிட்டும் வலைவீசியும் மச்சங்களை இழுப்பது போல், கண்களுக்கு மையிட்டு வாலிப மக்களுக்கு வலைவீசும் மைவிழியார் மனையைக் கண்டவுடன் அவ்விடம் நில்லாது தூர அகல வேண்டுமென்பது கருத்தாம்.

## 96. மொழிவ தறமொழி

மொழிவது - ஓர் வார்த்தை புகலுங்கால், அற - சந்தேக மற, மொழி - சொல்லவேண்டு மென்பதாம்.

ஒரு வார்த்தையை புகலுங்கால் அவ்வார்த்தையின் பொருள் தெரிந்தும் தெரியாது இருக்குமாயின் பிரயோசன மற்றுப்போம். ஆதலின் மொழியின் வாக்கு முழுதும் தெளிவுற சொல்லவேண்டுமென்பதாம்.

## 97. மோகத்தை முநி

மோகத்தை - காமிய மயக்கத்தை, முநி - கடந்து நில்லென்பதாம். காமவெகுளி மயக்கங்களாம், மூன்றினுள் காமியமே மிக்கக் கொடியதாதலின் அவற்றை முறிந்து ஜயித்தலே மக்களுக்கழகாம், ஆதலின் மோகத்தை முனியென்று வற்புறுத்தியுள்ளாள்.

## 98. வல்லமெய் பேசேல்

வல்ல - மிக்க சாமர்த்தியமுடைய , மெய் - தேகி யென்று, பேசேல் - பலருமறியக் கூறாதே யென்பதாம்.

அதாவது, மாமிக்கோர் மாமி உண்டெென்பதுணராது எமக்கு மேற்பட்ட வல்லமெய்ப்புருஷன் இல்லையென்று கூறுவானாயின் அவனுக்கு மேற்பட்ட வல்லமெய்யன் தோன்றி அழித்துவிடுவான் ஆதலின் எத்தகைய வல்லமெய் யோனாயினுந் தனது வலதை பலரறியக் கூறாதிருப்பதே சிறப்பைத் தருமென்று விளக்கியுள்ளாள்.

**அறப்பளீசுரசதகம்**

தனக்குவெகு புத்தியுண்டாயினும் வேறொருவர் தன்புத்தி கேட்கவேண்டும்

தானதிக சூரனே யாயினும் கூடவே தள சேகரங்கள் வேண்டும்

கனக்கின்ற வித்துவானாயினுங் தன்னினுங் கற்றோரை நத்தவேண்டும்

காசினியை யொருகுடையி லாண்டாலும் வாசலிற் கருத்துள்ள மந்திரி வேண்டும்

தொனிக்கின்ற சங்கீத சாமர்த்தயனாயிலும் சுதிகூட்ட வொருவன் வேண்டும்

சுடர்விளக்காயினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோ லோன்று வேண்டும்

அனற்கண்ணனே படிக சங்கநிகர் வண்ணனே ஐயனே யருமெய் மதவேள்

அநுதினமு மனதிநினை தருசதுர கிரிவள ரறப்பளீசுரதேவனே.

## 99. வாதுமுற்கூறேல்

வாது - தருக்கம்புரிவதில், முன் - முன்பு, கூறேல் - யோசியாது பேசாதே என்பதாம்.

அதாவது, குற்றங்கூறுதலும், கூறும் பொருள் விளங்காது கூறுதலும், கூறியதை கூறுதலும், மிகப்படக் கூறுதலும், முன்கூறிய பொருளுக்கு மாறுகொளப் பொருள் கூறுதலும், முன்மொழிக்குப் பின்மொழி விரோதிக்கக் கூறுதலும், நூலுக்குக் குற்றமாதல்போல் வாதாகுந்தருக்கத்தில் யோசியாது முன் பேசலாகாதென்பது கருத்து.

துரிதத்தில் முன் பேசுவதினால் எதிரி கொணர்ந்தவை இலக்கிய தருக்கமா, இலக்கணதருக்கமா, மதோ தருக்கமாவென்பது வீணே விளங்காது விரிந்துபோம் அவற்றால் எடுத்தவாது முடிவு பெறாது என்றறிந்துள்ள ஞானத்தாய் வாது முற்கூறேலென்று கூறியுள்ளாள்.

**தருக்கக் கௌமுகி**

**வாது முற்கூறி வழுவுற விடுத்தல் ஏது பயனின் றிழிவது மாகும்.**

### 100. வித்தை விரும்பு

வித்தை - கைத்தொழிலை, விரும்பு - நீ கற்பதற்கு ஆசைக்கொள்ளு மென்பதாம்.

அதாவது, வித்தையை விரும்பி கற்றுக்கொள்ளுவதில் ஓர் பாஷையைக் கற்பதே வித்தையென்று கூறுவாறுமுண்டு. அஃது பொருந்தாவாம். எவ்வகையிலென் பீரேல், "கற்றோர்க்கு

சென்றவிடமெல்லாம் சிறப்பு" என்னும் முதுமொழியை சிரமேற்கொண்டு தமிழ் பாஷையைத் தெளிவுறக் கற்றவன் கன்னடதேசம் போவானாயின் சிறப்படைவனோ, கன்னட பாஷையைத் தெளிவுறக் கற்றவன் மராடதேசம் போவானாயின் சிறப்படைவனோ, ஒருகாலுஞ் சிறப்படையான்

ஓடதிவித்தை, மரவினைவித்தை, தையல்வித்தை, பொன்வினை வித்தை, பயிரிடும் வித்தை, நெய்யும் வித்தை, உலோக பொருத்த வித்தை, காந்தவித்தை, இரசவித்தை முதலியவற்றுள் ஒன்றைத் தேறக்கற்று எத்தேசம் போயினும் சிறப்படைவான்.

அதற்குப் பகரமாய் நமது ஐரோப்பியர், அமேரிக்கர், சீனர், ஜப்பானியர் முதலிய மேன்மக்கள் மற்றதேசத்தோர் பாஷைகளைக் கற்காதிருப்பினும் தங்களிடமுள்ள வித்தைகளின் தைரியத்தால் எங்கும் உலாவி சுகம் பெற்றிருக்கின்றார்கள்.

நமது தேயத்தோர் சாதி வித்தை ஒன்று, சமயவித்தை ரண்டு, கொட்டை கட்டும் வித்தை மூன்று, கொழையல்வித்தை நான்கு, குறுக்குபூசுவித்தை ஐந்து, நெடுக்கு பூசுவித்தை ஆறு, மற்றும் இதற்காதாரவித்தைகளை கற்றுக்கொண்டு பிள்ளை கொடுக்குஞ் சாமியார், பொன் கொடுக்குஞ் சாமியார், புதையலெடுக்குஞ் சாமியார், பூமியை விட்டு ஒருமுழ உயரம் எழும்புவேனென்னுஞ் சாமியார், காணாத மோட்சத்திற்குக் கையோடு இட்டுக்கொண்டு செல்லுஞ் சாமியார் களென்னும் வேஷமிட்டு பொருள்

பறித்துத்தின்னும் பொய்யும், பொறாமெயும், வஞ்சகமும் நிறைந்த நெஞ்சினர்களே குருக்களாகத் தோன்றி, பேதை மக்களை மயக்கிப் பாழாக்கிவிடுவார்களென்னும் பூர்வக்கியான முணர்ந்த ஞானத்தாய் வருங்கால சம்பவமறிந்து வித்தையை விரும்புங்கோளென்று வற்புறுத்திக்
கூறியுள்ளாள்.

## 101. வீடுபெற நில்

வீடு - முத்தி, நிருவாண மென்னும் நிலையை, பெற - அடைவதற்கு, நில் - ஞானவரம்பில் நிற்கக்கடவா யென்பதாம்.

வீடுபேறாம் நிருவாணமாகும் பிறவியற்ற நிலையே துக்கத்தை ஒழித்த இடமாதலின் அவற்றிற்கு கேடிலா பருவம், மோட்சம், கேவலம், சித்தி, கைவல்லியம், மீளாகதி, நிருவாணம் , பரகதி, சிவம், முத்தி, அமுதம் என வழங்கிவந்தார்கள், நாளதுவரையில் வழங்கியும் வருகின்றார்கள்.

### பின்கலை நிகண்டு

கேடிலா விபவருக்கம் கேவலத்தோடு சித்தி / வீடு கைவல்லியமே மீளாதகதியே நூலோர்
பாடு நிர்வாணத்தோடு பரகதி சிவமே முத்தி நீடு மீரைந்தும் மோட்சம் அமுதமும் நிகழ்த்தலாமே

மனுடன் வாணமென்னும் பற்றுள்ளவரையில் பிறவியிற் சுழன்று மாளாதுக்கத்தை யனுபவித்து வருவது இயல்பாம். மாறிமாறி பிறந்து கொண்டே வரும் துக்கத்தை ஒழிக்க வேண்டியவன் நிருவாணமென்னும் பற்றற்ற நிலையடைவானாயின் மாளா பிறவியு மற்று பிறப்பினால் உண்டாகுந் துக்கமுமற்று வீடென்னும் அழியாநிலை அடைகின்றான்.

பாசபந்த இளமெய் முதுமெய்யாம் முத்தினோன், மோக்கமுற்றோன், நிருவாணமடைந்தோனென்று கூறப்படுவான். மரண மென்னும் நித்திரையை ஜெயித்தானென்றுங் காலகாலனென்றுங் கூறப்படும்.

**(இரண்டு வரிகள் தெளிவில்லை )**

**ஔவை குறள்**

(தெளிவில்லை )

**சீவகசிந்தாமணி**

மாதவன் சரிதமுந் துறந்த வண்ணமு / மேதமின் றியம்பு மினடிகளோவென்ப

போதலர் புனைமுடி யிறைஞ்சியேத்தினான் / காதலிற் கணந்தொழக் காவன் மன்னனே

**வேறு**

இன்பமற்றென்னும் பேரானெழுந்த புறகற்றை தீற்றித்

துன்பத்தை சுரக்கு நான்கு கதியெனும் பதியறுத்து

நின்ற பற்றார்வ நீக்கி நிருமலன் பாதஞ்சேரி

னன் புவிற் றுண்டு போகிச் சிவகதி யடையலாமே.

## 102. உத்தமனாயிரு

உத்தமனாக - உன்னை சகலரும் நல்லவனென்று சொல்லத்தக்கதாக, இரு - நீவீற்றிருக்கக்கடவாயென்பதாம்.

மக்களுள் மத்திபனென்றும் உத்தமனென்றும், அதமனென்றும், வழங்க கூடிய நிலையில் அதமனையும், மத்திபனையும் நீக்கி உத்தமனையே உலகம் கொண்டாடுவது இயல்பாதலின் ஞானத்தாய் உத்தமனா யிருமென்று கூறியுள்ளாள்.

## 103. ஊருடன் கூடிவாழ்

ஊருடன் - மநுக்களாம் கிராமவாசிகளுடன், கூடி - சேர்ந்து, வாழ் - வாழக்கடவா யென்பதாம்.

அதாவது ஒருவருக்கொருவர் விலகி வாழ்க்கை புரிவதினால் ஆபத்துக்குதவாமல் அல்லலடைய நேரிடுமென்றறிந்த ஞானத்தாய் மக்களுள் ஒருவருக்கொருவர் உபகாரிகளாயிருக்கவேண்டுமென்ற கருத்தால் குடிகள் சேர்ந்து வாழ்க்கை பெற ஊருடன் கூடிவாழ் என்று கூறியுள்ளாள் மேன்மக்கள் வாக்குதவிராது சேர்ந்து வாழ்ந்து வந்த பௌத்த தன்ம அரசர்களும் குடிகளும் வாழ்ந்த இடங்களை சேரி, சேரி என்று வழங்கிவந்தார்கள்.

### சீவகசிந்தாமணி

தேனுலா மதுசெய் தோதை தேம்புகை கமழ வூட்டி

வானுலா சுடர்கண் மூடி மானகரிரவு செய்யப்
பானிலா சொரிந்து நல்லா ரணிகலம் பகலைச் செய்ய வேனிலான்
விழைந்த சேரி மேலுலகனைய தொன்றே.

## 104. வெட்டெனப்பேசேல்

வெட்டென - மனந்துண்டிக்கத்தக்க கடினவார்த்தைகளை பேசேல் - மறந்தும் பேசாதே யென்பதாம்.

கடின வார்த்தைகளில் அனந்தக் கேடுண்டாவதை உணர்ந்த ஞானத்தாய் வெட்டெனப் பேசேலென்று விளக்கிக் கூறியுள்ளாள்.

## 105. வேண்டி வினைசெயேல்

வினை - குறித்த தொழிலை ஒருவன் செய்து வருகின்றானென்றறிந்தும், வேண்டி - அத்தொழிலை நீயும் விரும்பி, செயேல் - செய்யாதே யென்பதாம்.

அதாவது. ஒருவன் அத்தொழிலை நடத்தி வருகின்றானென்றறிந்திருந்தும் அதை நாடுவதாயின் எதிரியைக் கெடுப்பதற்கு ஏதுவென்று உணர்ந்த ஞானத்தாய் வேண்டி வினைசெயேலென்று கூறியுள்ளாள்.

## 106. வைகரைத் துயிலெழு

வைகரை - சூரியவுதயகாலத்தில், துயில் - நித்திரையைவிட்டு, யெழு - நீ யெழுந்திரு மென்பதாம்.

வைகரை விழிப்பே சூரியகலை, சந்திரகலைக்கு ஆதாரமாதலின் சூரியன் கரைகட்டுக்கு விழிக்க வேண்டுமென்று கூறியுள்ளாள்.

### 107. ஒன்னாரைச் சேரேல்

ஒன்னாரை - பகைவர்களாகும் சத்துருக்களை, சேரேல் - நெருங்காதே யென்பதாம்.

அடுத்து கெடுப்பது பகைவர் சுவாபமாதலின் அவர்களை நெருங் கலாகாதென்பது கருத்து.

### 108. ஓரஞ் சொல்லேல்

ஓரம் - ஒருவர் சார்பாய் சார்ந்து கொண்டு மற்றொருவருக்குத் தீங்குண்டாகத்தக்க வார்த்தையை, சொல்லேல் - எக்காலுஞ் சொல்லாதே யென்பதாம்.

எக்காலும் நடுநிலையினின்று சகல காரியாதிகளிலும் பேசவேண்டும் என்பது கருத்து.

**ஔவை, அம்மையென்னும் பெயர்பெற்ற ஞானத்தாய் அருளிய முதல் வாசகம்**

**முற்றிற்று**

**இவ்வாக்கம் இரண்டாமாண்டு 42ஆம் இலக்கத்தில் தொடங்கி மூன்றாமாண்டு 11ஆம் இலக்கத்தில் முற்றுப் பெறுகிறது**

**ஞானத்தாய் ஔவையார் அருளிய இரண்டாம் வாசகம்**

## காப்பு

குன்றை வேந்தன் செல்வனடியினை / யென்று மேற்றித் தொழுவோமியாமே.

குன்றைவேந்தன் - மலைக்குன்றில் வாழரசனென்றும், செல்வன் - அழியா சம்பத்தனென்றும் வழங்கப்பெற்ற புத்தபிரானின் அடியினை - செந்தாமரைப் பாதங்களை என்றும் - எக்காலமும், ஏற்றி - போற்றி, தொழுவோம் - வணங்குவோம், யாம் - யாங்கள் என்றவாறு.

அரசன் மரத்தடியில் உட்கார்ந்திருந்தது கொண்டு அரசன் மரம், அரசமரமெனக் காரணப்பெயரைப் பெற்றது போல், விம்பாசார அரசன் ஆளுகைக் குட்பட்ட ஓர் குன்றின் மீது சித்தார்த்தியாம் அரசன் வீற்றிருந்து சத்திய தன்மமாம். தசபாரமென்னும் தசசீலங்களைப் பதிவித்து, விம்பாசாரனால் பலவகை தன்மங்களையும் செய்வித்துவந்த பீடமாகுங் குன்றையே ஆதாரமாகக் கொண்டு குன்றைவேந்தனென்றும், வரையாது கொடுக்கும் ஈகையை ஆதாரமாகக்கொண்டு செல்வனென்றும், வழங்கிவந்தப் பெயர்களையே ஞானத்தாய் தானியற்றியுள்ள இரண்டாம் வாசகக் காப்பிற் கூறியுள்ளாள்.

### பின்கலைநிகண்டு

சிறந்திடுங் குன்றை வேந்தன் குணபத்திரன் சீலநூலை
யறங் செயா வாறேகற்றவதிமயக்கத்தினாலே
குறைந்திடுந் தமது மேற்கொள்கொளியமற்றது கரந்தே

யறிந்தது மறியாதாரைப்யேற்றலு மிழி மடந்தான்.

**சூளாமணி**

மிக்கெரி சுடர்முடி சூடி வேந்தர்க / டொக்கவரடி தொழத் தோன்றுந் தோன்றலா

யக்கிரிபெருஞ்சிறப் பெய்தியாயிடை / சக்கரப்பெருஞ்செல்வன் சாலைசார்ந்ததே.

**சீவகசிந்தாமணி**

**சினவுனர் கடந்த செல்வன் செம்மல ரகலநாளை.**

## 1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

அன்னையும் - தாயாரும், பிதாவும் - தகப்பனாரும், முன் - ஆதியாகவும் முன்னிலையாகவும், அறி - காணக்கூடிய, தெய்வம் - கடவுளர்களென்பதாம்.

அதாவது குழவியாகத் தோன்றியகால் அமுதூட்டி சீராட்டியவளும் அன்னமூட்டி பாராட்டியவளுமாகிய தாயாரும், சேயையுந் தாயையும் ஆதரித்து வந்த தந்தையும், காப்பு, இரட்சையிரண்டிலும் முதற்கடவுளாகத் தோன்றியுள்ளபடியால் அவர்களையே கண்ணிற்கண்ட முதல் தெய்வமென்று கூறியுள்ளாள்.

## 2. ஆலயந் தொழுவது சாலவுநன்று

ஆலயம் - முதல் தெய்வமாகக் காணுந் தந்தை தாயரை மனோவமைதிபெற, தொழுவது - வணங்குவது, சாலவும் - எக்காலும், நன்று - சுகமென்பதாம்.

அதாவது தந்தை தாயரை தெய்வமாகக் கொண்டவன் அவர்கள் காப்பையும், இரட்சையும் நன்றியறிந்து அவர்க் கன்பான ஆதரணை இதயத்து ஊன்றி வணங்கியும் அவர்களை அன்புடன் போஷித்தும் வருவானாயின் அச்செயலைக் கண்ணுற்றுவரும் இவனது மைந்தனும் அன்னை தந்தையரை தெய்வமெனக் கொண்டு ஆலயந்தொழுதுவருவான். அங்ஙனமின்றி அன்னையையும், பிதாவையும் அன்புடன் போஷித்தும் ஆலயம் பெறத் தொழுவதைவிடுத்து கல்லையுஞ் செம்பையுந் தொழவேண்டுமென்பது கருத்தன்றாம்.

**பட்டினத்தார்**

சொல்லினுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லினு மாசற்ற வாகாயந்தன்னிலு மாய்ந்துவிட்டோர்
இல்லினும் அன்பரிடத்திலு மீசன் இருப்பதல்லால்
கல்லினுஞ் செம்பிலுமோயிருப்பானென் கண்ணுதலே.

**கடவுளந்தாதி**

வீண்பருக் கெத்தனைச்சொன்னாலும் பொய்யது மெய்யென்றெண்ணார்
மாண்பருக்குப் பொருளாவதுண்டோ மதுவண்டு வெறி
காண்பரைக் கும்பிட்டு கல்லையுஞ் செம்பையுங் கைதொழுது
பூண்பவர் பாதக பூதலத்தொல்லை பிடித்தவரே.

என்று மகாஞானிகள் கூறியுள்ளவற்றை நாம் பின்பற்றவேண்டியதன்றி அஞ்ஞானிகளின் கருத்தை பின்பற்றலாகாதென்பது கருத்து.

பாலி பாஷையில் ஆலயமென்றும், ஆவிலயமென்றும், மனோலய மென்றும் வழங்கும் வாக்கியங்கள் மூன்றும் ஒருபொருளைத் தரும்.

**ஔவைக்குறள்**

வாயுவழக்க மறிந்து செறிந்தடைங்கில் / ஆயுட் பெருக்கமுண்டாம்.

வாயுவினாலய வுடம்பின் பயனே / ஆயுவி னெல்லையது.

## 3. இல்லறமல்லது நல்லறமன்று

இல்லறம் - மனையாளுடன் கூடி வாழும் வாழ்க்கையில் மனமொத்து வாழ்தலே நல்லறமெனப்படும், அல்லது - அவ்வகையல்லாதது, நல்லறமன்று - நல்லற மென்பதற்று பொல்லறமென்று கூறுதற்கேதுவுண்டாம்.

இல்வாழ்க்கையில் மனயையாளனும், மனயையாட்டியும் மனமொத்து வாழ்தலே இல்லறமென்னும் நல்லறமாவதுடன் இகவாழ்க்கையிலும், சுகவாழ்க்கைப் பெறுவார்களென்பது கருத்து.

மனமொத்துவாழும் இல்லாளின் வாழ்க்கைப் பெற்றவன் துறந்த பெரியோர்களுக்குந், துறவாசிரியோர்களுக்கும், மறந்திரந்த

மக்களுக்கும் உதவி புரியும் உத்தமனாதலின் இல்லறத்தில் நல்லறத்தோனை மிக்க மதித்துக் கூறியுள்ளாள்.

**திரிக்குறள்**

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு / நல்லாற்றி னின்ற துணை

**அறநெறிச்சாரம்**

மடப்பதூஉ மக்கட் பெறுவதூஉம் பெண்பான்
முடிப்பதூஉமெல்லாருஞ் செய்வர் படைத்ததனால்
இட்டுண்டில்வாழ்க்கை புரிந்துதா னல்லறத்தே
நிற்பரேல் பெண்டி ரென்பர்

**நாயனாதிகாரர் காப்பியம்**

தலைவனுந் தலைவி யென்பார் தங்களிற் பக்கமன்பு
நிலைமன மொருமெயோடு நிணிலந்தன்னில் வாழ்தல்
பலனவனென்னில் வானிற் பரமனு மருள்போரின்ப
நலனு நீ டூழிகாலம் நன்கொடு வாழ்குவாரே

**சங்கத்து பராதம்**

எப்பணியா லின்பருவர் காதலர் காதலரை /யப்பணியா லப்பொழுதே யன்புறுத்தி யொப்

மனங்குழையும் வண்ண மகிழ்விப்பதன்றே கனங்குழையார் தங்கள் கடன்.

## 4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்

ஈயார் - மற்றவர்க்குக் கொடா லோபியரின் தேட்டை - சுகப் பொருளை, தீயோர் - வஞ்சகர், கள்ளர், பொய்யர்களாகிககொறரச்சிந்தையை யுடையவர்கள், கொள்வர் - அபகரித்துக் கொள்ளுவார்கள் என்பதாம்.

**நாலடி நானூறு**

உடா அதுமுண்ணாதுந்த முடம்பு செற்றுங் கெடா அத
நல்லறமுஞ்செய்யார் - கெடா அது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட / வுக்த்தீட்டுத் தேனீக்கரி.

**5. உண்டி சுருங்குதல் பெண்டிற்கழகு**

உண்டி - உண்ணும் புசிப்பை, சுருங்குதல் - மிதாகாரத்தில் நிறுத்தல், பெண்டிர்க்கு - பெண்களுக்கு, அழகு - சிறப்பாகும்.

அதாவது, பெண்கள் தங்களது புசிப்பை அதிகமுமில்லாது கொஞ்சமுமல்லாது புசிப்பார்களாயின் தன் கணவனையும், பந்துக்களையும் வரும் விருந்தினரையும் அன்புடன் போஷிப்பார்கள். அங்ஙனமின்றி பெருந்திண்டியை விரும்புவரேல் தன்கணவரையும் பந்துக்களையும் விருந்தினரையும் ஓம்பார்களென்பது திண்ணமாதலின் உண்டிற் சுருக்கி வாழ்தலே இல்வாழும் பெண்ணுக்குக் இனியதென்று கூறியுள்ளாள்.

**நீதிநெறிவிளக்கம்**

கற்பின் மகளிர் நலம் விற் றுணவு கொளா பொற்றொடி நல்லார் நனிநல்லர் - மற்றுத்தங்
கேள்வர்க்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர் / யாவர்க்குங் கேடு சூமார்.

## அறநெறிச்சாரம்

கொண்டான் குறிப்பொழுகல் கூறிநாணுடை / கண்டது கண்டு விழையாமெய் - விண்டு
வெறுப்பென செய்யாமெய் வெக்காமெய்நீக்கி யுறுப்போடு ணர்வுடையாள் பெண்.

## 6. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்

ஊருடன் - ஓர் கிராமத்துட் சேர்ந்து வாழும் எல்லோருடனும், பகைக்கின் - விரோதித்துக்கொள்ளில், வேருடன் - தனது புத்திர மித்திர சந்ததியோர் களுடன், கெடும் - சீரழிவார்க ளென்பதாம்.

ஆதலால் ஒருவருக்கொருவர் உபகாரிகளாக விளங்கவேண்டுமென்றும், ஒருவருக்கொருவர் ஆதரவாக இருக்கவேண்டுமென்றும் எண்ணம் உடையவர் களாய் ஓரிடஞ் சேர்ந்து வாழ்தற்கு ஆரம்பித்தவர்கள் வாழ்க்கை எண்ணத்தை விடுத்து விரோத சிந்தையைப் பெருக்கிக்கொள்ளுவதாயின் அக்குடி வாழ்க்கையில் தான் கெடுவதுமன்றி தனது குடும்பசம்பந்தமுள்ள யாவருங் கெடுவார்களென்றுணர்ந்த ஞானத்தாய்

ஊராரெல்லோருடனும் விரோதித்துக் கொள்ளாதீர்களென்று கூறியுள்ளாள்.

### 7. எண்ணு மெழுத்துங் கண்ணெனத்தகும்

எண்ணும் - கணிதத்தில் (அ) எட்டென்னும் வரி வடிவும், எழுத்தும் - அட்சரத்தில் (அ) அகரமென்னும் வரிவடிவும் உண்மெய்ப் புறமெய்யென்னு மிரண்டையுங்கூடியக், கண்ணென - அருட்கண்ணாம் ஞானவிழியென, தகும் - கூறுதலொக்கும் என்பதாம்.

அதாவது (அ) அகரமா முதலெழுத்தின் சுழியே ஞானசாதகர்க்கு உள்விழி பார்வை நிலையாதலின் எண்ணுக்கு (அ) எட்டாகவும் எழுத்தில் அகரமாகவும் விளங்கும் வரி வடிவே ஞானக்கண்ணென்று விளக்கியுள்ளாள்.

**திரிக்குறள்**

எண்ணென்பவேனை யெழுத்தென்பலிவ்விரண்டுங் / கண்ணென்ப வாழு முயிர்க்கு.

**ஞானக்கும்மி**

கட்டுப்படாதந்த வச்சுமட்டம் - அதன் காலே பன்னிரண்டாகையினால்

எட்டுக்கயிற்றினால் கட்டிக்கொண்டால் - அது மட்டுப்படுமடி ஞானப்பெண்ணே

**அறநெறிச்சாரம்**

தன்னோக்குந் தெய்வம் பிறிதில்லை தான் தன்னைப்
பின்னை மன்மறப் பெற்றானேல் - என்னை
எழுத் தெண்ணே நோக்கி யிருமெயுங் கண்டாங்
கருட் கண்ணே நிற்பதறிவு.

### 8. ஏவாமக்கள் மூவாமருந்து

ஏவா - பெரியோரேனும், தாய்தந்தையரேனும் ஒன்றை நோக்கி யேவல் கூறுவதற்கு முன்பு, மக்கள் - மனுக்களவற்றையுணர்ந்து செய்யுஞ் செயலானது, மூவா - என்றுங்கெடாது சுகந்தரும், மருந்து - அவுடதத்தை யொக்குமென்பதாம்.

எஜமானனாயினுந் தாய்தந்தையராயினும் இன்னதைக் கேட்கின்றார்கள் இனியதைத் தேடுகின்றார்களென்றுணர்ந்து அவ்வேவலைப் புரிவோர் தேவாமிர்தத்திற்கு ஒப்பானவரென்பது கருத்து.

### 9. ஐயம்புகினுஞ் செய்வினை செய்

ஐயம்புகினும் - பிச்சையேற்றுண்ணுங் காலம் வரினும் அச்சோம் பேரிச்செயலைக் கருதாது, செய்வினை - உனக்குத்தெரிந்த தொழிலை விடாமுயற்சியுடன், செய் - செய்து சீவிக்கக்கடவா யென்பதாம்.

அதாவது கால் ஏதுக்களாலும், வியாதிகளினாலும் செய்தொழில் முயற்சி குன்றி பயந்து ஒருவரை இரந்து கேட்க நேரிடும். அவ்வகை இரந்துண்ணுந் தொழிலையே கடைபிடிப்பதாயின் பிச்சை கிடையாவிடத்து களவு, சூது, வஞ்சக முதலிய துற்கிருத்தியங்களுக்கு

ஆளாக்கிவிடும். ஆதலின் இரந்துண்ணுங் காலம் வரினும் அவனவன் செய்தொழிலில் முயற்சி குன்றாதிருந்து செய்யக்கூடிய வினையை செய்து சீவிக்கவேண்டுமென்பது கருத்து.

## 10. ஒருவனைப்பற்றி யோரகத்திரு

ஒருவனை - தன்மெய்தானே, பற்றி - யுணரப்பிடித்து, ஓரகத்து - உள்ளத்தின்கண், இரு - நிலைத்திருமென்பதாம்.

தன் தொழிலால் தனக்கு போஷிப்பும், தன்னை உணர்ந்து ஒடுங்கலால் தனக்கு சுகமும் உண்டாவதன்றி ஏனைய மக்களால் சுகங்காண்டல் அறிதாதலின் தன்னொருவனைப்பற்றி தன்னகத்து ஒடுங்கவேண்டுமென்பது கருத்தாம்.

### அறநெறிச்சாரம்

செய்வினையல்லாற் சிறந்தார் பிறிதில்லை
பொய்வினை மற்றைப் பொருளெல்லா - மெய்வினவில்
தாயார் மனைவியார் தந்தையார் மக்களார்
நீயார் நினைவாழி நெஞ்சு.

தானே தனக்குப் பகைவனு நட்டானும் / தானே தனக்கு மறுமெயு மிம்மெயும்
நானே தான் செய்தவினைப் பயன்றுய்த்தலால் / தானே தனக்குக் கரி.

ஒற்றுமெய் நயத்தால் ஒன்றெனத் தோன்றுமொருவன் தன்னைத்தான் உணர்ந்து மனத்தை வணக்கலென்னும் நன்மெய்க் கடைப்பிடித்து ஒருவனைப் பற்றி உடலுயிரென்னுமோரக திருவென்று கூறியுள்ளாள்.

**சூளாமணி**

அருந்தவ மமையும் பார மிரண்டையு மழிந்து தம்மெய்.
வருந்தியு முயிரையேகம்பி மவத்திலை வணக்கல் வேண்டும்
திருந்திய விரண்டுதத்தஞ் செய்கையித்திரியுமாயின்
பெருந்துயர் வினைக்குமன்றே பிறங்குதார் நிறங்கொள்வேலோய்.

இவற்றை அநுசரித்தே சமணமுநிவர்கள் யாவரும் தாங்கள் இயற்றியுள்ள இலக்கண நூற்கள் யாவிலும் தன் மெய், முன்னிலை, படர்க்கை என்றும்; ஒருமெய், பன்மெயென்றும்; ஒருமெயென்னும் ஒருவனாய் தன் தேகத்தை உயும். பன்மெயான பலதேகத்தைச் சுட்டியும் தனக்குள்ள பஞ்சஸ்கந்தங் களை விளக்கி தன்னகத்தடங்கும் நிலையை ஊட்டியுள்ளார்கள்.

**11. ஓதலினன்றே வேதியர்க்கொழுக்கம்**

வேதியர் - சமணமுநிவர்களின், ஒழுக்கம் - நற்கிருத்தியம் யாதெனில், ஓதல் - வேதவாக்கியங்களாம் நீதிமொழிகளை சகலருந் தெளிவுற போதித்தலே, நன்றாகும் - சுகந்தரு மென்பதாம்.

அதாவது புத்தபிரானால் ஓதியுள்ள சௌபபாபஸ்ஸ அகரணம், குஸலஸ வுபஸம்பதா, ஸசித்த பரியோதபனம் பாபஞ் செய்யாதிருங்கோள் என்னும் கன்மபாகைகளையும், நன்மெய்க் கடைபிடியுங்கோள் என்னும் அர்த்த பாகை களையும். இதயத்தை சுத்தி செய்யுங்கோள் என்னும் ஞானபாகைகளையும் அடக்கியுள்ள திரிபேத வாக்கியங்களை உணர்ந்தும் அதன்மேறை ஒழுகி சாதனை புரியும் வேதியர்களாம் சமணமுநிவர்கள், தாங்கள் கண்டடைந்த திரிவேதவாக்கியங்களாம் நீதிமார்க்கங்களை சகலமக்களுக்கும் ஊட்டி அவ்வழியில் நடைபெறச்செய்வதே வேதியர்களாம் சமணமுநிவர்களின் ஒழுக்கமாகும்.

ஆதியில் மூன்று நீதிமார்க்கங்களை திரிபேதமாக சுருதியாய் போதித்த வரும், மாதம் மும்மாரி பெய்யும் ஒழுக்கங்களையூட்டி சருவசீவர்களுக்குஞ் சுகத்தையளித்தவரும் புத்தபிரானேயாகும்.

**சீவகசிந்தாமணி**

ஆதி வேதம் பயந்தோய் ந . யவர்பெய் மாரியமர்ந்தோய் நீ
நீதி நெறியை யுணர்ந்தோய தி. நிகரில் காட்சிக் கிறையோய் நீ.
நாத னென்னப்படுவோய் நீ நவை செய் பிறவிக் கடலகத்துன்
பாதகமலந் தொழவெங்கள் பசையாப்பவிழ பணிவாயே.

**சூளாமணி**

ஆதியங்கடவுளை யரு மறை பாந்தனை / போதியங்கிழவனை
பூமிசை யொதிங்கினை

போதியங்கிழவனை பூமிசை யொதிங்கிய / சேதியென் செல்வநின் திருவடி வணங்கினம்.

### நெஞ்சறி விளக்கம்

அரியதோ ரரசன் மைந்தன் அவனியிற் பிறந்து முன்னாள்
பெரியபே ரின்பஞானம் பெறுவதே பெரிதென்றெண்ணி
உரிய வேதாந்த வுண்மெய்யுரைக்கு மாசானு மான
தெரிவுறு நாகை நாதச் சீர்பதம் போற்று நெஞ்சே

### அறநெறிச்சாரம்

குற்றங்குறைத்து குறைவின்றி மூவுலகில் / நற்ற மறைத் தாங்க ருள்பரப்பு - முற்ற
உணர்ந்தானைப் பாடாத நாவல்வவல்ல / சிறந்தோன்றாள் சாராத்தலை

அறவாழியான் போதித்துள்ள அருமறையாம் வேதவாக்கியங்களை ஓதுவோர் பால்போன்ற ஒழுக்கத்தால் சாந்தம் பெருகியும் ஈகைசிறந்தும், அன்பு நிறைந்துமுள்ளவர்களாதலின் தாங்களடைந்த சுகத்தை ஏனையோரும் அடைய வேண்டுமென்னும் நன்னோக்கத்தால் வேதவாக்கியங்களை வாசித் தடங்கிய வேதியர்களாம் சமண முனிவர்கள் ஏனையோருக்கு வோதுபவற்றையே
ஒழுக்க மென்னப்படும்.

### அறநெறித்தீபம்

ஐயெனத்தான் பெருகுவதும் அறிவினால் விளங்குவதும்
உய்தவங் கேட்டுணர்வதுவும் உணர்ந்தவற்றைப் பிறருளத்திற்
செய்தவர் நன்றாக்குதலும் சிறந்தார் சொற்றேருதலும்
மெய்யன்மை யுள்ளத்தில் மேவியவன் பயனாகும்

அஞ்ஞான இருளையகற்றி மெய்ஞ்ஞான விளக்கைத் தூண்டிக் கொண்டிருப்பதே வேதவாக்கியங்களாம் நீதிவாக்கியங்களை உணர்ந்த வேதியர்களின் ஒழுக்கமாதலின் ஞானத்தாய் ஓதல் நன்றே வேதியர் ஒழுக்கமென்று கூறியுள்ளாள்.

**அறநெறிச்சாரம்**

இருளேயுலகத்தியற்கை இருளகற்றுங்
கைவிளக்கேகற்ற வறிவுடைமெய் - கைவிளக்கு
நெய்யே தன்னெஞ்சத் தருளுடைமெய் நெய்ய பயந்த
பால்போலொழுக்கத்தவரே புரிவில்லா மேலுலக மெய்து பவர்.

**யாப்பருங்கலைக்காரிகை**

ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம் ஓதலி நன்றே வொழுக்கமுடைமெய்

ஓதுதலிலும், உணர்தலிலும், அரும்பொருளுரைத்தலிலும், வல்லமெயு ற்று அவ்வழியில் தானடங்கி நடவானாயின் வேதமோதும் நீதி மார்க்கக் குடியிற் பிறந்தும் அநீதிமார்க்கமாம் அஞ்ஞானக்குடியிற் பிறந்தவனென்று கூறப்படும்.

அதாவது நல்லொழுக்கமென்னும் தன்னைப் போல் பிறரைநேசித்தல் தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் காத்தல், பொய்யகற்றி மெய்பேசுதல், பொய்ப் பொரு ளாசையை அகற்றி மெய்ப்பொருளாசையைப் பெருக்கல், உலகத்தைப் பார்க்குஞ் சிந்தையை அகற்றி தன்னைப்பார்த்தல் ஆகிய மேன்மக்கள் குடியிற் பிறந்தும், களவு, சூது, வஞ்சினம், பொருளாசையாம் சுயப்பிரயோசனங் கருதி நீதிநெறி ஒழுக்கங்களை வழூவுவனேல் தீயக்குடியிற் பிறந்த கீழ்மகனென்றே சொல்ல நேரிடும்.

**திரிக்குறள்**

ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் / பேதையிற் பேதையாரில்

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான் / பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

நீதியொழுக்கமாம் தன்னைப்பார்க்கும் பார்ப்பாரக் குடியில் பிறந்தும், தன்னை பாராமலும், தன்மெய் உணராமலும், அநீதியாம் தீயவொழுக்கங்களைப் பின்பற்றுவானாயின் அவன் நல்லொழுக்க நற்குடியிற் பிறந்தும் அவன் தன்மெய்யைப் பார்க்காது மறந்த தீயச்செயலால் தன் மெய்யறியா தம்மெய்ப் பார்க்கா தீயப் பிறப்பாங் குடியிற் பிறந்தவனென்றே கூறலாகும். ஆதலின் சமணருள்

வேதவாக்கியங்களாம் நீதி வாக்கியங்களை உணர்ந்த ஒவ்வோர் வேதியனும் அவ்வொழுக்கத்தினின்று ஓதுதலே நன்றென்பது கருத்தாம்.

**திரிக்குறள்**

ஒ ஓதல் வேண்டு மொழி மாழ்குந் செய்வினை / யா அது மென்னு மவர்.

**பாரதம்**

நீதியும் நெறியும் வாய்மெ முலகில் நிறுத்தினோன் வேதியன் அன்றி

வேதியனேனும் இழுக்குறிலவனை விளம்பும் சூத்திரனென வேத,

மாதவர் புகன்றா ராதலாலுடல் மாய்ந்தபின் பாவதோர் பொருளோ

தோதிலாவிந்தப் பிறவியில் வேதக் குரவனி யல்லையோ குறியாய்.

## 12. ஔவியம் பேசுத லாக்கத் திற்கழிவு

ஔவியம் பேசுதல் - ஒருவனைக் கெடுக்கத்தக்க வாலோசினையைப் பேசுதல், ஆக்கத்திற்கு - தன் தேகத்திற்கே, அழிவு - கெடுதியை யுண்டாக்கு மென்பதாம்.

தங்கள் வாக்கினாலும், செயலினாலும் நற்கிரித்தியஞ்செய்வோர் சுகாலனை அடைவதுபோல் தங்கள் வாக்கினாலுஞ் செயலினாலும் துற்கிரித்தியங்களைப் பேசினும், செய்யினும் துக்கத்தையடைவார்கள் என்பது அனுபவமாதலின்

ஞானத்தாய் ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவென்று கூறியுள்ளாள்.

மும்மெய்யிற் செய்த தீவினையின் பயனை இம்மெய்யில் அனுபவிக்கும் சுகத்தையும், அசுகத்தையும் உய்த்துணர்வோமாயின் மறுமெய்யில் அதிக அக்கத்திற்கு ஆளாகாது சுகம் பெறுஞ்செயலை அடைவான் வேண்டி இம் மெய்யில் அவ்வியம் பேசலாகாதென்று கூறியுள்ளாள்.

**அறநெறிச்சாரம்**

முற்பிறப்பிற நான் செய்த புண்ணியத்தி நல்லதோர்
இற்புறத்தின் புறா நின்றவ - ரிப்பிறப்போ
பின்னுங் கருதுமே வேதங்கடிந்தறத்தை
முன்னு முயன்றொழுகற் பாற்று.

## 13. அஃமுங்காசுஞ் சிக்கென் றகற்று

அஃமும் - தேகத்தா லுண்டாகுங் குற்றங்களையும், காசும் - மனத்திலெழூஉங் களங்கங்களையும், சிக்கென - பாசபந்தக் கயிற்றின் வலையென், அகற்று - கண்டு நீக்கி விடுமென்பதாம்

காஸுயென்னும் பாலிமொழிக்கு களிம்பு ஆசாபாசமென்னும் பொருளைக் குறித்திருக்கின்றார்கள்

**அருங்கலைச் செப்பு**

ஆசாபாசத்தோ டஃக விருளகற்றி / பேசாதான் பெற்ற பலன்.

## 14. கற்பெனப்படுவது சொற்றிரும்பாமெய்

கற்பு யெனப்படுவது - பெண்களுக்குக் கற்பென்று கூறப்படுவது, சொல் - கணவன் வாக்குக்கும், மாமனார் மாமியார் வாக்குக்கும், திரும்பாமெய் - கோணாமல் நடக்குந் தேகத்தைப் பெற்றவள் என்பதாம்.

அதாவது இல்லாளென்னும் மனைவாழ்க்கைக்குடையவள் கணவனையே தெய்வமாக பாவித்து அவனது வாக்கைக் கடவாமலும், மாமன் மாமியார் வாக்கை மீறாமலும் நடக்குந் தேகத்தை உடையாளை கற்புடைய மகளீரென்று கூறப்படும்.

**அறநெறிச்சாரம்**

வழிபாடுடையாளாய் வாழ்க்கை நடா அய் / முனியாது சொல்லிற்றுச் செய்தாங் - கெதிருரையா

தேத்திபணியுமே லில்லாளையாண் மகன் / போற்றிப் புனையும் பரிந்து.

**பாரதம்**

தன்கணவனைக்கடவு ளென்று பலதன்மெய் / மென்முறை திருத்தி வழிபாடுக நிரைப்பேன்

இன்பொடு மவர்க்கினிய நாடியவை தேடி / யன்பொடு சமைத்திடுவ னல்குவனடுத்தே.

புருடனுண்டபின் றானுணல் பூவை மாற் / குரியவனவனாழ் துயிலுற்றபின்

அருசினிற்றுயின் றாங்கவன் முன்விழித் / தருடலைக்கொளல் கற்புடையாரரோ.

## 15. காவரானே பாவையர்க்கழகு

காவரானே - பெண் விவேகியாயினும் அவளை விவேகமுடன் கார்க்குங் காவலாளன் இருப்பானாயின், பாவையர்க்கு - பதுமெயாம் அழகு நிறைந்த பெண்களுக்கு, அழகு - சிறப்பாகும் என்பதாம்.

நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு இன்னான்கும் அமைந்த பெண்ணுருக் கொண்டவளாயினும் அவளுக்கோர் நற்காவலனில்லாவிடின் பெண்மெய்க்கு எவ்விதத்துங் கேடுண்டாமென்று உணர்ந்த ஞானத்தாய் காவல்தானே பாவையர்க் கழகென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## 16. கிட்டாதாயின் வெட்டென மற

கிட்டாதாயின் - நீவிர் இச்சிக்கும் பொருள் கிடைக்காவிடின், வெட்டென - துண்டிக்கும் பொருளைப் போல் அவ்விச்சையை , - மற அகற்றிவிடுமென்பதாம்.

மக்கள் நாடும் சிற்றின்ப பொருள் கிட்டா தாயினுந்துக்கம் ஓர்கால் கிட்டுமாயின் அப்பொருளைக் கார்ப்பாற்றுதலினுந் துக்கம், அப்பொருள் கை தவரினுந்துக்கம். ஆதலின் ஒருபொருள் மீது மிக்க அவாப்பற்றி நிற்கலாகாதென்பது கருத்து.

## 17. கீழோராயினுந் தாழ வுரை

கீழோராயினும் - உம்மெ யடுத்து யாதாமொன்றைக் கேட்போர் யேழைகளாயினும், விவேகமற்றவர்களாயினும், தாழவுரை- மிருதுவாக்கியத்தா லவர்களுக்கு பதிலுரைக்கக்கடவா யென்பதாம்.

விவேகமிகுத்த மேலோர்களிடம் அவிவேகிகளாம் கீழோர் ஒன்றை நாடி சென்றக்கால் அவர்களை அன்புட னழைத்து வேண்டியவற்றை விசாரித்து உபசரித் தனுப்புவார்களாயின் அதன் சார்பால் அவிவேகிகளாகும் கீழோர் களுக்கும் ஓர் நற்கிரித்தியம் உதயமாமென்பது கருத்தாம்.

## 18. குற்றம் பார்க்கின் சுற்றமில்லை

குற்றம் பார்க்கின் - குடும்பமென்று கூடியவிடத்து தொடுத்த மொழி, எடுத்தச் செயல் யாவற்றிற்குங் குற்றங்கூறித் திரிவதாயின், சுற்றமில்லை - குடும்பத்தோரென்னும் பெயரில்லாமற்போம் என்பதாம்.

ஓர் குடும்ப விவகாரத்துள் சொல்லுக்குச் சொல் குற்றம் பிடித்தலும், செய்கைக்கெல்லாங் குற்றம் பிடித்தலுமாகிய கொறூரச் சிந்தையை விருத்தி செய்வதால் குடும்பமென்னும் பெயரற்றுப்போவதுடன் வாழ்க்கையுங் குன்றுமென்று உணர்ந்த ஞானத்தாய் குடும்பமென்னும் வாழ்க்கையில் எடுத்த செயலுக்கெல்லாங் குற்றம் பார்ப்பார்களாயின் சுற்றத்தோரென்னும் உரன் முறையோர் இல்லாமற் போய்விடுவார்களென்று கூறியுள்ளாள்.

## 19. கூரம் பாயினும் வீரியம் பேசேல்

கூரம்பாயினும் - உம்மிடத்துள்ள அம்பு மிக்கக் கூருள்ளதாயினும், வீரியம் - மிக்க வல்லமெயாகப், பேசேல் - பதங் கூறாதே யென்பதாம்.

அதாவது அம்பு கூரியதாயினும் வின்னாணி சோர்வுற்றுப்போம். வின்னாணி தளராநிற்பினும் மெய் சோர்வுற்றுப்போம். மெய்சோர்வுராது வல்லமெயுற்றிருப்பினும் காலக்கேடயரும் ஆதலின் காலபலம், தன்பலம், வில்லின்பலம், நாணின் பலம், எதிரியின் பலம் யாவையும் நோக்காது தனது அம்பு கூரியதாயினும் அம்பை நம்பி வீரியம் பேசலாகாதென்பது கருத்து.

## 20. கெடுவது செய்யின் விடுவதுகருமம்

கெடுவது செய்யின் - செய்யுந் தொழிலில் கேடுண்டாமாயின், செயலை - அவ்வினையை, விடுவது - அவற்றுடன் விட்டுவிடுவதே, கருமம் - அழகாகும் என்பதாம்.

எடுத்துச் செய்யும் கருமத்தில் கேடுண்டாமென்று உணர்வாயின் அக்கருமத்தைக் கருவிகளுடன் விட்டுவிட வேண்டுமென்பது கருத்தாம்.

தொடுத்த கருமத்தால் கேடுண்டென்று உணர்ந்தும் அதே தே கருமத்தை முடிக்க முயல்வானாயின் அவன் கெடுவதுடன் அவன்

சந்ததியாரும் கெட்டு அவனை அடுத்த கருமிகளும் கருவிகளும் பாழடைந்து போமென்றுணர்ந்த ஞானத்தாய் கெடுதியுண்டாகுந் செயலை விடுவதே கருமமென்று கூறியுள்ளாள்.

## 21. கேட்டிலுறுதி கூட்டுங்குறைவை

கேட்டில் - தன சம்பத்தேனும், தானிய சம்பத்தேனுங் குறைந்து கெடினும், உறுதி - பொருள் போச்சுதே யென்றுள்ளங் கலங்காது திறத்தில் நிற்பானாயின், குறைவை - குறைந்த பொருள் யாவும், கூட்டும் - சேருமென்பதாம்.

மக்கள் சேர்த்துவரும் தானியம் குறைந்ததென்றும், தனங் குறைந்த தென்றும் கலங்காது முன்னவற்றை சேகரித்த முயற்சியிலிருப்பானாயின் குறைந்த வஸ்துக்கள் யாவும் நிறைந்து போமென்பது கருத்தாம்.

## 22. கைப்பொருடன்னின் மெய்ப்பொருட்கல்வி

கைப் பொருள் - ஒவ்வொருவர்க் கைகளால் ஆளும் தனப் பொருள், தானியப் பொருள், தன்னினும் - அதனினும், மெய்ப்பொருள் - அழியாப்பொருள் யாதென்பீரேல், கல்வி - அறிவை விருத்திபெறச் செய்யுங் கலைநூற்களே என்பதாம்.

அதாவது அவனவன் உள்ளத்திற் பதிந்துள்ள மண்பொருளினழகும், பொன்பொருளினழகும் பெண்பொருளினழகுங் தோன்றி தோன்றி கெடுவது சுவாபமாகும்.

கல்வியென்னும் மெய்ப்பொருளோ, கற்றவளவினின்று கலை நூல் உசாவுவனேல், அதன் பலனும், அதனழகும் அதனொளியும் இவனது உருவங் காணாது அழிந்த விடத்தும் பிரகாசிக்கு மென்பதாம்.

**மூவர் தமிழ் - நாலடி நானூறு**

குஞ்சியழகுங் கொடுத்தானைக் கோட்டழகும் / மஞ்சளழகும் அழகல்ல - நெஞ்சத்து

நல்லம்யா மென்னு நடுவுநிலையாமெய் / கல்வி யழகே யழகு.

**அறநெறிச்சாரம்**

எப்பிறப்பாயினு மேமாப்பொருவற்கு / மக்கட் பிறப்பிற் பிறிதில் - அப்பிறப்பில்

கற்றலுங் கற்றவை கேட்டலும் கேட்டதன் கண் / நிற்றலுங் கூடப் பெரின்

## 23. கொற்றவனறித லுற்றுடலுதவி

கொற்றவன் - வல்லவன், அறிதல் - தன்னையறிந்தடங்கற்கு, உதவி ஆதாரமானது, உடல் - தேகமேயாம்.

அதாவது வல்லமெயுற்றோனெனத் தோன்றியும், தன்னை ஆராய்ந் தடங்காது வல்லபத்தை விழலுக்கிரைத்த நீர்போல் விட்டுவிடுவானாயின் தேகம் தளர்ந்து பாலுண் கடைவாய் படிந்து நோக்குங் குறைந்துவருங்கால் பற்பல பிணிகளாலும், துன்புற்று

துக்கத்தைப் பெருக்கிக்கொள்ளுவான். ஆதலின் தேகசக்தி மிக்கவன் ஒவ்வொருவனும் தன்னையறியுஞ் சாதனத்து உழைப்பனேல் தேகமெடுத்த பலனை அடைவானென்பது கருத்து.

**அறநெறிச்சாரம்**

நீக்கரு நோய் மூப்பு தலைப்பிறிவு நல்குரவு / சாக்காடென்றைந்து
களிருழக்கப் - போக்கரிய
துன்பத்துட்டுன்ப முழப்பர் துறந்தெய்தும் / இன்பத் தியல்பறியா
தார்.

**மூவர்தமிழ் - நாலடி நானூறு**

நிலையாமெய் நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணி
தலையாயார் தங்கருமஞ் செய்யார் - தொலைவில்லா
சித்து முடலுஞ் செய்ய நிலையென்னும்
பித்தரிற் பேதையாரில்.

இச்செய்யுளில் பாடபேதங்கள்:

1831 வருஷம் ம-அ-அ-ஸ்ரீ தாண்டவராய முதலியாரவர்களால் அச்சிட்டுள்ள நாலடி நானூறில், "சத்தமும் சோதிடமுமென்றாங்கிவை பிதற்றும்" என்றும் ம - அ-அ-ஸ்ரீ
வேலூர் மார்க்கலிங்க பண்டாரமவர்கள் ஏட்டுப்பிரிதியிலும் ,ம - அ-அ-ஸ்ரீ மயிலை குப்புலிங்கனாயனாரவர்கள் ஏட்டுப்பிரிதியிலும்,
"சித்துமுடலுஞ் செய்யநிலையென்னும்"

என்னும் பாடபேதங்களைக் கண்ணுற்றபோது இருவரேட்டுப் பிரிதிகளிலுள்ளச் செய்யுள் சிதையினும் பொருள் பொருந்தியுள்ளது கண்டு உடற்கூற்றையே வெளியிட்டுள்ளோம்.

சத்தமுஞ் சோதிடமுமென்னு மொழி முற்சீருக்குப் பொருந்தாதாதலினும், சோதியின் இடங்கண்டு கூறுவோரை பித்தரென்று கூறியுள்ளதும் பிழையேயாம்.

எங்ஙனமென்பீரேல் தற்காலமுள்ள பிரிட்டிஷ் ஆட்சியில் (அஸ்ட் ) என்னும் வானசாஸ்திரிகள் சோதிகளாகும் நட்சத்திரங்களுள்ள இடங்கண்டு இன்னசோதி, இனிய இடம் போமாயின் காற்றடிக்கும் மழை பெய்யுமென்று கூறுதலும், சாக்கையர்கள் குணிப்பில் இன்னசோதி இன்னின்னவிடங்களில் மாறுபடுமாயின் சூரிய கிருஹணம், சந்திரகிருஹணம் உண்டாமென்னுங் குறிப்பும், அனுபவத்திலும், காட்சியிலுமிருக்குங்கால் சோதியின் இடமறிந்து பலாபலன் கூறுவோரை பித்தரென்றும், பேதையரென்றுங் கூறியுள்ளது பிழையென்று துணிந்து கூறியுள்ளோம்.

## 24. கோட்செவிக் குறளை காற்றுட நெருப்பு

கோட்செவி - எக்காலுங் குற்றமாகிய சொற்களையே கேட்க விரும்பும் சுரோத்திரமுடையவன், குறளை - விருப்பமானது, காற்றுட நெருப்பு – மனைகள் தீப்பட்டெறியுங்கால் காற்றுஞ் சேர்ந்துக் கொள்ளுமாயின் உள்ள மனைகளும் எரிந்து பாழாவது போல் தான் கெடுவதுடன் தன் சுற்றமுங் கெடுமென்பதாம்.

குடும்பத்தோர் குற்றங்களையாயினும், நேயர்கள் குற்றங்களையாயினும் தங்கள் செவியாரக் கேட்க விருப்பமுடையவன் மனமானது எப்போதும் கோபமென்னுந் தணலில் எரிந்திருக்குங்கால் மேலுமேலுங் கோட்சொல் நுழையில் காற்றுடன் சேர்ந்த நெருப்பைப் போல் உள்ள கோபாக்கினி மீறி தன்னையுந் தன் குடும்பத்தையுந், தன் நேயரையும் அழிக்குமென்று உணர்ந்த ஞானத்தாய் குற்றத்தைக் கேழ்க்கும் விருப்பமிகுத்தோன் காற்றுடன் சேர்ந்த நெருப்புக்கொப்பாய் தன்னைத்தானே தகித்துக்கொள்ளுவானென்பது கருத்து.

**அறநெறிச்சாரம்**

தன்னிற் பிறிதில்லை தெய்வநெறி நிற்பில் / ஒன்றானுந்தானெறி நில்லானேல் - தன்னை

இறைவனாய்ச் செய்வானுந் தானேதான்றன்னை / சிறைவனாய்ச் செய்வானுந்தான்.

## 25. கௌவை சொல்லி னெவ்வருக்கும் பகை

கௌவைசொல் - எதிரிக்கு மற்றொருவன் கூறிய வார்த்தையைச் சொல்லுதலும், மற்றவன் கூறிய வார்த்தையை எதிரிக்குச் சொல்லுதலும், எவருக்கும்பகை - ஒருவருக்கொருவரை விரோதிக்கச் செய்து பாழ்படுத்து வதுடன் அத்தகையக் குட்டுணி செயலால் சகலருக்கும் விரோதியாவான் என்பதாம்.

உடும்புக்குள்ள இரட்டை நாவைப்போல் இருவருக்கும் நேயனைப் போலிருந்து கௌவைப்போல் அவர் சொல்லை இவருக்கும், இவர் சொல்லை அவருக்குஞ் சொல்லி கலகத்தை உண்டு செய்வோன் இருவருக்கும் விரோதியா வதுடன் இவன் இருநாக்கன், கௌவை சொல்லன் என்றுணர்ந்தோர் யாவரும் இவனைக் கண்டவுடன் பயந்து யாதொரு சொற்களையும் பேசாமல் துரத்தி விடுவார்கள். ஆதலின் ஒருவர் சொல்லை மற்றவனுக்குச் சொல்லுங் கௌவை சொல் எக்காலும் பேசலாகாதென்பது கருத்து.

**26. சந்ததிக்கழகு வந்தி செய்யாமெய்**

சந்ததி - புத்திர பாக்கிய விருத்திக்கு, அழகு - சிறப்பு யாதெனில், மெய் தனது தேகத்தை, வந்தி செய்யா - அறுவகை கற்பதோஷத்திற் குள்ளாகாது கார்க்கவேண்டிய தென்பதாம்.

அதாவது இஸ்திரீகளை மலட க்கிப் புத்திர பாக்கியத்தைக் கெடுப்பது அறுவகைக் கருப்பை தோஷங்களேயாதலின் சந்ததியின் அழகைக்கோறும் பெண்கள் யாவரும் கருப்பை தோஷமுண்டாகாது காக்கவேண்டுமென்பது கருத்து.

**27. சான்றோரென்கையின்றோட்கழகு**

சான்றோர் - நற்குணங்கள் யாவும் நிறைந்த ருபி, என்கை - என்று கூறப்படுவானாயின், ஈன்றாள் - பெற்றத்தாயார்க்கு அழகு - சிறப்பாகும் என்பதாம்.

தானீன்ற புத்திரன் நல்வாய்மெய், நல்லூர்க்கம், நற்கடைபிடி என்னும் சாந்த ரூபியாய் சகலராலுங் கொண்டாடப்படுகின்றா னென்று பல்லோரும் புகழக் கேழ்ப்பதே பெற்றவளுக்குப் பேரழகென்று கூறியுள்ளாள்.

### திரிக்குறள்

சன்றப் பொழுதிற் பெரிதுவக்குந்தன் மகனை / சான்றோனெனக் கோட்டத்தாய்.

### அறநெறிச்சாரம்

எள்ளிப்பிறருரைக்கு மின்னாச் சொல் நன்னெஞ்சில்
கொள்ளினவத்தாற்போல் கொடி தென் மெள்ள
அறிவென்னு நீரா லவித்தொழுக லாற்றின்
பிறிதெனினும் வேண்டாந் தலம்.

### 28. சிவத்தைப்பேணிற் றவத்திற்கழகு

சிவத்தை - உனக்குள்ள அன்பை, பேணில் - பெருக்க முயலில், தனத்திற்கு - சுகசாதனத்திற்கு, அழகு - சிறப்பாகும் என்பதாம்.

### திருமூலர் - திருமந்திரம்

அன்பும் சிவமும் இரண்டென்ப ரறிவிலார் / அன்பே சிவமாவதி யாருமறிகிலார்
அன்பே சிவமாவதி யாரு மறிந்தபின் / அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே.

கோபமென்னுங் குன்றின் மீதேறி யவித்து அன்பே ஒருருகொண்ட சாந்தரூபியாம் புத்தபிரானை குணகாரணத்தால் சிவனென்றும், சதா சிவனென்றுங் கொண்டாடிவந்தார்கள்.

**அறநெறித்தீபம்**

அவன் கொ லிவன் கொலென்றையப்படாதே
சிவன் கண்ணே செய்ம்மின்கண்சிந்தை - சிவன்றானும்
நின்றுக்கால்சீக்கு நிழறிகழும்பிண்டிக்கீழ்
வென்றிச்சீர் முக்குடையான் வேந்து.

**சூளாமணி**

மணிமலர்ந் துமிழொளி வனப்புஞ் சந்தனத் / துணிமலர்ந்துமிழ் தருந்தண்மெய் தோற்றமும்
நணிமலர் நாற்ற மென்னவன்ன தா / லணிவரு சிவகதி யாவதின்பமே.

**மேருமந்திரபுராணம்**

அவதியா னரகமா றாவதாய்ந்திடா / வுவதியால் வரும் பயன் ஒன்றுமின்றியே
சிவகதி யவர்க்குப் போலிவர்க்கு நல்வினை / யவதியி னுதையத்தா வாகு மின்பமே.

## 29. சீரைத்தேடி னேரைத் தேடு

சீரை - சுக வாழ்க்கையை, தேடில் - ஆராய்வதில், ஏரை - உழுதுண்ணுஞ் செயலை, தேடு - கண்டறிந்துக்கொள் என்பதாம்.

அதாவது உலகத்தில் சுகவாழ்க்கையைத் தேடுபவன் பூமியைத் திருத்தியுண்ணும் வேளாளத் தொழிலை நாடுவானாயின் சகலருக்கும் உபகாரியாக விளங்குவதுமன்றி தானும் சுகவாழ்க்கையைப் பெறுவான்.

**திரிக்குறள்**

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந் / தொழுதுண்டு பின்செல் பவர்.

### 30. சுற்றத்திற்கழகு சூழவிருத்தல்

சுற்றத்திற்கு - உறவின்முறையா ரென்போருக்கு அழகு - சிறப்பு யாதெனில், சூழவிருத்தல் - ஒருவருக்கொருவர் உதவி புரிந்து சேர்ந்து வாழ்தலேயாம்.

என் சகோதிரன், என் மாமன் , என் மைத்துனியென்று சொல்லுங் குடும்பிகளுக்கு சிறப்பும், வாழ்க்கையும் சுகமும் யாதெனில், ஒருவருக்கொருவர் நெருங்கி வாழ்வதுடன் ஒருவருக்கொருவர் உபகாரிகளாக விளங்குவதே. என் குடும்பத்தோர், என் சுற்றத்தோர் என்பதற்கு அழகாகும் சேர்ந்த வாழ்க்கைப் பெற்றும் உபகாரமற்றிருப்போருக்கு வாழ்க்கைக்கு அழகாகாவாம்.

**திரிக்குறள்**

சுற்றத்தாற் சுற்றப்படவொழுகல் செல்வந்தான் / பெற்றத்தார் பெற்ற பயன்.

### 31. சூதும் வாதும் வேதனை செய்யும்

சூதும் - ஒருவரை வஞ்சினத்தாலும், வாதும் - ஒருவர் வாக்குக்கு யெதிர்வாக் குரைத்தலாலும், வேதனை - துன்பத்தை, செய்யும் - அனுபவிக்க நேரிடு மென்பதாம்.

சூதாகும் வஞ்சகக் கிரியைகளையும், வாதாகுங் குதர்க்க வாதங்களையுஞ் செய்துக்கொண்டே வருவதினால், விவேகமிகுத்தோர் இவனை புறம்பே அகற்றுவதுடன் அதிகாரிகளால் வேதனையும் அடைவானென்பதுங் கருத்து.

### 32. செய்தவ மறந்தாற் கைதவ மாளும்

செய் - தான் செய்துவரும், தவம் - நல்லொழுக்கத்தை, மறந்தால் - செய்யானாயின், கைதவம் - அநுபவத்திற்கை கண்ட சுகங்களானது, மாளும் - கெட்டுப்போமென்பதாம்.

தான் விடாமுயற்சியாய் சாதித்துவந்த நற்காட்சி, நல்வாய்மெயாகுந் தபோபலங்குறையின் துற்காட்சி மிகுத்து முன் செய்த தவமும் மாய்ந்து போமென்பது கருத்து.

### 33. சேமம்புகினுஞ் சாமத்துறங்கு

சேமம் - சுகசீர் , புகினும் - அடைந்திருப்பினும், சாமத்து - ஐந்து நாழிகைவரையினும், உறங்கு - நித்திரை செய் யென்பதாம்.

அதாவது யாதாமோர் தொழிலுமின்றி சுகசீரடைந்திருப்பினும், சோம்பலால் அதிக ஒறக்கத்திற்கு இடந்தரல் ஆகாதென்பது கருத்து.

### 34. சையொத்திருந்தா லையமிட்டுண்

சையத்தோர் - தன்னையறியும் சாதனைநிலையோர், இருந்தால் - தோற்றுவாராயின், ஐயம் - அவரொடுக்கத்தை யறிந்து, இட்டுண் - முன்பு அவருக் கன்ன மளித்து நீ யுண்பா யென்பதாம்.

பாலியில், சைவர், தன்னை ஆராய்வோர், சைனர், சினமற்றோர், தன்னை யறிந்தோரென்னப்படும்.

### அகப்பேய்சித்தர்

சைவமாருக்கடி யகப்பே தன்னையறிந்தவர்க்கே
சைவமானவிட மகப்பே தாணாக நின்றதடி

### 35. சொக்கரென்பவ ரத்தம் பெறுவர்

சொக்கர் - சகல பாசபந்தங்களையுங் களைந்த சுயம்பு, என்பவர் - என்று சொல்லத் தகுந்தவர், அத்தம் - நிருவாணமென்னு முத்தி நிலையை, பெறுவர் - அடைவர் யென்பதாம்.

அதாவது சருவ குற்றங்களையும் அகற்றியவர், களங்கமற்ற நெஞ்சினர், மனமாசு ஒழிந்தவர், சுயம்பு, சொக்கர் என்று சொல்லும்படியான நிலையை வாய்த்தவர்கள் அத்தமாம் வீடுபெற்று பிறவி துக்கத்தை ஒழித்தவர்கள் என்பது கருத்து.

சுயம்புநிலையால் புத்தரை சொக்கநாத ரென்றும், பிறவியற்ற நிலையால் புத்தரை அத்தனென்றும் வழங்கிவருகின்றார்கள். அதுகொண்டே நமது ஞானத்தாய் அகக் களிம்பற்று சொக்கமானவர் அத்தம் பெறுவரென்று கூறியுள்ளாள். சொக்கமென்னு மொழி சுவர்க்க மென்னும் மொழியினின்றும், அத்தமென்னும் மொழி முடிவாம் வீடுபேற்றினின்றும் தோற்றியவைகளாம்.

## 36. சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்

சோம்பர் - யாதொரு தொழிலுமற்ற சோம்பேரி, என்பவர் - என்றழைக்கப்பெற்றவர்கள், தேம்பி - துக்க மதிகரித்து, திரிவர் - அலைந்து கெடுவாரென்பதாம்.

அதாவது மனித உருவெனத் தோன்றி ஓர் தொழிலின்றியும், யாதாமோர் முயற்சியின்றியும் தேகத்தை அசையாது சோம்பலில் இருத்தியுள்ளவன் உண்ண உணவிற்கும், உடுக்க உடைக்குமின்றி வீதிகடோருந் திரிந்து பசியின் கொடூரத்தாலும், துக்கவிருத்தியாலும் நலிந்து கெடுவான். ஆதலின் ஒவ்வோர் மனிதனும் சோம்பலின்றி தேகத்தை வருத்தி சம்பாதித்துண்பதே மனித தோற்றங்களுக்கு அழகாதலின் ஒவ்வோர் மனிதனும் தனக்குள்ள முயற்சியையும், உழைப்பையும் நோக்காது சோம்பித்திரியலாகாதென்பது கருத்து.

## 37. தந்தை சொன்மிக்க மந்திரமில்லை

தந்தை - தன்னையீன்ற தகப்பனும், தனக்கு நீதி வழிகாட்டியுள்ள சற்குருவாகிய தகப்பனும், சொன் - சொல்லிய மொழிகளுக்கும்,

சுருதி வாக்கியங்களுக்கும், மிக்க - மேலான, மந்திரம் - ஆலோசினை, இல்லை - வேறில்லை யென்பதாம்.

அதாவது சற்குருவின் திரிபேதவாக்கியங்களாம் நீதிநெறி ஒழுக்கங்களைத் தழுவிவந்த தனது தந்தையால் சொல்லக்கொடுத்துவரும் புத்திக்கும், அலோசினைக்கும் மேற்பட்ட மந்திரங்கள் யாது மில்லையென்பது கருத்து.

மற்றப்படி கள் குடியனாகுந் தந்தையும், களவாடுந் தந்தையும், அப்பா கொஞ்சங்கள்ளுக்குடி, அய்யா அவன் பொருளை அபகரித்துவாவென்று சொல்லுஞ் சொற்களை மந்திரங்களாகும் ஆலோசினைகளென்று ஏற்கப் போமோ, ஒருக்காலும் ஏற்கலாகாவென்பதாம். ஆதலின் ஞானத்தாய் நீதிநெறி ஒழுக்கங்களை அனுசரித் தோது முதுமொழிகளையே மந்திரங்களென்று கூறியுள்ளாள்.

## 38. தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை

தாய் - தன்னையீன்ற தாயாரும், வாசகநெறியோதியுள்ள ஞானத்தாயாரும், சொல் - சொல்லியுள்ளவற்றை, துறந்தால் - அவற்றிற்கு மாறுகொள் நடந்தால், வாசகமில்லை - ஞானத்தால் ஓதியுள்ள திரிவாசகமுமில்லை, அவற்றை அநுசரித்துவந்த ஈன்ற தாயாரின் ஒழுக்கமுமில்லை என்பது கருத்தாம்.

பெரும்பாலும் நமது ஞானத்தாய் ஓதியுள்ள திரிவாசகங்களை எளிதிலும், வாசகநடையிலு முணர்ந்து அம்மார்க்கத்தில் நடந்துவரும் தன்னை ஈன்றத் தயானவள் ஓதுஞ் சொற்களைக் கடந்து நடப்பதாயின் ஞானத்தாய் ஓதியுள்ள திரிவாசகத்தையே மீறி நடந்ததற் கொக்கும். ஆதலின் நீதிமார்க்கத்தில் நடக்கும் தன்னை ஈன்ற தாயின் சொற்களை மீறலாகாதென்று கூறியுள்ளாள். கொலையிலும், களவிலும், பொய்யிலும், விபச்சாரத்திலும், குடியிலு மிகுத்தவளைக் கூறாது திரிவாசகங்களை ஏற்று நடந்ததாயின் மொழிகளையே இவ்விடம் வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## 39. திரைகடலோடியுந் திரவியந்தேடு

திரை - அலை பெருக்கில், கடலோடியுந் - கடன் மடை திரண்டோடும் வோடத்திற் சென்றும், திரவியஞ் - செல்வத்தை, தேடு - சம்பாதிக்க முயற்சிச்செய்யு மென்பதாம்.

யாதாமொரு களங்கமும் பயமுமின்றி கடல் மீது கப்பல் யாத்திரைச் செய்து புறதேசங்களுக்குச் சென்று தனது நீதி நெறியாம் ஒழுக்கங்களினால் அத்தேசத்தோருக்கு மேலானவனென விளக்கி தனது முயற்சியினாலும், தேக்கஷ்டத்தினாலும், வித்தியா விருத்திகளினாலும் திரவியத்தை சேகரித்து தான் சுகிப்பதுடன் தனது குடும்பத்தோரையும், தன்னையடுத்துள்ள ஏழைகளையும் ஆதரிக்கவேண்டுமென்னுங் கருத்தால் திரவியந்தேடும் உபாயத்தைக் கூறியுள்ளாள்,

## 40. தீராக்கோபம் போராய் முடியும்

தீராக்கோபம் - தன்னாலாற்ற முடியாக் கோபம், போராய் - பெருஞ்சண்டை கேதுவாய், முடியுந் - தீருமென்பதாம்.

தனக்குள் எழுங் கோபாக்கினியை சாந்தமென்னும் நீரினால் அவிக்காமற் போவானாயின் தன துள்ளுருப்புக்கள் யாவுங் கொதிப் பேறி நடுக்குற்று நாசமடைவதுடன் எதிரிகளால் தனது தேகமும் நையப் புடைக்கப்பட்டு நசிந்து போவானென்பதாம்.

### திரிக்குறள்

தன்னைத்தான் காக்கிற சினங்காக்காவாக்கால் தன்னையே கொல்லுஞ் சினம்.

## 41. துடியாப்பெண்டீர்மடி நெருப்பு

துடியா - தனது கணவனுக்கு ஆபத்து நேரிட்ட காலத்து பதரா, பெண்டீர் - இஸ்திரீயானவளிருப்பளேல், நெருப்பு - அக்கினியைக் கட்டியுள்ளானென்பதற் கொக்கும் என்பதாம்.

புருடனுக் கோர் ஆபத்து நேரிட்டதென்று கேழ்விப்பட்ட மனைவியின் தேகந் துடியாமலும், மனம் பதராமலும் இருக்குமாயின் அவளது எண்ணம் பரபுருடனை நாடி நிற்பதுமன்றி தனது கணவன் சீக்கிரந் துலைய வேண்டும் என்னும் நோக்கமுடையவளேயாவள். அத்தகையத் தீயகுணமுள்ளாளைச் சேர்ந்து வாழ்தல் தனது மடியில் நெருப்பைக் கட்டிவைத்திருப்பதற்கு ஒக்கும். தன்கணவன் மீது

வெறுப்பும், அன்னிய புருடன்மீது விருப்புமுள்ள பெண்டீர் வாழ்க்கைக்குத் துணைநலமாகாதது கண்டுள்ள ஞானத்தாய் துடியா பெண்டர் மடியில் நெருப்பென்று கூறியுள்ளாள்.

### 42. தூற்றும் பெண்டீர் கூற்றெனத் தகும்

தூற்றும் - மனை விவகாரங்களை வெளியில் தூற்றித்திரியும், பெண்டீர் - பெண்களை, கூற்றென - நசிக்குங்காலனெனத் தகும் - சொல்லுதற் கேதுவுண்டா மென்பதாம்.

அதாவது தனது மாமன் மாமியார் வார்த்தைகளையும், மாதுலன் மாதுலி வார்த்தைகளையும், கணவன் வார்த்தைகளையுந் தான் செல்லுமிடங்களுக் கெல்லாம் சொல்லித் திரிபவள் தனது குடும்பத்தை அழிக்குங் கூற்றனுக்கு ஒப்பாவாளென்பது கருத்து.

தன்வீட்டின் நெருப்பாங் கலக வார்த்தைகளை வெளியிற் கொண்டு போகாதவளும், வெளி நெருப்பாங் கலகவார்த்தைகளை உள்ளுக்குக் கொண்டு வராதவளுமே
மே கற்பக் கினியவளென்பது கலை நாற்களின் துணிபாதலின் மனை வாழ்க்கை மொழிகளை பதரைப்போல் தூற்றித் திரிபவள் அக்குடிக்கே காலனாவாளென்று உணர்ந்த ஞானத்தாய் தூற்றும் பெண்டீர் கெடுதியை விளக்கியுள்ளாள்.

### 43. தெய்வஞ்சீறிற் கைதவமாளும்

தெய்வம் - தெய்வகமாம் உள்ளதை சீறில் - சீற்றமுறில், கைதவம் - உள்ளங்கை நெல்லிக்கனி போல் கண்டுள்ள வொழுக்க சுகமானது, மாளும் - மாய்ந்து போ மென்பதாம்.

அதாவது, ஒவ்வோர் மக்களுக்குமுள்ள காமாக்கினி, கோபாக்கினி, பசியாக்கினியாந் தேய்வினிலை மீறி சீறி நிற்குமாயின் செய்தவமும் அழிந்து தேகமாளும். அங்ஙனமின்றி திரிபுராந்த தணலாய்த் தேய்வென்னும் நிலையுள்ள காமாக்கினி, பசியாக்கினி, கோபாக்கினி என்னுங்குன்றின் மீதேறி சாந்தமென்னும் நீராலவித்து தண்மெயாம் குளிர்ந்த தேகியாய் விளங்க வேண்டுமென்பதே சற்குருவின் போதமாதலின் அவற்றைப் பின்பற்றியுள்ள ஞானத்தாய் அகத்துள்ளனவனலை அதிகரிக்கச் செய்யாதேயுங்களென்று கூறியுள்ளாள்.

தேய்வனலாகுந் திரிபுராந்தக ஸ்வயம்பிரகாச சாந்தரூபியானோர் தேய்வன லகன்ற காரணங்கொண்டு தேவர் தேவர்களென்னும் பெயரைப் பெற்றார்கள்.

**விவேகசிந்தாமணி - சாந்த பலன்**

ஆசாரஞ் செய்வாராகி லறிவொடு புகழுமுண்டாம்

ஆசார னன்மெயானாலவனியிற் றேவராவர்.

**44. தேடாதழிக்கிற் பாடாமுடியும்**

தேடாது - ஓர் பொருளை தானே கஷ்டப்பட்டு சேகரிக்காது, அழிக்கில் - விரயஞ்செய்யில், பாடாய் - பாழாக, முடியும் - தீருமென்பதாம்.

ஒருவன் தேகத்தை வருத்தி ஓர் பொருளைச் சேகரிக்காது தனது முன்னோர் சேகரித்து வைத்திருந்த பொருளை கஷ்டமின்றி அழிப்பானாயின் மறுபடியும் அப்பொருளை சேகரிக்க வழிதெரியாமலும், சோம்பலினாலும், பாழடைந்து போவான். ஆதலின் கஷ்டப்பட்டு சம்பாதிக்கும் பொருளே விசேஷமென்று விளக்குவான் வேண்டி தனது முன்னோர்களால் தேடி உள்ள பொருள் தன்னாலுந் தேடி சேகரிக்கும் வழி தெரிந்தபின் அவற்றை சிலவழிக்க முயல்வானாயின் அஃது பாழகாது விருத்தி பெற்றுவரும். அதனை சேகரிக்கும் வழி தெரியாது அழிப்பானாயின் பொருள் பாழாகி ஒழிவதுடன் உடையவனும் பாழாகி முடிவானென்பது கருத்து.

## 45. தைமாசியும் வைத்தியர்க்குழவு

தையும் - தைமாதமும், மாசியும் - மாசிமாதமும், வைத்தியர்களுக்கு - மாமாத்திரர்களுக்கு, உழவு - பூமியை யுழுது பூமியின் நீராகும் பூநீரெடுக்குங்கால மென்பதாம்.

அதாவது, மாமாத்திரர்கள் ஆடி - ஆவணி மாதங்களில் சமுத்திர உப்பென்னுங் கடலுப்பையும், தை - மாசி மாதங்களில் பூமி உப்பென்னும் நாதத்தையுந் தோண்டி எடுப்பதற்கு முன்

பனிகாலமாகும் தையிலும், மாசியிலும் உவர்மண் பூமியை உழுது வைத்து மீன - மேஷமென்னும் பங்குனி-சித்திரையில் பூர்த்திருக்கும் பூமியின் நீர் தோங்கி எழுமிடங் கண்டு அடிப்படை தோண்டி நாதமெடுத்து கடலுப்புடன் சேர்த்து வைத்திய உப்பை முடித்து வைத்துக் கொண்டு ஓடதிகளைச் செய்து பிணியாளருக்களித்து சுகமீவதியல்பாகும்.

உப்பினது போக்கும், அவற்றை எடுக்குங் காலமும், அதனால் முடியும் ஓடதிகளும், மாமாத்திரர் காலமறிந்து செய்யவேண்டிய விதியாதலின் வைத்தியர்கள் அக்காலத்தை மறவாதிருப்பான் வேண்டி தையும், மாசியும் வைத்தியர்க்குழவென்று கூறியுள்ளாள்.

**பதஞ்சலியார் ஞானம்**

காக்கையார்க்கெனுக் கம்பிதிறப்படும் / காக்கையாலுவர்ச் சாரமுங் கைக்குளாம்

காக்கையாற் சவுக்காரமங் கட்டலாம் / காக்கை காக்கை நடுக்கடற் காக்கையே

ஆடியாவணி யாழித்திரண்டதை / தேடினால் வருமே வந்து சிக்கினால்

பாடினார் பலநூற்களிற்பாஷையா / லோடியோடி யுழன்று தவிக்கவே.

தையு மாசியுங் கண்டு வுழுவதற் / கையனே பனிகால மதன் குறி

செய்யுங் கங்கையின் தீட்சை யறிந்தபேர் கையுஞ் செய்யு

மெய்யாகவே காண்பரே

மீனமேட மிரண்டையு மேவுவார் / காணற்காலமென் றேசிலர் காட்டுவார்

போன காலமும் புக்கின வேளையுஞ் /ஞான தேசிக னார்சொல நல்குமே.

**மச்சமுநிவர் ஞானம்**

யீசனென்று முடி வன்னியாதி சுழியேகமான பரிபூரணம் இந்துகூடு மிருமீன மேஷ மதிலேயிருக்கு மிவை யெய்துமே

வாசமுண்டு புவியாளர் தாணு மறியாதிருந்தது சமாதியாய்

வாடிடாது பின் மலர்ந்திடாது நிறமாவ தென் வைடூரியம்.

ஏட்டுப்பிரிதிகளின் பாடபேதத்தால் வையகத்துறங்கு' மென்னு மொழியை ஏற்று பனிகாலத்தில் வைக்கோல்வீட்டில் உறங்குக வென்று கூறுவதாயின் அம்மொழி நாட்டுவாசிகளுக் கேற்குமேயன்றி நகரவாசிகளுக்கு ஏற்காவாம்.

அத்தகைய நாட்டுவாசிகளுக்குள்ளும் பனை ஓலையாலும், தெங்கின் ஓலையாலும், விழல் கொத்துக்களினாலும் வீட்டின் மேடு மேய்ந்துள்ளாரன்றி வைக்கோலினால் இட்டுள்ள ஓர் குடிசையுங் கிடையாவாம். ஆதலின் அநுபவத்திற்கு வாராததும், நூல் சார்பற்றதுமாகிய மொழியை ஏற்பது பொருந்தாவாம்.

**46. தொழுதூண்சுவையினுழுதூ ணினிது**

தொழுது - ஒருவரை வணங்கி, ஊண் - பெற்றவுணவை புசிப்பதினும், உழுது - பூமியைத் திருத்திப் பயிரிட்டு, ஊண் - புசிப்பது, இனிது – இன்ப மாகுமென்பதாம்.

தேகத்தை சோம்பலாலும், மந்த புத்தியாலும், டம்பத்தாலும் வளர்ப்பதற்கு தன்மெய் ஒத்த தேகியை வணங்கி அவனிடந் தனக்கு வேண்டிய புசிப்பைப் பெற்று உண்பதினும் பூமியைத்திருத்திப் பயிரிட்டு உண்பதில் தேகத்தை வருத்திப் புசிப்பானாயின் அதுவே தேகசுக யினிய புசிப்பென்று கூறியுள்ளாள்.

அதாவது, நான் இன்னவகையாற் பெரியவன், இனியவகையிற் பெரியவன் எனப் பொய்யைச்சொல்லியும், வணங்கியும் உழைப்பாளராகும் பேதை மக்களை வஞ்சித்து பொருள் பறித்து உண்ணும் உணவு உணர்ச்சியற்ற உணவாதலின் உலகவாழ்க்கையுற்றோன் உழுதேனும் உடலை வருத்தியேனும் பொருளை சேகரித்து உண்ணும் உணவே உணவென்று வற்புறுத்திக் கூறியதாகும்.

**திரிக்குறள்**

உழுதுண்டுவாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந் / தொழுதுண்டு பின் செல்பவர்.

## 47. தோழனோடு மேழமெய்ப் பேசேல்

தோழனோடு - தன் புஜபலத்துக் குதவுவானோடு, ஏழைமெய் - தன் வல்லமெய்க் குறைவை பேசேல் - மறந்தும் பேசாதே என்பதாம்.

புருஷர்களில் தோழர்களென்பதும், இஸ்திரீகளில் தோழிகளென்பதும் தங்கள் எஜமானன் எஜமாட்டிகளுக்கு ஆபத்து பந்து போலிருந்து அஞ்சலியஸ்தராய் ஆதரிப்பவர்களாதலின் அவர்களிடத்துத் தங்கள் வல்லபக் குறைவை சொல்லுவதாயின் மதிப்பற்று ஆபத்துக்குதவாரென்பது கருத்து.

### 48. நல்லிணக்கமல்ல தல்லற்படுத்தும்

நல் - நல்ல, இணக்கம் - நேயர் சேர்க்கை , அல்லது - இல்லாமற் போமாயின், அல்லல் - துன்பத்திற்கு, படுத்தும் - ஆளாக்குமென்பதாம்.

நல்லவர்களை அடுத்திருத்தலும், நல்லவர்களின் வார்த்தையைக் கேட்குதலும் நன்றாகும். அத்தகைய நல்லோர்களை அடுக்காமலும், அவர்கள் வார்த்தையைக் கேளாமலும் இருப்பதாயின் எவ்விதத்துங் கேடுபெருகி மாளாதுக்கத்துக்கு ஆளாக்குமென்றுணர்ந்த ஞானத்தாய் நல்லோரிணக்கம் வேண்டுமென்றும் அஃதல்லாதார் அல்லற்படுவரென்றும் வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

### 49. நாடெங்கும் வாழ்க கேடொன்று மில்லை

நாடு - நஞ்சை புஞ்சை பூமிகளில், எங்கும் - எங்குமுள்ளவர்கள், வாழ்க - சுகவாழ்க்கையி லிருப்பார்களாயின், கேடு - சுகக்கேடுகள், ஒன்றும் - ஒன்றாயினும், இல்லை இராது யென்பதாம்.

நஞ்சை புஞ்சை பூமிகளைத் திருத்தி பயிரிட்டு மக்கள் வாழ்க்கை புரியுமிடத்தை நாடென்றும், அரசனும் அரசவங்கத்தோரும் வாழுமிடத்தை நகரமென்றும் வழங்கிவருபவற்றுள் நஞ்சை புஞ்சை தானியங்கள் செழித்திருக்குமாயின் நாட்டார் யாவருஞ் செழித்திருப்பார்கள். நாட்டார்கள் செழிப்புற்றிருப்பார்களாயின் நகரவாசிகள் யாவரும் சுகமுற்றுவாழ்வது அநுபவமாதலின் பயிரிடுங் குடிகளின் சுகத்தைக் கண்டு எங்கும் சுகமுண்டென்பதை விளக்கியுள்ளாள்.

### 50. நிற்கக் கற்றல் சொற்றிரமாகும்

நிற்க - மனதில் நிலைக்க, கற்றல் - வாசித்த, சொல் - வார்த்தைகளாவது, திரம் - உறுதியாக, ஆகும் - முடையுமென்பதாம்.

கற்குங் கல்வியை நிலைபெறக் கற்று தான் கற்ற கல்வியினளவாய் ஒன்றைக் கூறுவானாயின் அஃது உறுதி பெற்றே நிற்கும். தான் கற்ற கல்வியை நிலைக்க வைக்காமலும், கற்றக் கல்வியினளவே நில்லாமலும் ஒன்றைக் கூறுவானாயின் சேற்றில் நாட்டியக் கம்பம் போல் தன்னிற்றானே திறம் பெறா தாதலின் கற்போர் யாவருந் தாங்கள் கற்றக் கல்வியை தங்களுள்ளத்தில் பதியக் கற்றல் வேண்டு மென்பது கருத்தாம்.

### 51. நீரகம் பொருந்திய வூரகத்திரு

நீர் - லோக சலதாரையூற்றுக்கு, அகம் - இடம், பொருந்திய - அமைந்துள்ள, ஊரகத்து - தேசத்தின் கண், இரு - வீற்றிரு

மென்பதாம்.

நீர்வளமானது நிலவளத்தூறிய வகத்து வாழ்தலே பஞ்சமற்ற வாழ்க்கைக்கு இடமாதலின், நீர் வளம் பொருந்தியவிடத்து வாழ்கவேண்டுமென்பது கருத்து.

நீர்வளம் நிறைந்தவிடம் மக்கள் தேகசுத்தத்திற்கும், சுகத்திற்கும், தானியவிருத்திக்குமிடமாதலின், மனோசுத்தம், வாக்கு சுத்தம், தேகசுத்தமாம் திரிகரணசுத்தத்தை நாடும் ஞானத்தாய் முதல் வாசகத்திற் கூறியுள்ள சனி நீராடென்னும் வாசகத்துக்கு இணங்க இரண்டாம் வாசகத்தில், சனிக்கும் நீரூற்றுள்ள வூரகத்து வாழென்று கூறியுள்ளாள்.

## 52. நுண்ணிய கருமமு மெண்ணித் துணி

நுண்ணிய - சிறிய, கருமமும் - தொழிலேயாயினும், எண்ணி - தேற வாராய்ந்து, துணி - செய்வதற்கு முயலுமென்பதாம்.

ஓர் சிறிய காரியமேயாயினும் அக்காரியத்தை சரிவர ஆராய்ந்து செய்தலே நன்று. அங்ஙனமின்றி காரியம் சிறிதென்று கவனமற்று செய்வதாயின் சிறுகாரியமே பெருநஷ்டத்திற் குள்ளாக்குமென்று உணர்ந்த ஞானத்தாய் நட்பச்செயலாயினும் முன்பின் ஆராய்ந்துச் செய்யுமென்று கூறியுள்ளாள்

**திரிக்குறள்**

எண்ணித் துணிக கருமந் துணிந்தபி னெண்ணுவ தென்ப திழுக்கு

## 53. நூன்முறை தெரிந்து சீலத்தொழுகு

நூல் - கலை நூலில், முறையை - வழியை, தெரிந்து - அறிந்து, சீலத்தில் நன்மார்க்கத்தில், ஒழுகு - நடவா யென்பதாம்.

உலகத்திலுள்ள மக்களில் சிற்சிலர் தங்கடங்கள் சுயப்பிரயோசனங் கருதி எங்கள் தேவனே தேவன். எங்கள் தேவனை நம்பினவர்களே நேரில் மோட்சம் போவார்கள். மற்றவர்கள் நரகம் புகுவார்களென்று சிறுகுழந்தை களுக்கு ஐந்துக்கண்ணன் பயங்காட்டுவதுபோல் பேதை மக்களை வஞ்சித்து பொருள் பறிப்பான் வேண்டி வரைந்துள்ள பொய் நூற்களும் அனந்தமுண்டு. அத்தகைய நூற்களை நன்காராய்ந்து பொய்யகற்றலே நூன்முறை தெரிதலாகும்.

அங்ஙனமாய பொய்யகற்றி அனுபவத்திற்குங் காட்சிக்கும் பொருந்திய மெய் காணவேண்டியவர்கள் ஆதிதேவனாம் புத்தபிரானால் கண்டருளிய முத நூலும், அதையடுத்த சார்பு நூற்களுமே சீலத்திற்கும், ஒழுக்கத்திற்கும் ஆதாரமாகும். ஆதலின் பேதை மக்கள் பல நூற்களையும் நம்பி பாழடையாது நூன் முறை தெரிந்தொழுகவேண்டுமென்பது அம்மன் கருத்தாம்,

**அருங்கலைச் செப்பு**

என்று முண்டாகி யிறையால் வெளிப்பட்டு / நின்றது நூலென்றுணர்.

**நன்னூல்**

வினையினீங்கி விளங்கிய வறிவின் / முனைவன் கண்டது முத்துவாகும்.

மனக்கோட்டம் நீக்கி துக்க நிவர்த்தி செய்வ / தெதுவோ அதுவே நூவென்னப்படும்

உரத்தின் வளம் பெருக்கி யுள்ளியதீமெய்ப் / புரத்தின் வளமுருக்கிய பொல்லா - மரத்தின்

கனக்கோட்டந்தீர்க்கு நூலஃதே போன் மாந்தர் / மனக்கோட்டந் தீர்க்கு நூன் மாண்பு.

**சீவகசிந்தாமணி**

காமனன்னதோர் கழிவன் பறிவொடு பெறினு / நாமனாற்கதி நவைவரு நெறியல் வொருவி

வாமனூனெறி வழுவறத் தழுவின் ரொழுக / லேமவெண்குடை யிறைவமற்றியாவது மரிதே

**திரிக்குறள்**

நூலாருணூல்வல்ல னாகுதவ் வேலாருள் / வென்றி வினையுரைப்பான் பண்பு.

**54. நெஞ்சை யொளித்திரு வஞ்சகமில்லை.**

நெஞ்சை - மனதை, ஒளித்து - அடக்கி, இரு - இருப்பாயாயின், வஞ்சகம் - உள்ள கடுஞ்சினம், இல்லை - அகன்று போமென்பதாம்.

தன்மனமாகிய நெஞ்சமே தனக்கு சான்றாதலின் அதிற்றோன்றும் வஞ்சினம், பொறாமெய், சூது, முதலியவற்றை அகற்றி நெஞ்சை நன்மார்க்கத்தி னூடே ஒளிப்பானாயின் அவனுக்கு துக்கமென்பது எக்காலு மில்லையாகும். அங்ஙனமின்றி நெஞ்சை ஒளித்தவர் போல் துறந்தோரென வேஷ மிட்டு பேதைகளை வஞ்சித்து பொருள் பறித்துண்பாருமுண்டு. அத்தகைய வஞ்சிக்கும் வாழ்க்கை பெறாது நெஞ்சை ஒளித்திருப்பதே நலமென்று கூறியுள்ளாள்.

**திரிக்குறள்**

நெஞ்சிற்றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின்
வன்கணா ரில்,

## 55. நேரா நோன்பு சீராகாது

நேரா - தனக்குக் கூடிவரா, நோன்பு - கொல்லாமெய், சீராகாது - தனக்கு சுகங்கொடா தென்பதாம்.

அதாவது கொல்லா விரதமென்னும் நோன்பை நோற்பவன் மற்றொருவன் கொன்ற மாமிஷத்தைத் தின்பானாயின் தானோற்கும் நோன்பிற்கு நேராகா தென்பது கருத்து. மாமிஷம் தின் போன் இல்லாவிடின் கொல்வோன் அதிகரிக்கான்.

**திரிக்குறள்**

தினற்பொருட்டாற் கொல்லா துவகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்ற ரூவாரில்.

## 56. நைபவ ரெனினு நொய்ய வுரையேல்

நைபவர் - வருந்தும் ஏழைகளாக, எனினும் - இருப்பினும், நொய்ய - அவர்கள் மனம் வருந்த, உரையேல் - பேசாதே யென்பதாம்.

நமக்குள் அடங்கி வாழக்கூடிய ஏழைகளாயிருப்பினும் அவர்களது மனங்குன்ற பேசலாகாதென்பது கருத்து.

## 57. நொய்யவரென்பவர் வெய்யவ ராவர்

நொய்யவரென்பவர் - ஒருவரை மனனோகப் பேசுகிறவர்கள், வெய்யவர் - கொடுஞ்சினத்தோர், ஆவர் - எனப்படுவார்கள்.

ஒருவரை மனனோகப் பேசும்படியாய வார்த்தையை உடையோர் கோபத்திற் குடிகொண்டிருப்பவரென்பது கருத்து.

## 58. நோன்பென்பது கொன்று தின்னாமெய்

நோன்பென்பது - தம் மெய்யை காப்பதென்பது, கொன்று - சீவப்பிராணியை வதைத்து, தின்னாமெய் - மாமிஷத்தைப் புசியா தேகி யென்பதாம்.

தன் தேகத்தைக் காக்க வேண்டிய நோன்பினை உடையோன் சீவப்பிராணிகளுக்குத் துன்பத்தைச் செய்யாது காக்க வேண்டும் என்பது கருத்து. அங்ஙனமின்றி புறமெய்யை வதைத்து தன் மெய்யை வளர்க்க வேண்டியதாயின் புற உயிரை வதைத்துண்டு

வளர்ந்த தேகம் அஃதுணர்ந்த உபாதையை உணர்ந்தே தீரல் வேண்டும்.

### திரிக்குறள்

தன்னூன் பெருக்கற்குத்தான் பிறிதூனுண்பா னெங்கன மாளுமருள்.

### 59. பண்ணியபயிரிற் புண்ணியந் தெரியும்

பண்ணிய - தான் உழுது விளைத்த, பயிரில் - தானிய வளர்ச்சியில், புண்ணியம் தனது நற்கருமம், தெரியும்-விளங்கும் என்பதும்.

"சூதன் கொல்லையில் மாடுமேயு" மென்னும் பழமொழிக்கிணங்க அவனவன் துற்கன்மத்தின் பாப்பலனை அறிய வேண்டின் அவன் விளைத்த பயிர் மழையின்றி மடிவதும் வெட்டுக்கிளிகளால் நாசமடைவதும், புழுக்களால் மாளுவதுமாகிய செயலால் விளங்கும். அவனவன் நற்கருமத்தின் புண்ணிய பலனை அறிய வேண்டின் அவன் விளைத்த பயிர் காலமழையால் ஓங்கி வளரவும், வெட்டுக்கிளிகளும் புழுக்களும் அணுகாது தானியவிருத்தி கூடுவதுமாகிய செயலால் விளங்கும். புண்ணிய பலனை பண்ணியபயிரில் காணுகவென்று கூறியுள்ளாள்.

### 60. பாலோடாயினுங் காலமறிந்துண்

பால் - பசுவின்பாலுடன், ஆயினும் - அன்னத்தையாயினும், மற்றும் பலகாரத்தையாயினும் புசிப்பதாயின், காலமறிந்து - காலை, மாலை, மத்தியமென்னும் என்னும் முக்காலமறிந்து, உண் - புசிக்கக்கடவா யென்பதாம்.

பாலுடன் கலந்த பழத்தையாயினும், பாலுடன் கலந்த சோற்றையாயினும் உண்ணவேண்டுமாயின் காலையில் உண்ண வேண்டுமென்று பாகசாஸ்திரங் கூறியுள்ளபடியால் காலமறிந் துண்ணென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**கன்மச்சூத்திரம்**

காலையி லமுதும் மத்தியந் தயிர் மோர் / மாலையில் வெந்நீர் வழங்குக நன்றே.

காலை யமுதங் கருத்தூர விதய / தூலபலத்தின் செய்கையதாமே.

மத்திய தயிர்மோர் பாக மருந்தல் / பித்தப் பிணியை போக்குவதாகும்

மாலை வெந்நீர் வாழ்க்கை யருந்தல் / கூல வாயாசக்குறைச் சோர்வகலும்.

காலையிற் பாக்கை கணமுறப் பெருக்கில் / சீவவலத்தை சேர்க்காதகற்கும்.

மத்தியச் சன்னம் வாயிற் பெருக்கல் / சித்தியாம் பசியும் சீரண முண்டாம்.

மாலை வெற்றிலை வளரப் பெருக்கில் / வாலவாய் மணங் கொடுப்பதுநானே

தாம்பூலம் இடுவதில் காலையில் பாக்கை அதிகரித்தல், மலத்தைக் கழிக்கவும், மத்தியானத்தில் சுண்ணாம்பை அதிகரித்தல் ஜீரணசக்த்தி கொடுக்கவும், மாலையில் வெற்றிலையை அதிகப்படுத்துவதால்

வாய்மணம் வீசுவதாம். மூன்று பலன்களுண்டாவது போல் காலையில் பாலை அருந்துவதும், பலகாரங்களுடன் சேர்ப்பதும், இதய கோசம் வலுபெரும். மத்தியானந் தயிர் மோர் சேர்த்தல் பித்த சாந்தி யுண்டாம். மாலையில் வெந்நீரருந்தல் ஆயாசமும் நரம்புகளின் சோர்வு நீங்கும்.

இத்தியாதி பதார்த்த குணா குணங்களையும் ஞானத்தாய் நன்குணர்ந்தவ ளாதலின் பசுவின் பால் மிக்கவிருக்கினுங் காலமறிந் துண்ணவேண்டுமென்று கூறியுள்ளாள்.

### 61. பிறன்மனை புகாமெ யறமெனத் தகும்

பிறன் - அன்னியனுடைய, மனை - மனைவியை யிச்சித்து, புகா - அவனில்லம் நுழையாத, மெய் - தேகமே, அறம் - சத்திய தருமத்தை பெற்றது, எனத்தகும் - என்று கூறத்தகும் யென்பதாம்.

அன்னியனுடைய மனைவியை இச்சித்து அவளில்லம் புகாத தேகமே அறச்சுக தேகமென்று கூறியுள்ளாள்.

### மூவர் தமிழ் - நாலடி நானூறு

அறம்புகழ் கேண்மெய் பெருமெ யிந்நான்கும் / பிறன்றார நச்சுவார் சேரா - பிறன்றார

நச்சுவார் சேரும் பகை பழிபாவ மென் / ரச்சத்தோடிந்தாற் பொருள்.

## 62. பீரம் பேணிற் பாரந் தாங்கும்

பீரம் - வீரம், பேணில் - கொள்ளில், பாரம் - பெருஞ்சுமையை, தாங்கும் - சுமக்கக்கூடும் என்பதாம்.

யாதொன்றுக்கும் அச்சமின்றி வீரமுற்றுள்ள புருஷன் தனக்கு அதிகபாரமுற்ற சுமையே ஆயினும் வீரத்தன் மெயால் அதனை எளிதிலேந்திச் செல்வானென்பது துணிபு. மனோதிடமும், தைரியமுமுள்ள புருஷன் எடுத்த காரியத்தை எளிதில் முடிப்பானென்பது கருத்து.

## 63. புலையுங் கொலையுங் களவுந்தவிர்

புலையும் - மாமிஷ யிச்சையையும், கொலையும் - சீவ யிம்ஸையையும், களவும் - அன்னியர் பொருளையபகரித்தலையும், தவிர் - அகற்றுமென்பதாம்.

நாவுக்குரிய உருசியின் அவா மிகுதியால் மாமிஷ இச்சை உண்டாயின் கொலையாம் சீவயிம்சைக்கு அஞ்சான். சீவர்கள் கிடையாவிடின் அவற்றை விலைக்குக் கொள்ளுதற்கு அன்னியர் பொருளை களவு செய்ய அஞ்சான். அக்களவின் அவாவால் தன்மெயொத்த மக்களையும் வதைக்க அஞ்சான். ஆதலின் ஞானத்தாய் புலையின் இச்சை முதலாவது அகற்றவேண்டுமென்று கூறியுள்ளாள்.

**அருங்கலைச்செப்பு**

ஊனுண் டுடலை யுறக்க விருப்போன் / தானுண் டலைவான் தவிர்.

புலையுண்ணு மாசை பிறவூ னருந்தல் / கொலையுண்ணற் கஞ்சாக் குறி.

புலைவெறுத்தோனென்னும் புன்மெயின் சான்று / கொலையகற்றாற் காட்டி விடும்.

ஊன் தின்னேனென்னு முறுதி யுரைப்பார்க்கு / தான் கொலையுண் சீவன் கரி.

சீவனுயிரை சிதைக்கே னெனக் காணல் / ஆவல்புலா லிச்சை போம்.

பரப்பொருளை வவ்வி புலாலுண் டுகித்தோன் / றிரக்கொலைக்குத்தாரன் றெளி.

தேவர்கட் கென்பான் றீயிற்சுட்டுண்பான் / பாவிக்குமாமோ பரம்.

ஊனாசைக்கொண்டு வுயிர்சுட்டுத் தின்பான் / றானூனைத் தின்பான் றலை.

வேள்வித் யென்பான் வேறுயிர் சுட்டுண்பான் / மாள்வான் கொல் மற்றுயிராவென்.

புலாலாசையற்று புண்ணியத்தி னின்றோன் / நிலாமதிய நீள்விசும்புளான்

## 64. பூரியோர்க்கில்லை சீரியவொழுக்கம்

பூரியோர்க்கு - நீச்சமிகுத்த கீழ்மக்களுக்கு, சீரிய - சீர்பெறவேண்டிய, ஒழுக்கம் - நன்மார்க்கம், இல்லை கிடையாயென்பதாம்.

அதாவது, பொய், வஞ்சினம், சூது, பொறாமெய், குடிகெடுப்பு நிறைந்த கீழ்மக்களுக்கு மெய்ப்பேசுதல், சகலரிடத்தும் அன்பு பாராட்டல், ஞ்சங் களங்கமற்றிருத்தல், சகலர் சுகத்தையுங்கண்டு ஆனந்தித்தல், தங்களைப்போல் சகலரும் சுகமடைய விரும்பல் ஆகிய சீர்பெறும் ஒழுக்கங்களை நோக்கார்களென்பது கருத்து.

அப்பா திருடாதே, திருடனென்னும் பெயரை யெடுக்காதே, அது கீழ்மக்கட் செயலென்பாராயின்,' எங்கள் குலமே திருட்டு குலம், எங்கள் சீவனமே திருட்டு சீவனம்', எங்களைத் திருடனென்னாது வேறென்னப் பெயரால் அழைப்பதென்பான் சீரிய ஒழுக்கமற்றோன்.

அப்பா குடியாதே, கட்குடியனென்னும் பெயரை எடுக்காதே, அது கீழ்மக்கட் செயலென்பார்களாயின் ஆ! ஆ! எங்கள் குலமே குடிப்பது வழக்கம், குடிக்காவிட்டால் குடியனென்னும் பெயர் மறைந்துபோமோ, கள் குடியனென்னும் பெயர் சொல்லிக்கொண்டே ஏன் முன்னுக்கு வரப்படாதென்று தாங்கள் பிறந்த குலத்தளவின் குணத்தையே காட்டுவார்கள். ஆதலின் செயலாலுங் குணத்தாலுந்தோன்றுங் கீழ் மக்கள் மேன்மக்கள் என்போர்களின்

குணாகுணங்களை நன்குணர்ந்த ஞானத்தாய் சீரியவொழுக்கங்கள் பூரியோரிடத்துக் காண்பது அரிதென்று கூறியுள்ளாள்.

**சீவகசிந்தாமணி**

கற்பூரப் பாத்தி கட்டி கஸ்தூரி யெறுபோட்டு கமழ்நீர்ப் பாய்ச்சி பொற்பூரமுள்ளரியை விதைத்தாலுமதின் குணத்தைப் பொருந்தக்காட்டும்
சொற்பேதையர்க்கறிவு யினிதாக வருமெனவே கொல்வினாலும் நற்போதம் வாராதங் கவர் குணமே மேலாக நடக்குந்தானே.

**பழமொழிவிளக்கம்**

சிறியவரா முழுமூடர் துரைத்தனமாயுலகாளத் திரம் பெற்றாலும் அறிவுடையார்
தங்களைப்போ லன் படையார் புகழுடையா ராகமாட்டார் மறிதருமான் மழுவேந்துந் தண்டலைநீ நெறியாரே வாரி வாரி குறுமணிதாளிட்டாலுங் குருடி கண்ணிற் கண்ணாகிக் குணங் கொடாதே.

**65. பெற்றியார்க்கில்லை சுற்றமுஞ் சினமும்**

பெற்றியார்க்கு - குணங்குடி கொண்டார்க்கு, சுற்றமும் உரவின் முறையாரும், சினமும் - கோபமும், இல்லை கிடையாதென்பதாம்.

பெற்றி என்னுங் குணத்தை குடி கொள்ள வைத்தவர்களுக்கு சுற்றத்தா ரென்னுங் குடும்பமென்பது இல்லை, சினமென்னுங் கோபமுமில்லையென்பது கருத்து.

**பாம்பாட்டி சித்தர்**

மனமென்னுங் குதிரையை வாகனமாக்கி / மதியென்னுங் கடிவாளம் வாயில் பூட்டி

சினமென்னுஞ் சீனிமேற் சீராயேறி / தெளிவுடன் சாரிவிட் டாடாய் பாம்பே.

**66. பேதமெ யென்பது மாதர்க் கொருபெயர்**

பேதை - அறிவற்ற, மெய் - தேகமென்பது, மாதர்க்கு - பெண்களுக்கு, ஒருபெயர் - குறித்துள்ளவோர் பெயராகும் யென்பதாம்.

பெண்களுக்குரிய வாலை, தருணி, பிரவிடை, விருத்தை என்னும் நான்கு பருவத்துள் எழு வகைவயதின் பெயர்களுண்டு. அதாவது ஐந்து வயது முதல் ஏழு வயதளவும் பேதைப்பெண்ணென்றும், எட்டுவயது முதல் பதினோரு வயதளவும் பெதுமெய்ப்பெண்ணென்றும், பன்னிரண்டு முதல் பதின்மூன்று வயதளவும் மங்கைப் பெண்ணென்றும், பதினான்குவயது முதல் பத்தொன்பது வயதளவும் மடந்தைப்பெண்ணென்றும், இருவது வயது முதல் இருபத்தைந்து வயதளவும் அரிவைப் பெண்ணென்றும், இருபத்தாறு வயது முதல் முப்பத்தோரு வயதளவும்

தெரிவைப்பெண்ணென்றும், முப்பத்திரண்டட வயது முதல் நாற்பது வயதளவும் பேரிளம் பெண்ணென்றும் எழுவகைப் பெயர்களுண்டு.

இவ்வெழுவகைப் பெயருள் ஏழுவருஷத்துள் அறியா சிறியளாகும் பேதமெய்யென்பது பெண்களுக்குரிய ஓர் பெயராதலின் மாதருக்குரிய பெயர்களில் பேதமெ யென்பதுமோர் பெயரென்று குறிப்பிட்டுள்ளாள்

## 67. பையச் சென்றால் வையந் தாங்கும்

பைய - மெல்லெனச், சென்றால் - செல்லுவோமாயின், வையம் பூவுலகு, தாங்கும் - யேந்துமென்பதாம்.

உலகத்தின் கண் வார்த்தை மிருதுவாகவும் நடத்தை அமைதியாகவும், செயலை நிதானமாகவும் செய்துவருவோமாயின் வையத்துள்ள சகல மக்களாலும் ஏந்திப் புகழப்படுதல் அனுபவமாதலின் சகலகாரியங்களையும் நிதானித்துச் செய்வோர்களை வையந் தாங்குமென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

## நீதிவெண்பா

சீலமில்லா னேதேனு செப்பிடினுந்தானந்தக் கால மிடமறிந்து கட்டுரைத்தே யேலவே

செப்பு மவனுந்தான் சிந்தை நோகாதகன்று தப்புமவ னுத்தமனே தான்

## 68. பொல்லாங்கென்பவை யெல்லாந் தவிர்

பொல்லா - கொடிய, அங்கு - அங்கம், யென்பவை - யென்று சொல்லும் படியான, எல்லா - சகல குற்றங்களையும் தவிர் - அகற்றிவிடு மென்பதாம்.

அதாவது தேக குற்றம், வாக்கு குற்றம், மனோகுற்றங்களாகும் முத்தோஷங்களமைந்த பொல்லா அங்கத்தோனென்னும் பெயரெடாது அக்குற்றங்களைத் தவிர்த்து வாழ்கவேண்டுமென்பது கருத்து.

## 69. போனக மென்பது வானவர் விருந்து

போனகம் - காமதேனு அல்லது கற்பக விருட்சம், என்பது - என்று கூறும்படியானது, வானவர் - மக்கள் நிலை கடந்து தெய்வநிலை யடைந்தவர்கள், விருந்து - தங்களை யண்டினோர்க் களிக்கும் அமுத மென்னப்படும் என்பதாம்.

தாயுமானவர் கூறியுள்ளபடி "போனகமமைந்ததென வக்காமதேனு னின் பொன்னடியினின்று தொழுமே" என்னுஞ் செய்யுளுக்குப் பகரமாய் காட்டிலும், குகைகளிலுந் தங்கி ஞான கருணாகர முகமமைந்த பெரியோர்களைக் காண வேண்டிவரும் அரசர்களுக்கும், குடிகளுக்கும் அக்காலுண்டாகும் பசிதாகத்தை

நிவர்த்திக்கக் கூடிய ஓரமுதமென்னப்படும். காட்டில் தங்கியுள்ளவர்களுக்குக் கேட்டதை அளிக்கும் ஓர் சித்தின் நிலைக்குப் போனகமென்னும் பெயரை அளித்துள்ளார்கள்.

**காக்கைபாடியம்**

கேட்டவை யாவுங் கொடுக்கும் போனகம் / நாட்டுள் மாரியாய் நடக்கும் வானகம்

வீட்டினி லடங்கி யுள்ளொளி கண்டோர் / வாட்டமொன்றில்லா வாழ்க்கையதாமே.

புத்த சங்கத்தோர் பிட்சா பாத்திரத்திற்கும் போனகமென்னும் ஓர் பெயருமுண்டு. அதுகொண்டே பட்டினத்தார் வற்றாத பாத்திரமென்றுங் கூறியுள்ளார். அதற்குப் பகரமாய் மணிமேகலையிலுள்ள ஆபுத்திரன் காதையைக் காணலாம்.

**அருங்கலைச்செப்பு**

வானகத்துட் சென்றார் மாபாத்திரமெடுத்தார் / போனகத்தா லுண்ட பொருள்

கரபாத்திரமெடுத்தார் காட்சி நிலைத்தார் திரநேத்திர மமைந்த சீர்.

## 70. மருந்தும் விருந்தும் முக்குறை யகற்றும்

மருந்தும் - ஓடதியும், விருந்தும் - விரும்பியுண்போர் புசிப்பும், முக்குறை - மூன்று தோஷங்களை, யகற்றும் - நீக்குமென்தாம்.

அதாவது, மருந்துண்பதினால் வாததோஷம், பித்த தோஷம், சிலேத்தும் தோஷம் ஆகிய முத்தோஷங்களையும், விருந்தளிப்பதினால் எதிரிக்குப் பொருளில்லா குறையும், பசியின் குறையும், பிராண துடிப்பின் குறையும் நீங்கி சுகமடைவதால் விருந்தினால் நீக்கும் முக்குற்றங்களையும் மருந்தினால் நீங்கும் மூக்குற்றங்களையும், ஏகபாவனையால் புசிப்பிற் சுட்டி பகர்ந்திருக்கின்றாள். விருந்துக்கு வருவோன் முக்குறையாவது இல்லாக்குறை, பசியின் குறை, காலக் குறையுமேயாம்.

## 71. மாரி யல்லது காரிய மில்லை

மாரி - மழை, அல்லது - இல்லாமற் போமாயின், காரியம் - எடுக்குந் தொழில் யாவும், இல்லை - நடப்ப தரிதாகு மென்பதாம்.

உலகத்தில் மழைப் பெய்யாமற் போமாயின் சகலகாரியங்களுக்கும் ஆனியுண்டாய் பஞ்சம் அதிகரித்துப் பாழாம் என்பது கருத்து.

## 72. மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை

மின்னுக்கெல்லாம் - வானில் மின்னல் தோன்றுவதின் சாட்சி, பின்னுக்கு மழை - பிற்காலத்துக்குத் தகுந்த மழைப்பெய்யுமென்பதாம்.

வானில் மின்னல் மீருங்கால் ஆழிநீரையுண்டு ஆகாய கருப்பங் கொள்ளுவது அனுபவமாதலின் மின்னல் சாட்சியைக் கொண்டு

மழையுண்டென்பதை உணர்ந்து உழுதுண்போர் விளைக்க விளக்கியுள்ளாள்.

## 73. மீகாமனில்லா மரக்கல மோடாது

மீகாமன் - வோடசூஸ்திரன், இல்லாமல் - இல்லாமற்போவானாயின், மரக்கலம் - ஓடம், வோடாது - நீரிலோட்டுவது அரிதாகும் என்பதாம்.

ஓடத்தையோட்டும் சூஸ்திரனாகும் மீகாமனில்லாவிடில் மரக்கலத்தை நீரில் ஓடச்செய்வது கஷ்டமாகும். அது கொண்டே "மாலுமியில்லா மரக்கலமேறலாகா" தென்பதும் முதுமொழி.
மீகாமன், மாலுமி, ஓடசூத்திரன், சுக்கானனென்னும் நான்கு தொழிற்பெயரும் நீரின் வேகமும் காற்றின் வேகமுமறிந்து ஓடத்தை ஒட்டுவோன் பெயராகும்.

## 74. முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும்

முற்பகல் - காலையில், செய்யின் - செய்யும் வினையின் பயனானது, பிற்பகல் - மாலைக்குள், விளையும் - வெளிவருமென்பதாம்.

யாவருக்குந் தெரியாதென்னும் ஓர் காரியத்தை மறைந்து செய்தபோதினும் அக்காரியம் தன்னிற்றானே வெளிவருமென்பது கருத்து.

## 75. மூர்த்தோர் சொல் வார்த்தை யமிர்தம்

மூர்த்தோர் - விவேகமுதிர்ந்தோர், சொல் - வாக்கியமானது, வார்த்தை - சொற் சுவையாம், அமிர்தம் - நீதி போத மென்னப்படும்.

விவேகமிகுத்தோர் போதிக்கும் நீதிவாக்கியங்களை செவியிற் கேட்டு அதன்மேறை நடப்பவன் எவனோ அவன் சகல துக்கங்களையும் போக்கி சுகநிலை அடையவனாதலின் மூர்த்தோர் வாக்கியமாம் அமுதுண்டோன் என்பது கருத்து.

ஓடதியென்னும் அவுடதம் உண்பதால் பிணி நீங்கி ஆரோக்கிய மடைவது போல் மூர்த்தோர் வாக்கியமென்னும் அமுதால் துக்கம் நீங்கி சுகமடைவதே காட்சியின் இனிதென்னப்படும்.

**76. மெத்தெனப்படுத்தல் நித்திறைக்கழகு**

மெத்தென - மெல்லிய பஞ்சணையில், படுத்தல் - சயனித்தல், நித்திறைக்கு - தூங்குகைக்கு, அழகு - சுக மென்னப்படும்.

மிருதுவாகியப் பஞ்சுமெத்தையின் மீது படுத்தல் சுகமான நித்திறைக்கேது உண்டாமென்று விளக்கியுள்ளாள்.

**77. மேழிச்செல்வங் கோழைப்படாது**

மேழி - ஏறு பிடித்து உழுதுண்பவனின், செல்வம் - திரவியமானது, கோழைப்படாது - குறைவுபடாது என்பதாம்.

அதாவது ஏறுபிடித்து உழுதுண்ணும் உழைப்பாளி யானவன் எத்தொழிலையும் அஞ்சாது செய்யும் தைரியமுடையவனாதலின்

அவன் கஷ்டமாகியத் தொழில்களில் எவற்றையேனுஞ் செய்து சம்பாதித்து தனது திரவியங் குறையாது நிறப்புவான் என்பது கருத்து.

## 78. மைவிழியாடன் மனையகன் றொழுகு

மைவிழியாள் - கண்களில் மைதீட்டும் விலைமகள், மனை - வீட்டிற்கு, அகன்று - விலகி, ஒழுகு - நன்மார்க்கத்தில் நடவென்பதாம்.

கண்ணால் விழித்து மயக்கி தனது வயப்படுத்தும் விலைமகளின் வீட்டினருகே வாழ்தல் எவ்விதத்துங் கேட்டைத்தரும் வாழ்க்கையாதலின் அவள் வீட்டின் அருகே வாழ்தல் ஒழுக்கத்திற்கு இழுக்கென்பது துணிபாம்.

## 79. மொழிவது மறக்கி னழிவது கருமம்

மொழிவது - தனது தாய் தந்தையாராலேனும், தன்னை ஆண்டு வருபவனாலேனுங் கூறிய வார்த்தையை, மறக்கின் - மறந்துவிடில், கருமம் - அத்தொழிலானது, அழியுங் - கெட்டுப்போமென்பதாம்.

தனது எஜமானனாகும் ஆண்டவன் ஏவிய மொழியை மறப்பானாயின் அக்கருமத்திற்கே கேடுண்டாயதென்பது கருத்து.

## 80. மோனமென்பது ஞானவரம்பு

மோனமென்பது - பற்றற்ற நிலையென்று கூறுவது, ஞானம் - அறிவினாற் கட்டப்பட்ட வரம்பு - வரப்பு அல்லது எல்லையத்துவென்று கூறப்படும் யென்பதாம்.

விவேகவிருத்தியற்று வீணில் அலைந்து திரியும் மனதை அடக்கியாள்வ தென்னப்படும். அதாவது விவேகமென்னும் அறிவைக்கடந்து மனம் மலையாது நிற்கும் சுகவாரிக்கு ஒப்பாய் பற்றற்ற நிலையென்பது கருத்து.

### 81. வளவனாயினு மளவறிந்தெடுத் துண்

வளவன் - தானிய சம்பத்துள்ளவன், ஆயினும் - இருப்பினும், அளவறிந்து தன் குடும்பத்துக்குப் போதுமான திட்டந்தெரிந்து, எடுத்து - பண்டியினின்று மொண்டு, உண்ணு - சமைத்துப் புசிக்கக் கடவா யென்பதாம்.

பூமிச் செல்வமாகும் தானிய சம்பத்து ஏராளமாக இருப்பினும் அவற்றை வீண்விரயஞ் செய்யாது தன் சிலவுக்குத் தக்கவாறு எடுத்து உபயோகித்துக் கொள்ளவேண்டும் என்னும் செட்டு நிலையை ஞானத்தாய் உழுதுண்ணும் வேளாளத் தொழிலாளருக்கு விளக்கியுள்ளாள்.

### 82. வானஞ்சுருங்கிற் றானஞ்சுருங்கும்

வானம் - காலமழை, சுருங்கிற் - குறைந்து போமாயின், தானம் - பூமிவளம், சுருங்கும் - தானியவிளைவு குன்றுமென்பதாம்.

எத்தகைய பெருக்கதானியப் பண்டிகள் நிறைந்திருப்பினும் ஓராண்டு கால மழை தவறுமாயின் தானியவிருத்தி குன்றி குடிகள் கஷ்டத்தை அனுபவிக்க வேண்டி நேரிடுமாதலின் வளநாடனும்

தானிய சம்பத்து நிறைந்துள்ள வனாயினும் அளவறிந்து சிலவு செய்யவேண்டுமென்று முன்வாசகத்திலும் மொழிந்துள்ளாள்.

## 83. விருந்திலோர்க்கில்லை பொருந்திய வொழுக்கம்

விருந்து - நிதம் ஒருவருடன் கலந்து புசிக்கும் புசிப்பு இல்லார் அற்றிருப்போர்க்கு, பொருந்திய - சேர்ந்து வாழக்கூடிய, ஒழுக்கம் - நல்வாழ்க்கைத்துணை, இல்லை - அவர்களுக்குக் கிடையாதென்பதாம்,

அனவரதம் ஒருவருக்கு அன்னமிட்டு உண்ணும் அன்பில்லாமல் லோபம் நிறைந்திருக்குமாயின் அவனை நெருங்கி ஒருவனும் அணுகாது வாழ்க்கைத் துணை அற்றுபோமென்பது கருத்து.

## 84. வீரன் கேண்மெய் கூரம்பாகும்

வீரன் - யுத்தவல்லபனை, கேண்மெய் - நேசித்த தேகிக்கு, கூரம்பு - சாணைதீர்த்தவேலை, ஆகும் - கையிலேந்தியுள்ளதற் கொக்கும் யென்பதாம்.

யுத்தத்தில் வல்லமெய் யுடையோனை நேசித்துள்ளவன் கூரிய அம்பை எக்காலுங் கரத்திலேந்தி இருக்குங்கால் எவ்விதத்துந் தன்கரத்தைக் காயப் படுத்துவதுபோல் ஏதேனும் ஓர்நாளில் வீரனால் உபத்திரவமடைய நேரும் ஆதலின் வீரன் கேண்மெயை விரும்பாதே என்பது கருத்து.

### 85. உரவோனென்கை யிரவா திருத்தல்

உரவோன் - தேகவுரம் பெற்றவன், என்கை - யென்போன், இரவாது - மற்றொருவர்பா லிரந்துண்ணாது, இருத்தல் - இருக்க வேண்டு மென்பதாம்.

அதாவது தேகத்தில் யாதாமோர் பழுதின்றி உரமாகும் பிலமுற்றிருப் போன் ஒருவரையடுத்து இரந்துண்ணாது தேகத்தை வருத்தி உழைத்துண்ண வேண்டுமென்பது கருத்து.

### 86. ஊக்கமுடைமெய் யாக்கத் திற் கழகு

ஊக்கம் - இடைவிடா முயற்சி, உடைமெய் - உடையவனின், யாக்கத்திற்கு - உருவிற்கு, அழகு - சிறப்பென்னப்படும்.

எத்தொழிலை எடுப்பினும் அவற்றை இடைவிடா முயற்சியினின்று சாதித்து முடிக்குந் தேகியை சிறப்பித்துக் கொண்டாடுவது இயல்பாதலின் முயற்சியின் அழகை சிறப்பித்துக் கூறியுள்ளாள்.

### 87. வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை

வெள்ளைக்கு - சுத்தவிதயமுள்ளார்க்கு, கள்ளச்சிந்தை - வஞ்சினம், கபடு சூது முதலிய துற்குணங்கள், இல்லை - இராவென்பதாம்.

குணமென்னுங் குன்றேறிய சுத்தகுணமுள்ளோரிடத்து வஞ்சினம், கபடு, சூது முதலிய துற்குணங்கள் யாவும் அணுகாதென்பது கருத்து.

### 88. வேந்தன் சீறி னாந்துணையில்லை

வேந்தன் - ஆளும் அரசனானவன், சீறின் - சினந்து நிற்கின், ஆந்துணை - அவனைத் தடுத்தாளும் உதவி, இல்லை - வேறில்லை யென்பதாம்.

தேசத்தை ஆளும் அரயனுக்கு ஒருவன் மீது மீறியக் கோபமுண்டாயின் அவனது கோபத்தை அடக்கிக் கார்ப்போர் அங்கு ஒருவருமில்லை என்பது கருத்து.

## 89. வையந் தொடருந் தெய்வந் தொழு

வையம் - புடவி பாசமானது, தொடரும் - உன்னை யெக்காலும் பின்பற்றுமாதலின், தெய்வம் - தேய்வகமாம் உண்மெய்யைத் தொழு - உள்ளொளிகண் டொடுங்கு மென்பதாம்.

பாச அடவியின் பந்தப்பற்றானது வண்டி எறுதின் காலை சக்கரந் தொடர்ந்து செல்லுவது போல் மாறா பிறவிக்கும், மீளா துக்கத்திற்கும் கொண்டு போய்விடும். ஆதலின் தேய்வகமாம் உள்ளொளியில் அன்பை வளர்த்தி ஒடுக்கவேண்டுமென்பது கருத்து.

**ஔவைக்குறள்**

அந்தத்தி லங்கி யழல்போலத் தானோக்கில் / பந்தப் பிறப்பறுக்கலாம்.

## 90. ஒத்தவிடத்து நித்திறைக்கொள்

ஒத்தவிடத்து - உன் சாதனத்திற்கு நேர்ந்தவிடத்து, நித்திறை - தூங்காமற்றூங்கும் நிலையில், கொள் - உழ்க்காருமென்பதாம்.

நேர்ந்தவிடத்து ஆனந்த நித்திறையாம் தூங்காமற்றூங்கும் நிலையை வற்புறுத்தியுள்ளாளன்றி தன்னை அறியாமற் தூங்கும்

மரண தூக்கத்தைக் கூறினாளில்லை.

### 91. ஓதாதார்க்கில்லை வுண்மெயி லொடுக்கம்

ஓதாதார்க்கு - நற்கேள்வியில் முயலாதார்க்கு, உண்மெயிலொடுக்கம் - தன்னுட்டானே யொடுங்கி சுயம்பாம் நிலை, இல்லை - கிடையாதென்பதாம்.

ஆதலின் ஒவ்வோர் மக்களும் நீதி நூற்களை ஓதி உணர்ந்து உண்மெயில் அன்பை வளர்த்து புறமெய் வெறுத்து பிறவியறுத்து நிருவாணமடைய வேண்டுமென்பது கருத்து.

**ஔவையார் அருளிச் செய்த இரண்டாம் வாசகம் முற்றிற்று**

**(இரண்டாம் வாசகம் மூன்றாமாண்டு 12ஆம் இலக்கத்தில் தொடங்கி மூன்றாமாண்டு 24ம் இலக்கத்தில் முடிவுறுகின்றது)**

## ஔவையார் அருளிச் செய்த மூன்றாம் வாசகம்

### காப்பு

வெற்றி ஞான வீரன் வாய்மெய் / முற்று மறிந்தோர் மூதறிவோரே. ஞானவெற்றி - அறிவில் ஜெயமுற்றவனாகும் வாலறிஞனாம். வீரன் - அதிதீவிரனெனப்புகழ்ப்பெற்ற புத்தபிரானா லோதிய, வாய்மெய் - மெய்வாக்கியங்கள் நான்கையும், முற்றும் - முழுவதும், அறிந்தோர் - தெரிந்துக்கொண்டவர்கள், மூதறிவோரே முற்றுமுணர்ந்த பேரறிவாள ராகுமென்பதாம்.

அதாவது நூன்முகத்து சதுர்முகன் ஓதிய நான்கு வாய்மெயாம் துக்கம், துக்கோற்பவம், துக்கோற்பவக் காரணம், துக்க நிவாரணமென்னும் சதுர்வித சத்தியங்களையும் குறைவற உணர்ந்தவர்களெவரோ அவர்களே முற்றும் உணர்ந்தவர்களென்பது கருத்து.

## நறுந்தொகை நான்கு

பற்றாமுலகப் பற்றினை யறுத்து / பொற்றாமரையிற் பரந்தவன் பகர்ந்த
நறுந்தொகை தன்னால் நற்றமிழ் தெரிந்து / குற்றங்களை வோர் குறைவிலாதவரே.

பற்றாமுலகம் - உலகபாசபந்தக்கட்டாகும், பற்றினை - பாசக்கயிற்றினை, அறுத்து - துண்டித்து, பொற்றாமரையில் - பதுமாசனத்தில், பரந்தவன் - வீற்றிருந்தவன், பகர்ந்த - ஓதிவைத்த, நற்றமிழ் - சிறந்த தமிழ்பாஷையை, தெரிந்து - கற்று, நறுந்தொகையாம் - வாய்மெய் நான்கினையும் உணர்ந்து, தன்னால் - அதனாதரவால், குற்றங்களைவோர் - இராகத் துவேஷமோக மென்னுங் குறுந்தொகையாம் முக்குற்றங்களை யகற்றினோர், குறைவிலாதவரே - சுகவாரிக்கொப்பாம் சகல சுகமும் பொருந்த வமைதியுற்று வாழ்வார் களென்றவாறு.

## திரிக்குறள்

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் / நிலமிசை நீடுவாழ்வார்.

## சிலப்பதிகாரம்

அருக ரறிவனருகற்கல்ல தென் / இருகையுங்கூடி யொருவழிக் குவியா

மலர்மிசை நடந்த மலரடிக்கல்லதென் / தலைமிசை யுச்சி தானணி பொறாது.

## ஞானவாசிஷ்டம்

புண்டரீக வாதனத்தில் / புத்தன் போல் உத்தரமுகனாய்.

## 1. எழுத்தறிவித்தவன் இறைவனாகும்

எழுத்து - வரிவடிவாம் அட்சரங்களை, அறிவித்தவன் - ஓதிவைத்தவன், இறைவனாகும் - குடிகள் பால் வரியிறைக் கொள்ளும் வராசனேயாகும்.

அவ்வரசன் யாரென்பீரேல் வீரவாகு, குலவாகு, இட்சுவாகென்னும் சக்கிரவர்த்திகள் மரபிற்றோன்றிய சித்தார்த்தி திருமகனேயாகும். இவ்விறைவன் காலத்தில் பாலிபாஷை வரிவடிவாம் எழுத்துக்களின்றி ஒலிவடிவாம் சப்த மொழியும், அம்மொழிகளோ ஒருவர் சொல்லவும் மற்றொருவர் கேட்கவுமான சுருதிகளாயிருந்தது.

இறைவன் உலகபாசத்தைத் துறந்து அவலோகிதரென்றும், ஐயிந்திரியங் களைவென்று இந்திரரென்றும், நிருவாணநிலை அடைந்தபோது சகலமுந் தன்னிற்றோன்றிய விளக்கத்தால் தான் சுருதியாக ஓதியுள்ள திரிபீடவாக்கியம், திரிபேத வாக்கியமென்னும் கன்மபாகை, அறுத்தபாகை, ஞானபாகையாகிய மூன்று அருமொழிகளும் மறைந்துபோமென்று உணர்ந்து மகடபாஷையாம்

பாலியினின்று சகடபாஷையாம் சமஸ்கிருந்தாட்சரங் களையும், திராவிட பாஷையாம் தமிழட்சரங்களையும் இயற்றி வரிவடிவாய்க் கற்களில் வரைந்து கல்வியைக் கற்பித்ததுகொண்டு எழுத்தறிவித்தவன் இறைவனாகு மென்று வற்புறுத்திக் கூறியுள்ளாள்.

**தொல்காப்பியம்**

மங்கா மரபி னெழுத்து முறைகாட்டி / மல்குநீர் வரைப்பினிந்திர னரைந்த

**வீரசோழியம்**

ஆலியனைத்துங் க,ச,த,ந,ப . மவ்வரியும் வவ்வி
லேவிய வெட்டும் யவ்வாறு ஞந்நான்கு மெல்லாவுலகு
மேவிய வெண்குடை செம்பியன் வீரரா ஜேந்திரன்றன்
நாவியல் செந்தமிழ் சொல்லின் மொழிமுத னண்ணுதலே.

மதத்திற் பொலியிம் வடசொற் கிடப்பும் தமிழ்மரபு
முதத்திற் பொலியேழை சொற்களின் குற்றமு மோங்குவினை
பதத்திற் சிதைவு மறிந்தே முடிக்க பன்னூறாயிரம்
விதத்திற் பொலியும் புக ழவலோகிதன் மெய்த்தமிழே

**சிலப்பதிகாரம்**

தண்டமிழாசான் சாத்தனிஃதுரைக்கு.

**முன்கலை திவாகரம்**

ஒருவர்க் கொருவனாகி யுதவியும் / பரிசின் மாக்கள் பற்பவராயினுந்

தானொருவன்னே தரணிமாதவன் / செந்தமிழ் சேந்தன் தெரிந்த திவாகரம்.

### சிவஞான யோகீசுவரர்

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவரியல் வாய்ப்ப
இருமொழியும் வழிபடுத்தார் முனிவேந்த ரிசைபரப்பும்
இருமொழியு மான்றவரே தழி இயினா ரென்றாலில்
இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

இத்தகைய இலக்கிய நூல் இலக்கண நூற்களின் ஆதாரங்களைக் கொண்டு தமிழட்சரங்களை இயற்றியளித்தவர் புத்த பிரானென்றே தெளிவாக விளங்குகிறபடியால் எழுத்தறிவித்தவன் சிறப்பைக்கூறி அன்னோர் தன்மத்தை விளக்கலுற்றாள்.

### 2. கல்விக்கழகு கசடறமொழிதல்

தான் கற்ற கல்விக்கு சிறப்பு யாதெனில், கூறும் வாக்கில் குற்றம் எழாமலும், மற்றவர்களிதயம் புண்படாமலும் முன்பின் யோசித்து பேசவேண்டுமென்பது கருத்து.

### 3. செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்

திரவிய சம்பத்தைப் பெற்றவர்களுக்கு சிறப்பு யாதெனில், தனது குடும்பம் ஓங்கி செழிக்கவும், தன்னை அடுத்தோர் குடும்பம் ஓங்கி செழிக்கவும் அன்புடன் உதவி புரிந்துவருவானாயின் அதுவே தனவந்தன் அழகென்பது கருத்து.

### 4. வேதியர்க் கழகு வோதலு மொழுக்கமும்

சத்தியதன்மமாம் சதுர்பேத மொழிகளை ஓதுவோர்க்கு அழகு யாதெனில், எத்தேச எப்பாஷைக்காரனாயிருப்பினும் நீதியும், நெறியும், வாய்மெயும் நிறைந்து சகலருக்கும் நன்மெயை விளக்கவேண்டியவனாகவும் அன்றேல் ஓதியுணர்ந்த பயனால் சகலருக்கும் நல்லவனாகவும் விளங்குவோன் எவனோ அவனே வேதமோதும் சிறப்புடையானென்னுங் கருத்து.

**நல்லாப்பிள்ளை பாரதம்**

நீதியும் நெறியும் வாய்மெயு முலகில் நிறுத்தினோன் வேதியனன்றி
வேதியனேனு மிழிக்குறி லவனைவிளம்பும் சூத்திரனென வேத
மாதவர் புகன்றா ராதலாலுடல் மாய்ந்தபின் பாவதோர் பொருளோ
கோதிலாவிந்தப் பிறவியில் வேதக் குரவனீ யல்லையோ குறியாய்.

**5. மன்னவர்க்கழகு செங்கோ நடத்தல்**

அரசர்களுக்கு அழகாவது யாதெனில், செவ்விய நீதியின் கோலேந்தி தன்னவரன்னிய ரென்னும் பட்சபாதமின்றி நீதியை செலுத்துவதுடன் குடிகள் யாவருந் தனது பாதுகாப்பிலிருக்கின்றபடியால் அவர்களுக்கு, யாதாமோர் தீங்குநேரிடாவண்ணம் ஆதரிப்பதே மன்னர்க்கு சிறப்பென்பது கருத்து.

## குமரேச சதகம் - மன்னரியல்

குடி படையி டபிமான மந்திராலோசனை குறிப்பரிதல் சத்யவசனம்

கொடைநித்த மவரவற்கேற்ற மரியாதைபொறை கோடாத சதுருபாயம்

படி விசாரிணை யொடுப் பிரதானிதளகர்த்தரை பண்பறிந்தே யமைத்தல்

பல்லுயிரெலாந் தன்னுயிர்க்கு நிகரென்றே பகுத்தல் குற்றங் களைத்தல்

துடிபெறு தனக்குறுதி யானநட்பகையின்றி சுகுணமொடு கல்வியறிவு

தோலாத காவமிட மறிதல்வினை வலிகண்டு துஷ்ட நிக்கிரசு செளரியம்

மடைபெறு செங்கோனடத்திவருமன்னர்க்கு வழுவாத முறைமெ யிதுகாண்

மயிலேறிவிளையாடு குகனேபுல் வயநீடு மலைமேவு குமரேசனே.

## 6. வாணிபர்க்கழகு வளர்பொருளீட்டல்

வியாபாரிகளுக்கு அழகு யாதெனில், ஒன்றைக் கொடுத்து மற்றொன்றை மாறுவதில் மிக்கச் செட்டுடையவனாயிருந்து

எக்காலத்தில் எச்சரக்கைப் பிடித்துக் கட்டவேண்டியதென்றும் எச்சரக்கை நிலவரத்திலும் தராசுகோணா நிலையிலும் தன் செலவழிவுபோக சொற்ப லாபத்திலும் விற்று பொருளை வளர்த்து சருவசவர்களுக்கும் உதவியுள்ளோராக விளங்குதல் ஒன்றைக் கொடுத்து மற்றொன்றைப் பெறும் வாணிபர்களுக்கு சிறப்பென்பது கருத்து.

**குமரேச சதகம் - வணிகரியல்**

கொண்ட படி போலும் விலைபேசிலாபஞ்சிறிது கூடிவர நயமுறைப்பார்

தொள்ளுமொரு முதலுக்கு மோசம்வராதபடி குறுகவே செலவு செய்வார்

வண்டப்புரட்டர்தான் முரிவந்து பொன்னடகு வைக்கினுங் கடனீயந்திடார்

மருவுநாணயமுளோர் கேட்டனுப்புகினு மவவார்த்தையிலெலாங்கொடுப்பார்

கண்பெழுதுபற்றுவர வதனில்மயிர்பிளவுபோற்கணக்கி லனுவேனும்விடார்

காசுவீணிற்செலவிடா ருசிதமானதற்கன திரவியங்கள் விடுவார்

மண்டலத் தூடுகன வர்த்தகஞ்செய்கின்ற வணிகர்க்கு முறைமெயிதுகாண்

மயிலேறி விளையாடு குகனேபுல் வயநீடு மலைமேவு குமரேசனே.

## 7. வேளாளர்க்கழகு வுழுதூண் விரும்பல்

பூமியை திருத்தி பயிர்செய்கிறவர்களுக்கு அழகு யாதெனில், நஞ்சை பூமியை உழுது பயிரிடுங்காலம் ஈதென்றும், புஞ்சை பூமியை உழுது பயிடுங்காலம் ஈதென்றும் நன்காராய்ந்து தான் மழையை வேண்டி ஆகாயத்தை நோக்குவது போல் சருவசீவர்களும் தானியத்தை வேண்டி வேளாளனை நோக்குகிறபடியால் பூமியின் பலனைக் கருதுங்கால் ஈகையைப் பெருக்கி சருவவர்கள் மீதும் இதக்கமுடையவனாய் ஆதரிக்குஞ்செயலிலிருப்பதே வேளாளர் சிறப்பென்பது கருத்து.

### ஏரெழுபது

வெங்காயம், கலித்தடத்த வேளாளாவிளை வயலும்
பையங்கோதி முடிதிருந்த பார்வேந்தர் முடி திருந்தும்
பொங்கோதக் களியானைப் போர்வேந்தர் நடத்துகின்ற
செங்கோலைத் தாங்குங்கோ லோடிக்குஞ் சிறுகோலே.

## 8. மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தல்

ஆலோசனை கர்த்தனுக்கு அழகு யாதெனில் தனதரசனுக்கு அரிய வாக்கியங்களை விளக்கி தேசத்தை சீர்திருத்தலும் வருங்கால செயல்களையும் போங்காலச் செயல்களையும் ஆராய்ந்து சேர்க்கவேண்டியவற்றை சேர்த்தும், அகற்ற வேண்டியவற்றை அகற்றியும் ஆண்டுவருவதே சிறப்பென்பது கருத்து.

## 9. தந்திரிக்கழகு தன் சுற்றங் கார்த்தல்

தன்னில் திறமுள்ளவர்களுக்கு அழகு யாதெனில், அத்திறத்தால் தனது சுற்றத்தோரை கார்த்தலே சிறப்பென்பது கருத்து.

### 10. உண்டிக் கழகு விருந்தோடுண்டல்

உண்னும் படியான புசிப்புக்கு அழகு யாதெனில், விருந்தினருடன் அன்புடன் பசித்து, அன்னத்தாலவர்களைப் போஷிப்பதே சிறப்பென்பது கருத்து

### 11. பெண்டீர்க் கழகெதிர் பேசாதிருந்தல்

பெண்களுக்கு முக்கிய அழகு யாதெனில், தனது கணவன் கூறும் வாய் மொழிகளுக்கு எதிர்மொழி கூறாமல் இட்ட ஏவலை இன்பொடு செய்தலே இறப்பென்பது கருத்து.

### 12. குலமகட்கழகு கொழுனனைப் பேணுதல்

நற்குடும்பத்திற்பிறந்த பெண்களுக்கு அழகு யாதெனில், தன் கணவனையே கடவுளாகவும், காப்பவனாகவுங்கருதி அவனுக்கு நீராட்டலை அங்கசுத்த மாகவும், அன்னமூட்டுதலை அபிஷேகமாகவும், அவன் கால்கரங்களைப் பிடித்துப் பூசுதலே பூசையாகவும், அவன் உத்திரவளித்துள்ள வாக்கியங்களை மந்திரமென்றெண் எண்ணி நடத்தலே சிறப்பென்பது கருத்து.

### 13. விலைமகட் கழகு மேனிமினுக்குதல்

விலை கொடுத்து வாங்கும் அடிமைப் பெண்களுக்கு அழகு யாதெனில், எக்காலுந் தங்கள் தேகத்தை சுத்தத்தில் வைக்கவேண்டுமென்பது கருத்து.

**14. அறிவோர்க் கழகு கற்றுணர்ந்தடங்கல்**

அறிவுள்ளோரென்று கூறுதற்கு அழகு யாதெனில், தான் கற்ற கலை நூற்களுக்கு அளவாய் அடங்கி சகலருக்கும் உபகாரியாக விளங்குதல் அன்றேல் சகலராலும் நல்லவனென்று நன்கு மதிக்கப் பெறுதலே சிறப்பென்பது கருத்து.

**15. வறியோர்க்கழகு வருமெயிற் செம்மெய்**

ஏழைகளாகிமிக்க துக்கத்தை அனுபவிப்போர் நடந்துக்கொள்ள வேண்டிய அழகு யாதெனில், இந்த தேகம் மறைந்து மறுதேகம் எடுக்கினும் அதனிலேனும் சுகத்தை அனுபவிக்கும்படியாக எடுத்த தேகத்தின் துக்கத்தை மிக்கக் கருதாது நன்மார்க்கத்தில் நடத்தலே சிறப்பென்பது கருத்து. (அதனால்),

**16. தேம்படு பனையின் றிரபழத்தொருவிதை**

**வானுறவோங்கி வளம்பெற வளரினும்**

**ஒருவர்க்கிருக்க நிழலாகாதே**

ஆதலின் பனைவிதையானது மிக்கப் பருத்திருப்பினும் அதின் மரமான து ஒருவர் தங்கிநிற்பதற்கு நிழலிராதென்பது கருத்து.

**17. தெள்ளியவாலின் சிறுபழத் தொருவிதை**

**தெண்ணீர்க்கயத்துச் சிறுமீன்சினையினும் நுண்ணியதாயினு**

**மண்ணல் யானை அணி தேர்ப்புரவியாட்பெரும்படையோடு**

**மன்னர்க்கிருக்க நிழலாகும்மே.**

ஆலமரத்தின் விதையானது மீன் சினைக்கொப்பாய சிறியதாயிருப்பினும் அதன் மரத்தின் நிழலோ இரத கஜ துரக பதாதிகளுடன் அரசனும் வந்து தங்குவதற்கு நிழலைத் தருமென்பது கருத்து.

(அதுபோல்),

### 18. சிறியோரெல்லாம் சிறியோரு மல்லர்

சிறுவயதாயிருப்பினும் அவர்களை சிறியவர்களென்று அவமதிக்கலாகாது. காரணம், விவேகத்தில் பெரியோர்களாயிருப்பார்கள்.

### 19. பெரியோரெல்லாம் பெரியோரு மல்லர்

வயதில் முதிர்ந்தோர்களாயிருப்பினும் அவர்களைப் பெரியோர்களென் றெண்ணப்படாது. காரணம், விவேகமற்றிருப்பார்கள்

### 20. பெற்றோரெல்லாம் பிள்ளைக ளல்லர்

பெற்றுப் பிள்ளைகள் யாவரையும் தன்னுடையப் பிள்ளைகளேயென்று நம்பப்படாது காரணம், தாய் தந்தையரைக் கவனியாத களியாட்டத்திலிருக்கும் பிள்ளைகளுமுண்டு.

### 21. உற்றோரெல்லா முறவின ரல்லர்

மிக்கு உரியவர்களென்று சொல்லும் படியான குடும்பத்தோர் யாவரும் உறவினராகமாட்டார்கள் காரணம், உறவினர் உரிமெயாம்

சுகதுக்கங்களைப் பொருந்தினிற்பர்.

### 22. கொண்டோரெல்லாம் பெண்டிரு மல்லர்

குடும்பத்திற்கு வேண்டுமென்று கொண்டப் பெண்கள் யாவரும் குடும்பிகளாகமாட்டார்கள். காரணம், சிலப்பெண்கள் குடும்பத்தைக் கலைக்கும் வேர்ப்புழுவாகத் தோன்றுவார்கள்.

### 23. அடினுமாவின்பால் சுவை குன்றாது

பசும்பாலினை சுண்டக்காச்சினும் அதனது சுவையானது குன்றாது என்பது கருத்து.

### 24. சுடினுஞ் செம்பொன் றன்னொளி கெடாது

சாம்புன தமாம் பொன்னை நெருப்பிலிட்டு மேலும் மேலும் உருக்கினும் அதன் பிரகாசங் குறையமாட்டாதென்பது கருத்து.

### 25. அரைக்கினுஞ் சந்தணந் தன்மண மாறாது

சந்தனக்கட்டையை நீர் வார்த்து உரைக்கினும் அதன் பரிமளம் மாறாது என்பது கருத்து.

### 26. புகைக்கினுந் தண்கடல் பொல்லாங்கு கமழாது

குளிர்ந்த சமுத்திர நீரை புகையெழக் கொளுத்தினும் கொடியநாற்ற மெழாது என்பது கருத்து.

### 27. கலைக்கினுந்தண்கடல் சேறாகாதே

குளிர்ந்த கடல்நீரை எவ்விதங் கலைக்கினும் சேறு காணமாட்டாது. காரணம், அதனதன் செயலும், குணமும் அதனதன் நிலையிற் காணும். அதனால்,

**28. பெருமெயும் சிறுமெயுந் தன் செயலாமே**

ஓர் மனிதனைப் பார்த்து இவன் பெரியோன் மேன்மகனென்று கூறுவதும், மற்றொருவனைப்பார்த்து இவன் சிறியன் கீழ்மகனென்று கூறுவதும் அவனவன் நற்கரும் துற்கருமக் கூற்றாதலின் சகலமும் தன் செயலாலாவதென்பது கருத்து.

**29. சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம்**

**பெரியோராயின் பொறுப்பது கடனே**

சிறியோராரும் அறியாப் பிள்ளைகள் செய்தக் குற்றங்களை பெரியோராகும் விவேகிகள் பொருப்பதே இயல்பாகும்.

**30. சிறியோர் பெரும்பிழை செய்தனராயின்**

**பெரியோரப்பிழை பொறுத்தலு மரிதே**

சிறியோரென்னும் அறியாப்பிள்ளைகள் ஆயினும் பெருங்குற்றங்களைச் செய்து விடுவார்களாயின் அப்பிழையை பெரியோர்கள் பொறுக்கமாட்டார்கள் என்பது கருத்து. அதனால்

**31. வாழிய நலனே வாழிய நலனே**

ஒவ்வோர் மக்களும் நல்வாழ்க்கையாம் நன்மார்க்க நடையில் ஒழுக வேண்டியதே நலனாதலின் வாழி நலனே என்று வற்புறுத்திக்கூறியுள்ளாள்.

**32. நூறாண்டு பழகினு மூர்க்கர் கேண்மெய்**

**நீர்க்குட்பாசிபோல் வேர்க்கொள்ளாதே**

மூர்க்கனெனக் கூறும் பெயர்பெற்ற தேகியுடன் நூறுவருடம் பழகியிருப்பினும் நீரின் மேற் படர்ந்துள்ள பாசைபோல் ஒட்டாநேயத்தில் இருப்பானன்றி நீரினுள் வேரூன்றும் விருட்சம் போல் நிலைக்காக் கேண்மெய் என்பது கருத்து.

**33. ஒருநாட்பழகினும் பெரியோர் கேண்மெய்**

**இருநிலம் பிளக்க வேர்வீழ்கும்மே**

பெரியோராகும் விவேகமிகுத்த மேன்மக்களிடம் ஒருநாட் பழகினும் அப்பழக்கமானது மத்திய பாதாளமென்னும் இரண்டிலும் வீழ்ந்துருகியுள்ள வேர்போல் பதிந்துள்ள கேண்மெயாம் என்பது கருத்து.

(அதனால்)

**34. கற்கை நன்றே கற்கை நன்றே**

**பிச்சை புகினுங் கற்கை நன்றே**

மேற்கூறியக் கீழ்மக்கள் மேன்மக்களென்னும் பெயர்வாய்த்த வகையறிந்தோர் கலை நூற்களைக் கற்றல் நன்று. அவற்றுள் பிச்சை புகும் வறிய காலம் வானும் கலை நூற்களைக் கற்றுத் தெளியவேண்டுமென்பது ஞானத்தாயின் கருத்து.

**35. கல்லானொருவன் குலநலம் பேசுதல்**

**நெல்லி னுட்பிறந்த பதராகும்மே**

கலை நூற்களைக் கற்றுணராதவன் தனது குடும்பத்தை உயர்த்தியும் விசேஷித்தும் பேசுதல் பயனற்ற சொற்களாகி நெல்லினுட் போன்றும்

பதர்போலொழியுமென்பது கருத்து. ஆதலின்,

**36. நாற்பாற்குலத்தின் மேற்பாலொருவன்**

**கற்றிலனாயிற் கீழிருப்பவனே**

அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் எனும் நான்குவகைத் தொழிலை நடாத்தும் நான்கு குடும்பத்தோருள் விவேகமிகுத்த மேற்குடும்பமாம் அந்தணர் குடும்பத்திற் பிறந்தும் கலை நூற்களை வாசித்துணராதவனாயிருப்பானாயின் அவனைக் கீழ்க்குடும்பமாம் கடைகுலத்தானென்றே அழைக்கப்படுவான்.

**37. எக்குடி பிறப்பினும் யாவரேயாயினும்**

**அக்குடியிற்கற்றோ ரறவோராவர்**

மேற்கூறியுள்ள நால்வகைத் தொழிலை நடாத்தும் நாற்குடும்பத்தோருள் எக்குடும்பத்திலாயினும் எவனொருவன் கலை நூற்களைக் கற்று பூரணமடைகின்றானோ அவனே அறவோனாம் அந்தணன் என்றழைக்கப் படுவான்

**38. அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்**

கலைநூற் பயிற்சியால் நீதியும், நெறியும், வாய்மெயும் நிறைந்த அறிவுடையோனை அரசனாம் தேசத்தையாளும் மன்னனும் விரும்பி கொண்டாடுவான்.

**39. அச்சமுள்ளடக்கி அறிவகத்தில்லா**

**கொச்சைமக்களை பெறுதலினக்குடி**

**எச்சமற்றென்று மிருக்கை நன்றே.**

கலைநூற் கற்ற விவேகவிருத்தியால் மனுகுலத்தோனென வெளி தோன்றாது கல்லாக்குறையால் மநுக்களாம் விவேகிகளைக் கண்டவுடன் மிருகங்க ளச்சமுற்று ஒடுங்குதல் போல் அடங்கும் பேதை மக்களைப் பெறுவதினும் எச்சமாம் புத்திரபாக்கியம் அற்றிருப்பதே நன்றென்பது கருத்து

### 40. யானைக்கில்லை தானமுந் தருமமும்

யானைக்கு ஈயுங்குணமும், நன்மார்க்கமும் இல்லையென்பது கருத்து.

### 41. பூனைக் கில்லை தவமுந் தயையும்

பூனைக்கு ஒழுக்கமும், பரோபகாரமும் இல்லையென்பது கருத்து

### 42. ஞானிக்கில்லை யின்பமுந் துன்பமும்

விவேகமிகுத்தப் பெரியோர்களுக்கு பேராசையாம் அதியிச்சையும், உபத்திரவமாந் துக்கமும் இல்லையென்பது கருத்து.

### 43. சிதலைக்கில்லை செல்வமுஞ்செருக்கும்

சிதலென்னுங் கறையானுக்கு திரவிய சம்பத்தும், அகங்காரமும் இல்லை யென்பது கருத்து.

### 44. முதலைக்கில்லை நீச்சும் நிலையும்

முதலையாம் நீர் மிருகத்திற்கு நீரில் நீந்தும் செயலும், நிலைக்குஞ் செயலும் இல்லை என்பது கருத்து.

### 45. அச்சமும் நாணமும் அறிவிலார்க்கில்லை

விவேக விருத்தி இல்லாதவர்கள் பெரியோர்களிடத்தில் பயமும் கெட்ட செய்கைகளில் வெழ்க்கமுமடையார் என்பது கருத்து.

### 46. நாளுங் கிழமெயு நலிந்தோர்க்கில்லை

நல்லநாளைப் பார்ப்பதும், நற்பலன் வேண்டுமென வாரத்தைக் கருதிப்பார்ப்பதுமாகியச் செயல்களை வியாதியஸ்தருக்குப் பார்ப்பதில் பயனில்லை. நோய்க்கண்டவுடன் சிகிட்சை செய்வதைவிட்டு நாளையும், அதன் பலனையும் நோக்குவதானால் வியாதி அதிகரித்து நோயாளி துன்பமடைவானாதலின் அக்காலத்தில் யாதொரு நாளையுங் கருதாது நோயைக் கருதி உடனுக்குடன் பரிகாரஞ் செய்யவேண்டுமென்பது கருத்து.

### 47. கேளுங்கிளையுங் கெட்டோர்க்கில்லை

சுருதி விசாரிணையும், குடும்ப விசாரிணையும் சுகநிலை கெட்டு எழியநிலை அடைந்தோர்க்கு இல்லையென்பது கருத்து.

### 48. உடைமெயும் வருமெயு மொருவழிநில்லா

தற்காலந் தோன்றி உடைத்தாய தேகமும் மறு பிறவிக்கு ஆளாகுந் தேகமும் எண்ணிய மார்க்கத்திற் சென்று நிலைக்காது என்பது கருத்து.

### 49. குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர் நடைமெலிந்தோரூர் நண்ணினுநண்ணுவர்

ஏகச்சக்கிராதிபதியாய் வெண்குடை நிழலில் யானையின் மீது சென்றவர்களும், ஒடுங்கிக் கால்நடையில் நடப்பினும் நடப்பார்என்பது கருத்து.

**50. சிறப்புஞ் செல்வமும் பெருமெயு முடையோர்**

**அறக்கூழ்சாலை யடையினுமடைவர்**

சிறந்த வாழ்க்கையும், திரவிய சம்பத்தும், பெரியோரென்னும் பெயரும் பெற்று வாழ்ந்தவர்கள் அன்னசத்திரத்திற் சேரினுஞ் சேருவர் என்பது கருத்து.

**51. அறத்திடு பிச்சை கூறியிரப்போர்**

**அரசரோ டிருந்தரசாளினு மாளுவர்**

தருமஞ் செய்வோரிடத்துக் கையேந்தி பிச்சை இரப்போர் ஓர் காலத்தில் அரசரோடு வீற்றிருந்து இராட்சியம் ஆளினும் ஆளுவர்.

**52. குன்றத்தினைய நிதியை படைத்தோர்**

**அன்றைப்பகலே யழியினுமழிவர்**

மலைக்கொப்பாய திரவியக் குவியலை உடையவராயினும் அதே மத்தியானத்துள் இழந்தாலும் இழப்பர்.

**53. எழுநிலை கூடங் கால் சாய்ந்துக்குக்**

**கழுதை மேய்ப்பா ழாகினுமாகும்**

எழடுக்குகள் அமைந்த மாடமாளிகையும் கற்றூண்களமைந்த சபாமண்டபம் ஆயினும் ஓர் காலத்தில் கழுதைகள் வந்தடையும் குட்டிச்சுவராகத் தோன்றினுந் தோன்றும்.

**54. நல்லஞானமும் - வானக நோக்கினும்**

**எல்லாமில்லை யில்லில்லோர்க்கே**

விவேக விருத்தி பெற விரும்புவோருக்கும் வானமாகும் அகண்டத்துலாவ விரும்புவோருக்கும், நிலையாகத் தங்கியிருந்து ஆராய்ச்சி செய்வதற்கு ஓரிருப்பிடம் இல்லாமற் போமாயின் விரும்பிய சுகம்யாதுங் கூடாவென்பது கருத்து.

**55. தறுகண்யானைத் தான் பெரிதாயினுஞ்**

**சிறுகண் மூங்கிற் கோற்கஞ்சும்மே**

கணுமூட்டுகளும் பெரியதுமான யானையாயினும் சிறு கணுக்களமைந்த மூங்கிற்றடிக்கு அஞ்சுமென்பது கருத்து.

**56. குன்றுடைநெடுங்கா டூடே வாழினும்**

**புன்றலைபுல்வாய் புலிக்கஞ்சும்மே**

மலைச்சார்பாகுங் காட்டில் வாசஞ்செய்யினும் ஊனைக்கௌவும் நாவினையுடைய புலிக்கு அஞ்சவேண்டுமென்பது கருத்து.

**57. ஆரையாம்பள்ளத் தூடே வாழினும்**

**தேரைபாம்பிற்கு மிகவஞ்சும்மே**

கற்பிளவுகளுக்குள்ளே தேரையானது பயமற்ற வாழ்க்கையுற்றிருப்பினும் பாம்பிற்கு அஞ்சுமென்பது கருத்து. (அதுபோல்),

**58. கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டிற்**

**கடும்புலி வாழுங் காடுநன்றே**

நீதியும், நெறியும், வாய்மெயுமற்று கொடிய வன்னெஞ்சமே குடிகொண்ட அரசனது நாட்டில் வாழ்வதினும் உயிரை வதைத்து

ஊனைத்தின்னும் புலிவாழுங் காட்டில் வசிப்பது நன்றென்பது கருத்து.

**59. சான்றோரில்லா தொல்பதி யிருத்தலின்**

**தேன்றேர்க்குறவர் தேயனன்றே**

பஞ்சபாதகமற்ற மேன்மக்களாம் சாந்தரூபிகள் வாசஞ்செய்யாவிடத்தில் வாழ்க்கை பெற்றிருப்பதினும் தேனையும், மயிர்ப்பீலியையும் விற்று சீவிக்குங் குறிஞ்சி நிலவாசிகளாம் குறவருடன் கூடி வாழ்வது மேலென்பது கருத்து.

**60. இல்லோரிரப்பது மியல்பே யியல்பே**

**இரந்தோர்க்கீவது முடையோர்க்கடனே**

இல்லாத ஏழைகளாயிருப்போர் எங்கேனுஞ் சென்று இரந்துண்ண வேண்டியது இயல்பாகும். (ஆதலின்) அவ்வகை இரப்போர்க்கு திரவிய சம்பத்துடையார் தங்களாலியன்ற உதவிபுரிவதே கடனென்பது கருத்து.

**61. மணிவணியணிந்த மகளீராயினும்**

**பிணவணியணிந்துங்கொழுனரைத்தழுஇ**

உடுத்தவாடை கோடியாக முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர். நவரத்தின ஆபரணங்களை அணிந்து தங்கள் கணவர்பாற் கூடிக் குலாவி ஆனந்தத்திலிருக்கும் பெண்களும் சகல ஆபரணங்களையுங் கழற்றி எறிந்து வெள்ளையாடை, யுடுத்தி தலைவிரித்து நிற்குங்காலம் வரினும் வரும்.

**62. பெற்றமுங்கழுதையும் மேய்ந்தவப்பாள்**

**பெற்றொடி மகளிரும் மைந்தருங்கூடி**

**நெற்பொலி நடுநக ராயினுமாகும்**

பன்றியையுங் கழுதையையும் மேய்த்து சீவிப்பவள் ஓர்கால் இராணியோடும், இராஜபுத்திரரோடுங் கூடிக் குலாவி நெல்வயற்சூழ்ந்த நாட்டினும், நகரினும் வசிப்பள்.

**63. வித்துமேரு முளவாயிருப்ப**

**எய்த்தங்யிருக்கும் யேழையும் பதரே**

விதை முதலும், பூமியும், ஏருங் கையிருப்பிலிருக்க அவற்றை உழுது பயிர் செய்து சீவிக்காது தன்னை ஏழையாக்கி வெளிதோன்றிவருபவன் பதருக்கொப்பாவன். (யீதன்றி),

**64. காலையும் மாலையும் நான்மறையோதா**

**அந்தணரென்போ ரனைவரும் பதரே**

காலையிலும், மாலையிலும் நீதிநெறியமைந்த நல்வாய்மெய்களை ஓதியுணராது வேஷத்தினால் தங்களை அந்தணரென்று கூறித்திரியும் அனைவரும் பதருக்கொப்பாவர்.

**65. தன்னையுந் தனது தேயமக்களையும்**

**முன்னின்று காரா மன்னனும் பதரே**

தனது ராட்சியபார வாட்சியையும், தனக்குள் அடங்கிவாழுங் குடிகளையும் முன்பின் ஆராட்சியினின்று காப்பாற்றாத மன்னனும் பதருக்கொப்பாவான்

**66. முதலுள பண்டங்கொண்டு வாணிபஞ்செய்**

**ததன்பயனுண்ணா வணிகரும் பதரே**

திரவியமுதலைக்கொடுத்து சரக்கை வாங்கிவந்து வியாபாரத்தைப் பெருக்கி அதன் பலனைப் பெறாது வியாபாரியெனத்தோன்றியும் வீணே யலைந்து திரிபவனும் பதருக்கொப்பாவான்.

**67. ஆளாளடிமை யதிநிலமிருந்தும்**

**வேளாண்மெயில்லா வீணரும் பதரே**

வேணபூமியும் ஆள் அடிமைகளுமிருந்து உழுது பயிர் செய்துண்ணும் புருஷவல்லபமற்றவனும் பதருக்கொப்பாவான். (அதுபோல்),

**68. தன்மனையாளைத் தாய்மனைக்ககற்றி**

**பின்பவட்பாரா பேதையும் பதரே**

தனது மனையாளை அவள் தாய் வீட்டிற்கு அனுப்பிவிட்டு மறுபடியும் அவளை அழைக்காமலும், அவளை கவனியாமலும் இருப்பவன் எவனோ அவனும் பதருக்கொப்பாவான்.

**69. தன்மனையாளைத் தன்மனையிருத்தி**

**வுன்னியே யுணராவுலுத்தனும் பதரே**

தனது மனையாளைத் தனது வீட்டிலிருக்கச் செய்து அவளுக்கு அன்னமும் ஆடையுமளிக்காது வேறு சிந்தையால் உப்புத் தூண்போல் உளுத்துப்போவோனும் பதருக்கொப்பாவான்.

**70. தன் ஆயுதத்தையும் தன்கைப் பொருளையும்**

**பிறர்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே**

தனக்கென்றுள்ள ஆயுதத்தையும் தனது திரவியத்தையும் அன்னியன் கையிற் கொடுத்துவிட்டு விழிப்பவனும் பதருக்கொப்பாவான்.

**71. வாய்பறையாகவும் நாக்கடிப்பாகவும்**

**சாற்றுவதொன்றை போற்றிக்கேண்மின்**

நாவின் சொற்களையே மேளம் போற் பறைந்துக்கொண்டும் அச்சொற் களைக்கொண்டே சுட்டுத்திரியும் வகைகள் யாவற்றையும் எடுத்துரைக்கின்றேன் செவிசாயங்கோளென்று கூறலுற்றாள்,

**72, பொய்யுடை யொருவன் சொல்வன்மெயினால்**

**மெய்போலும்மே மெய்போ லும்மே**

பொய்யைச் சொல்லித்திரிவோன் அதைச் சொல்லும் வல்லபத்தினாலும், சாதுரியத்தினாலும் மெய்யைப்போற் கூறுகின்றான்.

**73. மெய்யுடையொருவன் சொற்சோர்வதனால்**

**பொய்போலும்மே பொய்போலும்மே**

மெய்யைச் சொல்லும் படியானவன் அவற்றை சொல்லும் வல்லபக்குறைவாலும் சொற்சோர்வினாலும் பொய்போல் திகைப்பன்.

(ஆதலினால்)

**74. இருவர் சொல்லையு மெழுதரங்கேட்டு**

**இருவரும் பொருந்த வுரையாராயின்**

**மநுநெறிமுறையால் வழுத்துத நன்று**

நியாயாதிபதியானவன் வாதிப்பரதிவாதி இவர்களின் வார்த்தைகளை எழுதரம் மடக்கி மடக்கி விசாரித்து யதார்த்தமொழிகண்டு நீதியளித்தல் வேண்டும்.

**75. மநுநெறி முறையின் வழக்கிழந்தவர்தாம்**

**மனமறவுறுகி யழுதகண்ணீர்**

**முறையுறத்தேவர் முநிவர்க்காக்கினும்**

**வழிவழியூர்வதோர் வாளாகும்மே**

அங்ஙனம் மநுநீதி தவறி, நியாயவழுவி கெடுநீதி உரைத்து விடுவானாயின் அந்நியாயமடைந்தோன் தான் அடைந்தக் கேட்டை முநிவரிடத்தேனுந் தேவரிடத்தேனும் அழுது முறையிடுவானாயின் அம்முறைப்பாடு பொய்ச்சான்று கூறியவன் சந்ததியையும், அந்நியாயம் அளித்தவன் சந்ததியையும் விடாமல் வாள்போன்றறுத்துவரும். ஆதலின்,

**76. பழியாய் வருவதும் மொழியாதொழிவதும்**

**சுழியாய்வருபுன லிழியா தகல்வதும்**

**துணையோடல்லது நெடுவழி போகேல்**

**புணைமீதல்லது நெடும்புன லேகேல்**

**வழியே யேகுக வழியே மீளுக**

**இசைகாணுலகிற் கியலாமாறே.**

ஒருவர் பழிச்சொல்லை நீதிமொழியால் அகற்றுவதும், சுழலிட்டுவரும் நீரோட்டத்தில் இறங்காது அகல்வதும் யாதொரு துணையுமின்றி நெடுவழிச் செல்லுதலும், யாதாமோர் ஓடத்தின் உதவியின்றி ஆறுகளைக் கடப்பதுங் கூடாது. (ஆதலின்)

சரியானப்பாதையிற் செல்லுவதும், சரியானப்பாதையில் மீளுவதுமே உலகில் வாழும் விவேகிகளுக்கு அழகாகுமென்பது கருத்து.

## வெற்றிஞான மூலமுங் கருத்துரையும் - முடிவு பெற்றது

இவ்வெற்றிஞான வாசகந் தோற்றிய காரணம் யாதென்பீரேல், பாண்டியன் வம்ச வரிசையைச் சார்ந்த கிள்ளை வள்ளுவனென்னும் அரசனுடைய தாதை சயம்பென்பவன் தனது மாளிகையை விட்டு வேணுவிஹார அறஹத்துவை தெரிசிக்கப்போகுங்கால் வழியே சென்று வழியே மீளாமல் குறுக்குவழியாக ஓர் நந்தவனத்தினடுவே போகுங்கால் ஓர் சிற்றரசன் பத்திரி சயம்பனென்னு அரசபுத்திரனைக் கண்டு விரகமீறியபோது அவனதற்கிணங்காது வியாரஞ்சென்று மறுபடியும் அவ்வழி வருங்கால் வேவுகர்களால் பிடித்து மந்திரிகளால் சரிவர விசாரியாது தெண்டித்து விட்டபடியால் அவற்றை அம்பிகா தேவிக்குத் தெரிவிக்கவும் அம்மன் இவ் வெற்றிஞானத்தையெழுதி திவாகர சிற்றரசர்களுக்கனுப்ப அவன்

மறுபடியும் சங்கதிகளைத் தேற விசாரணைச்செய்து சயம்பனை விடுவித்து வெற்றி ஞானவாசத்தையும் வேண திரவியத்தையும் மகனுக்களித்து தனது மாளிகைக்கு அனுப்பிவிட்டான் துன்று முதல் புத்ததன் மத்தைச் சார்ந்த சமணமுநிவர்கள் யாவரும் முன் வாசக நூற்கள் இரண்டுடன் இவற்றையும் சேர்த்து திரிவாசக மென வழங்கி வந்தார்கள். சத்திய தன்மமாம் புத்ததன்மம் மாறுபட்டு அபுத்ததன்மம் மேற்கொண்டபோது திரிவாசகத்தில் இருவாசகம் ஔவை வாக்கென்றும், உருவாசகம் பின்கலை நிகண்டிலில்லா ராமபாண்டியன் வாக்கென்றுங்கூறி வேறுபடுத்தி விட்டார்கள். இதன் சரித்திரத்தை கிறிஸ்து பிறந்த 95 வருஷம் அரசாண்ட கிள்ளை வள்ளுவன் மூதாதை வம்மிஷவாளியிற் காணலாம்.

**(மூன்றாம் வாசகம் மூன்றாமாவளடு 25ஆம் இலக்கத்தில் தொடங்கி 20ஆம் இலக்கத்தில் முற்றுப் பெறுகின்றது)**

## 4. குண்டலிகேசி

இக்குண்டலிகேசியென்னும் பெயர் பூர்வம் மதுரையை அரசாண்டுவந்த ஓர்முக்கிய பௌத்தவரசனின் புத்திரி குண்டலிகேசியென்னும் அம்மை பிக்குணிகள் மடமென்னும் இஸ்திரீகள் ஞானசங்கத்திற் சேர்ந்து அறஹத்து நிலை அடைந்தபின் "அறவாழியான் திரிபேதவாக்கியங்களாம் நீதி வாக்கியங் களைத் திரட்டி அந்நூலுக்கு குண்டலிகேசி என்னும் பெயரிட்டுள்ளதாகக் கூறுகின்றனர் அதன் முகப்பிலுள்ளக்

## கடவுள் வாழ்த்து

முன்றான் பெருமெய்க்கு ணின்றான் முடிவெய்துகாகும்
நன்றே நினைத்தான் குண்மொழிந்தான்றனக்கென்
நன்றே கொன்றானுமில்லா வள்ளான் பிறர்க்கேயுறுதிகழ்ந்தான்
நன்றே யிறைவ னவன்றாள் சரணங்களன்றே.

## அவையடக்கம்

நோய்க்குற்றமாந் தர்மருந்தின்சுவை நோக்கில்லார்
தீக்குற்ற காதலுடை யார்புகைத் தீமெமோரார்
போய்க்ருற்ற மூன்று மறுத்தான் புகழ் கூறுவேற் கென் வாய்க்குற்ற
சொல்லின் வழுவும் வழுவல்லவென்றே.

## நூல்

## தீவினையச்சம்

வாயுவினை நோக்கியுள மாண்டவிய நாவா
மாயவினை நோக்கிய வாழ்க்கையது வேபோற்
றீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்
தூயவனை நோக்கியுள துப்புரவு மெல்லாம்.

எனும் இத்தகையச் செய்யுட்கள் அமைந்து குண்டலிகேசியென்னும் பெயர் பெற்றுள்ள தன்ம நூலானது தன்மப்பிரியர்கள் யாவரிடத்தேனும் இருக்குமாயினும் இருக்குமிடங் கண்டாயினும் பெற்று உதவி புரிவரேல் அவர்களே சத்திய தன்மத்தைப் பரவச் செய்தவர்களுமாவதுடன் அப்பலனையும்

அடைபவர்களாவர்.தற்காலம் நம்மிடங் கிடைத்துள்ளது ஒன்பது பாடல்களேயாம்.

3:14, செப்டம்பர் 15, 1909

## 5. தேன்பாவணி தேவபாணி

வினா: தென்னாடெங்கும் தேன்பரவணியென்னும் நூலை தேன்பாவணி என்று சகலர் நாவிலும் வழங்க தமிழன் பத்திராதிபர் மட்டிலும் தேவபாணி, தெய்வபாணி என்று கூறுவது இவரது தமிழோவென்றும் சங்கிக்கின்றார்கள்.

வே.ந. தாமோதரம்பிள்ளை . பெங்களூர்,

விடை தமிழின் வாசகநடையிலும் செய்யுள் நடையிலும் வலித்தல் விகாரம், மெலித்தல் விகாரம், விரித்தல் விகாரம், தொகுத்தல் விகாரம், நீட்டல் விகாரம், குறுக்கல்விகாரம் என அறுவகையுண்டு. அத்தகைய இலக்கண நடைகளை தற்கால வித்துவான்கள் அறிந்திருப்போர் சிலரேயாகும். பலர் பூர்வத்தமிழ்ச்செய்யுட்களையும், இலக்கணங்களையுந் தங்கட் கண்களால் கண்டேயிருக்கமாட்டார்கள்.

அவ்வகைக் குறை கூறும் வித்துவான்களை அவர்களது பெயரைக் கண்டு நேரில் எமக்கெழுதும்படி கூறவும்.

### தொல்காப்பியம்

அந்நாற் சொல்லுந் தொகுக்குங்காலை வலிக்கும் வழி வலித்தலும், மெலிக்கும் வழி மெலித்தலும், விரிக்கும் வழி விரித்தலும்,

தொகுக்கும் வழி தொகுத்தலும், நீட்டும் வழி நீட்டலும், குறுக்கும் வழி குறுக்கலும் நாட்டல் வலியமென்பனார் புலவர்.

தேன்பாவணி என்னும் மொழிதிரிந்து தேவபாணியாயிற்றா அன்றேல் தேவபாணி என்னும் மொழியை மாற்றி தேன்பாவனி என்று வரைந்திருக் கின்றனரா என்பதை அவர்கள் கண்டுமிரார்கள் கேட்டுமிரார்கள் என்பது திண்ண ம்.

இத்தகைய அறியா குதர்க்கங்களைச் செய்து வீணே மனத்தாங்கலை உண்டு செய்து வருவார்களாயின் தேவபாணியின் ஆக்கியோன் யாரென்றும், அஃது யாருடைய சரித்திரமென்றும் எக்காலத்தில் அச்சரித்திரத்தை மணிமேகலை மாதவிக்குப் போதித்தாளென்றும் அச்செய்யுளுள் எத்தனைச் செய்யுட்களைக் கூட்டியுங் குறைத்தும் பெயரை மாறுபடுத்தியும் இருக் கின்றார்கள் என்றும், அதன் பிரட்டை சரித்திர ஆதரவுடனும் செய்யுட்களின் ஆதரவுடனும், நமது பத்திரிகையில் வெளியிடக்கார்த்திருக்கின்றோம். இனியடங்காது மீருகிறவர்களை அடக்கும் ஆயுதம் அதுவேயாகும்.

**யாப்பருங்கலக்காரிகை - செய்யுளியல்**

கூறிய வுருப்பிற் குறைபாடின்றித் / தேறிய விரண்டுந் தேவபாணியுந்

தரவே யொழியினுந் தாழிசையொழியினு / மிருவகை முத்திறத் தெண்ணே நீங்கினு

மொரு போகென்ப வுணர்த்திசினாரே.

3:22. நவம்ப ர் 10, 1909

**6. புத்தகம் என்னும் மொழி**

வினா : புத்தகமென்னு மொழி பூர்வசாஸ்திரங்களில் ஏதேனும் வரைந் திருக்கின்றார்களா அவற்றை அன்னூற் பெயருடன் விளக்கித் தெளிவிக்கும்படி வேண்டும்,

வீ. பாலக்கிருஷ்ணன், வேலூர்.

விடை. : தாம் வினாவியுள்ளவற்றிற்கு சிறுவயதில் கற்றுத்தேர்ந்த கலை நூற்களே போதுஞ்சான்றாகும். அதாவது, பிடகத்தை விளக்கிய பிடஹறியை சிந்திக்குமிடத்து, புத்தகத்துள்ளுரை மாதே பூவிலமர்ந்தருள் வாழ்வே - என்றும்,

**சீவகசிந்தாமணி**

அணங்கெனவுரித்த தோலனைய மேனியன்
வணங்குநோன்சிலை யெனவளைந்த யாக்கையன்
பிணங்கு நூன் மார்பினன் பெரிதோர் புத்தக
முணர்ந்து மூப்பெழுதின தொப்பத்தோன்றினான்.

**மூவர்தமிழ் - நாலடி நானூறு**

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா
ருய்த்தக மெல்லா நிறைப்பினு - மற்றவற்றைப்

போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து

தேற்றும் புலவரும் வேறு.

3:28, டிசம்ப ர் 22, 1909 7.

**7. முச்சங்கங்கள்**

வினா : ஐயா நமது தென்னிந்தியாவிலுள்ள மதுரையில் முதற்சங்க மென்றும் நடுச்சங்கமென்றும், கடைச்சங்கமென்றும் மூன்று சங்கங்கள் இருந்தன வென்று கூறுகின்றார்களே அதன் காரணமென்னை. அவ்வகை யாகவே தமிழ்ச் சங்கங்களிருந்திருக்குமாயின் பௌத்த சங்கத்தோர்களாகும் சமணமுநிவர்கள் இயற்றியுள்ள இலக்கிய நூற்களும், இலக்கண நூற்களும், கலை நூற்களும் கணித நூற்களும் இருக்கின்றனவேயன்றி முதற்சங்கம். நடுச் சங்கம், கடைச்சங்கம் என்னும் சங்கத்தோர் இயற்றியுள்ள நூற்கள் யாதோ விளங்கவில்லை .

ப கோபால். தஞ்சை

விடை அன்பரே தாம் வினவியுள்ள சங்கங்களின் பெயர்களைக் கொன்டே அவைகளிருந்தன என்பதும், இல்லை என்பதும் தாமே உணர்ந்துக் கொள்ளலாம்.

ஈதன்றி மதுரையில் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட புத்தசங்கங்கள் இருந் தனவென்று சிலாசாசனங்களாலும், செப்பேடுகளாலும் கண்டறிந்த (ஆர்ச்சலாஜிக்கல் சர்வேயர்கள்) தெளிவாக வரைந்து வைத்திருக்கின்றார்கள்.

அவற்றினுள் முதற்சங்கம் இருந்ததென்றாயினும், நடுச்சங்கம் இருந்த தென்றாயினும், கடைச்சங்கம் இருந்ததென்றாயினும் ஓர் குறிப்புங்கிடையாது.

அச்சங்கங்கள் இன்ன மதத்தினரைச் சார்ந்ததென்று திடம்படக்கூற யாதோர் ஆதரவுங் கிடையாது. அவ்வகையாகவே சிலத் தமிழ்ச் சங்கங்கள் இருந்ததாக ஒப்புக்கொள்ளினும், அஃது முதற் சங்கம், இரண்டாஞ் சங்கம், மூன்றாஞ் சங்கமென்று வழங்குமேயன்றி முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச் சங்கமென வழங்குமோ

அதை விளக்கச் சென்னையில் ஓர் கலாசாலையை எடுத்துக் கொள்ளுவோம். ஆதியிற் சிலர்கூடி வாசித்தக் கலாசாலை முதற் கலாசாலை என்றும், இரண்டாவது சிலர்க்கூடி வாசித்த கலாசாலைக்கு இரண்டாங் கலாசாலை என்றும், மூன்றாவது சிலர்க்கூடி வாசித்த கலாசாலைக்கு மூன்றாங் கலாசாலை என்றுங் கூறுவரேயன்றி முதற்கலாசாலை, நடுக்கலாசாலை, கடைக்கலாசாலை என்று கூறுவரோ

அங்ஙனங் கூறுதற்கு மூன்று சங்கங்களும் அக்காலத்தில் இல்லாமல் ஒவ்வோர் சங்கங்கள் இருந்த காலங்களையும் வெவ்வேறென வரையறுத்துக் கூறியிருக்கின்றார்களே. அத்தகையாய் வறையறுத்தக் காலங்களிற் தோன்றிய சங்கங்களை முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென முடிக்கவுந் தகுமோ. கடைச்சங்கமென்று முடிவு

பெற்று பின்னும் நான்காஞ் சங்கமென்னும் நாமந் தோன்றுமோ ஒருக்காலுந் தோன்றா

இவைகள் யாவும் பொய்க்குருக்கள் தோன்றி பொய்மதங்களையும், பொய்ச்சாதிகளையும், உண்டு செய்து அவைகளை மெய்ப்படுத்துமாறு மூன்று சங்கங்கள் இருந்ததென்று வகுத்தும் அச்சங்கம் தற்காலம் உண்டாவென்று கேட்போருக்கு உத்தாரமளிக்க வழியின்றி முதல், நடு, கடை என செல்காலத்தில் நிறுத்திக்கொண்டார்கள் தமிழ் பாஷையினை ஈன்று வளர்த்தவர்களும், சத்திய தன்மத்தைப் பரவச்செய்தவர்களும், சமணமுனிவர்களாதலின் அவர்களால் கொண்டாடி வந்த புத்து, தன்ம, சங்கமென்னும் முத்திர மணிகளை முச்சங்கங் களென மாற்றிவிட்டார்கள். அதாவது, ஏக்காலத்தில் முதலாகத் தோன்றியவர் புத்தர், நடுவாகத் தோன்றியது தன்மம், கடையாகத் தோன்றியது சங்கம். இவற்றையே முத நடு கடைச்சங்கமென வழங்கிவந்தார்கள். மற்றும் முறையே என்றுமழியா பதுமநிதி என்றும், தன்மநிதி என்றும், சங்கநிதி என்றும் கொண்டாடி வந்தார்கள்

இத்தகைய மெய்க்குருக்களின் போதனைகளையும், செயல்களையும், மாறுபடுத்தி மதக்கடை வைத்து சீவிக்க முயன்ற பொய்க்குருக்கள் தங்களது முதற்சங்கம் நாலாயிரத்தி ஐந்நூறு வருடம் இருந்ததென்றும், கடைச்சங்கம் இரண்டாயிர வருடம்

இருந்ததென்றும், நடுச்சங்கம் மூவாயிரத்தைந்நூறு வருடம் இருந்ததென்றும் பத்தாயிர வருட கணக்கை பரக்க எழுதிவைத்திருக் கின்றார்கள்.

நூறுவருட கணக்கை நுட்பமாக எடுத்து வரையறுத்துக்கூற வகையற்ற வர்கள் பத்தாயிர வருட கனக்கை எந்த அரசாங்க பதிவில் பதிந்துவைத்திருந் தனரோ விளங்கவில்லை.

தங்கள் சங்கங்களின் கணக்கை பத்தாயிர வருடமெனப் பதிந்து வைத்துள்ளவர்கள் எந்த யுகமுதல் எதுவரையிருந்ததென்னுங் காலவரையை ஏட்டில் எழுதாதிருந்து விட்டார்கள் போலும்.

எவ்வகை கணக்குகளையும் யுகக்கணக்குகளாம் இருட்டரையில் விட்டு மயக்குகின்றவர்களாதலின் தங்கள் சங்கக் கணக்குகளை பத்தாயிர வருடமென வகுத்துள்ளவர்கள் தமிழ் பாஷையும், தமிழிலக்கங்களும் அசோகவரசன் காலத்தில் மதுரையிற் பிரபலப்பட்டதா -அன்று அசோகவரசன் காலங்களுக்கு முன்பு பிரபலப்பட்டதா என்பதை சிலாசாசனங்களினாலும், செப்பேடுகளினாலும் ஆராய்ச்சி செய்வார்களாயின் பத்தாயிரவருட சங்கத்தின் கணக்குப் பரக்க விளங்கும்.

ஒரு சங்கம் 4,500-வருடம் இருந்ததென்றும் மறுசங்கம் 3,500-வருடம் இருந்ததென்றும், இன்னொரு சங்கம் 2,000 வருடம்

இருந்ததென்றும், வரையறுத்து வெளியிட்டுள்ள கணிதத்தின்படி முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென்னும் பெயர் தோன்றுமா, கடைச்சங்கமென்னும் பெயரைக் கொடுத்தோர்கள் சங்கத்தோரா, குடிகளா, மதுராபுரியில் இச்சங்கங்கள் எங்கு ஸ்தாபிக்கப்பட்டிருந்தது.

இஸ்தாபனபீட சிலாசாசனங்கள் ஏதேனுமுண்டா, இல்லை. ஈதன்றி கடைச்சங்கம் ஒன்றிருந்து நசிந்ததென்பதை குடிகள் நன்கறிந்திருப்பார்களாயின், நான்காஞ் சங்கமென்றும் ஒன்று தோன்றுமோ. கடைச்சங்கமாக முடிவு பெற்றதை மூன்றாஞ் சங்கமாகத் தொடரப்போகுமோ. இத்தகையச் செயல் களைக்கொண்டே முச்சங்கங்கள் இருந்ததுண்டா இல்லையா என்பதை தாமே அறிந்துக்கொள்ள வேண்டியதுதான்.

ஞான நூற்களில் தோன்றிய முச்சங்கங்கள் யாதென்பீரேல், ஓர் குழந்தை பிறந்தபோது அமுதூட்டி அன்னமளிக்குங்கால் ஓர் கூட்டங்கூடுவது முதற்சங்கமென்னப்படும். இரண்டாவது விவாகத்திற்காகக் கூடுவது நடுச்சங்கம் என்னப்படும். மூன்றாவது இறந்தப்பின் கூடுவது கடைச்சங்கம் என்னப்படும்.

இத்தகையச் செயல்களுக்கும் முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்க மென்று கூறுவர்.

**பட்டினத்தார் பாடல்**

முதற்சங்கமுதூட்டு மொய்குழலார்தம்மெய் / நடுச்சங்க நல்விலங்கு பூட்டுங் - கடைச்சங்க

மாம்போதனவூது மம்மட்டோ லிம்மட்டே / நாம் பூமி வாழ்ந்த நலம்.

பத்தாயிர வருட பண்டைகாலச் செய்யுட்களையும், விண்டகாலச் செய்யுட்களையும் விரித்துணரில் வெள்ளென விளங்கும்.

3:32, சனவரி 18, 1910.

**8. நாயனார் செத்தமாடெடுத்தாரா**

வினா : நமது திருவள்ளுவநாயனார் ஆற்றியுள்ள ஞானவெட்டியில் செத்ததோர் மாடெடுப்போமென்று எப்போது கூறியிருக்கின்றாரோ அப்போதே செத்தமாட்டைப் புசித்திருக்கவேண்டுமென்று சிலர் சங்கிக்கின்றார்கள்.

பா. வேணுகோபாலன்

விடை : அந்நூலின் பெயர் ஞான வெற்றியா அல்லது ஞானவெட்டியா. அந்நூலின் ஆக்கியோன் திருவள்ளுவ சம்பவனாரா அல்லது திருவள்ளுவ நாயனாரா, அந்நூற்றொகை ஆயிரத்திஐ நூறா, ஆயிரத்தி எண்ணூற்றித் தொண்ணிற்றொன்பதா வென்பதை தேற விசாரித்தவிடத்துத் தெள்ளென விளங்கும்.

இஞ்ஞானவெற்றியை அச்சிட்டு வெளிக்குக் கொண்டு வந்தவர்கள் பராயசாதியோரும், பராய மதஸ்தர்களுமாதலின் தங்கள்

மனம்போனவாறு செத்ததோர் மாடெடுப்போமென்றும், கட்டையும் அடுக்கிக் கொள்ளுவ மென்றும் குறள் செய்த காலத்தில் என்றும் பலமதங்களை கண்டித்தும் நூதனப் பாடல்களை அனந்தமாக அதில் நுழைத்தும் விட்டார்கள்.

சாம்பவனார் தான் பாடியுள்ள நொண்டி சிந்தினுள் தன்னுடைய பௌத்ததன்ம ஞானத்தின் சிறப்பையும், விருதிகளின் வல்லபத்தையும் விளக்கி வந்தவர் செத்ததோர் மாடெடுப்போமென்றும், கட்டையை அடுக்கிக் கொள்ளுவோமென்றுங் கூறுவரோ.

வள்ளுவர்களென்று கூறப்படுவோர் அரசர், வணிகர், வேளாளரென்ற மக்தொழிலாளருக்குங் கன்மகுருக்களென்று முன்கலை திவாகரத்திலும், உன் கலை நிகண்டிலும் தெளிவாகக் கூறியிருக்க வள்ளுவ வம்மிஷ வரிசையோர் செக்கமாடெடுப்போமென்று கூறியுள்ளது அபுத்தர்களின் புரட்டுச் செய்யுளேயாம்.

அவ்வகையாக செத்தமாடெடுப் போமென்னும் இழிந்த செயலைக் கூறியபின்னர் "சாதியில் உயர்ந்தவன்கா ணென்னும் செய்யுள் தோன்றுமோ,

"செத்ததோர் மாடெடுப்போமென்னும் வாக்கியச் கூறியிருப்பாராயின்" சாதியை சொல்லுகிறேனெனும் பாட்டின் வரிசையில் சேர, சோழ நாட்டிலுள்ள பாவிகள் செத்தமாட்டை தின்னும்படி வதைத்தார் களென்று சத்துருக்களின் செயலைத் துக்கித்துக் கூறுவாரோ.

செத்தமாடெடுப்பது யாதார்த்தமாயின் உலகவுற்பத்தித் தருவில் சீவ செந்துக்களை வதைத்து அதன் மாமிஷங்களைப் புசிக்கலாகாதென்று கூறுவரோ, ஒருக்காலுங் கூறியிருக்கமாட்டார்.

"நான் அந்தஸ்துள்ள சீவனமுள்ளவன் என்றொருவன் கூறி மலமெடுப்பது எனது தொழில் என்பானாயின் விவேகிகள் அம்மொழியை யாதென்றேற்பர். யாவும் பராயமதப் புறட்டேயாம். வள்ளுவர் வம்மிஷவரிசையில் பூர்வத்தில் நிறைவேறியும் தற்காலம் நிறைவேறிவந்தும், அச்செய்யுளிலும் இருக்குமாயின் விவேகிகள் யாவரும் ஒப்புக்கொள்

முற்காலத்திலும் இராது தற்காலத்திலும் இராது, ஞானவெற்றி என்னும் 1500 செய்யுளிலுமிராது, நூதனமாகச் சேர்த்துள்ளதை விவேகிகள் ஏற்பரோ ஒருக்காலும் ஏற்கமாட்டார்கள்.

ஏற்பவர்கள் யாரெனில், சாராயத்தைப் பூராயமாகக் குடித்து ஆட்டு மாமிஷம், மாட்டு மாமிஷம், பன்றி மாமிஷம் முதலியதைத் தின்று

மதோன்மத் தராகத் திரிபவர்களே ஏற்றுத் தூற்றித் திரிவர். அத்தகையோர் வார்த்தைகளை நீங்கள் ஏற்காது அசுத்த புசிப்பாம் மதுமாமிஷங்களை அகற்றி சீவிக்கக் கோறுகிறோம்.

ஞான வெற்றியிலுள்ளப் பொய்ப்பாடல் யாவுமிராது சுத்தப்பிரிதியைக் கூடிய சீக்கிரம் அச்சிட்டு வெளியிடுவோம்.

3:40, மார்ச் 16, 1910 9.

## 9. பஞ்ச காவியங்களில் ஒன்றாகிய குண்டலகேசி

இக்காவியத்துள் நமக்கு ஒன்பது பாடல் கிடைத்துள்ளது. இதனை நோக்கும் அன்பர்பால் மற்றும் இச்செய்யுட்கள் வேறு கிடைத்திருக்குமாயின் உதவிபுரிய வேண்டுகிறோம்.

### கடவுள் வாழ்த்து

முன்றான் பெருமெக்குணின்றான் முடிவெய்துகாறும்
நன்றே னினைந்தான் குணமொழிந்தான் தனக்கென்
நொன்றானு மில்லான் பிறர்க்கே யுறுதி சூழ்ந்தா
நன்றே யிறைவ னவன்றாள் சரணங்கணன்றே.

### அவையடக்கம்

நோய்க்குற்ற மாந்தர் மருந்தின் சுவை நோக்குகில்லார்
தீக்குற்ற காதலுடையார் புகைத் தீமெயோரார்
போய் குற்ற மூன்று மறுத்தான் புகழ் கூறுவேற் கென் வாய்க்குற்ற
சொல்லின் வழுவும் வழு வல்லவென்றே.

### தீவினை யச்சம்

வாயுவினை நோக்கியுள் மாண்டவய நாவா
யாயுவினை நோக்கியுள் வாழ்க்கையதுவேபோற்
றீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்
தூயவனை நோக்கியுள் துப்புரவு மெல்லாம்.

## புணர்ச்சிவிழையாமெய்

அனலென நினைப்பிற் பொத்தி
யகந்தலைக் கொண்டகாமக் கனலினை யுவப்ப நீராற்
கடையற வலித்து மென்னார் நினைவிலாப் புணர்ச்சி தன்னால்
நீக்குது மென்று நிற்பார் புனலினைப் புனலினாலே
யாவர் போகாமெய் வைப்பார்.

## யாக்கை நிலையாமெய்

கோள்வலைப் பட்டுஞ் சாவாங் கொலைக்களங் குறித்துச்சென்றே
மீளினு மீளக்கண்டு மீட்சியொன்றானு மில்லா
நாளடி யிடுத லொன்று நம்முயிர் பருகுங் கூற்றின்
வாளின்வாய் தலைவைப்பார்க்குச் செல்கின்றோம் வெல்கின்றோமே.

## தூயதன்மெய்

எனதென சிந்தித்தற்றன்னுடலது பற்றுக்காமேற்
றினைப்பெய்து புனகம் போல சிறிததும் பற்றாதாகி
வினையொழியத் தினை மாசற்று மீண்டிடி லுலகவின்பப்
புனலினைக் கழுவியாற்றி புந்தியி லுரைது மென்பார்.

## இறைமாட்சி

சீற்றம் செற்று பொய் நீக்கிச் செங்கோலினாற்

கூற்றங் களைந்து கொடுக்க வெனுந்துணை

மாற்றமேன் வின்றான்றடு மாற்றத்துத்

தோற்றந் தன்மெயுங் காமுறத் தோன்றினான்.

## குற்றங்கடிதல்

மண்ணுளார் தம்மெய்ப்போல்வார் மாற்றதேயன்று வாய்மெய் நண்ணினாற் றிறத்துங் குற்றம் குற்றமே நல்லவாகா விண்ணுளார் புகழ்தற்கொத்த விழுமியா நெற்றி போழ்ந்த கண்ணுளான் கண்டத்தன்மேற் கறையை யார் கறையென்றென்பார்.

## இடுக்கணிழீயாமெய்

வேரிக்கமழ் தாரரசன் விடு கென்ற போழ்துந்

தாரித்தலாகா வகையாற் கொலைச்சூழ்ந்த பின்னும்

பூரித்தல் வாடுதலென் றிவற்றால் பொலிவின்றி நின்றான்

பாரித்தலெல்லாம் வினையின் பயனென்ன வல்லான்.

அன்பர்களே! அழியா தன்ம நூற்களை வெளியிட்டு ஆதரிப்பதே ஆனந்த தன்மமாதலின், அந்த தன்மத்திற்கு ஆதிமூலனாம் அறன் செயலை முற்றும் ஆய்ந்து அறஹத்துநிலை பெற விரும்புவோர் சத்தியதன்ம நூற்களை சகலருக்கும் பரவச்செய்ய வேண்டுகிறோம்.

3:47. மே 4, 1910 10.

## 10. வள்ளுவர் காலம்

வினா : இம் மே மாதம் 2ல் வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகை ஐந்தாம் பாரம் இரண்டாவது கலத்தில் திருவள்ளுவரைப் பற்றிய சில குறிப்பு களென்னு முகப்பிட்டு "நல்கூர் வேள்வியார் பாட்டில் வடதிசையை நோக்கி நப்பின்னை பிராட்டியை மணந்த கண்ணபிரானை உத்தர மதுரைக்கு அச்சு (ஆதாரம்) என்றும், தெய்வப்புலவர் கடைச்சங்கத்தார் காலத்துக்கு இருநூறு முந்நூறாண்டுகட்கு முன்னவராக நிறுத்தலே பொருத்தமாகத் தோன்றுகிற தென்றும் நம்காலத்துள்ள பெரிய புலவரொருவர் வாக்கை இராமர் காலத்தில் இருந்த ஒருவர் கூற்றாக வைத்துப் பொய்யிற் புலவன் பொருளுரை தேறாய் எனின் அது சிறவாதென்பது பிரத்தியட்சமாமென்றும், திருவள்ளுவனார் தம் நூலை வியாழம் வெள்ளி இவர்களின் நூலாதாரங்கொண்டு செய்துள்ளது போற் போக்குக் காட்டி வரைந்துள்ளது கண்டு மிக்க வியப்புற்றேன். ஆதலின் பத்திராதிபர் கருணைபாவித்து அன்னோர் கருத்து யாதார்த்த சரித்திரத்தைப் பொருந்துமா பொருந்தாவா என்பதை அடியேனுக்குத் தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

வீ. தணிகாசலம், இரங்கூன்

விடை : இத்தேசத்துள் கண்ணபிரானென்று ஒருவர் பிறந்திருந்தார் என்னும் சரித்திராதாரங்களேனும், செப்பேடுகளேனும், சிலாசாசனங்களேனும் ஒன்றுங்கிடையாது. ஆதலின் திருவள்ளுவர் மாலையிலுள்ள நல்கூர் வேள்வியார் பாடலைக்கொண்டேனும் ஓர்

நூலாதாரந் தேடிக் கொள்ளும் வமி திறந்திருக்கின்றார்கள். ஆயினும் அன்னோர் கூற்றே திருவள்ளுவர் மயிலையிற் பிறந்தனரென்பதை மாற்றி மதுரையிற் பிறந்தார் என்பதும் ஓர் சார்பேயாம்

இரண்டாவது முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென்னும் மொழிகளே முற்றும் மாறாயிருப்பது கொண்டு பன்னீராயிர புத்தசங்கங்கள் இருந்த மதுரையில் இந்த மூன்று சங்கங்களிருந்த விவரத்தை கனந்தங்கிய ஆர்ச்சலாஜிக்கல் சர்வேயர் காணாத விவரந் தோன்றவில்லை. இம்மூன்று சங்கங்கள் இருந்ததாக ஏற்கினும் கடைச் சங்கத்திற்கு இருநூறு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தவர் திருவள்ளுவர் என்று கூறியுள்ளக் கூற்றால் கடைச்சங்கத்திற்கு திருவள்ளுவர் சென்றதும் அவரது குறளை சங்கப்பலகையில் வைத்ததும் பொய்யென்றே திட்டமாக விளங்குகிறபடியால் சங்க சரித்திரங்களைக் கொண்டே சங்கைகளுள்ளது என்பதைத் திட்டமாகத் தெரிந்துக்கொள்ளலாம்.

மூன்றாவது புத்தபிரான் தோன்றிய நெடுங் காலங்களுக்குப்பின் இராமர் தோன்றியுள்ளாரென்று வஷிஷ்டர் கூறியுள்ள இஸ்மிருதிகளில் ஒன்றாம் வாஷிஷ்டங் கூறுவதுமின்றி அநுமார் இலங்காதீவஞ் சென்றிருந்தபோது அங்குள்ள ஓர் கோபுரத்தின் மீதுட்கார்ந்து ஈது புத்த மடமென்று கூறியதாக வடமொழியிலுள்ள் வால்மீக ராமாயனங் கூறுகின்றது. இத்தகைய நூலாதாரங்களை

அன்னோர் கண்டிருப்பாராயின் இராமர் திருவள்ளுவருக்கு முந்தியவரா பிந்தியவரா என்பதும் பொய்யிற் புலவன் பொருளுரை தேறாயென்னும் மொழி சிறப்புறுமா உறாவாவென்றும் உணர்ந்து கூறுவர். அந்நூற்களையும் புத்தரது காலவரைகளையும் அறியாதவராதலின் அம்மொழி சிறவாதென்று கூறிவிட்டார்.

நான்காவது வியாழம், வெள்ளி இவர்களின் நூலாதாரங்கொண்டு திருவள்ளுவர் தனது குறளை இயற்றியுள்ளாரென்பது திருவள்ளுவர் மாலையில் கூறியுள்ள செய்யுட்களுக்கு முற்றும் மாறாகவே முடியும். இதுகாருந் தோன்றா வியாழம் வெள்ளி இவர்களின் நூற்கள் முற்கால சரித்திரங்களில் இல்லாது முரண்பட்டு தற்காலந்தோன்றியுள்ளபடியால் திருவள்ளுவர் குறள் ஆதாரங் கொண்டே வியாழம், வெள்ளி, பிரகஸ்பதி, சுக்கிரன், சாணாக்கியர் அர்த்த சாஸ்திரம் யாவுந்தோன்றியுள்ளதென்பது அதன் தோற்ற காலங்கொண்டே சொல்லாமலே விளங்கும்.

ஆதிபகவனாம் புத்தபிரான் ஓதியுள்ள திரிபீட வாக்கியங்களாம் திரிபேத வாக்கியங்களைத் தழுவி முதலாம் பிடகத்திற்கு வழி நூலாந் திரிக்குறளை திருவள்ளுவர் இயற்றியுள்ளார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகையில் அவற்றை மறைப்பது முழு பூசுணைக்காயை பிடிசாதத்தால் மறைப்பதற்கொக்கும். ஆதலின் நமதன்பர் இனியாதாரமற்ற சரித்திரங்களையும் இயல்புக்கு விரோதச்

செயல்களையும் உடனுக்குடன் நம்பாது தேறவிசாரித்துத் தெளியும்படி வேண்டுகிறோம்.

3:49, மே 18, 1910 11.

## 11. திருவள்ளுவர் யார்?

வள்ளுவரென்பது செயல்பற்றியப் பெயர்.

### முன்கலை திவாகரம்

வள்ளுவர், சாக்கையரெனும் பெயர் மன்னர்க் / குள்படு கருமத் தலைவர்க் கொக்கும்.

இத்தகையக் கருமச்செயல்களை பௌத்தமார்க்க அரசர்களுக்கும் குடிகளுக்குமே நடாத்திவந்தவர்களும் வள்ளுவர்களேயாம்.

### சீவகசிந்தாமணி

பூத்த கொங்குபொற் பொன்சுமந்துளா / ராய்ச்சியர் நலக்காசெமணனான்

கோத்த நித்திலக் கோதைமார்பினான் / வாய்த்த வன்னிரை வள்ளுவன் சொனான்.

மந்திரத்தரசன் வல்லே நிமித்தகன் வருக வென்ன
வந்தரத் தோடுகோளிற் சாதக மவனுஞ் செய்தான்
னிந்திர திருவிலேய்ப்பக் குலவிய புருவத்தாட்கு
வந்தடை பான்மை மண்மே விராசமா புரத்ததென்றான்

இதை அநுசரித்தே நாளது வரையில் சாதிபேதமற்ற திராவிடர்கள் தங்கள் அரசபீடங்களையும் பௌத்த மடங்களையும் இழந்துவிட்டபோதினும் அவர்களுக்குக் கருமத்தலைவர்களாயிருந்து சுபாசுப காரியங்களை நடத்தி வருகிறவர்களும் வள்ளுவர்களேயாகும்.

இத்தகைய வள்ளுவர், சாக்கையர், நிமித்தக ரென்னும் கருமத் தலைவர்களுக்குள் திருவள்ளுவ நாயனார் கருமத்தலைவர் வம்மிஷவரிசையிற் தோன்றிய கச்சனென்னும் அரசனுக்குப் பிறந்து புத்தசங்கஞ் சேர்ந்து முதநூலாம் திரிபிடகத்திற்கு வழி நூலாகும் திரிக்குறள் இயற்றியிருக்கின்றார். பாகுபலி நாயனார், மார்க்கலிங்க பண்டாரம் இவர்களின் கையேட்டுப் பிரதிகள்.

**பின்கலை நிகண்டு**

பூமலி யசோகி நீழற் / புனைந்தவெம் மடிகள் முன்னா
ளேமமா முதனூற்சொல்ல வள்ளுவ ரியன்றபாவால்
தாமொரு வழிநூற்சொல்ல / சார்புநூற் பிறருஞ்சொல்ல
தோமிலா மூன்று நூலுந் துவமென வுதித்தவன்றே.

சார்பு நூற்களோ வென்னில் ஔவையா ரியற்றியுள்ள திரிவாசகமும், திருமூலர் இயற்றியுள்ள திரிமந்திரமும், நீதிநூல் ஞான நூற்களென்பவை களுமேயாம்.

புத்தபிரானால் ஓதியுள்ள திரிபீட வாக்கியம், திரிபேதவாக்கியம், திரிமறைவாக்கியம், திரிசுருதி வாக்கியமென வழங்கும் முதநூலாதாரங் கொண்டே இந்திர தேசத்திலுள்ள சகல மதங்களுந் தோன்றியுள்ளபடியால் ஒவ்வொரு மதஸ்தரும் தமிழ் பாஷையில் வரைந்துள்ள வழிநூலாந் திரிக்குறளில் ஒவ்வோர் பாடல்களை எடுத்துக்கொண்டு திருவள்ளுவர் மதம் எங்கள் மதம் எங்கள் மதமெனத் தங்கள் மதங்களை சிறப்பித்துக்கொள்ளுவது இயல்பாம். திருவள்ளுவருக்கோ மதமென்பது கிடையாது. தங்கள் மதமே மதம், தங்கள் தேவனே தேவனென்று கூறி மதக்கடை பரப்பி சீவிப்பவர்கள் யாரோ அவர்களுக்கே மதம் என்பது சான்றாம். திரிபிடகத்தை புத்த தன்ம மென்றும், திரிக்குறளை திருவள்ளுவர் தன்மமென்றே கூறத்தகும்.

திரிமறைவாக்கியம், திரிசுருதி வாக்கியமென வழங்கும் முதநூலாதாரங் திருவள்ளுவ நாயனார் திரிக்குறளை வரையப்போகின்றோம். அக்கால் நூலாசிரியர் பிறப்பு வளர்ப்பும், நூலுக்கு முதலும், பத்துப் பாடலால் புத்தரை சிந்தித்திருக்கும் கடவுள் வாழ்த்தும், அவற்றிற் கூறியுள்ள இந்திரராம் புத்தரது மகத்துவமும், புத்தேளுலகின் சுகமும் தெள்ளறவிளங்கும்.

4:4. சூலை 6.1910 12.

**12. தமிழினை இயற்றியவர்**

வினா : நமது சுயபாஷையாகும் தமிழினை இயற்றினவர் சிவனெனக் கூறுகின்றார்களே அச்சிவன் எச்சரித்திர சார்பினர். இப்ப ப்பாஷைக்குள் தமிழென்றும், திராவிடமென்றும் பெயருண்டாய காரணமென்னை.

வி. கோபாலன், சென்னை .

சிவனென்பதும், சிவகதி நாயகனென்பதும், சிவகதிக்கு இறைவ னென்பதும், சங்கறநிறையோன் என்பதும், காமதகனன் என்பதும், காலகாலன் என்பதும், புத்தபிரானுக்குரிய சகஸ்திர நாமங்களுள்ளடங்கியவைகளேயாகும். இவற்றுள் சித்தார்த்தித்திருமகன் நம் மெய்ப்போன்ற மநுட வடிவாகத் தோ பெண்சாதி பிள்ளையுடன் சுகித்து தன் சாதன முயற்சியால் பொய்யை அகற்றி மெய்யை விளக்கி புத்தரென்றும் இராகத்துவேஷ மோகத்தை அகற்றி, பேரன்பின் சுகத்தைவிளக்கி சிவனென்றுங் காரணப் பெயர்களைப் பெற்றவர் புத்துயிரானேயாகும். சகடபாஷையாம் சமஸ்கிருதத்தையும், திராவிட பாஷையாம் தமிழினையும், ஆதியாக வரிவடிவில் போதித்தவரும் புத்த பிரானேயாகும்.

இவ்விருபாஷைகளை இயற்றியது கொண்டே அருங்கலை நாயக னென்றும், அறுந் கலைவினோதனென்றும், மற்றும் பெயர்களை அளித்துள் ளார்கள். வடமொழி, தென்மொழிகளின் ஆக்கியோன்யாவரென்பதை, திலாகாம், நிகண்டு, தொல்காப்பியம்,

வீரசோழியம், சிலப்பதிகாரம் முதலிய நூற்களால் தெள்ளறத் தெளிந்துக் கொள்ளலாம்.

தென்மொழியில் நஞ்செழுத்தென்றும், அமுதெழுத்தென்றும் இருவகை அட்சரங்களுண்டு. அவற்றுள் நஞ்செழுத்துக்களின் ஆதாரங்கொண்டு தீராவிடமென்றும், அமிர்தவெழுத்துக்களின் ஆதாரங்கொண்டு தமிழென்றும், இருபெயர்கள் உண்டாயிற்று. இவ்விரு பெயர் பெற்ற பாஷையை அகஸ்தியயால் தென்னாட்டிற் பரவச்செய்தபோதினும் மிகுப் பிரபலமாகப் பாவசெய்கவின் புத்தசங்க பிக்குணியாகி அம்பிகையென்றும், அறச்செல்வியென்றும், பெயர் பெற்ற ஔவையேயாகும். அவ்வம்மன் தமிழ் நூற்களுக்கு ஆதரவாயிருந்து மேலும் மேலும் பரவச்செய்தவர்கள் சேர, சோழ, பாண்டியனென்னும் மூவரசர்களே ஆவர். இத்தமிழ்ச் செல்வியை கலைபாவும் அமுதாட்டி செய்யுள் சீராட்டி செந்தமிழ் தாராட்டி, அசராலட்சணங்களாம் ஆபரணம்படி ஆனந்தமாக வளர்த்துவந்தவர்கள் சமண முநிவர்களாகும் புத்தகங்கத்தோர் களேயாவர். ஆதலின் சிவனென்னும் பெயர்பெற்று தமிழினை உண்டு செய்த வரும் புத்தர், அவற்றை மேலும் மேலும் பலகலைகள் தோன்ற விருத்தி செய்தவர்களும் பௌத்தர்களேயாகும். இதற்கு மாறுபட்ட சிவனது யதார்த்த சரித்திரம் அவரது பிறப்பு வளர்ப்புடன் வேறேதேனும் இருக்குமாயின் சரித்திரம் அவரது பிறப்பு

வளர்ப்புடன் வேறேதேனும் இருக்குமாயின் சரித்திர ஆதாரம், சிலாசாசன ஆதாரம், செப்பேட்டின் ஆதாரங்களுடன் வெளிவரலாம்.

14. செப்டம்பர் 14, 1970 13.

## 13. திரிக்குறளில் உள்ள காமத்துப்பால்

மயிலை எப்எம் என்னும் அன்பரே தாம் வினவிய சங்கை விசேஷித்ததேயாம். ஆயினும் தாம் வினவியுள்ள நாயனார் திரிக்குறளிலுள்ளக் காமத்துப்பாற் செயல் மெய்யா பொய்யா என்பதை உணராது வினவியது வீணேயாம். அதாவது, சிற்றின்பமென்னும் காமிய நிலை சகல மக்களுக்கும் இயல்பில் தோன்றும் இன்பமென்னப்படும். அத்தகைய இன்ப நுகர்ச்சி சருவ மக்களுக்கிருந்தும் அதன் புலநிலையறியார்கள். புலன் தென்படலாம், பேரின்பம் பெற்ற தென்புலத்தோரே அவற்றை அறிவர்.

ஆதலின் தென்புலத்தோராம் நாயனார் காமத்துப்பாலாம் சிற்றின்ப நுகர்ச்சியைத் தெள்ளற விளக்கிப் பேரின்பத்தைத் துலக்குவதற்காய் கண்ணும், மூக்கும், செவியும், நாவும், உடலும், ஓர் பெண்ணுருவை நாடி வெளிதோன்றி நுகர்வது சிற்றின்ப நுகர்ச்சியாதலின்,

கண்டு கேட்டுண்பிர்த் துற்றறியுமைம்புலனு
மொண்பொடி கண்ணேயுன

வென்றும் யேக சிற்றின்பத்தில் யேகபாவனையாய் வெளிதோன்றியது போல் ஐம்புலனும் யேக பேரின்பத்தில்

யேகபாவனையாய் உள்ளடங்குமாயின் தாமரைக்கண்ணனுலகாகும் புத்தேளுலகில் சிற்றின்பத்திற்கு மேலாய பேரின்பத்திற் சதா சுகிப்பனென்று கூறுவதற்காய்

தாம் வீழ்வார்மென்றோட் டுயிலினினிது கொ
றாமரைக்கண்ணா னுலகு.

காமமீறி ஐம்புலனால் ஒடிய கண் அவ்வைம்புலனும் ஒடுங்கிய பேரின்ப சுகத்தையும் ஆற்றலையும் விளக்கியிருக்கின்றார்.

பொறிவாயிலைந்தவித்தான் பொய் தீரொழுக்கம்.
நெறி நின்றார் நீடுவாழ்வார்.

காமத்தால் சிற்றின்பம் நுகர்ந்து சீர்கெடுவதினும் என்று மழியா பேரின்பம் நுகர்ந்து நித்திய வாழ்வடைவதே அழகாதலின் சிற்றின்பத்தை செவ்விதில் விளக்கி பேரின்பம் அளாவும் போக்கில் விடுத்திருக்கின்றார். உள்ளதை உண்மெய்க்குத்தாரமாய் விளக்குவதே புத்ததன்மமாகும். உள்ளது ஒன்றிருக்க இல்லாததைக்கூட்டிப் பொய்யை மெய்போல் பேசுவது அபத்ததன்மமாகும். கொக்கோகரும் மதனனூலாரும் உலக மக்கள் நோயின்றி வாழ்க நூலெழுதினார் கள். அவர்கள் கருத்தை உணராது காவிய விருப்பம் மிகுத்து கெட்டு நூலாசிரியரை நிந்திப்பது அழகாமோ. உள்ளதை ஒளியாது விளக்கி மக்களைச் சீர்பெறச்செய்வது மதியூகிகளின் கடனாதலின், நாயனார் தான்

இயற்றியுள்ள காமத்துப்பாலில் புருஷருக்குள்ள செயலையும், இஸ்திரீகளுக்குள்ள
செயலையும் தெள்ளற விளக்கியிருக்கின்றார்.

அவர் விளக்கியச் செயலுக்கும், அனுபவத்திற்கும் ஏதேனும் மாறு தலுண்டோ , இல்லையே. இத்தகைய மாறுதலற்ற மதியூகிகட்போதத்தைக்கண்டு அகமகிழாது திகைப்பது வீணேயாகும். உலகத்தின் மனுகுலத்தோற்ற சருவ ஆடம்பரங்களும் காமியத்தையே பீடமாக வகுத்துள்ளதை அறியாது அதை சிறப்பித்தது தவரென்று கூறுதல் உள்ளுக்குக் காமியசிறப்பை ஒளித்து வெளிக்குத் தூற்றுவதொக்கும். நாயனார் அங்ஙனம் ஒளியாது மக்களின் சருவசெயல் களையும் அளந்து கூறியவிடத்து காமத்துப்பாலையும் தெள்ளற விளக்கி விட்டார் காரணம், இன்பத்தையும் துன்பத்தையும் விளக்கும் ஓர் போதனா நிலையாகும்.

அதற்குப் பகரமாய் கிறிஸ்துவானவர் தனது மாணாக்கரையும் மற்ற மக்களையும் நோக்கி மனிதன் ஓர் இஸ்திரீயை நோக்கிப்பார்த்தபோதே அவளையவன் சேர்ந்த தொக்குமென போதித்திருக்கின்றார். காமியநிலையைக் கருத்தறிந்து கூறியுள்ளபடியால் அவர் அங்ஙனம் கூறலாகாது என்னலாமோ போதனைப் புதைப்பொருள் பலவாறு நிற்கும். அவைகளை உணர்ந்தே சங்கித்தல் வேண்டும். உணராச் சங்கிப்பு பலன் தராவாம்.

4:18. அக்டோபர் 12, 1910

## 14. கவிராயர் சிறப்பு

இந்திரதேசத்தில் தமிழ்பாஷையை வளர்த்த அரசர்கள் தமிழ் வித்துவான்களையும் மிக்க சிறப்புடன் வளர்த்துவந்தார்கள். அச்சிறப்பினால் ஒவ்வொரு வித்துவபுருஷர்களும் இலக்கிய இலக்கணங்களை நன்குணர்ந் திருந்ததுமின்றி எழுத்துக்களில் நஞ்செழுத்து அமுதெழுத் திவைகளையும் அறிந்து பாடும் வல்லவர்களாகவு மிருந்தார்கள். அத்தகைய வல்லபத்தால் ஆசுகவி, மதுரகவி, சித்திர கவி, விஸ்தார கவியெனும் நான்கு கவிகளையுங் குற்றமறப் பாடுவோரை கவிராயரென்றழைத்துவந்தார்கள். அதாவது, கவிக்கு அரசனென்பதேயாம். கவிக்கரசரானோரை தேசவரசர்கள் மதித்து சமாசன ஈய்ந்து வித்துவவிருதுகளும், வேண பரிசும், மானியங்களும் அளித்து பாதுகாத்து வந்தார்கள். அதனால் அனந்த வித்துவான்கள் பெருகியதுமன்றி வித்தியா விருக்கியால் விவேகவிருத்திப்பெற்று சாது சங்கங்களைச் சேர்ந்து சமண நிலை யுற்று உலோகோபகாரமாய்க் கலை நூற்களை இயற்றி சகல மக்களுக்கும் போதித்து நீதிநெறி ஒழுக்கங்களை நிலைக்கச் செய்துவந்தார்கள்.

தமிழ் இலக்கிய இலக்கணங்களை வகுத்துரைத்தவர்களும் சமண முநிவர்களே. தமிழ்க் கவிகளாகும் கோவைபாடுங் குறிவைத்தவர்களும் சமண முநிவர்களே. அகவற்பாடும் அளவை

வகுத்துவை முநிவர்களே, வெண்பா, விருத்தப்பா பாடும் விதி கூறிவைத்தவர்களும் சமண முநிவர்களேயாகும். தற்காலமோ அத்தகைய சமணமுநிவர்கள் வாழுஞ் சங்கங் களையே பாழ்படுத்திவிட்டார்கள். அவர்களுக்கு மெய்க்குருக்களாக விளங்கிவந்த யதார்த்த பிராமணர்களும் இல்லாமற் போய்விட்டார்கள். இவைகள் யாவற்றிற்கும் பீடாதாரமாகும் தமிழரசர்களும் இல்லாமல் ஒழிந்தார்கள்.

தற்காலமுள்ளத் தமிழ்மண மாறாதுத் தென்னிந்தியாவில் வீசச்செய்து வரும் மன்னர்கள் இருவர்களேயாவர். அவர்கள் யாரென்பீரேல், கனந்தங்கிய இராயபாதார் பெமா மதுரை பெருமானவர்களும், கனந்தங்கிய பாண்டித்துரை தேவரவர்களுமேயாம்.

அவர்கள் இருவருமோ வித்துவான்கள் வளரும் உயர்பிச்சை அளித்து வருகின்றார்களன்றி அவர்கள் கற்றதினளவே நற்றாடொழுதுக் கடைத்தேறும் சாதுசங்கங்களை நாட்டினார்களில்லை. இத்தமிழ் வளர்க்கும் தாதாக்கள் இருவருங் கருணைகூர்ந்து தென்னிந்தியாவில் சாதுசங்கங்களை நாட்டி சமண முநிவர்களைக் கூட்டிப் பூர்வ பள்ளிகளைப் புதுப்பிப்பரேல் அருங்கலை நீதியும், பெருங்கலை ஞானமும் தமிழ் பாஷையிற் பரவி உலகெங்கும் அதின்மணம் வீசவும், அழிந்த சங்கங்களுக்கு உயிர்பிச்சை அளித்து ஆதரித்தவர்கள் இருமன்னர்களே எனப்

பேசவும் ஏதுவுண்டாம். அத்தகைய ஏதுவைக்கொண்டே சாதுசங்க ஞானதந்தைகளும் இவ்விருவர்களேயாவர். இவ்விரு ஞானதந்தையர்களும் இத்தென்னிந்தியாவில் சாதுசங்கங்களை நாட்டி சமணமுநிவர்களைக் கூட்டி விடுவரேல் மெய்யறம் ஓங்கி, கலைவல்ல கவிராயர்களுந் தோன்றுவார்கள்.

அத்தகையக் கவிவல்லோர் வெளிவருவரேல் மங்கலமொழி அறியாது மங்களம் பாடும் கவிராயர்களும் கருமாதிகளுக்குக் கவிபாடிக் கட்டியமுழுங் கவிராயர்களும் சற்று நிதானித்துப்பாடும் நிலைநிற்பார்கள். தாங்கள் கற்றதினளவேனின்று சங்கபோதனைகளில் அணுகுவரேல் தம்குல வித்துவர்களைத் தாங்களே தூஷித்து அன்னோர் சிறப்பைக் கெடுப்பதன்றி தங்கள் சிறப்பையுங் கெடுத்துக்கொள்ளமாட்டார்கள். ஒருவருக்கொருவர் தூஷித்தலால் உண்டாகும் விரோத பலன்களையும், பூஷித்தலா லுண்டாகும் அவிரோத பலன்களையும் அவரவர்களே ஆராய்ந்தறிந்து கொள்ளுவார்கள்.

சாது சங்கத்தோரை அணுகி சகல கலைகளும் கற்றடங்காது வித்துவகலை ஒன்றை மட்டும் கற்று வித்துவான்களுக்கு வித்துவான்கள் கல்லாதவர்களைப் போல் கலகத்தைப் பெருக்கிக் கொள்ளுகின்றார்கள்.

கற்றவர்களே கல்லாதவர்களைப்போல் கலகஞ் செய்துக்கொள்ளுவர்க ளாயின் இவர்களது கலகத்தை நீக்கி அன்பு பெருகச் செய்வோர்கள் யார்? பொற்பிளவோடு ஒப்பார் பெரியோரென்றும், கற்பிளவோடு ஒப்பார் கயவ ரென்றும் மேலோர்கள் வகுத்திருக்க வித்துவகலை கற்றும் கயவரென்னும் பேர் பெறலாமோ. புவிராயரென்பதிலும் கவிராயனெனும் பெயரழியாப் பெயராதலின் அவற்றை விரோதச்சிந்தையால் அழித்து வீணே கெடுக்கா திருத்தலே அழகாகும்.

பூர்வக் கவிராயர்களைக் கண்டவுடன் வணங்கி அவர்களுக்கு வேணப் பொருளளித்து வந்தது வழக்கமாகும். காரணமோவென்னில், நீதி கலையுணர்ந்து நான்கு கவிபாடுந் திறமும், மங்கலமொழி கண்டு நஞ்செழுத்தகற்றி அமுத வெழுத்தூன்றி பாடும் உரமும் உணர்ந்து வந்தவர்களாதலின் அமுதவெழுத்தின் ஆனந்தங் கண்டளித்து வந்தார்கள்.

நஞ்செழுத்துளதால் திராவிடமென்றும், அமுதெழுத்துளதால் தமிழென்றும் பெயர் பெற்ற பாஷையின் வித்துவான்களென வெளிவந்தும் அவ்வட்சர பலன்களை உணராது பாடி பாடற்குரியோனையுங் கெடுத்து பாடிய தானுங்கெட்டு பயனற்று திரிகின்றார்கள். அவ்வகைத் திரிந்துள்ள வித்துவான்களில் ஒருவர் பாடியுள்ளப் பாடலைப் பாருங்கள்.

கல்லைத்தான் மண்ணைத்தான் காச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானா
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான் கொடுத்துத்தான் ரட்சித்தானா
அல்லத்தான் பின்னைத்தான் யாரைத்தான் னோவத்தான் ஐயோ விங்கு
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான் புவியிற்றான் பண்ணினானே.

என்று பாடியிருக்குங் காரணம் தான் படித்துந் தன்னைப் போஷித்துக்கொள்ளப்படியாததாலும், தெய்வத்தாலாகாது முயற்சி மெய் வருந்த கூலிதருமென முயலாததாலும் இத்தகையப் பாட்டைப்பாட நேர்ந்தது.

மநுக்கள் எவ்வித்தையில் முயலினும் அவ்வித்தையைச் செவ்வைப்பெற கற்றலே பயன்தரும். அங்ஙனஞ் செவ்விதிற் கல்லாததால் சீரழிக்குமென்பதே திண்ணம். ஆதலின் தற்காலத் தமிழினை வளர்க்கும் தாதாக்கள் இருவருங் கருணைபாலித்து சாதுசங்கத்தை நாட்டிசமணமுநிவர்களைக்கூட்டி விடுவரேல் கவிராயர்கட் சிறப்பு அவியாது பிரகாசிக்குமென்பதாம்.

4:21, நவம்ப ர் 2, 1910

## 15. தமிழ் பாஷையின் சிறப்பு குன்றிய காலமெவை.

பௌத்த அரசர்களும் பௌத்த சங்கங்களும் பௌத்த உபாசகர்களும் நிலைகுலைந்த காலமே தமிழ் பாஷையின் சிறப்புகுன்றிய காலமாகும். அதாவது, "பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளைபெறா பேதையறிவாளோ பேரானந்தமென்னும்" பெரியோன் வாக்கியப்படி ஆதிபகவனாம் புத்தபிரானால் ஏற்படுத்திய வரிவடிவாம் அட்சரங்களில் அமுதவெழுத்துள்ளது கண்டு தமிழென்றும், விடவெழுத்துள்ளது கண்டு தீராவிடமென்றும் பெயர்பெற்ற பாஷையானது பௌத்த சங்க அறஹத்துக்களிலொருவராகும் அகத்திய முநிவரால் தென் தேசத்தில் இந்திரவியாரங்களாம் மடங்களைக் கட்டிவைத்து சமணமுநிவர்களைச் சேர்த்து விவேகவிருத்தி செய்யுங்கால் தமிழட்சர இலட்சணங்களை விளக்கும் இலக்கண நூற்களையும், பலபொருட்களின் பெயர்களை விளக்கும் இலக்கிய நூற்களையும், விவேகவிருத்திக்குரிய கலைநூற் களையும், கணிதவாராய்ச்சிக்குரிய சோதிடநூற்களையும், ஒடதிவிருத்திக்குரிய வைத்திய நூற்களையும் மேலும் மேலும் வகுத்து மநுமக்களை சீர்திருத்தி சீலத்திலும் ஒழுக்கத்திலும் நிலைபெறச்செய்து மக்கள் கதிகடந்து தேவகதி பெறுவதற்காய வேண நூற்களை வகுத்து மக்களுக்கு மிக்க உபகாரிகளாக விளங்கிவந்தபடியால் தமிழ் பாஷை மேலும் மேலும் விருத்தி பெற்று எங்கும் பரவிவந்தது. அதனுடன் பௌத்த

சங்கமுள்ள ஒவ்வோர் அறப்பள்ளிகளிலும் சமணமுநிவர்களால் சிறுவர்களுக்குத் தமிழ்ப் பாஷையைக் கற்பித்து விவேக விருத்தியும், வித்துவ விருத்தியும் செய்துவந்தபடியால் வித்துவான்கள் பெருகி தமிழின் பரிமளத்தை எங்கும் வீசி மணக்கச் செய்துவந்தார்கள். அத்தகைய தமிழ் மணமானது மிலேச்சர்களாம் ஆரியர்கள் இத்தேசம்வந்து அறஹத்துக் களாம் பௌத்த பிராமணர்களைப்போல் பொய் வேஷமிட்டு பொய்ப் போதங் களைக் கூறி பொய்மதங்கள் இயற்றி கல்வியற்றப் பெருங்குடிகளையும் காமிய முற்ற சிற்றரசர்களையும் வசப்படுத்திக்கொண்டு வஞ்சினத்தாலும், சூதினாலும், மித்திர பேதங்களாலும் தன்மநெறியில் நின்ற பௌத்தவரசர்களை அழித்ததினால் வித்துவர் சிறப்பழிந்தும், பௌத்தசங்கங்கள் அழிந்ததினால் கலை நூற்களின் விருத்திகளும், சிறுவர்களின் கல்விவிருத்திகளும் மற்றும் தமிழின் விருத்தி நாசமடைந்ததுடன் சத்துருக்களால் தன்மநூற்களும், கலை நூற்களும் பாழடைந்து சத்தியதன்ம போதங்களற்று அசத்தியதன்மம் மேலிட்டு மிலேச்சர்களின் செல்வாக்கும் கூட்டமும் பெருகிவிட்டபடியால் இத்தேசத் தோர் தமிழ் பாஷையைக் கற்பதற்கே ஏதுவில்லாமல் பாழடைந்துவிட்டார்கள். மிலேச்சர்களின் செல்வாக்கிலும், அவர்களுக்குள் அடங்கியவர்களின் ஆளுகை யிலும் நாளது வரையிலிருக்குமாயின் தமிழென்னும் சப்தமும், தற்காலமுள்ள தன்ம

நாற்களுமற்று தமிழ்மணமில்லா பொய்ப்புராணங்களே மலிந்து மெய் நூற்கள் முற்றுஞ் சீரழிந்திருக்கும்.

இதன் மத்தியில் உலகோபகாரிகளாகும் சமண முனிவர்களின் புண்ணியவசத்தால் ஆங்கிலேயர் இவ்விடம் வந்து தோன்றி கனந்தங்கிய எலீ சென்னும் துரைமகனால் தமிழ்ச்சங்கமொன்று ஏற்படுத்தி சிதலுண்டு கெட சமீபித்திருந்த ஓலைச் சுவடிகள் யாவையுங் தங்களிடங் கிடைத்த வரையில் அச்சிட்டு வெளிக்குக் கொண்டுவந்து மற்றுமுள்ள நூற்களையும் வெளிக்குக் கொண்டுவருவதற்குள் சென்றுவிட்டபடியால் அச்சங்கத்துள் பௌத்த சத்துருக்கள் நுழைந்து சங்கமே நடவாத ஏதுக்களைச்செய்துவிட்டார்கள். அதன்பின் புரோடிஸ்ட்டன்ட் மிஷநெரிதுரை மக்கள் வந்துசேர்ந்து நாலாபக்கங்களிலும் கலாசாலைகளை அமைத்து கல்வி விருத்தி செய்யுங்கால் தமிழ் விருத்தி கிஞ்சித்துப் பரவி அதன் மணமின்றி தமிழென்னும் சப்த மட்டிலும் ஒலித்துவருகின்றது. பிரிட்டிஷ் துரைத்தனமட்டிலும் இவ்விட மாட்சிபெறாவிடில் தமிழென்னு ஒலியுங் காணாது புத்தரது பெயரும், அவரது சிறப்பும் மறைந்ததுபோல தமிழென்னும் பெயரும், அதன் சிறப்பும் மறைந்தே போயிருக்குமென்பது திண்ணம்.

மற்றும் முன்போன்ற தமிழ்மணமும் அதன் சிறப்பும் பெருக வேண்டுமாயின் அதனை ஈன்றவர்களும் வளர்த்தவர்களுமாகிய பௌத்த சங்கசமணமுநிவர்களே பின்னும் தோற்றுவார்களாயின் அன்றே தமிழ்மணமும் வீசுவதுடன் அதன்

சிறப்பும் பெருக்கமுறுமென்பதற்கு ஆட்சேபமில்லை.

4:24. நவம்ப ர் 23, 1910

## 16. திராவிடமும் தமிழும்

வினா: ஐயா தமது பத்திரிகையில் திராவிடம் என்பது தமிழுக்குரியப் பெயரென்று வரைந்து வருகின்றீர். மற்றும் சிலர் திராவிடம் என்பது திரமிடமென்றும் நான்கு பாஷைகளைச் சேர்ந்தப் பொதுப்பெயரென்றுங் கூறுகின்றார்கள்.

வீ. கோவிந்துசாமி, மயிலை

விடை: அதாவது, திராவிடமென்னும் மொழியின் பொருளென்ன. திராவிடமென்னும் மொழி திரமிடமென எவ்வாறு மறுவியது. அதற்கு விதியும் பூர்வ அருபவச் செய்யுளும் உண்டாவென உசாவியில் கூறும் மொழி தங்களுக்குத் தெள்ளறத் தெளிந்துவிடும். அங்ஙனம் அவர்களைத் தாம் வினவாது எம்மெய் வினவியுள்ளபடியால் அதனந்தரார்த்தத்தை உணர்ந்தவளவில் உணர்த்துகின்றேன்.

அதாவது, தென்மொழியிலுள்ள அமுதவெழுத்திற்கு தமிழென்றும், நஞ்செழுத்தாம் விடவெழுத்திற்குத் திராவிடமென்றும் வகுத்துள்ள அனுபவத்தைக் கொண்டும் சிங்கள நாட்டாரும், தெலுங்கு நாட்டாரும், தமிழர் களைத் திராவிடர்களென்று கூறும் வாய்மொழியாலும், அடியிற் குறித்துள்ள தாயுமானவர் பாடலின் உட்கருத்தாலும் தமிழ் பாஷைக்கே திராவிடமென்னும் மறுபெயர் உண்டென்பதை எளிதில் அறிந்துக்கொள்ளலாம்.

**தாயுமானவர் பாடல்**

கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் கற்று மறிவில்லாதவென்

கன்மத்தையென் சொல்வேன் மதியையென் சொல்லுவேன் கைவல்லிய

**ஞானநீதி**

நல்லோருரைக்கிலோகன் மமுக்கியமென்று நாட்டு வேன் கன்மமொருவா

நாட்டினாலோபழய ஞானமுக்கியமென்று நவிலுவேன் வடமொழியிலே

வல்லானொருத்தன் வரவுந்திராவிடத்திலே வந்ததா விவகரிப்பேன்

வல்லதமிழறிஞர்வரி னங்கனேவடமொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன்

எனும் பாடலால் திராவிடத்தையே தமிழென்றும், தமிழையே திராவிடமென்றும் மடக்கிக் கூறியுள்ளதைக் காண்க.

4:26, டிசம்பர் 7, 1910)

## 17. மை எனும் மகர ஐகாரமும் மெய் எனும் மகர ஏகாரமும்

யகரவொற்றுங்கூடி வரக்கூடிய மொழி பேதங்களின் அந்தரார்த்தங்கள் யாவும் புத்தன்மத்தைத் தழுவிய சமணமுநிவர்களுக்கும், பௌத்த வித்வான் களுக்கும் விளங்குமேயன்றி ஏனைய மதசார்பினர்களுக்கு விளங்கமாட்டாது.

காரணமோவென்னில், ஏனைய மதத்தோர் யாவரும் தங்களுக்கு அப்புறப்பட்ட ஓர் பொருளுண்டென்றும், அதைக் கொண்டே தாங்கள் சுகம் பெறவேண்டுமென்றுங் கூறுவார்கள்.

பௌத்தர்களோ அங்ஙனமன்று. உடலுயிர் பெற்ற தங்களுக்குள்ளாகவே சகல துக்கமும் சகல சுகமும் உண்டென்றும் தங்களைக் கொண்டே தங்களை சீர்திருத்திக்கொள்ளல் வேண்டுமென்றும் சகல துக்கத்திற்கும் ஆதாரந்தாங்களே , சகல சுகத்திற்கும் ஆதாரந் தாங்களேயன்றி தங்களுக்கு அப்புறப்பட்டப் பொருள் வேறில்லையென்று உணர்ந்து பொய்யை அகற்றி மெய்யைக் கண்டடைய வேண்டிய செயலில் விளங்குவார்கள்.

ஆதிபகவனாகிய புத்தபிரான் அத்தகைய மெய்யைக்கண்டே நித்தியானந்த பரிநிருவாணம் பெற்றார். தன்னிற்றானே தெளிந்து பூரணதிசை அடைந்தபின்னர் தன்மெய்ப்போல் ஏனைய மக்களும் அச்சுகத்தை அடைந்து நித்திய வாழ்க்கையைப் பெறுவான் வேண்டி சகட பாஷையாம் சமஸ்கிருதத் தையும், திராவிட பாஷையாம் தமிழினையும் ஏற்படுத்தியுள்ளார். அஃதெவ்வா றென்னில், உடலுயிரென்னும் உண்மெய், புறமெய் இவற்றினை கண்டடை வதற்கே வரிவடிவாம் அட்சரங்களை வகுத்து உயிரெழுத்தென்றும், மெய்யெழுத் தென்றும், ஆவியென்றும், உடலென்றும், நஞ்செழுத்தென்றும், அமுதெழுத் தென்றும், இவ்வெழுத்துக்களுக்கெல்லாம் ஆதி எழுத்தாயது அகார பேருயிரென்றும் வகுத்து அவ்வட்சரங்களை வாசித்துணர்ந்து கலை நூல் தெரிந்தபின்னர் தனதுடலுயிரினது பாகுபாடுகளைக் கண்டு தனக்குள்ள நஞ்சாகும் இராகத் துவேஷ மோகங்களை சேரவிடாதகற்றி தனக்குள்ள அமுதாகும் சாந்தத்தைப் பெருக்கி அகராட்சரமாகியப் பேருயிராம் அண்ணாவினால் உண்ணாவின் அமுதுண்டு அழியா பாக்கியத்தனாகி புறமெய் அகற்றி உண்மெய்யில் நிலைத்து நன்மெயாம் தன்மகாய ததாகதனாகின்றான்.

இராகத் துவேஷ மோகங்க ளுடைத்தாய தேகமே தின்மெ யுடைத்தாய தென்றும், சாந்தம், அன்பு, ஈகைக ளுடைத்தாய தேகமே நன்மெயுடைத் தாயதென்றுங் கூறப்படும். இத்தகைய செயல்

கொண்டே தெய்வப்பெயர் வகுப்பில் "கடவு, டே, முநி, நன்மெய்ப்பே " ரென வகுத்துள்ளார்கள். உயிர்மெய் யெழுத்தினது ஆதாரங்களைக் கொண்டே உடலுயிரின் பாகுபாடுகளையும் அதனதன் குணாகுணச் செயல்களையும் ஆய்ந்து நன்மெய்க் கடை பிடிப்பதற்கே.

சீவப்பிராணிகளை துன்பஞ்செய்யாமெய் , எக்காலும் பொய் சொல்லா மெய், அன்னியர்பொருளை அபகரிக்காமெய், அன்னியரது தாரத்தை இச்சிக்காமெய், மயக்கமுள்ள மதுபானங்களை யருந்தாமெய், ஆகிய சுத்த தேகிகளாக வாழும்படி வகுத்து வைத்திருக்கின்றார்கள். சுத்ததேகியாய வாழ்க்கைப் பெயரே நன்மெய்ப்பெய ரென்னப்படும்.

இவற்றுள் அட்சரமெய்யையும், உடலையும், அட்சர உயிரையும், உண்மெய்யையும், அட்சர எண்பகுப்பையும், எண்குணத்தையும், அட்சரவுடலுயிர் முப்பதினையும், உடலுயிரினது குணம் முப்பத்திரண்டையும், அட்சர புணர்ச்சி விகாரங்களையும், உடலுயிர் புணர்ச்சியின் கேடுபாடு களையும், அகரவட்சர பேருயிரின் குறிப்பையும், நாவினது நால்வாய்மெய் சிறப்பினையும் ஆய்ந்துணருவோருக்கே உண்மெய் புறமெய் என்பதின் விகற்பங்களும், நன்மெய் தீமெயென்னும் பேதாபேதங்களும் நன்குவிளங்கும்.

புத்த தன்ம இலக்கியங்களையும், புத்த தன்ம இலக்கணங்களையும் உணர்ந்தவர்களுக்கே இவ்வட்சரபேதங்கள் நன்குவிளங்குமேயன்றி ஏனை யோருக்கு விளங்காவாம்.

நல்-நோக்கம் - நன்னோக்கம் என்பது நற்காட்சியைப் பொருந்தியதாகும்.

நல்-முயற்சி - நன்முயற்சி என்பது நல்லூக்கத்தைப் பொருந்தியதாகும்.

நல் - நூல் - நன்னூலென்பது நல்லறிவை

விருத்தி செய்யுங் கலை நூலில் ஒன்றாகும்.

நல்-மெய் - நன்மெ யென்பது களங்கமற்ற உண்மெயாம் தன்மகாயங்களில் ஒன்றதாகும்.

'இத்தகைய சிறந்த ஞானார்த்தத்தைக் கொடுக்கக்கூடிய பகுபத மொழியை நன்மையென வரைவதாயின், நல்லஞ்சனம், நல்கருப்பு, நல்லாடு எனும் பொருளைத்தருமெயன்றி "கடவுடே முநிநன்மெய்ப்பே ' ரென்னும் ஞானார்த்தந் தருமோ ஒருக்காலுந் தாராவாம்.

இத்தியாதி மொழிபேதங்களுக்குள்ளும் "பொம்மை" யென வழங்கு மொழிக்கு இலக்கணந் தெரிந்துகொள்ளுவார்களாயின் நன்மெயென்னு மொமியினது இலக்கணம் நன்கு விளங்கிப் போம்.

அதாவது, "பொம்மெய்" என்பதற்கு இலக்கணம் பொய்மெயென்று கூறப்படும். அதாவது மண்ணினாற் செய்த பொய் தேகம், மரத்தினாற் செய்த பொய்தேக மென்பதாகும். இத்தனையே பொம்மை, பொம்மையென மெய்கெட எழுதி பொய்தேகமென்னும் பொருளை ஏற்றுவருகின்றார்கள் இதுபோலவே நன்மெயென்னும் தெய்வப்பெயரை மறந்து நன்மையென்னும் ஏவற்பொருளை ஏற்று ஏவல் மொழியை வழங்கி ஏவலட்சரத்தை வரைந்து வருகின்றார்கள் - இத்தகையாய் பொருள் கெட்டு வழங்குமொழிகளை பூர்வத்தினின்று புலவர்கள் யாவரும் வரைந்து வருகின்றார்கள். அவற்றை தற்காலம் மாற்றப் போமோவென்னில் புத்தன்மமாம் மெய்யறங்கெட வழங்கு மொழிகள் யாவையுந் திருத்தி நல்லறத்தில் ஒழுகவேண்டுமென்பதே நமது கருத்தாம்.

ஈதன்றி புறப்பொருட்காட்சி எம்மட்டுண்டோ அம்மட்டகற்றி அகப்பொருட் காட்சியாம் உண்மெயில் அன்பை வளர்த்தி நன்மெய்க் கடை பிடிப்பான் வேண்டி நாதன் வகுத்துள்ள தமிழினது மெய்ப்பாட்டியலே போதுஞ் சான்றாம்.

4:29, டிசம்ப ர் 28, 1910

## 18. அகஸ்தியர், நாயனார், ஔவையார்

வினா: அகஸ்தியர், நாயனார், ஔவையார் இவர்கள் மூவரும் எக்கூட்டத்தைச் சார்ந்தவர்கள் நூலாதாரத்துடன் விளக்கி அடியேனை ஆதரிக்க வேண்டுகிறேன்.

ஏ. நாராயணசாமி, ஒரத்தூர்

விடை: அகஸ்தியர், நாயனார், ஔவையார் இம்மூவரும் பௌத்த தன்மத்தைச் சார்ந்த திராவிட குலத்தவர்களும் சாக்கைய வம்மிஷ வரிசையோர்களுமேயாம்.

இதற்குப் பகரமாய் வானசோதிகளின் கணிதங்களைக் கொண்டே வருங்காலம், போங்காலங்களை அறிந்து சொல்லக்கூடிய சாக்கையர், வள்ளுவர், நிமித்தகரென்னும் வம்மிஷ வரிசையிற் தோன்றிய புத்தபிரானென்னும் அவலோகிதர் பால் திராவிடமென்னுந் தமிழ்பாஷையை அகஸ்தியர் கற்று தென்னாடெங்கும் பரவச்செய்திருக்கின்றார்.

**வீரசோழியம்**

ஆயுங்குணத்தவலோகிதன் பக்கலகத்தியன் கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழீங்குரைக்க.

**பதஞ்சலிமா முனிவர்**

பாருங்கீர்திசையிலையார் சட்ட முநி பானுமாமலையிலாதினார்
பன்னதென்றிசையிலே யிருந்து தமிழ் பாஷையோதின னகத்தியன்.

அவலோகிதரென்னும் புத்த பிரானிடம் தமிழினைக் கற்று தென்னாடெங்கும் அத்தமிழினைப் பரவச்செய்த அகஸ்த்தியர் தான் இயற்றியுள்ள தமிழ் நூற்கள் யாவற்றிற்கும் காப்பாக புத்தபிரானையே வினாய கரென்றும், கணநாயகரென்றும், திவாகரரென்றும் சிந்தித்திருக்கின்றார்.

## அகஸ்தியர் பரிபாஷைத்திரட்டு

### காப்பு

பரமஞானோதயத்துப் பரஞ்சுட ருலகுக் கெல்லாந்
திரமதா யுதித்தஞான திவாகரன் திருநாள் போற்றி
வரமதாம் வகாரயோக மறைப்புநீற் பாடையெல்லாம்
முருகமழ் தமிழாற் செய்து முடிக்கமும் மொழியான் காப்பே.

என ஞானதிவாகரராம் புத்தபிரானையே காப்புக்கு முன்னெடுக்குங் கடவுளாக சிந்தித்து தனது நூலை முடித்திருக்கின்றார்.

### திருவள்ளுவநாயனார்

தானியற்றிய முப்பாலாகும் திரிக்குறளை வரையும் முகப்பில் கடவுள் வாழ்த்து காப்பாம் பத்து பாடலிலும் புத்தபிரானையே சிந்தித்திருக்கின்றார். பகவனென்னும் பெயரை சிலர் பொதுப்பெயரெனக் கூறுவாறும் உண்டு. உலகெங்குமுள்ள மக்களின் அஞ்ஞான இருளை அகற்றி மெஞ்ஞான முதயமுறச் செய்தவர் புத்தர் ஒருவரேயன்றி வேறொருவரில்லாததாலும், அப்பகவனென்னும் பெயரை புத்தசங்க சமணமுநிவர்களே அவருக்களித்துள்ளதினாலும், சமணமுநிவருள் சித்தி பெற்ற சித்தர்களே அவரை பகவன் என்று சிந்தித்துள்ள படியாலும் நாயனார் திரிக்குறள் காப்பில் கடவுளாக சிந்தித்துள்ள பகவனென்னு மொழி புத்தபிரானைக்குறித்த மொழியேயாம்.

### பின்கலை நிகண்டு

பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்
நீரினிற் பூவில் வானில் நினைந்துழி யொதுங்குகின்ற
சாரண ரெண்மராவர் சமணரிற் சித்தி பெற்றோர்.

இத்தகைய சமணரிற் சித்திபெற்ற சித்தர்களும் தங்களது சற்குருவை எவ்வகையால் சிந்தித்துள்ளார்களென்னில்,

**இடைக்காட்டுசித்தர்**

ஆதிபகவனையே பசுவே அன்பி நினைப்பாயேல்
சோதியரகதிதான் பசுவே சொந்தமதாகாதோ.

இத்தகைய ஆதாரங்களே நாயனார்க் கூறியுள்ள "அகர முதல வெழுத்தெல்லாமாதி, பகவன் முதற்றே யுல" கென சிந்தித்திருக்கின்றார்.

அதன் கருத்தோவெனில் அகரமாகிய எழுத்து சகல எழுத்துக்களுக்கும் ஆதியாயிருந்து மக்களின் அறிவை விளக்குவது போல் உலகத்தில் தோன்றிய மனுகுலத்தில் மூவாமுதல்வனெனத் தோன்றி உலகெங்குமுள்ள மக்கள் யாவருக்கும் ஞானச்சுடர் விளக்கேற்றி சீர்திருத்தம் பெறச் செய்ததுமன்றி முத்திபேற்றிற்கும் முதல் வழிகாட்டியாக விளங்கியது கண்டு புத்தபிரானையே ஆதி பகவனென சிந்தித்திருக்கின்றார்.

ஔவை என்னும் அம்பிகாதேவியோ எனின் ஓரரசபுத்திரியாயிருந்தும் தாய் மாமன் கையால் கழுத்தில் பொட்டுக்கட்டிக் கொண்டு பிக்குணிகள் வாழும் இஸ்திரீகள் சங்கத்திற் சேர்ந்து புத்த பிரானாம் அருகனது ஞானசாதன உருவம் போல் ஓர் விக்கிரகஞ்செய்து தனது முடியில் தரித்துக்கொண்டு ஞானசாதனம் முதிர்ந்த பின்னர் வேம்புமரமென்னும் பூகமரத்தடியில் வீற்று உலக மக்களுக்கு அறநெறி விளக்கி அரசர்கள் முதல் குடிகள் வரை அறச்செல்வி என்றும், அம்மையென்றும் பௌத்தர்கள் கொண்டாடப்பெற்றவள் நமது ஞானத்தாய் என்னும் ஔவையேயாகும்.

**பின்கலை நிகண்டு**

மரகதவல்லி பூக மரநிழ லுற்றவஞ்சி
பரமசுந்தரியியக்கி பகவதி யம்மையெங்க
ளருகனை முடி தரித்தா ளம்பிகை யறத்தின் செல்வி
தருமதேவதை பேரம்பா லிகையென்றுஞ் சாற்றலாமே.

**சூளாமணி**

கொவ்வையந் துவரிதழ்க் கோலவாயவட்
கிவ்வகை யணியென கூறியீண்டுநும்
அவ்வைதன் கோயில்புக் கடிசிலுண்கென
மவ்வலங் குழலியை மன்னனேவினான்.

இத்தகைய புத்தசங்கத்தைச்சார்ந்த சமணமுநிவர்களும், பௌத்த உபாசகர்களும் அரசமரத்தடியில் வீற்று ஞானோதயம் பெற்ற சித்தார்த்த சக்கிரவர்த்தியை உலகநாதனென்றும், அறவாழியானென்றும், புத்தரென்றும், அருகனென்றும், செல்வனென்றும், ஐயனாரென்றும், தருமதேவன் என்றும், பகவன் என்றும், வாலறிவனென்றுங் கொண்டாடியதுபோல்,

புத்தரது போதனையையும், அவருருவத்தையும் சிரசிற்றாங்கி வேப்பமரத்தடியில் வீற்று ஞானோதயம் பெற்ற அம்பிகாதேவியை உலகநாயகியென்றும், உலகமாதாவென்றும், அறச்செல்வி என்றும், ஔவை என்றும், அருகி என்றும், அம்மை என்றும், தருமதேவதை என்றும், வாலி என்றும், பகவதி என்றுங் கொண்டாடி வந்தார்கள்.

இத்தகைய சரித்திர ஆதாரங்களையும், பெயர்களின் ஆதாரங்களையம், அதுபல ஆதாரங்களையும் கொண்டே அகஸ்தியர், நாயனார். அவ்வை இம்மூவரும் திராவிட குலத்தைச் சார்ந்த பௌத்தர்கள் என்றே தெரிந்துக் கொள்ளுவீராக அவலோகீசனென்றும், அவலோகிதரென்றும் பெயர் பெற்ற புத்தபிரான் பால் அகஸ்தியர் தமிழ் கற்று தென்னாடெங்கும் சங்கங்களை / ஸ்தாபித்து சத்தியதன் மத்தைப் பாவச் செய்தார் என்பதற்கு பூர்வ இலக்கண நூலாம் விரசோழியமும் ஞானநாலாம் பதஞ்சலி ஞானமுமே போதுஞ் சான்றாம்.

4:30, சனவரி 4, 1911

## 19. தேசபாஷையை சிறுவர்களுக்கு ஏன் கற்பிப்பதில்லை

தேசபாஷையாம் திராவிடம் ஒன்றை எடுத்துக்கொள்ளுவோம் இப் பாஷையானது இந்துதேசம் எங்ஙனும் பரவியிருந்தகாலத்தில் பூமியினது குணாகுணங்களை ஐந்து பாகமாகப் பிரித்து அவற்றின் விளைவுகளையும், அதனா லுண்டாம் பயன்களையும், அந்தந்த பூமிகளை ஆளும் அரசர்களையும், அவாவர்கள் பெயர்களையும், அந்தந்த பூமியில் வாழுங் குடிகளின் செயல்களையும். திராவிட பாஷையில் தெள்ளற விளக்கி அனந்த நூற்களை வரைந்து வைத்திருக்கின்றார்கள்.

அத்தகைய நூற்களை தற்கால சிறுவர்களுக்குத் கற்பித்துவருவதாயின் வித்தை புத்தி ஈகை சன்மார்க்க இவைகள் பெருகுவதுடன் குரு விசுவாசம்,மாதுரு பிதுரு விசுவாசம், இராஜவிசுவாச முதலியவைகள் நிலைத்து தாங்கள் சுகச்சீர் பெருகுவதுடன் தங்களை அடுத்தோரையும் சுகச்சீர் பெறச் செய்விப்பார்கள். அத்தகைய நூற்களை சிறுவர்கள் கையில் எடுக்கவே கூடாமற் செய்துவிட்டபடியால் சிறுவர்கள் ஆங்கிலபாஷையை அனந்தமாக கற்றிருப் பினும் சுயபாஷையினதுச் செயலும் அதன் பயனுங் குறைந்து போயிற்று. அத்தகைய நூற்களை ஆங்கில வித்வான்களுக்கு விளக்கி கலாசாலைகளில் கற்பிப்பதாயின் தற்காலம் நூதனமாக ஏற்படுத்திக் கொண்ட சாதி வித்தியாசங்களும், மதக்கடை வியாபாரங்களும் இராஜாங்கத்தோருக்கு விளங்குவதுடன்

சிறுவர்களும் விவேகவிருத்திபெற்று சாதித்தலைவர்களையும் சமயதலைவர் களையும் மதியாமற் போய்விடுவார்கள். பூர்வ பௌத்ததன்மத்தின் சிறப்புகளும் விளங்கிப்போமென்னுங் கருத்தினால் நூதன சாதித்தலைவர்களும், நாதன சமயத்தலைவர்களும் பூர்வ திராவிட நூற்களை கலாசாலைகளிற் பரவ விடாமலே செய்துவிட்டார்கள்.

தற்காலம் அச்சிட்டு வெளிவந்திருக்கும் திராவிட நூற்களும் ஆங்கிலேய ஆராய்ச்சிப் புருஷரால் வெளிவந்துள்ளதேயன்றி வேறன்று. பூர்வநூற்களின் ஆக்கியோன்கள் பெயர்கள் யாவும் விகுதியாகவிருக்குமேயன்றி பகுதியாக இருக்கமாட்டாது.

நத்தத்தனார், சாத்தனார், கீரனார், சோழனாரென்னுந் தொடர்மொழிகள் அற்றிருக்குமேயன்றி நத்தவையங்கார், சாத்தநாயுடு, கீரமுதலியார், சோழ செட்டியார் என்னுந் தொடர்மொழிகள் யாதொன்றுங் கிடையாது. அத்தகைய நூற்களையும் ஆக்கியோன் பெயர்களையும் காணக்கூம் இராஜாங்கத்தோரும் பூர்வத்திலில்லாத் தொடர்மொழிகள் இப்போது தோன்றியுள்ளதால் இஃது நூதனசாதித்தொடர் மொழிகளென்றே தெரிந்துக்கொள்ளுவார்களென்னும் பீதியால் பூர்வ திராவிட நூற்கள் யாவையும் கலாசாலைகளிற் கொண்டுவரக்கூடாதென்னும் முயற்சியில் இருக்கின்றார்கள். அதலின் தேசபாஷயை

தேசசிறுவர்களுக்கு விளக்காமலும் அதன் பயனை உணராமலும் போய்விடுகின்றார்கள்.

திராவிடமென்றால் நான்குபாஷைக்குரியப் பொதுப்பெயரென அவற்றை மாறுபடுத்திவிட்டார்கள். காரணம்: அதனந்தரார்த்தம் அறியாமலேயாம். மகட பாஷையாம் பாலிபாஷையை மூலமாகக்கெண்டு புத்தபிரானால் சகப்பாஷையாம் சமஸ்கிருதத்தையும், திராவிட பாஷையாம் தமிழையும் அக்கை தங்கையர்போலேற்படுத்தி இந்தியதேயமெங்கும் பரவச்செய்துவந்ததினால் வடதேசம் எங்கணுந் தமிழையே திராவிடமென்றும், இலங்காதீவம் எங்கணுந் தமிழையே திராவிடமென்றும் வழங்கிவருவது அனுபவக் காட்சியாயிருக்க நாலு பாஷைக்குமே திரமிடம், திரமிடம் என்னும் பெயருண்டெனக் கூறுவாராயின் பூர்வ பதினெட்டுபாஷைக்கு எப்பெயர் கூறுவரோ அறியேம். மகட பாஷையை ஆதாரமாகக் கொண்டு தோன்றியது ஒன்று சகடபாஷையும் ஒன்று திராவிடபாஷையுமேயாம். புத்தசங்கங்கள் தோரும் வட்டமிட்டிருந்த படியால் சகடபாஷையென்றும், நஞ்செழுத் தமைந்துள்ள படியால் தீராவிட பாஷை, திராவிடபாஷையென்றும் வழங்கிவந்தார்கள். இதன்றி செய்யுட்களில் அரம்வைத்துப் பாடிவிட்டான், நஞ்சுவைத்துப் பாடிவிட்டானென்னும் மொழிகளுக்கியல் அட்சரங்களிலும் நஞ்செழுத்துக்கள் சிலதும், அமுதெழுத்துக்கள் சிலதும்

உண்டென்பதை நாளது வரையிற் காணலாம். நஞ் செழுத்தின் செயலைக்கொண்டு திராவிடமென்றும், அமுதெழுத்தின் செயலைக் கொண்டு தமிழென்றும் வழங்கிவந்தார்கள். இவ்விரு பெயருக்குங் காரணமுண்டு இதனந்தரார்த்தம் அறியா பராயர்கள் அதனையும் வீணே மாறுப்படுத்தி தமிழினது இனிதையும், திராவிடத்தினது வலிதையுங் கெடுத்தே வைத்திருக்கின்றார்கள். இவற்றை நாளுக்கு நாள் உணர்ந்துவரும் நமது கருணைதங்கிய ராஜாங்கத்தார் கலாசாலைகளில் வாசிக்கும் சிறுவர்களுக்கு மதப்படிப்பைக் கற்பிக்காமல் நீதியின் படிப்பைக் கற்பிப்பதாயின் பூர்வதமிழ் நூற்கள் யாவுந்தானே வெளிவரும். அவ்வகை வெளிவந்து சிறுவர்கள் வாசிப்பார்களாயின் வித்தை, புத்தி, ஈகை, சன்மார்க்கம் நிறைந்து தங்களே சுகச்சீர் பெறுவார்கள்.

5:39. மார்ச் 6, 1912

## 20, திராவிடமும் திராவிடரும்

வினா: ஐயா, எமதாபீசிலுள்ள ஒருவரிடம் பேசிக்கொண்டிருக்குங்கால் திராவிடர்களென்பது தமிழருக்குரியப் பெயரல்லவென்றும், அஃது கன்னடர், மராஷ்டகர், ஆந்திரர்க்குரியப் பொதுப்பெயரென்றும், திரமிடமென்பது திராவிடமென வழங்குகிறார்களென்றுங் கூறினார். அதற்கு ஏதேனும் விதியுண் டோவென வினாவினேன். அதற்கென்னவிதி யென்றார். திராவிடமென்னு மொழிக்கு மூலம் எவையென்றேன். அதற்கு

மூலமென்ன வென்றார். அஃது காரியமொழியா, காரணமொழியா என்றேன். அதோர் காரணமொழியே யாகுமென்றார். யாது காரணமென்றேன், ஏதோர் உத்திரமுங் கூறாமல் மௌனத்திருந்துவிட்டார். எமக்குமது விளங்காமல் திகைத்திருக்கின்றேன்.

கோ. பார்த்தசாரதி. திரிசுரபுரம்,

விடை: வடமொழி தென்மொழியென்னும் இருவகுப்பில் தென்மொழி யாம் திராவிடம், தமிழ் என்னும் இருமொழிகளும் ஒருபாஷைக்குரிய பெயர்களேயாம். அம்மொழிகள் தோன்றியவற்றிற்கு மூலகாரணங்கள் யாதெனில், அவ்வட்சரங்களுள் நஞ்செழுத்தாம் விடவட்சரங்களும், அமுதெழுத்தாம் இனியவட்சரங்களுள்ளது கண்டு நஞ்செழுத்தால் தீராவிட மென்றும், அமுதெழுத்தால் தமிழென்றும் இருபெயர்களுண்டாயிற்று.

இஃது யாப்பிலக்கணங்கற்ற பெரியோர்களுக்கே நன்குவிளங்குமன்றி ஏனையோர் கெவணும் விளங்காவாம். திராவிட மென்னுந் தமிழை எடுத்தாளும்போதே வாசகநடைமிகவின்றி செய்யுள் நடையே பெருகியபடியால் எடுக்குஞ் செய்யுள் இனிது முடியுமாறு மொழி முதலாய் அந்தெழுத்துள் அமுது பொருந்தி மங்கலமிசையும் உளவறிந்து தாங்களும் பாடியுள்ளதன்றி ஏனையோரும் அப்பத்துப் பொருத்தங்களை இசைந்து பாடும்

வழிகளையும் வரைந்துள்ளார்கள். அவைகளமைக்கவேண்டிய விதி: "மங்கலப் பொருத்தமே தங்கைமலரிலங், கார்புயல் பொன்மணி கடல்சொல் கரிபரி, சீர்புகமெழுத்தலர் திங்கடினகரன், றேர்வய லமுதந் திருவுல காரண, நீர்பிறவரு முதனிலைச் சொல்லியல்பே" என்னும் மொழிமுதற்கொண்டு அவற்றுள் பத்து பொருத்தங்கள் அமையப் பாடவேண்டுமென்பது விதி.

"மங்கலஞ்சொல்லெழுத்தெண்ணியதானம் வருமிருபாற், பொங்கிய வுண்டிவருணம் பகுத்திடி நாட்பொருத்தந், தங்கிய நாட்கதி யெண்கணமென்று தமிழ் தெரிந்தோ, ரிங்கிவை பத்து முதல் மொழியாமென் றியம்புவரே" இவ் வகைப் பாடுவதில் அமுதெழுத்து அமைத்துப் பாடவேண்டியதே சிறப்பென்பதுவிதி.

"மதித்த கச த ந ப மவ்வொடுவவ்வு, முதித்தமைந்த நாற்குற்றியிருந் - துதித்தமுதென், றாதிமொழிக்குந்தசாங்கத் தயலுக்குந், தீதில் வேயென்றார் தெரிந்து" என்னுந் தசாங்கத்துள் உண்டி பொருத்தமே அமுதெழுத்துக்களையும் நஞ்செழுத்துக்களையும் விளக்குகின்றபடியால் யாப்பிலக்கணங்கற்ற பெரியோருக்கே நஞ்செழுத்தென்னுந் தீராவிட அட்சரங்களும், அமுதெழுத் தென்னுந் தமிழட்சரங்களுங் கண்டு அப்பாஷைக்குத் திராவிடமென்றும் தமிழென்றும் வழங்கலாயினர்.

தீராவிடமென்னு மொழியே குறுக்கல் விகாரத்தால் திராவிடம் திராவிடமென வழங்கலாயிற்று.

திராவிடமென்பதே தமிழென்பதற்குச் சூத்திர ஆதாரங்கள் இருப்பதுடன் வடநாட்டோரும் சிங்களதேசத்தோருந் தமிழை திராவிடபாஷையென்றும், தமிழ் பாஷைக்குரியோரை திராவிடர்களென்றும் வழங்கி வருவதை நாளது வரையிற் காணலாம்.

இத்தேசப்பெயரையும் வேதாகம புராணங்களையும் கடவுளர்களையும் புறட்ட ஆரம்பித்துக் கொண்டவர்கள் திராவிடமென்னும் பாஷையையும் புறட்டப்பார்க்கின்றார்கள். அப்புறட்டு தமிழினுக்குரியோர்முன் பிறழாவாம்.

6:26, டிசம்ப ர் 4, 1912

## 21. தமிழ் கவிகள்

வினா: நமது தமிழ் நாட்டுள் வழங்கும் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, விஸ்தாரகவி எனக் கூறுகின்றார்களே அவ்வகைக் கவிபாடுவோர் தற்காலம் இருக்கின்றார்களா, அவர்கள் யார், எவ்வகையாகப் பாடுவோருக்கு அப்பெயர்கள் பொருந்தும் என்பது அடியேனுக்கு விளங்காதிருத்தலால் அவற்றை நமதரிய தமிழனில் விளக்கி ஆட்கொள்ளும்படி வேண்டுகிறேன்.

தி.நா. பாலகிருஷ்ணன். மதுரை,

விடை தற்காலமுள்ள விவேகிகள் யாவரும் தமிழையும் அதன் சுவையையும் ஓம்பாது விடுத்து ஆங்கில பாஷையையே பெரும்பாலும் அனுசரிக்க முயன்றுவிட்டதினால் தமிழ் பாஷையினது மணமும் செய்யுட்களின் சிறப்பும் மறைந்து இன்னார்தான் ஆசுகவி, இன்னார்தான் மதுரகவி, இன்னார் தான் சித்திரகவி, இன்னார்தான் வித்தாரக்கவியெனக் குறிப்பிட்டுக் கூறுவதற்கு ஆளில்லாமற் போய்விட்டது. இப்புலமெயோர் சிறப்புக்கள் யாவும் புத்ததன்மம் இத்தேசத்திற் பரவியிருந்தவரையில் சிறப்புற்றோங்கி, அஃது மறைந்தபின்னர் வித்வ அமிசையோர் சிறப்பும் மறைந்தே நிற்கின்றது.

இவற்றுள் கற்றுணர்ந்த பெரியோரை வடமொழியில் வித்வான்கள் என்றும், தென்மொழியில் புலமெயோர் என்றும் வழங்கிவந்தார்கள். அவர்களுள் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவியென்னும் நான்கினையும் பாடவல்லவரை 'கவி' என்றும், பொருள் விளங்காமொழிகளை பொருள் விளங்க செவ்வியநடையில் விவரித்துப்பாடுவோரை "கமகன்" என்றும், தொடுத்த காரிய காரணங்களை உபமான உபமேயங்களால் விளக்கி எதிரிகளது கொள்கைகளைத் தடுத்து தனது கொள்கையை மேற்கொள்ளபாடுவோரை "வாதி" என்றும், அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கின் விவரங்களையும் தெளிவுற

போதித்து வாய்மெயையூட்டி சத்தியதன்மத்தில் நிலைக்கச் செய்வோரை “வாக்கி" என வகுத்திருக்கின்றார்கள்.

இவற்றுள் ஆசுகவிபாடும் விதிகள் யாதெனில்:- எதிரி யொருவன் ஒருபொருளைச் சுட்டிக்காட்டி அதன் செயல் விளங்கப் பாடவேண்டு மென்றவுடன் அதன் குணாகுணப் பொருளை விளக்கி, பாவணி பிறழாது பாடுவதாகும். மதுரகவி என்பது அமுதெழுத்தூன்றி இன்னிசை மயங்கா சொல்லலங்காரம் பொருளலங்காரம் அமையப் பாடுவதாகும். சித்திரகவி என்பது எழுகூற்றிருக்கை, ஏகபாதம், காதை, கரப்பு, கரந்துறை, கூடசதுக்கம், கோமுத்திரி, சக்கரம், சித்திரப்பா, சுழிகுளம், சருப்பதோயத்திரம், தூகங்கொளல், பாவின் புணர்ச்சி, பாதமயக்கு, மாலைமாற்று, ஒற்றெழுத்தமைந்த ஒருபொருட்பாட்டு, ஓரெழுத்தின் சித்திரப்பா, பலவெழுத்தின் விசித்திரப்பா, விடுகவி விடை இவற்றுள் நன்கு பழகி நடுநிலைவழாது பாடுவதாகும். வித்தாரக்கவியென்பது இயல், இசை, கலிவெண்பா, சிலேடை, தசாங்கம், பன்மணிமாலை, பாசண்டத்துறை, மறம், மாலை, மும்மணிக்கோவை, இவற்றின் பாவணி கெடாது விவரித்துப் பாடுவதாகும்.

இதுவே தமிழினை வளர்த்த தாதாக்களாம் சமணமுநிவர்கள் வகுத்த விதிகளாகும். இவ்விதிகளையறிந்து பாடவல்ல பாணர்கள் இக்காலத்துளரோ இலரோ என் றெம்மெ வினவவதால், யாதுப்பயன்.

சமணமுநிவர்களது சங்கங்கள் மறைந்தபோதே கவியின் திறங்கண்டு பாடவல்ல பாணர்களும் மறைந்துள்ளார்கள். பௌத்தர்கள் தோன்றியுள்ளபடியால் இனி கவிகளின் விதியறிந்து பாடவல்ல பாணர்களுந் தோன்றுவார்களென்பது திண்ணம்.

இதனை அநுசரித்தே 1862 வருஷம் தோன்றியுள்ள சீட்டுக்கவியை இதனடியில்வரைகின்றேன். அதாவது :- எமது வித்தியாசிரியர் தொண்ட மண்டலம் வல்லகாளத்திநகர் வீ. அயோத்திதாசக் கவிராஜப்பண்டிதர் இயற்றியுள்ள இலக்கணவெண்பாவில் வழுவுளதென புரசைவாக்கத்திலுள்ள பராயசாதி அஷ்டாவதானி ஒருவர் கூற அவற்றை வித்துவான் முன்னிலையில் ஆராயவேண்டுமென்னும் அவாவினால் புரசை ஏகாம்பரபாவலரும், பெத்து நாய்க்கன் பேட்டை டிக்குரூஸ் அண்ணாவியாரும், வீரணன் தோட்டத்தில் ஓர்பந்தலமைத்து வழுகூறிய அஷ்டாவதானியாரையும் மற்றுமுள்ள வித்துவான்களையும் தருவித்தார்கள். அக்கால் வெண்பாவிற்கு வழுகூறிய அஷ்டாவதானியார் வெளிதோன்றாது பதுங்கிவிட்டார். குறித்த காலவரை எதிர்பார்த்தும் வாராது கண்ட வீ அயோத்திதாச கவிராஜப் பண்டிதர் டிக்குரூஸ் அண்ணாவியாரை ஓலையும் எழுத்தாணியும் எடுக்கச்சொல்லி அடியிற்குறிக்கும் கவியைப்பாடியிருக்கின்றார்.

**சீட்டுக்கவி**

அகரமுத லவ்வெழுத் தொற்று பதி நெட்டு சுழியம் மூவிகற்சார்புறன்
அறிச்சூடி தன்னைப் படிக்க தெரியாதவர்களரசுகவி சொற்புலவராம்
அட்சரந் தனை யுச்சரிக்க தெரியாதவர்களணி மதுர கவிராயராம்
அபிநயந் திட்டோபி யட்சயம் பழகிலாசேதனர்கள் சித்திரகவியாம்
ககன மணி மாலைநிலை பேதுளோர் வித்தாரகவிகாய தோழரென்பார்
காணி முந்திரிசெவு டுழக்கழாக்குக் குருணிகல்ல நூற் றொருமாவிலே
கணக்கு தெரியாதவர்க ளஷ்டாவதானக்கவிப்புலவராந் திசையினில்
கைதனி லெழுத்தாணியைப் பிடித் தோலையிற்கரகரென வெழுதவறியார்
துகிலிகையி நின்றுன்மை தொட்டெழுதவறிலார்சோடசுபதானிக்களாம்
சொன்னதைச் சொல்ல வகையில்லாத விழுதையர்கடுகளாக கற்றவர்களாம்
தொன்னு நன்னூல்பஞ்ச லட்சணத் திரைகடற்றுரையையறியாத மடையர்
தூயவீ ரருணிக ளோதிய பராயணஞ்செற்பனத்தீலுமறியார்

புகழ்கீசகம்போ ளெரிப்போதரிக் கவிதை பொழிகின்ற மேகமென்பார்
புலவராம் பலவராம் மலவரா மிவரெலாம் புளுகராங் கனதுஷ்டராம்
புலையரா மிவர்கட்கு புத்தி சொல்வோ மிந்த பூதலந் தனிலுயர்ந்தோன்
புகழ்பெறு மயோத்தியா தாசனன் கோடையிடி பூமியண்டங் கிழியுமே.

எனக் கூறியுள்ளக் கவியே நாற்கவிப்பாடும் வல்லவர் தற்காலம் இல்லை என்பதை விளக்கப்போதுஞ்சான்றாம்.

6:27, டிசம்ப ர் 11, 1912

## 22. மணிமேகலை

வினா: ஐயா யான் மணிமேகலையென்னும் புத்தகம் ஒன்று வாங்கி வாசித்து வருகிறேன். அச் செய்யுள் மிகவுங் கருதாலா யுள்ளபடியால் பொருள் சரியாகவும் கோர்வையாகவும் விளங்கவில்லை. அதற்கு எழுதியிருக்கும் உரையோ இன்ன உரையென்று விளங்குவதற்கு ஆதாரமில்லாமலே விரிந்திருக்கின்றது. மணிமேகலை நூலுக்கு வேறு யாரேனும் உரையெழுதி யிருக்கின்றார்களா

பு.க. முனிநாதன். வேலூர்,

விடை மணிமேகலையென்னும் செய்யுளே சரிவர வெளிவராமல் வரிக்குவரி மாறுதலும் மொழிக்கு மொழி பேதமுற்றும் பூர்வ ஓலைப்பிரிதி களுக்குப் பிரிதி சிதலுண்டும் போய்விட்டபடியால் அவரவர்களுக்குக் கிடைத்த மேறை அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றார்கள். கூடிய சீக்கிரம் சுத்தப்பிரிதி வெளியாகும். அப்போது சரித்திரக்கோர்வையைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். மணிமேகலை என்னும் மங்கை சிற்றின்பத்தை வெறுத்து பேரின்பத்தை விரும்பிபுத்த சங்கஞ் சேர்ந்து பிக்குணியாகி ஆதி அறச்செல்வி என்றும், சிந்தாதேவியென்றும், சிந்தாவிளக்கென்றும் வழங்கிய அம்பிகா தேவியாம் அவ்வையின் ஒழுக்கத்தைப் பின்பற்றி தெய்வநிலையடைந்து பரிநிருவாண முற்றப்பின்னர். அவ்வம்மனை இத்தேசத்தோர் தேவியாகக் கொண்டாடி வந்திருக்கின்றார்கள். அவ்வகைக்கொண்டாடி வந்தவற்றை அடியிற்குறித்துள்ளப் பாடலால் காணலாம்.

கம்பருடைய புத்திரர் அம்பிகாபதி என்பவர் பாடியுள்ள செய்யுள்.

காதன் மடந்தையர் கையறுங்காலையு மெய்யகலா மேதகுநாணு
மெலியவன்றோ விழிபோலு நெய்தற்
போதவழ் மென்மலர்ப் புன்னையங்கானல் பொருந்துமிந்த
மாதவிபெற்ற மணிமேகலை நம்மெ வாழ்விப்பதே.

என சிந்தித்துள்ள செய்யுள் ஆதாரங்கொண்டு நமது தேசத்தோர் மணிமேகலா தேவியைக் கொண்டாடி வந்ததைக் காணலாம். அவ்வம்மனது கொண்டாட்டம் புத்ததன்மங்கள் மாறுபட்டு புதின மதங்கள் தோன்றிவிட்ட படியால் அம்மன் பெயர் சகலர் நாவிலும் வழங்காமலிருக்கின்றது. அதனால் தங்களுக்கு அப்பெயர் புதினமாகவும் விளங்குகின்றது. இத்தேசத்திற் பிறந்து வளர்ந்து ஜெகத்திற்கே குருவாக விளங்கிய கருணாகரக்கடவுளாம் புத்தருடைய பெயரும் அவருடைய சத்தியதன்மமும் மறைந்து அசத்திய தன்மங்கள் பரவிவிட்ட போது அவரது சங்கத்தினர் பெயர் மறைவதற்கு சான்றும் வேண்டுமோ, இல்லை. அம்மணிமேகலை என்னும் நூலுக்கு வேறொருவர் உரை எழுதியிருப்பார்களென்பதும் எமக்கு விளங்கவில்லை. ஏனென்பீரேல் தமிழ் பாஷையை மிக்கக் கற்றவரும் பௌத்த நூலாராய்ச்சியுள்ளவரும் மகா

னியமாக விளங்கிய சிவப்பிரகாச சுவாமியவர்களே, மணிமேகலையென்னும் நூலிற்கு உரையெழுத எம்மால் இயலுமோவென பயந்துவிட்டிருக்க, தற்கால வித்துவான்கள் அவற்றிற்கு உரையெழுதியுள்ளாரென்பதை சங்கிக்கற்பாலதே. அவற்றுள் புத்ததன்மத்தைச் சார்ந்தக் குடும்பத்திற் பிறந்து வளர்ந்து அத்தன்ம ஒழுக்கத்தைச் சார்ந்துள்ளோர் எழுதினால் அவ்வுரையை சிலகால் ஏற்கப்பாலதன்றி ஏனைய மதத்தோர் எழுதியுள்ள உரையை சற்று சிந்தித்து ஆராயவேண்டியதேயாம். அதாவது தங்கள்

புதினமதக்கூற்றை புத்ததன்மத்திற் கூட்டியுங் குறைத்து மிருப்பார்கள். அன்னோர் நூலைக் கண்ணுற்று எம்மெ வினாவுவதில் யாதுப்பயன். சிலகால் அமைதியுறின் சுத்தப்பிரிதி காணலாம்.

**சிவப்பிரகாச சுவாமிகள் செய்யுள்**

மந்தாகினியணி வேணிப் பிரான் வெங்கை மன்னவநீ
கொந்தராகுழன் மணிமேகலை நூனுட்பங்கொள்வதெங்ஙன்
சிந்தாமணியுந் திருக்கோவையு மெழுதிக்கொளினும்
நந்தா வுரையை யெழுதலெவ்வாறு நவின்றருளே.

6:29. டிசம்ப ர் 25, 1912

## 23. பதினெண் சித்தர்கள்

வினா: பதினெண் சித்தர்கள் புத்தருடைய காலத்தில் இருந்தவர்களா அல்லது பௌத்தரைச் சேர்ந்தவர்களா அல்லது ஆரியரின் காலத்திலிருந்து வந்தவர்களா. இவருள் கருவூரார் என்பவர் மோகனம், வசியம், தம்பளம், உச்சாடனம், ஆக்றாணம், வித்துவேஷம், பேதனம், மாரணம் என்னும் சித்துக்களை (ந ம-சி-வ-ய) (ச-ற-ஹ-ண-ப-வ) என்னு மட்சரத்தை மாறுதல் செய்து அனேக சித்துக்கள் செய்ததாகவும் அதையே தற்போது சிலர் கையாண்டு வருவதாகவும் காண்கிறோம். இதன் இரகசியம் எனக்கு விளங்கவில்லை .

வி. எல்லையா சுபேதார், பெங்களூர்

விடை : யாதார்த்த பிராமணர்களாம் தென்புலத்தோர்களும் சத்தியசங்கங்களும் இத்தேசத்தில் பரவியிருக்குமளவும் சித்தின் ரகசியங்களும் ஞானரகசியங்களும் சுயம்பாகவே விளங்கி வந்தன. சத்திய சங்கங்கள் மாறுதலுற்று அசத்திய சங்கங்கள் பெருகியும், யதார்த்த பிராமணர் மறைந்து வேஷ பிராமணர்கள் பெருகியும் விட்டபடியால் அவர்களுக்கு வேதம் இன்னதென்றும், வேத அந்தம் இன்னதென்றும், சித்து இன்னதென்றும், சித்தின் அந்தம் இன்னதென்றும், பிராம்மணம் இன்னதென்றும், பிராமணாள் இன்னாரென்றும், புலன் தென்பட்டோர் இன்னாரென்றும், தென்புலத்தோர் இன்னாரென்றும், ஞானமின்னதென்றும், ஞானிகளின்னாரென்றும், இருடி நிலையின்னதென்றும், இருடிகளின்னாரென்றும், பார்ப்பது இன்னதென்றும், பார்ப்போரின்னார் என்றும், திரிகாய மந்திர மீதென்றும், காயத்திரி மந்திர மின்னதென்றும், நயன மீதென்றும், உபநயனமின்னதென்றும், கிரமம் சாலதின்னதென்றும், சாலக் கிரமமீ தென்றும், மந்திரம்தென்றும் மந்திரவாதிகளிவரென்றும், மந்திரீகளின்னா ரென்றும், அதனதனந்தரார்த்த மறியாது பிராமணவேடமிட்டு பொய்யாலும் மித்திரபேதத்தாலும் வயிறு வளர்க்க ஆரம்பித்துக் கொண்டார்கள்.

அதன் பெயர்களை மட்டிலும் நாவில் வழங்கி அதனுட்பொருளறியாப் பெருங்கூட்டத்தோர் அவர்கட் பொய்ப்

போதங்கள் யாவையும் மெய்ப் போதங்களென் றெண்ணிவந்தகாலத்தில் இருடிகளுக்கு மனைவிகள் அருகிலேயே யிருந்தார்களென்றும் அவர்களைப்போலவே பிராமணர்களாகிய யாங்களும் பெண்டு பிள்ளைகளுடன் இருக்கின்றோமென்றும் பகட்டிக்கொண்டு வேதமுநி சூதமுனி யூகமுநி என்னும் பொய்ப் பெயர்களைக் கொண்டு மனம் போனக் கட்டுக்கதைகளை எழுதியும் கூறியும் வந்ததன்றி பௌத்தன் மதத்தைச் சார்ந்த அகஸ்தியர்வஸிஷ்டர் முதலானவர்கள் வெவ்வேறு தங்களுக்கொத்த நூற்களைச் சொன்னதாகவும் வரைந்து பேதை மக்களை வஞ்சித்துவந்த பொய் நூற்கள் மிகப்படப் பெருகிவிட்டபடியால் கியானசித்துக்க

தென்றும் கருவிசித்துக்களீதீதென்றும் விளங்காது திகைத்திருக்கின்றார்கள்.

கியானசித்துக்களானது பௌத்த வியாரங்களில் தங்கியிருந்த சமணமுனிவர்களில் சித்திப் பெற்றோர் நீருள் நீராகவும், மன்னுள் மண்ணாகவும், நெருப்புள் நெருப்பாகவுங் கலக்கக்கூடிய கியான சித்துக்கள் எண்பத்தினாலும் செய்துவந்தார்கள். அவர்களை சாரணர்களென்றுங் கூறப்படும். அவர்களடைந்துள்ள நற்கதியைத் தாங்களும் அடைய வேண்டியே சாரணர்கதியை விரும்பி இருகைகூப்பி சரணாகதி வேண்டுவதையே தற்காலம் அதன் அந்தரார்த்தம் அறியாது சரணம் சரணமெனக் கை கூப்புவதை

காசனமென்றும், நமஸ்காரமென்றும் பொருளற்ற மொழிகளை வழங்கி வருகின்றார்கள்.

**பின்கலை நிகண்டு**

நீரினிற் பூவில் வானில் நினைந்துழி யொதுங்குகின்ற
சாரண ரெண்மராவர் சமணரிற் சித்திபெற்றோர்.

**மணிமேகலை**

நிலத்திற் குழித்து நெடும் விசும்பேறி
சலத்திற்றிரியுமோர் சாரணன்றோன்ற.

புத்தபிரான் ஓதிய நுண்ணிய ஞானசாதனத்தின் உறுதியால் இயல்பாகவே இந்துக்கள் தோன்றிய விவரத்தை புத்தசங்க வடியார்கள் பாடிய பாடலாலுங் காணலாம்.

**வீரசோழியம்**

எண்பத்தி நான்குசித்தும் இயல்பினாலுளவென்று
பண்பொத்த நுண்பொருளை பாரறிய பகர்ந்தனையே.

காலம் நேர்ந்தபோது உடனுக்குடன் அச்செயலையொட்டி இயற்கையில் நடவாததை இயல்பில் நடாத்துவதே கியானசித்துக்களென்னப்படும் இவைகள் பௌத்தர்கள் காலத்தில் நிறைவேறிவந்ததேயன்றி வேறில்லை. இத்தகைய கியான சித்திப்பெறாது வைத்திய சாதனமாம், ஓடதி விசாரணையிலிருந்தவர்கள். மூலிகைகளைக் கொண்டும்,

உபாசங்களைக் கொண்டும், இரசபாஷாணங்களை கொண்டும், கருவிசித்துக்களும் விளையாடிக்கொண்டுவந்தவர்களும், பௌத்த சங்கத்தோர்களேயாம். கருவிசித்துக்களாவது நரியை பரியாக்குவதும், பரியை நரியாக்குவதும், சிறுகல்லை மலையாக்குவதும், மலையை சிறுகல்லாக்குவதும், ஆணை பெண்ணாக்குவதும், பெண்ணை ஆணாக்குவதும், இரும்பை பொன்னாக்குவதும் பொன்னை இரும்பாக்குவதும் கூடுவிட்டுக் கூடு பாய்வதும், மநுக்களுக்குத் தெரியாது மறைவதும் வீட்டிலிட்டு பூட்டினால் வெளிவந்துலாவுவதுமாகச் செய்துகாட்டுவதேயாம் இவைகள் யாவையும் சமணமுனிவர்காள் இயற்றியுள்ள அறுபத்துநாலு கலைக்கியானங்களால்
தெரிந்துக்கொள்ளலாம்.

32. ஜனவரி 15, 1913

## 24. அறுபத்திநாலு கலைகள்

வினா: அண்ணலே, அறுபத்து நாலு கலைக்கியானங்கள் ஆரியரா லியற்றாததுமாய் சமணமுநிவர்களால் எழுதியதாயுமிருக்கும் புத்தக நாமதேயங்களைக் கேழ்க்க மிக்க பிரியரில் ஒருவன்.

முருகன், மழலை

விடை: அறுபத்தினாலு கலைக்கியானங்களாவது.

1. அட்சரலட்சணம், 2. இலிகிதம், 3. கணிதம், 4. பராணம்,
5. வியாகரணம், 6. நீதி சாஸ்திரம், 7. சோதிடம்,

8. தன்மசாஸ்திரம், 9. யோகசாஸ்திரம், 10. மந்திர சாஸ்திரம்,

11. சகுன சாஸ்திரம், 12. சிற்ப சாஸ்திரம், 13. வைத்திய சாஸ்திரம்,

14. சாமுத்திரிகா சாஸ்திரம், 15. ரூபசாஸ்திரம்,

16. இதிகாசம், 17. காவியம், 18. அலங்காரம், 19. மதுப் டணம்,

20. நாடகம், 27. நிருத்தம், 22. சப்தப்பிரமம், 23. சிலம்ப சாஸ்திரம்,

24. வேணுவாத்தியம், 25. மிருதங்க வாத்தியம்,

26. தாளவாத்தியம், 27. தனுர் வித்தை , 28. சுவர்ணபரிட்சை ,

29. ரதபரிட்சை 30. கஜபரிட்சை , 31. அசுவ பரிட்சை ,

32. இரத்தினபரிட்சை , 33. பூபரிட்சை , 34. யுத்தலட்சணம்,

35. மல்லயுத்தம், 36. ஆக்ரூஷ்ணம், 37. உச்சாடனம்,

38. வித்துவேஷணம், 39. மதன சாஸ்திரம், 40, மோகனம்,

41. வசீகரணம், 42. ரசவாதம், 43. காந்தர்வவாதம்,

44. பிபீலிவாதம், 45. கௌத்துவவாதம், 46. தாதுவாதம்,

47. காரூடம், 48. நஷ்டப்பிரசனம், 49. முட்டிப்பிரசனம்,

50. ஆகாசப் பிரவேசம், 51. ஆகாசகமனம், 52. பரகாயப் பிரவேசம்,

53. அதுர்ஷியம், 54. இந்திரஜாலம்,

55. மகேந்திரஜாலம், 56. அக்கினிஸ்தம்பம், 57. ஜலஸ்தம்பம்,

58. வாயு ஸ்தம்பம், 59. திருஷ்டிஸ்தம்பம், 60. வாக்குஸ்தம்பம்,

61. சுக்கிலஸ்தம்பம், 62. ஜனஸ்தம்பம், 63. கடகஸ்தம்பம்,

64. அவஸ்தைப் பிரயோகம்.

என்னும் இன்னூற்கள் யாவும் மக்கள் அறிவு பிறைபோல் வளர்ந்து பூரணமடைவதற்கே வரைந்திருந்ததால் இவற்றிற்கு கலை நூற்கள் என்றும், கலைக்கியானங்கள் என்றும் பெயர்கள் அளித்திருந்தார்கள். கலையென்பது சந்திரனுக்கோர்பெயர், அச்சந்திரகலை நாளுக்குநாள் வளர்ந்து பௌர்ணமி யென்னும் பூரணப்பிரகாசமுற்று உலக ஒளியாவதுபோல் மக்களும் இன்னூற் களில் கியானத்தை செலுத்தி தேக தத்துவங்களையும் மனோதத்துவங்களையும் உலகப் பொருட்களாம் ஓடதிகளின் தத்துவங்களையும் நன்காராய்ந்து சில சித்துக்களையாடி தாங்கள் கற்றவித்தைகளின் சிறப்பை உலக மக்களுக்கும் விளக்கி உள்ளக்களங்கமகற்றி உண்மெய்யுணர்ந்து நிருவாணமாம் பூரண சுகமடைவார்கள்

இத்தகைய அரிய நூற்களெல்லாம் சத்துருக்களால் அழிந்து சிதலுண்டும் புத்த வியாரங்களிற் புதைவுண்டுந் துஞ்சியது போக எஞ்சியுள்ள ஒவ்வோர் நூற்கள் சிலரிடங்கிடைத்து சொற்பசித்துக்களை விளையாடி வருகின்றார்கள். மற்றும் ஆரியரென்னும் மிலேச்சர்களுக்கும் இன்னூற்களுக்கும் யாதொரு சம்மந்தமுங்கிடையாது.

மந்திர சாஸ்திரமென்பது முன்பின் ஆலோசித்துச் செய்யும் விதிகளை விளக்கும் நூலினது பெயர். அம்மந்திர நூலைக் கற்று விதிவிலக்குகளை காலமறிந்து கூறும் சமணமுநிவர்கள் கூட்டத்திற்கு

சமயகணக்கரென்றும் மந்திரவாதிகளென்றுங் கூறப்படும். மற்றும் அரசர்களினருகிலிருந்து அவ்வாலோசினையாம் மந்திரத்தைப் போதிப்போருக்கு மந்திரிகள் என்று பெயர்

மற்றப்படியோர் வார்த்தையை மடக்கி மடக்கிக் கிளிப்பிள்ளையைப் போல் சொல்லித்திரிவதற்கு மந்திரமென்னுமொழி பொருந்தாவாம்.

நமசிவய வென்னு மொழி தோன்றியகாரணம் யாதென்பீரேல், ஓர் ஞானாசிரியரை அடுத்திருந்த ஓர் மாணாக்கன் குரு பரிநிருவாணம் அடையுங் கால் சென்று வணங்கி சுருக்கத்தில் ஞானநிலை அடையும் வழியை அருளவேண்டுமென்றடி பணிந்தான். குரு பெரு மௌனமுற்றிருந்தபடியால் ஓலை எழுத்தாணியெடுத்து "மனசிவய" வென்றெழுதிக்கொடுத்து அடங்கி விட்டார். அதன்கருத்தோ மனதை வயப்படுத்திக் கொள்ளென்பதேயாம். அதன் கருத்தறியாது அண்டைவீட்டுப் பெரியோனை அடுத்து என்குரு சமாதியடையுங்கால் இதை எழுதிக்கொடுத்தாரென்று கூறியபோது அவரும்
அதனுட்கருத்தறியாது " மநசிவய" வென்பதை மாறிமாறி மநசிவய சிவயநம, யநமசிவ,மசிவயன, வயநமசி என நடுவெழுத்தை மாறி ஜெபிப்பதாயின் சகலசித்தியுமுண்டாமென்று கூற அதற்கே மந்திரமென்னும் பெயரையளித்து அதனை மனவுறுதியுடன்

உருப்போடுவதில் சிலது சித்தியாக அதையே பெருமந்திரமென்றெண்ணி ஜெபிக்க ஆரம்பித்துக்கொண்டதுமன்றி வைத்திய நூற்களிலும் நுழைத்துவிட்டு பஞ்சாட்சரமந்திரம், அகஸ்தியர் சொன்னார், போகர் சொன்னார் , புலிபாணி சொன்னார், கருவூரார் சொன்னாரென சிறப்பித்துவிட்டார்கள். மநசிவயமென்னு மொழிக்கும் நமசிவயவென்னும் மொழிக்கும் பொருள் பொருந்தவே பொருந்தாவாம்.

சரவணபவ என்பது கூட்டுமொழியேயாம் அதாவது சரவணப்பள்ளி யென்பதும், சரவணப்பொய்கை யென்பதும் பௌத்தர்கள் வியாரத்தைச் சார்ந்த ஓர் பெயராம். அவ்வியாரத்திலேயே முருகனென்றும் கந்தனென்றும் பெயர்பெற்ற குறிஞ்சிநாட்டரசன் சமணநிலை சார்ந்தயிடம், இச்சரித்திரத்தை சிறு குறவஞ்சியிலும் சிலப்பதிகாரத்திலுங் காணலாம். அச்சரவணவென்னு மொழியுடன் "பவ" வென்னுந் தொடர் மொழியை சேர்த்துக்கொண்டு சரவணபவவென்னும் பொருளற்றதும் பயனற்றதுமாய மொழியை வழங்கி அதற்கும் சடாட்சரமந்திரமென்று வழங்கிவருகின்றார்கள். இம்மந்திரங்களால் மாங்காய் விழாது, தன் திறங்களால் மாங்காய் விழுமென்பது திண்ணமாதலின் - சோம்பேறிச்சங்கதிகளை ஏற்றுக்கொண்டு தாமும் சோம்பேறியாகாது வித்தையில் முயலுவீரென்று நம்புகிறேன்.

6:33, ஜனவரி 22, 1913

## 25. நமது கருணைதங்கிய கவர்ன்மென்றார் தமிழ் பாஷையை விருத்தி செய்யவேண்டுமென்னும் நன்னோக்கத்தால் இலட்சரூபாய் செலவிட்டு பலப்பெயர் விளங்கத்தக்க ஓர் நிகண்டு வெளியிடுவதாகக் கேள்வியுற்று ஆனந்தமடைந்தோம்

அதாவது தமிழ்பாஷையில் வழங்கிவரும் பலப் பொருட்களின் பெயர்களையும் விளங்கவைக்கவேண்டுமென்பதே அவர்களது கருத்தாகும். அத்தகையக் கருத்தை இந்தியதேசத் தமிழ் வித்துவான்கள் ஒவ்வொருவரும் சிரமேற்றுக் கருதலானப் பெயர்களின் பொருட்களை விதிப்படி விளக்கி செவ்வனே உதவுதல் உசிதமாம். அத்தகைய வித்துவான்களையுங் கருணைதங்கிய கவர்ன்மென்றார் தெரிந்தெடுத்து பல்பெயர் பொருட்களின் உதவி கொண்டு அந்நிகண்டினை அச்சிடுவதும் அழகாம்.

ஏனென்பரேல் தற்காலந் தமிழில் வழங்கும் பல்பொருள் விளக்கும் நூலுக்கு அகராதி' எனும் பெயரையளித்துள்ளார்கள். அம்முகப் பெயர் பிழையேயாம். எங்ஙனமெனில், அகரவட்சரத்தை ஆதியாக்கொண்டுள்ள நூற்களுக்கே அகராதியென்னும் பெயர்பொருந்துமேயன்றி பல்பெயர் பொருளை விளைக்கும் நூலுக்கு அப்பெயர் பொருந்தாவாம். இந்நூல் அகரவட்சரத்தை ஆதியாகக்கொண்டுள்ள நூலாதலின் அகராதியென்றோம்

என்பாராயின் அறிச்சுவடியும் அகரத்தை ஆதியாகக் கொண்டுளது. ஆத்திச்சுவடி என்னும் முதல் வாசகமும் அகரத்தை ஆதியாகக்கொண்டுளது. குன்றை வேந்தனென்னும் இரண்டாம் வாசகமும் அகரத்தை ஆதியாகக் கொண்டுளது. திருவள்ளுவநாயனார் இயற்றியுள்ளத் திரிக்குறளும் அகரத்தையாதியாக் கொண்டுள்ளது. தாயுமானவர் பாடலும் அகரத்தை ஆதியாகக்கொண்டுளது. ஆதலின் இவைகள் யாவையும் அகராதியென்னலாமோ ஆகாவாம். பாலி பாஷையில் பல்பெயர் பொருளை விளங்கக் கூறும் நூலுக்கு பாலி நிகண்டென்றும், வடமொழியில் பல்பெயர் பொருளை விளங்கக்கூறும் நூலுக்கு வடமொழி நிகண்டென்றும் தென்மொழியில் பல்பெயர் பொருளை விளங்கக் கூறும் நூலுக்கு தென்மொழி நிகண்டென்றே கூறல்வேண்டும். இதற்குப் பகரமாக ஆதியில் சமணமுநிவர்களில் ஒருவர் தமிழ்மொழியின் பல்பெயர் பொருளை விளங்கக்கூறி அந்நூலுக்கு சேந்தன் திவாகாரமெனத் தன் பெயரையே கொடுத்துவிட்டார். அதன்பின் தோன்றிய சமணமுநி மண்டலபுருடன் என்பவர் திவாகரரால் வாசக சூத்திரமாக வரைந்திருந்த தெய்வப் பெயர் தொகுதி, மக்கட் பெயர் தொதி, விலங்கின் பெயர் தொகுதி, மரப்பெயர் தொகுதி, இடப் பெயர் தொகுதி, பல்பொருட்பெயர் தொகுதி, செயற்கை வடிவப்பெயர் தொகுதி, பண்புப்பெயர் தொகுதி, செயல்பற்றிய பெயர் தொகுதி, ஒலிபற்றிய பெயர் தொகுதி, ஒரு

சொற்பலபெயர் தொகுதி, பல்பெயர் தொகுதிகள் யாவும் மக்கள் மனதில் சரிவரப் பதியாமல் மயங்கிநின்றதுகண்டு பன்னிரண்டையுந் தொகுப்புத்தொகுப்பாக செய்யுளால் பாடி அந்நூலுக்கு நிகண்டென்னும் பெயரையளித்துள்ளார். பாலி பாஷையில் நிகண்டு' எனு மொழிக்கு திராவிட பாஷையில் பன்மொழி பொருள்விளக்க மென்னப்படும். இத்தகைய முகப்புப் பெயரைவிடுத்து யாதொரு பொருளும் விளங்கா அகராதியென்னும் பெயரை முகப்பில் அளிப்பது பிசகேயாம்.

மற்றும் இத்தேசமெங்கும் பௌத்ததன்மங்களே பரவி பௌத்தர்களே நிறைந்து பௌத்த நூற்களையே சகலருங்கையாடிவந்தகாலத்தில் தமிழ்பாஷை யானது சிறப்பும் அதன் தொகுப்புகளும் பிழையற வழங்கிவந்ததன்றி பின்னடி மக்கள் வழுவாவொழுக்கத்தினின்று சீர்பெற்று சுகிக்கவேண்டி இலக்கிய நூற் களையும் இலக்கண நூற்களையும் நீதி நூற்களையும் ஞான நூற்களையும் வரைந்து தமிழ் பாஷையை மயக்குறாது சொற்சுவை பொருட்சுவை விளங்க போதித்துவந்தார்கள்.

வேஷப்பிராமணர்கள் தோன்றி சத்தியதன்ம நீதிநெறி ஒழுக்கங்களும் மாறுபட்டு பௌத்தர்களுங் கலைந்து பௌத்த நூற்களுஞ் சிதலுண்டு நிலைகுலைந்துவிட்டபடியால் தங்கள் தங்கள் சீவனத்திற்குத் தக்கவாறு பொய்வேதங்களையும்,

பொய்ப்புராணங்களையும், பொய்மதங்களையும், பொய்ச்சாதிகளையும் ஏற்படுத்தி பூர்வ தன்மமொழிகள் யாவற்றையும் தாங்களேற்படுத்திக்கொண்ட சாதிகளுக்குஞ் சமயங்களுக்குத் தக்கவாறு மாறுபடுத்தி பூர்வத்தமிழ்மொழிகளையுங் கெடுத்தும் அம்மொழிகளின் மூலப்பொருட்கள் தங்களுக்குத் தெரியாமலே விடுத்தும் வழங்கிவருகின்ற படியால் பூர்வத்தமிழ்மொழிகளுக்குத் தக்கப் பொருட்கள் தற்கால தமிழில் அனந்தபேதப்பட்டிருக்கின்றது. அவைகளின் சுருக்கங்கள் யாதெனில் பல் பொருள் விளக்க மக்களது கூட்டத்தொருபெயர் தொகுதியில் இல்லந் துறந்து சருவ உயிர்களையுந் தன்னுயிர் போல் காக்கும் சாந்தரூபிக்கு "அந்தணன்' எனும் பெயரை அளித்து அவனது தொமிலாம் நகல், துவிக்கல், வேட்டல் வேட்பித்தல், ஈதல், ஏற்றலெனக் குறிப்பிட்டுள்ளார்கள். இவையே பௌத்தர் களது கூட்டத்துள் வழங்கிவந்த சமணநீத்தோர் பெயராகும். அப்பெயரே தற்காலத்திலுள்ள சாதித்தலைவர்கள் வைத்துக்கொண்டு அடுப்பூதுவோனும் அந்தணன், சாதமெடுத்து ஓடுவோனும் அந்தணன், மலமெடுக்கச் செய்யும் முதலாளியும் அந்தணன், மரித்தப்பிணங்களை அறுத்து சோதிப்போனும் அந்தணன், தோல்கடை சொந்தக்காரனும் அந்தணன், கள்ளுக்கடை கணக்காப்பிள்ளையும் அந்தணன், சாராயக்கடை சம்பிரதியும் அந்தணன், பெண்களைக் கூட்டிப் போவோனும் அந்தணன்,

பெண்சாதிப் பிள்ளைகளுடன் இல்லற சுகம் அனுபவிப்போனும் அந்தணனென வழங்கிவருவதாயின் அந்தணனென்னும் மொழியின் சிறப்பும் அதன் அந்தரார்த்தமும் மக்களுக்கு விளங்குமோ. இம்மேறையே அரசனது தொழிலையும், வணிகனது தொழிலையும், வேளாளனது தொழிலையும் உள்ளப்பெயர்களைக்கொண்டு அதன் பொருட்களையும் தற்கால இம் மொழிகள் மாறுபட்டு பிழை கொண்டுள்ளப் பொருட்களையும் விளக்குவதாயின் வீணே விரியுமென்றஞ்சி விடுத்துள்ளோம்.

பொய்யாய சாதிபேதச் செயலால் அனந்த மொழிகள் பொருள் பேதப்பட்டுள்ளதன்றி அவர்கள் மதக்கடை பரப்பி சீவிக்கும் சமயங்களினாலோ பூர்வத் தமிழ்மொழிகள் அனந்தமாகப் பொருள் கெட்டு வழங்கிவருகின்றது.

எவ்வகையா லென்னில் பௌத்தர்கள துகாலத்தில் அறிவின் பெருக்காம் ஞானவிருத்தி எவ்வகையால் உண்டாமென்னும் வினா எழுவில் சரியாக்கிரியை யோகத்தால் ஞானமுண்டாம் என்னும் விடை பகர்வதுண்டு. அதாவது சரியான வழியில் கிரியை ஓர்தொழிலை நடத்துவதாயின் யோகமென்னும் அதிர்ஷ்டபாக்கியமுண்டாம். அதனால் ஞானமென்னும் அறிவு விருத்தி பெறு மென்று தொழிலின் விருத்திக்காக பௌத்தர்கள் கூறிவந்த நீதிமொழிகளாகும் மதக்கடை பரப்பி சீவிக்கும் அந்தண

வேஷதாரிகளுக்கு அப்பொருள் விளங்காது. சரியையென்றால் கல்லுசாமி கட்டைசாமிகளுக்குப் புஷ்பமிட்டுக் கும்பிடுத லென்றும், கிரியையென்றால் கல்லுசாமி கட்டைசாமி முன்னின்று மந்திரஞ் ஜெபித்தலென்றும், யோகமென்றால் மூச்சையடக்குதலென்றும் மொழிக்கு உற்றபொருளை மாற்றி தங்கள் மனம் போனவாறு வழங்கி வருகின்றார்கள்.

நூதனமாய சாதிபேதத்தால் அனந்தமொழிகள் மாறுபட்டுள்ளதன்றி சமய பேதத்தால் தமிழ்மொழிகளின் பொருட்கள் அனந்தமாக மாறுபட்டிருக் கின்றது. ஈதன்றி சருவசாதியோரும் சருவசமயத்தோரும் வழங்கிவரும் மொழி களுள் ஓர் கூட்டத்தோர் ய, ர, ல, வ, ழ, ள என்னும் இடையெழுத்து
அட்சரந்தழுவி சிலர் வாழைப்பழம், கோழிக்கரி என்றும், சிலர் வாளைப்பளம், கோளிக்கரி என்றும்; சிலர் வாயப்பயம், கோயிக்கரியென்றும் எழுத்திலட்சணம் ஒட்டிப் பேசுவதை இலக்கணலட்சணமறியாம் பேதைகளிற் சிலர் ஏளனஞ் செய்வார்கள். பெரியசாதி என வேஷமிட்டுள்ளோ னொருவன் "நேக்கு" இப்தாபஞ்சமே தெரியாதென்று கூறுவானாயின் "நேக்கு" என்னு மொழிக்குப் பொருள் தெரியாவிடினும் அவன் கூறும் மொழியை சிறப்பாக ஏற்றுக் கொள்ளுவார்கள் அவனைச்சார்ந்த மற்றொருத்தி என்னாம் படியானாளம் பவருவானென்று கூறுவாளாயின் ஆம்படியான்' என்னுமொழிக்கும், 'னாளம்ப வென்னு மொழிக்கும்

பொருள் தெரியாவிடினும் அவள் கூறும் மொழியை சிறப்பாக ஏற்றுக்கொள்ளுவார்கள். இவ்வகையாய வழக்கமான நூதன மொழிகளையுங் கலந்து தமிழ் மொழிகள் மாறுபட்டிருக்கின்றது. சாதிபேதச் செயலாலும் சமய பேதச் செயலாலும் தென்மொழிப் பொருட்கள் அனந்தமாக மாறுபட்டிருப்பதுடன் தங்கள் தங்கள் சாதிவேஷத்திற்குஞ் சமய வேஷத்திற்குந் தக்கவாறு வடமொழியினது சிறப்பையும் அதன் பொருட்களையும் மிகுபடக் கெடுத்தே வைத்திருக்கின்றார்கள். அவைகளின் சுருக்கமாவது பிராமணன் என்பது பிரம்மணமாம் சிறந்தநிலைபெற்று யமகாதகா' மாணத்தை ஜெயித்துக் கொண்டவனுக்குரிய பெயராம். அத்தகையான சிறந்த பெயரை குட்டம் பிடித்துச் இததேசக்க சாவோனும் பிராமணன், கொறுக்கு வலியிழுத்துச் சாவோனும் பிராமணன், பிளேக்கண்டுசாவோனும் பிராமணன், பேதிகண்டு சாவோனும் பிராமண னென அம்மொழியின் பேரானந்த சிறப்பைக் கெடுத்துவிட்டார்கள்.

'உபநயனம்' என்பது உதவிவிழி என்னப்படும். அதாவது மாணாக்கனுக்கு ஞானாசிரியன் ஊனக்கண் அன்றென்று உள்விழியாம் ஞானக்கண் அளிப்பதற்குப் பெயராம். அத்தகைய சிறந்த பெயரின் பொருள் கெட என்பிள்ளைக்கு பூனூல் போடுவதென்று கெடுத்துவிட்டார்கள்.

பௌத்தமக்களுக்குள் சிறந்த ஆலோசனையாய மந்திரமாவது யாதெனில் திரிகாய மந்திரமென்னப்படும். அதாவது தேகசுத்தம், வாக்குசுத்தம். மனோசுத்த முடனிருக்கவேண்டு மென்பதேயாம். அத்திரிகாயமந்திர மொழியிலக்கணம் 'காயத்திரி' என்னப்படும் திரிகாய மென்பதே காயத்திரி யென மறுவியுள்ள சிறந்தமொழியை மந்திரஞ் ஜெபிப்பதெனக் கெடுத்துவிட்டார்கள்.

பௌத்தாசிரியர்கள் பௌத்தக் குடிகளை எக்காலும் அக்கிரமமின்றி கிரமமாக வாழ்கவேண்டுமென்னும் நீதிமொழியை சாலக்கிரமம் சாலக்கிரம மென மொழிந்து வந்தார்கள். அத்தகைய சிறந்த மொழியை சாலக் கிராமம் சாலக்கிராமமெனமாற்றி ஓர் சிறிய குழியான் கல்லைப் பூசிப்பதென்று கெடுத்து விட்டார்கள்.

இத்தகையாக வடமொழி பெயர்களின் பொருட்களும் தென்மொழி பெயர்களின் பொருட்களுங் கெட்டுள்ளதற்குக் காரணமியாதெனில் நூதனமாக இத்தேசத்திற் குடியேறியவர்கள் வடமொழி தென்மொழிகளைக்கொண்டே நூதன சாதிகளையும் நூதன வேதங்களையும் நூதன புராணங்களையும் நூதன மதங்களையும் உண்டு செய்துக்கொண்டு கல்வியற்றக் குடிகள் பெருந்தொகை யோரை வஞ்சித்து சீவிக்க ஆரம்பித்துக் கொண்டவர்களானபடியால் அந்தந்த மொழிகளின் உட்பொருளாம் அந்தரார்த்தமறியாது தங்கள் தங்கள் மனம்போனவாறு கொடுத்து வைத்ததுமன்றி வழங்கியும்

வருகின்றார்கள். இத்தகைய மொழிபேதங்கள் யாவையும் நமது கருணை தங்கிய கவர்ன்மென்றார் நியதிகளைந்து பதருகளை கழற்றி மணிகளைக்குவித்து இலட்சரூபாய் செலவிட்டு வெளியிட யோசித்திருக்கும் தமிழ்பாஷா பல்பொருள் விளக்க நூலை அச்சிடுவரேல் இராஜாங்கத்தின் பெயர் என்றென்றும் அழியாமல் நீடித்திருப்பதுடன் அவர்களது கருணைமிகுத்த சிறப்பும் மாறாதிருக்குமென்பது சத்தியம்,

அந்நூலுக்கு 'தென்மொழி நிகண்டு' என்னும் பெயரை அளிப்பரேல் இன்னுஞ் சிறப்பாம். தென்மொழி வடமொழிகள் யாவற்றினுங் கெட்டுள்ள பொருட்கள் யாவையும் வரைவதாயின் விரியுமென்றஞ்சிவிடுத்துள்ளோம். தமிழினை ஆய்ந்து பொருட்களை விளக்கவேண்டின் தமிழினுக்கு உரியோரைக் கண்டாய்வதே அழகாம்.

6:39. மார்ச் 5, 1913

**26. தமிழ்பாஷையாகும் தென்மொழியுடன் கலப்பு**

வடமொழியுந் தென்மொழியும் ஏககாலத்தில் புத்தரால் இயற்றியது கொண்டு பேசுமொழிகளிலும் வரையும் நூற்களிலுங் கலப்புற்றே வந்தவை யாதலின் வடமொழிகளைநீக்கித் தென்மொழிகளை மட்டிலுந் தெள்ளற விளக்கினும் விளக்கலாம். தென்மொழிக்குரிய சத்தபேதத்தால் அதாவது ஒலியினது மாறுபாட்டினால் வடவட்சரங்கலந்தே தென்மொழி வழங்குவ தாயினுங் குற்றமில்லை.

அவற்றைக் குறிப்பிட்டுவரைவதாயின் வழங்கிவரும் மொழிகளின் பொருட்கள் இன்னுந் தெள்ளறவிளங்குமென்பதற்கு ஐயமில்லை. முன்கலைதிவாகரம், வடநூற்கரசன் றென்றமிழ்க் கவிஞன், கவியரங்கேற்று முபயக்கவிப்புலவன்" வீரசோழியம், "இருமொழிக்குங்கண்ணுதலார் முதற்குரவரியல்வாய்ப்ப' வென்னும் ஆதாரங்கொண்டு ஆதிபகவனாம் புத்தபிரான் இருமொழிகளை இயற்றுங் காலத்திலேயே வடமொழியை மூத்தாள் போலும் தென்மொழியை இளையாள் போலுமியற்றி ஒன்றுக்கொன்று சம்பந்தமுற்றிருப்பினும் வடமொழியைப் பாணினியார் ஜனகர் முதலானோ ரிடமும் தென்மொழியை அகஸ்தியர், திருமூலர் முதலானோரிடம் ஈய்ந்து பரவியதில் பாணினியாரும் ஜனகரும் வடதேசத்திருந்தே மகடபாஷை யினின்றுதித்த சகடபாஷை மொழிகளைப் பிரபலமாகப் பரவச்செய்ததால் அவற்றிற்கு வடமொழியென்றும் அகஸ்தியருந் திருமூலரும் தென்தேசம் வந்து மகடபாஷையினின்றுதித்த திராவிடபாஷைமொழிகளைப் பிரபலமாகப் பரவச்செய்ததால் இவற்றிற்குத் தென்மொழியென்றும் பேதந் தோன்றியதேயன்றி மற்றும் அட்சரங்களிலும் மொழிகளிலும் ஒலிகளிலும் சரித்திரங்களிலும் ஒலிபற்றிய பெயர்களிலும் அகனதன் செயல்களிலும் பொ

ற்கும். அதாவது வடமொழியில் மக்களுக்குரிய செயலைப் பற்றியுந் தொழிலைப்பற்றியும் பிராமணன் க்ஷத்திரியன், வைசியன்,

சூத்திரனென்றும்: தென்மொழியில் அந்தணன், அரசன், வணிகன், வேளாளனென்றும் வழங்கிவந்துள்ளார்கள்.

ஈதன்றி மக்களும் ஐந்து இந்திரியங்களை வென்ற திரமுடையோரை வடமொழியில் ஐந்திரர் என்றும், அம்மொழியை தென்மொழியில் இந்திரர் என்றும் வழங்கி திரிக்குறளில் "பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீரொழுக்கும், நெறிநின்றார் நீடுவாழ்வர்" என்னுமொழியை சிரமேற்கொண்டு ஆதியில் ஐந்து இந்திரியங்களை வென்ற இந்திரனென்னும் புத்தரையே பிரபலமாகத் தொழுதும், இந்திரவிழாக்களைக் கொண்டாடியும் வந்தபடியால், இத்தேசமக்கள் யாவரையும் இந்தியர்களென்றும், இத்தேசத்தை இந்திய தேசமென்றும் நாளதுவரையில் வழங்கியும் வருகின்றார்கள்.

வடமொழியுந் தென்மொழியும் இந்திரராம் புத்தபிரானால் ஏககாலத்தில் தோன்றியதாயினும் தென்மொழியை மட்டிலும் தனிமெயாக உருப்பட எழுதினும் எழுதலாம்.

## விதி

வீரசோழியம் "மதத்திற்பொலிவும் வட சொற்கிடப்புந் தமிழ்மரபு, முதத்திற்பொலியேழை சொற்களின் குற்றமு மோங்குவினைப், பதத்திர்சிதைவு மறிந்தேமுடிக்கப்பன் னூராயிரம் விதத்திற்பொலியும் புகழவலோகிதன் மெய்த்தமிழே"

மொழி என்னுந் தமிழ் சொற்களில் வேற்றுமெ எட்டும், திணை இரண்டும், பால் ஐந்தும், வழுக்கள் ஏழும், மாறுதல் எட்டும், காலம் மூன்றும், இடம் மூன்றும், அடி இரண்டுங் கண்டெழுதுவதே சொற்களின் சிறப்பாகு மெனத் தமிழினை ஈன்று வளர்த்த தாதாக்களாகும் சமணமுனிவர்களின் கருத்தாதலின் தற்காலம் இக்கருத்தை மேற்கொண்டு தமிழினைக் கேடறவளர்க்கவும் மேலும் மேலும் அதனை சிறப்புற விளங்கவைக்கவுந் தோன்றிய கருணைதங்கிய பிரிட்டிஷ் துரைத்தனத்தார் இலட்ச ரூபாய் செலவிட்டு வெளியிடுந் தென்மொழி நிகண்டினை மிக்க ஆராய்ந்து வெளியிடுவார்களென்று நம்புகிறோம்.

காரணமோவென்னில் தென்மொழியிலுள்ள வடமொழி கிடப்பை விளங்கக்கூறினும் மகமதியர்காலத்தில் கலந்துள்ள அதாலத்க்கோர்ட், அமீனா, சுபீனா, வக்காலத், கொத்தவால், ஜமீன்தார், தாசில்தார், மிட்டாதார், மிராசுதார் என்னுமொழிகளும், போர்ட்சுகீயர்காலத்தில் கலந்துள்ள, நாத்தா, விவீக்கா கலகலா என்னு மொழிகளும், ஐரோப்பியர் காலத்திற் கலந்துள்ள தீனபுட்டி, கோப்பை, புட்டி, இன்னும் பலவகை மொழிகளுங் கலந்தே வழங்கி வருகின்ற படியால் இவைகள் யாவற்றையும் அந்தந்தபாஷைகளின் மூலோற்பவங்கண்டு நீக்கவேண்டியவற்றை நீக்கியுஞ் சேர்க்கவேண்டியவற்றை சேர்த்தும் பல்பெயர்பொருளை விளக்கவேண்டிய கஷ்டங்கள் அதிகமிருக்கின்றபடியால்

பெருநிகண்டினை வெளியிடுதற்கு இலக்கண இலக்கியங்கற்ற வித்வான்கள் உதவி மட்டிலும் போதியதன்று. ஓடதிகளின் உட் பொருளாய்ந்தவர்களும், சோதிடத்தின் உட் பொருளாய்ந்தவர்களும், ஞானவாக்கிய சாதனங்களின் உட்பொருளாய்ந்தவர்களுங் கலந்தே ஆராய்ந்து பதிப்பது மேலாம். ஆதனின் இவைகள் யாவையும் உணர்ந்துள்ளவர்களே ஆராய்ந்து பதிப்பிக்கின் யாவிலு மேலாமென்றே கூறுவோம்.

6:40, மார்ச் 12, 1913

**27. முதற்குறள்**

வினா: நமது தெய்வப்புலமெய் திருவள்ளுவநாயனாரியற்றிய திரிக்குறள் பரிமேலழக ருரை செய்தது.

"அகரமுதலவெழுத்தெல்லா

ஆதிபகவன் முதற்றேயுலகு."

என்றும், கவிராஜ சக்ரவர்த்தியே நீவிருரைசெய்தது:

"அகரமுதல வெழுத்தெல்லாம்

ஆதிபகவன் முதற்றே யுலகு.'

என்றும் இருக்கின்றமெயால் இவ்விரண்டிற்கும் பதம் சரியாயிருந்தாலும் உரை மாறுபட்டிருக்கின்றது.

3-வதாக-புதுப்பேட்டை ஸ்ரீமாந் ந. பாலகிருஷ்ணம் பிள்ளை , தாமியற்றிய "பிரிவாற்றாப் பரிவுறுநிலை" என்கின்ற சரமகவியின்

முகப்பில்;

"அகரமுதல வெழுத்தெல்லாம்

ஆதி யுகர முதற்றே யுலகு.

என்று பதிப்பித்திருக்கின்றமெயால் இது புராதன காலத்தில் உண்டான குறளோ அன்றேல் ஆரியர்களாகிய வன்நெஞ்ச அஞ்ஞானிகளால் ஏற்படுத்திய கட்டுக்கதைகளில் இதுவும் ஒன்றோ என்று விளங்காதிருக்கின்றமெயால் இம்மூன்றின் செய்யுட்களின் சங்கையை நிவர்த்திக்கக் கோறிநிற்கின்றனம்.

தா, ஷண்முகம், புதுப்பேட்டை

விடை : தற்காலந் தோன்றியுள்ள நூதன சாதியோரும், நூதன் மதத்தர்களும் திரிக்குறளைத் தங்களுடைய மதத்திற்கு உரியனவென்றும், எங்கள் மரபின் சார்பினதென்றும் மாளா வழக்கிட்டுவருவது சாலநிலையாம். காரணமோவென்னில் புத்ததன்மத்தினின்றே சருவமதங்களுஞ் சகல வேதங்களும் தோன்றியுள்ளது கொண்டு வழிநூலாந் திரிக்குறளை எம்மதெம்ம தெனக் கூறத்துணிந்ததுமன்றி புத்ததன்ம சீலநிலை அறியாது செய்யுட்களையும் மாறுபடுத்திவருகின்றார்கள்.

நாயனார் திரிக்குறள் கடவுளென்னும் புத்தர் சிறப்பு முதற்செய்யுள் "அகரம் முதல் எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு" என வரவேண்டுமே யன்றி இவற்றிற்கு மாறாயுள்ளவை யாவும்

பிழையேயாம். செய்யுள் தோன்றிய விதியும் அதன் கருத்து அறியாதார்க்கு முதநூற்றொடர்பும், வழிநூற் சுவையும், சார்புநூற் குணமும் விளங்கவே விளங்காவாம். முதல் வழி சார்பென்னு முத்திரிபில் "முத நூலுணர்ச்சி முற்றவறிந்தோ, ரிதவழிநூலினின்பைமுகப்ப, ரதனது சார்பேயகலவிரிந்து, யிதயகளங்கை யறுப்பதுமாமே" என்னுங் காக்கை பாடிய விதியே போதுஞ்சான்றாம் ஆதலின் மேற்கூறிய செய்யுளுக்கு மாறு கொண்டன யாவுந் தப்பரை தப்பரையேயாம்.

7:3, ஜுன் 25, 1913

## 28. முத்தமிழ் திராவிடம்

வினா : முத்தமிழ், திராவிடம் என்னும் மொழிகள் யாவும் பௌத்தர்களால் தோன்றியதா, நூதனா மதஸ்த்தவர்களால் தோன்றியதா. பௌத்த தோன்றிய தென்னில் அதன் ஆதாரத்தையும் உதாரணத்தையும் விளக்கியருளல் வேண்டும். நூதன மதஸ்தர்களுடையதாயின் எம்மொழி ஆதாரங்கொண்டு அவ்வகை வழங்கி வருகின்றார்களென்பதையுந் தெள்ளற விளக்கி அடியேனைப் புனிதனாக்கவேண்டும்.

குருமணி, சேலம்

விடை : அம்மொழிகள் யாவும் பௌத்தர்கள் நாவில் வளர்ந்ததேயன்றி நூதன மதஸ்த்தர்பால் தோன்றியதன்றாம். அதனந்தரார்த்தமறிய நூதன மதஸ்த்தர்கள் தங்கடங்கள் மனம்

போனவாறு பொய்யைச்சொல்லி மதங்களைத் தோற்றுவித்துக்கொண்டது போல மொழிகளினது பொருளறியாது ஒன்றை கூறவும் அதுவும் அறியாதோரதை நம்பவும் வழங்கவுமாகி வருகின்றது. அம்மொழிகள் யாவும் தென்னாட்டை ஒட்டியதன்றி வடநாட்டைப்பற்றிய தன்றாம். வழங்குந் தமிழை முத்தமிழென்பது மூவகையாகப் பேசுந் தமிழென்று கூறப்படும். அவைகள் யாதென்னிலோ மலையாள வாசிகள் வழங்குந் தமிழை கொடுந்தமிழென்றும், திருநெல்வேலி புரவாசிகள் வழங்குந் தமிழை கருந்தமிழென்றும், சென்னை முதலிய புரவாசிகள் வழங்குந் தமிழை செந்தமிழ் என்றும் கூறப்படும். அவைகள் வழங்கும் வகைகளோ, நாயிண்ட மகனே யென்பது கொடுந்தமிழ், நாய் ஈன்ற மகனே வென்பது கருந்தமிழ், நாய் பெற்ற பிள்ளையேயென்பது செந்தமிழ். கருந்தமிழில் வரைந்துள்ள புகார் காண்ட முதலிய நூற்களில் வரைந்துள்ளவற்றை செந்தமிழ் வாணர் வாசிப்பதற்கே இயலாது இன்னுந்திகைக்கின்றார்கள்.

இக்கொடுந்தமிழ், கருந்தமிழ், செந்தமிழினையே நமது முன்னோர்கள் நன்கு வரைந்திருக்கின்றார்கள். இப்பாஷையினது வரிவடிவாம் அட்சரங்களில் நஞ்செழுத்தென்றும் அமுத வெழுத்தென்றும் இருவகை உண்டு. அவற்றுள் அமுதெழுத்தைக்கொண்டு தமிழென்றும் நஞ்செழுத்தைக் கொண்டு தீராவிடம் என்றும் வழங்கி வந்தார்கள். தீராவிடமென்னு மொழியே

குறுக்கல் விகாரப்பட்டு திராவிடமென வழங்கலாயிற்று. கொடுந்தமிழ் கருந்தமிழ் செந்தமிழ் இம்மூன்றினுள்ளும் நஞ்செழுத்துள்ளதால் முத்தமிழுக்குந் திராவிடமென்னும் பொதுப்பெயர் வழங்கலாயிற்றேயன்றி வேறன்றாம். இவற்றை நூதனமத வித்வான்களெவரேனும் மறுப்பரேல் பூர்வ நூலாதாரத் துடன் விளக்கக் கார்த்துள்ளோமாக.

7:39, மார்ச் 4, 1914

## 29. பௌத்தர்களது இலக்கணோற்பவம் போப்பையருக்கு தெரியாதென்பது பௌத்தர்களது இலட்சணோற்பவம் போப்பையருக்கு தெரியாதென்பதேயாம்

பௌத்தர்களது இலட்சணோற்பவம் யாதென்னிலோ பஞ்சசீல சாதனங்களேயாம். அச்சாதனத்தில் உற்பவிப்போரே பௌத்தர்களென் றழைக்கப்படுவார்கள். நமது போப்பையரோ வேறு மதசாதனராதலின் பௌத்தர்களது இலட்சணோற்பவந் தெரியாதென்று வரைந்துள்ளோம்.

மற்றும் பௌத்தர்களின் எழுத்திலட்சணம், சொல்லட்சணம், பொருள் லட்சணம், யாப்புலட்சணம், அணியிலட்சணமாய பஞ்ச லட்சணங்களில், உடல் ஒன்றை காணும் ஒற்றுமெ தோற்றத்தாலும், செயலால் உடலும் உயிருமென்னும் வேற்றுமெ தோற்றத்தாலும் புருடனென்றும் ஆன்மனென்றும், மனிதனென்றும் பெயர்

பெற்றோன் தானே தன் செயலால் சீர்கெடுவதும் தானே தன் செயலால் சீர் பெறுவதும் தானே தன் செயலால் துக்கமடைவதும் தானே தன் செயலால் நிரயமென்னும் மீளாபிறவியில் அல்லல்பட்டு உழல்வதும், தானே தன் செயலால் மோட்ச மென்னும் பிறவியற்று நித்தியானந்தத் திலிருப்பதுமாதலின்,

**திரிக்குறள்**

பெருமெக்கு மேனைச் சிறுமெக்குந் தத்தங் / கருமமே கட்டளைக்கல்.

**நாலடி நானூறு**

நன்னிலைக் கட்டன்னை நிறுப்பானுந்தன்னை / நிலைகலக்கிக் கீழிடுவானும் நிலையினு

மேன்மேலுயர்த்து நிறுப்பானுந்தன்னை / தலையாகச் செய்வானுந்தான்.

**அறநெறிச்சாரம்**

தானே தனக்குப் பகைவனு நட்டானும் / தானே தனக்கு மறுமெயு மிம்மெயும்

தானே தான் செய்தவினைப்பயன் துய்த்தலால் / தானே தனக்குக்கரி.

மனிதன் தனக்கப்புறப்பட்ட வேறொரு பொருள் உண்டென்று மலைவுறாது தன்னிற்றானே அறிவு பெருகி வீடுபேற்றை அடைவான் வேண்டி உயிரு மெய்யுமாய மனிதனுக்கு உயிரு மெய்யுமாய அட்சரங்களை புத்தபிரான் வகுத்து வரிவடிவில் அமைத்து அகஸ்தியர் பால் ஈய்ந்து பரவச்செய்தவற்றுள்,

**நன்னூல்**

**உயிரு முடம்பு முப்பது முதலே.**

உயிராயது பனிரண்டெழுத்தும், உடலாயது பதினெட்டெழுத்துமாய வைகள் மனிதனது உந்தியில் தோன்றி உதான வாயுவால் நெஞ்சிற் பிறந்து கண்டத்துள் நுழைந்து நாசியையும் நாவையுந் தழுவி ஒலிப்பதை விளக்கி,

**நேமிநாதம்**

உந்தியிறோன்று முதானவளிப்பிறந்து / கந்தமலி நெஞ்சுதலை கண்டத்து வந்த பின்

னாசினாவண்ண மிதழெயிறு மூக்கென் / பேசு மெழுத்தின் பிறப்பு.

மனிதன் தன்மெய்யைத் தானே உணரும் வழியில் விடுத்து உண்மெய்யாம் அந்தர் அங்கத்தையும் புறமெய்யாம் பகிர் அங்கத்தையும் அறிந்து தெளிதற்கு மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்பத்தை வகுத்து உபமான உபமேய உதாரணங்கள் யாவற்றிலும் புறமெய்யாய உடலையே சுட்டி வரைந்திருக் கின்றார்கள்.

அச்சுட்டுப்பொருட்களை உணர்த்துவதினும், அவன் இவன் உவனென்றும் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றனென்றும் மனிதனையே உதாரணமிட்டு வரைந்தது கொண்டே ஒருமெய், பன்மெய் யென்னும் விளக்கங்களையும், தன்மெய், முன்னிலை, படற்கை என்னுஞ் சுட்டுக்களையும் மனிதனென்னுந் தேகத்தையே சுட்டி அவன் விளங்குமாறு உயிர் மெய்யமைந்த மனிதனுக்கு உயிர்மெய்யாம் எழுத்துலட்சணம், சொல்லட்சணம், பொருள் லட்சணம், யாப்புலட்சணம், அணியிலட்சணமென்னும் பஞ்சலட்சணங்களால் பஞ்சபுலனுணர்ந்து தென்புலத்தானாம் வரையில் வரைந்துள்ளார்கள்.

எழுத்துக்களே இரண்டாவது லட்சணசொற்களாய் திரண்டு இலக்கிய லட்சணம் அமைந்தபோது ஒருசொல் வாக்கியம் இருச்சொல் வாக்கியம் மூச்சொல் வாக்கியங்களாகி மூன்றாம் பொருள் லட்சணம் விளங்க விளக்கி பகுபதம் பகா பதங்களென வகுத்து குறித்த சொல்லுக்கு உரித்த பொருள் கூறுமிடத்து துலங்கவரைந்து விளங்கக்கூறும் விதிகண்டு இருச்சொல் வாக்கிய பகுபத ஒருமெய், பன்மெய், என வரையின் அதன் உரிய பொருளாய ஒருதேகம், பலதேகங்கள், என்றும், தன்மெய், முன்னிலை, படற்கையென வரைவதில் தன் தேகம் முன்னிலுள்ள தேகம், பக்கலுள்ள தேகமென உரிய பொருளை விளங்க விளக்குவதாகும்.

அங்ஙனமின்றி இருச்சொல் வாக்கியத்தை ஒரு சொல்லே என்றும், பகுபதத்தை பகாபதமேயென்றும் பண்பு பிரழ்ந்து ஒருமை, பன்மை, தன்மை, என்று வரைவதாயின் பஞ்சலட்சண வாக்கியோன் கருத்துங் கெட்டு அதனுரிய பொருளுங் கெட்டு மலைவுற்றுப்போம். -

ஆகலின் பஞ்ச லட்சணமாம் எழுத்துக்கு லட்சணங் கூறுவதினும், சொல்லுக்கு லட்சணங் கூறுவதினும், பொருளுக்கு லட்சணங் கூறுவதினும், யாப்புக்கு லட்சணங் கூறுவதினும், அணிக்கு லட்சணங் கூறுவதினும், வரைவதினும் ஆக்கியோன கருத்து கெடாதும் பொருள் கெடாதும் வரைவதுங் கூறுவது அழகாம். இத்தகைய வாக்கியோன் கருத்து கெடாதும் பொருள் கெடாதும் வரைந்துள்ளவற்றை பௌத்தர்களால் இருநூறு வருடங்களுக்கு முன் வரைந்து வைத்துள்ள வோலை புத்தகங்களிலும் சிலாசாசனங்களிலுங் காணில் பரக்க விளங்கும். பண்டை காலத்தார் கருத்தையும், பண்டை நூற்களையும், பண்டை சிலாசானங்களையும் ஆய்ந்துணராதோர்க்குப் பஞ்ச லட்சணம் விளங்காவாம்.

பஞ்சலட்சணமே விளங்காதோர்க்கு தருக்க லட்சண பாகுபாடுகளே விளங்காவாம் விளங்குவோர் பால் வாதிடுவதே விவேகவிருத்தி, விளங்கார்பால் வாதிடுவதால் விவேகங்குறைவாம்.

7:46, ஏப்ரல் 22, 1914

## 30. திருவள்ளுவ நாயனார் இயற்றிய திரிக்குறள்

### சற்குருவே நம

### சிறப்புப்பாயிரம்

உலகுபுகழ் அரிய திரிபேதவாக்கியங்களென்றும், திரிபீட வாக்கியங்களென்றும் வழங்கிய மூவருமொழியாம் முதனூலுக்கு வழிநூலாகத் தோன்றியவை திரிக்குறளும், சார்பு நூலாகத்தோன்றியவைகள் திரிமந்திரம், திரிவாசகம், திரிவெண்பா , திரிமாலை, திரிகடுகம், சித்தர்கள் நூல் முதலியவை களேயாம். இத்திரிக்குறளுக்கு திருவென்னும் அடைமொழி சேர்த்துத் திருக்குறளென சிறப்ப வழங்கினும் தன்மபிடக, சூத்ர பிடக, வினயபிடக மென்னும் மகட்பாஷா முந்நூலுக்கு திராவிட பாஷா வழி நூலாம் அறத்துப்பால், பொருட்பால், காமப்பாலென்னுந் திரிக்குறளே உடன் பாடாதலின் திருவென்னும் அடைமொழி சிறப்பென்றெண்ணி திருக்குறளென ஏற்பது மும்மணிகளென்பதை அழகு மணிகள் என்பதற்கு ஒக்கும். ஆதலின் திரிபேதங் களாம், முதநூலுக்குத் திரிக்குறளே வழி நூலாதலின் திருவென்னும் அடை மொழி நீக்கி திரியென்னும் மூவருமொழிகளை விளக்கியுள்ளதே முதற் சிறப்பாகும்.

அங்ஙனம் விளக்குவதில் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தலே சுகமென்றெண்ணி குறள் வெண்பாவாற் குறுகக்கூறியவை இரண்டாம் சிறப்பாகும். திரிபீடவாக்கிய மறைபொருள்

பாலிபாஷையினின்று சகல மக்களுக்கும் விளங்காதது கண்டு அவற்றை திராவிட பாஷையில் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தது மூன்றாம் சிறப்பாகும். புத்தபிரான் சக்கரவாளம் எங்கணுஞ் சுற்றி திரிபேதவாக்கியங்களாம் தன்மபாதத்தை விளக்கியிருக்க இத்திரிக்குறளாக்கியோன் இருந்தவிடத்திருந்து ஈரடிவெண்பாவால் திரிபாலாற்ற வும் சகலதேச பாஷையோரும் அவற்றை அவரவர்கள் பாஷையில் மொழி பெயர்த்து ஏற்கவுமாயது நான்காவது சிறப்பாகும். வட இந்தியாவில் சாக்கையர் வம்மிஷ வரிசையில் மண்முகவாகென்னும் சக்கிரவர்த்திக்கும், மாயாதேவி யென்னும் சக்கிரவர்த்தினியாருக்கும் மகவாகப்பிறந்து முத நூலியற்றியருளியது போல் தென்னிந்திய வள்ளுவ வம்மிஷவரிசையில் மாமதுரைக்கச்சனென்னும் அரயனுக்கும், உபகேசியென்னும் ராக்கினிக்கும் மகவாகத் தோன்றி நாயனாரென்னும் பெயர்பெற்று சங்கஞ்சார்ந்த தபோபலத்தாலும் தாய் தந்தையர் செய்த புண்ணியபலத்தாலும் சிறந்த நாவமைந்து செந்நாப்புலவரெனத் தோன்றியது ஐந்தாம் சிறப்பாகும். அரசருக்குப் பிறந்து அரசியல் இருபத் கைந்தினையும் அமைச்சியல் பத்தையும் அரணியல் இரண்டையும் கூழ்பகுதி ஒன்றையும், படைபகுதி இரண்டையும் நட்பாளர் பகுதி பதினேழையும் பதின் உமன்றுவகைக் குடிகளியல்பையும் நன்கு விளக்கியது மன்றி, தான் சார்ந்த சங்கத்தின் ஞானவியல்பையும் தென்புலத்தோராம்

சமணமுநிவர்களாற்றலையும், சிற்றின்பம் அறுக்கு நிலையே பேரின்பமாதலையும் முதற்பா என்னுங் குறள் வெண்பாவால் எழுதி மதுரைக்கச்சனென்னுங் கூர்வேல்வழுதி மனமகிழச் செய்தது ஆறாஞ் சிறப்பாகும். திரிக்குறளில் கடவுள் வாழ்த்தென்னும் புத்தரது சிறப்பு முதல் ஆயிரத்தி முன்னூற்றி முப்ப தருங் குறட்பாக்களைத் திரிபற வாசித்துணர்ந்தோனுக்கு வேறென்னூற்களும் வேண்டாவாகலின் ஏழாம் சிறப்பாகும். இத்தகைய சப்த சிறப்பமைந்த திரிக்குறளாக்கியோன் திருவள்ளுவநாயனார் திருவடி வணங்கி அவரது வழி நூலுக்கு பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விரித்துரை நான்கையு மெழுதத் துணிந்தது கருடன் பறக்குமிடத்து ஈயும் பறப்பது போலாயினும் ஆதிபகவனது சரித்திரத்தையும் திரிபிடகமாம் திரிபேத மொழிகளின் அந்தரார்த்தங்களையும் உணர்ந்தவுறமே உள்ளதைவிளக்குவான் வேண்டி வழி நூலுக்கு உரை ஆரம்பித்துள்ளோம். இவற்றுள் வரிவழுகுறிவழு ஏதொன்று வழுவினும் பௌத்ததன்ம ஆன்றோர்கள் பொறுத்து நீதி வழு நெறிவழூவுக்களை நியதிகளைந்து விளக்குக வேண்டுவாம். இல் வேண்டுகோள் மகடபாஷையிலும், திராவிட பாஷையிலும் சத்தியதன்ம ஆராய்ச்சியில் மிகுத்த புத்தன்மத்தைச் சார்ந்தோரையன்றி ஏனைய மதத்தோரைச் சாராவென்பதாம்.

### 1. கடவுள் வாழ்த்து என்னும் புத்தரது சிறப்புப்பாயிரம்

அஃதாவது காப்புக்கு முன்னெடுக்குங் கடவுளே மாலென்னும் புத்தராதலானும், மாதா, பிதா, குரு என்னும் மூவரையுமே தெய்வமாகக் கொண்டவிடத்து புத்தரே ஜகத்குருவும் ஆதியங் கடவுளாயதினாலும் நூலாசிரியரது மரபில் தொன்றுதொட்டு வணங்கிவரும் திரத்தின முதலாம் பதுமநிதியாகிய ஆதிபகவனாம் புத்தபிரானைத் தனது வழிநூலுக்குக் காப்பாகப் பத்து பாடலால் வாழ்த்தி சிறப்பித்திருக்கின்றார்.

**1. அகரமுதல வெழுத்தெல்லா மாதி**
**பகவன் முதற்றே யுலகு.**

**(பதவுரை)** அகரம் - அகரமென்னு மெழுத்து, எழுத்தெல்லாம் - மற்றுள்ள வெழுத்துகளுக்கெல்லாம், முதல் - ஆதியாயிருப்பதுபோல், பகவன் - புத்தபிரான், உலகு - உயர்வோருக்கு, முதற்று - முதலாயிருக்கின்றாரென்பது பதம்.

**(பொழிப்புரை)** சகல எழுத்துக்களுக்கும் அகரமாகிய எழுத்து முதலாயிருந்து அறிவை விளக்குவதுபோல் பகவனாகிய புத்தர் சருவ மக்களுக்கும் அறிவை விருத்தி செய்யும் முத நூலீய்ந்த முதல்வனாக இருக்கின்றாரென்பது பொழிப்பு.

**(கருத்துரை)** அகரமாகிய எழுத்தாயது மற்றுமுள்ள எழுத்துக்கள் யாவற்றிற்கு மாதியாயிருந்து கற்போருக்குக் கசடற அறிவின் விருத்தி

செய்வது போல் உலகசீர்திருத்தக்காரருள் ஆதியாகத் தோன்றி மக்களுக்கு மூவருமொழி களை ஊட்டி உயர்ந்தோர்மாட்டே உலகென விளக்கியவர் ஆதிபகவனாகிய புத்தரேயாதலின் அவரை முதற்பாடலில் சிறக்க வாழ்த்தியிருக்கின்றாரென்பது கருத்து.

**(விரித்துரை)** புத்தபிரான் ஜகத்திற்கே குருவாகத் தோன்றி அவன் தன்னவன் இவன் அன்னியனென்றும், இவன் தாழ்ந்தவன் இவன் உயர்ந்தவனென்றும், இவன் கற்றவன் அவன் கல்லாதவனென்றும், இவன் கனவான் அவன் ஏழையென்றும், இவன் சிறியவன் அவன் பெரியவனென்றும் பாரபட்சம் பாராதும், எறும்பு முதல் யானை வரையிலுள்ள சருவசீவர்களின் மீதும் அன்பு பாராட்டியும், சக்கரவாளம் எங்கணுஞ் சுற்றி அங்கங்குள்ள சருவ மக்களுக்கும் சத்தியதன்மத்தை ஊட்டியும், மக்கள் கதியினின்று தேவகதி பெறும் நித்தியானந்தத்தில் விடுத்து பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் துக்கங்களைப் போக்குதற்காய தன்மசங்கங்களை நாட்டியும், அஞ்ஞான இருளை அகற்றி மெஞ்ஞானோதயஞ் செய்தபடியால் பகவனென்னுங் காரணப் பெயரைப் பெற்றார்.

அதாவது இருளை விலக்கிய சூரியனுக்குப் பகலவனென்னுங் காரணப் பெயருண்டாயது போல் மக்களுக்குள்ள காம வெகுளி மயக்கமென்னும் அஞ்ஞான இருளை அகற்றி சாந்தம், ஈகை, அன்பென்னும் மெஞ்ஞானோதயஞ் செய்வித்தபடியால்

புத்தருக்குள்ள சகஸ்திர நாமங்களில் பகவன் பகவனென்னும் ஓர் சிறப்புப்பெயரையும் மேலோர் வகுத்திருக்கின்றார்கள், மண்டல புருடன் "பகவனே ஈசன் மாயோன், பங்கயன் சினனே புத்தன் " என்று கூறியுள்ள வற்றிற்குச் சார்பாய் *திரிமந்திர* வாக்கியோன் திருமூலர் "ஆதிபகவனருமறை யோதுமின்" என்றும் அதனை அநுசரித்து சமணமுனிவரினின்று தேர்ந்த *இடைகாட்டு சித்தர்*, "ஆதிபகவனையே பசுவே அன்பாய் தொழுவாயேல், சோதிபரகதிதான் பசுவே சொந்தமதாகாதோ" வென்றற்குப் பகரமாய் *மணிமேகலை* ஆக்கியோன் சீத்தலை சாத்தனார் பிண்டியினது சிறப்பை ஒட்டி பகவனதாணையில் பன்மாம் பூர்க்குமென்றும் இதற்கு ஆதரவாக சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் பாடல் வண்டாற்றும்பிண்டி பகவனதாணை போல" வென்றும் வழிநூலுக்கு ஆதரவாக சார்பு நூலோர்களும் வரைந்திருக் கின்றார்கள். புத்தபிரானை மகடபாஷையில் பகவனெனக் கூறியவற்றை அநுசரித்து திராவிட பாஷையில் திவாகரரென்றும் வழங்கி வந்தார்கள். –

உலகிற்கே ஆதி சீர்திருத்தக்காரரெனத் தோன்றியவரின் மலைவுபடா மொழிகளையும், அளவுபடா அன்பினையும், திகைவுபடா ஞானத்தின் சிறப்பினையும், மங்குலத்தில் முக்காலங் கெடா புருஷோ த்தமனாக விளங்கிய உருவினையும், மிருதுவாக்கினமுதினையும், களங்கமற்ற உள்ளக்காட்சியையும்

ஒப்பிட்டுக்காட்டும் உபமான உபமேயம் உலகில் ஒன்றுமில்லாததால் அறிவை விளக்கி சீர்திருத்தும் அறிச்சுவடியின் முதலெழுத்தாம் அகரவெழுத்தைச் சுட்டி உவமான உபமேயங்களாக விளக்கியுள்ளார். அத்தகைய விளக்காம் அகரசிறப் போவென்னில் தமிழ் எழுத்துக்கள் யாவற்றிற்கும் முதவெழுத்தாகவும், எட்டென்னும் இலக்கண எழுத்தாகவும், குண்டலியரம் சுழிமுனை நாடியின் முன்சுழியாகவும், ஞானவேற்ற அடிப்படையாகவும் " அகாரகாரணத்துளே யனேகனேகரூபமா" என்னும் ஞானோற்பவத்திற்கே ஆதாரமாகவும், "ஆதியாய் நின்ற அறிவு முதலெழுத்தோதிய நூலின் பயன்" என்னும் அறிவிருத்திக்கே பீடமாகவும், "கட்டுப்படாதந்த வச்சுமட்டம் அதன் காலேபன்னிரண்டா கையினால், எட்டுக் கயிற்றினால் கட்டிக்கொண்டாலது மட்டுப்படுமோடி ஞானப்பெண்ணே" என்னும் மனோலயத்திற்கே ஆதாரமாகவும் இருக்கின்ற படியால் அவ்வகரவட்சரத்தின் மகத்துவம் அறிந்த மேலோர்கள் மக்களது வாழ்க்கையின் இல்லங்களில் அப்பா, அம்மா, அண்ணா , அக்கா, அம்மான், அத்தை என வழங்கு மொழிகளால் எக்காலும் அகராட்சரத்தை உச்சரிக்கவுஞ் செய்துள்ளது சகல மகாஞானிகளின் சம்மதச்சிறப்பாகவும் விளங்குவது கொண்டு வழிநூலாசிரியர் அறவாழியானுக்கு அகரத்தை ஒப்பிட்டு கடவுள் வாழ்த்தாம் புத்தரது சிறப்பை விரித்திருக்கின்றார்.

இதற்கு ஆதரவு பாலி புத்தாகுணோ இதிபிஸோ பகவா அறஹங் ஸம்புத்தோ விஜ்ஜாசரண ஸம்ப்பன்னோ ஸுகதோ லோகாவிது அநுத்தரோ புரிஸதம் மகாரதி ஸடத்தா தேவம் அனுஸ்ஸானங் புத்தோபகவாதி.

பாலி நிகண்டு. ஆதி பகவா பகவாமுனி, பகவாஸம்மா ஸம்புத்தா, பகவாஜீனா பகவா புத்தர், பகவா மஹாமுனி.

**2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ**

**னற்றா டொழாஅ ரெனின்.**

**(ப.)** கற்றதனால் - படித்ததினால், ஆய -உண்டாய, பயன்- பலன், என்கொல் - என்னென்று சொல்லுதும், வாலறிவன்-பாலதானத்தில் அறிவின் விருத்திப்பெற்று நின்றவன் நற்றாள்-சீரடிகளை, டொழா அ-வணங்கா, ரெனின் பயனென்னை யென்பது பதம்.

**(பொ.)** பல நூற்களைக் கற்றும், நூலுக்கு முதல்வனும், நுண்ணணறிவின் ஆசிரியனுமாய வாலறிஞனின் செயலையும் அவரது தன்மபாத போதத்தையும் வணங்கி விசாரியார்க்கு நூலினைக் கற்றும் பயன் விளங்காதென்பது பொழிப்பு.

**(க.)** பாலவயதிலேயே அறிவின் விருத்தி பெற்று ஜகத்குருவாகத் தோன்றிய ஒப்பிலா அப்பன் புத்தரது திருவடிகளை வணங்கி மக்களுள் அவர்பெற்ற பேரானந்தத்தை உணர்ந்து அவரது

முதநூலையும் மற்றும் வழிநூல், சார்புநூல் யாவையுங் கற்பதாயின் கற்ற சுகத்தின் பயன் நித்திய காட்சியும் அநுபவமுமாக விளங்குமென்பது கருத்து.

**(வி.)** கண்டுபடிப்பதே படிப்பு, மற்றபடிப்பெல்லாம் தெண்டப்படிப் பென்று வழங்குதற்குப் பகரமாகக் காட்சிக்கும் அனுபவத்திற்கும் பொருந்தாக் கலைகளைக் கற்பது கல்லானென்பதற்கு ஒக்கக் களங்கம் தோய்ந்திருப் பானாயின் கற்றுங் கசடன் என்றேற்கப்படுவான். ஆதலின் கற்குமுன்னும் கற்றப் பின்னும் நூல்தோன்றியகாரணம் யாதென்றும், நூலினது ஆக்கியோன் செயல் ஏதென்றும் அவரடைந்த பயனென்னையென்றும் உணர்ந்து கற்றும் கடைக்கோற்கே வாலறிவன் தாளினை வணங்கிக் கற்றலே பயனுடைத்தென்றும் வணங்காது கற்றல் பயனற்றதென்றும் விளக்குவான் வேண்டி களங்கமற்ற வாலறிஞன் தாளினை வணங்கி களங்கமறுக்கும் நூற்களைக் கற்பது பயனுடைத்து என்பதாம். புத்தரையே வாலறிஞனென வழிநூலார் சிந்தித்தற்குச் சார்பாய் யாப்பருங்கலை ஆக்கியோன் அமுதசாகரர் " அறிவனைவணங்கி யரைகுவன்யாப்பே, என்றும் அதனுரையாசிரியர் குணசாகரனார் "ஆசனத்திருந்த திருந்தொளியறிவன், ஆசனத்திருந்த திருந்தொளியறிவனை" என்றும், சிலப்பதிகார ஆக்கியோன் இளங்கோவடிகள் , " ஆதியிற்றோற்றவறிவனை வணங்கி' என்றும், அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார், "அறிவனை வாழ்த்தி

அடவித்துணையா" என்றும் தோன்றியுள்ள சார்பு நூற்களே போன்ற விரிவாம்.

**3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்**

**நிலமிசை நீடு வாழ்வார்.**

**(ப.)** மலர் - தாமரைப் புட்பத்தின், மிசை-மீதே, யேகினான் - சென்றவனது, மாணடி - சிறந்த பாதத்தை, சேர்ந்தார் - சார்ந்தவர்கள், நிலமிசை - பூமியின்கண், நீடுவாழ்வார் - எக்காலும் சுகசீவிகளாக வாழ்வார்களென்பது பதம்.

**(பொ.)** பதுமாதனமென்னும் தாமரை புட்பத்தில் வீற்று பதுமநிதி என்னும் பெயர்பெற்று, ததாகதமுற்றுக் காமனையுங் காலனையும் வென்று நித்தியானந்தம் பெற்றோன் சீர்பாதங்களைச் சார்ந்தோர் நீடிய வாழ்க்கை சுகம் பெறுவார்களென்பது பொழிப்பு

**(க.)** கல்லாலடிக்குள் செங்கமலப்பீடத்தின் மேல் வீற்று செவ்விய ஞானத்தை உணர்ந்து ஜகத்குருவாக விளங்கிய உலகநாதனின் மாணடியைச் சேர்ந்தோர்

அவரது மாபோதத்தை உணர்ந்து தீவினையை வென்று என்றுமழியா நிப்பானமாம் நித்திய வாழ்க்கைப் பொறுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** கல்லால விருட்சத்தின் கீழ் கமலாசனத்தில் வீற்று கமலநாத னென்னும் பெயரும் பெற்ற "புத்த பிரானை" மலருற்று

நடந்தவாமனென்றும், தாமரையாசனனென்றும், கமலபாதனென்றுங் கொண்டாடுமாதாரத்தைக் கொண்டே வழி நூலார் மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்த போதே அவரது சீலத்தையும், ஒழுக்கத்தையும், மெஞ்ஞானத்தையும் பெற்று நிப்பானமென்னும் நித்திய சுகம் பெறுவார்களென்னுந் துணிபால் நிலமிசை நீடுவாழ்வாரென வைப்புறுத்திக் கூறியுள்ளார். மலர்மிசை யேகினா னென்பதற்குச் சார்பாய் பின் கலைநிகண்டி னாக்கியோன் மண்டல புருடன் "மூலருற்று நடந்த வாமனென்றும், திரிமந்திர வாக்கியோன் திருமூலனார் "கடந்துநின்றான் கமலாமலர் மீதே" என்றும், சீவகசிந்தாமணிவாக்கியோன் திருத்தக்கதேவர் விண்டலர் பூந்தாமரையின் விரைத்தும்ப மேனடந்தா" னென்றும், சூளாமணியாக்கியோன் தோலா மொழித்தேவர் விரைமணங்கு தாமரைமேல் விண்வணங்கச் சென்றாய்" என்றும், அறநெறிச்சாரவாக்கியோன் முனைப்பாடியார் "தாமரைப்பூவின் மேற் சென்றான் புகழடியை" என்றும், சிலப்பதிகார வாக்கியோன் இளங்கோவடிகள் "மலர் மிசைச்சென்ற மலரடிக் கல்லதென் றலைமிசையுச்சி தானணிபொறஅ" என்றும் வாசிட்ட வாக்கியோன் "புண்டரீகவாதனத்தில் புத்தன் போலுத்தரமுகனா" என்றும், வீரசோழிய உதாரணச்செய்யுள் "உறுதாமரைமேலுரைவார்தன்" என்றுங் கூறியுள்ள சமணமுனிவர்களின் சார்பு நூற்களின் ஆதாரங்கொண்டே வழி நூலார் கூறியுள்ள

மலர்மிசையேகினானென்னு மொழி புத்தபிரானை குறித்தவையெனத் துணிந்தோதிய விரிவு.

**4. வேண்டுதல் வேண்டாமெயிலானடி சேர்ந்தார்க்**

**கீயாண்டு மிடும்பை யில்.**

**(ப.)** வேண்டுதல் - விரும்புதல், வேண்டாதல் - விரும்பாதல், இலானடி அற்றவனது சீர்பாதத்தை, சேர்ந்தார் - அடைந்தவர்களுக்கு, கியாண்டு - எக்காலமும், யிடும்பை - பிறவியின் துன்பம், யில் - இல்லையென்பது பதம்.

**(பொ.)** விருப்பும் வெறுப்புமற்ற புத்தரது கமல் பாதத்தைச் சார்ந்தவர்கள் எக்காலுந் துக்கமென்பதற்று சுகநிலை பெறுவார்களென்பது பொழிப்பு

**(க.)** விவேகவிருத்தியால் வேண்டுமென்னும் விருப்பும், வேண்டாமென்னும் வெறுப்புமற்ற விண்ணவர்கோன் சீரடியாம் அறஹணடிகளைச் சார்ந்து அவர்கள் விசாரணையால் தங்களுக்குள்ள விருப்பு வெறுப்பற்ற துக்க நிவர்த்தியுண்டாகி எக்காலும் சுகநிலை அடைவார்களென்பது கருத்து.

**(வி.)** மக்களுள் வேண்டுமென்னும் அவாவே மிகுந்து வேண்டாமென்பது அற்று பாசபந்தமுற்று மாளாப்பிறவி பெற்று துக்க சாகரத்திற் சுழல்வது இயல்பாதலின் புத்தபிரான் அத்தகைய சுழலில்

அகப்படாமலும், துக்கசாகரத்தில் அழுந்தாமலும், மாளாப்பிறவிக்கு ஏகாமலும், பாசபந்தத்திற்சிக்காமலும் இஃது வேண்டும், அஃதை வேண்டாமென்று பற்றாமலும் என்றும் இடும்பை யற்று சதாசுகத்தில் நிலைத்ததன்றி தனது சங்கத்தோர்களாம் அடியார்களையும் தன்மயமென்னும் அறஹணவடிகளாக்கி என்றும் கெடா ஆனந்த சுகத்தில் விடுத்த அநுபவக்காட்சியால் விருப்பு, வெறுப்பற்ற சங்கமாம் அடிகளைச் சேர்ந்தவர்கள் இடும்பையென்னும் பலவகைத் துன்பங்களில் அழுந்தாது சுகநிலை பெறுவரென்னுந் துணிபு கொண்டு வழி நூலார் கூறியவற்றிற்குப் பகரமாக, மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் சங்கத்திற் சேர்ந்த சமணமுநிவர்களில் சித்தி பெற்ற சாரணர்களையே அடிகளென்பதற்கு, "நிலத்திற் குழித்து நெடுவிசும்பேறிச், சலத்திற்றிரியுமோர் சாரணன் தோன்ற, மன்னவ னவனை வணங்கிமுன்சென் றென்னு யிரனையாளிங் கொளித்தாளுள், என்னளொருத்தியைக் காணிரோவடி கேள்" என்றும், மற்றும் புத்தரை தியானிக்குமிடத்து "மாரனை வெல்லும் வீரனின்னடி, தீநெறிக்கடும்பகை கடப்போய் நின்னடி, பிறற்கற முயலும் பெரியோர் நின்னடி, துறக்கம் வேண்டா தொல்லோய் நின்னடி, யென் பிறப்பொழிய விருந்தோய் நின்னடி, கண் பிறர்க்களிக்குங் கண்ணோய் நின்னடி, தீமொழிகடிந்த செவியோய் நின்னடி, வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி, நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி, யுரகர் துயர் மொழிப்போய் நின்னடி,

வணங்குதலல்லது வாழ்த்துதலென்னா" என்னும் அவரது அடிகளை சிந்தித்து அறவணவடிகளைச் சார்வோரே ஆனந்த வாழ்க்கைப் பெறுவரென்பதை வீரசோழிய உதாரணச்செய்யுள் "இருட்பாரவினை நீக்கி யெவ்வுயிர்க்குங் காவலென, வருட்பராந்தனி சுமந்தவன்று முதலின்றளவு, மதுவொன்றி மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும் பொதுவன்றிநினக்குரித்தோ புண்ணியனின் றிருமேனி" என்றும் அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார், "குற்றங் குறைத்து குறைவின்றி மூவுலகில் நற்றமரைத்தாங்கருள் பரப்பி - முற்ற உணர்ந்தானைபாடாத நாவல்லவல்ல, சிறந்தான்றாள் சேராத்தலை", என்றும் கூறியுள்ள சார்புலோர் ஆதாரங்கொண்டே வேண்டுதல் வேண்டாமெயென்னும் வினையினீங்கிய இறைவனின் அடியைச் சார்ந்தோர் தங்களது வினையாம் இடும்பை நீங்கி எக்காலும் சுகவாழ்க்கைப் பெறுவார்கள் என்பது விரிவு.

**5. இருள் சேரிருவினையுஞ் சேரா விறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.**

**(ப.)** இறைவன் - வேந்தனாம்புத்தரோதிய, பொருள் சேர்-மெய்ப் பொருளுணர்ந்து, புகழ்புரிந்தார் - சிறக்க பெற்றவர், மாட்டு இடத்து, இருள்சேர் - அஞ்ஞானத்தை விருத்தி செய்யும், இருவினையும் - இரண்டுவகை கன்மங்களும், சேரா - அணுகாவென்பது பதம்.

**(பொ.)** இறைவனாம் தருமராசனால் ஓதிவைத்த மெய்ப்பொருளை அடைந்து மேதினியிற் சிறந்தோரிடத்து வினைகளிரண்டும் அணுகாவென்பது பொழிப்பு.

**(க.)** இறைவரி கொள்ளும் அரசனாகத் தோன்றி துக்க நிவர்த்தி அறிவான் வேண்டி துறவு அடைந்து ஓதாமல் உணர்ந்து உண்மெயாம் மெய்ப் பொருளடைந்து இருவினயற்று சதாநிலையுற்று சகலமக்களுக்கும் ஓதிய பொருளையுணர்ந்து புகழ்பெற்றோரை இருவினைகளுஞ்சேராவென்பது கருத்து.

**(வி.)** வரியிறைக் கொள்ளும் அரசனாகத் தோன்றி பிறப்பினால் உண்டாந் துக்கங்களையும், மூப்பினாலுண்டாந் துக்கங்களையுங் மரணத்தா லுண்டாங் துக்கங்களையுங் கண்டு சகிக்காது இத்துக்கநிவர்த்திக்கான வழி ஒன்றிருக்க வேண்டுமென்று உணர்ந்து இறைவனது நிலையா சுகபோகங்கள் யாவையும் விடுத்து, விருப்பு, வெறுப்பென்பதற்று, நல்வினை தீவினையென்பதை மறந்து, நாமரூபமென்னுந் துவிதபாவனையழிந்து, மெய்ப்பொருளுணர்ந்து, பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு வகைத் துக்கங்களும் ஒழிந்து சாதுயர் நீக்குந் தலைவன் தவமுநியெனத் தோன்றி, தான் கண்ட காட்சியையும் அநுபவத்தையும் மக்களுக்கு உலகநீதியாயோதி, உண்மெய்பொருளை உணர்ந்து ஒடுங்கவைத்தவராதலின் அவ்விறைவனது பொருளைச் சார்ந்து புகழ்

பெற்றோருக்கு இருவினையும் ஒழியுமென்னும் அனுபவக்காட்சியால் வழி நூலாசான் கூறியதன்றி, சார்பு நூலோருள் யாப்பருங்கலை உரையாசிரியர் குணசாகரனார் "பூந்தண் சினைமலர் மல்கியப் பொழிப்பிண்டி வேந்தன் புகழ்பரவாதவர் வினைவெல்லார், அதனால் அறிவண் நடியிணைப் பரவிப் பெருகவர் யாவரும் பிறவியிநெறியே" "முருகவிழ் தாமரைமலர் மேன் முடியிமை யோர் புடைவரவே வருசினநாதருமறை நூல் வழி பிழையாமனமுடையார், (இருவினை) போய் விழமுனியா தெதிரிய காதியையறியா நிருமலராயருவினராய் நிலவுவர் சோதியினிடையே" என்றும், வீரசோழிய உரையாசிரியர் பெருந் தேவனார் அருள் வீற்றிருந்த திருநிழற்போதி முழுதுணர் முநிவநிற் பரவுதுந் தொழுதக, வொரு மனமெய்தி யிருவினைப் பிணிவிட முப்பகை கடந்து நால்வகை பொருளுணர்ந் தோங்கு நீருலகிடையாவரு, நீங்காவின்பமொடு நீடுவாழ்கெனவே," எனுந் தாட்டாந்தத்துடன் அரசனையே இறைவனெனக் கூறியவற்றிற்குப் பகரமாக ஞானக்கொம்மி" அரசகுலத்திலுருவாகி அம்பரமான வெளிதனிலே புரச மரத்திலொடுங்கி நின்றான் அவன் பொருளைப் பாரடி ஞானப்பெண்ணே " என்றும் நெஞ்சறி விளக்கம், " அரியதோர் அரசன் மைந்தன் அவனியிலுதித்து முன்னாள் பெரிய பேரின்பஞானம் பெருவதே பெரிதென் றெண்ணி, உரிய வேதாந்தவுண்மெயுரைக்கு மாசானுமாய, தெரியொணா நாகை நாதர்

சீர்பதம் போற்று நெஞ்சே" என்றும், பட்டினத்தார், "மானார் விழியைக்கடைத்தேரி வந்தனன் வாண் குருவுங், கோனாகி வந்தென்னைக் குடியேற்றுக்கொண்டனன் குற்றமில்லை, போனாலும் பேரிருந்தாலு நற்பேரிது பொய்யன்று காணானாலுமிந்த உடலோடிருப்ப தருவெறுப்பே" என்றுங் கூறிய குரு அரசனேயாதலின் இறைவனென்னு மொழி புத்தரையே குறித்ததென்பதுபோன்ற விரிவு.

**6. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ்வார்.**

**(ப.)** பொறிவாயில் - பஞ்சபொறிகளின் வழியே, ஐந்து - அவா ஐந்தினையும், அவித்தான் - அடக்கினவனது, பொய்தீர் - பொய்யை யொழிக்கும், ஒழுக்கம் - நற்றவமாம், நெறிநின்றார் - நிலையில் நின்றவர்கள், நீடு வாழ்வார் நித்திய சுகம்
பெறுவார்களென்பது பதம்.

**(பொ.)** ஐம்புல நுகர்ச்சியால் ஆசை கொண்டு உழலும் பொய்யாகியத் தோற்றத்தை அவித்து மெய்யாய ஐம்பொறிவொடுக்கத்தின் நின்றவரது நெறியில் ஒழுகுவோர் நீடு வாழ்வார்களென்பது பொழிப்பு

**(க.)** ஐம்பொறியின் வாயலிற் செல்லும் பொய்த்தோற்றங்களாகிய ஆசைகள் ஐந்தினையும் அவித்து ஆமைபோலுள்ளடங்கி மெய்கண்ட

தேவனாம் புத்தரது நல்லொழுக்க நெறியில் நின்று அவரது சாதனத்தைப் பின்பற்றியவர்கள் என்றும் அழியா நீடிய வாழ்க்கைப் பெறுவார்களென்பது கருத்து.

**(வி.)** கண்ணினாற் பார்த்தப் பொருட்களின்மீதே ஆசைகொண்டலை தலும், மூக்கினால் முகர்ந்த வாசனைகளை நாடி ஆசைகொண்டலைதலும், செவியினாற் கேட்ட மொழிகளில் ஆசைகொண்டலைதலும், நாவினால் உரிசித்த பொருட்களின் மீது ஆசை கொண்டலைதலும், தேகம்சுகித்த போகத்தை யாசித்தலைவதுமாகிய பொய்தோற்றங்களையும் அதனால் உண்டாந் துக்கங் களையும் ஒழித்து மகராஜனே துறவடைந்தாரென்னும் ஒழுக்க நெறிநின்று, பொறிவாயல் ஐந்தினையும் அவித்து புத்தராகிய மெய்கண்டதேவனை பின்பற்றி அவரது நல்லொழுக்க போதனாநெறியில் நிலைப்பவர்கள் பொய்ப் பொருட் தோற்ற அவாக்கள் ஐந்தினையும் அவித்து தன்னில் தானே தத்துவமாகும் மெய்ப்பொருள் கண்டு என்றும் அழியா நித்திய நிலையில் நீடுவாழ்வார் களென்று வழி நூலார் கூறியவற்றிற்குப் பகரமாய் வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் "வீடுகொண்ட நல்லறம் பகர்ந்தமன்பதைக்கெலாம், விளங்குதிங்கள் நேர்மெயால் விரிந்திலங்கு வன்பினோன் மோடுகொண்ட வெண்ணுரைக் கருங்கடற் செழுஞ்சுடர், முளைத்தெழுந்த தென்னலாய் முகிழ்ந்திலங்கு போதியி, நாடுகின்ற மூவகைப் பவங்கடந்து

குற்றமா, மைந்தவித்து மூன்றறுத்த நாதனாண்மலத்துணர்ப் பீடுகொண்ட வார்தளிர்ப் பிரங்கு போதி யானையெம், பிரானை நாளு மேத்துவார் பிறப்பிறப்பிலார்களே" என்றும் அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார், "உள்ளப் பெருங்குதிரை யூர்ந்து வயப்படுத்திக் கள்ளப் புலனைந்துங் காப்பமைத்து, வெள்ளப் பிறவிக் கணீத்தார் பெருங்குணத்தாரைத், துறவித் துணைப்பெற்றக்கால்" என்றும், சீவகசிந்தாமணி அக்கியோன் திருத்தக்கதேவர் "ஐவகைப் பெ ரறியும் வாட்டி யாமையினடங்கி யைந்தின், மெய்வகை தெரியுஞ்சிந்தை விளக்குநின் றெரியவிட்டுப், பொய், கொலை, களவு, காம, மவாவிருள் புகாது போற்றிச், செய்தவனுனித்த சீலக் கனை கதிர்த் திங்களொப்பார்" என்றும் மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் "பொருளினுண்மெய் புலங்கொளல்வேண்டும். மருளில் காட்சியைவகையாகுங் கண்ணால் வண்ணமுஞ் செவியாலோசையு, மூக்கானாற்றமு நாக்காற் சுவையு, மெய்யாலூறு மென்றுஞ் சொன்ன இவ், ஐவகை கண்டு கேட்டுண்டுயிர்த்து" என்றும் இடைக்காட்டுச்சித்தர் "மெய்வாய் கண் மூக்குச் செவி எனுமைந்தாட்டை, வீறுஞ்சுவையொளி யூரோசையாங்காட்டை, யெய்யாம லோட்டினேன் வாட்டி னேனாட்டினேன் ஏகவெளிக்குள்ளே யோக வெளிக்குள்ளே" என்றும், பொறிவாயல் ஐந்தவித்த புத்தரின் பொய்தீர் ஒழுக்க நெறினின்று

புலன் தென்பட்டோர் நீடிய சுகவாழ்க்கைப் பெறுவார்களென்பது விரிவு.

**7. தனக்குவமெயில்லா தான்றாள் சேர்ந்தார்க் கல்லான்**
**மனக்கவலை மாற்ற லரிது.**

**(ப)** தனக்கு - தனக்கு, உவமெயில்லாதான் - நிகரற்றவராகுந் ததாகதரின், றாள் சேர்ந்தார்க்கு - சீர்பாதத்தை யடைந்தவர்க்கு, அல்லான் - அல்லது, மனக்கவலை - துக்கவிருத்தியை மாற்றல் - அகற்றல், அரிது - கடினமென்பது பதம்.

**(பொ.)** தனக்கு நிகரில்லாதவன் தாளைச் சார்தலே துக்க நிவர்த்திக்கு வழியென்பது பொழிப்பு.

**(க.)** உலகத்தில் தோன்றிய மக்களுள் புத்தருக்கு நிகராய புருஷவுத்தமன் ஒருவரும் இல்லையாதலால் அவரது கமலபாதத்தைச் சார்தலே மனக் கவலையாம் துக்க நிவர்த்திக்கு வழியல்லது வேறுவழி இல்லையென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றியுள்ள மக்களுள் மனக்கவலையாம் பிறவியின் துக்கம், பிணியின் துக்கம், மூப்பின் துக்கம், மரணதுக்கம் ஆகிய நான்கையுங் கண்டுபிடித்து அந்த துக்கம், துக்கோற்பவம், துக்கோற்பவ காரணம், துக்க நிவாரணமாகிய நான்கையும் உணர்ந்து பிறப்பினால் உண்டாம் மனக்கவலை, மூப்பினாலுண்டாம்

மனக்கவலை, மரணத்தினாலுண்டாம் மனக்கவலையாய நான்கினையும் மாற்றி துக்க நிவர்த்தியாம் என்றும் அழியா நித்தியநிலைப் பெற்று மக்களென்னும் ஆறாவது தோற்றத்தினின்று ஏழாவது தோற்றமாம் தேவகதியில் ஆதிதேவனென்றும், ஆதிமுநிவனென்றும் ஆதிபகவனென்றும், அதிநாதனென்றும், ஆதிகடவுளென்றும் விவேகமிகுத்த மேன்மக்களால் கொண்டாடப்பெற்றவரும், சாந்தத்திலும், அன்பிலும், ஈகையிலும் அளவுபடா ஞானத்திலும், மலைவுபடா வாக்கிலும் அவருக்கு உவமெயாக ரூபிக்க சரித்திரங்களில் வேறுதேவர்கள் ஒருவருமில்லாதலால் தனக்குவமெயில்லாதான் தாளைச் சார்ந்தவர்க்கல்லது மனக்கவலையாம் துக்க நிவர்த்தி ஆகாதென வழி நூலார் துணிந்து கூறியவற்றிற்குச் சார்பாக மணிமேகலை ஆக்கியோன் வணிகச் சாத்தனார் "சாதுயர்நீக்கிய தலைவன் தவமுனி" யென்றும், "முற்றுமுணர்ந்த முனிவனையல்லது, மற்றைப்பீடிகை தன்மிசை பெறாஅ" என்றும், வீரசோழிய ஆக்கியோன் புத்தமித்திரனார் " மிக்கவன் போதியின் மேதக்கிருந்தவன் மெய்தவத்தாற், றோக்கவன் யார்க்குந்தொடரவொண்ணாவன் அயனெனத் , தக்கவன்பாதந் தலைமேற்புனைந்து தமிழுரைக்கப், புக்கவன்பைம்பொழிற் பொன்பற்றி மன்புத்திமித்தரனே" என்றும், சூளாமணி ஆக்கியோன் தோலாமொழித்தேவர் திருமறுவுவலனணிந்து திகழ்கின்ற திருமூர்த்தியொரு

மறுவுமிலையென்ப தொழியாமலுணர்த்து மேயொரு மறுவுமில்லையென்ப தொழியாமலுணர்த்துகினு மருமறையை விரித்தாயை யறிவரோ வரியரே" என்றும், "ஒருமெயாற்றுன்பமெய்து மொருவனாயும் மெயாலே. திருமெயான் முயங்குஞ் செல்வச் செருக்கொடு திளப்பநோக்கி, யிருமெயி மொருமெயாலே யியற்றலினிறைவன் போல, பெருமெயையுடைய தெய்வம் பிறிதினி யில்லையன்றே" என்றும், சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "வீங்கோதவண்ணன் விரைத்த தும்புபூம்பிண்டித், தேங்கோதமுக்குடைக் கீழ்த்தேவர் பெருமானைத், தேவர் பெருமானைத் தேனார்மலர் சிதரி, நாவினவிற்றாதார் வீட்டுலக நண்ணாரே" என்றும் தனக்கு என்னுந் தானே தானே தத்துவமானத் தவநிலை முதல்வனுக்கு நிகரில்லாதது விண்டும், ததாகதரையே தலைவனாகக் கொண்டும் மனக்கவலை மாற்றுதற்கு பீடகமாயது கண்டும் புத்தரது சீர்பாதத்தைச் சாராதார்க்குத் தீவினையொழிந்து மனக்கவலை மாறாதென்பது விரிவு.

**8. அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லாற்**

**பிறவாழி நீந்த லரிது.**

**(ப.)** அறவாழி - தருமச் சக்கரத்தோனாம், அந்தணன் - சாந்தரூபியின், தாளைச் சேர்ந்தார்க்கு - கமலபாதத்தை யண்டினவருக்கு, அல்லால் - அல்லது, பிறவாழி - ஜெனனக்கடலை, நீந்துதல் - கடத்தல், அரிது - கடினமென்பது பதம்.

**(பொ.)** தருமச்சக்கரத்தோனாம் சாந்தரூபியின் கமலபாதத்தைச் சார்ந்தோர்க்கல்லது ஜெனனக்கடலை கடத்தல் கடினம் என்பது பொழிப்பு.

**(க.)** எண்ணருஞ்சக்கிரவாளம் எங்கணும் அறக்கதிர் விரித்த அருகனாம் புத்தரது பாதபடியைச்சேர்ந்து அவரது தன்ம பாதத்தில் நடப்போரன்றி ஏனையோர் பிறவிக்கடலாம் துக்கநிவர்த்தியடைவது அரிதென்பது கருத்து.

**(வி.)** சருவ உயிர்களையுந் தன்னுயிர் போற் காக்குந் தண்மெய்தேகியாய மகாராஜனது திருவடியாம் அறஹணவடிகளைச்சார்ந்தவர்கள் அலைகடல் தோன்றி தோன்றி மறைவதுபோல் பல ஜெனன தோற்றங்களால் மாறிமாறி பிறப்பதற்கு ஏதுவாய் பற்றுக்களற்று துக்க நிவர்த்தியாம் நிருவாணசுக மடைவார்கள். அறவணவடிகளைச் சேராதும் சத்தியதன்மத்தில் நடவாதும் பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசையென்னும் பற்றுக்கள் அறாமலு முள்ளவர்கள் பிறவிக்கடலாந் துக்க நிவர்த்தி பெறுதல் அரிது, அரிதாதலின் அறவாழியானாம் புத்ததன்ம சங்கத்தைச் சார்தலே அழகென்று வழி நூலார் கூறியவற்றிற்குச் சார்பாக மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் "அறவியங்கிழவோனடியிணையாகி பிறவியென்னும்

பெருங்கடல்விடூஉ'" என்றும், "ஆதி முதல்வன் அறவாழியாள்வோன் பாதபீடிகை பணிந்தனளேத்தி" என்றும் "அறக்கதிராழி திறப்பட வுருட்டிய, காமற்கடந்த வாமன் பாதம்" என்றும், அறநெறிச்சாரம் ஆக்கியோன் முனைப்பாடியார் “கொல்வதூஉங்கள் வதூஉ மின்றிப் பிறர்மனையிற் செல்வதூஉஞ் செய்வனகாலல்ல - தொல்லைப், பிறவிதணிக்கும் பெருந்தவர்பாற் சென் றறவுரை கேட்பிப்பகால்" என்றும், வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் "புண்டரிகபாத நமசரணமாகுமென முனிவர் தீமெய் புணர்பிறவு காணார்" என்றும் திரி மந்திரம் ஆக்கியோன் திருமூலர் "அருமெவல்லான் கலைஞாலத்துட்டொன்றும், பெருமெவல்லான் பிறவிக்கடல் நீந்தும், உரிமெவல்லா னடியூடுரவாகி, திருமெவல்லாரொடுஞ் சேர்ந்தன்னியானே" என்றுங் கூறிய ஆதாரங்கொண்டு அறவாழி அந்தணன் புத்தரேயென வற்புறுத்திக் கூறிய விரிவாம்.

**9. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்**
**றாளை வணங்காத் தலை.**

**(ப.)** பொறியிற் - பஞ்சபொறிகளினிடத்தே, கோள் - குற்றங்கள், இல் - இல்லாதவனாயினும், குணமிலவே - பயனில்லை, எண்குணத்தான் - எட்டுவகைகுணங்களை யமைந்தவனது தாளை - சீர்பாதங்களை, வணங்கா - தொழுகா, தலை - சிரமென்பது பதம்.

**(பொ.)** குற்றமற்ற பஞ்சபொறிகளையுடையத் தலையைப் பெற்றவனாயினும், எண்குணத்தான் தாளை வணங்காத்தலை பயனற்றதென்பது பொழிப்பு.

**(க.)** நாவால் வருங் குற்றம், மூக்கால் வருங்குற்றம், செவியால் வருங் குற்றம், கண்ணால்வருங் குற்றம், தேகத்தால் வருங் குற்றம், எண்ணத்தால் வருங் குற்றங்களாய வறுவகைக் கோளற்ற தலையை உடைத்தாவனாயினும் அதனுளவை போதித்தும் நடந்துங்காட்டிய ஜகத்குருவாம் எண்குணத்தானது அடிகளைச் சேராதார்க்கு யாதொரு குணமும் விளங்காதென்பது கருத்து.

**(வி.)** முன்பு குற்றமற்று குருவாகத் தோன்றிய எண்குணத்தான் யாவரென்னில் பொய்சொல்லாமெய், கொலை செய்யாமெய், களவாடாமெய், கள்ளருந்தாமெய், பிறர்மனை நயவாமெய் ஆகிய சுத்ததேகியாம் தூயவுடம் பினனானவரும், தன்னைத்தானே அடக்கி ஆட்கொண்ட தன்வயத்தனானவரும், யாதொருவர் போதனையுமின்றி வாலவயதிலேயே அறிவின் விருத்திப் பெற்ற இயற்கை யுணர்வினனானவரும், சகலமும் அறிந்த முனிவனென முற்றும் உணர்ந்தவரானவரும், இராஜ போகத்தைத் துறத்தற்கு இயல்பாகவே பாசபந்தங்களினின்று நீங்கியவரும், அன்பே ஒருருவாகத் தோன்றிய பேரருளுடலையுடையவரும், கடைத்தேறி நிருவாணம் பெற்று முடிவிலா ஆற்றலடைந்தவரும், பேரின்பமாம்

வரம்பில் இன்ப மமைந்தவரும் புத்தர் ஒருவரே ஆதலின் அறுவகைக்குற்றங்களை அறுத்தோனாயினும் எண் குணத்தானடிகளை வணங்கி எண்குணத்தோனாவதே குணமன்றி அறுவகை குற்றங்களற்ற சிரமாயினுங் குணமில்லையென்பது கண்டு வழி நூலார் குற்றமற்றுங் குணங்குடிக்கொள்ளும் ஏதுவை விளக்கியுள்ளார். இதனது சார்பாக வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் “எண்ணிறைந்த குணத்தோய்நீ, யாவர்க்கு மரியோய் நீ" என்றும், " அருள் வீற்றிருந்த திருநிழற்போதி, முழுதுணர் முநிவநிற் பரவுதுந் தொழுதக" வென்றும், 'பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணியனின்றிருமேனி" என்றும், மணிமேகலை ஆக்கியோன் வணிகசாத்தனார் "முற்றுமுணர்ந்த முதல்வனையல்லது மற்றைப்பீடிகை தலைமிசைப்பெறாஅ” வென்றும், சூளாமணி ஆக்கியோன் கோலாமொழித்தேவர் சோதியும்பே ரெண்குணனுந் துப்புரவுந்துன்னுவரே" என்றும், "கடையி லெண்குணத்தது காகராகர்க" வென்றும், சீவகசிந்தாமணி யாக்கியோன் திருத்தக்கதேவர் "பூத்தொழியாப் பிண்டிக்கீழ்ப்பொங்கோத வண்ணனை நாத்தழும்ப வே .. .யீட்டுலக நண்ணாரே, வீட்டுலக னகள் வராதுதரி, வோட்டிடுவென்னுக் குட்பட்டயர்வாமே” என்றும், பின்கலை நிகண்டினாக்கி யோன் மண்டல புருடன் "அநக னெண்குணன் நிச்சிந்தன் அறவாழிவேந்தன் வாமன்” என்றும், கூறியுள்ள நூற்களின் ஆதாரங்கொண்டு எண்குணத்தானென்னும்

பெயர் புத்தருக்குரிய சகஸ்திரநாமங்களில் ஒன்றென்றே துணிந்து கூறிய விரிவாம்.

**10. பிறிவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா**

**ரிறைவனடி சேராதார்.**

**(ப.)** இறைவன் - போதி வேந்தனது, அடி - தன்மபாதத்தை யடைந்தோர், பிறவிப் பெருங்கடல் - ஜெருசாகரத்தை, நீந்துவர் - கடப்பார், சேராதார் - அடையாதார், நீந்தார் - கடக்கமாட்டார்க ளென்பது பதம்.

**(பொ)** போதி வேந்தனாம் அறவணனடிகளைச் சேர்ந்தோர்க்குப் பிறவியினது துக்கம் ஒழியும் சேராதார்க்குத் துக்கம் ஒழியாதென்பது பொழிப்பு

**(க.)** அலையுற்ற கடல் போல் அவாவின் பெருக்கப்பற்றினால் உண்டாம் பிறவியின் துக்கத்தைப் போக்கிக் கொள்ள வேண்டியவர்கள் புத்தரது அடிகளாய சாரணசங்கத்தைச் சேர்ந்து அவரது போதனா ஓடத்திலேறி வாணமென்னும் பாசபந்தக் கட்டுக்களைக் கடந்து நிருவாணமென்னும் பிறவியற்றக் கரை சேர்வார்களென்பது கருத்து.

**(வி.)** பிணியின் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையும் கண்ணினாற்கண்டு இத்தகைய துக்கங்களுக்கு ஏது

பிறப்பென்றும், பிறப்பிற்கு ஏது பாசபந்த பற்றுக்களென்றும், பற்றுக்களுக்கு ஏது அவாவென்றுங் கண்டுணர்ந்து தனது அரசபோக அவாவினை ஒழித்து பாசபந்தப்
அவாவினை ஒழித்து பாசபந்தப் பற்றுக்களை அறுத்துப் பிறவியென்னுந் துன்பக்கடலை கடந்த பெரியோன் தான் கடந்த வழியை உலக மக்களுக்கூட்டி அவர்களுக்குள்ள பல இன்பதுன்பங்களையும் ஒழிக்கச் செய்விக்க வேண்டுமென்னுங் கருணையின் பற்றினால் சத்திய சங்கங்களைச் சேர்த்து சாரணர்களாம் அறவணவடிகளை நிலைக்கச் செய்து அவ்வடிகளைச் சேர்ந்தோர்களைப் பிறவியின் சமுத்திரத்தைக் கடந்து கடைத்தேறச் செய்துவருகின்றபடியால் அவரது அடிகளாம் சங்கத்தைச் சேர்ந்தவர்களே பிறவியின் துக்கத்தை ஒழித்து பிணியின் துக்கம், மூப்பின் துக்கம் மரண துக்கம் யாவையும் ஜெயிப்பரென்னும் அநுபவக்காட்சியால் அவரடிகளைச் சேர்ந்தோரே பிறவியின் கடலைக் கடப்பரென்றும் அடிகளைச் சேராதோர் பிறவியின் கடலைக் கடவாரென்றுந் துணிந்து கூறியவற்றிற்குச் சார்பாக சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "கருமக் கடல் கடந்த கைவலச் செல்வ னெரிமலர்ச்சேவடியை யேத்துவார் யாரே, யெரிமலர்ச் சேவடியை யேத்துவார்வான்றோய், திருமுத்தவிராழிச்செல்வரேயன்றே" என்றும், சித்தாந்தக்கொத்து "அருநெறியார் பாரமிதையாறைந்து முடனடக்கிப், பொருள் முழுதும் போதிநிழனன்குணர்ந்தமுநிவரன்ற,

னருள் மொழியானல்வாய்மெ யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெறியாற் பிற நூலு மயக்கறுக்குமா றுளதோ" வென்றும், மணிமேகலை ஆக்கியோன் வணிகச்சாத்தனார் "அறவியங் கிழவோ னடியிணையாகிய , பிறவியென்னும் பெருங்கடல் விடூஉ" என்றும், "என்பிறப்பொழிய நின்றோய் நின்னடி என்றுங் கூறியுள்ள சார்பால் புத்தரது சங்கதன்மமென்னும் ஈரடிகளைச் சேர்ந்தோரே பிறவியின் கடலை நீந்துவர். ஏனையோர் நீந்தாரென்பது விரிவு

இப்பாயிரம் பத்துப்பாடலினும் ஆதியங் கடவுளாம் புத்தரையே வாழ்த்தி அவரது அடிகளாம் சங்கத்தையும் தன்மத்தையும் சிறப்பித்துக் கூறியவற்றுள் மகடபாஷையாம் பாலியினின்று சகட பாஷையாம் வட மொழியையும், திராவிட பாஷையாம் தென் மொழியையும் அக்கைதங்கையர் போல் முதற்குரவராம் ஆதிபகவனால் ஈன்றும் அவரது முதநூலாம் திரிபேத வாக்கியங்களென்னும் திரிபீடகமாம் மும்மறை மொழிக்கும் வழி நூலாந் திரிக்குறளெனத் தோன்றியுள்ள இம்முப்பாலுக்கு அந்தரார்த்தங் கூறுமிடத்து வடமொழியும் தென்மொழியும் மருவி நிரவுவதால் மார்க்கம் விளங்குமன்றி மருவாவிடத்து மறைவது கண்டு இருமொழியையும் நிரவி வரைந்துவருகின்றாம். இவற்றுள் எஞ்சிய பாலி நிகண்டினது மேற்கோள் மிஞ்சும் புத்தகத்தில் வெளியாம்.

**புத்தரது சிறப்புப் பாயிரம் முற்றும்**

## 2. மழையினது சிறப்பு

**1. வானின் றுலகம் வழங்கி வருதலாற்**

**நானமிழ்த மென்றுணற் பாற்று**

**(ப.)** வானின்று - ஆகாயத்தினின்று பெய்யு மழை, உலகம் - சருவ சீவத்தோற்றங்களுக்கும், வழங்கிவருதலால் ஊட்டி வளர்த்துவருகிறபடியால், தானமிழ்தம் - தாயின் பாலுக் கொப்பாயதென்று, உணரற்பாற்று - தெரிந்து கொள்ள வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** உலகத்தில் தோற்றும் சருவசீவர்களையும் தாய்பால் போலூட்டி கார்த்துவருவது மழையே என்பது பொழிப்பு. > (க.) உலகத்தில் தோன்றும் எழுவகைத் தோற்றங்களை தோற்றவைப்பது உ மழை அதனை வளர்ப்பதும் மழையேயாதலின் அதனைத் தாயின் அமுதுக்கு ஒப்பென உணர்தற் கருத்து.

**(வி.)** பூமியினின்று புற்பூண்டுகள் தோற்றுவதற்கும், புற்பூண்டுகளினின்று புழுக்கீடாதிகள் தோற்றுவதற்கும், புழுக்கீடாதிகளினின்று மட்சம் பட்சிகள் தோற்றுவதற்கும், மட்சம் பட்சிகளினின்று ஊர்வனங்கள் தோற்றுவதற்கும், ஊர்வனங்களினின்று மிருகாதிகள் தோற்றுவதற்கும்,

மிருகாதிகளினின்று மக்கள் தோற்றுவதற்கும் மக்களினின்று தேவர்கள் தோற்றுவதற்கும் வானின்று வழங்கும் மழையே ஆதாரமாக உள்ளதால் தாயானவள் அமுதூட்டி தன் மக்களை கார்ப்பதுபோல் உலக தோற்றத்திற்கும் போஷிப்புக்கும் மழையே ஆதார மென்பது விரிவு.

**2. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு**
**துப்பாய தூஉ மழை.**

**(ப.)** துப்பார்க்கு - குற்றமுள்ள பொல்லார்க்கும், துப்பாய - குற்றமற்ற நல்லோர்க்கும், துப்பாக்கி - உவரகற்றி, துப்பார்க்கு - பொல்லாருக்கும், துப்பாய - சுத்தமாகத், தூஉமழை - பெய்யுமழை யென்பது பதம்.

**(பொ.)** பொல்லார்க்கும், நல்லோர்க்கும், புல்லுக்கும், நெல்லுக்கும் பொதுவாகப் பெய்யுமழை என்பது பொழிப்பு

**(க)** மழையானது பொல்லாரென்றும் நல்லாரென்றும் பேதம் பாராது பெய்யக் கூடியதாயினும் தனக்குள்ள உவராகிய உப்பை நீக்கி சுத்தமாகப் பெய்வதே அதன் சிறந்தகுணமென்பது கருத்து.

**(வி.)** சமுத்திரத்திலுள்ள நீரை ஆகாயத்திற் கிரகித்து தனக்குள்ளத் துப்பாகிய உப்பை ஆகாய உப்புடன் கலந்துவிட்டு துப்புற்ற பொல்லாரென்றும், துப்பற்ற நல்லோரென்றும் பேதம் பாராது

தனக்குள்ள உவரென்னுந் துப்பை அகற்றி சுத்தநீரைப் பெய்யுந் துப்பகன்ற மேலாயச் செயலை தனக்குள்ள குற்றத்தை நீக்கி எதிரிக்குள்ள குற்றம்பாராது சுகமளிக்கும் சிறந்த செயலை சிறப்பித்துக் கூறிய விரிவாம்.

**அகஸ்தியர் முப்பு**

ஆதியுப்புவிண்ணிலே அனாதியுப்பு வேலையில்
ஆழிநீரையுண்டு கர்ப்ப மாயிருந்து குண்டலும்
சோதியுற்ற நாளில்மேனி சூலுடைந்தமாரியாய்
தூரும்வேளைதன்னில் மின்னல்மீருமம்பலத்திலே

மோதியக்கினிக்கடாவி வீழு மங்கிடிச்சுடர்
மூலவிந்து பூமியூடு தானிரங்கி மேலுவர்
சாதியுற்றளத்திலே சமாதி கொண்டதையனே
சத்தியுள்ளடக்கமாகத் தானிருந்த தீசனே.

**3. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்**
**துண்ணின் றுற்றும் பசி.**

**(ப.)** விண்ணின்று - ஆகாயத்தினின்று பெய்யவேண்டிய காலமழை பொய்ப்பின் - பெய்யாவிடின், வியனுலகத்து - மண்ணுலகத்து, விரிநீர் - சமுத்திரநீர் சூழ்ந்திருப்பினும், பசி - பசியக்கினியானது, உண்ணின்று - தனக்குள் தானே தோன்றி, றுடற்றும் - வதைக்கும் என்பது பதம்.

**(பொ.)** சமுத்திர நீர் சூழ்ந்த மண்ணுலகமாயினும் மழைப்பெய்யாவிடின் மக்கள் வாதைக்கு உள்ளாவ ரென்பது பொழிப்பு

**(க.)** உப்புநீர் உலகை சமுத்திரமாகச் சூழ்ந்திருப்பினும் மக்களுக்குப் பயனில்லை, அச்சமுத்திர நீர் ஆகாயத்திற்கு ஏகி அதிலுள்ள உவர்நீக்கி சுத்தநீராகப் பெய்வதே பயன். ஆதலின் அந்நீர் பெய்யாமல் பொய்க்குமிடத்துள்ள சீவர்கள் சருவமும் பசியால் வருந்துமென்பது கருத்து.

**(வி.)** பசிக்கு ஆதாரம் புசித்தலும் அருந்துதலுமாம். புசித்தலுக்கும் அருந்துதலுக்கும் ஆதாரம் மண்ணும் நீருமென்னப்படும். அந்நீருள் சமுத்திர நீரை விளைநிலத்திற்குப் பாய்ச்சில் பலன்தரா. அருந்தினுந் தாகந்தீரா. ஆதலின் விரிந்து பரவிய சமுத்திரநீர் எங்கும் எக்காலத்துங் கிடைக்கக்கூடியதாயினும் சீவராசிகளுக்குப் பயனில்லை. அதனிலுள்ள உப்பை ஆகாய உப்புடன் சேர்த்துவிட்டு, சுத்த நீராகப் பெய்யும் மழையால் விளைநிலங்களில் தானியங்கள் விளைந்து சீவராசிகளுக்குப் புசிப்பளிப்பதுமன்றி அருந்துதலுக்கும் ஆதாரமாகிப் பசியாற்றி போஷித்துவருகின்றது. அத்தகைய விண்ணீர் காலத்திற்பெய்யாது பொய்த்துப் போமாயின் சருவசீவர்களும் பசியால் வருந்தி மடியுமென்று கூறியுள்ளவற்றிற்குச்

சார்பாய் திரிவாசகம் ஆக்கியாளாகும் அம்மனும் " "வானஞ்சுருங்கிற் றானஞ்சுருங்கும்" எனக் கூறிய விரிவாம்.

**4. ஏரினுழாஅ ருழவர் புயலென்னும்**
**வாரிவளங் குன்றிக்கால்**

**(ப.)** உழவர் - வேளாளர், புயலென்னும் வாரி - ஏரிநீர், வளங்குன்றி - நீர்வளங்குன்றிய, கால் - காலத்தில், ஏரி னுழாஅ - யேருழாரென்பது பதம்.

**(பொ.)** மழை பெய்யாது புயலென்னும் பெரும் ஏரி குன்றுமாயின் வயலுக்குப்பாயும் நீரற்று வேளாளர் பூமியை ஏருவிழாரென்பது பொழிப்பு.

**(க.)** காலமழைப்பெய்து பெரும் ஏரிகளில் நீர் நிறைந்துள்ளகாலத்தில் உழவர் பூமியை உழுது நீர்பாய்த்து தானியங்களை விளைவிப்பார்கள். காலமழை பெய்யாது ஏரிநீர் வற்றிப்போமாயின் மேழியர்கள் மாடு பூட்டி வயல்களை ஏருவிழா அரென்பது கருத்து.

**(வி.)** வயல்கள் சூழ்ந்த கிராமவாசிகளாகிய வேளாளர்கள் தங்கள் பண்ணைத்தொழிலைச் சரிவரச்செய்து காலமறிந்து தானியங்களை விளை வித்துத் தாங்கள் சுகம் பெறுவதுடன் ஏனைய மக்களும் சீவராசிகளும் புசித்து சுகவிருத்தி பெறுமாறு கிராமங்களுக்கருகே

பயலேரிகளை வயல்களுக்குக் காலத்திற்குத் தக்கவாறுநீரினைப் பாய்த்து நாத்துமுடி ஓங்கவும், நாத்து முடி ஓங்க கதிருகள் பெருகவும், கதிருகள் பெருக, தானியவிருத்தி யடையவும், தானியவிருத்தி பெருக குடி, படை, சகலமும் ஓங்கவும் குடிகளும், படைகளுமோங்க அரசர் சிறக்கவுமாயுள்ளது மழையினால் நிறம்பியுள்ள புயலேரிகளின் ஆதாரமேயாதலின் அத்தகைய மழைபெய்யாமலும் பெரும் ஏரிகள் நிரம்பாமலும் போமாயின் வயல்களும் வறண்டு நாத்துமுடிகளுந் தீய்ந்து, பயிறுகளும் பாழடைந்து, சீவராசிகளும் பசியால் மடியவேண்டியது மெய்யாதலின் புயலேரிகளது நீர்வளங்குன்றில் வேளாளர்கள் ஏருவிழார் களென்பது விரிவு.

*ஏரெழுபதின்* ஆக்கியோன் கம்பர் கூறியவை:

வெங்கோபக் கலிக்கடந்த வேளாளர் விளைவயலுட்
பைங்கோல் முடி திருந்த பார்வேந்தர் முடி திருந்தும்
பொங்கோதக் களியானைப் போர்வேந்தர் நடத்துகின்ற
செங்கோலைத் தாங்குங் கோல் ஏரடிக்குஞ் சிறு கோலே

பார்பூட்டுந் திசையனைத்தும் பகடுகளும் பரம்பூணா
போர்பூட்டுங் காமனுந்தன் பொருசிலைமேற் சரம்பூட்டான்
கார்பூட்டுங் கொடைதடக்கை காவேரி வளநாடர்
ஏர்பூட்டி வல்லது மற்றிரவியுந்தேர் பூட்டானே.

காவேரி என்பது குடிகளைக் காக்கும் ஏரியென்றும், புயலேரியென்பது பெருநீர்வளம் ததும்பிய ஏரியென்றும் வழங்கப்படும்.

**5. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே**

**யெடுப்பதூஉ மெல்லா மழை.**

**(ப.)** கெடுப்பதூஉங் - சீர்கெடுப்பதும், கெட்டார்க்கு - அவ்வகை சீர்கெட்டோர்க்கு, சார்வாய் - உதவியாய், மற்றாங்கே - மற்றும் அக்காலத்து, யெடுப்பதூஉம் - சீர் தூக்குவதற்கும், எல்லா மழை - காரணமாயுள்ளது மழையே என்பது பதம்.

**(பொ.)** சீவராசிகளது சீரைக்கெடுப்பதற்கும், மற்றுமவர்களுக்கு சீரளித்துக் கார்ப்பதற்கும் எல்லாமாயுள்ளது மழையே என்பது பொழிப்பு.

**(க.)** வேளாளர்கள் விளைவித்துள்ள தானியங்கள் மடியவும் அதனால் சீவராசிகள் கெடவும், மற்றும் அவ்வகை மடிந்த பயிர்கள் தலை நிமிரவும், பயிர்களோங்கவும் சீவராசிகள் சிறக்கவுமாயுள்ளது மழையே என்பது கருத்து.

**(வி.)** காலமழைப் பெய்யாவிடின் விளைவித்த விளைவும், நட்ட நடவும் மடிந்து சீவராசிகள் புசிப்பும் அருந்துதலுங்கெட்டு சீரழிவதற்குங் காரணம் மழையேயாம்.

நட்ட நடவும் விளைத்த விளைவும் முடிதிருந்தி ஓங்கவும், தானிய சம்பத்துப் பெருகவும், சீவராசிகள் யாவற்றும் சுகச்சீரடையவுமாயுள்ளதூஉம் மழையேயாம்.

ஆதலின் உலகத்தோற்றத்திற்குக் காரணம் மழையும், அதன் கேட்டிற்குங் காரணம் மழையுமே என்பது அனுபவக் காட்சியால் உணர்ந்த நாயன் கெடுப்பதுவுங் கெட்டவற்றை எடுப்பதுவும் மழையே என்று கூறிய விரிவாம்.

**6. விசும்பிற்றுளிவீழி னல்லான் மற்றாங்கே**
**பசும்பற்ற லைக்காண் பரிது.**

**(ப.)** விசும்பில் - ஆகாயத்தினின்று, துளி - மழைத் திவலையானது, வீழினல்லான் - பெய்யாமற்போமாயின், மற்றாங்கே - பூமியின்கண், பசும்புல் - பசிய நிறமமைந்த முதற்றாபரந், தலைக்காண்பரிது - தோற்றுவதரிதென்பது பதம்.

**(க)** மழையினது திவலையானது பூமியின்கண் விழாதுபோமாயின் உலகத்தில் ஓரறிவுயிராய் முதற்றோன்றும் பசும்புல்லுங் கண்களில் காண்பது அரிது என்பது கருத்து.

**(வி.)** ஓரறிவுயிரென்றும், ஈரறிவுயிரென்றும், மூவறி உயிரென்றும், நாலறி உயிரென்றும், ஐயறி உயிரென்றும் தோற்றும் எழுவகைத்

தோற்றத்துள்

தோற்றமாம் புல் முதற்றாபரமே ஓரறிவுடைய வாதியாதலின் அத்தகையப் பசும்புல் தோற்றத்திற்கே ஆதாரம் மழை என்னப்படும். அம்மழைத்துளி பூமியின் கண் வீழாமற்போமாயின் முதல் தோற்றமாம் பசும்புல்லுந் தோற்றாதென்பது விரிவு.

**7. நெடுங்கடலுந்தன்னீர்மெ குன்றுந்தடிந்தெழுவி**

**தானல்கா தாகிவிடின்.**

**(ப.)** தடிந்தெழுலி - தடித்தெழும்பு மேகமானது, தானல்காதாகிவிடின் - தன் காலத்திற்றான் பெய்யாவிடின், நெடுங்கடலும் - நெடிய கடலுக்கும், தன்னீர்மெ குன்றும் - தனது செயலுங் குன்றுமென்பது பதம்.

**(பொ.)** இருண்டெழும்பும் மேகமானது தன்காலத்தில் பெய்யாவிடின் கடலினது நீர்மெயாம் பலன் கெட்டு மணிகளுங் கொழிக்காதென்பது பொழிப்பு

**(க.)** நெடுங்கடலில் தோன்றும் பாசிமணி, பவழமணி, சிப்பி மணி முதலிய தோற்றங்களுக்கு ஆதாரம் மழையேயாதலின் காலத்திற்குக்காலம் அம் மழை பெய்யாவிடின் கடலினது நீர்மெயாம் பலனுங் குன்றுமென்பது கருத்து

**(வி.)** கடல்நீரை மொண்டு சென்ற கருமுகிலானது தனக்குள்ள உப்பை ஆகாய உப்புடன் சேர்த்துவிட்டு சூடுண்டாகி மின்னல் மீறி மோதியக்கினிக் கடாவு மிடிச்சுடருடன் தூவும் சுத்தநீரினது செயலால் கடலினது நீர்மெய் சிறப்பறுவது இயல்பாம். அதாவது கடலினது உவர்நீரில் உப்பற்ற சுத்தநீரைத் துளிர்ப்பதாயின் பவழங்கொடி பரவுவதற்கும், சிப்பிமுத்து குழூஉவதற்கும், மட்சங்கள் அகாரம் பெறுவதற்கும் நீர்மெயாம் அத்தகைய சுத்தநீர் பெய்யாமல் போமாயின் நெடுங்கடலினது நீர்மெயாம் சீர்மெயுங் குன்றுமென்பது விரிவு.

**நாயனாதிகாரர்காப்பியம்**

வானமாலியுங் காய்வதேதெனப் புவிவதைப்ப
மானமாவுற வெஞ்சுடர் மாரியே படைகொண்
டூனமாக்கென வுச்சியி லம்பிடி பொழிந்து
தான மேகரை வாக்கினசரிவுநீர் தோற்றம்
பல்லுயிர்க் கொருத்தந்தையாம் பருதியவ்வுயிரைக்
கொல்லுகுத்தலைக் கூவெனந்தாயுளத் திரங்கிச்
செல்வியை திறைத்தெரிசன மறைக்கவும் காக்குக்
கல்வியின் முலைப்பால் சுரந்தளித்தெனக் காண்டும்

**8. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**

**வறக்கு மேல் வானோர்க்கு மண்டு.**

**(ப.)** வானம் - மழையானது, வறக்குமேல் - சுருங்குமாயின், வானோர்க்கு - மக்களுட் சிறந்த தேவர்களுக்கு, சிறப்போடு உற்சாகத்துடன், பூசனை - பூசித்த லாகியச் செயல்கள் யாவும், மீண்டும் - துணிந்தும், செல்லாது - நடவாது என்பது பதம்.

**(பொ.)** வானஞ் சுருங்குமாயின் தேவர்களைக் கொண்டாடும் பூசனையுஞ் சுருங்குமென்பது பொழிப்பு.

**(க.)** ஆறாவது தோற்றமாகிய மக்கள் ஏழாவது தோற்றமாகிய தேவர்களை உற்சாகஞ்செய்தலும் பூசித்தலுமாகிய சிறப்புகள் யாவும் மழைப்பெய்யாவிடின் நடவாவென்பது கருத்து.

**(வி.)** முட்டையில் பிறப்பும், வேர்வையில் பிறப்பும், விதையில் பிறப்பும், கருப்பையில் பிறப்புமாகிய நான்குவகை யோனியுள் எழுவகைத் தோற்றங்களை ஆராய்ந்தறிந்த சமணமுனிவர்கள், கருப்பைத் தோற்ற நரரிலிருந்து மக்களும், மக்களிலிருந்து நிருவாணம்பெற்ற தேவர்களுந் தோற்றுவதைத் தெள்ளற விளக்கியுள்ளார்கள். அவர்களது சிறப்பைக் கொண்டாடுவது இந்திரர்தேய மக்களின் இயல்பாம். அத்தகையோரைக் கொண்டாடும் இயல்பின் காரணமோ வென்னில் மக்களுக்குள்ள காம்வெகுளி மயக்கங்களால் உண்டாம் பொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசையாகிய மூன்றினது ஆசாபாசப் பற்றுக்களில் ஆழ்ந்து

மாளாப் பிறவியில் தோய்ந்து துக்கத்தைப் பெருக்கிக் கொண்டே துன்பம் அடைவார்கள். காம் வெகுளி மயக்கங்களால் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசையால் உண்டாம் ஆசாபாசப் பற்றுக்களை அறுத்து மாளாப்பிறலியில் உண்டாம் பிணியினது துக்கம், மூப்பினது துக்கம், மரணத்தினது துக்கங்கள் யாவையும் அகற்றி நித்தியானந்த முற்று இரவு பகலற்ற நிருவாணம் பெற்று தேவர்களென்னும் ஏழாவது தோற்றமடைந்த பேரானந்த சிறப்பைக் கண்ணாறக் காணும் ஆறாவது தோற்ற மக்கள் அவர்களை சிறப்பிப்பதும், ஆனந்தங் கொண்டாடி பூசிப்பதும் இயல்பாம். அத்தகைய பூசிப்பும் சிறப்பும் மழையினது பெருக்கத்தால் உண்டாமேயன்றி மழை சுருங்குமாயின் இராதென்பது விரிவு.

**9. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்**
**வானம் வழங்கா தெனில்.**

**(ப.)** வானம் - மழையானது, வழங்காதெனின் - பெய்யாமற்போமாயின், தானமும் - முப்பத்திரண்டு தானங்களும், தவமிரண்டும் - ஞானசாதனமுடன் இரண்டும் நடவாமல் போவதுடன், வியனுலகம் - தேவலோகமும், தங்கா - நிலையா என்பது பதம்.

**(பொ.)** வானினது ஈகை ஒன்று குறையுமாயின் மற்ற எச்சுகமும் நிலையா என்பது பொழிப்பு

**(க)** காலமழைச் சரிவறப் பெய்யாது காய்ந்துபோமாயின் நரரது நற்செயலால் மக்களாவதும், மக்களது ஈகையின் பெருக்கத்தால் தவமிகுதியாவதும், தவமிகுதியால் தேவகதி பெறுவதும், தேவகதியால் தேவலோகம் அடைவதுமாகிய செயல்கள் யாவும் அற்று நிலைதவறிப் போமென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் காலமழை பெய்யவும் பயிறுகள் ஓங்கவும் மக்கள் சிறப்புற்றோங்குவதுமாகிய காலத்தில் சாது சங்கங்கள் சேருவதும், தானங்கள் ஈவதும், இதயசுத்தமாம் மனமாசு கழுவுதலும் நிருவாணமாம் நித்தியசுகம் பெறுகுதலும், ஏழாவது தெய்வதோற்றமடைந்து பரிநிருவாணமுற்று தேவலோகமாம் அகண்டத் துலாவி ஆனந்த சுகவாரியில் லயிப்பதுவும் இயல்பாம். அத்தகையக் காலமழை பெய்யாது ஆற்று நீர்கள் தீய்ந்து தானியங் களுமற்றுப்போமாயின் மக்கள் யாவரும் பசிபட்டினியால் வருந்தி புசிப்பிற்கு ஆதாரந் தேடுதலும், அருந்துதலுக்கு நீர் தேடுவதுமே ஓர்பெரும் விசாரமாயிருக்கு மேயன்றி தானச்செயலும் தவவிசாரிணையுமற்று நிலைகுலைவதால் நிருவாணமென்னும் சுகநிலையும் பட்டு தேவலோகமென்னும் பெயருங்கெட்டுப் பாழடைவது நிட்சயமாதலின் வானஞ்சுருங்குமாயின் தானந் தவங்களுஞ் சுருங்கி தேவலோகமென்னும் பெயரும் நிலைகுலையும் என்பது விரிவு.

## 10. நீரின் றாமையா துலகெனின் யார்யார்க்கும் வானின் றமையா தொழுக்கு.

**(ப.)** உலகெனின் - உலகமென்னும் பெரும் பேரானது, நீரின்றமையாது - நீரில்லாமல் அமையாதது போல், யார்யார்க்கும் - உலகிலுள்ள மக்கள் யாவருக்கும் உள்ள, ஒழுக்கு - நல்லொழுக்கச் செயல்கள் யாவும், வானின்றமையா - மழையில்லாமல் போமாயின் நிலைபெறா என்பது பதம்.

**(பொ.)** சருவ தோற்றங்களுக்கும் நீரே ஆதாரமாய் இருப்பது போல் மக்களுக்குள்ள சருவ நல்லொழுக்கங்கள் யாவற்றிற்கும் மழையே ஆதாரம் என்பது பொழிப்பு.

**(க.)** உலகத்தில் தோற்றும் புற்பூண்டுகள் முதல் மற்றுந் தோற்றங்கள் யாவும் அமைதற் கு நீரே ஆதாரமன்றி வேறில்லாதது போல் மக்களது ஒழுக்கங்களாம் சீலநிலைகள் யாவும் மழையின்றி நடவாதென்பது கருத்து.

**(வி.)** நீரின்றி புற்பூண்டுகள் முதல் ஈறாகவுள்ள தேவர்களென்னும் எழுவகைத் தோற்றங்களும் அமைதல் அரிதாவதுபோல் சருவ மக்களுக்கும் உள்ள நற்காட்சி, நற்கடைபிடி, நல்வாய்மெய் , நல்லூர்க்கம், நல்லமைதி, நல்லுணர்ச்சியாய ஒழுக்கங்களும், கொலை செய்யாமெய், பொய் சொல்லாமெய், களவாடாமெய்,

கள்ளருந்தாமெய், பிறர்மனை நயவாமெய் ஆகிய சுத்த தேகிகளாக வாழும் சீலங்களும் மழையில்லாமல் அமையாதென்பது விரிவு.

3. நீத்தார் பெருமெயென்னும் நிருவாணம் பெற்றோர் சிறப்பு

உலக பாசபந்த பற்றுக்களற்று உள் விழிபெற்று சருவமு முணர்ந்து சதாசுகத்தினிற்கு மகாஞானிகளது சிறப்பினை கூறுகின்ற படியால் இவ் வதிகாரத்தை நீத்தார் பெருமெயென வரைந்துள்ளார்.

**1. ஒழுக்கத்து நீத்தார் பெருமெ விழுப்பத்து**
**வேண்டும் பனுவற் றுணிவு.**

**(ப.)** விழுப்பற்று - ஆசையற்று, ஒழுக்கத்து - ஒழுக்கத்து நின்று, நீத்தார் - பற்றை அகற்றினவர்களது, பெருமெ - உண்மெய் சிறப்பு ஏதெனில், பனுவல் - புத்தாகமத்தை, வேண்டும் - உசாவிய, துணிவு - தீவிரமென்பது பதம்.

**(பொ.)** ஆசையை அகற்றி ஒழிக்கினின்று பற்றற்று உண்மெய் உணருஞ் சிறப்பு யாதெனில்: புத்தாகமத்தை ஆழ்ந்து விசாரித்தத் துணிபென்பது
பொழிப்பு,

**(க.)** பனுவலாம் புத்தாகமத்தை ஆழ்ந்து விசாரித்த அதிதீவிரத்தால் மூவாசைகளுமற்று ஒழுக்கத்தினின்று நீத்து. பெருமெயாம் உண்மெ யுணர்ந்தார்கள் என்பது கருத்து.

**(வி.)** மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூவாசைகளுமற்று நல்லொழுக்கத்து நிலைத்து தீவினை ஒழித்து உண்மெய் உணர்ந்து முநிவுறும் பெருமெய் உண்டாதற்குக் காரணம் புத்தாகமம் என்னும் பனுவலாம் ஆதிவேதம் என்பது கண்டு நீத்தாரது சிறப்பைக் கூறுமிடத்து நீத்தற்குக் காரணமாயுள்ள முதநூல் விசாரிணைத் துணிபை விளக்கியவற்றிற்குப் பகரமாக சார்பு நூலார் சூளாமணி ஆக்கியோன் தோலாமொழி தேவர் "ஆதிநாளரசர் தங்கலருங்குல அமைந்துமாக்கி, யோதநீருலகின் மிக்க ஒழுக்கமுந் தொழிலுந்தோற்றித், தீது தீர்ந்திருந்த பெம்மான் திருவடி சாரச்சென்று, நீதி நூற்றுலங்கக்காத்து நிலந்திருமலரநின்றான்" என்பவற்றுள் (பனுவல்) என்பது நூலின் பெயரென்பதை பின் கலைநிகண்டின் ஆக்கியோன் மண்டல புருடன் தந்துரைபுனைந்துரைத்தல் சார்ந்த பாயிரத்தினோடு, முந்திய பதிகமேநூன் முகமுக உரையுமப்பே, ரந்தமாமாகமத்தோடாரிடம் பிடகமற்றுந் தந்திரம் பனுவலோடு சமயஞ்சூத்திரமு நூற்பேர்" என்பதின் ஆதாரமே வேண்டும் பனுவலின் விரிவாம்.

**2. துறந்தார் பெருமெ துணைக்கூறின் வையத்**
**திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.**

**(ப.)** துறந்தார் - பற்றற்றவர்களின், பெருமெ - சிறப்பிற்கு, துணைக்கூறின் - உவமெய்க்கூறவேண்டின், வையத்து பூமியின்கண்,

இறந்தாரை - மரணமடைந் தோரை, எண்ணிக்கொண்டற்று - இத்தனையோரெனக் கணக்கெடுப்பதற்கு ஒக்கும் என்பது பதம்.

**(பொ.)** பற்றற்ற மகாஞானிகளின் சிறப்பினைக் கூறப்புகுவது பற்றும் மிகுத்திறந்தவர்களை எண்ணிப்பார்ப்பதொக்கும் என்பது பொழிப்பு.

**(க)** பூமியின் கண் தோன்றி தோன்றி இறந்தவர்களின் கணக்கைக் கண்டறியக் கூடாததைப் போல் துறந்த மகாஞானிகளின் சிறப்பை எடுத்துக் கூறுதலும் அரிதென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றி மறையும் மநுமக்களில் ஓர் குடும்பத்தில் பிறந்த போதே இறத்தலும், பாலதானத்தில் இறத்தலும், குமரதானத்தில்

மிக்க அரிதாயிருக்க பூமி எங்கணுந் தோன்றி தோன்றி இறந்தவர்களின் கணக்கைக் கண்டெடுப்பது இயலாதது போல் உலக பாசபந்த பற்றுக்களினின்று துறந்த மகாஞானிகளது சிறப்பையும் அவர்களது மகத்துவத்தையும், அவர்களது நித்தியானந்தத்தையும், அவர்களது என்றும் அழியா நிலையையும் எடுத்துக்கூற இயலாது என்பவற்றிற்குப் பகரமாக சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "பற்றார் வஞ்செற்ற முதலாகப் பாம்புரிபோன், முற்றத்துறந்து முனிகளாயெல்லாரு, முற்றுயிர்க்குத் தீம்பால்

சுரந்தோம்பியுள்ளத்து, மற்றிருள் சேரா மணி விளக்குவைத்தாரே என்றும், வாசிஷ்டம் சரமன மலர்மழையை ஒக்குந் தழற்பள்ளி பனிநீரில் சயனம் ஒக்குஞ், சிரமறிதல் சுகமுறு நித்திறையை ஒக்குந் தெகமறிவது கலவைச் செறிப்பூச்சொக்கும், நிரவதிகநாராச மருமம்பாய்தநெடுங்கோடைச்சிவிரியினன் னீரை ஒக்கும், விரகரியவிடயமெனும் விடவிடூசி விவேகமிகுத்தவர்க்கலால் விலக்கொணாதே என்றுஞ் சார்பு நூலோர் கூறிய விவேகமிகுத்தத் துறவோர் சிறப்பைக் கூறுதற்கு இயலா என்பது விரிவு.

**3. இருமெ வகை தெரிந்திண் டறம்பூண்டார்**
**பெருமெ பிறங்கிற் றுலகு.**

**(ப.)** இருமெய் - யாக்கை இரண்டினுடையவும், வகை தெரிந்து கூறுபாடுகளை அறிந்து, யீண்டறம் - மீண்டுந் தன்மத்தைச் செய்ய, பூண்டார் - உறுதி கொண்டோரே, உலகு - பூமியின் கண், பிறங்கில் - மேலாய், பெருமெய் - சிறப்பு மெய்பெற்றார்களென்பது பதம்.

**(பொ.)** அந்தரங்கம் பயிரங்கமென்னும் இருவகை யாக்கையை உணர்ந்து சத்திய தன்மத்தில் நடப்போரே உலகத்தில் சிறந்தோர்களென்பது பொழிப்பு

**(க)** உண்மெய் புறமெய்யென்றும், அந்தரங்கம் பயிரங்கமென்றும், பரிநிருவாண காலத்தில் விளங்குபவற்றின் வகைதெரிந்து நீதிநெறி

ஒழுக்கத்தில் நிலைப்பவர்களே இவ்வுலகத்தை சிறப்படையச்செய்து தாங்களும் சிறப்புற்று உலாவுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றியுள்ள மக்கள் பஞ்சஸ்கந்தத்தால் ஒருமெய் அமைந்திருப்பினும் ஆசாபாசப் பற்றறுத்து உள்ளமைந்த ஆற்றலால் புளியம்பழம்போலும் ஓடுபோலும் புழுப்போலும் விட்டில் போலுமுள்ள இருமெயின் பிரிவை உண்மெய், புறமெய் என்றும், அந்தரங்கம், பயிரங்கமென்றும், அழியாக்கை, அழியாயாக்கைகளை இருமெய் என வழங்கி வந்தவற்றை பரிநிருவாணமுற்ற இருபிறப்பாளர் வரைந்தவைகளாயினும் மற்றுமுள்ளோர் உலாவும் உடலென்றும் ஊழ்க்காக்கும் உடலென்றும் இருமெயாக வழங்கியவற்றை ஞானக்குறளாக்கியோளாகும் அவ்வை "உணர்வாவ தெல்லாம் உடம்பின் பயனே உணர்கவுணர் உடையா" என்றும், வெள்ளி பொன்மேனிய தொக்கும் வினையுடைய உள்ளுடம்பினாய ஒளி" என்று கூறியவற்றிற்குப் பகரமாக சூளாமணி ஆக்கியோன் தோலாமொழி தேவர் "ஒருவனதிரண்டு யாக்கை யூன் பயினரம் பின்யாத்த, உருவமும்புகழுமொன்றாங் கவற்றினூழ்காத்து வந்து, மருவிய உருவமிங்கே மறைந்துபோ மற்றயாக்கை, திருவமர்ந்துலகமேத்தச் சிறந்த பின்னிற்குமன்றே" என்றும் நன்னூலாக்கியோன் பவணந்திமுனிவர் "ஒற்றுமெ நயத்தினென்றெனத் தோன்றினும், வேற்றுமெ நயத்தின் வேறேயுடலுயிர்" என்றும், அறநெறிச்சார

வாக்கியோன் முனைப்பாடியார் "தன்னொக்குந் தெய்வம் பிறிதில்லை தான்றன்னை, எழுத்தெண்ணே நோக்கி (இருமெயுங்) கண்டாங், கருட்கண்ணேநிற்பதறிவு" என்றும், சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "உள்பொருளிதுவென உணர்தன்ஞானமாந், தெள்ளிதிநப்பொருடெளிதல் காட்சியாம், விள்வர (விருமெயும்) விளங்கத் தன்னுளே, யொள்ளிதில் தரித்தலை ஒழுக்கமென்பவே" என்றுங் கூறியுள்ள சார்பு நாற்களாலும் இருபிறப்பால் உண்டாம் இரு மெவகைதெரிந்து அறம்புரிதலே உலகிற்குந் தனக்கும் சிறப்பென்பது விரிவு

**4. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்**
**வரனென்னும் வைப்புக்கோர் வித்து.**

**(ப.)** உரனென்னும் - அறிவென்னும், தோட்டியான் - கதவினை கொண்டு, ஓரைந்தும் - மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐந்தினையும், காப்பான்
என், வரனென்னும் - தண்மெயாம், வைப்புக்கோர் - பெருமெ பெருதற்கோர், வித்து - ஞானவிதைக்கொப்பாவானென்பது பதம்.

**(பொ.)** தனது அறிவையே கதவாகக்கொண்டு ஐம்புலன்களை அடைப்போன் பற்றற்று சாந்த சொரூபியாதற்கு ஓர் வித்தென்னப்படுவான்.

**(க.)** இரசோகுணம் தமோகுணம் இரண்டும் அற்று சத்துவகுணமாம் பிரம்மநிலை விரிதற்கு விதையாவது யாதெனில் ஐம்புலனை அடக்கும்
அறிவென்பதுவே கருத்து.

**(வி.)** மெய்யுணர்ச்சியின் அவாவினையும், கண்பார்வையின் அவா வினையும், மூக்கால் முகர்ந்த அவாவினையும், நாவினால் உருசித்த அவாவினையும், செவியினாற்கேட்ட அவாவினையும் பற்றிச்செல்லும் ஐந்துவாயல்களே கேட்டின்வழியென்று அறிந்து அவ்வாயல்களை அடக்கும் அறிவென்னுங் கதவினைகொண்டடைத்து வரனென்னும் பிரம்மமாம் சாந்தத்தை நிறப்பும் முத்திக்கு வித்தென்பது விரிவு.

**5. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்க் கோமா**
**னிந்திரனே சாலுங் கரி**

**(ப.)** ஐந்து - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் வழிகளைந்தினையும், அவித்தான் - அடக்கினவனது, ஆற்றல் - சுகநிலையை சொல்லவேண்டின், அகல் - அகண்ட, விசும்புளார்க்கு - வானுலகோர்க்கு கோமான் - அரசனாக விளங்கும், இந்திரனே - புத்தபிரானே, சாலும் - போதுமான, கரி - சாட்சியென்பது பதம்.

**(பொ.)** பொறிவாயல் ஐந்தினையும் அவித்தவனது சுகநிலையை அறியவேண்டின் புத்தேளுலகுக்கு அதிபதியாம் புத்தரே போதுஞ் சாட்சி யென்பது பொழிப்பு

**(க.)** பொய்தீர் ஒழுக்கத்தினின்று பொறிவாயல் ஐந்தினையும் அவித்து ஆதிதேவனாக விளங்கி அவரால் தெய்வநிலை அடைந்த வானவர்கள் யாவருக்கும் அரசனாக விளங்குவதை ஆதிசாட்சியாகக் கொண்டு ஐந்தவித்தலின்
ஆற்றலுக்கு இந்திரனேபோதுஞ் சாட்சி என்பது கருத்து.

**(வி.)** மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்தினையும் அவித்த வல்லபங்கொண்டு ஐந்திரர் என்னும் பெயர்பெற்று ஐ, அ. ஆகத்திரிந்த வடவட்சர பேதத்தால் இந்திரரென வழங்கியதும் அப்புத்தபிரானாகிய இந்திரரே வானவர்களாம் தேவர்களுக்கெல்லாம் அரசனுங் குருவாகவும் விளங்கியதுமன்றி இத்தேசமெங்கும் புத்தபிரானையே இந்திரரென பூசித்து அரசமரத்தடியிலும் அறப்பள்ளிகளிலும் இந்திரவிழாக்கள் கொண்டாடி வந்த ஓர் பேரானந்தத்தால் இந்திரரைக் கொண்டாடியக் குடிகளை இந்தியர்களென்றும், கொண்டாடுந் தேசத்தை இந்திய தேசமென்றும் சிறப்புப் பெற வழங்கியவற்றிற்குப் பகரமாக சார்பு நூலார் அருங்கலைச்செப்பு " இந்தியத்தை வென்றான் றொடர்பாட் டோடாரம்ப, முந்தி துறந்தான் முநி" என்றும், அறநெறிச்சார

ஆக்கியோன் முனைப்பாடியார் " இந்தியக் குஞ்சரத்தை ஞானப் பெருங்கயிற்றால், சிந்தினைத் தூண்பாட்டிச் சேர்த்தியே - பந்திப்பர், இம்மெப்புகழும் இனிச்சொல் கதிப்பயனும், தம்மெத்தலைப்படுத்துவார்" என்றும், மணிமேகலை ஆக்கியோன் சாத்தனார் "இந்திர ரெனப்படு மிறைவநம்மிறைவன் தந்த நூற் பிடகமாத்தி காயமதன்" என்றும், ஐம்பொறிகளை அவித்துப் பெண்ணாசையை ஒழித்தவர்களுக்கே இந்திரரென்னும் பெயர்வாய்க்கும் என்பதை சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கத்தேவர் "ஆசையார்வமோடைய மின்றியே, யோசை போயுலகுண்ண நோற்றபி, னேசுபெண்ணொழித் திந்திரர்களாய்த், தூயஞான மாய்த் துறக்கமெய்தினார் என்னும் ஆதாரங்கொண்டு ஐந்தவித்தவர்களின் சிறப்பை அறியவேண்டில் இந்தியத்தை வென்ற வானவர்க்கரசனாம் இந்திரரே போதுஞ்சாட்சியென்பது விரிவு.

**6. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**

**செயற்கரிய செய்கலா தார்.**

**(ப.)** பெரியார் - விவேக மிகுத்தோர், செயற்கரிய - யாவரும் செய்யற்கியலா ஞானசாதனங்களை, செய்வார் - முகிப்பார்கள், சிறியர் - விவேக மில்லாதவர்களோ, செயற்கரிய - செய்தற்கரிய ஞானசாதனங்களை, செய்கலாதார் - செய்யார்களென்பது பதம்.

**(பொ.)** விவேகமிகுத்தோர் செய்தற்கரியக் காரியங்கள் யாவையுஞ் செய்வார்கள். விவேகமில்லாதவர்களோ எளிதிற் செய்யக்கூடிய

காரியங்களையும் செய்யார்களென்பது பொழிப்பு.

**(க.)** அறிவின் விருத்திபெற்ற பெரியோர்கள் புலன் தென்பட உசாவி தென்புலத்தோராகி சகலராலுங் கொண்டாடப்படுவார்கள். அறிவின் விருத்தியற்ற சிறியோர்கள் எடுத்த காரியங்களையே முடிக்கவியலாது சகலராலும் இழுக்கடைவார்களென்பது கருத்து.

**(வி.)** ஞானமென்னும் அறிவின் மிகுத்தோர்களையே பெரியோர் களென்றும், அஞ்ஞானமென்னும் அறிவிலிகளையே சிறியோர்களென்றுங் கலைநூலோர் கூறியவற்றிற்கியைய வழிநூலாரும் ஞானமிகுத்தப் பெரியோர் செயற்கரியக் காரியங்கள் யாவையும் எளிதில் முடிப்பார்களென்றும் அஞ்ஞானிகளாகிய சிறியோர்கள் எளிதில் முடிக்குங் காரியங்களையு முடிக்கார்களென்பதற்குச் சார்பாக முதுமொழி

ஞானமின்றிச் செய்தவந் தவமுமன்று / நயஞானமில்லாத தருமந் தருமமன்றே

ஆன தெருண ஞானமிலாத் தவமே செய்தல் அழுக்கறவிற் கழுவுதலு மாகுமின்னும்

மானமுறு ஞானமிலாத் தரும மிக்க / மறுவுள்ள மணியாக விருக்குமென்று

மோன முறுந் தவமுனிவர் முன்னந்தானே முயற்சியுடன் கண்டறிந்த முறைமெயாமே

என்றும் விவேமிகுத்தப் பெரியோர் புகழ்ச்சியையும் அவிவேகிகளாம் சிறியோர்கள் இகழ்ச்சியையுங் கூறிய விரிவாம்.

**7. சுவையொளி யுரோசை நாற்றமென் றைந்தின்**
**வகைதெரிவான் கட்டே யுலகு.**

**(ப.)** சுவை - உருசித்தலுக்கும், ஒளி - பார்த்தலுக்கும், ஊரு - பரிசித்தலுக்கும், ஓசை - கேட்டலுக்கும், நாற்றம் - முகர்தலுமாம், என்றைந்தின் - ஐந்திற்கும் ஆதாரமாயுள்ளவை யெவையென, வகைதெரிவான் - அதனிலையைத் தெரிந்து கொண்டவன், கட்டே - இடத்தே, உலகு - உலகம் அடங்கியுள்ள தென்பது பதம்.

**(பொ.)** ஐம்புல நுகற்சிக்கும் ஆதாரம் ஈதீதென்று அறிந்துகொண்டவனிடத்தே உலகம் அடங்கியுள்ளதென்பது பொழிப்பு

**(க.)** நாவினாற் சுவைத்து அறியும் நிலையையும், கண்ணினாற் கண்டறியும் நிலையையும், ஊரினால் உணர்ந்தறியும் நிலையையும், செவியினாற் கேட்டறியும் நிலையையும், நாசியினால் முகர்ந்தறியும் நிலையையும் கண்டடைந்தவனிடத்தே உலகம் ஒடுக்கமென்பது கருத்து.

**(வி.)** கண்ணானது பார்க்கும் புலனையுடைத்தாயினும் மனமானது வேறுவிவகாரத்தில் நிலைக்கின் பார்வை அற்றுப்போம். நாவானது

சுவைக்கும் புலனை யுடைத்தாயினும் மனமானது வேறு விவகாரத்தில் நிலைக்கின் சுவையற்றுப்போம். தேகமானது ஊரும் புலனையுடைத்தாயினும் மனமானது வேறுவிவகாரத்தில் நிலைக்கின் உணர்ச்சி அற்றுப்போம். செவியானது கேட்கும்புலனையுடைத்தாயினும் மனமானது வேறுவிகாரத்தில் நிலைக்கு மாயின் சப்தமற்றுப்போம். மூக்கானது முகரும் புலனையுடைத்தாயினும் மனமானது வேறு விவகாரத்தில் நிலைக்குமாயின் நாற்றமற்றுப்போம். இத்தகைய ஐம்புல நுகர்ச்சிக்கும் ஆதாரமாயுள்ளமனமே புருடனென்றுணர்ந்து அதனவாவாம் மாசினைக் கழுவி பற்றற்றவனது உள்ளங்கண்ணாடியின் கண் உலகமொடுங்கிசருவமுந் தனக்குள் தோன்றி செல்லல், நிகழல், வருங்கால மூன்றினையும் விளக்குகின்றபடியால் புலனைந்தின் வகை தெரிவானிடத்தே புழுப்பூச்சுக்கள் முதல் மக்கள் வரை ஒடுக்கமென்பதை விளக்குமாறு புலனைந்தின் வகைதெரிந்த தென்புலத்தானிடத்தே உலகம் அடங்கியுள்ளதற்குப் பகரமாக தேவிகாலோத்திரம் "யோகியாகி யொழுகுமியல்பினோன், போகமாற்றிப் பொருண்மேற் பொறிகளை, வேகமான பயமும் வியப்பும் போய், மாகர்காண சுகத்தை மருவுவான்" என்றும் வாசிஷ்டம் "பெருகத் திரண்ட முகில்களெல்லாம் பெருங்காற்றாலே யொதுங்குதல் போல், வருகற்பனை நாசத்தாலே மனம் போயிறக்கு மனமிறந்தால்,

பொருகற்பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத்து, முருகச்சுடு பன்னிரு கதிருமொருகால் வரினுமிடருண்டோ " என்றும் நாலடி நாநூறு "மெய்வாய் கண்மூக்கு செவியெனப் பெயர்பெற்ற, வைவாய வேட்கைக் - கைவாய, கலங்காமற் காத்துய்க்கு மாற்றலுடையான், விலங்காது வீடுபெறும்" என்றும் அறநெறிச்சாரம் "தன்னைத்தன்னெஞ் சங்கரியாகத் தானடங்கின், பின்னைத்தா னெய்தாநலனில்லை-தன்னைக், குடி கெடுக்குந் தீநெஞ்சிற் குற்றேவல் செய்தல், பிடிபடுக்கப்பட்ட களிறு" என்றும்ஐ ம்புலநிலையாங் குணவமைதிகொண்டோனிடத்தே உலகம் அடங்கிற்றென்பது விரிவு.

### 8. நிறைமொழி மாந்தர் பெருமெ நிலத்து
### மறைமொழி காட்டி விடும்.

**(ப.)** நிறை மொழி - மலைவுபடா வார்த்தையினையுடைய, மாந்தர் - முனிந்தோரது, பெருமெய் - அந்தரங்கத்தை, நிலத்து - பூமியின்கண் கூறவேண்டின், மறைமொழி - புத்தாகம் மொழிகளே, காட்டிவிடும் - நிரூபிக்குமென்பது பதம்.

வபா மலைவுபடா வார்த்தையினை உடைய முனிவரது உண்மெய்யை . விளக்கவேண்டின் அவரால் போதித்துள்ள முப்பேத மொழிகளாம் திரிபீட வாக்கியங்களே அவற்றைக் காட்டிவிடுமென்பது பொழிப்பு.

**(க.)** ஞானமணிகளாம் புதைப்பொருளமைந்த மொழியினையுடைய முனிவரது பெருமெயை பூமியின் கண்கூறவேண்டின் அவர்களால் கூறியுள்ள மறைமொழிகளே விளக்கிவிடுமென்பது கருத்து.

**(வி.)** மறைமொழிகளாம் பாபஞ்செய்யாதிருங்கள், நன்மெய் கடைபிடியுங்கள், உங்களிதயத்தை சுத்தி செய்யுங்கோளென்னுந் திரிபேத வாக்கியங்களே உலக மக்கள் சீர்திருத்தங்களுக்கு திரிபீடங்களாகவும், விளங்கி மும்மொழிகளில் யாதொன்றைப்பற்றின் அஃது முற்றி முத்திப்பேறாம் நிருவாணத்திற்குக் கொண்டுவரு கிறபடியால் அவற்றை உணர்ந்த வழி நூலார் பூமியின் கண் நிறைமொழி மாந்தரின் பெருமெயை அறியவேண்டின் மறைமொழியின் பயனே அவற்றிற்குச் சான்றெனக் கூறியுள்ளவற்றைக் கண்டு சூளாமணி என்னுஞ் சார்பு நூலார் தோலாமொழி தேவர்" ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை, போதியங்கிழவனை பூமிசை யொதுங்கினை, போதியங் கிழவனை பூமிசை யொதிங்கிய, சேதியென் செல்வனின்றிருவடி வணங்கின" என்னுந் தொழுகினைக்காதாரமாம் முனிவனும் அவரால் ஓதிய மறைமொழியுமே போன்ற ஆதாரமென்பது விரிவு.

**9. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி**

**கணமேயுங் காத்த லரிது.**

**(ப.)** குணமென்னும் - சாந்த குணமென்னும், குன்றேறி - மலைமீதேறி, நின்றார் - நிலைத்தவர்களது, வெகுளி - கோபமானது, கணமேனும் - கண்ணிமைப்பொழுதேனும், காத்தல் - நிலைத்தல், அரிது - அரிதென்பது பதம் .

**(பொ)** சாந்த குணமே நிலையாக நின்ற தண்மெய் மிகுத்த அறவோர்களுக்குத் தோற்றும் கோபமானது கண்ணிமைப் பொழுதேனும் அவர்களிடம் நிலைக்காதென்பது பொழிப்பு

**(க.)** இரசோகுணம், தமோகுணம் இரண்டும் நசிந்து சத்துவகுணம் நிலைத்த சாந்தரூபிகளாம் அந்தணர்களுக்கு பூர்வபழக்க வெகுளி தோன்றினும் அவ்வெகுளி சாந்தம் நிறைந்தவர்களிடம் கணமேனும் நிற்காதென்பது கருத்து.

**(வி.)** சாந்தகுணமாங் குன்றின் மீதேறி சகல பாசபந்த பற்றுக்களுமற்று நிருவாணநிலை நிலைத்தவர்களுக்கு ஏதோ முன்பழக்கவசத்தால் கோபங் கொள்ள நேரினும் சாந்தகுணமே உருவமைந்த நிலையில் நூதனமாக வந்து கலக்குங் கோபமானது ஒரு கணப்பொழுதேனுந் தரித்து நிலையாது என்பதற்குப் பகரமாக அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "மெய்மெய் பொறையுடைமெய் மேன்மெ தவமடக்கம், செம்மெயொன்றின்மெ

துறவு டமெ -நன்மெய், திறம்பாவிரதந் தரித்தலோடின்ன அறம் பத்து மான்ற குணம்"

அமைந்த சிறப்பின் விரிவு.

**10. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குந்**
**செந்தண்மெய் பூண்டொழுக லால்.**

**(ப.)** அந்தணரென் போர் - அந்தணரென் றழைக்கப்படுவோர், அறவோர் - சமணமுநிவரிற் சிறந்த தன்மசொரூபிகளே யாவர் (எவ்வகையிலென்னில்), எவ்வுயிர்க்கும் - சருவ வுயிர்களின் மீதும், செந்தண்மெய் - செவ்விய சாந்தநிலை யமைந்து, பூண்டொழுகலால் - கார்த்துவருதலா லென்பது பதம்.

**(பொ)** சருவசீவர்களாம் புழுப்பூச்சுகள் முதல் மக்களீராகவுள்ள தோற்றங்களின்மீது அன்புபாராட்டி காக்கும் கருணை நிறைந்த சாந்தரூபிகள் யாரோ அவர்களையே அந்தணர்களென்று அழைக்கப்படுவதென்பது பொழிப்பு

தண்மெயாம் சாந்தநிறைவால் சருவ உயிர்களையுந் தன்னுயிர்போல் கார்த்து தாங்களடைந்த சுகநிலையாம் நிருவாணத்தை மற்றய மக்களும் சுகிக்க வேண்டுமென்னும் அன்பின் பெருக்கத்தால் அந்தணர்களென்னும் பெயரைப் பெற்றார்களென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றியுள்ள மனுக்களில் எத்தேச எப்பாஷைக் காரனாயிருப்பினும் தன்மத்தைப் பூர்த்தி செய்து தண்மெமிகுத்த சாந்த நிறைவால் சருவ உயிர்களுக்கும் தண்மெயுண்டாம் அன்பு கொண்டு சங்கங்களை நாட்டி சத்தியதன்மத்தை ஊட்டி சதா சுகத்தில் நிலைக்கச் செய்யும் சாந்தரூபிகளையே அறவோர்களென்றும், அந்தணர்களென்றும் அழைக்கப் பெற்றதற்குச் சார்பாய் சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கதேவர் "திருமறுமார்பனை திலகமுக்குடையனை, யருமறை தாங்கிய வந்தணர் தாதையை, யருமறை தாங்கிய வந்தணர்தாதைநின், னெரிபுரைமரைமலரிணையடி தொழுதும் என்றும் சங்கத்து சமணமுநிவருள் தோன்றியுள்ள அந்தணர்கள் யாவருக்கும் தாதையாக விளங்கும் புத்தபிரானே ஆதி அந்தணரென்பது போன்ற விரிவாம்.

## 4. அறத்தினது வலிதென்னும் தன்மத்தின் சிறப்பு

அதாவது சாக்கைய முநிவரால் போதித்துள்ள அறத்தால் மெய்ப் பொருளும், மெய்ப்பொருளால் பேரின்பமும், பேரின்பத்தால் வீடுபேறும் உண்டாமென்பதினால் விளங்கும்.

**1. சிறப்பீனுஞ் செல்வமுமீனு மறத்தினூஉங்**
**காக்க மெவனோ வுயிர்க்கு.**

**(ப.)** உயிர்க்கு - மக்களுக்கு, சிறப்பீனும் - அழியாப் புகழைத் தருதற்கும், செல்வமுமீனும் - அழியாப்பொருளை பெறுதற்கும், அறத்தினூஉங் - தன்மத்தை விட ஆக்க - ஆதரிக்கக்கூடியவன், எவனோ - வேறெவனாயினு முளனோ வென்பது பதம்.

**(பொ.)** மக்களுக்கு அழியா சிறப்பைத் தருதற்கும், மெய்ப்பொருளை விளக்குதற்கும் ஆதாரமாயுள்ளது தன்மமேயன்றி வேறொருவனாலும்
ஆகாதென்பது பொழிப்பு.

**(க)** தன்னைத் தலைமெயாக்கிக் கொள்ளுவதற்கும், தன்னை அடிமையாக்கிக் கொள்ளுவதற்குந் தனது ஈகையும் அன்புமே ஆதாரமாயுள்ளது போல தான் பெறும் அழியாப்புகழுக்கும், அழியாப்பொருளுக்கும் தனது தன்மமே துணையன்றி வேறொரு வரும் துணையாகாரென்பது கருத்து.

**(வி.)** ஆனந்த ஈகையும், அன்பின் பெருக்கமும், சாந்த உருவமுமே பரிநிருவாண சுயம்பிரகாச தோற்ற தேவர் தன்னுருவமாதலின் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் அவாவாம் பற்றினை அறுத்தற்கு மூலம் தன்மமென்றறிந்த மேலோர் தன்னைத்தானறிந்து அடங்கற்குத் தானே தானே தலைவனாதலின் தனதழியாமெய்ப் புகழுக்கும், தனதழியாமெய்ப் பொருளுக்கும் தனது தன்மமே ஆதாரமன்றி வேறொருவனும் ஆதாரமில்லை யென

உணர்ந்து வரைந்துள்ள வற்றிற்குப் பகரமாக அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "தனக்குத் துணையாகித் தன்னை விளக்கி, இனத்து ளிறைமெயுஞ் செய்து - மனக்கினிய, போகந்தருதலாற் பொன்னே அறத்துணையோ, டேகமானண்பொன்றுமில்" என்றும், மகாபுராணம் "இத்துணைத்தரும் தானங்களிம்மெயின், மெத்திய செல்வமுஞ்சுதருமேவி நீண், முக்கியின் மான மேற்பொலிவர் மூதுரைப் பத்தியின்றானமே பலிக்க வேண்டுமால் என்றும், சிவதன் மோத்திரம் "மகவினை யாலாகத்தின் வருத்தந்தன்னான் மாநிதியான் மற்றுமுள பொருள்களாலுந் தகைபெறு வானவராலுங் காதலின்றேற் சாதிக்கப்படுவதன்று தருமந்தானே, பலகையறவாதரவாற்சிறிதே தேனுமுதவியிடிலறமதனாற் பெரிதுண்டாகும், அகநெகலுமாதரவுமதியா தாரென்றறியாதாரென் பெறுவரன்னோவன்னோ " என்னும் தன்மமே சகலசீருக்கும் சுகத்திற்கும் ஆதாரமென்பது விரிவு.

**2. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை**

**மறத்தலினூங் கில்லை கேடு.**

**(ப.)** அறத்தினூஉங் - தன்மத்திற்கு மேற்பட்ட ஆக்கமும் - சுகாதாரமும், இல்லை - வேறொன்றுங் கிடையாது, அதனை - அத்தன்மத்தை, மறத்தலினூங் - தன்மத்தைச் செய்யாது

மறந்துவிடுதலினும், கேடு - சீர்கேடு, இல்லை - வேறொரு கேடுமில்லை யென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தைவிட வேறொரு சுகாதாரமுங் கிடையாது. அதனை மறந்திருப்பதைவிட வேறொரு கேடுங் கிடையாதென்பது பொழிப்பு.

**(க.)** பொருளாசையற்று சருவ உயிர்களின் மீதும் அன்பு பாராட்டி தன்மம் புரிதலே தனது சுகச்சீருக்கு ஆதாரமென்றும் பொருளாசை யுற்று, சீவகாருண்ய மற்று, லோபியெனத் திரிவதே சகல சுகக்கேடுகளுக்கும் ஆதாரமென்பதூஉங் கருத்து.

**(வி.)** மக்கள் அவாவின் பெருக்கத்தால் ஈகையற்று பாசபந்தக் கட்டுக்களாம் வாணமுற்று மாறாப்பிறவியிற் சுழன்று தீரா துக்கத்தை அநபவித்துவருதலே பெருங்கேடாக முடிவதும், மக்கள் அவாவினையொழித்து ஈகைநிலைத்து பாசபந்தக்கட்டுக்களை அறுத்து நிருவாணம் பெற்று பிறவியென்னும் சமுத்திரத்தைக் கடந்து சதாசுகத்தில் நிலைக்கச் செய்வதுமாய அறத்தினது வலியையும் அதனது மெலிவையும் ஆராய்ந்தறிந்த மேலோர் தன்மத்தை விட வேறொரு சுகவழியும் இல்லையென்றும் அதனை மறத்திலினுங் கேடு மற்றொன்று மில்லையென்றுங் கூறியுள்ளவற்றிற்குப் பகரமாக அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "குறைக்கருமம்

விட்டுரைப்பிற்கொள்ளவுலவா, அறக்கரும் மாராய்ந்து செய்க - பிறக்கடைக்கோ, நெஞ்சே மாப்பில்லாதான் வாழ்க்கை நிரயத்துத் துஞ்சாத்துயரந்தரும்." என்றும், "ஈட்டியவொண்பொருளு மில்லொழியும் சுற்றத்தார், காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர் - மூட்டு, மெரியினுடம் பொழியும் ஈர்ங்குன்ற நாட, தெரியி னறமே துணை" எனக் கூறியுள்ள சார்பே போன்ற விரிவு,

**3. ஒல்லும் வகையா லறவினை யோவாதே**
**செல்லும்வா யெல்லாஞ் செயல்.**

**(ப.)** ஒல்லும் வகையால் - தன்ம நூலையுணர்ந்த வழியால், அறவினை - தன்மச்செயலை, யோவாதே - மறவாமல் செல்லும்வாய் - கூடியவரையில், யெல்லாம் - சோர்வுறாது. செயல் - செய்யவேண்டு மென்பது பதம்.

**(பொ.)** மக்கள் அறநூலை வாசித்தவழியால் தங்களாலியன்றவரையில் தன்மத்தை மறவாது செய்ய வேண்டுமென்பது பொழிப்பு.

**(க.)** தங்களால் தன் மநூற்களை வாசித்தள
ம் , அறவுரைக் கேட்ட அளவிலும், தனக்குள்ள வரையிலும், தன்னாற்கூடியவரையிலும் அன்பு கொண்டு அறவினைச் செய்யவேண்டுமென்பது கருத்து.

**(வி.)** முநிவரால் ஓதிவைத்துள்ள முதநூலை உணர்ந்தவகையால் அறச் செயல்களை என்றும் மறவாது நற்கடை பிடியிலும், நல்லூர்க்க த்திலும், நல்வாய்மெயிலும் நின்று சோர்வின்றி தன்மத்தைச் செய்யக் கூடியவரையில் செய்ய வேண்டுமென்று வரைந்துள்ளவற்றிற்குப் பகரமாக அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "இன்சொல்விளை நிலமா யீதலே வித்தாகி, வன்சொற் களைகட்டு வாய்மெ யெருவட்டி, அன்புநீர் பாய்ச்சி அறக்கதி ரீன்றதோர், பைங்கூழ் சிறுகாலைச்செய் என்றும், மகாபுரான புன்முதற் பிறப்பெலாங்கடந்து, பொருவின் மானிடத்தொழிலுடன் பிறந்தருள் பூத்து, மருவுகண்டுயிலிளமெ மூப்பொரி இத்தருமத்தி, னுரிமெயிற் செய்து மென்றிட லயம் புரிந்தோங்கும்" என்றும், "போதமேவியகாதை கேட்டிருந்தவம் புரியா, ரேதமேவிய நரகத்தினழுந்துவரியம், னாதி நாட்டொடர்ந்தற்றமே நோக்குவனதனாற், பேதையீரறம் புரிந்திடு மென்மறை பேசும் என்று கூறியுள்ளவைகளே அறநூலை உணர்ந்து செய்யும் அறச்செயல் களௌன்பது விரிவு.

### 4. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
### னாகுல நீர பிற.

**(ப.)** மனத்துக்கண் - உள்ளத்தினிடத்தே, மாசிலனாதல் - களங்க மற்றவனென்று, பிற - அன்னியரால் கண்டறிவதற்கு, ஆகுல -

ஆனந்தத்துடனும், நீர - தண்மெயுடனுஞ் செய்யும், அனைத்தற - அவனது சகல தன்ம கன்மங்களாலும் விளங்குமென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தைச் செய்வோன் மனமாசில்லாதவனெனக் கண்டறிதற்கு அவனால் செய்யுஞ் சகல தன்மங்களை ஆனந்தமாகவும், பொருமெயுடனும் செய்வதே போதுஞ் சான்றென்பது பொழிப்பு.

**(க.)** ஆரவாரமாம் பேரானந்தத்துடனும் பெருகிய சாந்தத்துடனுமிருந்து ஒருவன் செய்துவரும் சகல தன்மகாரியங்களினாலும் உள்ளக்களங்க மற்றவனென்னுங் குறிப்பைக் காட்டுங் கருத்து.

**(வி.)** தன்மஞ்செய்வோன் தன்னைப் பணக்காரனென்று பல்லோறியக் கூச்சலிட்டு தன்மஞ்செய்யாமலும், தன்மஞ்செய்வோமென்னும் மமதை கொண்டு ஏழைகளை வையாமலும், கொடூரவார்த்தைகளைப் பேசாமலும், சாந்தத்துடனும் அமைதலுடனும் சருவசீவர்களின்மீதும் அன்பு பாராட்டிச் செய்யுந் தருமச்செயலால் அவனுக்குள்ள இராகத் துவேஷ மோகங்களற்று சாந்தம், அன்பு, ஈகை, இவைகள் பெருகியுள்ள அநுபவக்காட்சியில் மனமாசுக் கழுவியுள்ளானென்பதைக்கண்டு தன்மத்தை ஆனந்தமாக ஏற்றலும், மனக்களங்கமுற்ற டம்பனெனக் கண்டு தன்மமேற்காது

அகலுதலுமாகிய வற்றிற்குச் சார்பாய் விவேகசிந்தாமணி ஆக்கியோன், கணபதிதாஸர் "ஒப்புடன் முகமலர்ந்தெயுபசரித்துண்மெபேசி, உப்பிலாக்கூழிட்டாலு முண்பதேயமிர்த மாகும், முப்பழமொடுபாலன்னம் முகங்கடுத்திடுவாராயின் கப்பியிபசியும் போக்கிக் கடும்பசி நல்லதாமே" என்றும், அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "மக்களுடம்பு பெறற்கரிது பெற்றபின், மக்களறிவுமறிவரிது - மக்கள், அறிவதறிந்தாரறத்தின் வழுவார், நெறித்தலை நின்றொழுகுவா" ரென்னும் ஆதாரங்கொண்டு மனமாசு கழுவியுள்ளாரென்பதை அறிதற்கு அன்பின் மிகுத்த ஆனந்தத்தால் அவர்கள் செய்யுங் காருண்ய தன்மமே காட்சி என்பது விரிவு.

### 5. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
### மிழுக்கா வியன்ற தறம்.

**(ப.)** அறம் - தருமத்திற்கு, மிழுக்கா - குற்றமாக, வியன்ற - தோன்றுதல் யாதெனில், அழுக்காறு - பொறாமெய், அவா - பேராசை, வெகுளி - கோபம், இன்னாச்சொல் - கடுஞ்சொல், நான்கும் - நாலுமென்பது பதம்.

**(பொ.)** பொறாமெய், பேராசை, கோபம், கடுஞ்சொல் இன்னான்கும் தன்மத்திற்கு எதிரடையாயதென்பது பொழிப்பு

**(க.)** இவர்களுக்கும் தன்மஞ்செய்யலாமோ என்னும் பொறாமெயும், எவ்வகையாகப் பொருளை ஈவதென்னும் பேராசையும், தன்மங் கேட்போரை சினந்து பார்க்கும் பார்வையும், அவர்களைக் கடிந்து துரத்தும் வார்த்தையும் ஆகிய நான்குந் தன்மத்தைக் கெடுத்து தங்களை சீரழிக்கும் நான்கு ஆயுதமென்பது கருத்து.

**(வி.)** மக்களை மக்களாக பாவிக்காத மிருகத்திற்கு ஒப்பாயவர்கள் சீவகாருண்ய மற்றவர்களாதலின் தங்கள் பொறாமெ மிகுதியால் தன்மத்தை அலட்சியஞ் செய்வார்கள். எக்காலும் பொருளறியாது யாசகசீவனஞ் செய்பவர்களுக்கு ஏதோ சில பொருள் கிடைத்துவிடின் அவற்றை எவ்வகையால் தன்மஞ் செய்துவிடுவதென்னும் பேராசையும், களவினாலும் சூதினாலும் வட்டியினாலும் பொருள் சேகரித்துள்ளோரை ஆதுலர் அணுகில் சினந்து காத்தும் செயலும், கருணையற்ற உலோபிகள் பால் ஆதுலர்ச் செல்லில் நடுங்சொற்கூறி துரத்துஞ் செயலுங் கண்டுரைத்துள்ளவற்றிற்குச் சார்பாய் அறநெறித்தீபம் "கோபங்கொண்டிழிகுவதுங் கடுமொழி கொண்டேசுவதும், பாபம் பேராசையொடு பற்றும் பொறாமெயதுந், தாபஞ்சேர்தன்மத்தின் தலைகேடென்றாரறவோ, ராபத்தை நீக்கும் வழி அறநெறியென் றறிவீரே" எனச் செல்லல், நிகழல், வருங்கால மூன்றினையுங் கண்டுணர்ந்தோர் ஓதுங் காட்சியின் அனுபவங்கொண்டு அறத்திற்கெதிரடையாயது பொறாமெய்,

பேரவா, கோபம், கடுஞ்சொல்லெனக் குறித்து அவற்றை அகற்றிச்செய்வதே தன்மமென விளி

**6. அன்னறிவா மென்னா தறஞ்செய்க மற்றது**
**பொன்றுங்காற் பொன்றாத் துணை.**

**(ப.)** அன்றறிவாம் - அப்போது பார்த்துக்கொள்ளலாம், மென்னா - என்று கூறாது, அறஞ்செய்ய - தன்மத்தைச் செய்வீர்களாக, மற்றது - அவ்வகைச் செய்வது, பொன்றுங்கால் - மரண காலத்தில், பொன்றாத்துணை - நிகரற்றவாதரவாகத் தொடருமென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தை இன்று செய்யலாம் நாளை செய்யலாமெனச் சிந்தியாது அப்போதைக்கப்போதே செய்தல் வேண்டும். அவ்வகைச்செய்யும் அறமே மரணவத்தையினின்று கார்ப்பதுடன் தொடர்ந்தும் சீரளிக்குமென்பது பொழிப்பு. |

**(க.)** இன்று நாளை என்னாது இம்மெயிற் செய்யுந் தன்மமானது மறுமெயிலுந் துணையாய் நின்று காக்கு மென்பது கருத்து.

**(வி.)** தோன்றி தோன்றி க்ஷணத்திற்குக்ஷணம் அழியக்கூடியப் பொருளைச் சேகரிக்க முயல்பவன் என்றும் அழியாததும் தனக்குத் துணையாக நின்று காக்கக் கூடியதுமாய அறத்தை அன்று செய்யலாம் இன்று செய்யலாமென்னுந் தாமதித்து நில்லாமல் இம்மெய்யைப் போஷிப்பதற்காதாரமாகும் பொருட்களை சேகரிப்பதுடன்

இம்மெக்கும் மறுமெக்கும் ஆதாரமாக விளங்கும் தன்மத்தை சேகரிப்பதே விசேஷமென்றறிந்த மேலோர் அறத்தை இன்று செய்யலாம் அன்று செய்யலாமென்றெண்ணாது மரணம் இப்போதோ எப்போதோ வென்று கார்த்துள்ள தென்றெண்ணி தன்மத்தை அப்போதைக்கப்போதே செய்யுங்கோ ளென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "இன்றுளாரின்றேயு மாய்வர் அவருடைமெ, யன்றே பிறருடை மெயாயிருக்கும் - நின்ற, கருமத்தரல்லாத கூற்றின் கீழ் வாழ்வார், தருமந்தலை நிற்றல் நன்று" இன்னுமிளமெயுளதாமென மகிழ்ந்து, பின்னையறிவென்றல் பேதமெ - தன்னை, துணித்தானுந் தூங்கா தறஞ்செய்ககூற்றம், அணித்தாய் வருதலுமுண்டு' என்று இன்று நாளையென்றெண்ணாது அன்றே அறஞ்செய்ய வேண்டுமென்பது விரிவு.

## 7. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
## பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

**(ப.)** அறத்தா - தருமத்தின், றிதுவென - ஆற்ற லிதுவென, வேண்டாம் நினைக்க வேண்டாம், சிவிகை தண்டிகையை பொறுத்தானோ - சுமந்தவன் கேட்டையும், டூர்ந்தா - ஏறியிருந்தோன் சுகத்தையும், னிடை - மத்தியிலிருந் தோன் கண்டறிந்ததற்கு கொக்குமென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தினாலுண்டாய சுகம் இதுவேயென்று குறிப்பிட வேண்டாம். பல்லக்கில் ஏறியுள்ளோன் சுகத்தையும், அதனை சுமப்போன் அசுகத்தையும் மத்தியினின்று கண்டறிந்தோன் நிலையே அதற்கு ஆதார மென்பது பொழிப்பு.

**(க.)** அறத்தினாற் றிதுவெனவேண்டாம் அதனை அனுபவக் காட்சியால் அறியவேண்டின் தண்டிகையேறி ஊர்வோன் சுகமே அதற்குப் போதுஞ் சான்றென்பது கருத்து.

**(வி.)** அறத்தினது ஆற்றலாம் சுகத்தைக் குறிப்பிடுதற்குப் பாங்கின்மெயான் ஈதென வேண்டாம். அறமற்று அறிவற்று தண்டிகை சுமப்போன் கேட்டையும் அறமுற்றி அறிவு பெருகி தண்டிகை ஊர்வோன் சுகத்தையும் மத்தியிற்காண்பான் கண்டறிவதுபோல தன்மத்தையும், தன்மத்தின் பெருக்கத்தையும், தன்மத்தின் ஆற்றலாம் அதன் பயன்களையும் அவனவன் செய்தொழில் சித்தியாலும் சுகானுபவத்தினாலும் அறியலாமென்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "உறக்குந் துணைய தோராலம்வித்தீண்டி, யிறப்பநிழற் பயந்தா அங் - கறப்பயனுந் தான் சிறிதாயினும் தக்கார்க்கை பட்டக்கால், வான்சிறிதாப் போக்கிவிடும்" என்றும், சீவகசிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்கத்தேவர் "அறவியமனத்தராகி யாருயிர்க் கருளைச் செய்யிற், பறவையு நிழலும் போலப் பழவினையுயிரோ டோடி, மறவியொன்றானுமின்றி

மனத்ததேசரக்குநல்லான், கறவையிற் கரக்குந் தன்னாற் காமுறப்பட்டவெல்லாம்" என்றும் அவனவன் செய்யும் அறத்தின் ஆற்றல் அவனவன் எண்ணிய வெண்ணம் முடிதலே காட்சி என்பது விரிவு.

**8. வீழ்நாள் படா அமை நன்றாற்றி னஃதொருவன்**
**வாழ்நாள் வழியடைக்குங் கல்,**

**(ப.)** வீழ்நாள் - கழிந்த நாளெல்லாம், நன்றாற்றி - நல்லறத்தை, படாஅமை - செய்யாதொழிந்த, னஃதொருவன் - ஒருவன், வாழ் நாள் - மற்றும் வாழ்நாள் முயற்சியாவிற்கும், வழியடைக்குங்கல் - தடைகளுண்டாகிக்கொண்டே வரு மென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தைச் செய்தவன் முயற்சி முட்டுபடாது முடிவது போல் தன்மத்தைச் செய்யாதோன் முயற்சி முடியா என்பது பொழிப்பு.

**(க.)** மலைமீதேற முயற்சிப்போனுக்கு அடுத்தடுத்து கற்குன்றுகள் தடையுண்டாகி இழிவதுபோல், ஈகையற்ற லோபிகளெடுக்கும் முயற்சிகள் யாவற்றிற்கும் லோபத்துவத் தடைகளே முன்னின்று கெடுக்குமென்பது கருத்து.

**(வி.)** ஈகையற்ற குணம் எவனிடம் நிறைந்துள்ளதோ அவனிடம் சீவகாருண்யங் கிடையாது. சீவகாருண்யம் எவனிடத்தில்லையோ

அவனை சருவசீவர்களும் விரோதிப்பர். அத்தகைய சருவசீவர்கள் மத்தியில் ஈகையற்றோன் செய்யும் இச்சாசெயல்கள் யாவற்றிற்கும் இடுக்கமாகியத் தடைகளுண்டாவது இயல்பாம். கடந்த நாள் யாவற்றிலும் ஈகையற்ற லோப வாழ்க்கை அமைந்தோன் இனி கடக்கவேண்டிய நாளில் எடுக்கு முயற்சிகள் யாவுங் கெடுமென்பதாதலின் கடக்குநாளிலேயே தன்மத்தைச் செய்யின் தடை அகலுமென்பதற்குச் சார்பாய் பாசமாட்சி "இன்றியமையா விருமுதுமக்களைப் பொன்றின்மெகண்டும் பொருள்பொருளாய்க் - கொள்பவோ , வொன்றும் வகையா னறஞ்செய்கவூர்ந்துருளிற், குன்றும் வழி தடுப்பதில்" என்பதற் காதாரமாக வாழ்நாளை வீணாளாக்காது அறஞ்செய்ய வேண்டுமென்பதே விரிவு.

**9. அறத்தான் வருவதே யின்ப மற்றெல்லாம்**

**புறத்த புகழு மில்.**

**(ப.)** அறத்தான் - தன்மச் செயலால், வருவதே - தோன்றுவதே, இன்பம் - அழியா சுகம், மற்றெல்லாம் - வேறு வகையால், புறத்த - அன்னியரிடத்தே, புகழுமில - கீர்த்தியும் சுகமும் இல்லை யென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தின் பெருக்கமாம் நல்லறத்தால் சுகமுங் கீர்த்தியும் உண்டாமன்றி ஏனையவற்றால் யாதும் உண்டாகாதென்பது பொழிப்பு.

**(க.)** அறமென்பது அன்பு, ஈகை, சாந்தமென்னும் மூன்றினையுமே பீடமாகக் கொண்டுள்ளதால் அறத்தின் மிகுதியே சுகத்திற்கும் சிறப்பிற்கும் ஆதாரமென்றும் மற்றவையால் அல்லவென்பதுங் கருத்து.

**(வி.)** அறமென்பது தன்மம் ஒன்றை மட்டிலுங் குறிக்காது மக்களுக்கு நீதிநெறிகளைப் புகட்டுதலுந் தன்மம், தன்னுயிர்போல் பிறருயிரை நேசிப்பதுந் தன்மம் தன்சுகம் போல் பிறர்சுகமுங் கருதுவது தன்மம், தன் துன்பம் போல் பிறர் துன்பத்தை ஆற்றுதலுந் தன்மம், தனக்குண்டாந் துக்கமே பிறருக்கும் உண்டாமெனக் கருதி அவற்றை நீக்குதலுந் தன்மம், தனக்குண்டாம் பெருந் திரவியத்தை தன்னையடுத்தோருக்கும் ஈய்ந்து தன்மயமாக்கிக்கொள்ளுவது தன்மம், தானடைந்த நிருவாண பேரானந்தத்தை ஏனையோருமடைய வேண்டுமெனப் போதிப்பதுந்தன்மமாதலின் அவற்றாலடையும் பேரின்ப சுகமே சுகம், அழியாப் புகழே புகழென்பது கண்டு அறத்தால் வருதலே இன்பமென்று கூறியவற்றிற்குச் சார்பாய் அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார், 'கனக்குத் துணையாகித்தன்னைவிளக்கி, இனத்துளிறைமெயுஞ்செய்து - மனக்கினிய, போகந்தருதலாற் பொன்னே அறத்துணையோ, டேகமாமற்றொன்றுமில்” என்பது கண்டு அறத்தின் பெருக்கமே அழியா பேரின்பத்திற்கு ஆதாரமென்பது விரிவு

## 10. செயற் பாலதோரு மறனே யொருவற்
## குயற் பாலதோரும் பழி.

**(ப.)** செயற்பால தோரு - பலகாரியங்களை முடிக்குங்காலங்களிலும், யொருவற்கு - மற்றவோ ராதுலற்கு, அறனே - தன்மஞ்செய்தே யாரம்பித்தல் வேண்டும், தோரும் - பலகாரியங்களை செய்யுந்தோரும் உயற்பால் - தன்னை உயர்ந்தோனென்றெண்ணி தன்மஞ்செய்யாமற்போவானாயின், பழி - நிந்தைக் குள்ளாவானென்பது பதம்.

**(பொ.)** ஈயாத லோபி எடுத்த காரியம் இடிந்தென்ன முடிந்தென்னவென்பது பொழிப்பு

**(க.)** ஒவ்வோர் காரியங்களை எடுத்து முடிக்குங்காலங்களிலெல்லாம் ஆதுலருக்கு அன்னமூட்டிச் செய்வது செய்தொழில் முட்டின்றி முடியு மென்பதாம். அங்ஙனம் ஆதுலரை நோக்காது அரியகாரியத்தைச் செய்தல் அவர்கள் நிந்தையாற்படுமென்பது கருத்து.

**(வி.)** செய்யுங்காரியங்கள் எவற்றிலும் தன்மத்தை முன்னிட்டுச் செய்வதே சித்தியும் அங்ஙனம் தன்மநிலை கொள்ளாது செய்யுங்காரியங்களிற் பழியுமுண்டாமென்பதற்குச் சார்பாய் அறநெறிதீபம் செய்தொழிலே சித்திக்க செல்லுக நல்லறநெறியில், உய்த்தவமு முண்மெ நிலையாவதுவுமதுவதுவாம், மெய்த்தவமே

கோறியற் நெறிதவரி வாழ்வதெனில், பொய்த்தவமேயென்றுபழி பலநாவுந் தூற்றும் தோ" என்று கூறியுள்ளவை ஆதாரங்கொண்டு தன்மத்தை முன்னிட்டே சகலகாரியங்களிலும் சித்திப்பெற வேண்டுமென்பது விரிவு

## 5. இல்வாழ்க்கை

சாக்கைய முநிவரால் போதித்துள்ள இல்லற துறவற ஒழுக்கங்களில் இல்லறத்தையே முதலாகக்கெண்டு சீலமிகுத்துத் துறவறமாஞ் சங்கஞ்சேர்ந்து வீடுபெறும் சுகவழி வகுத்துள்ளதைக்கண்ட இன்னூலினாக்கியோன் தானும் இல்லற வாழ்க்கையில் நல்லொழுக்கத்தை இனிது வகுத்திருக்கின்றார்.

**1. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு**

**நல்லாற்றி னின்ற துணை.**

**(ப.)** இல்வாழ்வா னென்பா - இல்லறத்தானென் றழைக்கப்படுவோன், னியல்புடைய - வழக்கமாகவுடைய, மூவர்க்கு - துறந்த சங்கத்தோர்களுக்கும், துறவா ஆதுலர்களுக்கும், மரித்தோர்களுக்கும் ஆகிய மூவர்களுக்கும், நல்லாற்றி - நல்லசுகவழியில், னின்ற - நிலைத்த, துணை - உதவியாவரென்பது பதம்.

**(பொ.)** துறந்துள்ள சமணமுநிவர்களுக்கும், துறவா கூன் குருடு சப்பாணி முதலியவர்களுக்கும், திக்கற்று

மரணமடைந்தோர்களுக்கும் குடும்பத்துடன் வாழ்ந்துள்ளவனே நிலையான துணையென்பது பொழிப்பு

**(க.)** இல்லறப் பற்றினை ஒழித்து ஞானசாதனத்தில் இருப்பவர்களுக்கும், யாதாமொரு தொழிற் செய்வதற்கும் இயலா அங்கவீனராம் பிணியாளர்களுக்கும் திக்கற்றப் பிணங்களுக்கும் நிலையாக நின்று உதவிபுரிவோர் இல்லறவாசிகளாம் நல்லறக் குடும்பிகளென்பது கருத்து.

**(வி.)** இல்லறவொழுக்கத்தைத் தனது இல்லாளுடன் நல்லறமாக நடாத்தும் இல்வாழ்வோன் இல்லந்துறந்த சங்கத்தோர்களாம் சமணமுநிவர்களுக்கும், அஞ்ஞானக் களங்கமமைந்த ஆதுலர்களாம் அங்கவீனர்களுக்கும், அநாதைப் பிணங்களுக்கும் ஆதரவாக நிலைத்துள்ளவனெனக் கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய் *அறநெறித்தீயம்* "இல்லறத்தி னிழுக்காற்றி யில் வாழ்வோன் பயனென்னில், வல்லறவோர் சாதனத்தை மாதவத்திலாழ்த்துவதும், புல்லுரவாமா துலர்க்குப் புசிப்பீய்ந்து காப்பதுவும், முல்லுரவற்றிறந்தோராம் மூவர்க்குந் துணையாமால்" என்னும் ஆதாரங்கொண்டு இயல்பாகவரும் சங்கத்துசமண முநிவர்களுக்குத், ஆதுலருக்கும், இறந்தோர்க்கும் இல்வாழ்வோனே துணையென்பது விரிவு.

**2. துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு பிறந்தார்க்கு**

**மில்வாழ்வா னென்பான் றுணை.**

**(ப.)** துறந்தார்க்குந் - இல்லறத்தைவிட்டு நீங்கி துறவறமாஞ் சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கும், துவ்வாதவர்க்கும் - அவ்வகைத் துறவடையா வாதுலர்க்கும், மிறந்தார்க்கும் - மரணமடைந்தோர்க்கும், மில்வாழ்வானென்பான் - இல்லா ளுடன் குடும்பியென வாழ்பவனே, துணை - உதவி யாவனென்பது பதம்.

**(பொ.)** புத்தசங்கத்தைச்சார்ந்து துறந்தவர்களுக்கும், அங்ஙனந் துறவாத கூன் குருடு சப்பாணிகளாம் ஆதுலர்களுக்கும், மரணமடைந்தோர்களுக்கும் உதவியாயிருந்து சகல காரியங்களையுங் குறைவற நடாத்திவர வேண்டியவன் உபாசகனென்னும் இல்வாழ்வோனே என்பது பொழிப்பு.

**(க.)** சமணமுநிவர்களை தங்கள் தங்கள் சாதனங்களில் நிலைபெறச் செய்பவனும், ஆதுலர்களாம் ஏழைகளுக்கன்னம் ஈய்ந்து ஆதரிப்பவனும், மரணமடைந்தப்பிணங்களைக் கொண்டுபோய் சுடலை சேர்ப்பவனுமாகியக் குடும்பியே துணையாவனென்பது கருத்து.

**(வி.)** துறவறஞ் சிறந்து புலன் தென்பட்டவர்களாகும் தென்புலத் தோர்க்கும், அஞ்ஞானமிகுத்து துற்கன்மிகளாய வாதுலர்களுக்கும்,

பாபகன்மப் பெருக்கத்தால் தன்னை யாயாது மரணமடைந்தோர்களுக்கும் இல்வாழ்வோனே துணையென்பது கண்ட தெய்வப்புலவர் இல்லற வாழ்க்கை முதற்பாடலில் மூவர்க்கும் இல்வாழ்வான் துணையென்று பாடியுள்ளவை சகலருக்கும் விளங்காதென்ப துணர்ந்து இரண்டாவது பாடலில் துறந்தார், துவ்வாதவர், இறந்தோரெரன மேல் மூவரை விளக்கி இல்லற தன்மமும் இல்லறத்தோன் ஈகையையும் விளக்கி சுருக்கத்தில் துறவற சுகமடையும் படி வரைந்து நல்லறமே இல்லறமாக ஒழுகும்படி செய்தவற்றுள் இல்லறத்தையுந் துறவறத்தையுந் தெள்ளற விளக்கி தெய்வகதிபெறச் செய்துவைத்தவர் புத்தரேயென்பது அடியிற்குறித்த செய்யுளால் விளங்கும். யாப்பருங்கலைக்காரிகை " வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக் கோளார்ந்த பூணாகங் குழைபுரளக் கோட்டெருத்தின், மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்தச் சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தார்தன் சொன் முறையான், மனையறமுந் துறவறமு மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும், வினையறுக்கும் வகைதெரிந்து ஈடொடுகட்டிவையுரைத்த, தொன்மெசால் கழிகுணத் தெந்துறவாசை தொழுதேத்த, நன்மெசால் வீடெய்துமாறு" என்று முதனூலுணர்ந்த ஆசான் தனது வழிநூலில் இல்லறவொழுக்கத்தைத் தெள்ளற விளக்கித் துறவற வழியைக் காட்டியுள்ளாரென்பது விரிவு.

### 3. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கு மென்றாங்

**கைம்புலத்தா றோம்ப றலை.**

**(ப.)** தென்புலத்தார் - புலன்கள் தென்பட வுழைக்கும் சமண முநிவர்களுக்கும், தெய்வம் - ஆறாவது தோற்றமாம் மக்களிலிருந்து யேழாவது தோற்றமாம் தேவகதி பெற்றவர்களுக்கும், விருந்தொக்க - ஒத்த விருந்தின ரென்றளிக்கும், தமென்றாங் - யீகையையுடையோனை, கைம் புலத்தார் - ஐம்புல வவாவுள்ளோர் யாவரும், றலை - தங்கள் சிரங்களிலேந்தி, றோம்ப கொண்டாடுவார்களென்பது பதம்.

**(பொ.)** புலன் தென்பட உழைப்போர்களுக்கும், புலன் தென்பட்டு தேவகதியடைந்த யேழாவது தோற்றத்தோர்களுக்கும் நன்னோக்க விருந்தளித்துக் காக்கும் குடும்பியை தங்கட்சிரமீது ஏந்திக்கொண்டாடுவர், ஐம்புல அவாவில் உழலுங் குடிகளென்பது பொழிப்பு.

**(க.)** புத்தசங்கத்திற் சேர்ந்து தங்கட்புலன்கள் தென்பட சாதிக்கும் சமணமுநிவர்களுக்கும், சமணமுநிவர்களுள் சித்தி பெற்ற அறஹத்துக்களுக்கும் அன்படன் அன்னமூட்டிவரும் உபாசகக்குடும்பியை மற்றுங் குடும்பிகள் தங்கட் சிரமீதேற்றிக் கொண்டாடுவார்களென்பது கருத்து.

**(வி.)** மெய், வாய்க், கண், மூக்குச், செவி என்னும் ஐம்புலனுகர்ச்சியின் பீடம் ஈதீதென்றறிந்த தென்புலத்தோருக்கும், மக்களென்னும் ஆறாவது தோற்றங் கடந்து ஏழாவது தோற்றமாம் நிருவாணமுற்று தெய்வநிலையடைந்தவர் களுக்கும் ஒக்க விருந்தினர்களாயிருந்து அவர்களுக்குள்ளக் கருமக் கிரியைகள் யாவற்றிற்குந் துணையாகவுள்ள பௌத்த உபாசகர்களாம் நல்லறக் குடும்பிகளை செல்வமும் விவேகமுங் குறைவுற்ற மற்றும் இல்லறக்குடிகள் சிரமேந்தி ஓம்புவது இயல்பாதலின் உபாசகர்களாம் நல்லறக் குடும்பிகளின் சிறப்பை விளக்க ஐம்புல அவாவோர் ஓம்புந்தலையென்பதற்குச் சார்பாய் அறநெறித்தீபம் 'இல்லறமாநெறி நிற்போரியல்புடைய மூவர்க்கும், நல்லறமே துணைகொண்டு நற்றவத்தினுறுதி செயும், வல்லறத்தோர் வாழ்க்கைதனை மண்ணகத்தோர் கண்டோம்பி, சொல்லறத்தி நின்ற வரைசிரமேற்பர் சிரமேற்பார்" என்றும், அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் பிச்சையுமையமுமிட்டுப் பிறன்றார, நிச்சலு நோக்காதுபொய்யொரீ இ-நிச்சலுங், கொல்லாமெ காத்துக் கொடுத்துண்டு வாழ்வதே, இல்வாழ்க்கை யென்னுமியல்பு," "செல்வத்தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப் , பல்கிளையும் வாடாமற் பார்த்துன் - நல்ல தானமறவாத தன்மெயரேலஃதென்பார், வானகத்து வைப்பதோர் வைப்பு" என்றும், பெருந்திரட்டு " சூழ்வானெறியினியன் மூவர்க்குந் துணியின் றுறுதுணையாய்த்,

தாழ்வானதிலாதேநின்றும் பரத்தனி வாழ்வருளித்தானாழ் வாருதிசூழுலகின் பொடுமற்றதனின்பும் பெறலால், வாழ்வானென் போனில் வாழ்பவனே மற்றயரஃதுளரோ” என்று கூறியவற்றின் ஆதாரங்கொண்டு ஐம்புல னவா மிகுத்தக் குடும்பிகள் உபாசகர்களை சிறப்பிக்கும் நிலையினது விரிவு.

**4. பழியஞ்சிப் பாத்து ணுடைத்தாயின் வாழ்க்கை**
**வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.**

**(ப.)** பழியஞ்சி - பிறர் நிந்தனைக்கஞ்சி, பாத்தூணுடைத்தாயின் நியாயவழியில் சம்பாதித்து உண்டுடுப்பானாயின், வாழ்க்கை - அவனது இல் வாழ்க்கையில், வழியெஞ்ச - எடுக்குந் தொழிலுக்குத் தடையுண்டாதல், லெஞ்ஞான்று - எக்காலத்தும், மில் - இல்லையென்பது பதம்.

**(பொ.)** இல்வாழ்வோன் நியாயவழியில் சம்பாதித்துக் கொடுத்து உண்பானாயின் அவனது வாழ்க்கைக்கு எடுக்கும் முயற்சிகள் யாவும் முட்டின்றி
முடியுமென்பது பொழிப்பு.

**(க.)** இல்லாளுடன் குடும்பியென வாழ்பவன் தனது தேகத்தை வருத்தி சம்பாதித்துத் தன்னையடுத்தவர்களையும் போஷித்து ஆதுலருக்கும் ஈய்ந்து ஆனந்த வாழ்க்கையோடு எடுக்குந்

தொழில்கள் யாவும் எக்காலத்துந் தடையின்றி முடியுமென்பது கருத்து.

**(வி.)** எண்வகை வதுவையில் ஒன்றேற்று இல்வாழ்க்கையில் ஒழுகுவோன் சூதினாலுங் களவினாலும் பொய்யாலும் பாவவழியில் பொருளை சம்பாதிக்காது உழைப்பினாலும் நீதியினாலும் நெறியினாலும் புண்ணிய வழியில் பொருளை சம்பாதித்து தானுந் தனது உரவின் முறையோரும் புசிப்பதுடன், துறந்தார்க்குந் துறவாதவர்க்கும், இறந்தோர்க்கும் ஈய்ந்து இனிது செய்வோர் காரியங்கள் யாவும் இன்புற்று முடியுமென்பதற்குப் பகரமாக அறநெறித்தீபம் "பழிபாவம் வழியஞ்சி பார்த்துண்ணுமில்லோன்றன், அழியாத வறநெறியி லென்றென்று நின்றுசுகங், கழியாதுயில் வாழ்க்கைக் காமுறுவோர் செய்கையது, இழியாது யெக்காலு மீடேற்ற முறுமாமால்" என்று இல்வாழ்வோன் நீதியின் வழியால் சம்பாதித்தப் பொருளை நீதியும் நெறியும் வாய்மெயும் அமைந்த பெரியோர்க்கு இட்டுண்டு வாழ்பவன் எடுக்குஞ் செயல்கள் யாவும் இடுக்கின்றி முடியுமென்பது விரிவு.

**5. அன்பு மரனு முடைத்தாயி னில்வாழ்க்கை**
**பண்பும் பயனு மது.**

**(ப.)** அன்பு - கருணையும், மறனு - யீகையுமாய விரண்டும், முடைத்தாயி - பெற்றிருப்பானாயின், னில்வாழ்க்கை -

குடும்பவியல்பிலேயே, பண்பும் - குணவமைதியும், பயனும் - அதன் பலனும், மது- அதுவே யென்பது பதம்.

**(பொ.)** இல்வாழ்வோனுக்குக் கருணையும் ஈகையும் பொருந்தி இருக்கு மாயின் அவன் நெடுங்குணங்குடிக் கொள்ளலே அதன் பயனென்பது பொழிப்பு

**(க.)** மனவிரிவால் உலகமும், மனவொடுக்கத்தால் சிரேஷ்டமும் பெறுவதியல்பாதலின் இல்வாழ்வோன் தனது செயலைக் கருணையிலும் ஈகையிலும் பொருந்தச் செய்வானாயின் அதுவே குணங்குடிக்கொள்ளுதற்குப் பயனென்பது கருத்து.

**(வி)** குணவிரிவிற்கு அவாவின் பெருக்கமும், குணவொடுக்கத்திற்கு அவாவின் சுருக்கமே காரணமாதலின் கருணையோடும் தன்மத்தைச் செய்ய முயலுவோனுக்கு உலகப்பற்றுக்கள் யாவுமற்று சீவகாருண்யப்பற்று மிகுத்திருப்பது கண்டு இல்வாழ்க்கையில் இருப்போனுக்குக் கருணை யோடமைந்த ஈகையிருக்குமாயின் அதற்குப் பயன் குணவமதியேயென்றறிந்து அதனது நித்திய சிறப்பை விளக்கியவற்றிற்குச் சார்பாக அறநெறிச்சார ஆக்கியோன் முனைப்பாடியார் "தண்டாமம் பொய் வெகுளி பொச்சாப் பழுக்காறென், றைந்தே கெடுவார்க் கியல்பென்ப - பண்பாளா, யீதலறித லியற்றுதலின் சொற்கற், றாய்தலறிவார்

தொழில்" என்றது கண்டு அன்பும் அறனுமுள்ளானுக்குப் பண்பமைதியே பயனென உணர்த்திய விரிவு.

### 6. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
### போஒய்ப் பெறுவ தெவன்.

**(ப.)** அறத்தாற்றி தன்மத்தினது வாற்றலை, னில்வாழ்க்கை - குடும்பச்செயலிலேயே, யாற்றிற் - சுகநிலைப் பெறுவதினும், புறத்தாற்றிற் - வேறிட முண்டென்று, போஒய்ப் சென்று, பெறுவதெவன் - சுகமடைபவ னெவனென்பது பதம்.

**(பொ.)** நல்லறத்தின் சுகமாகிய ஆற்றலை இல்லறத்தில் இனிது நடாத்தி சுகம் பெறுதலே மேலாயபயனாதலின் அதற்கு மேலாய சுகம் அப்புறம் வேறுளதோ என்பது பொழிப்பு.

**(க)** இல்வாழ்க்கையை நல்வாழ்க்கையில் நடத்துவோனது ஆற்றல் அவனது சுகவாழ்க்கையிலேயே விளங்குகின்றபடியால் இல்லறத்தில் நல்லறம் நடாத்தி ஆற்றலடைபவனுக்கு மாறாக புறத்தாற்றிற் பெறும் சுகமுடையவன் ஒருவனுளனோ என்பது கருத்து.

**(வி.)** தலைவனும் தலைவியும் அன்பு பொருந்தி நடாத்தும் இல் வாழ்க்கையில் நல்வாய்மெய் , நல்லூக்கம். நற்கடைபிடி, நல்லமைதியில் வாழ்பவரின் ஆற்றலினும் வேறு சுகவழியில்லையென்று கண்ட ஆசான் தனது வழிநூலுள் அறத்தாற்றி

சுகமடைதலே ஆற்றலென்றும், அதற்கு மாறாய சுகவழிகள் யாதொன்றும் இல்லையென்றும் விளக்குவான் வேண்டி அறத்தாற் சுகமடைபவனினும் வேறொருவன் உளனோ என்பதற்குச் சார்பாய் அருங்கலைச்செப்பு "நற்காட்சி நன்ஞான நல்லொழுக்க மிம்மூன்றுந் தொக்கவறச் சொற்பொருள்," அறநெறிச்சாரம் "காட்சியொழுக்கொடு ஞானந்தலைநின்று, மாட்சி மனைவாழ்தலன்றியு - மீட்சியில், வீட்டுல மெய்தல் என விரண்டே நல்லறங், கேட்டதனாலாய பயன்" என்பது விரிவு.

**7. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்**
**முயல்வாரு ளெல்லாந் தலை.**

**(ப.)** இயல்பினா - நீதிநெறி யொழுக்கச் செயலினால், னில்வாழ்க்கை - இல்லறத்தன்மத்தில், வாழ்பவ னென்பான் - வாழ்பவனென்று சொல்லும் படியானவன், முயல்வாரு - மற்றும் வேறு முயற்சியுள்ள, ளெல்லாந் - யாவர்க்குந் தலை - முதலவனென்பது பதம்.

**(பொ.)** இல்லறதன்மத்தில் வழுவாது வாழ்பவன் மற்றுஞ் செயலிலுள்ள யாவர்க்கும் முதலவனென்பது பொழிப்பு.

**(க)** இல்லற நல்வாழ்க்கையை இனிது நடாத்துங் குடும்பியானவன் மற்றுஞ் செயலை நடாத்துவோர் யாவருக்குந் தலைமெயானவனென்பது கருத்து.

**(வி.)** சங்கஞ்சேர்ந்த சிரமணர்களாம் சமணமுநிவர்களுக்கும், வேதாந்தத்திற்கும், சித்தாந்தத்திற்கும், சமரசநிலைநிற்கும் சித்தர்களுக்கும், சமணநிலை கடந்த அறஹத்துக்களாம் தேவர்களுக்கும், ஆதுலர்களுக்கும், மரணமடைந்தோர்களுக்கும், மற்று முயற்சியுள்ளார்க்குந் தலைமெயானவன் உபாசகனென்னும் இல்லற நெறி வழுவாதவனே ஆதாரமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "ஒன்றாக நல்லதுயிரோம்பலாங்கதன்பின், நன்றாய்த்தடங்கினார்க் கீத்துண்டல் - என்றிரண்டுங், குன்றாப்புகழோன் வருகென்று மேலுலகம், நின்றதுவாயிற் றிந்து" என்பது கொண்டு சகல முயற்சியிலுள்ளவர்களுக்கும் இல்லறநெறி நிற்போனே தலைமெயானவனென்பது விரிவு.

**8. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை**
**நோற்பாரி னோன்மெ யுடைத்து.**

**(ப.)** ஆற்றி - ஞானத்தி னிற்பினும், னொழுக்கி - சீலத்தினிற்பினும், யறனிழுக்கா - தன்மநெறி பிறழாது, வில்வாழ்க்கை - மனையறத்தினிற்பவன், நோற்பாரி - தவத்தைச் செய்பவனினும், னோன்மெயுடைத்து மேலாய தவத்தையுடையவனென்பது பதம்.

**(பொ.)** விவேக மிகுதியும் சீலமுமிருப்பினும் அறநெறி வழுவா இல்வாழ்க்கை யையுடையவன் தவநெறியாம் நோன்பினை

நோற்பவனினும் மேலாய நோன்மெயுடையவனென்பது பொழிப்பு

**(க.)** கொன்றுத் தின்னாமெ யென்னும் நோன்பினையுடைய தவத்தோனாயினும் இல்லற நெறியை இழுக்கற நடாத்துவோனுக்கு நிகராகான் என்பது கருத்து.

**(வி.)** கொன்றுத் தின்னாமெயென்னும் நோன்பினை நோற்கினும் ஞானமுதிர்ந்தோனென்னும் விவேகம் விளங்கினும் சீலமிகுத்தோனென்னும் சுத்தமமையினும் இல்லாளுடன் நல்லறம் நாடாத்துவோன் அறநெறி பிறழாது இழுக்கற நடாத்துவானாயின் அவனது இல்லறவொழுக்கமே நல்லறநெறியும் தொல்லறம் நீக்கி பல்லறம் பயிற்றலும், புண்ணியவசத்தால் செல்வஞ் சேரலும், சேர்ந்த செல்வத்தால் துறந்தோரைக் காத்தலும், துறவாதோர்க்கு ஈய்தலும், இறந்தோரை எடுத்தாலும், இழிந்தோரை உயர்த்தலுமாகிய ஈகையென்னும் பெருக்கே ஈசனென்னும் பெயருக்குப் பீடமாயது கண்ட பெரியோன் எத்தகைய நோன்பினை யுடையவனாயினும் இழுக்கற்று ஈகைமிகுத்த இல்வாழ்வோனுக்கு நிகராகான் என்பவற்றிற்குச் சார்பாய் அருங்கலைச்செப்பு "பழிக்கஞ்சு மெஞ்ஞான்றும் பண்ணுந்தவத்தோன் இழுக்கற்ற வில்வாழ்வான் முன்" என்னும் ஆதாரங்கொண்டு இழுக்குற்ற தவத்தோனினும் இழுக்கற்ற இல்வாழ்வோன் சிறந்தோனென்பது விரிவு.

**9. அறனெனப் பட்டதே யில் வாழ்க்கை யஃதும்**

**பிறன்பழிப்ப தில்லாயி னன்று.**

**(ப.)** அற னெனப்பட்டதே - தன்மமென்று கூறப்பட்டதே, யில்வாழ்க்கை - மனையறமென்பதே முதலாம், யஃதும் - அத்தகைய தன்மமும், பிறன்பழிப்ப - அன்னியனால் நிந்திக்கப்படுகை, தில்லாயி - இல்லையாயின், னன்று - நல்ல தென்பது பதம்.

**(பொ.)** அறமென்னும் இல்லறந் துறவறம் இரண்டினும் இல்லறமே முதலாதலின் அவற்றை நடாத்துவோன் அன்னியனால் நிந்தனைக்குள்ளாகாது நடத்தலே இல்வாழ்வோன் சிறப்பென்பது பொழிப்பு.

**(க.)** இல்லறம் துறவறம் இரண்டினுள் துறவறத்திற்கு இல்லறமே வாழ்க்கை வழியாதலின் இல்வாழ்வோன் பழிபாவம் அகற்றி வாழ்கவேண்டு மென்பது கருத்து.

**(வி.)** அறமென்னும் மொழியே இல்வாழ்க்கையின் சீர்திருத்த அடிபடையாதலின் அவ்வறத்தை இல்லறத்தோனே இனிது நடாத்தி மூவரையுஞ் சீர்திருத்துவானாயின் இவனுக்குள்ள பற்றுகளாம் பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை மூன்றும் நாளுக்குநாளற்று சுருக்கத்தில் வீடுபேறு பெறும்

சுத்த சீலனாதற்கு இல்லறமே நல்லறமாகக் கண்ட ஆசான் கூறியவற்றிற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "மருவியகாதன் மனையாளுந்தானும், இருவரும் பூண்டுயப்பி நல்லால் - ஒருவரால், இல்வாழ்க்கையென்னுமியல்புடையவான் சகடம், செல்லாது தெற்றிற்று நின்று' என்றுங் கூறிய ஆதாரங்கொண்டு அறமே இல்வாழ்க்கை, இல்வாழ்க்கையே அறமாதலின் அவ்வறத்தைப் பிறர்பழிப்பின்றி நடாத்த வேண்டுமென்பது விரிவு,

**10. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்**

**தெய்வத்துள் வைக்கப் படும்.**

**(ப.)** வையத்துள் - பூமியின்கண், வாழ்வாங்கு - இல்வாழ்க்கை நெறி பிறழாது, வாழ்பவன் - வாழும்படியானவன், வானுறையுந் - அகண்டத்துறையும், தெய்வத்துள் - புத்தேளுலகத்துள் வைக்கப்படும் - எவ்விதத்துஞ் சேர்க்கப்படுவா ரென்பது பதம்.

**(பொ.)** இல்லற நெறி பிறழாது வாழ்பவன் எவ்விதத்தும் புத்தேளுலகைச் சேருவானென்பது பொழிப்பு.

**(க.)** இல்லாளோடுங்கூடி நல்வாழ்க்கை நடத்துவோன் இல்லற நெறியினே துவால் நல்லற நிகழ்ச்சியாம் வானுறை தேவர்கதியின் தானங்கிடைக்கும் என்பது கருத்து.

**(வி.)** துணைநலங்கொண்டு வாழும் இல் வாழ்வோன் இல்லறநெறி பிறழாது துறந்துள்ளவர்களுக்கு வேண்டிய துணைக் கருவி போலிருந்தும், துறவாத ஆதுலர்க்கு ஆதரணைக்கர்த்தனாகவிருந்தும் இறந்தோர்களை இல்லம் நீக்கி இடுகாடு சேர்ப்பதுமாய தன்மவாழ்க்கையில் வாழ்வாங்கு வாழ்பவன் கூடிய சீக்கிரம் பாசபந்தக் கயிறுகளாம் வாணமற்று நிருவாணமுற்று வானவர்க்கரசனாம் புத்ததேவனது பதும் பாதத்தைச் சேர்வானென்பதற்குச் சார்பாய் இஸ்காந்தம் "துறந்தவர்கள் வேண்டியதோர் துப்புறவு நல்கி, யிறந்தவர்கள் காமுறு மிருங்கடனியற்றி, யறம்பலவுமாற்றி விருந்தோம்பு முறையல்லாற், பிறந்த நெறியாலுள்தோர் பேருதவியாதோ", அறநெறிச்சாரம் 'செல்வத்தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப் பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு - நல்ல, தானமறவாத தன்மெயரே லஃ்தென்பார், வானகத்து வைப்பதோர்வைப்பு " என்னும் ஆதாரங்கொண்டு இல்லற நெறியில் வழுவாது வாழ்பவன் துறவறநெறியிற் சுருக்கத்திலயித்துப் பரிநிருவாணமுற்று சுயம்பிரகாசனாகி வானவர்க்கு அரசனாம் ஆதிதேவனடியை அடைவானென்பது விரிவு.

### 6. மனையறமாம் வாழ்க்கைத் துணை நலம்

தலைவனும் தலைவியும் மனையறம் வழுவாது வாழ்தலின் சுகாசுகங்களை விளக்குகின்றார்.

**1. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்**

**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

**(ப)** மனைத்தக்க - தன தில்லத்திற்குத்தக்க, மாண்புடையளாகித் - கற்பிற்கினிய சிறந்தவளை, தற்கொண்டான் - தனக்கென்று சேர்த்துக் கொள்ளுவானாயின், வளத்தக்காள் - நீர்வளம் நிலவள முடையவளாகி, வாழ்க்கை -இல்லறச்சுகத்திற்கு துணை, வாழ்க்கைத் துணை - யாவா ளென்பது பதம்.

**(பொ.)** இல்லத்திற்குத் தக்க சிறந்தகுணத்தாளைத் தனக்குத் துணையாக சேர்த்துக் கொள்ளுபவன் நீர்வளம் நிலவளம் நிறைந்த சுகவாழ்க்கைப் பெறுவானென்பது பொழிப்பு.

**(க.)** கற்பிற்கினிய மாண்புடையாளைத் தனது இல்வாழ்க்கைக்குத் துணைவியாகச் சேர்த்துக்கொள்ளுவானாயின் அவளது கற்பின் வளமொால் நீர்வளம் நிலவளம் பெருகி சருவசீர்களுக்கும் உபகாரிகளாகி சுக வாழ்க்கை பெறுவான் என்பது கருத்து.

**(வி).** இல்லறம் நடாத்துவதில் பிரமம், பிரசாபத்தியம், ஆரூடம், தெய்வம், தந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் எட்டுவகை விவாகத்துள் ஏதொன்றிலேனும் நிலைத்து வாழ்க்கைத் துணைநலம் பெறுவதே மனையற மென்னப்படும். தொல்காப்பியப் பொருளதிகாரம் இன்பமும் பொருளுமறனு மொன்றாங், கன்பொடு

புணர்ந்தவைந்திணை மருங்கிற், காமக்கூட்டங் காணுங்காலை, மறையோரதே ஏத்துமன்ற, லெட்டனுட்டுறையமெ, நல்வாழ் துணைமெயோரியல்பே" என்னும் இல்வாழ்க்கைத் துணைநலங் கொண்டு வாழ்வோர்க்கு இனிது நலமுடியுமென்பதற்குச் சார்பாய் அறநெறித்தீபம் "மனைவாழ்வே யறநெறியில் வாழ்க்கை துணைநலங் கொண்டான், வனநெறிக்குமேலாய மாண்புடையா ளமைவாளேல், இனமரபு மெழிலுரவு மில்லறமே நல்லறமாய், மனவளமு நிலவளமும் வாழ்க்கைசுகந் தருமமால்" என்னும் ஆதாரங்கொண்டு கற்பிற்கினிய மாண்புடையாள் வாழ்க்கைத் துணைநலம் ஆவளேல் நீர்வளம் நிலவளம் பெருகி சுகவாழ்க்கைப் பெறுவானென்பது விரிவு

**2. மனைமாட்சி யில்லாள்கணில்லாயின் வாழ்க்கை**
**யெனைமாட்சித் தாயினு மில்**

**(ப.)** மனை - இல்லத்தில், மாட்சி - கற்பினும் அறத்தினுஞ் சிறந்த, யில்லாள்க - மனையாட்சிகள், ணில்லாயின் - இல்லாமற் போவார்களாயின், வாழ்க்கை - இல்லற சுகம், யெனைமாட்சித் - மற்றுமேனையசம்பத்து, தாயினும் - பெருகி யிருப்பினும், மில் - சுகவாழ்க்கையில்லை யென்பது பதம்.

**(பொ.)** வாழ்க்கைத்துணைவிக்குக் கற்புங் கருணையும் இல்லையாயின் மற்றும் ஏனைய சம்பத்திருந்தும் இல்வாழ்க்கை

சிறப்பைத்தராவென்பது பொழிப்பு.

**(க.)** ஒருவனுக்கு தனசம்பத்து, தானிய சம்பத்து, குடும்பசம்பத்து நிறைந்திருப்பினும் தனது மனையாளுக்கு வேண்டிய கற்பின் சம்பத்து கருணைசம்பத்து இரண்டுமில்லாமற் போமாயின் அவ்வில்வாழ்க்கைக்கு யாதொரு சுகமுமில்லை யென்பது கருத்து.

**(வி.)** இல்லத்தை சிறப்பிக்கச் செய்யும் நல்லறமாம் இல்லாளின் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் நான்கு தன்மபாத நடை ஒழுக்கங்களின்றி வாழ்க்கைத்துணைக்கு ஒருவள் தோன்றுவாளாயின் அவனது வாழ்க்கையில் தனசம்பத்து, தானிய சம்பத்து, குடும்ப சம்பத்து நிறைந்திருப்பினும் இல் வாழ்க்கையின் சுகசம்பத்தில்லையென்று கூறியுள்ளவ அருங்கலைச்செப்பு "மனையறமே காட்சி மனையாளின் கற்பு . இனையாயி னில்லறமேயில்", அறநெறிச்சாரம் " விருந்து புறந்தாரான் வேளாண்மெசெய்யான், பெருந்தக்கவரையும் பேணான் - பிரிந்துபோய்க், கல்லான் கடுவினை மேற்கொண்டொழுகுமேல், இல்வாழ்க்கை யென்பதிருள் அதாரங்கொண்டு ஏனைய சிறப்புப் பெறினும் வாழ்க்கையில் மனயைாளினது கற்பின் சிறப்புங் கருணையினது சிறப்பும் இல்லையாயின் அவ்வாழ்க்கையில் யாது சிறப்புமில்லையென்பதே விரிவு.

## 3. இல்லதெனில்லவண் மாண்பானா லுள்ளதே

## னில்லவண் மாணாக் கடை

**(ப.)** இல்லதே - வாழ்க்கைக் கேது மில்லாதிருப்பினும், னில்லவண் உள்ளமனையாள், மாண்பானா - கற்பின் சிறப்பமைந்திருப்பாளாயின், லுள்ளதே - சகலபாக்கியமு மிருக்குமென்பதேயாம் னில்லவண் - கற்பிநிலையில்லாத வளாயின், மாணாக்கடை - அவ்வில் வாழ்க்கை சகலராலும் இழிவடையு மென்பது பதம்.

**(பொ.)** இல்லத்தில் ஏதொரு பாக்கியமில்லாதிருப்பினும் இல்லாள் நல்லொழுக்க நல்ல மதியாம் கற்பமைந்திருப்பாளாயின் சகல பாக்கியங்களும் இருக்குமென்பது பொருந்தும். அங்ஙனம் இல்லாளாயின் அவ்வில்லம் சகலராலும் இழிக்கு மென்பது பொழிப்பு

**(க.)** நல்லொழுக்கம், நல்லமதி, நற்கழை பிடி அமர்ந்த கற்புடைய மனையாளிருப்பாளாயின் அவளுடன் சகலபாக்கியமும் பொருந்தவிருக்கும். நல்லொழுக்க நல்ல மதியற்று கற்புநிலை கடந்திருப்பாளாயின் அவ்வில்லத்தில் யாதுப்பாக்கிய மிருந்தும் இல்லையென்னும் இழிவையே தருமென்பது கருத்து.

**(வி.)** இல்லறத்தையே நல்லறமாகக் கொண்டு இறந்தோரை இடு காட்டிற்கும், துறந்தார்க்குத் துணையாகவிருந்து தூயநிலையடைதற்கும், துறவாது ஆதுல நிலையுற்றோர்க்கு உண்டி கொடுத்தும் உயிர்பிச்சை அளித்தாதரிக்குங் கருணையுடையோளாய் கணவனையே கடவுளாகக் கருதுங் கற்புடையவளாய இல்வாழ்க்கைத்துணைவி ஒருவளிருப்பாளாயின் அவளில்லத்தில் சகலபாக்கியங்களும் நிறைந்திருக்கும். இல்லாள் நீலியும், இடும்பியும், லோபியும், கற்பற்ற பாவியுமாயிருப்பாளாயின் அவளில்லத்தில் சகல பாக்கியங்களும் நிறைந்திருப்பினும் நிர்பாக்கியவதி யென்னும் நிட்டூரத்தாற் கழிந்த மாணாக்கடை யடைவனென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "நெறுங்குபெய்தாக்கிய கூழாரவுண்டு, பிறங்கிருகேட்டொடுபன்றியும் வாழும், அறஞ்செய்து வாழ்வதே வாழ்க்கைமற்றெல்லாம் வெறும் பேழை தாழ்க்கொள் இயற்று" என்னும் ஆதாரங்கொண்டு கற்புங் கருணையுமமைந்த வாழ்க்கைத்துணையே துணையென்றும் மற்றுமில்லாள் துணைவாழ்க்கைக்குக் கேடென்பது விரிவு.

**4. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்**
**திண்மெயுண் டாகப் பெறின்.**

**(ப.)** பெண்ணிற் - பெண்களுள், கற்பென்னும் - பதுமினியென்னும், திண்மெயுண்டாகப் - திறமெயுடையாளை, பெறின் - வாழ்க்கைக்குத்

துணையாகப் பெற்றவனுக்கு பெருந்தக்க யாவுள - இவளினும் பெறவேண்டிய வேறு சம்பத் துளவோ வென்பது பதம்.

**(பொ.)** கற்பிற்கு இனியாளை தனது இல்வாழ்க்கைத் துணையாக சேர்த்துக் கொண்டவனுக்கு இவளினும் வேறொரு தக்கப் பொருளுளவோ என்பது பொழிப்பு.

**(க.)** நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, சீலம், கருணை இவைகள் நிறைந்த ற்புடையப் பெண்மணியை ஒருவன் தனது இல்வாழ்க்கைத் துணைவியாகத் தேடிக்கொள்ளுவானாயின் அவ்வில்லிற்கு அவளினும் பெருத்த சம்பத்து வேறுளவோ என்பது கருத்து.

**(வி.)** கணவனுக்கு இனியவளாயுள்ள சம்பத்து, கணவனுக்கு எதிர்மொழி கூறாசம்பத்து, மாமி ஆதுலர்பால் மிருதுமொழி பேசுஞ் சம்பத்து, தனது கணவன் உறவின் முறையோரையே தனது உறவின் முறையோராகக் கருதி அவர்களை ஆதரிக்குஞ் சம்பத்து, நாணத்தையே ஆபரணமாகக் கொள்ளுஞ் சம்பத்து, அச்சத்தையே ஆடையாக அணையுஞ் சம்பத்து, தன் வீட்டின் சங்கதிகளை அன்னியர் வீடுகளுக்குக் கொண்டு போகா சம்பத்து, அன்புங் கருணையுமே ஆதாரமாகக் கொண்டுள்ள சம்பத்தாம் கற்பு நிறைந்த பெண்மணி வாழ்க்கைக்குத் துணையாவளேல் அவ்வில்லிற்கு அவளினும் வேறு சம்பத்துளவோ என்பதற்குச் சார்பாய்

அறநெறித்தீபம் "அச்சமொடு நாணமட மரிய பயிர்ப்புடையாளாய், இச்சையறு ஞானநிதி யினியமொழி கற்புநிலை, அச்சுருவா மாணியதா அமைந்தவளே வாழ்க்கை பெறில், நிச்சயமா மில்லிற்கு நேருநித வேறாமோ" என்னும் ஆதாரங்கொண்டு கற்பிற்கினியவள் இல் வாழ்க்கைபெறில் கணவன் தேடவேண்டிய வேறு சம்பத்து இல்லையென்பது விரிவு.

## 5. தெய்வந் தொழஅள் கொழுநற் றொழுதெழுவாள்
## பெய்யெனப் பெய்யு மழை.

**(ப.)** தெய்வந் - தெய்வத்தை, தொழாஅள் - வணங்கமாட்டாள், கொழுநற் தனது கணவனையே தெய்வமென, றொழுதெழுவாள் - வணங்கித் தற்லெழுபவள், பெய்யெனப் - தூவவேண்டுமென, பெய்யு - தூஉம், மழை - துளிர் நீரென்பது பதம்.

**(பொ).** தன்னைக் காக்கும் தெய்வம் வேறொன்று வணங்காது தனது கணவனையே காக்குந் தெய்வமென வணங்கி துயிலெழுந்து கற்பின் நிலை நிற்பவள் பெய்யென்றால் மழை பெய்யுமென்பது பொழிப்பு.

**(க.)** காலையில் துயில்விட்டெழும்போதே தன் கணவனையே தெய்வமெனத்தொழுது இல்லறநெறி வழாது நடாத்துபவள் வானத்தை நோக்கிப் பெய்ய வேண்டுமென்றால் பெய்யுமென்பது கருத்து.

**(வி.)** நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங் கற்பிநிலை பிறழாது தன் கணவனையே கடவுளெனக் கருதி வாழ்க்கைத் துணையாக நின்று புலன் தென்பட்டோராம் தென்புலத்தோருக்கும், அநாதை ஆதுலர்கட்கும், இறந்து இழிவடைவோருக்கும் துணையாயிருந்து துயில் நீற்று எழும் போதே தனது கொழுனனைத் தொழுது மனமாசகற்றி வாழும் பெண்மணியானவள் பூமிவளம் பெருக வானம் பெய்யவேண்டுமென்று கோறும்போதே தனக்கு யாதொரு பிரிதிபலனுங் கருதாது தனது கணவன் சொல் தவிறாது மூவர்க்குந் துணை யாயிருந்து ஈபவளாதலின் அவளின் கோரிக்கை கூடுமென்பதற்குச் சார்பாய் அருங்கலைச்செப்பு “இல்லறவாழ்க்கைக் கினியாளகமுறில், சொல் லெல்லாஞ் செல்லுந் துணை', 'வாழ்க்கைத் துணைநல முள்ளாள் தன் வாக்குப் பாழ்ப்போகாதென்றும் பகர்" "கற்புக்கினியாளாய் கணவனையே பேணும், பொற்புடையாள் வாக்கதனைக் காண்" என்னு மொழிகொண்டு வேறொரு தெய்வத்தையும் நம்பாது தனது கணவனையே தெய்வமென நம்பி அறநெறி வழுவாது நடாத்துபவளின் வாக்கு தவிரா தென்பது விரிவு.

**6. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்தகை சான்ற**
**சொற்காத்த சோர்விலாள் பெண்.**

**(ப.)** தற்காத்து - தனது கற்புநிலையைக் காப்பதுடன், தற்கொண்டாற் - தன்னைக் கொண்டக் கணவனையும், பேணி - அன்புட னாதரித்து,

தகைசான்ற - இருவருக்கு மோர் கவசத்திற் கொப்பாக, சொற்காத்து - தனது நாவைக்காத்து
சோர்விலாள் - கற்பின் நிலை பிறழாது வாழ்பவளே, பெண் - துணைவி யென்பது பதம்.

**(பொ.)** தனது கற்பின் நிலையைக் காத்துக்கொள்ளுவதுடன் தனது கணவனையுங் கவசம் போல் காத்து தனது நாவையுங்காத்து தானுங் கலங்காமல் நிற்பாளாயின் அவளையே கற்புநிறைப் பெண்ணெனன்பது பொழிப்பு.

**(க.)** பெண்ணென்னும் பெயர்பெற்றவள் தனது கற்பினைக்க தன் கணவனைக் காப்பதிலும், தன்னாவைக் காப்பதிலும் தளர்வுறாதிருப் பாளாயின் இல்வாழ்க்கைப் பெண்களில் அவளே சிறந்த கற்புடையா ளென்பது கருத்து.

**(வி.)** பெண்ணானவள் தனக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங் கவசத்தால் காத்துக்கொள்பவளாகவும், தனது கணவனுக்கு யாதொரு குறைவுமின்றி புசிப்பூட்டிக் காத்துக்கொள்பவளாகவும், தனது வாக்கினால் ஒருவரையுஞ் சுடச்சொல்லாது காத்துக்கொள்பவளாகவும் உள்ள நீதிநெறிக் கவசம் பூண்டு சோர்வுரா கற்பு நிலையில் நிற்பவளே பெண்களிற் சிறந்தவளென்பதற்கு சார்பாய் குறுந்திரட்டு "தலைவனைக்

காப்பதல்லால் தன்னையுங் காத்துகற்பி, நிலைதனிற் பிறழாநோன்பு நோற்பவளாவளென்னில், பலகலை பயின்றவில்லோன் பாக்கியவாளனென்னும், சிலைநுதல் விழியாள் வாழ்க்கை செவ்வையிற் செவ்வையாமே" என்னும் ஆதாரங்கொண்டு தன்னையும், தன் கணவனையும், தன் வாக்கையும் சீலகவசத்தால் மூடிக் காப்பவளே வாழ்க்கைத் துணை நலமாயப் பெண்ணென்பது விரிவு.

**7. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்**
**நிறைகாக்குங் காப்பதே தலை.**

**(ப.)** சிறைகாக்குங் - பெண்களின் கற்பைக் காக்குங், காப்பெவன் - காவலனெவன், செய்யு - மனைத்தொழிலை நடத்தும், மகளிர் - பெண்களின், நிறைகாக்குங் - கற்பிற்குக் குறைவராது, காப்பே - காத்துக்கொள்ளுபவளே, தலை - இல்லின் தலைவியாவாளென்பது பதம்.

**(பொ.)** பெண்களின் கற்பைக் காப்பவனும், வேறொருவனுளனோ, இல்லை, வாழ்க்கைத் துணையாம் இல்லாளே தனது கற்பைக் காத்துக் கொள்ளுவதே தலையென்பது பொழிப்பு.

**(க.)** பெண்கள் அவரவர்கள் கற்பை அவரவர்களே காத்துக்கொள்ள வேண்டுமேயன்றி தங்கள் காவலாளர்களேனும்

ஏனையோர்களாலேனுங் காக்கலாகாதென்பது கருத்து.

**(வி.)** படைமருண்ட பாலரையுங்காக்கலாம், கடல் மடைதிரண்ட வெள்ளத்தையுங் காக்கலாம், கருமுகில் பொழியு மழையையுங் காக்கலாம், பெண்களின் கற்பை எவராலுங் காக்கலாகாது. ஆதலின் பெண்களின் கற்பின் நிலையை அவரவர்களே காத்து வாழ்க்கைக்குத் தலைமெயாக விளங்கவேண்டு மென்பதற்குச் சார்பாய் குறுந்திரட்டு "மறைமொழி காக்குஞ் செங்கண் முநிவர்கள் அனந்தமுண்டு, நிறைமொழி காக்கு மன்னுதிடமுளோர் பலருமுண்டு, சிறையுளார் பெண்கள் காப்பைப் பெண்களே காப்பரன்றி, குறைவறக் கற்பையென்றுங் காப்பவரில்லை கண்டீர்" என்னுமுதுமொழிகொண்டு பெண்களினது கற்பைக் காக்கக்கூடியவனும் உலகத்திலுளனோ, இல்லை. அப்பெண்மணிகளே தங்கள் தங்கள் கற்பின் நிலையைக் காத்துக்கொள்ள வேண்டுமென்பது விரிவு.

## 8. பெற்றார் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப் புத்தேளிர் வாழு முலகு.

**(ப.)** பெண்டிர் - பெண்களுள், பெருஞ்சிறப்புப் - கற்பின் புகழை, பெற்றார் - அமைந்தவர்களை, பெறிற் - துணைவியாகப் பெற்றவர்கள், புத்தேளிர் - மெய்கண்டோர், வாழுமுலகு -

வானராட்சியத்தை, பெறுவர் - எவ்விதத்துஞ் சேருவார்களென்பது பதம்.

**(பொ.)** வாழ்க்கைக்குத் துணைவியாக அமைந்த பெண்மணியானவள் கற்பினது புகழைப் பெற்றிருப்பாளாயின் அவளது கணவன் எவ்விதத்தும் புத்ததேவனுலகைச் சேருவானென்பது பொழிப்பு.

**(க.)** கணவனுக்கு இனியவளாக இருந்து அவனது சொற்றவறாது நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் நான்குவகை சிறப்பினின்று இல்லறத்தை நடத்துவாளாயின் கணவன் எடுக்குஞ் செயல்கள் யாவுஞ் சீர்பெற முடிவதுடன் மனமாசு கழுவுதற்கு நல்லேதுவாக நிற்றலால் புத்ததேவன் உலகைச் சேருதற்கும் வழியுண்டாமென்பது கருத்து.

**(வி.)** இல்லறத்தில் கலைநூல் கற்று கடைத்தேறமுயலுவோனுக்கு கற்புடைய மனையாளுந் துணைவியாகச் சேருவாளாயின் அவ்வில்லத்தில் ஆனந்த தன்மம் பரவுவதுடன் இல்லோன் முடிக்கும் முயற்சிகள் யாவும் முட்டின்றி முடிவது இயல்பாதலின் அவற்றை உணர்ந்த பெரியோன் குடும்பிக்குத்தக்க குணவதியுஞ்சேருவாளாயின் தேகம் இரண்டாயின் மனம் ஒன்றித்துவாழுஞ் செயலால் நீதியும், நெறியும், வாய்மெயும்

நிலைத்து நீடிய சுகவாழ்க்கைப் பெற்ற காட்சியே வானராட்சியத்திற்கு ஆதாரமெனக்கண்டு, கற்பிற்கு இனியாளைத் துணைவியாகக் கொண்டவன் தனது நற்சுகப்பேற்றால் எவ்விதத்தும் புத்ததேவனுலகைச் சேருவானென்பதற்குச் சார்பாய் அருங்கலைச்செப்பு "இல்வாழ்க்கைக்கேற்ற விளம்பெண்ணமைவளேல், நல்லாக்கும் வீட்டிநிலை", "கணவனுக்கேற்ற கற்புடையாள் கூடின் துணையவியாகந் தூநெறியின் தூள்", "மனமொத்துவாழு மனையாளுமுண்டேல், கனமுற்ற வீடுதரும்", "அறநெறி வாழ்க்கை யமர்ந்தோ ளகத்துரில், பிறப்பறும் பாதைய துவாம்" என்னும் அதாரங்கொண்டு கற்புடைய மாதர் காட்சியே கனந்தருமென்பது விரிவு.

**9. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்**

**னேறுபோற் பீடு நடை.**

**(ப.)** பகம் புரிந் - கற்பினது சிறப்பு, தில்லிலோர்க் - இல்லாதவளை யடையவனுக்கு, கில்லை - யாதொரு சுகமுங்கிடையா, யிகழ்வார்முன் - தன்னைப் பமிப்போர்முன், னேறுபோற் - எறுமெபோல், பீடுநடை - வல்லநடை குன்றிபோ மென்பது பதம்.

**(பொ.)** கற்பினது புகழ்ச்சியில்லா மனையாளைச் சேர்ந்துள்ளவனுக்கு யாதொரு சுகமமில்லாததுடன் தன்னை

இகழ்வோ ரர்முன் தனது நடை வலுவுங்குன்றிப் போமென்பது பொழிப்பு.

**(க.)** இல்வாழ்க்கையில் புகழினைத்தரும் மனையாள் இல்லாதவனுக்கு சகல பாக்கியங்களுமிருந்தும் சுகமில்லாததுடன் தன்னை அவமதிப்போர் முன்பும் தனது வீரிய நடைக் குன்றிப்போமென்பது கருத்து.

**(வி.)** குணவதி, பதிவிரதி, கற்பிநிதி என்னும் புகழ்பெயரற்று நீலி யென்னும் பெயர்பெற்றவள் வாழ்க்கைக்குத் துணையாவளேல் பதிக்குப் பலபாக்கிய மிருந்தும் இல்லையென்பதுடன் தன்னை இகழ்வோரைக்கண்டு தலை குனிதற்கும் ஏதுவாகி தனது வீரிய நடையுங் குன்றி இழிவையும் பெறுவானென்பது விரிவு.

**10. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத**

**னன்கல னன்மக்கட் பேறு.**

**(ப.)** மங்கல மென்ப - மங்கல மென்று கூறுமொழி, மனைமாட்சி - மனைவியினது கற்பின் சிறப்பு, னன்மக்கட்பேறு - இனிய மக்களைப் பெறுதலுமேயாம், மற்றத வேறொன்றும் , னன்கல - மங்கலமல்லவென்பது பதம்.

**(பொ.)** மங்கலமென்று கூறுமொழியானது வாழ்க்கைத்துணைவியாம் இல்லாளினது கற்பின் சிறப்பும், இனிய

மக்களைப் பெறுதலுமென்பதே பொழிப்பு.

**(க.)** இல்லத்தில் சகலவாத்திய முழங்குதலும், வாழைக்கமுகை நாட்டுதலும், மஞ்சள் குங்குமந் தீட்டுதலும் மங்களமாகாவாம். மனையாள் கற்பினது சிறப்பும், நன்மக்கட் பேறும் மங்கள மென்பது கருத்து.

**(வி.)** இல்லந் திருத்தி சாந்திடுதலே மங்களமென்றும், தீபாலங்கிரதஞ் செய்வதே மங்களமென்றும், பற்பல வாத்தியகோஷ முழங்குவதே மங்கள் மென்றும், கோடியுடுத்திக் குங்குமமஞ்சள்பூசுவதே மங்கள் மென்றும், பல்லாண்டு கூறுவதே மங்களமென்றுங் கூறுவர். அவைகள் யாவும் மங்களமாகாவாம். மங்கலமென்பதியாதெனில்:- தலைவனும், தலைவியும் ஒருமனப்பட்டு அன்பு பொருந்தி வாழ்தலும், பெருமக்கள், இனியவர், கல்வியாளர் உபகாரிகள், ஒழுக்கமுள்ளாரென்னும் சிறப்புப் பெயர் பெறுதலுமே மங்கலமொழியின் விரிவு.

## 7. புதல்வரைப் பெறுதல்

மக்களின் சந்ததி மறையாமலும், குடும்ப விருத்திக்குறையாமலும், தங்கள் வரன்முறையோர் பெயர் அழியாமலும் நீடிய வாழ்க்கைப் பெறுதற்கு மக்கட்பேறே பெரிதாதலின் அதனது சிறப்பையும் அன்பையும் இவ்விடத்து விளக்குகின்றார்.

**1. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த**

**மக்கட் பேறல்ல பிற.**

**(ப.)** பெறுமவற்றுள் - புத்திரரைப் பெறுவதுள், யறிவறிந்த - விவேகமுதிர்ந்த, மக்கட்பேறல்ல - புத்திரரையன்றி, பிற - வேறொன்றும், யாமறிவதில்லை - யாம் கண்டிலோமென்பது பதம்.

**(பொ.)** விவேக மிகுத்தப் புத்திரரைப் பெறுவதினும் வேறாரு சிறப்பும் இல்லை என்பது பொழிப்பு,

**(க.)** ஓர் குடும்பத்தில் அறிவு மிகுத்த புத்திரரைப் பெறுதல் மேலான பாக்கியமேயன்றி வேறுபாக்கியம் இல்லையென்பது கருத்து.

**(வி.)** இல்லத்தில் தனபாக்கியம், தானியபாக்கியம், நிறைந்திருப்பினும் விவேகமிகுத்தப்புத்திரபாக்கியம் ஒன்றில்லாமற் போமாயின் மற்ற பாக்கியங்கள் யாவும் அழிவதற்கு ஏதுவுண்டாமன்றி விருத்திப் பெறாதென்பது அனுபவ மாதலின் குடும்பத்தில் தோன்றும் புத்திரர்களில் அறிவு மிகுத்த ஒருவன் தோன்றுவானாயின் அவனினும் மேலாய பொருளில்லையென்பதற்குச் சார்பாய் குறுந்திரட்டு "புத்திரப் பேற்றைப் பெறுமவனென்னிற் பேரறிவாளனேயாயின், முத்திரமூன்று மொழிமுதலாய்ந்து மோனமாமவ் வரம்பிருத்தி, சித்திரதீபம் போலசைவற்று தெய்வநற் கதிதனைப் பெற்று,

உத்தமவுரவின் முறையதே யென்று முலகெலா மோங்கு மெய்ப்போதம்' என்னும் மக்கட்பேற்றைப் பெறுதலில் விவேகமிகுத்தப்புத்திரரைப் பெறுதலினும் மேலாயப் பொருளில்லை என்பது விரிவு.

**2. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின்.**

**(ப.)** எழுபிறப்புந் - எழுவகைத் தோற்றங்களும், தீயவை - தீவினைப் பயனேயாம், தீண்டா - அவற்றைச் சாராதும், பழி - நிந்தை, பிறங்கா - ஒலியாதும், பண்புடை - குணங்குடியாகு, மக்கள் - புத்திரரை, பெறின் - பெறுவதே சிறப்பென்பது பதம்.

**(பொ.)** எழுவகைப் பிறப்புந் தீவினை போகத்தையே ஓராதாரமாகக் கொண்டு தோற்றலால் அத்தீவினைக்கணுகாதும் நிந்தையொலியாதும், நற்குணமமைந்த மக்களைப் பெற்று பிறப்பின் தோற்றம் ஒழிவதே சிறப்பென்பது பொழிப்பு.

**(க.)** வினைபோகமே எழுவகைத்தோற்றங்களுக்கும் ஆதாரமாதலின் அத்தீவினையை அணுகாதும் நிந்தைக்கு ஆளாகாததுமாய நற்குண மக்கள் தோன்றி நிருவாணம் பெறுதலே மேலாம் என்பது கருத்து.

**(வி.)** தேவர், மக்கள், விலங்கு, பட்சி, தாபரம், ஊர்வனம், நீர் வாழ்வனம், ஆகிய எழுவகைத் தோற்றங்களுக்கும் தீவினையே பீடமாதலின் அத்தகைய தீவினைக் காளாகாதும், பழிபாவத்துக்கு ஆளாகாதும் விவேகமுற்று நற்குணம் அமையும் மக்களைப் பெற்று தாங்கள் சிறப்படைவதுடன் மக்கள் பெற்ற பெரும் பேற்றால் உலக மக்களும் அறிவுவிருத்திப் பெற்று கடைத்தேறுவார் களென்பது விரிவு

**3. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு**
**டந்தம் வினையான் வரும்.**

**(ப.)** தம் பொரு- தன்னுடைய பொருள், ளென்பதம் - என்பதூஉம், மக்கள் - புத்திரர், அவர்பொரு - அவர்களுடைய பொருளும், டந்தம் - தங்கடங்கள், வினையான் - கன்மத்திற்கீடாய், வரும் - சேருமென்பது பதம்.

**(பொ.)** தங்கள் பொருளென்பதும் தங்கள் புத்திரர்கள் பொருளென்பதும் அவரவர்கள் வினைக்கீடாகவந் தமையும் என்பது பொழிப்பு.

**(க.)** தாங்கள் பெற்ற பொருளும், தங்கள் புத்திரர் பெற்ற பொருளும் அவரவர்கள் வினைக்கீடாக வந்தமையினும் தந்தை

பொருள் மைந்தனுடையதும், மைந்தன் பொருள் தந்தையுடையது என்பது கருத்து.

**(வி.)** தந்தையது பொருள் மைந்தனுடையதும், மைந்தனது பொருள் தந்தையுடையதுமாக விளங்கலால், தந்தையது தீவினை மைந்தனைத் தழுவியும், மைந்தனது தீவினைத் தந்தையைத் தழுவியும் வருதலைக்கண்ட பெரியோன் பண்பமைந்தப் புத்திரனைப்பெறுதலே பெரும்பாக்கியமென்றுங் கூறுதற்கு இயைந்து தந்தை பொருளே மைந்தன் பொருளென்றும், மைந்தன் பொருளே தந்தை பொருளென்றும் பொய்ப்பொருள் விளக்கி நல்வினைபயனால் உண்டாம் மெய்ப்பொருளை உணறுதற்கு நற்குணமமைந்த மைந்தனைப் பெற விரும்பும் தந்தையும் நற்குணனாகவே விளங்கவேண்டுமென்பது விரிவு.

**4. அமிழ்தினு மாற்ற லினதே தம்மக்கள்**

**சிறுகை யளாவிய கூழ்.**

**(ப.)** அமிழ்தினு - சுவைமிகுத்த பானத்தினும், மாற்றலினிதே - மிக்க மேலாயது, தம்மக்கள் - தனது புத்திரர்கள், சிறுகை - சிறுத்த கைகளால், யளாவிய - தொழாவிய, கூழ் - மாவின் கஞ்சு என்பது பதம்.

**(பொ).** தான் ஏழைக் குடும்பியாகிக் கூழருந்தினும் தனது புத்திரர் சிறுவிரல் களிட்டு அக்கூழைத் தொழாவுவார்களாயின் புத்திரரின்

இன்பப் பெருக்கே அக்கூழை அமுதினும் இனிதாகக் கொள்ளுவரென்பது பொழிப்பு.

**(க.)** புத்திரர்கள் மீதுள்ள இன்பப்பெருக்கத்தால் அவர்களது சிறிய விரல்களால் தொழாவியது கூழேயாயினும் அதனை தேவாமிர்தத்திற்கு ஒப்பாகப் புசிப்பாரென்பது கருத்து.

**(வி.)** அன்பும், இன்புந் திரண்ட உருவே புத்திரபாக்கியமாகத் தோன்றலால் அவர்கள் சிறுவிரலால் தொழாவியது கூழேயாயினும் அதனை இனிய அமுதினும் மேலாகக் கொண்டு புசிப்பதுடன் அச்சிறு விரல்களையும் ஆனந்தமாக சுவைப்பார்களென்பது விரிவு.

**5. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்**
**சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.**

**(ப.)** மக்கண் - குழந்தைகளினது, மெய்தீண்ட - தேகத்தைத் தொடுதல், லுடற்கின்ப - பிதாவினது உடலுக் கின்பந்தரும், மற்றவர் - மற்று மக்குழவியினது, சொற்கேட்ட - மதலைசொற் கேட்டல், செவிக்கு - காதிற்கு, லின்பஞ் - இன்பத்தை விளைவிக்குமென்பது பதம்.

**(பொ.)** குழவிகளை எடுத்துத் தீண்டல் உடலுக் கின்பத்தையும், அதனது மதலைச்சொற்களைக் கேட்டல் செவிக்கு இன்பத்தையுந் தருமென்பது

பொழிப்பு

**(க.)** அருங் குழவிகளது உடலேனும் பாதமணுந் தங்களுடலிற் படில் அரியவின்பத்தையும், அக்குழந்தைகளினது இனிய மதலைச்சொற்களை செவிகளிற் கேட்டல் அதனினும் இன்பத்தைத் தருமென்பது கருத்து.

**(வி.)** பஞ்சஸ்கந்தங்களுடன் அன்பும் இன்புஞ் சேர்ந்து அரியக்குழந்தையாகத் தோன்றுதல் இயல்பாதலின் அதன் தோற்றங்கண்ட பெரியோன் குழந்தைகளின் மதலைச்சொற்களைக் கேட்டலும், அதனுடலைத் தழூஉதலும் அதி இன்பந்தருமெனக் கூறியவற்றிற்குச் சார்பாய் புறநானூறு "படைப்புப் பலபடைத்துப் பலரோடுண்ணும், உடைப்பெருஞ் செல்வராயினுமிடைப்படக், குறுகுறு நடந்து சிறுகைநீட்டி, யீட்டுந் தொட்டுங் கௌவியுந்துழந்து நெய்யுடையடிசின் மெய்பட விதிர்த்து, மயக்குறு மக்களை இல்லோர் பயக்குறவிலர்தாம் வாழுநாளே" என்பது கொண்டு மதலைசொற் கேட்டலும் அதனுடல் தழுவுதலுமே இன்பநிலையாம் இல்லறவியல் என்பது விரிவு.

**6. குழலினி தியாழினி தென்பதம் மக்கண்**

**மழலைச்சொற் கேளா தவர்.**

**(ப.)** மக்கண் - குழந்தைகளது, மழலைச்சொற்-குதலைமொழிகளை, கேளாதவர் - செவியிற் கேட்டறியாதவர்கள், குழலினி - புள்ளாங்குழலினோசை யினிது, தியாழினி - வீணையினோசை யினிது, தென்பதம் - என்று
கூறுவரென்பது பதம்,

**(பொ.)** தாங்கள் ஈன்றக் குழந்தைகளினது மதலைமொழியின் இன்பத்தைக் கேட்டுணராதவர்கள் புள்ளாங்குழலோசையையும், வீணை யினோசையையுமே நன்கு மதிப்பரென்பது பொழிப்பு.

**(க.)** குழந்தைகளின் இனிய மொழிகளைக் கேட்டு இன்புறாதவர்கள் குழலினோசையையும், வீணையினோசையையுமே விசேஷம் மதிப்பார் களென்பது கருத்து.

**(வி.)** வீணையினோசையும், புள்ளாங்குழலினோசையும் பெரிதல்ல. மக்களினது மதலைமொழிகளினோசையே மிக்க இன்பத்தைத் தருமென்பதை விளக்குவான்வேண்டி மக்களைப் பெறாதோர் செவியின் இன்பத்தையும், பெற்றோர்கள் செவியினின்பத்தையும் இனிது விளக்கியுள்ளவற்றிற்குச் சார்பாய் பாரதம் "கல்லாமழலைக்கனியூற்ற கலந்துகொஞ்சுஞ், சொல்லாலுருக்கி யழுதோடித் துடர்ந்து பற்றி, மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சிமைந்தர், இல்லாதவர்க்கு மனைவாழ்

வினினிமெயென்னாம் " மக்கள் பெருக்கே இனிது கண்டு அவர்களது இனிய ஓசையே மற்ற இசைகள் யாவிற்கும் மேலாயதென்பது விரிவு.

### 7. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து முந்தி யிருப்பச் செயல்.

**(ப.)** தந்தை - தகப்பனானவன், மகற்காற்று - தன்மைந்தனுக் கூட்டியுள்ள நல்லொழுக்கத்திற்கு, நன்றி - பிரிதியுபகாரமியாதெனில், வையத்து - உலகத்தில், செயல் - அந்நற்செயல், முந்தியிருப்ப - சகலருக்கும் நன்கு விளங்குக வென்பது பதம்.

**(பொ.)** தகப்பன் மகனுக்கு ஊட்டியுள்ள நல்லொழுக்கப்பயிற்சிக்கு மைந்தன் செய்யும் பிரிதியுபகாரம் யாதெனில் உலகத்தில் நல்லொழுக்க மைந்தனென முந்தவிளங்குவதே அதன் பொழிப்பு.

**(க.)** மைந்தனானவன் தனதுதந்தையால் கற்பித்துக்கொண்ட ஆற்றலாம் நல்லொழுக்க சுகத்திற்குப் பிரதி நன்றி யாதெனில் உலகமக்களுள் நல்லோனென முந்தயிருப்பதே அதன் கருத்து.

**(வி.)** பிதாவானவன் நல்லொழுக்க ஆற்றலுடையவனாயிருந்து தன் மைந்தனை நல்லொழுக்க ஆற்றலடையச்செய்த நன்றிக்கு மைந்தனது பிரதிநன்றியாதெனில் உடலகமக்களில் நற்செயல் வாய்த்தோன், நற்கடை பிடித்தோன், நல்லவனெனத் தந்தையின் பெயரை முந்த விளக்குவதே அதன் விரிவு.

**8. தம்மிற் றம்மக்க ளறிவுடைமெ மானிலத்து**

**மன்னுயிர்க் கெல்லா மினிது.**

**(ப.)** தம்மிற் - தன்னினும், றம்மக்க - தனது புத்திரர்கள், ளறிவுடைமெ - மேலாய வறிவுடையவர்களாக விளங்குவார்களாயின், மானிலத்து - சிறந்த பூமியினிடத்துள்ள, மன்னுயிர்க் கெல்லா - சருவ சீவர்களுக்கெல்லாம், மினிது - சுகந்தருமென்பது பதம்.

**(பொ.)** தன்னைவிட தனது புத்திரர்கள் மேலாய விவேகமிகுத்திருப்பார் களாயின் சருவ சீவர்களுக்கும் இனியவர்களாக விளங்குவார்களென்பது பொழிப்பு

**(க.)** தான் கல்வியைக்கற்று விவேகவிருத்திப் பெறாதவனாயினும் தனது மக்களுக்கு விவேகவிருத்தி செய்விப்பானாயின் அவர்கள் சகலவுயிர்களிடத்தும் இனியவர்களாக விளங்குவார்களென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் மானிகளாகத் தோன்றியுள்ள மானிடர்கள் அறிவை விருத்தி செய்யுங் கலை நூற்களைக் கல்லாவிடினும் தங்கள் மக்களுக்குக் கற்பித்து அறிவின் விருத்தியை செய்விப்பார்களாயின் தங்கள் மக்களது விவேக விருத்தியால் கருணை மிகுத்து சருவவுயிர்களையுந் தன்னுயிர் போல் பாதுகாக்கும் இனியச்

செயலால் மன்னுயிர்கள் யாவும் அவர்களை ஓம்பற்குத் தங்கள் மக்களைத் தங்களுக்குமேலாய விவேகவிருத்தி செய்விக்கவேண்டு மென்பதற்குச் சார்பாய் பாசமாட்சி" எந்நெறியானுமிறைவன்றன் மக்களைச் செந்நெறிமேனிற்பச்செயல்வேண்டு - மன்னெறி, மான் சேர்ந்த நோக்கினா யாங்கவணங்காகுந், தான் செய்த பாவை தனக்கு" என்பது பொருந்தத் தன்மக்களை தன்னினும் விவேகமிகுதிபெறக் கற்பிக்கவேண்டுமென்பது விரிவு.

**9. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**

**சான்றோ னெனக் கேட்ட தாய்.**

**(ப.)** ஈன்றபொழுதிற் மைந்தனைப் பெற்றபொழு துண்டாகிய மகிழ்ச்சியினும், பெரிதுவக்கும் - பெருமகிழ்ச்சியாக விளங்கும், தன்மகனை - தனது புத்திரனை, நான் றோனென - மேன்மகனெனச் சொல்லக்கேட்ட, தாய் - யீன்றவளுக் கென்பது பதம்.

**(பொ).** மைந்தனைப் பெற்றபொழு துண்டாகிய ஆனந்தத்தினும் மற்றவர்களால் அவனை விவேகமிகுத்த மேன்மகனென்று சொல்லக்கேட்ட தாயானவள் அதனினும் மேலாய ஆனந்தங்கொள்ளுவாள் என்பது பொழிப்பு. தக்கிரனைப்பெற்றபோ துண்டாய வானந்தத்தினும் அவனை மவேததக்க மேன்மகனென்று சொல்லக்கேட்ட தாயானவள் அதனினும் மேலாய வானந்தங்கொள்ளுவாள் என்பது கருத்து.

**(வி.)** இல்லறத்தை நல்லறமென நடாத்துந் தாயானவள் தனக்கோர் புத்திரபாக்கியங் கிடைத்தபோ துண்டாய ஆனந்தத்தினும் தந்தை தாயர் சொற்கடவாது அவர்களை தெய்வமாகக் கொண்டாடுவதுடன் ஏனையோர் களால் உனது மைந்தன் மிக்க விவேகமிகுத்தவனென்றும், சாந்தரூபியென்றும், அந்தணனென்றும் சொல்லக் கேள்விப்படுவாளாயின் அதனினு மேலாய ஆனந்தங்கொள்ளுவாளென்பதற்குச் சார்பாய் காசிகாண்டம் "தந்தைதாய் பணித்தல் செய்யுந் தவமலாற்றவம் வேறில்லை, மைந்தர் நற் கதியை வேண்டில் வணங்குவர் தாயைத்தந்தை, அந்தமைந்தனையே போற்றல் வேண்டுமற்றவ ரன்னாற், சிந்தையுற்றுணரிற்றாயே தந்தையுட் சிறந்தாண் மன்னோ " என்னும் ஆதாரங்கொண்டு புத்திரபாக்கியம் பெற்ற ஆனந்தத்தினும் தனது மைந்தனின் ஞானபாக்கியத்தையுங் கேட்பாளாயின் அதனினு மிக்க ஆனந்தங் கொள்ளுவாளென்னுந் தாயினது சிறப்பைக் கூறும் விரிவு.

## 10. மகன்றந்தைக் காற்று முதவியிவன் றந்தை யென்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்

**(ப)** மகன் - புத்திரனானவன், றந்தைக்காற்று - தனது தகப்பனுக் கன்புடன் செய்துவரும், முதவி - உபகாரத்தைக்காண்போர், யிவன்றந்தை - இவனுடைய தகப்பனானவன், யென்னோற்றான் -

ஏது நற்றவத்தைச் செய்தானோவென கொல்லென்னுஞ்சொல் - சகலருங் கேட்கப் பேசிக் கொள்ளுவார்களென்பது பதம்.

**(பொ.)** புத்திரன் தனது தகப்பனுக்குச் செய்துவரும் அன்பின் மிகுத்த வுபகாரத்தைக் காண்போர் இவனது தந்தையேது தவத்தைச் செய்து இப்புத்திரனைப் பெற்றானோவென ஒலிக்கப் பேசிக்கொள்ளுவார்களென்பது பொழிப்பு.

**(க)** மைந்தன் தனது தகப்பனுக்குச் செய்துவரும் நன்றியறிதலாம் அன்பின் மிகுத்த அரிய வுபகாரச் செயல்களைக் காண்போர்கள் யாவருங் கொல்லென்று பேசிக்கொள்ளும் மொழிகள் யாதெனில் இவன்றந்தை எத்தகைய வரிய நோன்பினைனூற்று இப்புத்திரனைப் பெற்றானோ என்பார்களென்பது கருத்து.

**(வி.)** தகப்பன் செய்துவந்த அரிய தபோபலத்தால் சற்புத்திரன் தோன்றி அவனன்பு மிக்கச் செய்துவரும் உபகாரச் செயல்களைக் காண்போர் புத்திரபேற்றிற்காய் அவன்றந்தை நூற்ற நோன்பினையே ஆதாரமாகக் கொண்டு என்னூற்றான் இவன் றந்தையெனத் தகப்பனது நற்செயலை விளக்கிய விரிவு.

**8. அன்புடைமெய்**

அதாவது இல்லறம் இனிது நடாத்தலுக்கும், பிறவுயிரோம்பலுக்கும், வாழ்க்கைத்துணைநலமாதலுக்கும்,

அறவோர்க்களித்தலுக்கும், யதார்த்த அந்தணரை ஓம்பலுக்கும், இழிந்தோரை ஏற்றலுக்கும், மெலிந்தோரைக் காத்தலுக்கும், அன்பே ஆதாரமென்பதைக்கண்ட நமது நாயன் இவ்விடம் அன்பினது சிறப்பை விளக்குகின்றார். உடல் தோற்றாவிடத்து அன்புந் தோற்றாதாதலின் உடல் கொண்ட அன்பினை விளக்குமாறு அன்புடைமெ யென்னும் பெயர்பெற்றது.

**1. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்**

**புன்கணீர் பூச றரும்.**

**(ப.)** அன்பிற்கு - உழுவலுக்கும், உண்டோ - உளவோ, வடைக்குந்தா - காப்புச் செயல், (இல்லை ) ழார்வலர் - அன்பின் மிக்கோர், புன்கணீர் - துன்புருவோரைக் காணுங்கால் விடுங் கண்ணீரே, பூசறரும் - அடைபடா வன்பினை விளக்குமென்பது பதம்.

**(பொ.)** அன்பினை தாளிட்டடைக்குங் கதவில்லை. அதாவது துன்புருவோரைக் காணுங்கால் அன்புடையோர் விடுங்கண்ணீரே அடைபடாவன்பின்மிகுதியைக் காட்டுமென்பது பொழிப்பு.

**(க.)** எத்தகைய வன்னெஞ்சனாயினும் தன்னினத்துன்பத்தைக் காணுவானாயின் தனக்குள்ள அன்பின் அடைபடாவழியால் ஆற்றொணா கண்ணீரைப் பெருக்குவான் ஆதலின் அன்பினை யடைக்குங் கதவுவொன்றில்லை யென்பது கருத்து.

**(வி.)** சருவசீவர்களையு மடித்துத் தின்னும் துஷ்டப்புலியேயாயினும் தனது குட்டிகளுடன் அன்பு பொருந்தக் கூடி விளையாடும். சகல மக்களுக்குந் துன்பத்தை விளைவிக்கும் விஷத்தேளேயாயினுந் தன்னினத்துடன் அன்பு பொருந்த வாழும். விஷம்பெற்றப் பாம்புகளேயாயினும் தன்னினத்துடன் அன்பு பொருந்தி விளையாடும். ஆட்டுக்கொலை, மாட்டுக்கொலை, மனிதக்கொலைபுரியுங் கொலைஞர் கூட்டத்தோரேயாயினும் அவர்கள் உரவின்முறையோருடன் அன்பு பொருந்தியே வாழ்வார்கள். அன்னிய மக்கட் பொருளை அடித்து பரிக்குங் கள்ளர்கள் கூட்டத்தோர்களேயாயினும் தங்கடங்கள் கூட்டத்தோர்களுடன் அன்பு பொருந்தியே வாழ்வார்கள். ஆதலின் சருவசீவர்களின் விருத்திக்குங் காரணம் அன்பென்றே கண்டுணர்ந்த நமதையன் அன்பினையடைக்கு மோர் தாளில்லையென்பதைத் துணிந்து கூறியுள்ளா ரென்பது விரிவு.

**2. அன்பிலா ரெல்லாந் தமக்குரியரன்புடையா**

**ரென்பு முரியர் பிறர்க்கு.**

**(ப.)** அன்பிலா - உழுவிலார், ரெல்லாந் - எல்லவரும், தமக்குரிய - தமக் குரியவர்களுக்கே வுபகாரிகளாவர், ரன்புடையா - அன்பின் மிக்கோர், பிறர்க்கு - அன்னியர்களுக்கு, ரென்பு முரியர் - தங்களன்பையும் உரியதென வருள்வாரென்பது பதம்.

**(பொ.)** அன்பின் மிகுத்த மேலோரது என்பும் பிறருக்கு வுபகாரிகளாக விளங்கும். அன்பிலாக் கீழோர் தங்களுக்குரியவர்களுக்கு மட்டிலும் உபகாரி களாவரென்பது பொழிப்பு.

**(க.)** சருவசீவர்களையும் அன்பு பொருந்தி காப்பவர்கள் எலும்புந்தோலு மாக மெலிவுறினும் பிறர்க்குபகாரஞ்செய்வதையே நோக்குவர். அன்பிலார் தன சம்பத்தைப் பெற்று தடி சோம்பலுற்றிருப்பினும் தனது சுற்றத்தோருக்கே வுபகாரிகளாக விளங்குவார்களென்பது கருத்து.

**(வி.)** சீவகாருண்யமற்ற அன்பிலார்கள் தங்களுக்குரிய சுற்றத்தோர் களுக்கே உபகாரிகளாக விளங்குவார்களன்றி ஏனைய மக்களையும் ஏனைய சீவப்பிராணிகளையும் நோக்கார்கள். சீவகாருண்யமும் அன்பும் நிறைந்தவர்கள் என்பேவோருருவென் மெலிந்திருப்பினும் ஏனைய மக்களுடையவும் ஏனைய சீவப்பிராணிகளுடையவுந் துக்கங்களையே நீக்கி ரட்சிப்பார்கள். இதற்குச் சான்றாய் மூவாயிரவருடங்களுக்கு முன்பு அன்பே வோருருவெனத் தோன்றி சிவனென்னும் பெயரும் பெற்று அவலோகிதனென விளங்கிய சித்தார்த்தி சக்கிரவர்த்தியை தகனஞ்செய்த யென்பும் அன்பு கொண்டுள்ளதென்பதை தற்கால பிரிட்டிஷ் ஆட்சியார் பிஷவாரென்னுந் தேசத்துப் புராதனக் கட்டிடத்தை தோண்டியகால்

கண்டெடுத்த சித்தார்த்தரது என்பினை கண்டு அன்புருகி அகிலமெங்கும் அறிவித்ததினால் அவ்வென்பின்மீது அன்பார்ந்த வோர் பர்ம்மியவம்மை சிறந்த கட்டிடங்கட்டி அதனுள் வைக்கவேண்டுமென ஒருலட்ச ரூபாய் உடனுக்குடன் அனுப்பிய அன்பின் மிகுதி என்பினதுதோற்றமா அன்றேல் அன்பினது தோற்றமா என்றாராயுங்கால் அன்பின் மிகுத்த சிறந்த வருவினது என்பின் தோற்றமேயாதலின் அன்பின் மிக்கோர் என்பு ம் பிறருக்குரிய தாகுமென்பது விரிவு.

### 3. அன்போ டியைந்த வழக்கென் பவாருயிர்க் கென்போ டியைந்த தொடர்பு.

**(ப.)** வாருயிர்க் - தோற்று மக்களுக்கு, கென்போடியைந்த - எலும்பினோ டமைந்த தொடர்பு - விட்டகுறை யாதெனில், அன்போடியைந்த - அன்பினோடு பொருந்திய, வழக்கென்ப - இயல் பென்பது பதம்.

**(பொ.)** சருவ வுயிர்களின் தோற்ற நல்லொழுக்கங்களுக்கும் ஆதாரமாக நின்று விளங்குவது பூர்வ என்பென்னும் உருவக அன்பின் வழக்கே விட்டகுறைவில் வந்து தோன்றுமென்பது பொழிப்பு.

**(க.)** அவனவன் அன்பின் விருத்திக்கும், அன்பின் குறைவிற்கும் ஆதாரபீடமாகத் தொடர்ந்து வருவது என்புடன் தொடர்ந்த அன்பின் உருவகமேயாதலின் சருவவுயிர்களுக்கும் உண்டாகும் அன்பின் தொடர்பு என்போடியைந்தவை யென்பது கருத்து.

**(வி.)** சருவ சீவர்களின் விருத்திக்கும் அதனானந்தத்திற்கும் ஆதாரமாகத் தொடர்ந்து நிற்பது என்பென்னும் உருவகத் தோடமைந்த அன்பின் தொடர்பேயாதலின் அன்போடியைந்து செய்துவரும் வழக்கங்கள் யாவும் உடலோடியைந்துத் தொடர்ந்து வருவதியல்பென்றறிந்த நாயன் என்டே பாயைந்த தொடர்பென்று கூறிய விரிவாம்.

## 4. அன்பீ னுமார்வமுடைமெ யதுவீனு
## நண்பென்னு நாடாச் சிறப்பு.

**(ப.)** அன்பீனு - உழுவலாவதை பிறப்பிக்கும், மார்வமுடைமெ - அன்பின் மிகுத்த தேகியை, யதுவீனு - அது பிறப்பிக்கும், நண்பென்னு - இனிய நேயத்தால், நாடாச்சிறப்பு - அழியாப் புகழைத் தருமென்பது பதம்.

**(பொ.)** அன்பே அன்பின் மிகுதியைத் தோற்றுவிக்கும். அவ்வன்பின் மிகுத்ததேகி இனிய நட்பை தோற்றுவிப்பான். அவ்வினிய நட்பால் சகலமக்களாலும் அழியாப்புகழைப் பெறுவானென்பது பதம்.

**(க)** அன்பு யாவரிடத்துண்டோ அவ்வன்பை யின்னும் பெருக்கல் வேண்டும். அதின் பெருக்கத்தால் அன்புடையோனெனத் தோற்றல் வேண்டும். அத்தோற்றத்தால் சகலருக்கும் இனிய நண்பனென விளங்கவேண்டும். அவ்விளக்கத்தால் அழியாப்புகழைப் பெறுவானென்பது கருத்து

**(வி.)** அன்பின் பெருக்கமே அன்பனென்னும் ஒருருவத்தை விளக்கும். அவ்வுருவமே சகலருக்கும் இனிய நேயனெனத் தோற்றும். அன்பின் மிகுத்தத் தோற்றமே சகலராலுமினிய நேயனெனக் கொண்டாடுஞ் சிறப்பென்பதற்குச் சார்பாய் அறநெறித்தீபம் "பல்லோர் தற்பணிவனவும் பகை கெடதர்மம் பெருகுவதும், இல்லார்க்கொன்றீவது மினியவே புகலுவது, நல்லார் கண்டுவப்பது நலிவா நோயின் மெயும், எல்லார்க்குமுயிர்நிலையா மன்புடைய பயனென்பார் என்னும் ஆதாரங்கொண்டு அன்பின் பயனே அழியாப் புகழைத் தருமென்பது விரிவு.

**5. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்**

**தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.**

**(ப.)** அன்புற்றமர்ந்த - அன்பு பொருந்த நிலைத்த, வழக்கென்ப - இயல்பானது, வையகத் - பூமியின் கண், தின்புற்றார் - பேரின்ப

சுவையை, ரெய்துஞ் - அனுபவிக்கும், சிறப்பு - புகழைத்தரு மென்பது பதம்.

**(பொ)** சருவ செயலிலும் அன்பு பொருந்தி வாழும் வழக்கமானது பூமியின் கண் ஞானசாதனத்தோர் சுகிக்கும் பேரின்பத் திற்கீடாய சிறப்பை யடையச் செய்யுமென்பது பொழிப்பு

**(க.)** சருவசீவர்கண் மீதும், சருவச்செயல்களின் மீதும் அன்பு பொருந்தச் செய்யுஞ் செயல்கள் இயல்பாகவே நிகழ்ந்துவரின் அதன் பயனை பேரின்பத்திற் கொப்பாக சிறப்பிப்பார்களென்பது கருத்து.

**(வி.)** மனைவி மக்களுடன் கூடி வாழும் இல்வாழ்வோன் தனது வாழ்க்கையை அன்பு பொருந்தி நடாத்தி வருவானாயின் இல்லந்துறந்த மகாஞானிகளடையுஞ் சிறப்பை இவன் அடைவானென்பது விரிவு,

**6. அறத்திற்கே யன்பு சார்பென்ப வறியார்**
**மறத்திற்கு மஃதே துணை.**

**(ப.)** அறத்திற்கே - தன்மத்திற்கே, அன்பு - உழுவல், சார்பென்ப - உடைந்தை யாமென்ப, வறியார் - ஏழைகளது, மறத்திற்கு - யீகையற்றச் செயலுக்கும், மஃதே - அவ்வன்பே, துணை உதவியாயிருந்து யீகையைத் தருமென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தைச் செய்தற்கு அன்பே ஆதாரமாயிருந்துச் செய்வது போல் ஏழைகளது தன்மமில்லாச் செயலுக்கும் அன்பே ஆதாரமாயிருந்து தன்மத்தை செய்விக்குமென்பது பொழிப்பு.

**(க.)** கனதனவான்கள் செய்துவருந் தன்மத்திற்கு அன்பே ஆதாரமாய் இருந்துவருவதுபோல் ஏதுமற்ற யேழைகளுக்கும் அவ்வன்பே ஆதாரமாயிருந்து மறக்கருணையைப் போக்கி அறக்கருணையை யுண்டு செய்யுமென்பது கருத்து.

**(வி.)** கனதன மிக்கோன் ஒருவன் மறமாம் உலோபநிலையுற்று அன்பற்று தன்மத்தை மறக்கின்றான். தனமில்லா னொருவன் அறமாம் யீகைநிலையுற்று அன்புற்று தன்மத்தைச் செய்கின்றான். இவ்விருவருள் தனமில்லானுக் கன்பும், தனமுள்ளோனுக் கன்புமில்லாமலிருப்பது சகஜமேயாயினும் ஓர்கால் அவ்விலோபிக்கும் அன்பே ஆதாரமாகி தன்மத்தை செய்விப்பது சகஜமாதலின் அறத்திற்குஞ் சார்பு அன்பு, மறத்திற்குஞ் சார்பு அன்பு என்பதை விவரித்த விரிவாம்.

**7. என்பி லதனை வெயிற் போலக் காயுமே**
**அன்பி லதனை யறம்**

**(ப.)** என்பிலதனை - என்பிலாப்புழுவை, வெயில் போலக் - சூரியனது வெப்பம் போலக் காயுமே - தீய்ப்பது போல்,

அன்பிலதனையறம் - தன்மமே சுடுமென்பது பதம்.

(பொ.) எலும்பில்லாப் புழுவை சூரிய வெப்பமானது தகிப்பது போல் அன்பில் லாதவனை அறந் தகிக்குமென்பது பொழிப்பு

**(க.)** அன்பில்லாதோன் தனம் எடுப்பதற்குஞ் சுடும், கொடுப்பதற்குஞ் சுடும். அவை யெவ்வகைத் தென்னில் என்பில்லாப் புழுவானது சூரியனின் வெப்பத்தினால் எழுகையிலுஞ் சுடும், தவழ்கையிலுஞ் சுடுமென்பது கருத்து.

**(வி.)** என்பில்லாப் புழுக்கள் சூரியனது வெப்பத்தால் சூடு கொண்டழிவது போல் அன்பில்லாதோன் செய்யுந் தன்மமானது அவனுக்குள்ள உலோய அக்கினியால் சூடுகொண்டு தன்னிற்றானே கெடுவானென்பது விரிவு.

**8. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்**

**வற்றன் மாந்தளிர்த் தற்று.**

**(ப.)** அன்பகத்தில்லா - உள்ளத்தின்கண் அன்பில்லா, வுயிர்வாழ்க்கை சீவியச் செயலானது, (எவ்வகைத்தென்னில்) வன்பாற்கண் - கொடிய பாலைநிலத்திடத்தே, வற்றன் - காய்ந்த மரம் - விருட்சம், தளிர்த்தற்று - துளிர்த்ததற் கொக்குமென்பது பதம்.

**(பொ).** அகத்தி னிடத்தே அன்பிலாதோன் வாழும் வாழ்க்கையானது பாலை நிலத்திற்பட்ட மரந்

துளிர்ப்பதற்கொக்குமென்பது பொழிப்பு

**(க.)** இல்லற வாழ்க்கையை இனிதுநடாத்துவோன் உள்ளத்தில் அன்பென்பது இல்லாமற்போமாயின் அவ்வாழ்க்கைக்கு சுகமில்லையாகும். எவ்வகையென்னில் பாலை நிலத்திற் பட்ட மரந் துளிர்க்காததுபோ லென்பது கருத்து.

**(வி.)** கொடிய பாலை நிலமானது நன்னிலமல்லாக் காந்தளாதலின் அதனிற்பட்ட மரந் துளிர்க்காதென்பது துணிபு. அதுபோல் அகத்துள் அன்பில்லா வன்னெஞ்சரது வாழ்க்கை எஞ்ஞான்றுஞ் சுகத்தைத் தாராவென்பது விரிவு

**9. பறத்துறுப் பெல்லா மெவன் செய்யும் யாக்கை**
**யகத்துறுப் பன்பில வர்க்கு.**

**(ப.)** பயகத்துறுப் - உள்ளத்தின்கண், பன்பிலவர்க்கு - அன்பில்லாதவர் களுக்கு, புறத்துறுப் பெல்லா - மற்ற புறவுறுப்புகளெல்லாம், யாக்கை - உடலுக்கு, மெவன் செயும் - என்னபயனைத் தருமென்பது பதம்.

**(பொ)** உள்ளன் பில்லா வுடலுக்குப் பலவுறுப்புகளிருந்தும் பயனில்லை யென்பது பொழிப்பு
இலக்கியம் கா

**(க.)** அன்பிலா யாக்கை யழிவதே மேலாயதன்றி அஃது வுலக வாழ்க்கையைப் பெறுதலில் பயனில்லையென்பது கருத்து.

**(வி.)** உடலுக்கொற்ற வுறுப்புகள் யாவுங் குறைவற நிறைந்திருப்பினும் அன்பொன்றில்லாமற்போமாயின் அவ்வுறுப்புகள் யாவும் பயனற்றவனவாதலின் அகத்துறுப்பில் அன்பில்லாமற்போமாயின் புறத்துறுப்புகள் யாவுஞ் குறைவறவிருந்தும் பயனில்லையென்பது விரிவு.

**10. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்**
**கென்புதோல் போர்த்த வுடம்பு.**

**(ப.)** அன்பின் வழிய - அன்பிற்கு வழியாக நிற்பது, துயிர்நிலை - உயிரின் றன்னிலை யென்னப்படும், யஃதில்லார்க் - அவ்வகையில்லாதோர், (உயிரற்ற) கென்பு தோல் - என்பினையுந் தோலையும், போர்த்த வுடம்பு - மூடிக்கொண்டுள்ள தேகமென்பது பதம்.

**(பொ.)** உயிரிற்கு ஆதாரமாகவும் பீடமுமாகவும் நிற்பது அன் பென்னப்படும், அவ்வன்பில்லாவிடத்து உயிருமில்லாமற்போம். அவ்வுயிருமில்லாதவிடத்து எலும்புந் தோலும் போர்த்த வுடலே வுள்ள தென்பது பொழிப்பு.

**(க.)** உயிர்நிலைக்குறுதி யன்பும், அன்புக்குறுதி உயிர்நிலையுமா யுள்ளபடியால் அன்பில்லாவிடத்து உயிரில்லையென்றும், உயிரில்லாவிடத்து என்பு தோல் போர்த்த வுடலையொக்குமென்பது கருத்து.

**(வி.)** அன்பு பெருகியவிடத்து உயிர்வாழ்க்கைப் பெருகுமென்றும் அன்பு பெருகாவிடத்து உயிர்வாழ்க்கையுங் சிறுகுமென்பது அனுபவக்காட்சியாதலின் அன்பிலார் உயிரற்ற வுடலுக் கொப்பவரென்பது கண்டு அன்பு நிறைந்த வுயிர்நிலையில்லார் என்புதோல் போர்த்த வுடம் பென்று கூறிய விரிவு

## 9. விருந்தோம்பல்

இல்லற வாழ்க்கையை இனிது நடாத்துவோர் அன்பு பொருந்தி வாழ்கின்றாரென்பதற் கறிகுறியாவது யாதெனில் - மனுக்களென்னும் பெயர் கடந்து தெய்வப்பெயர் பெற்றுலாவும் அறஹத்துக்களும், சங்கங்களிலுள்ள சமணமுநிவருள் புலன் தென்பட்ட தென்புலத்தோர்களும், தேடி வரும் உரவின் முறையோர்களும், நாடி வரும் உரவின் முறையோர்களும், அனாதை ஆதுலர்களும், எப்போது தனதில்லந் தேடி வருவார்களென்றெதிர்பார்த்திருந்து சோறிடுதலை விருந்தோம்பலென்று கூறப்படும்.

**1. இருந்தோம்பி யில் வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**

**வேளாண்மெ செய்தற் பொருட்டு.**

**(ப.)** இருந்தோம்பி - தன்னைக் காத்து, யில் வாழ்வதெல்லாம் - இல்லற தன்மத்தை நடாத்துவதில், விருந்தோம்பி - வரும் விருந்தினரைக்காத்து. வேளாண்மெ - ஈகையுடன் விவசாயத்தை, செய்தற் பொருட்டு - விருத்தி செய்வதற்கேயா மென்பது பதம்.

**(பொ.)** இல்லற தன்மத்தை சரிவர நடாத்துவோன் ஈகைக்கு ஆதாரமாம் விவசாயத்தை விருத்தி செய்து தன்னை நோக்கும் விருந்தினரைக் காக்க வேண்டும் மென்பது பொழிப்பு.

**(க)** இல்லறத்திருந்து விவசாயத்தை விருத்திச் செய்ய விரும்புவோன் தன்னை நாடும் விருந்தினரைக் காத்தல் வேண்டுமென்பது கருத்து.

**(வி.)** அன்பு பொருந்தி இல்லாளோடிருந்து சுகவாழ்க்கைப் பெற விரும்புவோன்மேழிச் செல்வமாம் விவசாயத்தை விருத்திச் செய்யல் வேண்டும். அவ்விவசாயவிருத்திக்கு வருவிருந்தைக்காத்தலே வித்தாதலின் விருந்தோம் பலுக்குக் காரணம் வேளாண்மெ செய்தற்கென்று கூறியவற்றிற்குச் சார்பாய் பாசமாட்சி " வேளாண்மெ செய்து விருந்தோம்பி வெங்களத்து, வாளாண் மெயாலும் வலியராய்த்- தாளாண்மெ, தாழ்க்குமடிகோளிலராய் வருந்தாத, வாழ்க்கைதிருந்துத நன்று" இஸ்காந்தம், " துறந்தவர்கள் வேண்டியதோர் துப்புரவு நல்கி,

யிறந்தவர்களாமுறுமிருங்கடனியற்றி, யறம் பலவுமாற்றி விருந்தோம்பு முறையல்லாற், பிறந்த நெறியாலுளதோர் பேருதவியாதோ" வெனக் கூறியுள்ளச் சார்பே போன்ற விரிவாம்.

**2. விருந்து புறத்தாத் தானுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.**

**(ப.)** சாவாமருந்தெனினும் - அமுதத்திற்கொப்பாய புசிப்பேயாயினும், விருந்து - வந்த விருந்தினரை, புறத்தாத் - வெளியில் விட்டு, தானுண்டல் - தான் மட்டிலும் புசித்தல், வேண்டற்பாற்றன்று - விருந்திரைவோம்பற் கழகன்றாமென்பது பதம்.

**(பொ.)** தான் புசிக்கப்போவது அமுதத்திற் கொப்பாயாதாயினும் வந்தவிருந்தினரை வெளியில் விட்டுப் புசிப்பதழகன்றா மென்பது பொழிப்பு.

**(க.)** நல்ல புசிப்பாயிற்றே இவற்றையெவ்வகையால் விருந்தினருக் களிப்பதென்னும் பேரவாவால் விருந்தினரைப்புறத்தே நிறுத்திவிட்டு தான் மட்டிலு மவற்றைப் புசிப்பது விருந்தோம்பலென்னுமொழிக்கே குற்றமா மென்பது கருத்து.

**(வி.)** விருந்துடனுண்ணுஞ் சோறு அமுதத்திற் கொப்பாயதென்றும் விருந்திலாதுண்ணுஞ்சோறு நஞ்சிற் கொப்பாய தென்றும் உணர்ந்த

நாயன் புசிக்கப்போவது அமுதமேயாயினும் வந்த விருந்தினருக்கவற்றை யூட்டித் தானும் புசிப்பது நலமென்பதை விவரித்தல் வேண்டி சாவாமருந்தாயினும் விருந்தினருக்களிக்காது தான் மட்டிலும் புசிப்பது வேண்டற்பாற்றன்றென்று கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய் தண்டலையார் சதகம் "திருவிருக்குந் தண்டலையார் வளநாட்டிலில் வாழ்க்கை செலுத்துநல்லோர் ஒருவிருந்தாகிலு மின்றியுண்டபகற் பகலோமோ வுறவாய்வந்த, பெருவிருந்துக் குபகாரஞ் செய்தனுப்பியின்னு மெங்கேபெரியோரென்று, வருவிருந்தோடுண்பதல்லால் விருந்திலா துணுஞ்சோறு மருந்துதானே " எனக் கூறிய ஆதாரமே போன்றச் சார்பென்பது விரிவு,

**3. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை**
**பருவத்து பாழ்படுத்த லின்று.**

**(ப.)** வைகலு - பொழுதுவிடிந்தவுடன், வருவிருந்து - விருந்தின ன ரெப்போது வருவார்களென்று, மோம்புவான் - எதிர்நோக்கி வுபசரிப்பவன், பருவத்து - எக்காலத்தும், பாழ்படுதலின்று - கேட்டிற்கு வாராதென்பது பதம்.

**(பொ.)** விடிந்தவுடன் விருந்தினரை எதிர்நோக்கி வாழ்பவன் வாழ்க்கைக்கு எக்காலுங் கேடுவாராதென்பது பொழிப்பு.

**(க.)** அன்பு பொருந்தி அறஹத்துக்களுக்கும், ஆதுலர்களுக்கும் அன்னமிடும் பயனே அவனது சீர்கேட்டையகற்றி சீரளிக்குமென்பது கருத்து.

**(வி.)** உதயத்தி லெழும்போதே உள்ளன்பு கொண்டு விருந்தினரை நோக்கிநிற்றல் பற்றறுத்தலுக்கோர் படியாக விளங்குதலால் அவனது வாழ்க்கைச் சுகவாழ்க்கைக்கொண்டு எக்காலும் இனிதுபெருவானென்பதற்குச் சார்பாய் அறநெறித்தீபம் "வள்ளல்களாய்வழங்குதலும் வரையறையிற் பெருஞ்செல்வ, மெள்ளற்பாடின்மெயு மினியனவே நுகர்வதுவுந், தள்ளாத விழுநிதியத் கலைப்பட்டந் தீண்டுதலும், வள்ளாது விருந்திரை மிகவோம்பும் பயனன்றே" என விருந்தினது பயனை விளக்கிய விரிவாம்.

**4. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து**
**நல்விருந் தோம்புவா னில்,**

**(ப.)** அகனமர்ந்து - உள்ளன்பு கொண்டு, செய்யாளுறையு விருந்தோம்புபவளில்லாவிடின், முகணமர்ந்து - முகமலர்ச்சியுடன், நல்விருந் - விவேகமிகத்தோர் விருந்தினை, தோம்புவானில் - செய்வதற் கில்லாமற் போவானென்பது பதம்.

வாமுகமலர்ந்தன்னமிடும் இல்லோனிருப்பினும் அகமகிழ்ந் தன்னமிடும் இல்லாளில்லாமற் போவாளாயின் விருந்தோம்பற் பயனில்லை யென்பது பொழிப்பு.

**(க.)** தலைவனுந் தலைவியும் அன்பு பொருந்தி செய்யுந் தானமே விசேடித்ததாகும். இவற்றுள் தலைவி முகமலர்ச்சியின்றி தலைவன் முகமலர்ச்சிக் கொண்டு செய்யுந் தானமானது பலன் தராவென்பது கருத்து.

**(வி.)** அகனமர்வில்லாதவளாம் உள்ளன்பு இலாதவளுடன் முகனமர்ந்த வனாம் முகமலர்ச்சியுள்ளோன் கலந்து விருந்தோம்புதல் வீணேயாதலின் தலைவனுந் தலைவியும் அக்முகமலர்ந்து செய்யுந்தானமே விருந்தோம்பலிற் சிறந்ததென்பவற்றிற்குச் சார்பாய் பெருந்தேவனார் பாரதம் மலர்ந்த முகத்தானு மதுரவுரையாளு, நலந்தந்திடுவர்கணல்லோர் - புலந்திருந்த, இன்னாமுகத்தா னருளாதிடும் பொருள்கள், தன்னாற்ப யனுண்டோதான்" எனும் ஆதாரங் கொண்டு இல்லாள் அகமலராது தான் முகமலர்ந்து விருந்தோம்புதல் வீணேயென்பதுவிரிவு

**5. வித்துமிடல் வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சின் மிசைவான் புலன்.**

**(ப.)** வித்துமிடல் வேண்டும் - விதைவிதைத்தல் வேண்டும், கொல்லோ - ஆயினும், விருந்தோம்பி - வருவிருந்தினரைக் காப்பதாயின், புலன் - விளைநிலத்தில், மிச்சின் - மிகுதியாய, மிசைவான் - பலனை யடைவானென்பது பதம்.

**(பொ.)** விருந்தோம்பி விதை விதைப்போன் மிக்க மேலாய பயனை யடைவானென்பது பொழிப்பு.

**(க.)** வரும் விருந்தினரைக் காக்கும் வேளாளனது விளைநிலம் வேணபலனை யளிக்குமென்பது கருத்து.

**(வி.)** பூமியைத் திருத்தி பயிறுசெய்யும் வேளாளனது யீகை இல்லாளுடன் விருந்தோம்பலில் லயிக்குமாயின் அவன் செய்யும் விவசாயம் மேலாயபலனைத் தருவதுடன் வருவிருந்தும் பெருகுமென்பதற்குச் சார்பாய். அறநெறித்தீபம் " உருளாதவிழுநிதியமொன்பதிற்குந் தலைவனா, யிருளாத பெருங்குலத்துக் கிறைவனாய்த் தோன்றுதலுந் தெருளாத களிரூர்ந்து தேசமீக்கூறுதலும், பொருளாக விருந்தினரைப் போற்றியவன் பய என்னும் ஆதாராங்கொண்டு அன்பு பொருந்த விருந்தோம்பு வோன் விளைநிலம் விசேடபலனைத் தருமென்பது விரிவு.

**6. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா**
**னல்விருந்து வானத் தவர்க்கு.**

**(ப.)** செல்விருந்தோம்பி - வந்த விருந்தையுபசரித்தனுப்பிவிட்டு, வருவிருந்து இனிவரும் விருந் தெப்போது வருமென்பார்த்திருப்பா - எதிர்பார்த்திருப்பவன், வானத்தவர்க்கு - புத்தேளுலகத்தவர்க்கு, நல்விருந்து சிறந்தக் கூட்டுரவினனாவனென்பது பதம்.

**(பொ.)** தன்னை நாடி வரும் விருந்தினரை யுபசரித்தனுப்பிவிட்டு இனி வரும் விருந்து எப்போது வருமென யெதிர்பார்த்திருப்பவனை வானவர்களுந் தங்களுடன் எப்போது விருத்தமடைவானென் றெதிர் பார்ப்பார்களென்பது பொழிப்பு

**(க)** வந்தவிருந்தினரை முகமலர்ச்சியுடன் உபசரித்தனுப்பிவிட்டு இனி வரும் விருந்து எப்போது வருமென் றெதிர்பார்த்து வுபசரிப்பவனை வானவர் உபசரித்தற்கு யெதிர்பார்த் திருப்பார்களென்பது கருத்து.

**(வி.)** அறஹத்துக்களாம் தேவர்களுக்கும், தென்புலத்தோராம், சமண முனிவர்களுக்கும், உரவின் முறையோர்களுக்கும் நேயர்களுக்கும், ஆதுலர்களுக்கும் உண்டி கொடுத்து வுயிரளிப்போர் அன்புமிகுத்துப் பற்றறுப்பவர்களாதலின் தலைமெய்ச் சேர்க்கையாம் தேவர் சபையைச் சேருவா ரென்பதற்குச் சார்பாய் ஆசாரக்கோவை " முறுவலினிதுரை கானீர்மனைபாய், கிடக்கையோ டிவ்வைந்து மென்பதலைச் சென்றார்க், கூணோடு செய்யுஞ் சிறப்பு " என்னும்

ஆதாரங்கொண்டு அன்பு , யீகை, சாந்தம் மூன்றுந் திரண்டு விருந்தோம்பிய பலன் வானவர்களுடன் சடுதியில் சேர்க்குமென்னும் வித்தாகிய விரிவு.

**7. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்**
**றுணைத்துணை வேள்விப் பயன்.**

**(ப.)** இனைத் துணைத் - உரவின் முறையோ ருதவி, தென்பதொன்றில்லை என்று சொல்லும்படியான வொன்றில்லை, விருந்தின் - விருந்தோம்பப் பெற்றவர்களின், றுணைத் துணை - உடந்த வுதவியானது, வேள்விப்பயன் - தவப்பயனைத் தருமென்பது பதம்.

**(பொ.)** உரவின் முறையோர் உதவுவார் என்று நம்பப்படாது. உரவினர் அல்லாத விருந்தினர் உதவியே தவத்திற்கு ஒப்பாகும் என்பது பொழிப்பு.

**(க.)** தன் குடும்பத்தோருக்கு அளிக்கும் விருந்து பயன்றராது அன்னியருக்கு அளிக்கும் விருந்தோ தான் செய்ய வேண்டிய தவற்றிற்கு ஒப்பப் பயனைத்தரும் என்பது கருத்து.

**(வி.)** தேகத்தில் ஓர்ப் பிணி கண்டு தேகத்தையே மடிப்பதோர் அனுபவக் காட்சியாதலின் தனதுரவின் முறையோர் உண்டு களித்தும் சத்துருக்களாவரன்றி மித்துரு ஆகாரென்றுணர்ந்த பெரியோன்

அன்னியருக் பயனை வேள்வியாந் தவத்திற்கு ஒப்பாயதென்று கூறியவற்றிற்குச் சார்பாய் மூதுரை " உடன் பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டாம், உடன் பிறந்தே கொல்லும் வியாதி - உடன் பிறவா, மாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கு, மம்மருந்து போல் வாறுமுண்டு' என்பது கொண்டு இனத்தின் துணை துணையாகா, ஏனையோர் துணையே துணையென்பது கண்டு அன்னியருக்கு அன்புடனளிக்கும் விருந்து ஐம்புலனடக்குந் தவமாம் வேள்விக்கு ஒப்பாய என்பது விரிவு.

பனைகாய் - பனங்காயென மறுவுவது போல் இனைத்துணையென்பது இனத்துணை யென மறுவியதாகும்.

**8. பரிந்தோம்பிப் பற்றற்றோ மென்பர் விருந்தோம்பி**
**வேள்வி தலைப்படா தார்.**

**(ப.)** விருந்தோம்பி - விருந்தினரை அன்புடனுபசரித்து, வேள்வி தலைப்படாதார் - தவத்தீயை வளர்க்காதவர்கள், பரிந்தோம்பி - வீண்வுபசரிப்புக் கூறி, பற்றற்றோமென்பர் - சகல பற்றுக்களையும் விட்டோமென் றபிநயிப்பரென்பது பதம்.

**(பொ.)** விருந்திடும் பயன் வேள்விக் கென்றுணராதோர் பற்றற்றவர்போல் நடித்து வீண்விருந்து உபசரிப்பார் என்பது பொழிப்பு.

**(க.)** விருந்தோம்புதலே பற்றறுத்து ஐம்புலன் அடைத்தலுக்கோர் வழியாதலின் அவ்வேள்விக்குத் தலைப்படாது விருந்தினரை வீணே பரிந்து உபசரிக்கின்றோம் என்பது விழலே என்பது கருத்து.

**(வி.)** அன்னியரையே தன்னவர் என்று ஆதரித்து விருந்தோம்புதல் நாளுக்குநாள் பற்றறுக்கு மூடே வழியாதலின் அப்பற்றினை அறுக்கும் உள்ளந்துறவாது பற்றற்றோம் என்னும் வீண்டம்பங் கூறி விருந்தினரை வீணே உபசரிப்பது விழலென்பதற்குச் சார்பாய் குறுந்திரட்டு" ஆசையற்றே

குறுந்திரட்டு "ஆசையற்றோமெனக்கூறி யதிதிகட்தன் அரிய பொருள் தனைபரிக்கு மதிபரெல்லாம், ஓசையிட்டன்னமதை யளித்தாலென்னோ உத்தமர் போலுபசரிப்ப தென்னோவென்னோ, பூசையது செய்வமென மணிகுலிக்கிப் பொய்ப்பொருளைப் போற்றுவதால் பயன்றா இன்னோ காசைக்கண்டால் கனவாசைக் கொள்ளுமாந்தர் கருத்திலொன்று புறத்திலொன்று காட்டுவாரே என்பது கண்டு வேள்வி தலைப்படார் உபசரிப்பு வீணே என்பது விரிவு.

**9. உடைமெ யுளின்மெ விருந்தோம்ப லோம்பா**

**மடமெ மடவார்க ளுண்டு.**

**(ப.)** உடைமெயு - பொரு ளுள்ளவனாயினும், ளின்மெ இல்லாதவன்போல், விருந்தோம்ப - விருந்தினரை யுபசரிக்கவேண்டியவன், லோம்ப - உபசரியாமற்போதற்கு - மடமெ -

தடையாமுடல், மடவார்களுண்டு - பெண்ணுருக்களுண்டென்பதே பதம்.

**(பொ.)** பொருளிருந்தும் பொருளில்லாதவனைப்போல் விருந்தோம்பலை விரும்பாததற்குத் தடை இல்லாட்களே என்பது பொழிப்பு,

**(க.)** விருந்தோம்பற்கு வேண பொருளிருந்தும் ஓம்பாதிருத்தற்குத் தடை தங்கள் இல்லாள்களே என்பது கருத்து.

**(வி.)** இல்லாட்களது துற் குணத்தால் ஈகையை மறப்பது இல்லோன் இயல்பாதலின் பொருளிருந்தும் புண்ணியஞ்செயற்கு மனமில்லாப் பெண்களின் தடையால் புருஷர்கள் விருந்தோம்பலை மறந்து வீணே தடையுற்றிருக் கின்றார்கள் என்பது விரிவு.

**10. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து.**

**(ப.)** மோப்பக் - நாசியால் முகர, குழையு - வாடிப்போம், மனிச்ச - அனிச்சப்பூ முகந்திரிந்து - முகவாட்டமுற்றிருப்பதை, விருந்து - வந்த விருந்தினர், நோக்கக் - காண்பார்களாயின், குழையும் - அவர்கள் மனம் வாடிப்போமென்பது பதம்.

**(பொ.)** அனிச்சப்பூவை முகர்ந்தவுடன் வாடிப்போவதுபோல் விருந்து ஈவோர் திரிந்த முகத்தைக் கண்டவுடன் விருந்தினர் வாட்டமுறுவர் என்பது பொழிப்பு.

**(க.)** மக்கள் முகர்ந்தவுடன், அனிச்சப்பூ வாட்டமுற்றிடுவது போல் முகமலர்ச்சியில்லாது ஈவோரைக்கண்ட விருந்தினரும் வாட்டமுற்றுப் போவார் என்பது கருத்து.

**(வி.)** முகர்ந்தவுடன் வாடும் அனிச்சப்பூவுக்கொப்பாக விருந்தோம்பு வோன் முகத்திரிப்பைக் கண்ட விருந்தினர் மனம் வாடிப்போம் என்பவற்றிற்குச் சார்பாய் விவேகசிந்தாமணி"ஒப்புடன் முகமலர்ந்தே யுபசரித் துண்மெபேசி, உப்பிலாக் கூழிட்டாலு முண்பதே யமிர்தமாகும், முப்பழமொடுபாலன்னம் முகங்கடுத்திடுவாரா கைப்பிய பசியும் போக்கி கடும் பசி நல்லதாமே என்னும் ஆதரவால் அகமலர்ச்சியு முகமலர்ச்சியுங் கொண்டு செய்தலே அன்னதானத்திற்கு அழகாதலின் முகந்திரிந்து விருந்து ஈயலாகாது என்பது விரிவு.

## 10. இனியவை கூறல்

இனிய சொற்களாம் அமுத வாக்கானது மனதின்கண் ணெழூஉம் ஆனந்தக் கிளர்ச்சியாதலின் அதையே சாந்த பீடமென்று அறிந்த

பெரியோன் விருந்தோம்பலுக்குப்பின் அவற்றை விளக்கி இனிய மொழியுடன் ஈவதே சிறப்பென வகுத்துள்ளார்.

**1. இன்சொலா லீர மளையிப் படிரிலவாஞ்**
**செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.**

**(ப.)** செம்பொருள் - மெய்ப்பொருளை, கண்டார் - அறிந்தவர்களின், வாய்ச்சொல் - நாவிலெழு மொழியானது, படிரிலவாஞ் - கடுஞ்சொற்களற்று, லீரமளையிப் - தண்மெயுடையாரென்பதை, இன்சொலா - அமுதவாக்கா லறியலாமென்பது பதம்.

**(பொ.)** மெய்பொருளை அறிந்த மேன்மக்களை அறியவேண்டின் ' கடுஞ்சொற்களை அகற்றி இனிய மொழிகளாற் பேசும் வாய்மெயே சான்று என்பது பொழிப்பு.

**(க.)** அழியாச் செவ்வியபொருளை அறிந்த அறிவின் மிக்கோர் சாந்தரூபிகளாதலின் அவர்களது வாக்கில் எழூஉஞ் சொற்கள் யாவும் இனிய சொற்களால் அமுதென விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** இராகத், துவேஷ , மோகம் நிறைந்துள்ளாரை அவரவர்கள் கடுஞ்சொற்களாலும் கொடுஞ் செயற்களாலும் அறிந்து கொள்ளுதல்போல் காம், வெகுளி, மயக்கங்களற்ற செம்பொருளுணர்ந்த மேன் மக்களை

அறியவேண்டின் அவர்களது இனிய சொற்களே சான்றென்றற்குச் சார்பாய் காக்கைபாடியம் "மனமாசகற்றி வானிலை யடைதலும், இனமாசகற்றியினியவை கூறலும், வனமதில் புக்கி மகத்துறவோங்கலும், கனமுறு மெய்ப்பொருள் காட்சியதாமே" என்னும் ஆதாரங்கொண்டு செம்பொருட் கண்டோர் என்பதை அவர்களது இனிய மொழிகளால் அறியலாம் என்பது விரிவு.

**2. அகனமர்ந் தீத நன்றே முகனமர்ந்**
**தின்சொல் னாகப் பெறின்.**

**(ப.)** அகனமர்ந் - உள்ளன்பு கொண்டு, தீதலி - கொடுத்தலில், நன்றே மேலாயதியாதெனில், முகனமர்ந் - முகமலர்ச்சியுடன், தின் - இனிய, சொலனாகப் - சொற்களை யுடையவனென, பெறின் - கூறப்பெறுவதே மேலாமென்பது பதம்.

**(பொ.)** அகமகிழ்ந்து ஒருவருக்கு ஆனந்தமாக ஈவதினும் முகமலர்ந்து இனியமொழி கூறலே மேலாம் என்பது பொழிப்பு.

**(க.)** உள்ளன்பு கொண்டு தானம் ஈவதில் முகமலர்ச்சியுடன் இன்சொற்கூறி ஈவதே மேலாமென்பது கருத்து.

**(வி.)** யதார்த்தத்தில் அகமகிழ்ந்து தானம் ஈபவனாயினும், முகங்கடுத்து ஈவானாயின் அதன் பயனற்று போவான் என்பதை கண்ட பெரியோன், ஈவதினும் முகமலர்ந்து இனியமொழி கூறலே

மேலென்று கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய் சிறுபஞ்சமூலம் "இன்சொலானாகுங் ளெமெயியல்பில்லா, வன்சொலானாகும் பகைமெமன - மென்சொலின் ஆய்விலாமாரருள வருளினாமனத்தான், வீவில்லா வீடாய்விடும்' என்னும் ஆதாரங்கொண்டு சகலவற்றிலும் அகமலர்ந்து இனியமொழி கூறலே மேலாம் என்பது விரிவு

**3. முகத்தா னமர்ந்தினிது நோக்கிய கத்தானா**
**மின்சொ லினிதே யறம்**

**(ப.)** முகத்தானமர்ந் - முக மலர்ச்சியுடனும், தினிது நோக்கி - இனிய பார்வையுடனும், யகத்தானா - உள்ளன்புடனும், மின் சொலினிதே - அமுதமொழிகூறலே, யறம் - தன்மத்தின் பீடமென்பது பதம்.

**(பொ.)** முகமலர்ந்தும், அகமலர்ந்தும், குளிர்ந்த பார்வை மிகுந்தும் இனியமொழி கூறலே தன்மத்தின் ஆதியென்பது பொழிப்பு

**(க)** தன்மஞ்செய்வோன் முக மகிழ்ச்சியுடனும், கருணா நோக்கத்துடனும், உள்ளன்புடனும் இனிய மொழியுடனுஞ் செய்தலே சிறப்பு என்பது கருத்து.

**(வி.)** தன்மஞ்செய்வோன் தற்புகழ்ச்சியைக் கருதியும், டம்பத்தைக் கருதியும், சுயப்பிரயோசனத்தைக் கருதியுஞ் செய்யாது அகமுக மலர்ந்தும் அன்புடன் நோக்கியும் இனியமொழி கூறியும் ஈவதே

தன்மமெனக் கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய் தண்டலையார் சதகம் "பொற்குடையும் பொற்றுகிலும் பொற்பணியுஞ் கொடுப்பதென்ன பொருளோவென்றும், நற்கமல முகமலர்ந்தே உபசார மிக்கவின்சொ நடந்தாலன்றோ, கற்கரையு மொழி பாகா தண்டலையார் வளநாட்டிற் கரும்பின் வேய்ந்த, சற்கரையின் பந்தலிலே தேன்மாரிபெய்துவிடுந் தன்மெதானே" என்னும் ஆதாரங்கொண்டு இனிய முகமும், இனிய உள்ளமும், இனிய பார்வையும், இனிய மொழியுமாயிருந்து ஈதலே தன்மம் என்னும் விரிவு.

**4. துன்புறூஉந் துவ்வாமெ யில்லாகும் யார்மாட்டு**
**மின்புறூஉ மின்சொல் வர்க்கு.**

**(ப.)** துன்புறுஉந், துன்பமடையக்கூடியதும், துவ்வாமெ - இரஞ்சுக் கேட்கக் கூடியதும், யில்லாகும் - இல்லையாகும், யார்மாட்டு - யாவர்க்கென்னில், மின்பறா உ - செவிக் கின்பங்கொடுக்கக்கூடிய, மின்சொலவர்க்கு - இனிய மொழிகளை பேசுவோர்கென்பது பதம்.

**(பொ.)** எக்காலும் இனியமொழிகளைப் பேசுவோரிடம் துன்பம் அணுகாது இருப்பதுடன் மற்றோரை வணங்கிக் கேட்கவேண்டியச் செயலும் வாராது என்பது பொழிப்பு

**(க.)** மற்றோரை இரஞ்சு கேட்கவேண்டியச் செயலும், தனக்குண்டாகுந் துன்பங்களும் அணுகாவாம். யாவர்க்கென்னில்,

எக்காலத்தும் இனிய
மொழியைப் பேசுவோர்களுக்கு என்பது கருத்து.

**(வி.)** தன்னவர் அன்னியரென்னும் பேதம்பாராது யாவரிடத்தும் முகமலர்ந்து இனிய மொழியைப் பேசுவோர்களைத் துன்பங்கள் அணுகாமலிப்பதுடன் மற்றவர்களுக்கு பயந்தும் ஒடுங்கியுங் கேட்கவேண்டியக் குறைகள் யாதும் வாராது என்பதற்குச் சார்பாய் நீதிநெறிவிளக்கம் “கண்ணோக்கரும்பா நகைமுகமே நாண்மலரா, மின்மொழியின் வாய்மெயே தீங்கனியாம் - வண்மெ, பலமா நலங்கனிந்த பண்புடையாரன்றே, சலியாத கற்பதரு" என்னும் ஆதாரங்கொண்டு இன் சொல்லின் பயனை இனிது விளக்கிய விரிவாம்.

**5. பணிவுடைய னின்சொ லதனா லொருவற்**
**கணியல்ல மற்றுப் பிற.**

**(ப.)** னின் சொலதனா - இனிய மொழிகளையுடையதினா, லொருவற் - ஒருவன், பிற - அன்னியரால், பணிவுடைய - வணங்கப் பெறுவான், மற்றுப் - வேறு, கணியல்ல - ஆபரண மணிந்தோனைப் பணியாரென்பது பதம்.

**(பொ.)** இனிய மொழிகளை உடையோனை சகல மக்களும் பண அணிபூண்ட ஒருவனை சகல மக்களும் பணிவார்கள். அணிபூண்ட

ஒருவனை சகல மக்களும் வணங்கார் என்பது பொழிப்பு.

**(க.)** சிறந்த அணிகலம் பூண்ட சீமானாயினும் அவன் சகலராலும் வணங்கப்பெறான். இனியவாக்குடைய பெரியோனை சகலரும் பணிவார்கள் என்பது கருத்து.

**(வி.)** பலரறிய பல அணிகளைப் பூண்பவன் டம்பச்செயலையும், டம்ப மொழியையும் உடையவனாதலின் சகலராலும் வணங்கப் பெறான் என்றும், சகலரிடத்தும் முகமலர்ந்து இனியமொழி கூறுவோன் சகலராலும் வணங்கப்பெறுவான் என்றுங் கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய் பாசமாட்சி "புன்சொல்லு நன்சொல்லும் பொய்யின்றுணர்கிற்பார், வன்சொல்வழியராய் வாழ்தலுமுண்டாமோ, புன்சொலிடர்படுப்பதல்லாலொருவனை, யின் சொ லிடர்படுப்பதில்" என்னும் புன்சொல்லாற் கேடும் இன்சொல்லால் சுகமும் உண்டென்பதைக் கண்ட பெரியோன் இன்சொலுடையோனை சகலரும் வணங்குவார் எனக் கூறிய விரிவு.

**6. அல்லவை தேயவறம் பெருகு நல்லவை**

**நாடி யினிய சொலின்,**

**(ப.)** அல்லவை - இல்லையென்னும் லோபமொழி, தேய - அகல, வறம் பெருகு - தன்மம் வளரும், நல்லவை - அந்நல்லறம், நாடியினியசொலின் - தேடி யினியமொழிகூறி கொடுப்பதாலென்பது பதம்.

**(பொ.)** உலோபகுணத்தை அகற்றி இனியமொழியுடன் தன்மஞ் செய்வானாயின் அத்தருமம் வளரும் என்பது பொழிப்பு.

**(க.)** ஈயாத உலோபகுணத்தைப் பெற்றவன் அக்குணத்தைத் தேய்த்து இ னியமொழியுடன் நல்லறத்தை நடாத்துவானாயின் அந்நல்லறம் மேலும் மேலும் வளரும் என்பது கருத்து. -

**(வி.)** உடாதும் உண்ணாதும் அறஞ்செய்யாதும் உள்ளலோபிகள், தங்களது அலோபகுணத்தை அகற்றி தன்ம குணங் கொண்டு இனிய மொழியும் முகமலர்ச்சியும் உடையவனாய் நல்லறத்தை நடத்துவானாயின் செல்வம் பெருகி மேலும் மேலும் ஈவானென்பதற்குச் சார்பாய் அருங்கலைச்செப்பு கொடாத வுலோபிக் கொடுத்துண்டு வாழின், விடாதுவறத்தின் செயல்" என்னும் ஆதாரங்கொண்டு அல்லவை தேய்ந்து இனியமொழியுண்டாயின் அறம் வளரும் என்பது விரிவு.

### 7. நயனின்று நன்றிபயக்கும் பய னீன்று
### பண்பிற் றலைப்பிரியாச் சொல்

**(ப.)** நயனீன்று - சகல நலங்களையுங் கொடுத்து, நன்றி பயக்கும் - செய்நன்றிக்குத் தக்கவாறு, பயனீன்று - பிரிதிபலனளிக்கும், பண்பிற் - சிறந்த குணத்தின், தலைப்பிரியாச் - மாறுதலடையா, சொல் - இனியமொழியென்பது பதம்.

**(பொ.)** எக்காலும் இனிய மொழிகளைப் பேசுவதனால் சகல நயங்களுநந் தோன்றி சுகிப்பதுடன் சத்துவகுணமும் பெருகி சகல சுகமுண்டாம் என்பது
பொழிப்பு.

**(க.)** நன்னயம், பொருணயம், குணநயம் யாவையுஞ் சிறக்கச் செய்யும் சொன்னயம் என்பது கருத்து.

**(வி.)** ஒவ்வோர் மக்களும் இனிய மொழியாம் சொன்னயம் பேசலே சகல சுகத்திற்கும் ஆதாரமென்றறிந்த நமதையன் சகல சுகங்களையுங் கருதுவோர் தனது இனிய மொழியை என்றும் மாறாதிருக்கவேண்டுமென்பதற்குச் சார்பாய் வள்ளலாரிரைஞ்சல்" நலம் வேண்டில் நலம் வேண்டில் நற்றவமும் வே பலகாலும் இனிய மொழி " பேறும் பெறலாம் என்பது விரிவு.

**8. சிறுமெயு ணீங்கிய வின்சொன் மறுமெயு**
**மிம்மெயு மின்பந் தரும்.**

**(ப.)** சிறுமெயு - ஒடுங்கிய விடத்தும், ணீங்கிய - துன்மொழியகன்று, வின்சொன் - இனிய மொழிகளையே பேசுவானாயின், மறுமெயு - இனியெடுக்குந் தேகத்திற்கும், மிம்மெயு - இப்போதெடுத்துள்ள தேகத்திற்கும், மின்பந்தரும் - சுகத்தையளிக்குமென்பது பதம்

**(பொ.)** பலவகை இடுக்கங்களால் ஒடுக்கமுற்றகாலத்துந் தனது கொடுமொழிகள் அகன்று இனிய மொழியையே பேசுவான பிறவியிலும் மறு பிறவியிலும் இன்பத்தை அடைவான் என்பது பொழிப்பு.

**(க.)** மிக்க தாரித்திரியத்தால் ஒடுக்கமுறினும் தனது புன்மொழிகளற்று நன்மொழிகளாம் இனிய மொழிகளையே பேசுவானாயின் இம்மெய்யில்
ஆனந்தசுகமடைவதுடன் மறுமெய்யிலுஞ் சுகமடைவார் என்பது கார்
-

**(வி.)** பிறப்பிலேயே தாரித்திரத்தில் ஒடுங்கினவனாயினும், தாரித்திரத்தால் எழூஉங் கொடுமொழிகள் அற்று இனிய மொழிகளையே என்றும் பேசிவருவானாயின் எடுத்துள்ள தேகத்தில் இன்பம் அனுபவிப்பதுடன் இனி எடுக்குந் தேகத்திலும் இன்பசுகம் அனுபவிப்பான் என்பவற்றிற்குச் சார்பாய்
நெறிச்சாரம் "கொடுப்பான் வினையல்லன் கொள்வானுமல்லன், கொடுக்கப்படும் பொருளுமன்றால் அடுத்தடுத்து, நல்லவையாதாங் கொல் நாடியுரையாய் நீ, நல்லவர் நாப்பண் நயந்து என்னும் ஆதாரங்கொண்டு நாவிலெழூஉம் இனிய மொழியால் இம்மெயிலும், மறுமெயிலுஞ் சுகமடையலாம் என்பது விரிவு.

**9. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ**

**வன்சொல் வழங்கு வது.**

**(ப.)** இன்சொ - இனிய மொழிகளா, லினிதீன்றல் - இன்பந்தோன்றலை, காண்பா - கண்டவன், னெவன்கொலோ - எவனாயினும், வன்சொல் - கொடு மொழிகளை, வழங்குவது - பேசுவனோவென்பது பதம்.

**(பொ.)** இனியமொழியால் உண்டாம் இன்பசுகத்தைக் கண்டவன் மறந்தும் வன்மொழிப் பேசமாட்டான் என்பது பொழிப்பு.

**(க.)** கொடுமொழிகளைப் பேசுவதாலுண்டாங் கேடுகளையும், இனிய மொழிகளைப் பேசுவதாலுண்டாஞ் சுகங்களையும் ஆராய்ந்துணர்ந்தவன் எக்காலுங் கொடுமொழி கூறமாட்டான் என்பது கருத்து.

**(வி).** ஒருவன் எக்காலும் இனியமொழிகளைப் பேசி அதன் நயத்தையும் சுகத்தையுங் கண்ட பின்பு மறந்துங் கொடுமொழி கூறமாட்டான் என்பதற்குச் சார்பாய் அருங்கலைச்செப்பு "இறந்துமின்மொழி மாறாதிளவல், மறந்தும் வன்மொழியாளான்" என்பது கண்டு இன்மொழி சுகங்கண்டோன் மறந்தும் வன்மொழி கூறான் என்பது விரிவு.

**10. இனிய வுளவாக லின்னாத கூறல்**

**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.**

**(ப.)** இனிய - இன்பமடையுமொழி, வுளவாக - உள்ளவனாயிருந்தும், லின்னாககூறல் - கொடு மொழியைக் கூறுவானாயின், கனியிருப்பக் - கனிந்த பழமிருக்க, காய்கவர்ந்தற்று - காயைப் புசிப்பதற்கொக்குமென்பது பதம்.

**(பொ.)** இனியமொழியையுள்ளவன் கடுமொழி கூறுதல் கனியிருக்கக் காயைப் புசித்தலுக்கு ஒக்கும் என்பது பொழிப்பு

**(க.)** தனக்குள்ள இனிய மொழிகளால் அடைந்த பயனை உணர்ந்தும் வன்மொழிகளைப் பேசுவதாயின் தன்னிடமுள்ளக் கனியைத் தவிர்த்துக் காயைப் புசித்தலுக்கு ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** உள்ளத்தில் இனியவை உள்ளதை உணர்ந்தும் இல்லா கொடுமொழி கூறுவதாயின் இனியக் கனியை உருசித்து உண்டும் இனிப்பில்லாக்காயைப் புசித்தலுக்கு ஒக்கும் என்பதற்குச் சார்பாய் அறநெறி தீபம் "இனிய வுளத்துள்ளிருந்து மின்னாசொற் கூறுதலும், பனியகற்றி சூட்டையும் பாங்கெல்லைக் கேகுதலும், தனிமெயடைந் தூவோரை தானகற்றி உண்பனவுங் கனியிருக்கக் காயுண்ணுங் காட்சியதன் பயனாகும்" என்னும் ஆதாரங்கொண்டு உள்ளத்திலினியவை இருந்து கொடுமொழி கூறல் கனியிருந்துங் காயைப் புசித்தலுக்கு ஒக்கும் என்பது விரிவு.

## 11. செய்நன்றி அறிதல்

ஒருவர் செய்த உபகாரத்தை எக்காலும் மறவாதிருத்தலே அதன் பிரிதிபலன் என்றறிந்த பெரியோன் இனிய மொழிக்குப் பின் செய்நன்றியை மறவாதிருத்தலை விவரிக்கின்றார்.

**1. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்**

**வானகமு மாற்ற லரிது.**

**(ப.)** செய்யாமற் - தனக்கோருதவியுங் கோறாது, செய்த வுதவிக்கு - தான் செய்த வுபகாரத்திற்கு, வையகமும் - பூவுலகத்தையும் , வானகமும் - விண்ணுலகத்தையும், மாற்றலரிது - பிரிதிபலனாக ஈயினும் பொருந்தா என்பது பதம்.

**(பொ.)** பிரிதிபலனைக் கருதாது செய்யும் உதவிக்கு விண்ணுலகத்தையும், மண்ணுலகத்தையும் பிரிதிபலனாக வீயினும் பொருந்தா என்பது பொழிப்பு.

**(க.)** எதிரியின் பலனைக் கருதாது காருண்யத்தாற் செய்யும் உதவிக்கு நிகராக வானுலகத்தையும், பூவுலகத்தையும் தானமாகக் கொடுக்கினும் பொருந்தாவென்பது கருத்து.

**(வி),** கருணையினது மிகுதியால் இனியமொழி கொண்டு ஈய்யும் உபகாரத்திற்கு மேலாய உதவி ஏதொன்றும் இல்லையாதலின் கெடுவார் செயலை அகற்றி இடுவார்ச் செயலை விளக்குவதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம். "தண்டாமம் பொய்வெகுளி

பொச்சாப்பழுக்காறென், றைந்தேகெடுவார்க் கியல்பென்ப பண்பாளா, யீதலறித லியற்றுதலின் சொற்கற், றாய்தலறிவார் தொழில்" என்னும் மேன்மக்கட் செயலை செய்யாமற் செய்யும் உதவியில் விளித்த விரிவு.

**2. காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினு**

**ஞாலத்தின் மாணப் பெரிது.**

**(ப.)** காலத்தினாற் செய்த - வேண்டுங்காலமறிந்து செய்த, நன்றி - உபகாரமானது, சிறிதெனினு - சொற்பமாயினும், ஞாலத்தின் - பூமியின் கண், மாணப் பெரிது - மிக்க மேலாயதென்பது பதம்.

**(பொ.)** எதிரிக்குச் செய்த உதவி சிறியதாயினும் அவனுக்கு வேண்டுங் காலமறிந்து செய்த அவ்வுதவி பூமியின்கண் மிக்க மேலாயது என்றே ஏற்கவேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவன் ஆபத்து காலமறிந்து செய்தவுதவியானது மிக்கச் சிறிதேயாயினும் அவனது கேட்டின் காலமறிந்து செய்தவுதவியால் உலகத்தில் அவ்வுதவி மிக்கமேலாயது என்பது கருத்து.

**(வி.)** உலகத்தாருக்குச் செய்யும் உதவிகளில் அவனவனுக்கு நேரிடுந் துன்பகாலங்களை அறிந்து செய்யும் உதவியேமிக்கமேலாய உதவியென்றுணர்ந்த மேலோன் காலத்தினாற் செய்தவுதவி சிறிதேயாயினும் ஞாலத்தில் அஃதே பெரிதென்பதற்குச் சார்பாய்

அறநெறிச்சாரம் "இன்சொல்விளைநிலமா ஈதலேவித்தாகி, வன்சொற்களைகட்டு வாய்மெ-யெருவட்டி, அன்புநீர்பாய்ச்சி அறக்கதிரீன்றதோர், பைங்கூழ் சிறுகாலைச்செய்" என்னும் இனிய மொழியையுங் காலமறிந்து செய்யும் பேரானந்தவுதவியையும் விளித்த விரிவு.

**3. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி**
**னன்மெ கடலிற் பெரிது.**

**(ப.)** பயன்றூக்கார் - எதிரியின் பயனைக் கருதாது, செய்தவுதவி - கொடுக்கும் உபகாரமானது, நயன்றூக்கி - குணவாராச்சியில், னன்மெ - சுகநிலையானது, கடலிற் பெரிது - கடன் மடை திரண்டோடும் எழுகடலினுஞ் சிறந்ததென்பது பதம்.

**(பொ.)** எதிரியின் பயனைக் கருதாது செய்யும் உதவியின் நயத்தை சீர்தூக்கி ஆராயுங்கால் அதனது சிறப்பு கடலினும் பெரிது என்பது பொழிப்பு.

**(க)** யாதொரு பயனையுங்கருதாது செய்யும் உதவியின் நயத்தை யாராயுங்கால் உலகத்தில் மடைதிரண்டோடும் எழுகடலினும் மேலாயது என்பது கருத்து.

**(வி.)** உலகத்திற் கடல் மடைத்திரண்டோடி யாதொரு பிரிதி பயன் ஏற்காது உபகாரமாக விளங்கும் பாற்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல்,

தேன்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், உவர்நீர்கடல், நன்னீர்க்கடல் ஆகிய எழுகடலினும் மேலாய உதவியாதெனில் எதிரியின் பயனை சீர்தூக்கி சிந்தியாது செய்யும் உதவியே பெரிது என்பது விரிவு,

**4. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பயன்றெரி வார்.**

**(ப.)** தினைத்துணை - தினையரிசியினளவாக, நன்றி - உபகாரஞ், செயினும் - செய்வதாயினும், பனைத்துணையாக் - அவற்றை பனைமரத்திற் கொப்பாய பேருதவியாக, கொள்வார் - ஏற்பர், பயன்றெரிவார் - அதன் பயனையறிந்த மேலோர்கள் என்பது பதம்.

**(பொ.)** தினை அரிசியினளவாகப் பெற்ற உபகாரத்தைப் பனைமரத்துக்கு ஒப்பாக கொள்ளுவர் பெரியோர் என்பது பொழிப்பு
* (க.) விவேக மிகுந்த மேன்மக்கள் தினை அரிசிக்கு ஒப்பாய சிறிய உபகாரத்தைப் பெறினும் அவற்றைப் பனைமரத்திற்கு ஒப்பாய பேரூபகாரமாகக் கருதுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** கருணை மிகுந்த மேன்மக்கள் சிறிய உபகாரத்தைப் பெறினும் அந்நன்றி மறவாதச் செயலால் அதனைப் பேருபகாரமாகக் கருதி மேலும் மேலும் அதன் பயனை உள்ளத்துணர்வதுடன் ஏனையோருக்கும் அதன் பயனை உணர்த்தி இனிது விளக்குவான்

வேண்டி உதவியின் பெரிது சிறிதைத் தினைக்கும் பனைக்கும் ஒப்பிட்டு உரைத்த விரிவு.

**5. உதவி வரைத்தன் றுதவி யுதவி**
**செயப்பட்டார் சால்பின் வரைத்து.**

**(ப.)** உதவி - செய்தவுதவியின், வரைத்தன் - நன்றியை மறவாதோர்க்கு, கைவியுதவி - மேலு மேலு முபகாரத்தை, செயப்பட்டார் - செய்துவருவோர், சால்பின்வரைத்து - என்றென்று மன்னன்றியைப் பெறுவாரென்பது பதம்.

**(பொ.)** செய்த உதவியின் நன்றியை மறவாதோர்க்கு மேலும் மேலும் உதவி புரிவோர் எக்காலும் அவர் நன்றியைப் பெறுவார் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவருக்குச் செய்த உபகாரத்தை அன்னோர் மறவாதிருப்பாராயின் மேலும் மேலும் அவர்களுக்கு உதவி புரியலாம் என்பது கருத்து.

**(வி.)** கல்லின்மேல் வரைத்தவரைபோல் செய்நன்றியை மறவாதிருத்தலே நல்லோர் செயலாதலின் அன்னற்செயலை உள்ளார்க்கு மேலோர் எக்காலும் உதவி புரிவார்கள் என்பதற்குச் சார்பாய் அறநெறித்தீபம் " திடநிலையவுபகாரச் செய்நன்றி மறவார்க்கு, வுடநிலைமே லுபகார முள்ளளவுஞ் செய்திடுவார்,

அடவிநிலைசென் றாங்கு மாதாரங் கொண்டிடுவர், கடல் மடை போற் பெறுபேற்றுக் காட்சியதன் பயனாகும்" என்னும் கல்லின்மேல் வரைத்தன் வரைபோல் நன்றி மறவாதார்க்கு என்றென்றுஞ் சுகமுண்டு என்பது விரிவு.

**6. மறவற்க மாசற்றார் கேண்மெ துறவற்க**
**துன்பத்துட் டுப்பாயார் நட்பு.**

**(ப)** மாசற்றார் - களங்கமற்ற நெஞ்சினர், கேண்மெ - சிநேகத்தை, மறவற்க - மறவாதிருத்தல் வேண்டும், துன்பத்துட் - துன்பமுண்டாயகாலத்தில், டுப்பாயார் - உதவி புரிந்தவர்களின், நட்பு - நேயத்தை, துறவற்க - அகலாதிருக்க வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** மனமாசு கழுவியுள்ள மேன்மக்களின் கூட்டுறவை மறவாதிருத்தல் வேண்டும். தனக்குத் துன்பம் நேரிட்ட காலத்தில் உதவி செய்தவர்களின் சார்பை அகலாதிருக்க வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** களங்கமற்றோர் கேண்மெயை எக்காலும் மறவாதிருத்தல் வேண்டும், அவைபோல் ஆபத்து காலத்தில் உதவி புரிந்தோர் நேயத்தை என்றும் அகலாதிருத்தல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** மனமாசுக் கழுவியுள்ள மகான்களின் பார்வையால் அனந்தசுக முண்டாயதைக் கண்ட நமதையன் ஆபத்துகாலமறிந்து

உதவி செய்த மேன்மக்களை அகலாதிருத்தல் வேண்டுமென்று கூறற்கு முன் களங்கமற்றோர்காட்சியை மறவற்கவென்று கூறியவற்றிற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "கொடுத்துய்யப் போமாறு கொள்வான் குணத்தில், வடுத்தீர்ந்தாருண்ணிற் பெறலாம் - கொடுத்தாரைக், கொண்டுய்யப்போவார் குணமுடையா ரல்லாதார், உண்டீத்து வீழ்வார் கிழக்கு" என்னும் ஒருவன் ஆபத்துகாலத்து உண்டாய ஈகையே ஈசனென்னு மொழி ஏற்றலால் அதன் பீடமே களங்கமறற்கு காட்சி என்று விளித்த விரிவு.

**7. மெ யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்**

**விழுமந் துடைப்பவர் நட்பு**

**(ப)** எழுமெ - எழுவகைத் தோற்றமாம், யெழுபிறப்பு - ஏழுவகைப் பிறப்பினும், தங்கள் - தங்களுடைய , விழுமந் - துன்பத்தை, துடைப்பவர் - அகற்றினவர்களின், நட்பு - அன்பின் மிகுதியை, முள்ளுவர் - தங்களுள்ளத் தகலாதிருத்துவரென்பது பதம்.

**(பொ.)** நல்லவர்கள் பெற்ற உதவியைத் தங்கள் எழுவகைத் தோற்றத்தினும் மறவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** பெரியோர்களால் பெற்ற உபகாரத்தை நன்றியுள்ளோர் தங்கள் எழுபிறப்பினும் மறவார்கள் என்பது கருத்து.

**(வி.)** நல்லோர் தங்கள் துன்பத்தை அகற்றி ரட்சித்த மேன்மக்களின் செயலை தங்கள் எழுவகைத் தோற்றங்களாகிய தேவர், மக்கள், விலங்கு, பட்சி, ஊர்வன, நீர்வாழ்வன, தாபரமாயவற்றுள்ளும் மறவார்களென்னும் முதுமொழிக்குச் சார்பாய் அறநெறித்தீபம் " பாபத்தைத் தீர்க்கும் வாய் மெய்ப் பெருமொழி நான்கினுக்குங், கோபத்தை யடக்கி யாண்டு குணக்குன்றி லேறினோர்க்கும், ஆபத்தை தீர்த்து காக்கும் அரியநல்லுபகாரிக்குந் தாபத்தினன்றிகற்குஞ் சோபமே பயனாமன்றோ" என்னும் நல்லோராயுள்ளோர் மற்றோரல் செய்நன்றியை எத்தோற்றத்தினும் மறவார்கள் என்பது விரிவு.

**8. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல**

**தன்றே மறப்பது நன்று.**

**(ப.)** நன்றி மறப்பது - ஒருவர் செய்த வுபகாரத்தை மறப்பது, நன்றன்று - நல்லதல்லவாகும், நன்றல்ல - ஒருவர் செய்த தீங்கினை, தன்றே மறப்பது .

அப்பொழுதே மறந்துவிடுவது, நன்று - நல்லதாகும்.

**(பொ.)** ஒருவர் செய்த உபகாரத்தை என்றும் மறவாதிருத்தலே நல்லதாகும். ஒருவர் செய்த துன்பத்தை அன்றே மறந்துவிடவேண்டும் என்பது பொழிப்பு,

**(க.)** ஒருவர் செய்த தீங்கினை அப்போதே மறந்துவிடுவது நலமாகும். ஒருவர் செய்த உபகாரத்தை மட்டிலும் எக்காலும் மறக்கலாகாது என்பது கருத்து.

**(வி.)** ஒருவர் செய்த உதவியை எக்காலும் மறவாதவர்கள் அதன் புண்ணிய பலத்தால் பட்டாடை உடுத்தி சுகசீவ வாழ்க்கையிலிருப்பார்கள். அவ்வுதவியை மறப்போர் வாட்டமுற்று உணர்வற்றிருப்பாரென்னுங் கேட்டை நாலடியார் நானூறு "புணர்கடல் சூழ் வையத்துப் புண்ணிய மோவேறே, யுணர் வுடையாரிருப்ப வுணர்விலா, வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே, பட்டுந்துகிலுமுடுத்து" என்றும் நாலடியார் நல்லோர்க்குறி "செய்நன்றி மறவாதபேர்களும் ஒருவர் செய் தீமெயை மறந்தபேரும்' என்னும் ஆதாரங்கொண்டு நன்றியை மறவாதிருத்தலே நற்பயனென்றறிந்தொழுகற்கு எதிரடையாக, ஒருவர் செய்த தீங்கினை மறவாதிருப்பதாயின் உள்ளங் கொதித்து மேலும் மேலும் தீங்கினை வளர்த்து அதிதுன்பம் உண்டாவதை உணர்ந்த பெரியோன் ஒருவர் செய்த தீங்கினை அன்றே மறந்துவிடவேண்டும் என்று கூறிய விரிவு.

**9. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த**
**வொன்றுநன் றுள்ளக் கெடும்.**

**(ப.)** கொன்றன்ன - கொல்லத்தக்க, வின்னா - பலவகையாய துன்பங்களை, செயினும் - செய்தபோதினும், மவர்செய்த - அவரால் செய்யப்பட்ட, வொன்று - ஒரு, நன்றுள்ள - உபகாரத்தையுள்ளத் துணர்வதாயின், கெடும் - அத்துன்பங்கள் யாவும் விலகிப் போமென்பது பதம்.

**(பொ.)** ஒருவர் கொல்லத்தக்கப் பலவகைத் துன்பங்களைச் செய்யினும் அவரால் செய்துள்ள உபகாரத்தை உள்ளத்துணர்வதாயின் அத்துன்பங்கள் தானே அகலும் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவர் செய்த உபகாரத்தை மறவாதிருப்போனை யாதொரு துன்பஞ்செய்யினும் அணுகாது என்பது கருத்து.

**(வி.)** செய்நன்றியை மறவாத நல்லோனை நன்றிசெய்தவனே ஒர்கால் துன்புறுத்தின் அத்துன்பம் அவனை அணுகாதென்னுஞ் காரணம் யாதெனில் அவனோர்கால் செய்த நன்றியை எக்காலும் மறவாது உள்ளத்து இறுத்தி யுள்ளவனாதலின் தீவினையாம் கள்ளம் அகன்று உள்ளபடி முடியுமென்னும் ஆதாரத்தால் நன்றி மறவாத நல்லோர்பால் தீவினை அணுகாது என்பது விரிவு.

**10. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை**

**செய்நன்றி கொன்ற மகற்கு.**

**(ப.)** எந்நன்றி - எத்தகைச் செயலையும், கொன்றார்க்கு - கெடுத்தோர்க்கு, முய்வண்டா - சுகமுண்டாம், செய்நன்றி - உபகாரச்செயலை, கொன்ற - கெடுக்க, மகற்கு - மக்களுக்கு, முய்வில்லை - சுகமில்லையென்பது பதம்.

**(பொ.)** எத்தகையச் செயல்களைக் கெடுத்தோருக்கும் சுகமுண்டாம். ஒருவர் செய்த நன்றியைக் கெடுப்போருக்கு சுகமில்லை என்பது பொழிப்பு.

**(க).** எவ்வகையாயச் செயல்களை மறக்கினும் சுகமுண்டாம். ஒருவர் செய்த பதாரத்தை மறக்கின் எக்காலும் சுகமில்லை என்பது கருத்து.

**(வி).** ஒருவர் செய்துள்ள நன்றியை மறந்த மக்களுக்கு எக்காலும் கமில்லையென்னுங் காரணம் யாதெனில் நன்றியை உள்ளத்து உள்ளானுக்கு சகல தீவினைகள் அறும் என்பதும், நன்றியை மறந்தோனுக்குத் தீவினை யறாது என்பது விரிவு.

## 12. நடுவு நிலைமெய்

அதாவது தன் சுகம் பிறர் சுகமென்னும் பேதமின்றியும், தன்னவ ரன்னியர் என்னும் பேதமின்றியும், தன்னலம் அன்னியர் நலமென்னும் பேதமின்றியும், சகல மக்களையும், சகலர் சுகத்தையும், சகலர் நலத்தையும், தன்னவர் சுகம், தன்னவர் நலமென நிற்கும்

நிலையையே நாடிநிற்றல் நடுவு நிலைமெயாதலின் செய்நன்றியை அறிதலுக்குப் பின் நடுவுநிலைமெயை விளக்குகின்றார்.

**1. தகுதியென வொன்று நன்றே பகுதியாற்**
**பாற்பட் டொழுகப் பெறின்.**

**(ப.)** தகுதியென - தகுந்தகு மென்னும் நடுநிலைமொழி, வொன்று - ஒன்று நன்றே - நல்லதாகும், பகுதியாற் - பிறிவினையால், பாற்பட்டொழுகப் - நெறியற்றிருக்கப் பெறின் - பெறுவோரென்னும் பதம் நன்றன் றென்பதைக் குறிக்குங் குறுக்காம்.

**(பொ.)** பலராலும் நடுவு நிலைமெயோன் என மதிக்கத்தக்க நிலையே நன்றாம். நடுவு நிலைமெயற்றோன் தீயன் எனப்படுவான் என்பது பொழிப்பு.

**(க.)** சகலராலும் இவன் நெறியை உடையவன், நடுவு நிலைமெயோன் என்னுந் தகுந்த பெயர் ஒன்றைப் பெறுதலே நன்றாம். அதற்கு மாறாக நெறிபிறழ்ந்து நடுவுநிலைமெயற்று நிற்றல் நன்றன்றென்பதை கூறாமற் குறித்த கருத்து.

**(வி.)** இவன் தன்னவன் அன்னியனென்னும் பேதம் பாராதவன் தன்னலத்தைப்போல் பிறர் நலங் கருதுகிறவன், தன் சுகம் போல் பிறர்சுகங் கோருகிறவன் நெறிபிறழா நடுநிலைமெயுடையவனென்னத்தகும் பெயரொன்றைப் பெறுதலே

நன்றென்றும் அவற்றிற்கு மாறாய் நெறி பிறழ்தலை கேட்டின் ஒழுக்கமென்று குறிப்பிட்டுள்ளவற்றிற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமெ நீக்கிக், கதிப்பட்ட நூலினைக் கையிகந்தாக்கி, பதிப்பட்டு வாழ்வார் பழியாயசெய்தல், மதிப்புறத்திற் பட்ட மறு " நடுவு நிலைமெயாம் ஒழுக்க நெறி நிற்றலே நன்றென்றும் அதற்கு மாறாம் பகுதியாய பாற்பட்டொழுகல் தீதென்றுங் கூறிய விரிவாம்.

**2. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி**

**யெச்சத்திற் கேமாப் புடைத்து.**

**(ப.)** செப்ப முடைய - சொல்லத்தக்க நடுவுநிலைமெயுடையவனது, னாக்கஞ் - தன சம்பத்தானது, சிதைவின்றி - யாதொரு சேதமுமின்றி, யெச்சத்திற் - புத்திரபௌத்திரர்களுக்கும், கேமாப்புடைத்து - இல்லையென்னா துதவுமென்பது பதம்.

**(பொ.)** சகலராலும் நடுவுநிலைமெயுடையவனெனப் போற்றப் பெற்றவனது தன் சம்பத்து யாதொரு சேதமுமின்றி தனது புத்திர பௌத்திரர் களுக்கும் உதவுமென்பது பொழிப்பு

**(க.)** கஸ்தூரியுள்ள பாண்டம் கஸ்தூரியகலினும் அதன் மணம் நீங்காதது போல் நடுவுநிலைமெயுள்ளோன் மறையினும் அந்நற்செயல் நீங்காது அவனது தனசம்பத்து அவனுக்குதவியது

போல் தனது புத்திர பௌத்திரர்களுக்குங் குறைவற உதவும் என்பது கருத்து.

**(வி.)** இவன் நீதிமான் நடுவுநிலைமெயுடையவனென சகலராலுங் கொண்டாடப் பெற்றவனது செல்வம் நாளுக்குநாள் பெருகுவதுடன் தனது புத்திர பௌத்திரர்களுக்கும் அச்செல்வம் பெருகி சுகச்சீர்பெறுவார்கள் என்பதற்குச் சார்பாய் காக்கைபாடியம் "நெறியிற் பிறழா நடுநிலையாளர், பொறியும் புலனும் போற்றுதற்கினிதாய், செறியுஞ் செல்வச் சேர்தனம் யாவுங், குறியா முரவோர்க் குதவுவ தாமே" என்னும் மொழிகொண்டு நடுவு நிலைமெயுள்ள மக்களது செல்வம் நாளுக்குநாட் பெருகி சுகந்தருவதுடன் தனது உரவின் முறையோருக்கும் உதவும் என்பது விரிவு.

நற்றொழிலிலும், நல்லெண்ணத்திலும், நற்செயலிலும் நின்று சம்பாதிக்கும் பொருள் நடுவுநிலைமெயாளருடையதும், துற்செயலிலும், வஞ்சகத்திலும், சூதிலும், வட்டியிலும், நின்று சம்பாதிக்கும் பொருள் நடுவு நிலைமெ யற்றவர்களுடையதும் ஆதலின் அத்தகையோர் செல்வம் தங்களுக்கும் உதவாது தங்கள் தங்கள் சந்ததியோர்களுக்கும் உதவாமற்போம் என்பதேயாம்.

**3. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை**
**யன்றே யொழிய விடல்.**

**(ப.)** நன்றேதரினு - சுகத்தைக் கொடுக்கக்கூடியதாயினும், நடுவிகந்தா - நல்வழியிற் சம்பாதிக்காது. மாக்கத்தை - செல்வத்தை, யன்றே - அப்பொழுதே,
யொழிய விடல் - அகற்றிவிட வேண்டு மென்பது பதம்.

**(பொ.)** கெட்டவழியால் சம்பாதித்தப் பொருள் தனது சுகத்தைக் கொடுக்கக் கூடியதாயினும் அதனை அன்றே ஒழித்து விடவேண்டும் என்பது பொழிப்பு,

**(க.)** சூதாலும், வஞ்சகத்தாலும், களவாலும், வட்டியாலும் சம்பாதிக்கும் பொருள் அக்கால் தனக்கு சுகத்தைக் கொடுத்திடினும் பிற்கால் பெருந்துக்கத்திற்குக் கொண்டுபோமாதலின் அத்தகையப் பொருளை அன்றே ஒழித்து விடவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** தீயச் செயலால் சம்பாதிக்கும் பொருள் தீயவழியிலேயே செல்வதுடன் தன்னையுந் தீவினைக்கு உள்ளாக்குமென்பதை உணர்ந்த பெரியோன் அத்தீவினைக்குள்ளாகி அல்லலடையாது நல்வினையில் ஈடுபட்டு நடுவுநிலைமெயோனாம் நல்லோனாகி சகல சுகமும் பெற்று சகலருக்கும் உபகாரியாக விளங்கவேண்டும் என்பது விரிவு

**4. தக்கார் தகவில ரென்ப தவரவ**

**ரெச்சத்தாற் காணப்படும்.**

**(ப.)** தக்கார் - நடுவுநிலைமெ யுள்ளார், தகவில - நடுவுநிலைமெயில்லாதார், ரென்ப - என்பதை, தவரவ - அவரவர்களின், ரெச்சத்தாற் - சற்புத்திர விருத்தியாற், காணப்படும் - தெரிந்துக்கொள்ளலாமென்பது பதம்.

**(பொ.)** இவர்கள் நடுவுநிலைமெயுள்ளோர் அவர்கள் நடுவுநிலைமெயில்லார் என்பதை அவரவர்கள் நற்புத்திர விருத்தியாற் கண்டுக்கொள்ளலாம் என்பது
பொழிப்பு

**(க.)** தனபாக்கிய விருத்திக்கும், புத்திரபாக்கிய விருத்திக்கும் நடுவுநிலைமெயாம் நற்செயலே காரணம் என்பதை அவரது நடுவுநிலைமெய் செயலாற் காணலாமென்பது கருத்து.

**(வி.)** இவர்கள் துறந்தவர்கள் இவர்கள் துறவாதவர்களென்று அவரவர்கள் ஈகையினாலும் உள்ள வமைதியினாலும் அறிந்து கொள்ளுவதுபோல் இவர்கள் நடுநிலைமெயுள்ளார் அவர்கள் நடுவுநிலை மெயில்லாதார் என்பதை அவரவர்கள் ஈன்ற சற்புத்திரச்செயலால் அறியலாம் என்பது விரிவு. அறநெறிச்சாரம் "துறந்தார் துறந்திரலரென்றறியலாகும், துறந்தவர் கொண்டொழுகும் வேடங்- துறந்தவர், கொள்ப கொடுப்பவற்றாற் காணலாம் மற்றவர், உள்ளங்கிடந்தவகை"

## 5. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக் கோடாமெ சான்றோர்க் கணி

**(ப.)** கேடும் - தனக்குறைவும், பெருக்கமு - தனநிறைவும், மில்லல்ல - பகுப்பின்றாம், நெஞ்சத்துக் - உள்ளத்து, கோடாமெ - நடுவுநிலைமெ பிறழா, சான்றோர்க் - மேன்மக்களுக்கு, கணி - அணிகலமென்பது பதம்.

**(பொ.)** நடுநிலைமெ பிறழா சாந்தரூபிகளுக்கு அணிகலமாயுள்ளது யாதெனில் இவன் ஏழை அவன் தனவான் என்னும் பாரபட்சமற்ற பேதம்பாரா நிலை என்பது பொழிப்பு.

பசா

**(க.)** இவன் தனமற்றவன், அவன் தனமுள்ளவன் என்னும் பேதமற்று இருவரையும் சமநிலையாம் நடுநிலைமெயி நோக்குவதே மேன்மக்களுக்கு அணிகலம் என்பது கருத்து.

**(வி.)** இவன் தனமில்லாது கேடுற்றவன் அவன் தனம் பெற்று சுகமுற்றவனென்னும் பேதாபேதம் பாரா நடுவுநிலைமெயுற்ற நிலையே சான்றோர்களாம் மேன்மக்களின் அணிகலமென்று கூறியவற்றிற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "தூயவாய் சொல்லாடல் வண்மெயும் துன்பங்கள், ஆயபொழுதாற்று மாற்றலும் - காய்விடத்து, வேற்றுமெகொண்டாடா மெய்மெயும் இம்மூன்றும்,

சாற்றுங்கால் சாலத்தலை" என்னும் மிருதுவாய நல்வாக்கும் சுகத்தையுந் துக்கத்தையும் சமமாகக் கருதுதலும், தன்னவரன்னியர் என்னும் வேற்றுமெ பாராட்டாதலுமாகிய சான்றோர்களே உலகத்தில் எக்காலும் முதல்வர்களாவார்கள் என்பது கொண்டு நடுவுநிலைமெயுள்ளார்க்கு வேற்றுமெயற்றிருத்தலே அணிகலமென்பது விரிவு

**6. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச**
**நடுவொரி யல்ல செயின்.**

**(ப.)** தன்னெஞ்ச - தன துள்ளத்திற்கு மாறாய், நடுவொரீஇ - நடுவுநிலைமெ, யல்ல - அல்லாததை, செயின் - செய்வதாயின், கெடுவல்யானென்ப - யான் கெடுவேனென்பதை, தறிக - அறிந்துக் கொள்ள வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** தன துள்ளத்திற்கு மாறாய நடுவுநிலை மெயற்றச் செயலை செய்வதாயின் தான் கெடுவோமென்று அறியவேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** தனது மனசான்றுக்கு விரோதமாக நடுவுநிலைமெயற்றச் செயலைச் செய்வதாயின் தனது கேட்டிற்கு வழியைத் திறந்துகொண்டோமென்று அறிய வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** தன்னெஞ்சமே தனக்குக் கரியாய் நிற்க அதற்கு மாறாக நடுவுநிலைமெயற்றச் செயலைச் செய்வதாயின் தானே கெடுவான் என்பதும் கெடான் என்பதும் அவனவன் செயல் என்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "நன்னிலைக்கட்டன்னை நிறுப்பானுந்தன்னை, நிலைகலைக்கிக்கீழிடுவானு நிலையினு, மேன்மேலுயர்த்து நிறுப்பானுந்தன்னைத், தலையாகச் செய்வானுந்தான். அறநெறிச்சாரம் தானே தனக்குப் பகைவனு நட்டானும், தானே தனக்கு மறுமெயு மிம்மெயும், தானேதான் செய்த வினைப்பயன் துய்த்தலால், தானே தனக்குக்கரி" என்பது கொண்டு தான் செய்யும் நடுவுநிலைமெயற்றச் செயலால் தானே கெடவேண்டும் என்பது விரிவு.

### 7. கெடுவாக வையா துலக நடுவாக
### நன்றிக் கட்டங்கியான் றாழ்வு.

**(ப.)** நடுவாக - நடுவு நிலைமெயோனை, துலக - உலகத்தோர், கெடுவாக - குற்றமுடையவனாக, வையார் - நிந்தியார்கள், நன்றிக்கட்டங்கியான் - நன்றியை நினையா நடுவுநிலைமெ யற்றோனை, றாழ்வு - நிந்திப்பாரென்பது பதம்.

**(பொ.)** நடுவுநிலைமெயுள்ளானை உலகத்தார் நிந்திக்கமாட்டார்கள் நடுவுநிலைமெயில்லானை நிந்திப்பார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** சகலமக்களையும் சமமாக பாவிக்கும் மேன்மக்களை உலகத்தார் உயர்த்திப் பேசுவார்களன்றி தாழ்த்தி நிந்திக்கமாட்டார்கள். சகலரையும் சமமாகப் பாவிக்காத கீழ்மக்களைத் தாழ்த்தி நிந்திப்பார்கள் என்பது கருத்து.

**(வி.)** நடுவுநிலைமெயினின்று சகல மக்களையும் பேதம்பாராது ஆதரிப்போரை வையமாட்டார்கள், பேதமுறக் கெடுப்போரை வைவார்க ளென்பதற்குச் சார்பாய் அறநெறித்தீபம் "நல்லோரை யெல்லோரும் நாடிடுவர் நல்லறத்தி, லில்லாரை யெல்லோரு மிழுக்குறவே பேசிடுவர், சொல்லாலும் பொருளாலு மறியாத தொல்லுலகோ, ரெல்லவரும் நல்லவரை யேற்றுவதன் பயனாமே" யென்னும் ஆதாரங்கொண்டு நடுவுநிலைமெயுற்றோரை வையாது போற்றுவதும் நடுவுநிலையற்று நன்றியில் நிலையாரை வைது தாழ்த்துவார் என்பது விரிவு.

**8. சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல மைந்தொருபாற்**
**கோடாமெ சான்றோர்க் கணி**

**(ப.)** சமன் செய்து - தராசு தட்டிற் சமநிறையேற்றி, சீர்தூக்குங் - நிறைபார்க்குங், கோல்போல் - துலாக்கோல்போல், லமைந்தொருபாற் - ஒரு பக்கம், கோடாமெ

போல சாயாதிருப்பதே, சான்றோர்க்கு - மேன்மக்களுக்கு, அணி - அழகாமென்பது பதம். –

**(பொ.)** தராசு தட்டிற் பொருளேற்றி கோல் எப்புறமுஞ் சாயாது நிலைக்கப்பார்ப்பது போல் மக்கள் நடுநிலைமெ சாயாது நிற்பதே அழகு
என்பது பொழிப்பு.

**(க.)** பொன்னொருதட்டிலும் படிக்கல்லொருதட்டிலும் இட்டு கோல் தூக்கி சமநிறைபார்ப்பதுபோல் கனவானையும் ஆதுலனையும் நடுவுநிலை மெயிற் சீர்தூக்கி ஆள்வதே மேலோர்களது செயல் என்பது கருத்து.

**(வி.)** தராசு கோலைக் கையிலேந்தி பொறக்கல்லுக்கும் எடைக்கல்லுக்குங் குறைவு நிறைவின்றி சமன் செய்து பார்ப்பது போல் மக்களாற் செய்யப்படும் இன்பதுன்பங்களை நடுவுநிலைமெயில் ஆராய்ந்து நீதியளிப்பதே சான்றோர் செயலாதலின் அந்நடுவுநிலைமெ யுற்றோர் தராசுகோல் சமநிலை போல் நிற்பரென அவர்களது சிறப்பைக் கூறிய விரிவாம்.

**9. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா**

**வுட்கோட்ட மின்மெ பெறின்.**

**(ப.)** வுட்கோட்ட - உள்ளத்தின்கண், ஒருதலையா - நடுவுநிலைமெயற்ற வொருசார்பு, மின்மெபெறின் -

இல்லாமெயுற்றிருக்கின், செப்ப - கூறுவோரால், சொற்கோட்ட - சொற்குற்றம், மில்லது - நிகழாவென்பது பதம்.

**(பொ)** உள்ளமானது நடுவு நிலைமெயுற்றிருக்கில் அவர்களது வாய்மொழியும் நடுவுநிலைமெ யுற்றிருக்கும் என்பது பொழிப்பு

**(க.)** மனத்தின்கண் மாசகற்றியுள்ளவன் மொழியும் மாசற்ற நடுவுநிலைமெயுற்றிருக்கும் என்பது கருத்து.

**(வி.)** உட்குற்றமாம் மனமாசு கழுவியவன் செயலும் அவன் மொழியும் மாசகன்றிருக்கும் என்பது திண்ணமாதலின் உள்ளக் களங்கமற்றோன் ஒருதலையாய நியாயமற்று நடுவுநிலைமெயில் நிற்பான் என்பது விரிவு

**10. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவுந் தம்போற் செயின்.**

**(ப.)** பிறவுந் - அன்னியரையும், தம்போற் - தங்களைப் போற், பேணிக் - கருதி, செயின் - செய்வதாயின், வாணிகஞ்செய்வார்க்கு - வியாபாரம் நடத்துவோருக்கு, வாணிகம் - செட்டுவிருத்தி பெறுமென்பது பதம்.

**(பொ.)** வணிகன் நடுவுநிலைமெயுள்ளவனாய் கொடுக்கவேண்டிய பொருளைச் சரிவரக் கொடுத்துவருவானாயின் வணிகமாம் செட்டு

விருத்தி பெறும் என்பது

பொழிப்பு

**(க.)** வியாபாரியானவன் தான் வாங்கிய பணத்திற்குத் தக்கப் பொருளை குறைவுநிறைவின்றி சரியாக ஈய்ந்துவருவானாயின் அவனது வியாபாரம் நாளுக்குநாள் விருத்திபெறும் என்பது கருத்து.

**(வி.)** நாயன், தராசுகோலின் நடுவுநிலைமெயை விளக்கி அத்தராசுகோல் ஏந்தும் வணிகன், செட்டி, ரெட்டி என்னுந் தொழிற்பெயர்கொண்ட வியாபாரியும் விருத்தி பெறல் வேண்டி ஒன்றைக்கொடுத்து மற்றொன்றை வாங்குவதில் குறைவுநிறைவாம் பேதமின்றி கொடுக்கல் வாங்கலை நடுவநிலைமெயில் நடாத்துவானாயின் வாணிபமும் விருத்தி பெற்று செட்டும் நிலைக்குமெனக் கூறிய விரிவு

## 13. அடக்கமுடைமெய்

அதாவது திரிகரண சத்தமாம் மனோவடக்கம், நாவடக்கம், தேகவடக்கமாம் மான்றினையும் விளக்குமாறு நடுவுநிலைமெக்குப் பின் அடக்கமுடைமெயை விவரிக்கின்றார்.

**1. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமெ**

**யாரிரு ளுய்த்து விடும்.**

**(ப.)** அடக்க - ஒடுக்கமானது, மமரரு - வானவர்களுடன், ளுய்க்கு - சேர்ப்பிக்கும், மடங்காமெ - ஒடுக்கமில்லாமெ, யாரிரு - பிறவிசாகரமாம் நிரையத்து, ளுய்த்துவிடும் - சேர்த்துவிடுமென்பது பதம்.

**(பொ.)** ஒடுக்க முடையவர்கள் உயர்ந்தோராம் வானவர்களைச் சேர்வார்கள். ஒடுக்கமில்லாதவர்கள் இருள் நிலையாம் பிறவிசாகரத்தில் உழன்று அவதி உறுவார்கள் என்பது பொழிப்பு.

**(க)** மனவொடுக்கம், நாவொடுக்கம், தேகவொடுக்க முடையோர் உலகத்தில் சுகவாழ்க்கைப் பெறுவதுடன் முத்திநிலையாம் வானவரோடு அமைந்து நித்திய வாழ்க்கையைப் பெறுவார்கள். அத்தகைய ஒடுக்கமில்லாதோர் மாறாப்பிறவியிற் சுழன்று தீரா துக்க சாகரத்தில் ஆழ்வார்கள் என்பது கருத்து.

**(வி.)** அடக்கமென்பதில் நாவடக்கம், மனோவடக்கம், தேகவடக்கமாந் திரிகரணசுத்தத்தை வால வயதாம் பதினாறு வயதினின்று சாதிப்பானாயின் அதுவே மக்களின் மேலான சாதனமென்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "இளையானடக்கங் கிளைபொருளில்லான் கொடையே கொடைப்பய மடக்கனெல்லா, மொறுக்கு மதுகையுரனுடையாளன், பொறுக்கும் பொறையே பொறை" இவற்றிற்குப் பகரமாக அறநெறிச்சாரம்

"தன்னைத்தன்னெஞ் சங்கரியாகத் தானடங்கின், பின்னைத்தா னெய்தானலனில்லை - தன்னைக் குடிகெடுக்குந் தீனெஞ்சிற் குற்றேவல் செய்தல், பிடிபடுக்கப்பட்டகளிறு" என்னும் ஆதாரங்கொண்டு அடக்கமே நித்திய சுகத்திற்குக் கொண்டுபோம் வழியென்றும் அடக்கமின்மெயே மாறா துக்கத்திற்குக் கொண்டுபோம் வழியுமாம் என்பது விரிவு

**2. காக்க பொருளா வடக்கத்தை யாக்க**

**மதனினூாவுங் கில்லை யுயிர்க்கு .**

**(ப.)** வடக்கத்தை - அடக்கத்தையே மேலாயப் பொருளாகக் கருதி, காக்க - காத்தல் வேண்டும், மதனினூஉங் - அடக்கத்தினுமேலாய, யாக்க - செல்வம், யுயிர்க்கு - மக்களுக்கு, கில்லை - இல்லையென்பது பதம்.

**(பொ.)** மக்களுக்கு அடக்கத்தினும் மேலாய செல்வம் உலகத்தில் இல்லை என்பது பொழிப்பு

**(க)** தனச்செல்வம் தானியச் செல்வமாம் பொருளினும் அடக்கமுடைமெயாம் பொருளே மேலாம் என்பது கருத்து.

**(வி.)** ஒருவனுக்கு நாவொடுக்கம், மனோவொடுக்கம், தேகவொடுக்க மாகிய மூன்றும் இருக்குமாயின் சகல சுகமும் பொருந்திய வாழ்க்கை உடையவன் அவனேயாதலின்

தனப்பொருள், தானியப்பொருள் யாவற்றிற்கும் அடக்கமுடைமெயாம் பொருளே மேலாயது என்பது விரிவு.

**3. தெறிவறிந்து சீர்மெ பயக்கு மறிவறிந்**
**தாற்றி னடங்கப் பெறின்.**

**(ப.)** மறிவறிந்தாற்றி - விவேகவிருத்தியாற்றணிந்து, னடக்கப் - ஒடுங்க, பெறின் - பெறுவானாயின், தெறிவறிந்து - நிலைபெற்ற, சீர்மெ - சுகத்தை, பயக்கு - அளிக்குமென்பது பதம்.

**(பொ.)** அறிவின் விருத்தியால் ஆற்றலுற்று அடங்கியவன் நிலையான சுகபயனை அடையலான் என்பது பொழிப்பு.

**(க..)** விவேக விருத்தியால் தணிந்தடங்கியவன் அழியா சுகப்பயனை அடைவானென்பது கருத்து.

**(வி.)** அறிவின் மிக்கோர் ஆற்றலடைந்து திரிகரண வொடுக்கம் பெறுவார்களாயின் வாக்காலும், மனதாலும், தேகத்தாலும் யாதொரு தீங்குகளும் எழாது என்றுமழியா சுகவாழ்க்கையைப் பெறுவார்கள் என்பது விரிவு.

4**. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற**
**மலையினு மாணப் பெரிது.**

**(ப.)** நிலையிற்றிரியா - நடுவுநிலை பிறழாது, தடங்கியான் - ஒடுங்கியவன், றோற்ற - காட்சியானது, மலையினு - அசலத்தினும், மாண - மிக்க, பெரிது - மேலாக விளங்கும் என்பது பதம்.

**(பொ.)** நடுவுநிலைமெய்ப் பிறழாது ஓடிங்கினவன் மலையினும் பெரிதாக விளங்குவான் என்பது பொழிப்பு.

**(க.)** திரிகரண ஒடுக்கத்திலும் நடுவுநிலைமெ பிறழாது நிற்பவன் ஓர் மலைபோல் தோற்றுவான் என்பது கருத்து.

**(வி.)** அடக்க முடைய நடுவு நிலைமெயோன் தோற்றம் சகலருக்குங் குறிப்பிட வகல விளங்குகின்றபடியால் நடுவுநிலை மெயில் அடங்கிய பெருங்காட்சியை மலைக்கு ஒப்பிட்டுக் கூறிய மாணவிரிவாம்.

**5. எல்லார்க்கு நன்றாம் பணிதல வருள்ளுஞ்**

**செல்வர்க்கே செல்வந்த கைத்து.**

**(ப.)** எல்லார்க்கு - சகலருக்கு மொடுங்கி, பணித - வணக்கமுறுதல், நன்றாம் நல்லதாம், லவருள்ளுஞ் - அத்தகையோருள், செல்வர்க்கே - செல்வமுள்ளார்க்கு, செல்வந் - செல்வமானது, தகைத்து - மேலுமேலுந் தழைக்குமென்பது பதம்.

**(பொ.)** எல்லோருக்கும் ஒடுங்கி வணக்கமுற வாழ்தலே நன்றாம். அவ்வகை அடக்கமுடையார்க்கு செல்வம் இருக்கின் அச்செல்வம்

மென்மேலும் பெருகும் என்பது பொழிப்பு

**(க).** சகலரிடத்தும் அன்பு பொருந்து அடங்கி வாழ்கலே அழகாம். அவ்வகை வாழ்க்கைப் பெறுவோரது செல்வம் மேலும் மேலும் பெருகி சுகவாழ்க்கைப் பெறுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** எல்லோராலும் அடக்கமுடையான், வணக்கமுடையானென்னும் பெயரைப் பெருதலே அழகாம். அத்தகையோர்க்குக் கிஞ்சித்து செல்வமும் இருக்கின் அஃது மேலும் மேலும் பெருகுமென்பதற்குச் சார்பாய் அடக்கமுடையாரைத் துன்பமணுகா என்பதுடன் உயர்கதிக்கு மாளாக்குமென நாலடியார் "அறிவதறிந்தடங்கியஞ்சுவதஞ்சி, யுறுவதுலகுவப்பச் செய்து பெறுவதனா, லின் புற்றுவாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந் துன்புற்று வாழ்தலரிது" அறநெறிச்சாரம் "இம்மெடக்கத்தைச் செய்து புகழாக்கி, உம்மெயுபரகதிக்குய்த்தலால் - மெய்ம்மெயே, பட்டாங் கறமுரைக்கும் பண்புடையாளரே, நட்டாரெனப்படுவார்" என்பது கொண்டு அடக்கத்தை விளக்கிய விரிவு.

**6. ஒருமெயு ளாமைபோ லைந்தடக்க லாற்றி**
**னெழுமெயு மேமாப் புடைத்து.**

**(ப.)** ஒருமெயு - வோர்தேகத்துள், ளாமைபோ - ஆமையைப் போல், லைந்தடக்கலாற்றி - ஐம்பொறியடக்கியமைந்தோன்,

னெழுமெயு - இனிதோற்று மெழுவகைப் பிறப்பினையும், மேமாப்புடைத்து - தோற்றாதகற்றிக் கொள்ளுவானென்பது பதம்.

**(பொ.)** ஆமையைப்போல் ஐம்பொறியையும் அடக்கி ஆற்றலுற்றவன் இனி தோற்றும் எழுவகைப்பிறப்பையும் வெல்லுவான் என்பது பொழிப்பு,

**(க.)** ஆமையானது ஓர் தலையையும் நான்கு கால்களையும் அடக்கி சுகம் பெறுவதுபோல் ஓர் புருடன் மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் வாய ஐந்தினையுங் கண்டடங்குவானாயின் எழுபிறப்பினுந் தோற்றுந் துன்பங்களற்று சுகநிலை பெறுவான் என்பது கருத்து.

**(வி.)** அன்னியரால் தனக்குத் தீங்கு நேரிடாவண்ணம் ஆமையானது ஐந்தறுப்பினையும் அடக்கிக்கொள்ளுவதுபோல் புருடன் எழுபிறவி களாலுண்டாந் துன்பங்களை அகற்றிக்கொள்ளற்கு ஐம்பொறி வாயல் கண்ட்டங்கலே யாதாரமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "உணர்ச்சியச்சாக வுசாவண்டியாகப், புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி உணர்ந்ததனை, ஊர்கின்றபாக னுணர்வுடைய னாகுமேல், பேர்கின்றதாகும் பிறப்பு என்பதுகொண்டு ஐம்புலன் அடக்கத்தால் எழுவகைப் பிறப்பின் துன்பங்களும் அகலும் என்பது விரிவு.

**7. யாகாவா ராயினு நாகாக்க காவாக்கான்**

**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.**

**(ப)** யாகாவாராயினு - எவராயிருப்பினும், நாகாக்கக் - நாவை யடக்கிக் காக்கல் வேண்டும், காவாக்கால் - அடக்கிக் காக்காவிடின், சோகாப்பர் - மயக்கத் துன்புறுவதுடன், சொல்லிழுக்கப்பட்டு - பலராலுமிழிவடையப் படுவார்க ளென்பது பதம்,

**(பொ.)** யாவாராயினுந் தனது நாவைக்காக்கல் வேண்டும். காக்காது போவாராயின் பற்பல துன்பங்களை அடைவதுடன் பல்லோராலும் இகழப்படுவார்கள் என்பது பொழிப்பு

**(க)** எத்தகைத்தோ ராயினுந் தனது நாவிலிருந்து கோட்சொல், கொடுஞ்சொல், புறச்சொல் முதலிய வழுச்சொல் எழாது காக்கல் வேண்டும். அவ்வகைக் காக்காவிடின் பலவகைத் துன்பங்களை அடைவதுடன் சகலராலும் இழிச்சொற் பெறுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** கனவானாயினும், ஏழையாயினும், கற்றோனாயினும், கல்லானாயினும், அடங்கிப் பேசவேண்டியதே அழகாம். அங்ஙனமடங்காது வித்தியா கர்வத்தாலும், தனகர்வத்தாலும் தனது நாவைக் காவாது கொடுஞ்சொல்லாலும் கோட் சொல்லாலுங் குறளைச் சொல்லாலும் மற்றோரைப் புண்படக் கூறியும் இழிபடக்கூறியுங் குடி கெடக்கூறியுங் கலம் பெறக் கூறியும்

வருவார்களாயின் துன்பத்திற்கு ஆளாவதுடன் எக்காலும் இழிவடைப்படுவார்கள் என்பதற்குச் சார்பாய் இளையோராயினும் தேகவடக்கம், மனோவடக்கம், நாவடக்கம், பெறவேண்டுமென்பதை நாலடியார் "ஆர்த்தவறிவினராண்டிளையராயினுங் , காத்தோம் பிதம்மெ யடக்குப - மூத்தொறு உந் தீத்தொழிலே கன்றித் திரிதந்தெரிவைபோற், போத்தறார் புல்லறிவினார்" என்பது கொண்டு மூத்தோராகி நாவடக்கம் பெறாது கெடினும், இளைஞராயினும் அடக்கமுற்று வாழ்தலே இனிது என்பது விரிவு

**8. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி**

**னன்றாகா தாகி விடும்.**

**(ப.)** பொருட்பய னுண்டாயி - பயனுண்டாம் பொருளைக் கருதி பேசுங்கால், ஒன்றானுந் - ஒருமொழியாயினும், தீச்சொற் - கொடுமொழியா யிருக்குமாயின், நன்றாகாதாகிவிடும் - பயனடைவதற் கேதுவில்லாமற் போமென்பது பதம்.

**(பொ.)** ஒரு பொருளின் பயனைக் கருதி பேசுவோன் கொடுமொழி ஒன்றைக் கலந்து பேசுவானாயின் அம்மொழியால் நாடிய பொருள் கிட்டாதென்பது பொழிப்பு

**(க.)** பயனுண்டாம் எப்பொருளை நாடிப் பேசினும் இனியமொழியால் பேசுதலே பயன் தரும். அங்ஙனமிராது ஓர்

பயனைக் கருதியுங் கொடுமொழி எழுமாயின் கூடிய பயன் கெடுமென்பது கருத்து.

**(வி.)** தனக்கு வேண்டும் ஓர் பொருட் பயனைக் கருதிப் பேசுகிறவன் அடக்கமுறப் பேசுதலே அழகாம். அங்ஙனம் பேசாது ஓர் கொடுமொழி கலந்துவிடுவானாயின் " துரும்புங் கலத்தண்ணீரைத் தேக்கு " மென்னும் பழமொழிக்கிணங்க பல நற்பயனுங் கெடுமென்பது விரிவு.

**9. தீயினால் சுட்டப் புணுள்ளாறு மாறாதே**
**நாவினாற் சுட்ட வடு.**

**(ப.)** தீயினால் - நெருப்பினால், சுட்டப் - வெதுப்பிய, புணுள்ளாறு - பண்ணானது தானே யாறிப்போகும் , நாவினாற் - தனது வாயினால் சு - புண்படக்கூறியக் கொடுமொழியின், வடு - வருத்தமானது, மாறாதே - என்றும் ஆறாவென்பது பதம்.

**(பொ.)** ஒருவனை நெருப்பினாற் சுட்டப் புண்ணானது ஆறிப்போம். நாவினாற் புண்படக்கூறிய கொடு மொழியானது என்றும் ஆறாதென்பது பொழிப்பு.

**(க)** நெருப்பினாற் சுடப்பட்ட வருத்தமானது தன்னில் தானே அகன்றுபோம். நாவினாற் புண்படக்கூறிய கொடுமொழியின் வருத்தமானது என்றும்

அகலாதென்பது கருத்து.

**(வி.)** மெல்லிய தேகத்தில் நெருப்பினாற் சுடப்பட்ட நோயானது கூடிய சீக்கிரந் தன்னில் தானே அடங்கிப்போம். ஒருவன் தன் நாவினால் எதிரியின் மனம் புண்படக் கூறுமொழியின் நோயானது குணக்குன்றில் ஏறாதோரை எக்காலும் வாதிக்கும். ஆதலின் குணக்குன்று ஏறிய விவேகிகளை மற்றோர் புண்படக் கூறினும் அவற்றை அப்போதே மறந்து புண்படக் கூறலாகாதென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "தன்னையொருவ னிகழ்ந்துரைப்பிற்றான்வனைப் பின்னையரையாப் பெரு வினைப்பயனுமாயிற்றா மென்றதன் கண் மெய்ம்மெ, நினைத்தொழிய நெஞ்சினோயில்" என்னு மாதாரங்கொண்டு எவ்விதத்தேனும் ஒருவர் மனம் புண்படக் கொடு மொழிகளைக் கூறலாகாதென்பது விரிவு.

**10. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செல்வி யறம் பார்க்கு மாற்றி னுழைந்து.**

**(ப.)** கதங்காத்துக் - தனது கோபாக்கினியை யடக்கி, கற்றடங்க - கற்றவழியில் நிற்போன், செவ்வி - செவ்விய, லாற்றுவான் - ஆறுதலடைவான், (அதுவே) யறம்பார்க்கு - தன்மநெறியின் கண்ணின்று, மாற்றி - ஆறுதலில், நுழைந்த - அமர்ந்தோனது நிலையை யொக்கு மென்பது பதம்.

(பொ.) கோபத்தை அடக்கிக் கற்றவழியில் நிற்போன் அறநெறியில் நின்றோன் ஆற்றலை அடைவானென்பது பொழிப்பு

**(க.)** தனக்குள் எழுஉங் கோபாக்கினியை அவித்து கற்றநிலையில் அடங்குவோன் அறவாழியந்தணன் நுழைந்த ஆறுத நிலையில் அமர்வானென்பது கருத்து.

**(வி.)** அடக்கத்துள் தனக்குள் எழுங் கோபத்தை முதலாவது அடக்கி தான் கற்ற நீதிநெறி ஒழுக்கத்தில் நிலைப்பவன் அறக்கடவுளால் ஆதிபகவன் அமர்ந்த விடம் புக்குவானென்பது விரிவு.

## 14. ஒழுக்கமுடைமெய்

அதாவது ஒழுக்கமுடைமெய் என்பது மக்களது மனோ வாக்குக் காய மென்னும் முன்றினையும் அடக்கியாளுஞ் செயலுக்குரிய பொருளேயாம். அதுகொண்டே காரிகையார் "ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாமோதலி நன்றே யொழுக்கமுடைமெ" என வற்புறுத்திக் கற்பதினும் திரிகரண ஒடுக்கமே மேலெனக் கூறியுள்ளார்.

**1. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க**
**முயிரினு மோம்பப் படும்.**

**(ப.)** ஒழுக்கம் - ஒடுக்கச் செயலானது, விழுப்பந் - மேலாய சிறப்பை , காலா - கொடுத்தலால், னொழுக்க - அவ்வொழுக்கம்,

முயிரினு - உயிருக்கு மேலாக, மோம்பப்படும் - கருதப்படுமென்பது பதம்.

**(பொ.)** திரிகரண ஒடுக்கச் செயலானது மேலாய சிறப்பைத் தரலால் அவற்றை உயிரினு மேலாகக் கருதி காக்கவேண்டுமென்பது பொழிப்பு.

**(க.)** மனோ வாக்கு காய மூன்றும் ஒடுக்கச் செய்யும் செயலே சகலவற்றினுஞ் சிறந்ததாதலின் அவற்றைத் தங்கள் உயிரினும் மேலாக ஓம்பிக் காத்தல் வேண்டுமென்பது கருத்து.

**(வி.)** படைக்கஞ்சி தனது உயிர் போம் என்று ஒடுங்குதலினும் வியாதியினாற்றனதுயிர் போமென்று ஒடுங்குதலினும், அக்கினியினால் தனதுயிர் போமென்று ஒடுங்குதலினும், நீரினால் தனதுயிர் போமென்று ஒடுங்குதலினும், மனத்தினால் எழுஉங் கெட்ட எண்ணங்கள் எழாமல் ஒடுங்கியும், நாவினால் எழுஉங் கொடிய வார்த்தைகள் எழாமல் ஒடுங்கியும், தேகத்தால் செய்யுங் கொடியச் செயல்களைச் செய்யாமல் ஒடுங்கியும் வாழ்தலே மக்களது சிறந்த வாழ்க்கையாதலின் ஒழுக்கத்தை உயிரினும் மேலாகக் காத்தல் வேண்டுமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "மக்களுடம்பு பெறற்கரிது பெற்றபின், மக்களறிவு மறிதரிது - மக்கள், அறிவதறிந்தாரறத்தின் வழுவார், நெறித்தலை நின்றொழுகுவார்"

என்னும் ஆதாரங்கொண்டு உயிரினுந் திரிகரண ஒடுக்கநெறியே மேலாயதென்பது விரிவு.

### 2. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கத் தெரிந்தோம்பித் தேரினு மஃதே துணை.

**(ப.)** பரிந்தோம்பிக் காக்க - ஒன்றைக் கருதிக்காக்கலினும், வொழுக்கந் - ஒடுங்க வேண்டியவை யிவையென, தெரிந்தோம்பித் - கண்டு கருதி, தேரினு - முன்னேறுவதாயின், அஃதே துணை - அதுவே இவனுக்குத் துணையாமென்பது பதம்.

**(பொ.)** ஒன்றைப் பரிந்து செய்வதினும் இதுவே சரியாய நெறியென்று அறிந்து தேறுதலே அவனுக்குத் துணையாகும் என்பது பொழிப்பு

**(க.)** ஒருவன் அவாக்கொண்டு செய்யும் செயலில் நீதிநெறியொழுக்கச் செயலைத் தெரிந்து செய்வானேயாயின் அச்செயலே அவனுக்குத் துணையாமென்பது கருத்து.

**(வி.)** நீதிநெறிவாய்மெயாம் ஒழுக்கமே சகலவற்றினுஞ் சிறந்ததென்று உணர்ந்து அவ்வழி ஒழுகுபவன் எவனோ அவனை அவ்வொழுக்கமே காக்குமென்பது அனுபவக் காட்சியாதலின் ஒருவனுக்குத் துணையாக நின்று காத்தலே இவனது ஒழுக்க மென்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "வேற்றுமெயின்றி

கலந்திருவர் நட்டக்காற், றேற்றா வொழுக்க மொருவன் கணுண்டாயி, னாற்றுந் துணையும் பொறுக்கப் பொறானாயிற், றூற்றாதே தூரவிடல்" என்பது கொண்டு மக்களுக்கு ஒடுக்கமே உற்ற துணையாம் என்பது விரிவு.

**3. ஒழுக்க முடைமெ குடிமெ யிழுக்க**
**மிழிந்த பிறப்பாய் விடும்.**

**(ப.)** ஒழுக்கமுடைமெ - நல்லொழுக்கத்தையுடையானென்பான், குடிமெ - குடும்பத்தோரால், யிழுக்க - இழிவடையப்படுவானாயின், மிழிந்த - தாழ்ந்த, பிறப்பாய் விடும் - பிறவியிற் றோன்றுவா னென்பது பதம்

**(பொ.)** நல்லொழுக்கச் செயலை நாடுவோன் தனது குடும்பத்தில் ஒடுக்கமிராது இழுக்கடைவானாயின் தாழ்ந்த பிறப்பை அடைவானென்பது பொழிப்பு

**(க.)** குடும்பத்தில் நல்லொழுக்கமில்லாதவன் பிறரிடத்தும் ஒழுக்கமற்று விலங்கும் பேயும் நரகருமாகத் தோற்றுவானென்பது கருத்து.

**(வி.)** தனது இல்லத்தில் தீயொழுக்கச் சாதனமுள்ளவன் பிறரிடத்தும் தீயொழுக்கமாங் கொலை, களவு, காமம், வெஃகல், வெகுளல், பொல்லாகாட்சி, பொய், குறளை, கடுஞ்சொல், பயினிற் சொல்

ஆகியவற்றைப் பெருக்கி மிருக தோற்றங்களாம் பலவகைத் தாழ்ந்த பிறவிக்கேகுவானென்பது விரிவு.

**4. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.**

**(ப.)** மறப்பினு - தன்னை மறந்திருப்பானாயினும், மோத்துக்கொளலாகும் - சம்மதித்துக்கொள்ளலாம், பார்ப்பான் - தன்னைத்தானாராயக் கூடிய பிறப்பொழுக்கங் - மானிடனெனப் பிறந்துள்ளோனது வொழுக்கம். குன்றக்கெடும் - குறையக் கெடுவானென்பது பதம்,

**(பொ.)** தன்னை அறிந்து ஆராயாதவன் ஆயினுங் குற்றமில்லை, தன்னை அறிந்தாராய்வோன் எனத் தோன்றிய மானிடன் நல்லொழுக்க நெறியினில்லானேல் கெடுவானென்பது பதம்.

**(க.)** மக்கட் பிறப்பிற் தோன்றியும் தன்னைத்தான் அறியாதவனாயினுங் குற்றமில்லை. மக்கட்பிறப்பாம் மானிடனெனப் பிறந்து தன்னை ஆராய முயன்றும் நல்லொழுக்க நெறியில் தவறுவானாயின் கெடுவானென்பது கருத்து.

**(வி.)** ஒருவன் தனது நற்செயல்கள் ஈதீதென்றும் துற்செயல்களீத்தென்றுந் தன்னை மறந்திருப்பினுங் குற்றமில்லை. மானிடனென்னும் மேலாயப் பிறப்பில் தோன்றி அப்பிறப்பின்

சிறப்பால் இஃது நல்வினை அஃது தீவினையென் உணர்ந்தும் நல்லொழுக்க நெறியில் குன்றுவானாயின் எண்ணறிய பிறவிதனில் மானிடப் பிறவியே மேலாய தென்னும் சிறப்புக்குன்றி விவேகமிகுத்தோரால் விலங்கோ, பேயோ, நரனோ என்று இகழப்படுவான் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம், "எப்பிறப்பாயினு மேமாப்பொருவற்கு, மக்கட் பிறப்பில் பிறிதில்லை - அப்பிறப்பில், கற்றலுங் கற்றவை கேட்டலுங் கேட்டதன்கண், நிற்றலுங்கூடப்பெறின்." தொல்காப்பியம், "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே யஃறிணை யென்மனா வரலபிறவேயாயிருதிணையி னிசைக்குமென சொல்லே" என்பது கொண்டு மானிடனெனப் பிறந்தும், தன்னைத்தான் அறிய முயன்றும், ஒழுக்கங்குன்றுமாயின் கெடுவானென்பது விரிவு.

**5. அழுக்கா றுடையான்க ணாக்கம் போன் றில்லை**
**யொழுக்க மிலான்க ணுயர்வு.**

**(ப.)** அழுக்காறுடையான்க - அறுவகை மனமா சுள்ளவ னிடத்துள்ள, ணாக்கம் போன்றில்லை - செல்வமில்லாதது போல், யொழுக்கமிலான்க - நல்லொழுக்கமில்லாதவனது, ணுயர்வு - சிறப்பெனப்படுவது பதம்.

**(பொ.)** மனமாசுள்ளவனிடத்து உள்ள செல்வம் பயன்படாதது போல் உயர்ந்தோன் எனினும் ஒழுக்கமில்லாவிடின் சிறப்பில்லை யென்பது பொழிப்பு.

**(க.)** களங்கமுள்ளோனிடம் செல்வமிகுந்தும் பயன் தராததுபோல் ஒழுக்கமில்லானிடத்து யாதொரு மேம்பாடிருப்பினும் சிறப்பைத் தாராவென்பது கருத்து.

**(வி.)** பேராசை, வஞ்சினங், குடிகெடுப்பு, சூது, உலோபம், பொறாமையாம் மனக்களிம்புகள் ஆறும் நிறைந்தோனிடம் தனமிருப்பினும் இல்லாதது போல் எத்தகைவுயர்ந்த அந்தஸ்த்தைப் பெற்றவனாயினும் நல்லொழுக்கமில்லாவிடின் சிறப்படையானென்பது விரிவு. குறுந்திரட்டு "வஞ்சினை பொறாமெலோபம் வழு குடி கெடுப்பு சூது, துஞ்சும் பேராசை யீதே துறவியர்க் கழுக்காறாகும், எஞ்சிய சாந்தம் யீகை யிதக்க விம் மமுதமூன்றுந், தஞ்சுக மடைவோர்க்கென்று சாற்றினர் மேலோரென்பான்.'

**6. ஒழுக்கத்தி னொல்கா ரூரவோ ரிழுக்கத்தி**
**னேதம் படுப்பாக் கறிந்து**

**(ப.)** ரூரவோர் - உரவின் முறையார், ரிழுக்கத்தி - இடுக்கத்தின், னேதம் - வழுவால், படுபாக்கறிந்து - உறுந்துன்பங்களையுணர்ந்தோர், ஒழுக்கத்தி - நல்லொடுக்கத்தினின்று னொல்கா - வழுவாரென்பது பதம்.

**(பொ.)** உறவின் முறையோரது வழுவால் இழுக்குறுவதை உணர்ந்தோர் தங்களது நல்லொழுக்கத்தினின்று பிறழார் என்பது பொழிப்பு.

**(க.)** தங்கள் தங்கள் வரன்முறையோர் துற்செயலால் படுந்துன்பங்களைக் கண்ணாறக் காணுவோர் தங்களுக்குள்ள நல்லொழுக்கமாம் நற்செயலினின்று என்றும் நீங்காரென்பது கருத்து.

**(வி.)** தங்கள் உறவினர்களும் அடுத்த நேயர்களும் தங்கள் தங்களிழுக்கால் படுந்துன்பங்களைக் கண்டுணர்வோர் அத்தகைய இழுக்காம் அழுக்காறுக்கு அஞ்சி சாந்தம் யீகை அன்பென்னு மூவொழுக்கத்தினின்றும் அகலாரென்பது விரிவு.

**7. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மெ யிழுக்கத்தி**
**னெய்துவ ரெய்தாப் பழி.**

**(ப.)** ஒழுக்கத்தி - நல்லொழுக்கத்தால், மேன்மெ - சிறப்பை, னெய்துவர் - பெறுவார்கள், யிழுக்கத்தி - துற்செயலால், யெய்துவ - பெறுவது, ரெய்தாப் - செய்யொணா, பழி - நிந்தையென்பது பதம்.

**(பொ).** நல்லொழுக்கச் செயலால் சிறப்பைப் பெறுவர், தீயொழுக்கச் செயலால் நிந்தையைப் பெறுவா ரென்பது பொழிப்பு.

**(க.)** ஒருவன் தான் செய்யும் நற்கருமங்களினால் எல்லோராலும் புகழப்படுவான். மற்றொருவன் தான் செய்யுந் துற்கருமங்களினால் எல்லோராலும் இகழப்படுவானென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றியுள்ள மக்கள் தாங்கள் தாங்கள் செய்துவரும் நல்லொழுக்கச் செயல்களினால் சருவசீவர்களாலும் மேன்மக்களெனக் கொண்டாடத்தக்கப் புகழைப் பெறுவர். மற்றுமுள்ளோர் மக்களென்னும் மனுகுலத்தில் தோன்றியும் கருணையற்ற தீயொழுக்கமாங் கொறூறச் செயல்களினால் சருவசீவர்களாலுங் கீழ்மக்களெனத் தூற்றுவதன்றி பழிப்புக்கு ஆளாகுவரென்பது விரிவு.

**8. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கத்தி யொழுக்க**
**மென்று மிடும்பை தரும்.**

**(ப.)** நன்றிக்கு - செய்நன்றிக்கு, வித்தாகு - விதையாவது, நல்லொழுக்கம் - நன்றியை மறவாதிருத்தலேயாம், தீயொழுக்க - அன்னன்றியை மறப்பது, மென்று - எக்காலத்தும், மிடும்பைதரும் - துன்பத்தைக் கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** ஒருவர் செய்த நன்றியை மறவாதிருத்தலே நல்லொழுக்க வித்தென்னப்படும். அதனை மறத்தலே துன்பத்தை வளர்க்கும் வித்தென்பது

பொழிப்பு.

**(க.)** ஒருவர் செய்த உபசாரத்தை என்றும் மறவாதிருத்தலே நல்லொழுக்க விதையென்னப்படும். அவ்உபகாரத்தை மறக்குஞ் செயலே சகல துன்பங்களையும் விளைவிக்கும் வித்தென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றியுள்ள மக்களுள் ஒருவர் செய்த வுபகாரத்தை என்றும் மறவாது அவர்களுக்குப் பிரதிவுபகாரஞ் செய்யாவிடினும் நல்லவனாக நடந்துக்கொள்ளலே மற்றவர்கள் உதவிக்கு முறித்தாய் நல்லொழுக்க விதையினது பலனைத்தரும். அங்ஙனஞ்செய்த உபகாரத்தை மறந்து அவர்களுக்கே தீங்கை விளைவிப்பதாயின் அத்தீங்கின் விதையே தீவினையாக வளர்ந்து மற்றோர் உபகாரத்தையுமிழந்து அல்லலுற்று அலைவிப்பதுடன் ஆற்றொணா துன்பத்திற்கு ஆளாக்கும் என்பது விரிவு.

**9. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய**

**வழுக்கியும் வாயற் சொலல்.**

**(ப.)** ஒழுக்கமுடையவர்க் - நல்லொழுக்க நெறியினிற்பவர்கள், வழுக்கியும் - தன்னை மறந்தும், தீய - கொடிய மொழிகளை, வாயாற் சொல்ல - நாவினால்

மொழிதற்கு, கொல்லாவே - முடியாவா மென்பது பதம்.

**(பொ.)** நல்லொழுக்க நெறியில் நிற்போர் தங்களை மறந்தும் நாவினால் கொடுமொழிகளைக் கூறாரென்பது பொழிப்பு,

**(க.)** அப்பிரயோசன வார்த்தைகளைப் பேசாது அடங்கலே ஒழுக்கமுடையோர் உள்ளுணர்வாதலின் இழுக்குடைய வார்த்தைகளை என்றும் மொழியாரென்பது கருத்து.

**(வி.)** தேகவடக்கம், மனோவடக்கம், வாக்கடக்கமுள்ள நல்லொழுக்க நெறியில் நிற்போர் தங்களை மறந்தும் ஒருவரைக் கொடுமொழிக் கூறி புண்படச் செய்யார்களென்பது விரிவு.

**10. உலகத்தோ டொப்ப வொழுகல் பலகற்றும்**
**கல்லா ரறிவிலா தார்.**

**(ப.)** உலகத்தோடொப்ப - உலகமக்களுடன் கூடி, வொழுகல் - நல்லொழுக்கங்களை, பலகற்றும் - பலவகையாகக் கற்றும், கல்லார் - அவற்றை யுணராதவர்கள், ரறிவிலாதார் - விவேகமில்லார்களென்பது பதம்.

**(பொ.)** நல்லொழுக்க நெறியில் நின்றொழுகும் மக்களுடன் கூடியுலகத்தில் வாழினும் அவர்களது நன்னெறியைக் கல்லாத மக்கள் கற்றுங் கல்லாத அவிவேகிகளென்னப் படுவார்களென்பது பொழிப்பு.

**(க.)** உலகத்தில் நன்மார்க்க நெறியுள்ளோருடன் கூடி வாழ்ந்தும் தங்கள் தங்கள் துன்மார்க்கச் செயல்களை விடாது ஒழுகுவராயின் கற்றுங்கல்லாதவர் களும், தெரிந்தும் தெரியாதவர்களாகும் அறிவிலிகள் என்னப்படுவார்களென்பது கருத்து.

**(வி.)** உலகமென்பது உயர்ந்தோர்மாட்டேயென்பது விதியாதலின் அவ்வுயர்ந்தோராம் நல்லொழுக்க நெறியில் நிற்கும் விவேகிகளுடன் கூடியும் அவர்களது நன்னெறிகளைக் கற்றும் அவ்வழியில் நடவாது தங்கள் துற்செயலிலேயே நிற்பார்களாயின் பல நன்னெறிகளைக் கற்றும் உலகத்தோடு ஒக்க ஒழுகா அவிவேகிகளென்று எண்ணப்படுவார்களென்பது விரிவு.

## 15. பிறனில் விழையாமெய்

ஒழுக்கமென்பது ஈதீதென்று உணராதோர்க்கு அதன் அந்தரார்த்தத்தை விளக்குமாறு ஒழுக்கத்தின் பின்னர் அன்னியர் தாரத்தை இச்சிக்குங் கேடுகளையும் அதன் இழிவையும் விளக்குகின்றார்.

### 1. பிறன் பொருளாட் பெட்டொழுகும் பேதமெ ஞாலத் தரும் பொருள் கண்டார்க ளில்

**(ப.)** பிறன் - அன்னியன், பொருளாட் - ஆளுமனையாளை, பெட்டொழுகும் - பெற்றணையும், பேதைமெ - அறிவிலிச்செயல், ஞாலத் - பூமியின் கண், தறம் - நல்லறச் செயலையும், பொருள் -

மெய்ப்பொருளுணர்ச்சி யையும், கண்டார்க - அறிந்தவர்களிடத்து, ளில் - இல்லையென்பது பதம்

**(பொ.)** அன்னியனுடைய மனையாளை இச்சித்து அணையுஞ் செயல் மெய்யுணர்ச்சி மிகுந்த அறிவாளிகளிடத்து இராவென்பது பொழிப்பு.

**(க.)** தனது காமாக்கினியை தணித்தாள இயலாது அன்னியன் மனைவியை ஆளுஞ் செயல் விவேகமிகுத்த மெய்யுணர்வுள்ளோர்பால் இராவென்பது கருத்து.

**(வி.)** மனிதன் மிருகத்திற் கொப்பாயத் தனது அறிவிலிச் செயலால் தனது காமயிச்சை அடக்க இயலாது அன்னியனது தாரத்தை இச்சித்து அவனது குடியைப் பாழ்படுத்துஞ் செயல் விவேகமிகுதியால் தன்னையும் உணர்ந்து மெய்ப்பொருளுணர்வோரிடத்து இராவென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "அறனுமறனறிந்த செய்கையுஞ் சான்றோர், திறனுடைய னென்றுரைக்குந்தேசும் - பிறனில், பிழைத்தானெனப் பிறரால் பேசப்படுமேல், இழுக்கா மொருங் கேயிவை" தன்னைத்தானுணர்ந்து மெய்யுணர்வு கொண்டோர் தங்களை மறந்தும் அன்னியன் மனையாளை இச்சியார்கள். தன்னைத்தா னறிவோ னென்னும் ஞானியென

வேஷமிட்டும் அன்னியர் மனையாளை இச்சிப்பனேல் சகலராலும் இகழப்படுவானென்பது விரிவு.

**2. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை**
**நின்றாரிற் பேதையா ரில்.**

**(ப.)** அறன்கடை - தன்மத்தின் முடிவையறிந்தோமென்று நின்றாரு ளெல்லாம் - நிலைத்தோரெல்லவரும், பிறன்கடை - அன்னியன் மனையாள் வாயலில், நின்றாரிற் - சென்று நிலைப்பாராயின், பேதை - அவரினுமறிவில்லார், யாரில் - யாவருள்ளாரென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தின் முடிவுநிலையை அறிந்தோமென்போர் யாவரும் பிறன் மனையாளின் கடைவாயலிற் சென்று நிலைப்பாராயின் அவரினும் அறிவிலிகள் வேறுளரோ என்பது பொழிப்பு.

**(க.)** அறநெறியின் முடிவை ஆழ்ந்தறிந்தோமென்போர் பிறர்மனையாள் கடைவாயற் கார்ப்பாராயின் அவரினும் அவிவேகிகள் உலகத்தில் வேறில்லை என்பது கருத்து.

**(வி).** கன்மத்தின் கடைவாயலாம் நன்மெய்கடை பிடித்து ஒழுகுகின்றோ மென்போர் அன்னியன் மனையாள் கடைவாயலிற் சென்று பயந்து நிற்பாராயின் அவரினும் இழிவுள்ளோர் வேறுளரோ என்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "புக்கவிடத்தச்சம் போதரும்

போதச்சந், துய்க்குமிடத்தச்சந் தோன்றாமற் காப்பச்ச, மெக்காலுமெச்சந் தருமா லெவன்கொலோ, வுட்கான் பிறனில் புகல் நன்மெய்க் கடைபிடிப்போராம் அறன்கடையாளர் இவ்வச்சங்களுக்கு ஆளாகார் என்பது விரிவு.

**3. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்**

**றீமெயரிந் தொழுகுவார்.**

**(ப.)** விளிந்தாரின் - கண்டுதெளிந்தோரினும், வேறல்லர் - மற்றுஞ்சிறந்தோரில்லை, மன்ற - மற்றும், தெளிந்தாரிற் - கண்டுதெளியாதோர், றீமெ - கொடுங்காமச் செயலையே , புரிந்தொழுகுவார் - செய்துழலுவா ரென்பது பதம்.

**(பொ.)** நன்கு தீதெனக் கண்டு விளிந்தோரின் சிறந்தோர் வேறில்லை. அங்ஙனங் கண்டு தெளியாதவர்கள் அன்னியர் தாரத்தை இச்சிக்குங் கொடுமெயில் உழல்வார்களௌன்பது பொழிப்பு.

**(க.)** இஃது நற்செயல் அது தீச்செயலெனக் கண்டு அடங்கினோர்களினும் சிறந்தோர் வேறில்லையாக்கும். மற்றுமத்தீச் செயல் நற்செயலைக்கண்டு தெளியாதோர் காமவெறியால் அன்னியர் தாரத்தை இச்சிக்குந் தீமெயில் ஒழுகுவார் என்பது கருத்து.

**(வி.)** மக்களுக்குண்டாய நற்செயல் ஈதீது என்றும் துற்செயல்கள் ஈதீது என்றுங் கண்டு விளித்தோர் சகலருக்கும் நல்லவர்களாக

விளங்குதலும் நன்மெய்க் கடைபிடித்தலுமாகியச் செயலால் அவரினுஞ் சிறந்தோர் வேறில்லையென்றும், இது தீயச்செயல் அது நற்செயலென்று கண்டு தெரியாதுங் கேட்டுணராதும் காமப்பெருக்கால் தங்கள் மனம் போனவாறு அன்னியர் தாரத்தை இச்சித்தும் அவரது குடியைக் கெடுப்பித்தும் கொடுமெயாம் தீமெபுரிந்து உழலுவார்களென்பது விரிவு.

**4. எனைத்துணைய ராயினு மென்னாத் நினைத்துணையுந்**
**தேரான் பிறனில் புகல்.**

**(ப.)** எனைத்துணையராயினு - எத்தகைத்தான உதவியிருப்பினும், மென்னாந் - என்னவாகும், தினைத்துணையுந் - ஓர் திணையரிசிக் கொப்பாய வுதவியுந், தேரான் - பெறான், பிறனில் புகல் - அன்னியன் மனையாளை நாடி அவளிட மணுகலென்பது பதம்.

**(பொ.)** ஒருவனுக்கு எவ்வகையான உதவிகளிருந்த போதினும் அவ்வுதவிகள் அன்னியன் மனையாளை நாடுவோனுக்கு அணுவளவும் உதவா என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியன் மனையாளை யிச்சித்து அவளிடம் அணுகுவோனுக்கு எவ்வகையானப் பேருதவிகள் இருப்பினும் அவைகள் யாவும் இவனுக்கு உதவாமற்போமென்பது கருத்து.

**(வி).** அன்னியன் தாரத்தை இச்சித்து உழலுவோனுக்கு அறமும், புகழும், சினேகமும், கீர்த்தியும் அகன்று பகையும், பழியும், பாவமும், அச்சமும் வந்தடைகின்றபடியால் ஒருவனுக்கு மக்களுதவியும் தனவுதவியும் தானியவுதவியும் நிறம்ப இருக்கினும் அன்னியன் மனையாளை ஆளுவோனுக்கு அஃதில் ஓர் தினையரிசி அளவேனும் உதவா என்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "அறம் புகழ் கேண்மெ பெருமெயின்னான்கும், பிறன்றார நச்சுவார் சேரா - பிறன்றார, நச்சுவார்ச் சேரும் பகைபழிபாவமென், றச்சத்தோ டின்னாற் பொருள்" என்னும் ஆதாரங்கொண்டு எத்தகையத் துணையிருப்பினும் அத்தகைய துணைகள் யாவும் அன்னியன் தாரத்தை இச்சிப்பவனுக்கு தினையளவும் உதவாவென்பது விரிவு.

### 5. எளிதென வில்லிறபயா னெய்து மெஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழி

**(ப.)** எளிதென - அற்பமாகக் கருதி, வில்லிறப்பா - அன்னியன் மனையாளை யாளுவோனுக்கு, னெய்துமெஞ்ஞான்றும் - எக்காலும் பெறக்கூடிய, பழி - நிந்தையானது, விளியாது - வெளியிற் செல்லாவிடினும், நிற்கும் - அவரவர்கள் மனதிற்றங்கியிருக்குமென்பது பதம்.

**(பொ.)** அன்னியன் மனையாளை சேருதல் அற்பமென்று எண்ணுவோனுக்கு உண்டாம் நிந்தையானது அவ்வவர் உள்ளத்தில்

எஞ்ஞான்றுந் தங்கியிருக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியன் தாரத்தை இச்சிப்பதையும் அவள்மனை சேறுவதையும் எளிதென்று எண்ணி சேருவோனுக்கு உலகமக்கள் பழியானது வெளிவிடாவிடினும் அவரவர் உள்ளத்தே ததும்பி நிற்கும் என்பது கருத்து.

**(வி.)** பல்லோரறிய பறையறைந்து வரவழைத்த சாட்டிகள் முன்னிலையில் சேர்ப்பித்த ஒருவன் மனையாளைக் கெடுப்பது அவன் குடும்பத்தையே கெடுத்ததற்கு ஒப்பாதலின் அக்கொடுஞ்செயலை நாவிட்டு விளியாவிடினும் சேர்ந்துள்ள மக்கள் உள்ளத்தில் எக்காலும் பழி ஊன்றி நிற்குமென்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "பல்லாரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ்செய்துக் கடிப்புக்க - மெல்லியற், காதன் மனையாளுமில்லாளா வின்னொருவ, னேதின் மனையாளை நோக்கு" என்பது கொண்டு உலகோருக் குள்ளப் பழியை யறிந்தேனும் அன்னியன் மனையாள் நோக்கை அகற்றவேண்டு மென்பது விரிவு.

**6. பகைபாவ மச்சம் பழியென நான்கு**

**மிகவாவா மில்லிறப்பான் கண்.**

**(ப.)** பகை - விரோதம், பாவ - கொடுஞ்செயல், மச்சம் - பயம், பழி - நிந்தை, யெனநான்கு - என்று சொல்லப்பட்ட நான்கும், மிகவாவா -

நாளுக்குநாள் அதிகரிக்குமாம், மில்லிறப்பான்கண் - அன்னியன் மனையாளை யிச்சித்துழலுவோனுக்கென்பது பதம்.

**(பொ.)** அன்னியன் மனைவியை இச்சித்து உழலுவோனுக்கு விரோதமும், கொடுஞ்செயலும், பயமும், நிந்தையும் நாளுக்குநாள் அதிகரிக்குமென்பது பொழிப்பு.

**(க.)** அன்னியனுடைய தாரத்தின் இச்சையைப் பெரிதென்று எண்ணித் திரிவோனுக்கு மாளா விரோதமும், தீராக் கொடுமெயும், ஆறா பயமும், பேராப்பழியும் பெருகிக்கொண்டே வருமென்பது கருத்து.

**(வி.)** தனது தாரத்தை மற்றொருவன் இச்சிக்குங்கால் தனக்குள்ளெழும் விரேதத்தையும், தனக்குள்ளெழுங் கொடுஞ்செயலையும், தன்னால் அவனுக்குத் தோன்றும் பயத்தையும், தன்னாலும் தனது சுற்றத்தாராலும் அவனுக்குண்டாம் பழியையும் தன்னில் தானே ஆராய்ந்துணராது அன்னியன் தாரத்தை இச்சித்து பகையையும் பழியையும் பாவத்தையும் பயத்தையும் மாளாது சேர்த்துக் கொள்ளுவது யாதுசுகம் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் பழியொடு பாவத்தை பாராய்நீ நன்றுக், கழிபெருங் காமனோய் வாங்கி - வழிபடா, தோடு மனனே விடுத்தென்னை

விரைந்துநீ, நாடிகொள் மற்றோரிடம் " என்பது கொண்டு அன்னியன் மனையாளை நாடுவதிலும் தன்னை நாடுவது அழகென்பது விரிவு.

**7. அறனியலா னில்வாழ்வா ளென்பான் பிறனியலாள**

**பெண்மெ நயவா தவன்.**

**(ப.)** அல்வாழ்வா னென்பான் - இல்லறவாழ்க்கையை யுடையோன், தன்னியலா - யாதொரு தர்மத்தைச் செய்யாதிருப்பினும், பிறனியலாள் - கூறியன் மனையாளாம், பெண்மெ - இஸ்திரீயை, நயவாதவன் - இச்சியாதவனே இல்வாழ்க்கைக் குடையோனென்பது பதம்.

**(பொ.)** இல்லற வாழ்க்கையை உடையோன் நல்லறஞ் செய்யாதவனாயினும் அன்னியன் தாரத்தை இச்சியாது வாழ்பவனே அவ்வாழ்க்கைக்கு உரியோன் என்பது பொழிப்பு

**(க.)** தனக்குரிய இல்லாளுடன் கூடி இல்வாழ்வோன் என்னப்படுவோன் யாதொரு தர்மஞ் செய்யாவிடினும் அன்னியன் மனையாளை இச்சியாது வாழ்வதே ஓர் தர்மமாம் என்பது கருத்து.

**(வி.)** இல்வாழ்வோன் என்போன் சகல நல்லறங்களை வழுவாது நடத்தியும் அன்னியன் இல்வாழ்க்கைக்கு உரியாளை இச்சித்து அவன் குடியை கெடுப்பானாயின் அவன் செய்துவந்து நல்லறங்கள் யாவும் கெட்டு பகையும், பழியும், பாவமும், அச்சமும் அடைகின்ற

படியால் இல்வாழ்வோன் பல தர்மங்களைச் செய்யாவிடினும் அன்னியன் மனையாளை இச்சியாது வாழ்தலே பெருந்தர்மமாம் என்பது விரிவு.

**8. பிறன்மனை நோக்காத பேராண்மெ சான்றோர்க்**
**கறனொன்றே வான்ற வொழுக்கு.**

**(ப.)** பிறன்மனை - அன்னியன் மனையாளை, நோக்காத கண்ணெடுத்துப்பாராத, பேராண்மெ - புருஷச்செயல், வான்ற வொழுக்கு - நல்லொழுக்கமாயினும், சான்றோர்க் - மேலோர்க்குச் செய்யும், கறனொன்றோ - தன்மத்திலுமொன்றாகாவோவென்பது பதம்

**(பொ.)** பிறன் மனையாளைக் கண்ணெடுத்துப்பாராத புருஷர் செயல் நல்லொழுக்கங்களில் ஒன்றாயினும் மேலோராம் அறஹத்துக்களுக்குச் செய்துவரும் தன்மங்களிலும் ஒன்றாகாவோவென்னும் உறுதிமொழி பொழிப்பு

**(க.)** நல்லொழுக்கங்களில் பிறன் மனையாளை இச்சியாத புருஷதன்மம் ஒன்றிருக்கினும் அஃது அறஹத்துக்களுக்குச் செய்துவரும் தன்மங்களிலும் ஒன்றாகுமன்றோ என்பது கருத்து.

**(வி.)** சான்றோர்களாம் சமணமுநிவர்களால் ஓதிவரும் சீலங்களில் பிறன்மனையாளை இச்சியாதே என்பதும் ஓர் தன்மமாதலின்

அவர்கள் அளிக்கும் சீலம்பிறழாது நடத்தலையும் ஓர் தன்மமாகக் கொண்டு அன்னியன் மனையாளைக் கண்ணெடுத்துப் பாராததே புண்ணியப் புருஷச்செ குருவினது போதனைக்கு உள்ளடங்கி நடக்குந் தன்மங்களில் ஒன்றாகப் பிரிதிநன்றி கருதி சான்றோர்க்கு அறனொன்றோ மற்றுஞ் சுகமுண்டென்பது விரிவு.

**9. நலக்குரியார் யாரெனி னாம நீர் வைப்பிற்**
**பிறர்க்குரியா டோபோயா தார்.**

**(ப.)** நலக்குரியார் - நன்மெய்க் கடைபிடித் தொழுகுவோர், யாரெனி - யாவரென் றறியவேண்டின், னாமநீர் - சமுத்திரநீர் சூழ்ந்துள்ள, வைப்பிற் பூமியின்கண், பிறர்க் குரியாடோ - அன்னியன் மனையாளுடன், டோயாதார் - கலவாதவர்களே யென்பது பதம்.

**(பொ.)** நன்மெய் கடைப்பிடித் தொழுகுவோர் யாவர் என்றறிய வேண்டின் நீர் சூழ்ந்த பூமியின் கண் அன்னியன் மனையாளை சேராதவர்களே என்பது பொழிப்பு.

**(க)** கடல்நீர் சூழ்ந்த பூமியின்கண் அன்னியன் மனையாளுடன் கலவாதவர்கள் யாரோ அவர்களே நன்மெய்க்கடைப்பிடித்தொழுகுவோராவர் என்பது கருத்து

**(வி.)** சகல நன்மெ சொரூபிகளாக விளங்கவேண்டுமென்பது புத்தரது இரண்டாம் பேதவாக்கியம் ஆதலின் அந்நலத்துக்குரிய

சொரூபிகள் யாவரென்று ஆராயுங்கால் அன்னியன் மனையாளை இச்சித்து அவளுடன் தோயாதவர்களே யாவர் என்பது இச்சையினால் உண்டாம் சகல கேட்டிற்குங் காம இச்சையே மூலமாதல் கொண்டு பூமியின்கண் அன்னியன் மனையாளுடன் சேராதவர்களே சகல நன்மெகளுக்கும் உரியோர்களாவர் என்பது விரிவு,

**10 அறன்வரையா நல்ல செயினும் பிறன்வரையாள**

**பெண்மெ நயவாமே நன்று.**

**(ப.)** அறன்வரையா - அறநெறியாம் ஒழுக்கத்தினின்று, நல்ல செயினும் - நல்லற நடாத்துவோனாயினும், பிறன்வரையாள் - அன்னிய நெறிக்குள்ளடங்கி வாழும், பெண்மெ - இஸ்திரீயை, நயவாமெ - இச்சியாதவனே, நன்று. அறநெறியாளனென்பது பதம்.

**(பொ.)** அறநெறிவழுவாது நல்லவைகளைச் செய்வோன் ஆயினும் பிறனது கட்டுக்கு உள்ளடங்கி நிற்கும் பெண்ணை இச்சிப்போன் நல்லவனாகான் என்பது பொழிப்பு

**(க.)** உலகமக்களுள் தன்ம வரம்பைக் கடவாது நல்லதைச் செய்வோன் அன்னியன் மனையாளை இச்சியாதிருப்பவதே அறநெறி வரம்பைக் கடவாதவன் என்பது கருத்து.

**(வி.)** அறமென்னும், நல்வாழ்க்கை , நன்முயற்சி, நல்வாய்மெய், நற்கடை பிடி

செயல்களில் முயல்வோன் அன்னியன் மனையாளை நயவுவானாயின் அவன் செய்யும் நன் முயற்சிகள் யாவும் தீயவையாக முடிவதன்றி பழிபாவத்திற்கு உள்ளாவதால் நன்மெயாம் அறநெறியோன் அன்னியன் மனையாளை நயவாதிருத்தலே நன்றென்பது விரிவு.

## 16. பொறையுடைமெய்

மக்களுள் இவன் பொறுமெ உடையவன், இவன் பொறாமெ உடையவனென்னுங் குறிப்பை தேகத்தைக் கொண்டே அறிதலால் பிறனில் விழையாமெ என்னும் நெறிக்குப்பின் பொறையுடைமெயாம் சாந்தருபியை விளக்குகின்றார்.

**1. அகழ்வாரை தாங்கு நிலம்போலத் தம்மெ**

**யிகழ்வார்ப் பொறுத்த றலை.**

**(ப.)** அகழ்வாரை - பூமியின் பலனைக்கருதா தகன்றோரை, தாங்குங் - காக்கும், நிலம் போலத் - பூமியைப் போல, தம்மெ - தன்னை, யிகழ்வார்ப் தம்மெ நிந்திப்போர் செயலை, பொறுத்தறலை - மன்னித்துக் கொள்ளுதலே தலைமெயா மென்பது பதம். '

**(பொ.)** பூமியின் பலனைக் கருதாது அகன்றோரையும் பூமியே காப்பது போல் தம்மெ நிந்திப்போரை விரோதியாகக் கொள்ளாது

பொறுத்துக்கொள்ளுதலே தலைமெயாம் என்பது பொழிப்பு.

**(க.)** பூமியை வெறுத்தும் அதன் பலன் கருதாது அகல்வோரை அப்பூமியே காத்து ரட்சிப்பது போல் தம்மெ நிந்தித்து வைவோரது குற்றத்தைக் கருதாது காத்தலே பொறுமெயில் தலைமெயாம் என்பது கருத்து.

**(வி.)** பூமியை வெட்டிக் கொத்திப் புழுதியழுகக் கலக்கிய போதினும் அவ்வகை செய்வதை வெறுத்து அகழ்ந்தபோதினும் அஃது காப்பதுபோல், நிந்தித்து வைதோர் பெறாமெச்செயலை தங்கள் உள்ளத்தில் ஊன்றி எப்பொறாமெயைத் தங்களுக்குள் அணுகவிடாது அகற்றி அவர்களைக் காக்கலே பொறையுடையான் என்னுந் தோற்றத்திற்கு அழகாதலின் மற்றொருவர் குற்றத்தைப் பொறுத்துக் காத்தலை முதன்மெயாகக் குறிப்பிடப்பட்டது என்பது விரிவு.

**2. பொறுத்த லிறப்பினை யென்று மதனை**

**மறத்த லதனினு நன்று.**

**(ப.)** விறப்ப - வொருவன் குற்றத்தை மடித்து, பொறுத்த - மன்னித்துக்கொள்ளினும், யென்று மதனை - எக்காலுமவற்றை, மறத்தல் - அக்குற்றத்தை மறந்துவிடுதல், லதனினு - அவற்றினும், நன்று - நல்லதாகுமென்பது பதம்.

**(பொ.)** ஒருவன் குற்றத்தை மடித்து விடினும் அவற்றை எழவிடாது மறத்தலே அதனினும் நன்றாம் என்பது பொழிப்பு.

**(க.)** பொறையில் ஒருவன் செய்த குற்றத்தை மடித்துவிடினும் மறுபடியும் அக்குற்றத்தை என்றுங் கருதாதிருத்தலே நலமென்பது கருத்து.

**(வி.)** பொறுமெயுடையோன் என்னுஞ் செயலைப்பெற்றவன் அன்னியனது குற்றத்தைக் கருதாது மடித்து விடினும் எதிரியினது குற்றம் மடிந்துவிட்டதென்றற்குச் சார்பாய் அதனை எக்காலுந் தோன்றவிடாமல் அகற்ற வேண்டியதே நலமென்பது விரிவு.

**3. இன்மெயு ளின்மை விருந்தொரால் வன்மெயுள்**
**வன்மை மடவார் பொறை.**

**(ப.)** இன்மெயு - ஒரு புருடனுக்கு, ளின்மை - பொருளிலாது, விருந்தொரால் - வரும் விருந் தோம்பாவிடினும், வன்மெயுள் - திடதேகி, வன்மை - பொருளிருப்பின், மடவார் - தனது விரோதிகளுக்கு மிட்டுண்பதே, பொறை - மன்னித்தலென்பது பதம்.

**(பொ.)** ஆதுலன் தனக்குப் பொருளிலாது விருந்தோம்பாவிடினும் உள்ளவன் தனது விரோதிக்கும் இட்டுண்பதே பொறையினது அழகென்பது பொழிப்பு.

நளில்லாத ஏமையா யிருப்போன் வருவிருந்தினரைக் காக்காவிடினும் பொருளுள்ள வல்லதேகி தனக்கு விரோதியாயுள்ளவன் வரினும் அவனுக்கு அன்புடன் விருந்தளிப்பதே பொறையுடையானின் அழகென்பது கருத்து

**(வி.)** தெரிந்த விருந்தினரும் தெரியா விருந்தினரும் விரோத விருந்தினரும் அவிரோத விருந்தினரும் வரில் ஏழையாயுள்ளோன் தனது பொருளில்லாக்குறையால் தவித்து நிற்பான். பொருளுள்ள வல்லவனோ அங்ஙனமிராது தனக்கு விரோதியாயினும் அவிரோதியாயினும் வரின் பேதம் பாராது விருந்தளித்து அனுப்புவதே பொறுமெயின் குறியாதலின் மடவார் பொறை யென வற்புறுத்திக் கூறிய விரிவு,

**4. நிறையுடைமெ நீங்காமை வேண்டிற் பொறையுடைமே**
**போற்றி யொழுகப் படும்.**

**(ப.)** நிறையுடைமெ - சாந்தரூபியென்றழைக்கப் பெற்றோன் பெயர், நீங்காமை வேண்டிற் - என்று மகலாதிருக்க வேண்டுமாயின், பொறையுடைமெ - பொறுமெயே உறுத்தி, போற்றி - அதனையே புகழ்ந்து, யொழுகப்படும் - நற்செயலில் நடக்க வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** சாந்தரூபியென்னும் பெயரைப் பெற்றவன் அச்சாந்தத்தையே போற்றி ஒழுக வேண்டுமென்பது பொழிப்பு.

**(க.)** இவன் நல்லோன் சாந்தரூபி என்னும் பெயரைப் பெற்றவன். மேலும் மேலும் நல்லவனென்னுஞ் செயலைப் போற்றி ஒழுகவேண்டுமென்பது கருத்து.

**(வி.)** சகல நற்செயலும், நற்குணமும், நல்வாய்மெயும் நிறைந்த ஒருவன் அவைகள் நீங்காதிருக்க வேண்டுமாயின் தனக்குள் பொறுக்கும் செயலை பூரணப்படுத்தி அதனை கொண்டாடி வருவானாயின் அதுவே போற்றப்படு மென்பது விரிவு.

**5. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து**

**(ப.)** ஒறுத்தாரை - யென்றுங் கோபக்குறி யுள்ளாரை, யொன்றாக - ஓர் மனிதனாக, வையாரே - மதிப்பில் வைக்கமாட்டார்கள், வைப்பர் - யாவரை மதிப்பில் வைப்பரென்னில், பொறுத்தாரைப் - முகமலர்ச்சியுள்ளாரை, பொன்போற் - சுவர்ணத்தைப்போல், பொதிந்து - பொருந்தவென்பது பதம்.

**(பொ.)** எக்காலுங் கோபக்குறி உள்ளாரை விவேகிகள் ஓர் மனிதனென மனதில் மதியார்கள், பொறுமெ உள்ளாரைப் பொன் போல மதிப்பார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** எந்த காலத்திலுங் கோபக்குறியுள்ள முகத்தோனை விவேகிகள் மதிப்பில் வைக்க மாட்டார்கள். என்றென்றும் முகமலர்ச்சியுள்ள சாந்தரூபியை சுவர்ணம் போல் கருதி மதிப்பார்கள்.

**(வி.)** கடுஞ்சொல், பொறாமெய், காய்மகாரம் முதலியக் கோபக்குறிமிகுத்து மக்களை உறுப்பாரை சாந்தரூபிகளாம் விவேகிகள் என்றும் மதியார்கள். அன்புமிகுத்து என்றும் முகமலர்ச்சியுடன் தங்களை வைதோர் குற்றங்களையும், நிந்தித்தோர் குற்றங்களையும் பொறுத்துள்ளாரைப் பொன்போற் பொதிந்து சகலருங் கொண்டாடுவார்களென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "தன்னையொருவ னிகழ்ந்துரைப்பிற்றானவனைப், பின்னையுரையாப் பெருமெயான் - பின்னை, வினைப்பயனுமாயிற்றா மென்றதன்கண் மெய்ம்மெ, நினைத்தொழிய நெஞ்சினோயில்" பொறையுடையாரை உலகத்தோர் பொன்போல் ஏந்துவரென்பது விரிவு.

**6. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ்**

**(ப.)** ஒறுத்தார்க் - உறுத்துநிற்போருக்கு, கொருநாளை - ஒருதினத்து, யின்பம் - சுகமுண்டாம், பொறுத்தார்க்குப் - பொறுமெயுள்ளார்க்கு, பொன்றுந் - எக்காலமுள்ள, துணையும் கூட்டுரவும், புகழ் - கீர்த்தியு முண்டாமென்பது பதம்.

**(பொ.)** கோபக்குறியாம் உறுத்தார்க்கு ஒரு நாளைய சுகமுண்டாய போதினும் பொறுமெயுள்ளார்க்குப் போதுமான துணையும் புகழுமுண்டா மென்பது பொழிப்பு.

**(க.)** ஒருவரை ஒறுத்துப் பேசி வாங்கிய பொருள் ஒரு நாளைய சுகத்தைத் தரினும் பொறுத்துப்பேசிய பயன் பலருடைய துணையைத் தருவதுடன் என்றும் அழியாக் கீர்த்தியையும் பெறுமென்பது கருத்து.

**(வி.)** உறுத்துநின்று ஒருவரை வைதும், கண்டித்தும், நிந்தித்தும் அடைந்த பயன் அன்றைய சுகத்தை மட்டிலுந் தருமேயன்றி வேறு இராவாம். எக்குற்றங்களையும் பொறுத்து முகமலர்ச்சியுடன் மிருதுவான வார்த்தைகளைப் பேசி எதிரிகளுக்கும் பொறுமெயை உண்டு செய்வோர்க்கு சகல மக்களும் எக்காலும் சுகத்துணையாக விருப்பதுடன் என்றும் அழியாக் கீர்த்தியையும் அடைவார்களென்பது விரிவு.

**7. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்**
**தறனல்ல செய்யாமெ நன்று.**

**(ப.)** தற்பிறர் - பிறரால் தனக்கு, திறனல்ல - பயனற்றவைகளை, செய்யினு - செய்த போதினும், நேநொந் - தாங்களும், தறனல்ல - பயனில்லா தன்மங்களை, செய்யாமெ - செய்யாதோரென வாழ்தலே, நன்று - நல்லதாகுமென்பது பதம்.

**(பொ.)** அன்னியரால் தாங்கள் பயனற்றச் செயல்களைப் பெறினும் தாங்களும் அத்தகையப் பயனற்றச் செயல்களை செய்யலாகாதென்பது பொழிப்பு.

**(க.)** அன்னிய மக்கள் தங்களுக்கு யாதொரு பயனற்ற செய்கைகளை செய்தபோதினுந் தாங்களும் அத்தகையப் பிரயோசனமற்றச் செயல்களைச் செய்யலாகாதென்பது கருத்து.

**(வி.)** மற்றுமுள்ள மக்கள் தங்களுக்கு யாதொரு பயனுமற்ற செயல்களை செய்து வந்த போதினும் தாங்களும் அவற்றை ஒத்தப் பயனில்லாச் செயல்களைச் செய்யாது அக்காலும் அவர்களுக்கோர் பயனைத் தரக்கூடியச் செயல்களைச் செய்தும் பயனைத் தரக்கூடிய வார்த்தைகளைப் பேசியும் வரவேண்டுமென்பது விரிவு.

**8. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தன்**
**தகுதியால் வென்று விடல்.**

**(ப.)** மிகுதியான - கோப வதிகரிப்பால், மிக்கவை - மிகுத் தீங்கினை, செய்தாரை - செய்தோர்களை, தாந்தன் - தங்களுக்குள்ள, தகுதியால் - வற்று மெயினால், வென்றுவிடல் - ஜெயிக்கவேண்டுமென்பது பதம்.

**(போ.)** கோப அதிகரிப்பால் மிக்க தீங்குசெய்வோர்களை தங்களுக்குள்ளப் வாறுமெயினால் வென்றுவிடவேண்டுமென்பது பொழிப்பு.

**(க.)** எதிரிக்குள்ளக் கோபத்தின் மிகுதியால் மிக்கத் துன்பத்தைக் கொடுப்பினும் அவற்றைப் பொறுத்துக்கொள்ளுவதே அவனை வென்றதற்கு அறிகுறியாமென்பது கருத்து.

**(வி.)** எக்காலுங் கோபத்தையே வளர்த்துக்கொண்டு மிக்கத் துன்பமாங் கொடுஞ்செயல் புரிவோருடன் தாங்களும் எதிர்த்துக் கொண்டு கொடுஞ்செயல் புரியாது அத்தீங்குகள் யாவையும் பொறுத்து அவர்கட்கு இதம்புரிவதாயின் அதுவே அவர்களை வென்ற அடையாளமாதலின் கோபத்தைக் கோபத்தால் வெல்லலாகாது சாந்தத்தால் வெல்லலாமென்பது விரிவு.

**9. துறந்தாரிற் றூய்மெ யுடைய ரிறந்தார்வா**
**யின்னாச்சொ னோற்கிற் பவர்**

**(ப.)** துறந்தாரிற் - இல்லந் துறந்தவருள், றூய்மெயுடைய தூயதேகிகளைக் காண்பதினும், ரிறந்தார் - இல்லறத்தோர், வாயின்னாச்சொ - நாவிலுண்டாங் கொடுமொழிகளை, னோற்கிற்பவர் - நோக்கிக்காப்பாரென்பது பதம்.

**(பொ.)** துறந்தவர்களது தூயதேகத்தைக்கண்டு களிப்பதினும், இல்லற வாசிகளது கொடுமொழிகளைக் கண்டு பொறுப்பது மேலாம் என்பது பொழிப்பு

**(க.)** இல்லந் துறந்து மரணத்தை ஜெயித்துக் கொண்ட தூயதேகிகளைக் கண்டு மகிழ்வதினும் மரணத்திற்குள்ளாம் இல்லறவாசிகளது கொடு மொழிகளைக் கேட்டும் பொறுப்போரே மேலோர்கள் என்பது கருத்து.

**(வி.)** பாசமந்தப் பற்றுக்களைவிட்டு சாது சங்கஞ் சார்ந்து பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காட்டை வென்ற சுத்ததேகிகளைக் காண்பதினும் இறப்புக்குரிய பாசபந்த இல்லறவாசிகளது மிருதுவாம் மொழிக்கு எதிரடையாய கொடியமொழிகளை உலகத்தோர் நாவினின்று எழாமற் காக்கவேண்டும் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் " எள்ளிப் பிறருரைக்கு மின்னாச்சொல் தன்னெஞ்சில், கொள்ளிவைத்தாப்போல் கொடிதெனினு - மெள்ள அறிவென்னு நீரா லவித்தொழுக லாற்றின் பிறிதெனினும் வேண்டாந் தவம்" என்பது விரிவு.

**10. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர் சொல்லு**
**மின்னாச் சொன்னோற் பாரிற்பின்**

**(ப.)** உண்ணாது - அதியாகாரம்புசியாது, நோற்பார் - நோன்பினிலைப்பர், பெரியர் - மேலோர்கள், பிறர் சொல்லு - அன்னியரால் மொழியப்படும், மின்னாச்சொ - கொடியமொழிகளை, னோற்பாரிற்பின் - காப்பவரினும் வேறுளரோ வென்பது பதம்.

**(பொ.)** மேலோர்கள் மிதாகாரம் புசித்துத் தங்கள் நோன்பினைக் காப்பர். மற்றோர் பிறர்களது கொடிய மொழிகளைக் காப்பார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** விவேகமிகுத்தப் பெரியோர் மிதபுசிப்பால் தங்கள் விரதத்தைக் காப்பார்கள், மற்றுமுள்ளோர் அன்னியரது கொடுமொழிகளைப் பொறுத்து காப்பதினும் வேறுளதோ என்பது கருத்து.

**(வி.)** பெரியோர்களாம் அறிவின் மிக்கோர் தங்கள் காம, வெகுளி, மயக்கங்களை அறுக்குமாறு சங்கஞ்சேர்ந்து மூவேளை உண்பினையை ஒடுக்கி ஒருபொழுதுண்டு தங்கள் விரதமாம் நோன்பினை நோற்பார்கள். மற்றும் உலக மக்களோ அன்னியர்களது கொடிய மொழிகளைப் பொறுத்து காப்பதினும் வேறுநோன்புளவோ என்பது விரிவு.

## 17. அழுக்காறாமெய்

இஃது பொறையுடையான் சுகத்தையும், பொறையிலான் கேட்டையும் விளக்கியதன் பின் வஞ்சினம், பொறாமெ, குடிகெடுப்பு,

லோபம், சூது, பேரவாவாம் மனக்களங்குகள் ஆறினையும் அகற்றுவோன் சுகத்தையும், அகற்றாதோன் கேட்டையும் விளக்குகின்றார்.

ஆறழுக்குடைமெ யென்பது. அழுக்காறாமெய் எனக் குறுக்கல் விகாரப்பட்டது.

**1. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்**
**தழுக்கா றிலாத வியல்**

**(ப.)** ஒழுக்காறாக் கொள்க - நல்லொழுக்க மாறாதிருக்க வேண்டிய, வொருவன் - ஒரு மனிதன், தன் - தனது, நெஞ்சத் - மனதின்கண்ணுள்ள, தழுக்காறிலாத - அறுவகை களங்கங்களுமிறாது, வியல் - ஒழுகல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** நல்லொழுக்கம் வழாது வாழ வேண்டிய ஒருவன் தனது மனமாசுகள் ஆறினையும் அகற்றி ஒழுகவேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** உலகத்தில் நல்லொழுக்கக் கொள்கையை மாறாது கடைபிடிக்க வேண்டிய ஒருவன் தன துள்ளத்தின்கண் எழும் அறுவகைக் குற்றங்களையும் அகற்றிக்கொண்டே வரவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** ஒருமனிதன் தான் சுகச்சீரடைவதுடன் உலக மக்களாலும் நல்லொழுக்கமுள்ளான் என்று கூற வேண்டுமாயின் தன்மனதினின்று எழும் மாசுகளாகும் வஞ்சினம், பொறாமெ, சூது, குடிகெடுப்பு,

லோபம், பேராசையாம் ஆறினையும் அகற்றி வாழவேண்டுமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் புழுப்போலுவர்ப்பூறிப் பொல்லாங்குநாறும், அழுக்குடம்பு தன்னுள் வளர்ந்தாய் விழுந்துமிழ்ந், தின்ன நடையா யிறக்கும் வகையினை, நன்னெஞ்சே நாடாய் காணற்கு" என்பது விரிவு.

**2. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு**
**மழக்காற்றி னன்மெ பெறின்.**

**(ப.)** மழுக்காற்றி - மனக்களங்க மாறினையு மகற்றி, னன்மெபெறின் - சுத்ததேகியாக விளங்கில், விழுப்பேற்றி - அவனை புகழ்ந்துகொண்டாடற்கு, னஃதொப்ப - அதனினு மேலாயது, தில்லையார்மாட்டு - யாவரிடத்து மிராவென்பது பதம்.

**(பொ.)** மனமாசு ஆறினையும் அவித்தவனைக் காண்பதினும் வேறாய சுத்த காட்சி இல்லை என்பது பொழிப்பு.

**(க.)** உள்ளக் களங்கங்கள் ஆறினையும் அறுத்த மேலோனையே மற்றுள்ள மக்கள் புகழ்ந்து போற்றுவாரன்றி வேறு புகழில்லை என்பது கருத்து.

**(வி.)** உலகிலுள்ள மக்கள் காணும் பலவகைக் காட்சிகளினும் அறுவகை மனமாசுகளை அகற்றி சுத்ததேகியாக உலாவுவோனைக்

காண்பதே மேலாய காட்சியாதலின் அதனை ஒப்பப்புகழ்ந்து போற்றற்கு வேறொரு காட்சியும் இல்லை என்பது விரிவு,

**3. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்**
**பேணா தழுக்கறுப் பான்**

**(ப.)** அறனாக்கம் - நல்வழியால் சம்பாதித்தப் பொருளையே, வேண்டாதானென்பான் - கருதாது வாழ்பவன், பிறனாக்கம் - அன்னியனது செல்வத்தை, பேணா - கருதாது, தழுக்கறுப்பான் - தனக்குள்ளக் களங்கங்களை நீக்கிக்கொள்ளுவானென்பது பதம்.

**(பொ)** தான் நல்வழியால் சம்பாதித்தப் பொருளின் பேரில் அதிகப்பற்றில்லாது வாழ்பவன் அன்னியன் பொருளின் மீது அவாக்கொள்ளாது தனக்குள்ள மனமாசுகளைப் போக்கிக்கொள்ளுவான் என்பது பொழிப்பு.

**(க.)** தன் தேகத்தை வருத்திக் கஷ்டத்துடன் சேகரித்தப் பொருளின் மீது அவா இராதவன் அன்னியன் பொருளை ஆசிக்காது தனது மனமாசுகளை அறுப்பானென்பது கருத்து.

வி., பேராசையே சகல கேட்டிற்குங் கொண்டு போகும் வழியாயுள்ளதால் வஞ்சகத்தாலும், குடிகெடுப்பாலும் பொருளை சம்பாதியாது அறநெறியாம் நல்வழியில் பொருளை சம்பாதித்தும், அதனிற் பற்றில்லாதவன் தனக்குள் எழும் மனக்களங்கங்கள்

ஆறினையும் அறுப்பான் என்று பேராசையின் களங்கை விளக்கிய விரிவாம்.

### 4. அழுக்காற்றி னல்லவை செய்யா கிழுக்காற்றி னேதம் படுப்பாக் கறிந்து

**(ப.)** அழுக்காற்றி - அறுவகைக் களங்கங்களையு மகற்றி, னல்லவை - மக்களுக்கு நல்லதை, செய்யா - செய்யாதவர்கள், கிழுக்காற்றி - சகலராலு மிழிவடைவதுடன், னேதம் - துன்பத்தையும், படுப்பாக்கறிந்து - அடைவதைக் காணலாமென்பது பதம்.

**(பொ.)** அறுவகைக் களங்கங்களையும் அகற்றி மக்களுக்கு நல்லதைச் செய்யாதவர்கள் சகலராலும் இழிவடைவதுடன் துன்பத்தையும் அடைவதைக் காணலாம் என்பது பெ

**(க.)** மனமாசுகள் ஆறினையும் அகற்றி மனுக்களுக்கு நல்லதைச் செய்யாதவர்கள் சகலராலும் இழிமொழிகளை அடைவதுடன் மீளா துன்பமடைவதால் படும் பாடுகளைக்கண்டே அறியலாம் என்பது கருத்து

**(வி.)** உள்ளக் களங்கை அறுத்து உலகத்தோருக்கு நலஞ் செய்யாது வஞ்சினத்தாலும், பொறாமெயாலும், குடிகெடுப்பாலும், லோபத்தாலும், சூதினாலும், பேராசையாலும், மக்களுக்குத் தீங்கு செய்வோரை பலரும் இழிப்பதுடன் துன்பத்திற்கும் ஆளாவதைக்

காணலால் களங்கறுத்து நல்லவை செய்ய வேண்டுமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "உயிருமுடம்பும் பிரிவுண்மெயுள்ளிச், செயிருஞ் சினமுங் கடிந்து - பயிரிடைப், புற்களைந்து நெற்பயன் கொள்ளு மொருவன் போல், நற்பயன் கொண்டிருக்கற் பாற்று என்பது விரிவு.

**5. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்**
**வழுக்கியுங் கேடீன் பது.**

**(ப.)** மொன்னார் - அன்னியரால், வழுக்கியுங் - மறுத்துங், கேடீன்பது - கெடுதி செய்யாவிடினும், அழுக்கா றுடையார்க் - அறுவகைக் களங்கமுள்ளோர்க்கு கதுசாலு - கெடுப்பதற் கதுவே போதுமென்பது பதம்.

**(பொ.)** அன்னியர் கேடுசெய்யாது அகலினும் அறுவகை அழுக்கினை உடையார்க்கு கேட்டை உண்டு செய்தற்கு அதுவே சாலும் என்பது பொழிப்பு.

**(க)** அறுவகை மனக்களங்கம் உள்ளாரை அன்னியர் கெடுக்காது விடினும் தனக்குள்ளக் களங்கே தன்னைக் கெடுப்பதற்குப் போதுமானதாம் என்பது கருத்து.

**(வி.)** வஞ்சினம், பொறாமெ முதலிய அறுவகைக் களங்கங்களால் அன்னிய மக்கள் துன்புற்று மறுத்துங் கேடுசெய்யாது விடினும்

தனக்குள்ளக் களங்கே இரும்பைத் துரும்பு அரிப்பது போல் தன்னைத்தானே அக்களங்கு கெடுத்தற்குப் போதிய வழியாம் என்பது விரிவு.

### 6. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ முன்பதூஉ மின்றி கெடும்.

**(ப.)** கொடுப்ப - ஒருவர் செய்யுந் தன்மத்தைக் கெடுக்கும், தழுக்கறுப்பான் - பேரவா வழுக்குடையான் கெடுவதன்றி, சுற்ற - தனதுரவின்முறையோரும், முடுப்பதூஉ - உடுக்க ஆடையு, முண்பதூஉ - புசிக்க சோறும், மின்றி - கிடையாது, கெடும் கெடுவார்களென்பது பதம்.

**(பொ.)** ஒருவர் செய்யுந் தன்மத்தைக் கெடுக்கும் பேரவா அழுக்குடையான் தான் கெடுவதுடன் தனது சுற்றத்தாரும் உடுக்கத் துணியில்லாமலும், உண்ண சோறில்லாமலுங் கெடுவார்களென்பது பொழிப்பு.

**(க.)** அன்பின் மிகுதியால் ஒருவருக்குச் செய்யுந் தன்மத்தைக் கெடுக்கும் அழுக்காறுடையோன் தான் உண்ண சோற்றிற்கும், உடுக்க வஸ்திரத்திற்கும் அலைவதுடன் தனது சுற்றத்தோருங் கெடுவார்களென்பது கருத்து.

**(வி.)** இல்லார் குறைகளை அறிந்து ஈயுந் தன்மத்தைக் கெடுக்கும் உலோபியானவன் தனக்கு உண்பதற்கு சோறு கிடையாமலும், உடுப்பதற்கு வஸ்திரங் கிடையாமலும் அல்லலடைவதுடன் தனது உரவின்முறையோருங் குலபழக்கத்தால் கேடுற்று அவர்களும் துன்பத்தை அனுபவிப்பார்கள் என்பது விரிவு.

**7. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ**

**டவ்வையைக் காட்டி விடும்.**

**(ப.)** தழுக்காறுடையானைச் - ஆறழுக்கினையுடையவனின், அவ்வித் - அவன் சந்ததியினது, செய்யவ - செய்கைகளினால், இவ்வையைக் - முன்குல வழியை, காட்டிவிடும் - விளக்கிவிடுமென்பது பதம்.

**(பொ.)** ஆறழுக்கினை உடையவனது சந்ததியின் செய்கைகளினால் அவனது குலவழி விளங்கிப்போம் என்பது பொழிப்பு.

**(க.)** ஆறு அழுக்கினை உடையவனின் துற்செயல் அவனிடத்து விளங்குவதுமன்றி பின் தோன்றும் புத்திர பௌத்திரரிடத்தும் விளங்குமென்பது கருத்து.

**(வி.)** அவ்வித்தாம் புத்திரர் பௌத்திரர் தோன்றி பிரபல வாழ்க்கைப் பெற்றுரினும் தனது தாதையினது அழுக்காறாம் அவ்வளப்பத்தைக் காட்டி சகலருக்கும் விளங்கவைக்குமென்பதற்குச்

சார்பாய் காக்கைபாடியம் "தந்தை குலத்தின் செயல்வழிதான்பெறு, மைந்தருஞ்சென்று மாள்வர் மதியதிலார், சிந்தைச்செயலை சீர்பெறநோக்கிடில், அந்தரசாரிக வருநிழலுறுமே" என்பதற்குச் சார்பாய் முன் தோற்றத் தாதையின் செயலை பின் தோற்ற மைந்தர் விளக்குவார் என்பது விரிவு.

**8. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி யுய்த்து விடும்.**

**(ப.)** அழுக்காறென - ஆறழுக்குடையான் செயலை, வொருபாவி - மற்றவனும் பாவித்து நடப்பானாயின், திருச்செற்றுத - அவனுக்குள்ளச் செல்வமு மடிந்து, தீயுழி - கொடிய துன்பத்தில், உய்த்துவிடும் - சேர்த்துவிடுமென்பது பதம்.

**(பொ.)** ஆறழுக்கினை உடையோனை பாவித்து மற்றவனும் நடப்பானாயின் அவனுக்குள்ள செல்வமும் மடிவதுடன் கொடிய துன்பத்திற்குங் கொண்டு போய்விடும் என்பது பொழிப்பு.

**(க.)** நல்லொழுக்கத்தில் வாழ்ந்திருந்த ஒருவன் தீயொழுக்க முடையோனை பாவித்து விடுவானாயின் உள்ள செல்வம் நசிந்துபோவதுடன் மீளா துன்பத்திலும் அழுத்திவிடும் என்பது கருத்து.

**(வி.)** அறுவகை அழுக்கினை உடையோன் செயலாம் லோபத்தால் பொருள் சேர்ப்பதைக்கண்டு மற்றுமுள்ளோனும் அவனை பாவித்து பொருள் சேர்க்க முயலுவானாயின் தான் முன் சேகரித்தப் பொருளுமழிவதுடன் மீளா துன்பத்திற்குங் கொண்டுபோய்விடுமென்பது விரிவு.

**9. அவ்விய நெஞ்சத்தானாக் கமுஞ் செவ்வியான்**
**கேடு நினைக்கப் படும்.**

**(ப.)** அவ்விய - மேற்களங்க நிறைந்த, நெஞ்சத்தா - மனதையுடையான், னாக்கமுஞ் - செல்வத்தைக்கண்டு, செவ்வியான் - நல்வழியோனதைக் கருதுவது, கேடுநினைக்கப்படும் - தனக்குள்ள சொத்துங் கெடுவதற் கெண்ணுகிறானென்பது பதம்.

**(பொ),** மனமாசுள்ளோன் சொத்துக்களைக்கண்டு அவ்வழி பொருள் சேகரிக்க மனமாசு அகன்றுவருவோனும் சிந்திப்பது தனது சொத்துங் கெடுவதற்கு எண்ணுகிறான் என்பது பொழிப்பு.

**(க.)** வஞ்சினத்தாலும் சூதினாலும் சம்பாதித்துள்ளப் பொருளைக் கண்டு வஞ்சினமும் சூதுமற்றவன் அவ்வழி கருதுவது தனது பொருளுங் கெடுவதற்கு எண்ணங் கொள்ளுகிறான் என்பது கருத்து.

**(வி.)** அறுவகை அழுக்கையுடையான் தனக்குள்ள லோபத்தாலும், வஞ்சினத்தாலும், சூதினாலும், பொருள் சேகரிப்பதைக் கண்ட ஓர்

களங்கமில்லானும் அவன் பொருள் சம்பாதிக்கும் வழியைக் கருதுவது தனக்கு முன்புள்ளப் பொருளையுங் கெடுத்துக் கொள்ளுவதற்கு எண்ணுகிறான் என்பது விரிவு.

**10. அழுக்கற் றகன்றாரு மில்லையஃ திலார்**
**பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்**

**(ப.)** அழுக்கற் - அறுவகை மனக் களங்கங்களை யறுத்து, றகன்றாரு - துறந்தவரும், மில்லை - இல்லை , யஃதிலார் - அத்தகைய களங்கில்லார், பெருக்கத்திற் - முத்திபேற்றை, றீர்ந்தாருமில் - அடைந்தாருமில்லையென்பது பதம்.

**(பொ.)** அறுவகை மனமாசுகளற்று துறவு பூண்டாரும் இல்லை. அவ்வகை அறுத்து முத்திபேறு பெற்றாரும் இல்லையென்பது பொழிப்பு.

**(க.)** மனமாசுக்களாம் ஆறழுக்குகளையும் அறுத்து இல்லம் துறந்தாரையுங் காண்பதற்கு இல்லை. அவ்வகைத் துறந்தும் வீடுபேற்றைப் பெறுவதையுங் காணுவதற்கில்லையே என்னும் இரங்கற் கருத்து.

**(வி.)** உலக மக்கள் செயல்களைக் கண்டுணர்ந்த தெய்வப்புலவர் தனது மனமிரஞ்சி அறுவகை மனக்களங்கங்களையும் அறுத்து இல்லந்துறப்பவர் களைக் காண்பதற்கில்லையே அவ்வகைத்

துறந்தும் முத்திபேறு பெற்றாரென்றறிவதற்கும் இல்லையேயென்று இரங்கிக்கூறிய விரிவு

## 18. வெஃகாமெய்

இவ்வெஃகல் எனும் மொழி, வேதல், வெதும்பலென்னு மொழியினின்று தோன்றியது. காம வெதும்பல், கோப வெதும்பல், பேரவா வெதும்பல், பசி வெதும்பல் என்னும் வெப்பத்தை உணர்ந்தவையன்றி காம வெஃகல், கோபவெஃகல், பசியின் வெஃகலால் உண்டாங்கேடுகளை விளக்குமாறு வெகுளிக்குப் பீடமாம் வெஃகலை விளக்குகின்றார்

**1. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்**
**குற்றமு மாங்கே தரும்.**

**(ப.)** நடுவின்றி - சமநிலையின்றி, நன்பொருள் - இச்சிக்கும் பொருளைக் கண்டு, வெஃகில் - வெதும்பில், குடிபொன்றிக் - தன்குடி யொடுங்குவதன்றி, குற்றமு - பலகுறைகளும், மாங்கே தரும் - அதுவே கொடுக்குமென்பது பதம்.

**(பொ)** தனது இச்சையை சம நிலையில் வையாது பேரவாவால் வெதும்பல் தன்னைக் கெடுப்பதுடன் அதுவே பலவகைக் குறைகளையும் உண்டாக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** பேரவாக்கொண்டு இச்சித்தப்பொருள் கிட்டாது வெதும்பல் தன் குடியிருப்பையே கெடுப்பதுடன் பலவகைக் குற்றங்களுக்கும் ஆளாக்கிவிடும் என்பது கருத்து.

**(வி.)** தனக்குக் கிடைத்த வரையிற் போதுமென்னும் நடுநிலைபெறாதும் இச்சித்த நன்பொருள் பெறாதும் வெதும்புவதினால் பேரவாக்கொண்ட உள்ளம் நிலையாது அலைந்து தன் குடி கெடுவதுடன் பலவகைத் துன்பத்தையுந் தருமென்பதற்குச் சார்பாய் குறுந்திரட்டு "கூறிடு காமவெஃகல் கேடுறுங்குற்றஞ்சாறும், சீறிடுங்கோபவெஃகல் சினையுறு துன்பங்காட்டும், அறிடா பசியின் வெஃக லகத்துயிர் போக்குங்கண்டீர், கோறிட கிடைத்தல் போற்றல் குற்றமென்றில்லையாமே" என்பது கொண்டு நடுநிலையற்று நன்பொருள் கிட்டாது வெதும்பலுங் குற்றம் என்பது விரிவு.

**2. படுபயன் வெஃகிப் பழிபடுவ செய்யார்**
**நடுவன்மெ நானு பவர்.**

**(ப.)** நடுவன்மெ - பொதுவாய நிலையில், நாணுபவர் - ஒடுங்கிநிற்பவர், படுபயன் - கேட்டைத்தரும் பொருளை யிச்சித்து, வெஃகி – அவைகிட்டாது வெதும்பி, பழிபடுவ - நிந்தைக்குள்ளாக, செய்யார் - செய்து கொள்ளாரென்பது பதம்.

**(பொ.)** பொதுவாய நிலையில் ஒடுங்கி நிற்பவர் கேட்டைத்தரும் பொருளை இச்சித்து, வெதும்பி, நிந்தைக்குரிய செயலுக்குள்ளாகார் என்பது பொழிப்பு.

**(க.)** தனக்குக் கிடைத்தவரையில் போதுமென்னுந் திருப்தியை உடையவர் கெடுதியை உண்டு செய்யும் பயனை இச்சித்து, வெதும்பி, நிந்தையை உண்டு செய்துக் கொள்ளமாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** நடுநிலைமெயிற் போதுமென்னுந் திருப்தியுற்று கிட்டியவரையில் ஒடுங்கி நிற்பவர் கிட்டாப்பயனைக் கருதி அதனால் வெதுப்புற்று தனக்கு இழிபழி நேரும்படிச் செய்துக்கொள்ள மாட்டார்கள் என்பது விரிவு.

**3. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர்**

**(ப.)** மற்றின்பம் - பேரின்பத்தை, வேண்டுபவர் - கோறி நிற்போர், சிற்றின்பம் - சொற்ப காம யின்பத்தில், வெஃகி - வெதும்பி, யறனல்ல - தன்மத்திற்கு மாறுபட, செய்யாரே - நடவார்களென்பது பதம்.

**(பொ.)** பேரின்பத்தைக் கோறிநிற்பவர்கள் சொற்பகால இன்பமாம் காமியத்தால் வெதும்பி தன்மத்திற்கு மாறுகொள் நடவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** சதா இன்பத்தைக் கருதி சுகசாதனஞ் செய்பவர்கள் சொற்பநேர இன்பமாங் காமியத்தால் வெதும்பி அறநெறியைக் கடக்க மாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** முத்தி பேறாம் பேரின்பத்தைக் கருதி உள்ளத்திலோர் களங்கமும் அணுகவிடாது அகற்றுஞ் சாதனமுடையவர்கள் சொற்பகால இன்பத்தைக் கொடுக்குங் காம இச்சையால் தன்மவழி தவறி தங்கள் உள்ளத்தை வெதும்பச் செய்து கொள்ளமாட்டார்கள் என்பது விரிவு

**4. இலமென்று வெஃகல் செய்யார் புலம் வென்ற**
**புன்மெயில் காட்சி யவர்.**

**(ப.)** புலம் வென்ற - ஐம்புல நுகர்ச்சியினை வென்ற புன்மெயில் - சிறந்த தேக, காட்சியவர் - தோற்றமுடையவர்கள், இலமென்று - ஒருபொருளுங் கிட்டவில்லையே யென்று, வெஃகல் செய்யார் - வெதும்பலடையார்களென்பது பதம்.

**(பொ.)** ஐம்புல நுகர்ச்சிகளை வென்ற சிறந்த தேகத்தோற்றமுடையவர்கள் தங்களுக்கு ஒருபொருளுங் கிடைக்கவில்லையேயென உள்ளம் வெதும்பார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐம்புலன் உளவுகளை அறிந்த சுகதேகிகள் தங்களுக்கு யாதொன்றும் இல்லையே என வெதும்பார்கள் என்பது கருத்து.

**(வி.)** மெய்யினது உணர்ச்சியின் நிலையையும், கண்ணினது பார்வையின் நிலையையும், மூக்கினது முகரல் நிலையையும், செவியினது கேட்டல் நிலையையுங் கண்டுணர்ந்த சிறந்த தேதிகள் தங்களுக்கு வேறுபொருள் ஒன்றும் இல்லையேயென உள்ளம் வெதும்பித் ததும்பச் செய்துக் கொள்ளார்கள் என்பது விரிவு.

**5. அஃகி யகன்ற வறிவென்னாம் யார்மாட்டும்**
**வெஃகி வெறிய செயின்**

**(ப.)** யார்மாட்டும் - யாவரையுங்கண்டு, வெஃகி - மனந்தாளாது வெதும்பி, வெறிய செயின் - பொல்லாங்கை செய்துவிட்டு, அஃகியகன்ற - பயந்தோடும், வறிவென்னாம் - விவேக மென்னவாமென்பது பதம்.

**(பொ.)** ஒவ்வொருவரையுங்கண்டு மனந்தாளாது வெதும்பி தீங்கு செய்துவிட்டு பயந்தோடுவது என்ன விவேகம் என்பது பொழிப்பு.

**(க.)** மற்றொருவர் சுகத்தைக்கண்டு மனஞ்சகியாது வெதும்பி பித்தேறி துன்பஞ் செய்துவிட்டு பயந்தோடுவோர் அறிவும் அறிவாமோ என்பது கருத்து.

**(வி.)** பலர் சுகங்களையுங் கருதி தனக்குக் கிட்டாது உள்ளம் வெதும்பி அதனால் அவா பித்தேறி அவர்களுக்குத் தீங்கிழைத்து பயந்தோடும் படியான மக்களுக்கு அறிவுமுண்டோ என்னும் இரங்கல் விரிவு.

**6. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்**
**பொல்லாத சூழக் கெடும்.**

**(ப.)** அருள்வெஃகி - கிருபையில் வெதும்பி, யாற்றின்க ணின்றான் - ஆறுதல் பெற நோக்குவோன், பொருள் வெஃகி - அழியும் பொருளை நோக்கி வெதும் புவனாயின், பொல்லாத - கொடிய துன்பங்கள், சூழக்கெடும் - கவிழ்ந் தழிக்கு மென்பது பதம்.

**(பொ.)** கிருபையை நாடி வெதும்பி ஆறுதல் பெற வேண்டியவன் அழியும் பொருளை நாடி வெதும்புவானாயின் கொடுந்துன்பங் கவிழ்ந்து கெடுக்கும் என்பது பொழிப்பு.

**(க)** அருளில் வெதும்பி ஆற்றலடைய வேண்டியவன் பொய்ப் பொருளையும் நாடி வெதும்புவானாயின் சகல துன்பத்திற்கும் ஆளாவான் என்பது கருத்து.

**(வி.)** புறப்பற்றுக்கள் யாவும் பொய்யெனக் கண்டு அகப்பற்றாம் உண்மெயில் வெதும்பு வோன் மறந்தும் புறப்பற்றாம் பொய்ப்பொருளை நாடி வெதும்புவானாயின் அதுவே

சகலகேட்டையும் விளைவித்துத் துன்பத்தை உண்டு செய்துவிடும் என்பது விரிவு:

**7. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்**

**மாண்டற் கரிதாம் பயன்**

**(ப.)** வேண்டற்க - வெறுப்புற்றவன் போற் காட்டி, வெஃகியா - உள்ளுக்கு வெதும்புவோன், மாக்கம் - செல்வம், விளைவயின் - விருத்தியானது, மாண்டற்கரிதாம் - மரித்தோனுக்கொப்பாய, பயன் - பலனாமென்பது பதம்.

**(பொ.)** வெறுப்புற்றவன்போற் காட்டி உள்ளுக்கு வெதும்புவோன் செல்வமானது மரித்தோனுக்கொப்பாய பலனுடைத்தாம் என்பது பொழிப்பு

**(க)** வெளிக்கு வெறுப்புற்றவன் போற்காட்டி உள்ளுக்குள் வெதும்பு வோனது பயன் மாண்டவனே சாட்சியாம் என்பது கருத்து.

**(வி.)** மாண்டான் என்ற போதே சகலமும் ஒழித்தானென்று கூறுவதுபோல் வெளிக்கு சகல பற்றுக்களையும் அறுப்பவன் போல் அபிநயித்து உள்ளுக்குள் பொருளாசையால் வெதும்புவோனது பயனும் விழலாகும் என்பது விரிவு.

**3. அஃகாமெ செல்வத்திற் கியாதெனில் வெஃகாமெ**

**வேண்டும் பிறன்கைப் பொருள்.**

**(ப.)** செல்வத்திற் - ஆக்க மழியுமென்று, அஃகாமெ - பயங்கொள்ளா நிலை, கியாதெனில் - எதுவென்னில், பிறன்கைப் பொருள் - அன்னியன் பொருளின் மீது, வேண்டுமென் - விருப்புற்று, வெஃகாமெ - வெதும்பாதிருத்தலேயாமென்பது பதம்.

**(பொ.)** ஆக்கம் அழியுமென்னும் பயம் கொள்ளா நிலை யாதெனில் அன்னியன் பொருள் மீது விருப்புற்று வெதும்பாதிருத்தல் என்பது பொழிப்பு.

**(அ)** தனது செல்வம் அழியாதென அஞ்சாதிருப்பதற்குத் திடநிலையாதெனில் அன்னியர் பொருள் மீது அவாக்கொண்டு வெதும் பாதிருத்தலே நிலையாம் என்பது கருத்து.

**(வி.)** தான் நல்வழியால் சேகரித்துள்ளப் பொருள் கள்ளர்கைப்படுமோ, சூதர்கைப்படுமோ, வஞ்சகர்கைப்படுமோவென்று அஞ்சாதிருப்பதற்கு ஆதாரம் யாதெனில்: அன்னியர் பொருளைத் தான் கண்டு ஆசையுற்று வெதும்பாதிருத்த லேயாமென்பது விரிவு

**9. அதனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேரும்**

**திறனறிந் தாங்கே திரு.**

**(ப.)** அதனறிந்து - கேட்டினிலைகளையுணர்ந்து, வெஃகாமெ - வெதும்பாத, வறிவுடையார்க் - விவேகமுடையாரின், திறனறிந் - நெறியினையறிந்து, தாங்கே - அவர்களிடம், திரு - செல்வமானது, சேருந் - அடையுமென்பது பதம்.

**(பொ.)** கேட்டின் நிலைகளை உணர்ந்து வெதும்பாத விவேக முள்ளாரின் நெறியினை அறிந்து அவர்களிடம் செல்வஞ் சேரும் என்பது பொழிப்பு

**(க.)** கேட்டின் வழிகளை உணர்ந்து வெதும்பலற்று நீதிநெறியில் நிற்கும் விவேகமிகுத்தோரது செல்வம் அழியாது சேரும் என்பது கருத்து.

**(வி.)** உள்ளவெதும்பலால் உண்டாகுங் கேடுகளை உணர்ந்த விவேகிகளின் நீதிநெறியை அறிந்து மென்மேலும் சுகச்செல்வஞ் சேருவதுடன் அஃது கள்ளர்களாலும், வஞ்சகர்களாலும், சூதர்களாலும் அழியாது தன் சந்ததியைக் காக்குந் திருவென விளங்கும் என்பதும் விரிவு.

## 10. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும் வேண்டாமெ யென்னுஞ் செருக்கு

**(ப.)** இறலீனு - கேட்டினை யுணர்ந்தும், மெண்ணாது - அதனைக் கருதாது, வெஃகின் - வெதும்புவதாயின், விறலீனும் - பேரமுதை

யீயினும், வேண்டாமெ - அதனைக் கருதாத, யென்னுஞ் செருக்கு - அகங்கரிப்புக் கொப்பாமென்பது பதம்.

**(பொ.)** கேட்டினை உணர்ந்துங் கருதாது வெதும்புவதாயின் பேரமுதைக் கொடுக்கினும் வேண்டாமென்று அகங்கரிப்பதற்கு ஒக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** இதனால் இக்கேடுண்டாயதென்று உணர்ந்தும் அவற்றைக் கருதாது மற்றும் பேரவாவால் வெதும்புவதாயின் பேரமுதை ஒருவர் ஈயினும் அதனை வேண்டாமெனத் தடுக்குஞ் செருக்குடையோனுக்கொப்பாம் என்பது கருத்து.

**(வி.)** காமிய வெதுப்பல், கோப வெதுப்பல், பேரவா வெதுப்பல், பசியின் வெதுப்பல்களால் உண்டாங் கேடுகளை உணர்ந்த நிலையே அமுதத்திற் கொப்பாயதாதலின் அதனைக் கருதாது மறந்தும் வெதும்புறுவதாயின் பேரமுதை யொருவர் அளித்தும் அதனைத் தனது செருக்கால் வேண்டாமென்று அகற்றியதற் ஒக்கும் என்பது விரிவு.

## 19. கள்ளாமெய்

இவைகள் யாவும் இல்லறத்தோன் ஒழுக்கங்களாதலின் அவ்வாழ்க்கையில் அன்னியன் பொருளை யிச்சிப்பவனது

கேட்டையும் இச்சியாதோன் சுகத்தையும் இவ்விடம் விளக்குகின்றார்.

**1. எள்ளாமெ வேண்டுவா னென்பா னெனத்தோன்றுங்**

**கள்ளாமெ காக்கத்தன் னெஞ்சு.**

**(ப.)** எள்ளாமெ - மற்றவர் நிந்தைக்கூடாதென, வேண்டுவா - கோறுவோன். னென்பா - என்னப்படுவோன், னெனத்தோன்றுங் - தனக்குத் தோன்றும். தள்ளாமெ - அன்னியன் பொருளை யிச்சியாதவனென, தன்னெஞ்சு - தன துள்ளத்தைக் காக்கத் - காக்கக் கடவ னென்பது பதம். '

**(பொ)** மற்றவர் நிந்தைக் கூடாதெனக் கோறுவோன் காணும் அன்னியர்பொருளை இச்சியாதவ னெனத் தனதுள்ளத்தைக் காக்கக்கடவன் என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியரால் தன்னை நிந்திக்காமல் கார்த்துக்கொள்ள வேண்டியவன் அன்னியர் பொருளைக் கண்டு இச்சியாது தனதுள்ளத்தைக் கார்க்கக்கடவது என்பது கருத்து.

**(வி.)** இவன் திருடன், இவன் அயோக்கியன் எனப் பலராலும் நிந்திக்கப்படாமல் வாழ்கவேண்டு மென்னும் விருப்பமுடையோன் தனது உள்ளத்தின் கண் அன்னியன் பொருளை இச்சிக்குங் குணம் எழாமல் காத்துக்கொள்ள வேண்டுமென்பது விரிவு.

**2. உள்ளத்தா லுள்ளலுந் திதே பிறன்பொருளை**

**கள்ளத்தாற் களவே மெனல்**

**(ப.)** உள்ளத்தா - தன தெண்ணத்தால், லுள்ளலுந் - எண்ணுதலும், தீதே - கொடிதே, பிறன் பொருளை - அன்னியருடைய பொருளை, கள்ளத்தாற் களவினால், கள்வேமெனல் - அபகரிப்போ மென்பது பதம்.

**(பொ.)** தன்னெண்ணத்தால் எண்ணுதலுங் கொடிதே அன்னியர் பொருளை அபகரிப் போம் என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியர் பொருளை அபகரிப்போம் என்று தனதுள்ளத்தில் எண்ணுதலே கொடிது என்பது கருத்து.

**(வி.)** அன்னியனது பொருளின் மீது பேரவாக்கொண்டு அதனை அபகரிக்க வேண்டுமென்று தன துள்ளத்தில் எண்ணுதலே மிக்கத் தீதுக்குக் கொண்டு போகும் உள்ளக் கிளர்ச்சியாம் என்பதற்குச் சார்பாய் நாலடி நானூறு "உள்ளத்தானள்ளா துறுதித்தொழிலராய்க், கள்ளத்தா னட்டார்கழிகேண்மெ - தெள்ளிப், புனற்செதும்புநின்றழிக்கும் பூங்குன்ற நாட மனத்துக்கண் மாசாய்விடும்" என கள்வனுக்குள்ளக் களங்கு பகவனுக்கு விளங்கிப்போம் என்பது விரிவு

**3. களவினா லாகிய வாக்க மளவிறந்**

**தாவது போலக் கெடும்.**

**(ப.)** களவினா - அன்னியர் பொருளை அபகரித்தலால், லாகிய - சேர்ந்த, வாக்க - செல்வமானது, மளவிறந் - மென்மேலும், தாவதுபோலக் - பெருகுவதுபோல, கெடும் - அழியுமென்பது பதம்.

**(பொ.)** அன்னியர் பொருளை அபகரித்ததால் சேர்ந்த செல்வமானது வளர்வது போல அழியும் என்பது பொழிப்பு

**(க.)** களவினால் சேகரித்தப் பொருள் காட்சியில் வளர்வது போலவே அழிந்துப் போம் என்பது கருத்து.

**(வி.)** அன்னியரை வஞ்சித்துக் களவாடும் பொருட்களானது தன் கண்ணிற்குப் பெருகுவது போலக் காணினும் அஃது போகும் வழி தோன்றாது அழிந்துபோம் என்பது விரிவு

**4. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமந் தரும்.**

**(ப.)** களவின்கட் - அன்னியர் பொருளையபகரிக்க வேண்டி, கன்றிய - ஊன்றிய, காதல் - ஆசையானது, விளைவின்கண் - தனது விருத்தியினிடத்து, வீயா - ஒழியா, விழுமந்தரும் - துன்பத்தைக்கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** அன்னியர் பொருளை அபகரிக்க வேண்டி ஊன்றிய ஆசையானது தனது விருத்தியினிடத்து ஒழியாத் துன்பம் தரும் என்பது பொழிப்பு

**(க)** எப்போது அன்னியன் பொருளை அபகரிக்கும் இச்சையில் ஆழ்ந்து நிற்கின்றானோ அவன் விருத்தி பெறச்செய்யுந் தொழில்கள் யாவற்றினுந் துன்பத்தை அனுபவிப்பான் என்பது கருத்து

**(வி.)** கஷ்டப்பட்டு சம்பாதிக்க வேண்டுமென்னும் நாணய முயற்சியை விடுத்து அன்னியன் பொருளை அபகரிக்க விரும்பும் பேரவாவுடையவன் செய்யுந் தொழில்கள் யாவற்றினுந் துன்புற்று அலைவான் என்பது விரிவு.

**5. அருள்கருதி யன்புடை யராதற் பொருள்கருதிய**
**பொச்சப்புப் பார்ப்பார் கணில்.**

**(ப.)** அருள்கருதி - கிருபையை விரும்பி, யன்புடையராதல் - சிவனிலை யடைதல், பொருள் கருதி - அன்னியரது பொருளை விரும்பி, பொச்சாப்புப் - அழியுநிலையை, பார்ப்பார்கணில் - நோக்குவோரிடத்திராவென்பது பதம்.

**(பொ.)** கிருபையை விரும்பி சிவநிலையடைதல் அன்னியர் பொருளை விரும்பி அழியுநிலையை நோக்குவோரிடத்து இரா என்பது பொழிப்பு

**(க.)** அழியாக் கருணையைக் கருதி சிவநிலையமாதல், அழியும் பொருளை நோக்கி யிச்சிப்பவரிடத்து இரா என்பது கருத்து.

**(வி.)** அன்னியரது பொருளினை இச்சித்து அதையே நோக்குவோரிடத்து அருளை விரும்பி அன்பில் நிலைக்கும் நோக்கமிராது என்பது விரிவு.

**6. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்**
**கன்றிய காத லவர்.**

**(ப.)** அளவின்க - நீதிநெறியில், ணின்றொழுக - ஒழுக்கத்தில், லாற்றார் - ஆறுத லடையாதவர்கள், களவின்கட் - அன்னியர் பொருளை யபகரிக்கும் வழியில், கன்றிய - வெதும்பிய, காதலவர் - அவாமிகுத்தவர்களாவரென்பது பதம்.

**(பொ.)** நீதி நெறியின் ஒழுக்கத்தில் ஆறுதலடையாதவர்கள் அன்னியர் பொருளை அபகரிக்கும் வழியில் வெதும்பிய அவா மிகுத்தவர்களாவர் என்பது பொழிப்பு.

**(க.)** நீதிநெறி ஒழுக்கத்தின் சுகநிலை அறியாதவர்கள் அன்னியர் பொருளை அபகரிக்கும் வழியில் மனம் வெதும்பி அவாகொண்டு அலைவார்கள் என்பது கருத்து.

**(வி.)** அன்னியரது பொருளை அபகரிக்கும் எண்ணத்திலேயே மனங்கன்றி அவாமிகுத்தவர்களுக்கு நீதிநெறி ஒழுக்கத்தின் செயலால் உண்டாம் ஆறுதலும் அதன் பயனும் விளங்காது என்பது விரிவு.

**7. களவென்னுங் காரறி வாண்மெ யளவென்னு**
**மாற்றல் புரிந்தார்க ளில்**

**(ப.)** களவென்னுங் - அன்னியர் பொருளை அபகரிப்பதென்னும், காரறி - அஞ்ஞான, வாண்மெ - அகங்கரிப்பு, யளவென்னு - நீதிநெறி யொழுக்கத்தால், மாற்றல் - ஆறுதல், புரிந்தார்களில் - அடைந்தவர்களிடத் திராவென்பது பதம்.

**(பொ.)** அன்னியர் பொருளை அபகரிப்பதென்னும் அஞ்ஞான அகங்கரிப்பு நீதிநெறி ஒழுக்கத்தால் ஆறுதலடைந்தவர்களிடத்து இரா என்பது பொழிப்பு

**(க.)** நீதிநெறி யொழுக்க அளவில் ஆறுதலடைந்தோருக்கு அன்னியர் பொருளை அபகரிப்போம் என்னும் அஞ்ஞானமாய அகங்கரிப்பு இரா என்பது கருத்து.

**(வி.)** நீதியில் நடக்க வேண்டிய அளவும் நெறியில் நிற்கவேண்டிய அளவுங் கடக்காது ஒழுகி ஆறுதலடைந்து உள்ளார்க்கு அன்னியர்

பொருளை அபகரிக்க வேண்டும் என்னும் அஞ்ஞானமாகிய அகங்கரிப்பு உள்ளத்தில் மறந்தும் எழாது என்பது விரிவு.

**8. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்**
**களவறிந்தார் நெஞ்சிற் காவு.**

**(ப.)** அளவறிந்தார் - நீதிநெறி யளவுகடவாது நின்றோர் , நெஞ்சத - உள்ளத்தின்கண், தறம்போல நிற்குங் - ஆனந்தம் நிலைத்திருப்பது போல, களவறிந்தார் - அன்னியர் பொருளையபகரிப்போரது, நெஞ்சிற் - உள்ளத்தின் கண், கரவு - துக்கம் நிலைத்திருக்குமென்பது பதம்.

**(பொ).** நீதிநெறி அளவுகடவாது நின்றோர் உள்ளத்தின்கண் ஆனந்தம் நிலைத்திருப்பது போல் அன்னியர் பொருளை அபகரிப்போரது உள்ளத்தின்கண் துக்கம் நிலைத்திருக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** நீதிநெறியின் அளவறிந் தொழுகுவோர் இதயத்தில் ஆனந்தம் நிலைத்திருப்பதுபோல கள்ளர்களிடத்து துக்கம் நிலைத்திருக்குமென்பது கருத்து.

**(வி.)** நீதிநெறியின் ஒழுக்க அளவுகடவாத தன்மப்பிரியர்களுக்கு ஆனந்தம் நிலைத்திருப்பது போல் அன்னியர்பொருளை

அபகரிக்கும் வஞ்ச நெஞ்சினர்களுக்கு மாறா துக்கமும் பயமும் நிலைத்திருக்கும் என்பது விரிவு.

**9. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்றா தவர்**

**(ப.)** களவல்ல - அன்னியர் பொருளையபகரிக்கலாகாதென, தேற்றாதவர் - சொல்லியுங் கேளாதவர், மற்றைய - ஏதுக்குமஞ்சாது, அளவல்ல - நீதிநெறியற்ற, செய்தாங்கே - செயல்களைச்செய்து, வீவர் - கெடுவரென்பது பதம்.

**(பொ.)** அன்னியர் பொருளை அபகரிக்கலாகாதென சொல்லியுங் கேளாதவர் எதுக்குமஞ்சாது நெறியற்ற செயல்களைச் செய்து கெடுவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** களவு செய்வது கொடிது என்று கூறியும் அவற்றை உணர்ந்தறியாதோர் யாதொன்றுக்கும் அஞ்சாது கொடுஞ் செயல்களைச் செய்து கேடுண்டு அலைவார்கள் என்பது கருத்து.

**(வி.)** களவாகாது என்பதே களவல்ல என மறுவியுளதால் அன்னியர் பொருளை அபகரிப்பது தீங்கை விளைவிக்குமென தேற்றக்கூறியுந் தேறாத வன்னெஞ்சினர் ஏதுக்குமஞ்சாது மற்றுங் கொடுந் தீங்குகளைச் செய்து தீவினைக்குள்ளாகி மாளாதுன்புற்று கெடுவார்களென்பது விரிவு.

**10. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்கு**

**தள்ளாது புத்தே ளுலகு.**

**(ப.)** கள்வார்க்குத் - களவாணிக்கப்படரை, தள்ளு - அகற்றும், முயிர் நிலை -உண்மெய், கள்ளார்க்கு - களவாணிக ளல்லோரை, தள்ளாது - அகற்றாது, புத்தேளுலகு - புத்ததேவ னுலகமென்பது பதம்.

**(பொ.)** களவாணிக்கபடரை உண்மெ நிலை அகற்றும் களவாணிக ளல்லோரை புத்ததேவன் உலகம் அகற்றாது என்பது பொழிப்பு

**(க.)** அன்னியர் பொருளை அபகரிக்குங் கள்ளரை அவர்களுள் உண்மெ நிலையாம் உயிர்நிலையே அகற்றும் அன்னியர் பொருளை அபகரிக்காதோரை அகற்றாது புத்ததேவன் உலகுய்க்கும் என்பது கருத்து.

**(வி.)** உயர்நிலையே உண்மெய்யனாம் புத்ததேவன் உலகாகலின் அந்நிலை உணராது அன்னியர் பொருள்மீது அவாக் கொண்டு அலைவோரை சுகநிலை கெட அகற்றும். அவ்வவா அற்றோரை உயிர்நிலையாம் புத்ததேவன் உலகம் அகற்றாது சேர்த்து சுகம் பெறச்செய்யும் என்பது விரிவு,

**20. கள்ளுண்ணா மெய்**

இல்லறத்தோன் தனது வாழ்க்கை ஒழுக்கத்தில் எத்தகைய நிதானமுற்றிருப்பினும் வழுவுற்று அலைவது இயல்பாதலின் அத்தகையோன் தனது அறிவை மயக்கும் கள்ளினை அருந்துவானாயின் முற்றும் அறிவு மயங்கி பாழடைவானாகலின் அக்கள்ளினை அருந்துவோனது கேடுகளை விளக்குகின்றார்.

**1. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்**

**கட்காதல் கொண்டொழுகு வார்.**

**(ப.)** கட்காதல் - கள்ளின்மீதவா, கொண்டொழுகுவார் - கொண்டலைவோர், ரெஞ்ஞான்றும் - எக்காலத்தும், உட்கப்படாஅ - தங்கள் நாணமற்று, ரொளியிழப்ப - கீர்த்தியையு மழித்துக்கொள்ளுவார்களென்பது பதம்.

**(பொ.)** கள்ளின் மீது அவாக்கொண்டு அலைவோர் எக்காலத்தும் தங்கள் நாணமற்று கீர்த்தியையும் அழித்துக் கொள்ளுவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** கள்ளை அருந்தும் ஆசைகொண்டு அலைவோர் எந்தகாலத்தும் வெட்கமென்பது அற்று தங்கள் புகழையுங் கெடுத்துக் கொள்ளுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** தனது அறிவை மயக்குங் கள்ளென்று அறிந்தும் அதன் மீது காதல் கொண்டு அலைவோர் தான்கற்றக் கல்வியிலுங்

கைத்தொழிலிலும் உண்டாயக் கீர்த்தியும் அழிந்து எக்காலுங் கேடுற்று அலைவார்கள் என்பது விரிவு.

**2. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா**

**லெண்ணப்பட வேண்டா தோர்.**

**(ப.)** சான்றோரா - விவேகமிகுத்தவர்கள், லெண்ணப்பட - கருத்திலும், வேண்டாதார் - இச்சியாத, கள்ளை - மதுவினை, உண்ணற்க - பலரறியவு மருந்தலாகாது, யுணிலுண்க - ஒதிங்கியு மருந்தலாகாதென்பது பதம்.

**(பொ)** விவேகமிகுத்தவர்களால் கருத்திலும் இச்சியாதக் கள்ளினை பலரறியவும் அருந்தலாகாது அடக்கத்திலும் அருந்தலாகாது என்பது பொழிப்பு

**(க.)** விவேகிகளாம் சாதுக்களால் உள்ளத்திலும் இச்சியாத கள்ளினை பலர் காணவும் குடிக்கலாகாது காணாதுங் குடிக்கலாகாது என்பது கருத்து.

**(வி.)** சாதுக்களாகிய பெரியோர் தங்கள் இதயத்தின் கண்ணும் இச்சி யாது அகற்றி வைத்துள்ளக் கள்ளினை மக்கள் பலர் காணவும் அருந்தலாகாது பலர் காணாதும் அருந்தலாகாது என்பதற்குச் சார்பாக அறநெறிச்சாரம் "ஒளியுமொளிசான்ற செய்கையுஞ் சான்றோர், தெளிவுடையரென்றுரைக்குந் தேசும் - களியென்னும். கட்டுரையாற்

கோதப்படுமேல் இவையெல்லாம், விட்டொழியும் வேறாய் விரைந்து" என்ற கள்ளினை இச்சித்தலே தகாது என்பது விரிவு.

### 3. ஈன்றான் முகத்தேயு மின்னாதா லென் மற்றுச் சான்றோர் முகத்துக் களி

**(ப.)** ஈன்றாண் - பெற்றவளே, முகத்தேயு - பிள்ளையின் முகத்தை, மின்னாதா - பார்க்க அருவெறுக்குங்கால், லென்மற்று - மற்றவேறாம், சான்றோர் - பெரியோர்கள், களி - கள்ளினை, முகத்து - நோக்குவரோவென்பது பதம்

**(பொ.)** பெற்றவளே கள் குடித்துள்ள தன் பிள்ளையின் முகத்தைப்பார்க்க அருவெறுக்குங்கால் மற்றும் வேறாம் பெரியோர்கள் கள்ளினைக் கண்ணிலும் நோக்குவரோ என்பது பொழிப்பு.

**(க)** கள்ளினைக் குடித்து வெறித்துள்ளப் பிள்ளையின் முகத்தை ஈன்றெடுத்த தாயே பார்க்க இச்சியாதபோது மற்றும் வேறாம் பெரியோர்கள் அக்கள்ளினை கண்ணிலும் பார்ப்பரோ என்பது கருத்து.

**(வி.)** ஈன்று அமுதூட்டி எறும்பு அணுகாது காத்து இரட்சித்தத் தாயானவள் கள்ளினைக் குடித்து வெறித்துள்ளத் தன் பிள்ளையின் முகத்தைப் பார்க்க அருவெறுக்குங்கால் வேறாய சாதுக்கள்

அக்கள்ளினை தங்கள் முகத்திலும் நோக்குவாரோ, நோக்கார்கள் என்பது விரிவு

**4. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும் பேணாப் பெருங்குற்றத் தார்க்கு**

**(ப.)** கள்ளென்னும் - மதுவினை யருந்தும், பெருங்குற்றத்தார்க்கு - மிகுக் கொடியோர்களை, நாணென்னு - அச்சமிகுத்த, நல்லாள் - பதிவிரதையும், பேணா - இச்சியாது, புறங்கொடுக்குங் - முகத்திருப்புவாளென்பது பதம்.

**(பொ.)** மதுவினை அருந்தும் மிகுக் கொடியோர்களை அச்சமிகுத்தப் பதிவிரதையும் இச்சியாது முகந்திருப்புவாள் என்பது பொழிப்பு

**(க)** கள்ளினை அருந்துங் கணவர்கள் கொறூர முகத்தைக் காணற்கு அஞ்சி தனது இல்லாளும் முகத்திருப்பஞ் செய்துக்கொள்ளுவாள் என்பது கருத்து

**(வி.)** பெரியோர் இச்சித்தற்குத் தகுதியற்றதாய கள்ளினை அருந்துங் கொடி யோர்கள் முகத்தை தங்கள் இல்லாள்களாகும் நல்லா அஞ்சி தங்கள் தங்கள் முகங்களைத் திருப்பிக்கொள்ளுவார்கள் என்றும் தன் மனைவியும் வெறுத்துப் புறம் போவாள் என்பது விரிவு.

**5. கையறி யாமெ யுடைத்தே பொருள் கொடுத்து**

**மெய்யறி யாமெ கொளல் .**

**(ப.)** தையறியாமெ - அனுபவத்திற் கண்டறியாதோன், யுடைத்தே தன்னிடத்துள்ள பொருள் கொடுத்து - பணங்கொடுத்து குடித்து மெய்யறியாமே உணமெயறியாது, கொளல் - கெடுத்துக்கொள்ளுதற்கொக்குமென்பது பதம்.

**(பெ.)** அநுபவத்திற் கண்டறியாதோன் தன்னிடத்துள்ளப் பணங் கொடுத்துக் குடித்து உண்மெ அறியாது கெடுத்துக் கொள்ளுதற்கு ஒக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** கட்குடியினால் உண்டாங் கேடுகளைக் கண்டும் அநுபவ மறியாதவன் உடைய பணத்தைக் கொடுத்துக் குடித்து உண்மெயைக் கெடுத்துக் கொள்ளுவதற்கு ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** உண்மெய்ப்பொருளை அறிய வேண்டி மக்கள் படுவது உலகறிந்திருக்க அவ்வனுபவத்தைக் கைகண்டதென்று உணராது கேட்டினைத் தன் பொருள் கொடுத்துப் பெற்றுக்கொள்ளுதல் போல் தன்னிடத்துள்ளப் பணத்தைக் கொடுத்து அறிவை மயக்குங் கள்ளினை வாங்கி அருந்துவதாகும் என்பது விரிவு

**5. துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று**

**நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.**

**(ப.)** துஞ்சினார் - தன்னை மறந்து தூங்கினோர், செத்தாரில் - மரித்தோருக்கு, வேறல்ல - மாறுபடாதது போல், ரெஞ்ஞான்று எக்காலத்தும், கள்ளுண்பவர் - மதுவினை யருந்துவோர், நஞ்சுண்பார் - விஷத்தினை யருந்துவோருக் கொப்பாவ ரென்பது பதம்.

**(பொ.)** தன்னை மறந்து தூங்கினோர் மரித்தோருக்கு மாறுபடாதது போல எக்காலும் மதுவினை அருந்துவோர் விஷத்தைக்குடிப்போருக்கு ஒப்பாவர் என்பது பொழிப்பு.

**(க.)** சகலவற்றையு மறந்து நித்திரையால் மூடுபட்டவன் மரணமடைந்தோனுக்கு சமம் ஆவதுபோல் கள்ளினை என் நேரமுங் குடிப்பவன் தினேதினே விஷத்தினை அருந்துவோனுக்கு ஒக்குமென்பது கருத்து.

**(வி.)** நினைவற்று பெண்டு பிள்ளைகளையும் மறந்து சேகரித்துள்ளப் பொருள்களையும் மறந்து தூங்கினவன் மரணமுற்றோனுக்கு ஒப்பாவது போல் சகலவற்றையும் மறக்கச் செய்யுங் கள்ளினை அருந்தி திரிவோன் மதிமயங்கிக் கேடுண்டு மரிப்பானாதலின் அவன் எக்காலும் விஷத்தினை அருந்துவோனுக்கு ஒப்பாவன் என்பது விரிவு.

**6. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படு ரெஞ்ஞான்றுங்**

**களவொற்றிக் கண்சாய் பவர்.**

**(ப.)** யுள்ளூர் - தான் வசிக்கும் ஊரில், உள்ளொற்றி - ஒத்துவாழ்பவர், கள்ளொற்றி - கள்ளை யருந்தி, கண்சாய்பவர் - விழி மறைந்தோரை, ரெஞ்ஞான்றுங் - எக்காலத்தும், நகப்படுவ -அகன்றே - நிற்பார்களென்பது பதம்.

**(பொ.)** தான் வசிக்கும் ஊரில் ஒத்து வாழ்வோர் கள்ளை அருந்தி விழி மறைந்தோரை எக்காலமும் அகன்றே நிற்பார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** ஊரில் தன்னுடன் ஒத்து நேசித்து வந்தவர்கள் யாவரும் கள்ளை அருந்தி கண்மயங்கி நிற்போரைக் கண்டவுடன் நேசியாது தூரவே அகன்றுவிடுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** தனது ஊரில் தன்னுடன் நேசித்து அன்பு பொருந்தி ஒத்து வாழ்ந்துள்ளோர் யாவருங் கள்ளைக்குடித்து வெறியேறி கண்மயக்குற்றவர்களைக் கண்டவுடன் அவர்கள் அருகில் நெருங்காமலும் ஓருதவியும் புரியாமலுந் தூரவே விலகிப்போவார்கள் என்பது விரிவு.

**7. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்**
**தொளித்தது உ மாங்கே மிகும்.**

**(ப.)** களித்தறியே - கள் குடியாதானந்தமறியேன், னென்பது - என்று கூறும்படியானதை, கைவிடுக - மறந்துவிடுவாயாக, நெஞ்சத் -

உள்ளத்திலவ் வெண்ணமே, தொளித்தது உ - அடங்கி, மாங்கேமிகும் - அவ்வாசையையே அதிகரிக்கச்செய்யுமென்பது பதம்.

**(பொ.)** கள்குடியாத ஆனந்தம் அறியேன் என்று கூறும்படியானதை மறந்துவிடுவாயாக. உள்ளத்தில் அவ்வெண்ணமே அடங்கி அவ்வாசையையே அதிகரிக்கச்செய்யும் என்பது பொழிப்பு.

**(க.)** கள்ளைக் குடிப்பதால் சொற்ப ஆனந்தமுண்டு அதனைக் குடியாததால் ஏதொரு ஆனந்தமும் அறியேனே என்னும் எண்ணத்தைப் பதியாது அகற்றிவிடுவாயாக மனதின்கண் அவ்வெண்ணமே அடங்கி அவ்வாசையே அதிகரித்துப்போம் என்பது கருத்து.

**(வி.)** கள்ளினைக் குடித்து வெறிப்பதால் ஓர் ஆனந்தமுண்டு. அதனைக் குடியாது வேறானந்தமும் அறியேனே என்னும் எண்ணத்தைக் கைவிடுவாயாக அவ்வகை எண்ணுவதாயின் அவ்வெண்ணமே அதிகரித்து அந்த சொற்ப ஆனந்தத்தில் விடுத்து மாறா துக்கத்திற்குக் கொண்டுபோய்விடுமாதலால் அவ்வானந்த எண்ணத்தையே நெஞ்சிற் பதியவைக்கலாகாது என்பது விரிவு.

**9. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரி யற்று.**

**(ப.)** களித்தானை - கட்குடித் தானந்தித்தோனின், காரணம் - செயலை, காட்டுதல் - விளக்குதல், கீழ்நீர் - சேற்றுநீரில், குளித்தானைத் - மூழ்கினோனுக் கொப்பாக, தீத்துரீஇயற்று - சீலமற்றோன் நிலைபோ லாமென்பது பதம்.

**(பொ.)** கள் குடித்து ஆனந்தித்தோனின் செயலை விளக்குதல் சேற்றுநீரில் முழுகினோனுக்கு ஒப்பாக சீலமற்ற நிலை யாகும் என்பது பொழிப்பு.

**(க.)** கள் குடித்துள்ளவனின் ஆனந்தம் மற்றவர்களுக்கு எவ்வகையாகக் காட்டுமென்னில் சீலமற்று சேற்றுநீரில் குளித்து வந்தவனைப் பார்ப்பது
ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** கள்ளைக் குடித்து வெறித்து ஆனந்திப்பது அவனுக்கு சுகமாகத் தோற்றினும் மற்றும் பார்ப்பவர்களுக்கு குளிக்கப் போய் சேற்றைப் பூசிக்கொண்டு சீலமற்று உலாவுவோனைப்போற் காணப்படுவது மன்றி அவனருகில் நெருங்கி தீண்டாமலும் பேசாமலுந் தீத்துரீ இயன் என்று அகலுவார்கள் என்பது விரிவு.

**10. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா**
**லுள்ளான் கொலுண்டதன் சோர்வு.**

**(ப.)** கள்ளுண்ணா - தான்கள் குடியாத, போழ்திற் - காலத்தில், களித்தானை - கட்குடித் தானந்திப்போனை, காணுங்கால் - பார்ப்பானாயின், லுண்டதன் - கள்ளினையருந்திய, சோர்வு - கெடுதியை, லுள்ளான்கொ - தனக்குள்ளறிவா னென்பது பதம்.

**(பொ.)** தான் கள் குடியா காலத்திற் கள்ளைக்குடித்து ஆனந்திப்போனைப் பார்ப்பானாயின் கள்ளினை அருந்தியக் கெடுதியை தனக்குள் அறிவான் என்பது பொழிப்பு.

**(க.)** கள் குடியன் தான் குடியாத காலத்தில் கள் குடித்துள்ளவனுடைய சோர்வைக் காணுவானாயின் அக்கேடு தன்னில் தானே விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** எக்காலுங் கள்ளைக்குடித்து ஆனந்திப்பேன் என்பவன் எதிரி ஒருவன் அக்கள்ளினைக் குடித்து வெறித்து மதிமயங்கிச் செய்யுங் கொடுஞ்செயல்கட்கு அஞ்சி பல்லோர் இகழவும் பாதுகாவலில் அடைக்கவுமுள்ளதைக் காணுவானாயின் அதனாலுண்டாம் சிறு வானந்தமும் பெருங்கேடுந் தன்னில் தானே விளங்கும் என்பது விரிவு.

## 21. கொல்லாமை

அதாவது இல்லறத்தில் இன்புற்று வாழ்க விருப்பமுடையோன் சருவ சீவராசிகளையுந் துன்புறச் செய்யாமல் சீவகாருண்யமுற்று

வாழ்வானாயின் சகல சுகமும் பெற்று வாழ்க்கைநல மடை வதன்றி மனிதன் என்னும் பெயரற்று தெய்வநிலை அடைவது திண்ண மாதலின் கொல்லாமெயின் சிறப்பைக் கூறியுள்ளார்.

**1. அறவினை யாதெனிற் கொல்லாமே கோறல்**

**பிறவினை யெல்லாந் தரும்.**

**(ப.)** அறவினை - தன்மகன்மம், யாதெனில் - எதுவென்றால், கொல்லாமெ - சீவப்பிராணிகளை வதையாதேயென, கோறல் - வேண்டுதலால், பிறவினை - மற்றும் நற்கன்மங்கள், யெல்லாந்தரும் - யாவுமுண்டாமென்பது பதம்.

**(பொ.)** தன்ம கன்மம் எது வென்னில் சீவப்பிராணிகளை வதையாதே என வேண்டுதலால் மற்றும் நற்கன்மங்கள் யாவும் உண்டாம் என்பது பொழிப்பு

**(க.)** வேண்டும் நல்வினைகளில் சீவப்பிரானிகளைத் துன்பஞ் செய்யாதிருத்தலே சகல நற்கன் மங்களுக்கும் ஈடாம் என்பது கருத்து

**(வி.)** தான் கோறிச்செய்யும் நல்வினைகள் யாவற்றிற்கும் சீவப்பிராளிகளை வதைத்துத் துன்பஞ்செய்யாதிருத்தலே தலையாய தன்மச் செயல் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் “கொன்றூனு கருங் கொடுமெயெ யுண்ணினைந் தன்றேவொழியவிடுவானேல் - என்றும், இடுக்கணெனவுண்டோ இல்வாழ்க்கைக்குள்ளே,

படுத்தானாந் தன்னைத்தவம்" என்பது கொண்டு கொல்லாமெ கோறலே தலையாய நல்லறமென்பது விரிவு.

**2. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத நூலோர்**
**தொகுத்தவற்று ளெல்லாந் தலை.**

**(ப.)** பகுத்துண்டு - சரிபாகங் கொடுத்து புசித்து, பல்லுயிரோம்புத - சருவ வுயிர்களையுங் காத்தலையே, நூலோர் - அற நூலோர், தொகுத்தவற்று - கூறியுள்ளவைகளில், ளெல்லாந்தலை - முதலாக வகுத்துள்ளாரென்பது பதம்.

**(பொ.)** சரிபாகங் கொடுத்து புசித்து சருவவுயிர்களையுங் காத்தலையே அறநூலோர் கூறியவைகளில் ஆதியாக வகுத்துள்ளார்கள் என்பது பொழிப்பு

**(க.)** தான் சேகரித்தப் பொருட்களை சருவசீவர்களுக்கு இட்டு உண்டு காத்தலையே தன்மநூலோர் தொகுத்துள்ளவற்றுள் தலையாக வகுத்துள்ளார் என்பது கருத்து.

**(வி.)** தனக்குக் கிடைத்தவற்றைத் தான் மட்டிலும் புசித்து மலமாக்கிப் போக்காது ஏனைய சீவராசிகளுக்கும் இட்டுண்டு உயிரளித்துக் காத்தலையே தன்ம நூலோர் தலையாக வகுத்துக் கூறியுள்ளார்கள் என்பது விரிவு.

**3. ஒன்றாக நல்லது கொல்லாமெ மற்றதன்**

**பின்சாரப் பொய்யாமெ நன்று.**

**(ப.)** ஒன்றாக - முதலாக, நல்லது - நல்வினை யென்பது, கொல்லாமெ - ஒருயிரையுந் துன்பஞ்செய்யாததேயாம், மற்றதன் - மற்று மதற்கு, பின்சார - அடுத்தது போல், பொய்யாமெ - பொய்யனாகாமெயே, நன்று - நல்லதாமென்பது பதம்.

**(பொ)** முதலாய நல்வினை என்பது ஒருயிரையுந் துன்பஞ் செய்யாததேயாம். மற்றும் அதற்கடுத்தது போல் பொய்யன் ஆகாமெயே நல்லதாம் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவன் செய்வினைகளில் கொல்லாவிரதங்கொண்டு வாழ்தலே முதலாயதாயினும் அதன்பின் தான் கொல்லப்படும் இறந்தானென்னும் பொய் ஆகாதிருத்தலே நல்லதாம் என்பது கருத்து.

**(வி.)** மனிதன் எடுத்தாளும் நற்கன்மங்களில் ஒருயிரையுங் கொல்லாதிருத்தலே தலையாய கன்மமாயினும் அதனாற் சீவகாருண்ய சாந்தவுருவேறி பொய்யனாம் இறந்தான் என்னும் பெயரெடாது மெய்யனாம் புத்தனாகவேண்டுமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் அறிவுமிகப் பெருக்கி ஆங்காரநீக்கி, பொறியைந்தும் வெல்லும் வாய்ப்போற்றிச் - செறிவினான், மன்னுயிரோம்புந் தகைத்தேகா ணன்ஞானம், தன்னையுயக்கொள்வது சீவகாருண்ய மற்று பொய்யனாகாது

சீவகாருண்யமுத்திமெய்யனாம் புத்தநிலை அடையவேண்டுமென்பது விரிவு

**4. நல்லா ரெனப்படுவதியா தெனின் யாதொன்றுங் கொல்லா மெசூழும் நெறி.**

**(ப.)** நல்லாரெனப்படுவ - நல்லவரென்று சொல்லும்படியானவை, யாதெனின் - எதுவென்றால், யாதொன்றுங் - ஏதொரு சீவப்பிராணிகளையும், கொல்லாமெ - துன்பஞ் செய்யாதிருத்தலே, சூழும் - அமைந்த, நெறி - கடைப்பிடியாம் என்பது பதம்.

**(பொ.)** நல்லவன் என்று சொல்லும்படியானவை எதுவென்றால், ஏதொரு சீவப்பிராணிகளையும் துன்பஞ் செய்யாதிருத்தலே அமைந்த கடைப்பிடியாம் என்பது பொழிப்பு

**(க.)** எல்லோராலும் நல்லவன் என்று சொல்லும்படியான அறிகுறியாதெனில் சருவசீவர்களுக்குத் துன்பஞ்செய்யாத நிறைந்த வொழுக்கத்தினால் என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் சகலராலும் நல்லவன் என்று சொல்லுமொழி ஏதெனில் மனுக்களுக்கு மட்டிலுங் நல்லவனென்று தோற்றமுற்று எறும்பு கடையானை முதலாயுள்ள சீவராசிகளைத் துன்பஞ் செய்வானாயின் அவன் நல்லவனென்று அழைக்கப்படமாட்டான். சருவவுயிர்களின் மீதும் அன்பு பொருந்தி கருணாநாயகனென்னும்

நல்லொழுக்கஞ் சூழ்ந்து நன்னெறியில் நிலைத்த வனையே நல்லவனென்று அழைக்கலாம் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "நல்வினை நாற்கால்விலங்கு நவை செய்யுங் கொல்வினையஞ் சிக்குயக்கலம் - நல்வ, உறுதியுமல்லவும் நாட்பேர் மாப்பேர் இறுதியிலின் பந்தரும்" என்பதில் மிருகங்களும் நல்வினைச் செய்வதுண்டு, அதற்கொப்ப மனிதனும் ஏதோ வோர் நல்வினைச் செய்வதிற் பயனில்லை கொல்வினையற்றிருப்பதே பயன் என்பது விரிவு

**5. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சி**
**கொல்லாமெ சூழ்வான் றலை.**

**(ப.)** நிலையஞ்சி - துக்கம் நிலையாயுள்ளதென பயந்து, நீத்தாரு - துறந்தாரி, ளெல்லாங் - யாவரினும், கொல்லாமெ - சீவர்களைத் துன்பஞ் செய்யாது. சூழ்வான் - கருணை நிறைந்தோனே, தலை - முதலவரென்பது பதம்.

**(பொ.)** துக்கம் நிலையாய் உள்ளதென்று பயந்து துறந்தார் சீவர்களைத் துன்பஞ்செய்யாது கருணை நிறைந்தோனே முதலவன் என்பது பொழிப்பு.

**(க.)** துக்கமே என்றும் நிலையாய் உள்ளது என்றஞ்சி துறவு பூண்டவருள் சீவராசிகளுக்கு துக்கத்தை உண்டு செய்யாதவனே

முதலவன் என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றியுள்ள மக்களுக்கு பிறவி துக்கம், பிணிதுக்கம், மூப்பின் துக்கம், மரண துக்கமே நிலையாயுள்ளது கண்டு பயந்து இல்லந் துறந்த வருள் சீவராசிகளுக்குத் துக்கத்தை விளைவிக்காத கருணை மிகுத்தோன் எவனோ அவனே துறந்தோருள் தலைவனாவன் என்பது விரிவு

**6. கொல்லாமெ மேற்கொண் டொழுகுவான் வாழ் நாண்மேற்**
**செல்லா துயிருண்ணுங் கூற்று.**

**(ப.)** கொல்லாமெ -ஒருயிரையும் வதையாச்செயலை, மேற்கொண்பொழுகுவான் - முக்கியமாகக் கருதிநடப்போன், வாழ்நாண்மேன் - சுகமாய வாழ்க்கை தினத்து, துயிருண்ணுங்கூற்று - மரணத்துக் கேதுவாய துன்பங்கள், செல்லா - நடவாது என்பது பதம்.

**(பொ.)** ஒருயிரையும் வதையாச் செயலை முக்கியமாகக் கருதி நடப்போன் சுகவாழ்க்கை தினத்து மரணத்துக் கேதுவாய துன்பங்கள் நடவாது என்பது பொழிப்பு

**(க.)** சீவகாருண்ய முதிர்ந்து ஒருயிரினையுந் துன்பஞ் செய்யாதவனது வாழ்க்கையில் மரணத்துக்கேதுவாய யாதாமோர் துன்பமும் அணுகாது என்பது கருத்து.

**(வி.)** மனிதனது வாழ்நாளில் யாதாமோர் சீவப்பிராணிகளையுந் துன்பஞ்செய்யாது அவைகளின் மீது கருணைவைத்து காப்பானாயின் தனக்கு மரணத்துக்கு ஒப்பாய துன்பங்கள் யாதும் அணுகாது என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் பிரப்பு நீர்வையகத்துப்பல்லுயிர்கட் கெல்லாம், இரப்பாரில் வள்ளல்களுமில்லை - இரப்பவர், இம்மெப்புகழுமினிச்செல் கதிப்பயனும், தம் மெத் தலைப்படுத்தலால்" என்னும் சருவ உயிர்களின் மீதும் இரக்கமுற்றோருக்கு இம்மெய்யிற் புகழும் இனிசெல்லும் நற்கதியின் பயனும் உண்டாம் என்பது கொண்டு ஒரு உயிரையும் வதையாதோன் தன்னுயிர்த் துன்பம் அடையான் என்பது விரிவு.

**7. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறி**
**தின்னுயிர் நீக்கும் வினை.**

**(ப.)** தன்னுயிர் - தனதுயிர், நீப்பினும் - நீங்குங்காலமாயினும், பிறிதுயிர் - மற்றும் சீவப்பிராணிகளினுயிரை, நீக்கும் வினை - போக்குஞ்செயலை, தான் - தானே, செய்யற்க செய்யாதகலுகவென்பது பதம்.

**(பொ.)** தனதுயிர் நீங்குங்காலமாயினும் மற்றும் சீவப்பிராணிகளின் உயிரை போக்குஞ் செயலைத் தானே செய்யாது அகலுக என்பது பொழிப்பு

**(க.)** தன்னுயிர் நீங்கும் ஒத்தக்காலம் நேரினும் அக்காலத்தும் பிறிதோருயிரைத் தானே கொலைசெய்யலாகாது என்பது கருத்து.

**(வி.)** சில கூட்டத்தோருள் பெரியோருக்கேனும் சிறியோருக்கேனு ஓர் பிணியுண்டாயின் உயிர்போ மென்று அஞ்சிப் பிறிதுயிரினைக் கொல்லும் பேதையர்களின் செயலை உணர்ந்த பெரியோன் தன் தீவினையால் தனதுயிர் நீங்கும்படியான பிணியின் உபவத்திரவந் தோன்றியுள்ளதைத் தானேயுணர்ந்து அதற்கேதுவாய சிகிட்சை புரியாது தன்னுயிர்காக்கப் பிறிதுயிரை வதைப்பதாயின் அத்தீவினையின் பயனே மேலும் மேலுந் துன்பத்தை விளைவிக்குமாதலின் தன்னுயிர் நீங்குங்காலம் நேரினும் அன்னியப் பிராணிகளுக்குத் துன்பத்தை உண்டு செய்யலாகாது என்பது விரிவு.

**8. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்**
**கொன்றாகு மாக்கங் கடை**

**(ப.)** நன்றாகு - சகல சுகத்தையுந்தரும், மாக்கம் - செல்வமே, பெரிதெனினும் - மேலாக விளங்கினும், சான்றோர்க்குக் - சாந்தரூபிகளுக்கு, கொன்றாகு - கொல்லாவிரதமாகும், மாக்கம் - செல்வமே, கடை - நிலையாமென்பது பதம்.

**(பொ)** சகல சுகத்தையுந்தரும் செல்வமே, மேலாகவிளங்கினும் சாந்தரூபிகளுக்குக் கொல்லாவிரதமாகுஞ் செல்வமே நிலையாம்

என்பது பொழிப்பு.

**(க.)** உலக மக்களுக்கு செல்வமே பெரிதாக விளங்கினும் மேன்மக்களாம் சாந்தரூபிகளுக்குக் கொல்லாவிரதச் செல்வமே பெரிது என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் வாசஞ்செய்யும் மனுமக்கள் யாவருக்கும் செல்வமே ஆதாரமாயிருந்து விளங்குவது போல சான்றோர்களாம் மேன்மக்களுக்கு ஒருயிரையும் வதைச்செய்யா விரதச்செல்வமே பெரிதாகும் என்பது விரிவு.

**9. கொலைவினய ராகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மெ தெரிவா ரகத்து.**

**(ப.)** புலைவினையர் - மாமிஷங் கொணர்ந்து விற்போராலும், புன்மெ இன்புற புசித்து, தெரிவாரகத்து - உணர்ந்தோர் வீடுகளாலும் . கொலைவினையராகிய - கொல்லுந் தொழிலினையுடைய, மாக்கள் - மனுக்கள் தோன்றுகிறார்களென்பது பதம்.

**(பொ.)** மாமிஷங் கொணர்ந்து விற்போராலும் மாமிஷம் புசித்துணர்ந்தோர் வீடுகளாலும் கொல்லுந் தொழிலினையுடைய மனுக்கள் தோன்றுகிறார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** மாமிஷத்தைக் கொண்டுவந்து விற்பவராலும், உருசிகொண்டு அவற்றைப் புசிப்போர் வீடுகளாலும் உயிரினை வதைப்போர் உண்டாகின்றார்கள் என்பது கருத்து.

**(வி.)** வீடுகள் தோரும் மாமிஷம் புசித்து உருசிகண்ட மக்கள் தோன்றுவதினாலும் மாமிஷங் கொணர்ந்து விற்கும் மக்கள் பலர் ஏற்படுவதினாலும் கொலையையே தொழிலாகக் கொண் டொழுகு மக்கள் தோன்றுகின்றார்கள் என்பது விரிவு.

**10. உயிருடம்பி நீக்கியா ரென்பர் செயிருடம்பிற்**
**செல்லாத்தி வாழ்க்கை யவர்.**

**(ப.)** உயிருடம்பி - உயிருள்ள சீவப்பிராணிகளின், நீக்கியா - உயிரினை நீக்கினோர், ரென்பர் - என்னப்படுவோர், செயிருடம்பிற் - தோன்றியதேகத்துள், செல்லாத்தீ - மாறா துன்பத்தை, வாழ்க்கையவர் - வாழ்நாட்களென்று அடைவார்கள் என்பது பதம்.

**(பொ.)** உயிருள்ள சீவப்பிராணிகளின் உயிரினை நீக்குவோர் என்னப்படுவோர் தோன்றிய தேகத்துள் மாறா துன்பத்தை வாழ்க்கை நாளென்றும் அடைவார்களென்பது பொழிப்பு.

**(க.)** சீவப்பிராணிகளின் உயிரை நீக்குவோர் என்னப்படுவோர் எடுக்குந் தேகங்கள் தோறும் மாறா துன்புற்று வாழ்க்கைசுகங் கெட்டலைவார்கள் என்பது கருத்து.

**(வி.)** தன்னுடலில் ஊசி நுழைந்தால் உளையவும், அம்புப்பட்டால் அலறவும், உடையவன் அன்னிய சீவப்பிராணிகளின் உடல் நடுங்கவும், உள்ளம் பதரவும், நாக்கதரவும், அம்மாவென்று அலறவுந் துள்ளத்துடிக்கக் கொல்லுவானாயின் எடுக்குந் தேகத்தின் வாழ்நாட்கள் யாவிலும் தீரா துன்புற்றே துடிப்பான் என்பது விரிவு.

## 22. பொய் சொல்லாமெய்

இல்லறத்தில் வாழ்வோர் வாயினின்று எழும் வார்த்தை ஒலி மெய்யாயதும், தீங்குவிளையாததும், இன்பமாயதுமானது இம்மெய்யிற் சுகம் பெறுவதுடன் மறுமெய்யிலுஞ் சுகம் பெற்று அதிதீவரத்தில் நிருவாணமடைவது திண்ணமாதலின் இவ்விடம் வாய்மெயாம் மெய்யாய வாய்மொழியை விளக்குகின்றார்.

**1. வாய்மெ யெனப்படுவதியா தெனின்யா தொன்றுந்**
**தீமெ யிலாச் சொலல்.**

**(ப.)** வாய்மெ - நாவினால் மெய் பேசுதல், யெனப்படுவ - என்று கூறுவது, யாதெனில் - எதுவென்றால், யாதொன்றுந் - ஏதோ ருயிருக்கும், தீமெயிலாத - துன்பம் விளையாதாக, சொலல் - பேசவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** நாவினால் மெய்ப் பேசுதலென்று கூறுவது எகாவென்றால் ஏதோருயிருக்குந் துன்பம் விளையாதாகப் பேசவேண்டுமென்பது

பொழிப்பு.

**(க.)** ஏதோயிருக்குந் தீங்கினை விளைவிக்காத மொழியே தூயமொழியாம் மெய்மொழியென்றும் வாய்மெயென்றுங் கூறுவது கருத்து.

**(வி.)** மனிதன் தனது நாவினின்று எழும் மொழியால் ஒருயிரினுக்கும் யாதொரு தீங்கும் விளையாமல் மொழியும் மொழியையே மெய்ம்மொழி யென்றும் வாய்மெயென்றுங் கூறுதற்குச் சார்பாய அறநெறிச்சாரம், "காயவாய்ச்சொல்லாடல் வன்மெயுந்துன்பங்கள் ஆய்மொழுதாற்று மாற்றலும் தாய்விடத்து, வேற்றுமெ கொண்டாடா மெய்ம்மெயும் இம்மூன்றும், சாற்றுங்காற் சாலத்தலை" என்பது கண்டு வாய்மெயாந் தூயமொழியாடலே சிறப்பென்பது விரிவு.

**2. பொய்மெயும் வாய்மெ யிடத்த புரைதீர்ந்த**
**நன்மெ பயக்கு மெனின்**

**(ப.)** பொய்மெயும் - நிலையற்ற தேகியாயினும், வாய்மெயிடத்த - தூய மொரங்களால், புரைதீர்ந்த - களங்கமற்றது, மெனின் - என்பதாயின், நன்மெ - நித்திய சுப்ரதேகியாக, பயக்கு - செய்விக்குமென்பது பதம்.

**(பொ.)** நிலையற்ற தேகியாயினுந் தூய மொழிகளால் களங்கமற்ற தென்பதாயின் நித்திய சுப்ரதேகியாக செய்விக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** பொய்யாய நிலையற்ற தேகத்தை எடுத்திருந்த போதினும் தனது தூய வாய்மொழியால் களங்கமறுவானாயின் நன்மெய்யனாம் நித்தியப் பிரகாசனாக விளங்குவான் என்பது கருத்து.

**(வி.)** நின்றான், இருந்தான், கிடந்தான், தன் கேள் அலறச் சென்றான் என்னும் அநித்திய தேகத்தை உடையவனாயினும் தனது வாய்மெயாம் தூயமொழிகளால் மனமாசகலுவானாயின் என்றும் அழியா சுயம்பிரகாச தேகியாக உலாவுவான் என்பது விரிவு.

**3. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்னெஞ்சே தன்னைச் சுடும்.**

**(ப.)** தன்னெஞ்சறிவது - தன்னைத் தானே அறிவது, பொய்யற்க - மரணத்தை ஜெயித்து நித்திய சீவனாகுக, பொய்த்தபின் - மறந்தும் மரிப்பானாயின், தன்னெ என சே - மறுமெயிற் றனதுள்ளமே, தன்னைச் சுடும் - தன்னை மாறா துக்கத்திற்கு ஆளாக்கும் என்பது பதம்.

**(பொ)** தன்னைத்தான் அறிவது மரணத்தை ஜெயித்து நித்திய சீவனாகுக, மறந்தும் மரிப்பானாயின் மறுமெயில் தன்னுள்ளமே

மாறா துக்கத்திற்கு ஆளாக்கும் என்பது பொழிப்பு

**(க.)** தனது மனக்களங்கங்களைத் தானே ஆராய்ந்து அகற்றுதல் மறு பிறவியை ஜெயித்தற்கேயாம். அங்ஙனம் ஆராயாது பொய்த்துப் போவானாயின் அவனது மனமாசுகளே பிறவிகள் தோரும் மாறா துன்பத்தால் தகிக்கும் என்பது கருத்து

**(வி.)** பொய் மொழியால் இன்னின்ன தீங்குகள் விளையுமென்றும் மெய்ம்மொழியால் இன்னின்ன சுகங்கள் விளையுமென்றும் தன்னெஞ்சைத் தானே ஆராய்ந்தறிவதினால் மனமாசகன்று பொய்யற்ற நித்திய எந் தன்னெஞ்சைத் தானே ஆராய்ந்துணராமல் பொய்யனாம் மரணத்திற்குள்ளாவனேல் தீராப்பிறவியிற் சுழன்று மாறா துக்கமாம் சூடுண்டு அலைவான் என்பது விரிவு

**4. உள்ளத்தாற் பொய்யா தொழுகினுலகத்தா**

**ருள்ளத்து ளெல்லா முளன்.**

**(ப.)** உள்ளத்தாற் - மனதிலும், பொய்யாதொழுகி - பொய்யென்ப தெழாது வாழ்வோன், னுலகத்தா - உலக மக்கள், ருள்ளத்து ளெல்லா - எல்லோரிதயத்திலும், முளன் - எண்ணக்கூடியவ னாவனென்பது பதம்.

**(பொ.)** தன் மனதிலும் பொய் என்பது எழாது வாழ்வோன் உலக மக்கள் எல்லோரிதயத்திலும் எண்ணக்கூடியவனாவன் என்பது

பொழிப்பு.

**(க.)** தன் மனதிலும் பொய்யென்பது எழாது வாழ்பவன் உலகத்தோரால் மெய்யனென்று கொண்டாடப்படுவதுடன் அவரவர்கள் உள்ளத்திலும் நிலைத்திருப்பான் என்பது கருத்து.

**(வி.)** மனிதன் தனது உள்ளத்திலும் பொய்யென்பதை எழவிடாது காத்துக் கொள்ளுவானாயின் அவனை உலகத்தோர் பொய் சொல்லாப் பெரியோனென்று கொண்டாடுவதுடன் தங்களுக்குள் பொய்மொழி எழுங்காலெல்லாம் அம்மெய்யனைத் தங்கள் தங்கள் உள்ளங்களிற் சிந்தித்து மகிழ்வார்கள் என்பது விரிவு.

**5. மனத்தொடு வாய்மெ மொழியிற் றவத்தொடு**
**தானஞ் செய்வாரிற் றலை.**

**(ப.)** மனத்தோடு - தனதுள்ளமறிய, வாய்மெ மொழியிற் - நாவினால் மெய்ப்பேசுவோன், றவத்தோடு - நற்சாதனத்துடன், தானஞ்செய்வாரிற் - தருமஞ் செய்வோர்களிலும், தலை - முதல்வனாவனென்பது பதம்.

**(பொ)** தன்னுள்ளம் அறிய நாவினால் மெய்பேசுவோன் நற்சாதனத்துடன் தன்மஞ்செய்வோர்களிலும் முதல்வனாவன் என்பது பொழிப்பு

**(க.)** நற்சாதனம் புரிவோரிலும் தருமஞ் செய்வோரிலும் தன் மனதாற நாவினால் மெய்ப்பேசுவோனே பெரியோன் என்பது கருத்து.

**(வி.)** நற்சாதனமாம் தவத்தில் ஒழுகுவோரிலும், தானமாம் வரையறக் கொடுப்போரினும் தன் மனமாற நாவினால் மெய்யினையே பேசுவோன் எவனோ அவனே மேற்கூறிய இருவருக்கும் முதல்வனா

**6. பொய்யா மெயன்ன புகழில்லை யெய்யாமெ**
**யெல்லா வறமுந் தரும்**

**(ப.)** பொய்யாமெ - பொய்ப் பேசாதவனென, யன்ன - விளங்கினும், புகழில்லை - கீர்த்தியில்லை, யெய்யாமெ - பொய்மொழிகூறி மற்றவனைக் கெடுக்காதிருப்பதே யெல்லாவறமுந் - சகல தன்மங்களையும் தரும் - கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** பொய்ப்பேசாதவனென விளங்கினும் கீர்த்தியில்லை பொய்ம்மொழி கூறி மற்றவனைக் கெடுக்காதிருப்பதே சகல தன்மங்களையுங் கொடுக்கும் என்பது பொழிப்பு

**(க.)** நாவினாற் பொய்ப்பேசாதவனென விளங்கினுங் கீர்த்தியில்லை. மற்றவனைப் பொய்ச்சொல்லிக் கெடுக்காமலிப்பதே

கீர்த்தியாதலின் அஃது சகலதன்மங்களையுந் தானே கொடுக்கும் என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் இவன் பொய்ப் பேசாதவனென உலாவினுங் கீர்த்தியில்லை பொய்ம்மொழிகூறி மற்றவனுக்குக் கேடுண்டாக்காமலிருத்தலே மற்றய தன்மங்களைப் பெறுதற்கு ஆதாரமாயிருத்தலால் மற்றோர்க்குத் தீங்கிழைக்கா வாய்மெயே மேலென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் பொய்ம் மேற்கிடவாத நாவும் புறனுரையைத், தன்மேற்படாமெ தவிர்ப்பானு - மெய்ம்மேல், பிணிப்பண் பழியாமெ பெற்றபொழுதே, தணிக்கு மருந்துதலை" என்பது கொண்டு பொய்மேற்கிடவாத நாவே பெரிதென்பது விரிவு.

**7. பொய்யா மெபொய்யா மெயாற்றி னறம்பிற**
**செய்யாமெ செய்யாமெ நன்று.**

**(ப.)** பொய்யாமெ - மனதிலும் வாக்கிலும் பொய்யெழாமற் காத்து, பொய்யாமெ - மரித்தா னென்னும் பொய்த்துப் போகாது, யாற்றி - காம வெகுளி மயக்கங்களை தணித்துக்கொண்டோன், னறம்பிற - பிறருக்கு தன்மத்தை, செய்யாமெ - கொடாமலும், செய்யாமெ - போதியாதிருக்கினும், னன்று - நலமா மென்பது பதம்.

**(பொ.)** மனதிலும் வாக்கிலும் பொய்யெழாமற் காத்து மரித்தான் என்னும் பொய்த்துப்போகாது காமவெகுளி மயக்கங்களைத்

தணித்துக் கொண்டோன் பிறருக்கு தன்மங்கொடாமலும் போதியாதிருக்கினும் நலமாம் என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியருக்கு தன்மத்தைப் போதியாமலுங் கொடாமலுமிருக்கினும் பெரிதல்ல, மனதிலும் நாவிலும் பொய் எழாமற் காத்து காம வெகுளி மயக்கங்களையாற்றித் தண்மெயுற்று உண்மெய்கண்டு மரணத்தை ஜெயிப்பதே நன்றென்பது கருத்து.

**(வி).** அன்னிய மக்களுக்கு தன்மத்தைப் போதியாவிடினும், ஈயாவிடினும் பெரிதல்ல. ஒருவன் தன் மனதிலேனும் வாக்கிலேனும் பொய்யை எழவிடாமற் கார்ப்போன், உள்ளதை இல்லையென்னாதும், இல்லாததை இல்லையென்பதுந் துணிபாதலின் அவற்றை மறுத்து பொய்யை நாலிலும் மனதிலும் எழவிடாமற் தாத்து கோபாக்கினி காமாக்கினி தணிந்து ஆற்றலுறுவோனே பொய்த்தானென்னும் மரணத்தை ஜெயித்து மெய்த்தோனென்னும் உண்மெயுணர்ந்து துக்கத்தைப் போக்கிக் கொள்ளுவான் என்பது விரிவு.

**8. புறத்தூய்மெ நீரான மையு மகத்தூய்மெ**

**வாய்மெயாற் காணப் படும்.**

**(ப.)** புறத்தூய்மெ - உடலினது சுத்தம், நீரானமையும் - அப்பினா லுண்டாம், மகத்தூய்மெ - உண்மெய்யின் சுத்தமானது, வாய்மெயாற்

- நாவினாலெழூஉ மெய்ம் மொழிகளால், காணப்படும் - தோற்றப்படுமென்பது பதம்.

**(பொ.)** உடலினது சுத்தம் அப்பினாலுண்டாம், உண்மெய்யினது சுத்தமானது நாவினா லெழூஉ மெய்ம் மொழிகளால் தோற்றப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** நீரினால் உடல் சுத்தமுண்டாவதைக் காணலாம். அதுபோல் அவரவர்கள் மெய்யாய வாய்மொழிகளால் உண்மெய்யினது சுத்தத்தைக் கண்டறியலாம் என்பது கருத்து.

**(வி.)** உடலுக்கு நீரினாற் சுத்தமுண்டாவதை அனுபவத்திற் கண்டுக் கொள்ளுவதுபோல உண்மெய்யாம் அந்தர அங்கத்தின் சுத்தத்தை பொய்சொல்லா நன்மெய்யாம் வாய்மொழிகளால் அறிந்துக்கொள்ளலாம் என்பது விரிவு.

**9. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்கு**
**பொய்யா விளக்கே விளக்கு.**

**(ப.)** எல்லாவிளக்கும் - சகல வகை ஒளியும், விளக்கல்ல - ஒளியாகா, சான்றோர்க்கு - சாந்தரூபிகளுக்கு, பொய்யாவிளக்கே - என்றென்றும் அவியா வொளியே, விளக்கு - ஒளியென்பது பதம்.

**(பொ.)** சகலவகை ஒளியும் ஒளியாகா. சாந்தரூபிகளுக்கு என்றென்றும் அவியா ஒளியே ஒளியென்பது பொழிப்பு

**(க.)** சகலவகை ஒளிகளுந் தோன்றி தோன்றி கெடுவதியல்பாதலின் பொய்யகற்றிய சாந்தரூபிகளுக்கு என்றென்றுங் கெடா மெய்யொளியே ஒளி என்பது கருத்து.

**(வி.)** உலகத்தோர் ஏற்றிவரும் விளக்காகிய ஒளிகள் யாவும் ஏற்றயேற்ற அவிந்து போவதே சுவாபீகமாயினும் சாந்தரூபிகளாம் மேன்மக்களுக்கு பொய்யாது நின்ற என்றுங்கெடா மெய்விளக்கே சகலருள்ளத்திலும் உள்ள அஞ்ஞான இருளை அகற்றும் விளக்காக ஒளிருகின்றபடியால் அதனை பொய்யாவிளக்கே விளக்கென்று கூறிய விரிவு.

**10. யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தோன்றும்**
**வாய்மெயி னல்ல பிற.**

**(ப.)** யாமெய்யாக் - யாமநுபவத்தில், கண்ட வற்று - பார்த்தவைகளில், ளில்லை - யாதொன்றுமில்லை, யெனைத் தோன்றும் - எனக்குக் காணப்படுவதுயாதெனில், வாய்மெயி - மெய்யைக் கண்டடைவதைவிட, எல்லா பிற - வேறு நன்றென்பதில்லையென்பது பதம்

**(பொ.)** யாம் அனுபவத்தில் பார்த்தவைகளில் யாதொன்றுமில்லை. எனக்குக் காணப்படுவது யாதெனில் மெய்யைக் கண்டடைவதைவிட வேறுநன்றென்பதில்லை என்பது பொழிப்பு.

**(க..)** நாம் நமதனுபவத்திற் கண்டுவருபவற்றுள் யாதொன்றையுங் காணோம். எமதநுபவத்திற் கண்டும் அனுபவித்தும் வரும் நான்கு வாய்மெ கண்டு தெளிவதினும் வேறொன்றுமில்லை என்பது கருத்து.

**(வி.)** யாம் உலகத்திற் கண்டுவருந்தோற்றங்களில் யாதொன்றையும் காணோம். எனதநுபவத்திலும் பார்வையாலுங் கண்ட மெய்கள் யாதெனில் மாறிமாறி பிறப்பது மெய், பிணி தோன்றுவது மெய், மூப்படைவது மெய், மரணமுண்டாதல் மெய் எனக் கண்டு தெளிந்து கடிகைக்குக் கடிகை தோற்றி அழியும் பொய்யினை அகற்றி பிறப்பது துக்கம், பிணி துக்கம், மூப்பு துக்கம், மரணதுக்கம் உண்டாவது மெய்யேயென்றுணர்ந்து அத்துக்கத்தையும், அத்துக்க உற்பவத்தையும், அத்துக்க நிவாரணமார்க்கத்தையும், துக்க நிவாரணத்தையுங் கண்டுதெளிய வேண்டியதே அநுபவமும், நோக்கமுமே ஆதலின் நான்கு வாய்மெய்க்கு மேலாயது வேறில்லை என்பது விரிவு.

## 23. புறங்கூறாமெய்

இல்லறமக்கள் பஞ்சபாதகங்களை அகற்றி வாழ்க்கைப் பெறுவதில் தம்மெ ஒத்த மக்களைக் காணுமிடத்துப் புகழ்தலுங் காணாவிடத்து இகழ்தலுமாகியப் புறங்கூறுவோனது செயலை இவ்விடம் விளக்குகின்றார்.

**1. அறங்கூறா னல்ல செயினு மொருவன்**

**புறங்கூறா னென்ற லினிது.**

**(ப.)** அறங்கூறா - தன்மத்தைப் போதியாது, நல்லசெயினு - சுகக் கிருத்தியங்களைச் செய்யினும், மொருவன் - மற்றொருவனை, புறங்கூறா - காணாவிடத் திகழாதவன், னென்ற லினிது - என்று கூறத்தகுவது யினிதாமென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தைப் போதியாது சுகக்கிருத்தியங்களைச் செய்யினும் மற்றொருவனைக் காணாவிடத்து இகழாதவன் என்று கூறத்தகுவது இனிதாம் என்பது பொழிப்பு.

**(க.)** நற்செயலுடையோனாயினும் நல்லறங் கூறாதவனாயினும் குற்றமில்லை. உலகத்தோரால் இவன் மற்றவரைப் புறம்பில் இகழாதவனெனக் கூறு

மொழிகேட்டலே இனியதாம் என்பது கருத்து.

**(வி.)** ஒருவன் செயல்கள் நல்லதாயிருப்பினும், மற்றவர்களுக்கு அறிநெறியைக் கூறாதவனாயினுங் குற்றமில்லை. உலகத்தோரால்

இவன் மற்றவர்களைக் காணாவிடத்துப் புறங்கூறி தீங்கிழைப்பவன் என்று கூறாது வாழ்தலே இனியதென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் முன்னின்றொருவன் முகத்தினும் வாயினும், கன்னின்றுருகக் கலந்துரைத்துப் - பின்னின் றிழித்துரைக்குஞ் சான்றோரை யஞ்சியே தேவர், விழித்திமையா நின்றநிலை" என்பது கொண்டு கண்ணிற் கண்டவிடத்து களிப்புடன் பேசி காணாவிடத்து இழியது கூறலாகாது என்பது விரிவு.

**2. அறனழி யல்லவை செய்தலிற் றீதே**

**புறனழிப் பொய்த்து நகை.**

**(ப.)** அறனழீஇ - தன்மவழி கெட்டு, யல்லவை - மாறுபட, செய்தலிற் - செய்வதினும், றீதே - கொடிது யாதெனில், புறனழீஇ - காணா தகன்றோனை யிழிவு கூறி, பொய்த்து - கெட, நகை சிரிப்பதுவேயாம்.

**(பொ.)** தன்மவழிகெட்டு மாறுபடச் செய்வதினும் கொடிது யாதெனில் காணாது அகன்றோனை இழிவுகூறி கெடச் சிரிப்பதுவேயாம்.

**(க.)** தன்மஞ்செய்வோர் குணத்தைக் கெடுத்து மாறுபடுத்துவதினுங் கொடிது யாதெனில் கண்டவிடத்து ஒருவனிடம் இனியபேசி

அவனைக் காணாவிடத்து இழிவுகூறி கொடுப்பதே கொடிது என்பது கருத்து.

**(வி.)** ஒருவன் தன்மச் சிந்தையினின்று ஆதுலர்களுக்கு அன்னமளிப்பதையும் ஆபத்துக்குதவுவதையுந் தடுத்துக் கெடுப்பதினுங் கொடிது யாதெனில் ஒருவனை எதிரிற் கண்டவிடத்து மனமகிழப்பேசி, அவன் புறம்பே சென்றபின் அவனைப் பழித்தும் இழிவுகூறியுங்கெடுத்தலே கொடிது என்பது விரிவு.

**3. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத**

**லறங்கூறு மாக்கந் தரும்.**

**(ப.)** புறங்கூறி - ஒருவனை காணாவிடத்திழிவுகூறி, பொய்த்துயிர் - கெட்டோனே வுயிர்பெற்று, வாழ்தலிற் - வாழ்தலினும், சாத - மரித்துவிடுவானாயின், லறங்கூறு - தன்மத்தைப் போதிக்கும், மாக்கந்தரும் - செல்வத்தைப் பெறுவானென்பது பதம்.

**(பொ.)** ஒருவனைக் காணாவிடத்து இழிவுகூறி கெட்டோன் என உயிர்பெற்று வாழ்தலினும் மரித்துவிடுவானாயின் தன்மத்தைப் போதிக்கும் செல்வத்தைப் பெறுவான் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவரைப் பழித்தும் இழிவு கூறியும்வருஞ் செயலைக் காண்போர் இவனை கொடியோனென்றுகூற உடலெடுத்துவாழ்தலினும் அக்கொடு மொழிக்கு நாணுற்று மரித்து

விடுவானாயின் தன்மத்தைப் போதிப்போனுக்கு ஒப்பாய பலனை அடைவான் என்பது கருத்து.

**(வி.)** ஒருவனைக் கண்டவிடத்து முகமலரப்பேசி அவனைக் காணாவிடத்து பழித்தும் இழித்தும் பேசிவருபவனை மற்றோர் உயிரற்றக் கொடியனென்று கூறக்கேட்டு அதனால் உணர்வு தோன்றி புறங்கூறலற்று மரிப்பானாயின் நல்லறத்தினின்று நல்லறம் புரிந்தோன் அடையும் பயனை யடைவான் என்பது விரிவு

**4. கண்ணன்று கண்ணறச் சொல்வினுஞ் சொல்லறது**
**மூன்னின்று பின்னோக்காச் சொல்.**

**(ப.)** கண்ணின்று - கண்டவிடத்தும், கண்ணறச் - காணாவிடத்தும், சொல்லினும் - சொல்லக்கூடா மொழியை, சொல்லற்க - சொல்லலாகாது, முன்னின்று - முகமுகமாக, சொல் - பகர்ந்தமொழியை, பின்னோக்கா - காணாவிடத்துப் பேசலாகாதென்பது பதம்.

**(பொ.)** கண்டவிடத்துங் காணாவிடத்தும் சொல்லக்கூடாமொழியைச் சொல்லலாகாது. முகமுகமாகப் பகர்ந்தமொழியைக் காணாவிடத்துப் பேசவாகாது என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவரைக் கண்ணினாற்கண்டு பேசுமிடத்து அவரைக் காணாதிருக்குங்காலத்தும் பேசக்கூடாத வார்த்தைகளைப் பேசலாகாது. அதனினும் முன்னில் வோர் வார்த்தையைப் பேசிவிட்டு அவர் சென்ற பின் கனக்குறைவாய வேறொரு வார்த்தையைப் பேசலாகாது என்பது கருத்து.

**(வி.)** ஒருவரைக்கண்டு பேசுமிடத்திலேனும் அவரைக் காணாவிடத் தேனுமோர் தீங்கினை விளைவிக்கும் வார்த்தைகளைப் பேசலாகாது. அதனினுங் கண்டவிடத்து இனியமொழிகளைக் கூறிவிட்டு காணாவிடத்துப் புறங்கூறி இழிவடையச்செய்யு மொழிகளைப் பேசலாகாது என்பது விரிவு.

**5. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மெ புறஞ்சொல்லும்**
**புன்மெயாற் காணப் படும்.**

**(ப.)** அறஞ் சொல்லு - தன்மத்தைப் புகட்டும், நெஞ்சத்தா - உள்ளத்தை யுடையவனது, னன்மெய் - சுயவுருவம், புறஞ்சொல்லும் - அன்னியனைக் காணாவிடத்திழிவுகூறும், புன்மெயாற் - பொறாமெயால், காணப்படும் - விளங்கிப்போ மென்பது பதம்.

**(பொ.)** தன்மத்தைப் புகட்டும் உள்ளத்தை உடையவனது சுயவுருவம் அன்னியனைக் காணாவிடத்து இழிவு கூறும் பொறாமெய்யால் விளங்கிப்போம் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவன் சத்திய தன்மத்தைப் போதித்தபோதினும் மற்றவர்களைப் புறம்பி இகழ்வானாயின் அவன் அசத்தியனே என்பது கருத்து.

**(வி.)** ஒருவன் நீதிநெறி வாய்மெகளைத் தெள்ளறப் போதிப்பவனாகக் காணப்படினும் அவன் மற்றவர்களைக் காணாவிடத்து அவர்கள் மீது இல்லாபழி மொழிந்தும், இழிவு கூறியுங், கேடுண்டாக்கத்தக்க ஏதுக்களைச் செய்துவிடுவானாயின் நீதிநெறி வாய்மெய்க் குரிய போதகனாகான் என்பது விரிவு.

**6. பிறன்பழி காறுவான் றன்பழி யுள்ளுந்**
**திறன்றெர்ந்து கூறப் படும்.**

**(ப.)** பிறன் - அன்னியனை, பழி கூறுவான் - குறை சொல்லுபவன், றன்பழி தனது குறைகளை, யுள்ளுந் - தன்னிற்றானே, திறன்றெரிந்து - தேற வுணர்ந்து, கூறப்படும் - சொல்லுகவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** அன்னியனைக் குறைச் சொல்லுபவன் தனது குறைகளை தன்னிற்றானே தேற உணர்ந்து சொல்லவேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியனது குற்றத்தைப் புறங்கூற ஆரம்பிப்பவன் தன்னுடையக் குற்றங்களை முற்றும் ஆய்ந்து கூறல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** தனக்குள்ள பொய், களவு, கள்ளருந்தல், விபசாரம், கொலை முதலிய பழிபாதகங்களைத் தன்னில் தானே உணர்ந்தவைகளை அகற்றாது பிறனது பொய்யையுங் களவையுங் கள்ளருந்தலையும் விபச்சாரத்தையுங் கொலையையும் புறங்கூறித் திரிதல் பயனில்லை என்பது விரிவு.

**7. பகச்சொல்லிக் கேளிர் பிரிப்பர் நகச்சொல்லி**

**நட்பாடறேற்றா தவர்.**

**(ப.)** பகச்சொல்லி - ஒருவருக்கொருவரை பிரிக்கத்தக்க பழிகூறி, கேளிர் - நேயத்தை, பிரிப்பர் - பிரித்துவிடுவார்கள், நகச்சொல்லி - எதிரிகளின் மனமகிழப்பேசி, நட்பாட - நேசிக்க, றேற்றாதவர் - தகுதியற்றவர்களென்பது பதம்.

**(பொ.)** ஒருவருக்கொருவரைப் பிரிக்கத்தக்கப் பழிகூறி நேயத்தைப் பிரித்துவிடுவார்கள், எதிரிகளின் மனமகிழப்பேசி நேசிக்கத்தகுதியற்றவர்கள் என்பது பொழிப்பு

**(க.)** எதிரிகளின் மனதை மகிழச்செய்து, நேசிக்கத் தகுதியற்றவர்கள் ஒருவருக்கொருவரைக் காணாவிடத்துப் புறங்கூறி அவர்களது நேயத்தைப் பிரித்துவிடுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** எதிரியுடன் இனியமொழி கூறி இதமகிழச்செய்து நேசிக்கத் தகுதியும் விவேகமும் அற்றவன் அவனது அன்புக்குரிய நேயனைப்

பிரிக்கத்தக்கப் புறங்கூறி அவனைப்போல் தன்னை நேசிக்கும் பழிவழி தேடுவார் என்பது விரிவு.

**8. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா**

**ரென்னைகோ லேதிலார் மாட்டு.**

**(ப.)** துன்னியார் - தனதுரவின் முறையார்களது, குற்றமுந் குறைகளையே, தூன்று - புறங்கூறும், மரபினா - உரவினன், லேதிலார்மாட்டு - அன்னியரது குற்றங்களை, ரென்னகோ எவ்வகை சொல்லுவானோவென்பது பதம்.

**(பொ.)** தனது உரவின் முறையோர்களது குற்றங்களையே புறங்கூறும் உரவினன் அன்னியர் குற்றங்களை எவ்வகை சொல்லுவானே என்பது பொழிப்பு

**(க.)** தனது சுற்றத்தோரது குறைகளையே புறம்பிற் கூறித்திரிபவன் ஏனையோர்க்குள்ள குறைகளை இன்னுமின்னும் எடுத்துக்கூறுவான் என்பது கருத்து

**(வி.)** தனது சுற்றத்தோரது குறைகள் யாவுந் தன்னைச்சார்ந்ததென்று உள்ளுணராது அவற்றைப் புறம்பே கூறித்திரிபவன் அயலாரது குற்றங்களை மேலுமேலுங் கூசாது கூறித்திரிவான் என்பது விரிவு.

**9. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்**

**புன்சொ லுரைப்பான் பொறை.**

**(ப.)** அறனோக்கி - தன்மநெறிகளையே ஆதாரமாக நோக்கி, யாற்றுங்கொல் - ஆறுதலடையும், வையம் - உலகமானது, புறனோக்கி - அன்னியர்மீது புன்சொலுரைப்பான் - தீங்குரைப்போனை, பொறை - பொறுக்காதென்பது பதம்.

**(பொ.)** தன்மநெறிகளையே ஆதாரமாக நோக்கி ஆறுதலடையும் உலகமானது அன்னியர்மீது தீங்குரைப்போனை பொறுக்காது என்பது பதம்.

**(க.)** அறநெறியினின்று ஆறுதலுற்று வாழ்கவேண்டிய வையகத்தோர் புறங்கூறித்திரிவோன் செயலைப் பொறுக்கார் என்பது கருத்து.

**(வி.)** வாழ்க்கைத்துணைநலம் கோறி அறநெறிவழுவாது வாழ்கவேண்டிய விருப்பமுடைய வையகத்தோர் புறங்கூறித்திரியும் பேதையின் புன்செயலைப் பொறுக்கார் என்பது விரிவு.

**10. ஏதிலார் குற்றம் போற் றங்குற்றங் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னு முயிர்க்கு.**

**(ப.)** ஏதிலார் - தனக்கு அன்னியமானவர்களது, குற்றம் போற் - குறைகளைக் காண்பதுபோல், றங்குற்றங் - தனது குறைகளை, காண்கிற் - கண்டுணர்ந்துக் கொள்ளுவானாயின், பின் - பிறகு

றீதுண்டோ - வேறு தீங்குகளுண்டோ மன்னுமுயிர்க்கு - அன்னிய சீவப்பிராணிகளுக்கு என்பது பதம்.

**(பொ.)** தனக்கு அன்னியமானவர்களது குறைகளைக் காண்பதுபோல் தனது குறைகளைக் கண்டுணர்ந்துக்கொள்ளுவானாயின் பிறகு வேறு தீங்குகளுண்டோ அன்னிய சீவப்பிராணிகளுக்கு என்பது பொழிப்பு.

**(க.)** அன்னியனிடம் உண்டாகுங் குற்றங்களைக் கண்டுகொள்வதுபோல தன்னுடைய குற்றங்களையும் உணர்ந்து அடங்குவானாயின் பிறவுயிர்களுக்கு யாதொரு தீங்கு உண்டாகாம் என்பது கருத்து.

**(வி.)** உலகத்துள் வாழும் மக்களுள் அவன் பொய்யன், இவன் கள்ளன் உவன் குடியனென அவர்களது செயல்களை உணர்ந்து அவற்றைத் தீயச்செயல்கள் என்றுணர்ந்து புறங்கூறுவோன் தனக்குள்ளத் தீயச்செயல்களைக் கொடிது என்றுணர்ந்து அடங்குவானாயின் அன்னியப் பிராணிகளுக்கு யாதொரு துக்கமும் அணுகாது என்பது விரிவு.

## 24. பயனில் சொல்லாமெய்

மக்களுள் புறங்கூறா வகையை விளக்கியும் நாவினின்று எழும் சொற்களில் மற்றோருக்குப் பயனைத் தரத்தக்க மொழிகளைப்

பேசவேண்டுமே அன்றி பயனற்ற மொழிகளைப் பேசுவதால் பொய்மொழி, இழிமொழி, கடுமொழி முதலிய தோன்றி தன்னை துன்பத்திற்கு ஆளாக்குவதுடன் எதிரிக்கு ஓர் பயனின்றி துன்பத்தை விளைவிக்குமாதலின் எக்காலும் பயனற்ற மொழிகளைப் பேசி வீண்காலம் போக்காது எதிரிக்குந் தனக்கும் பயனைத் தரக்கூடிய அறநெறிகளைப் பேச வேண்டியதே இல்லறவாழ்க்கைக்கு இனிதென் றுணர்ந்த பெரியோன் பயனிலா மொழிகளைப் பேசலாகாதெனக் கூறியுள்ளார்.

**1. பல்லார் முநியப் பயனில சொல்லுவா**
**னெல்லாரு மெள்ளப் படும்.**

**(ப.)** பல்லார் - பலகலை யாய்ந்த பெரியோர், முநிய - அருவெறுக்க பயனில் - அப்பிரயோசன மொழிகளை, சொல்லுவா - பேசுவோனை, னெல்லாரு - சகலரும், மெள்ளப்படும் - வெறுப்பார்களென்பது பதம்.

**(பொ.)** பலகலை ஆய்ந்த பெரியோர் அருவெறுக்க அப்பிரயோசன மொழிகளைப் பேசுவோனை சகலரும் வெறுப்பார்கள் என்பது பொழிப்பு,

**(க)** நீதிநெறி வாய்மெகளை உணர்ந்த விவேக மிகுத்தோர்முன் அருவெறுக்கு மொழிகளைப் பேசுவோனை சகலரும் இகழ்வார்கள் என்பது கருத்து.

**(வி.)** பலகலைகளை ஆய்ந்து விவேகமிகுத்துள்ள மேன்மக்கள் முன் சென்று அவர்கள் அருவெறுக்கத்தக்கப் பயனிலா மொழிகளைப் பேசுவோரை மற்றுமுள்ள சகலரும் வெறுப்பதுடன் தானுங்கெடுவான் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "தண்டாமம் பொய்வெகுளி பொய்ச்சாப் பழுக்காமெயைந்தே கெடுவார்க்கியல்பென்ப - பண்பாளா, யீதலறிதலியற்றுதலின் சொற்கற், றாய்தலறிவார் தொழில்" என்பதுகொண்டு முன்பின் ஆய்ந்து பயனுள மொழி கூறவேண்டும் என்பதே விரிவு.

## 2. பயனில் பல்லோர்முற் சொல்ல நயனில்
## நட்டார்கட் செய்தலிற் றீது.

**(ப.)** பயனில - அப்பிரயோசன மொழிகளை, பல்லோர்முற் - பலகலை யாய்ந்த நல்லோர்முன், சொல்ல - மொழிதலானது, நட்டார்கட் - தன்னைக் காப்பாற்றியவர்களுக்கு, நயனில் - கொடியச்செயலை, செய்தலிற் - செய்தலினும், றீது - கொடிது யென்பது பதம்.

**(பொ.)** அப்பிரயோசன மொழிகளை பலகலை ஆய்ந்த நல்லோர்முன் மொழிதலானது தன்னைக் காப்பாற்றியவர்களுக்குக் கொடியச்செயலை செய்வதினுங் கொடிது என்பது பொழிப்பு

**(க.)** கலை நூற்கள் யாவையும் நன்குணர்ந்து அடங்கியுள்ள மேன் மக்களிடஞ் சென்று பயனிலா சொற்களைப் பேசுதல், தன்னைக்

காப்பாற்றியவர்களுக்குக் கேடுவிளைவிப்பதினும் அஃது கொடிது என்பது கருத்து.

**(வி.)** இம்மொழி கூறலாங், கூறலாகாது என்று கலை நூற்களை ஆய்ந்து அடங்கிய அறிவு மிகுத்தோர் முன்னிலையிற் சென்று பேசக்கூடா மொழிகளைப்பேசி அவர்களது மனங்குன்றச்செய்தலானது தன்னைக் காப்பாற்றி நிலை நிறுத்தியவர்களுக்குக் கேட்டினை உண்டு செய்வதினுங் கொடிது என்பது விரிவு.

**3. நயனில் னென்பது சொல்லும் பயனில்**
**பாரித்து ரைக்கு முரை.**

**(ப.)** பயனில - பயனற்ற மொழிகளை, பாரித்துரைக்கு - பெரிதென் றெண்ணிப் பேசும், முரை - கருத்தானது, நயனில் - நல்லவனன்று, னென்பது - என்று கூறும், சொல்லும் - மொழியெழூஉமென்பது பதம்.

**(பொ.)** பயனற்ற மொழிகளை பெரிதென்று எண்ணிப் பேசுங் கருத்தானது நல்லவனன்று என்று கூறும் மொழி யெழூஉம் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவருக்கும் பயன்படா வார்த்தைகளை வீண்பேசித்திரிவோனை உலக மக்கள் நல்லவனென்று கூறார் என்பது கருத்து.

**(வி.)** தன்னை சிறப்பித்துக் கொள்ளும் மொழிகளையும், நிந்தை மொழிகளையும், பொய்மொழிகளையும் வீணே பிதற்றித்திரிவோனை உலகமாக்கள் நல்லவன் அன்றென்றே கூறுவார்களென்பது நிலையாதலின் மறந்தும் பயனற்ற மொழிகளைப் பேசலாகாதென்பது விரிவு.

**4. நயன்சாரா நன்மெயி னீக்கும் பயன்சாராப்**
**பண்பில் சொற் பல்லா ரகத்து.**

**(ப.)** நயன்சாரா - நற்செயலில்லாதோரை, நன்மெயினீக்கும் - நற்செய் லுள்ளோர் நீக்குவதைப் போல, பயன்சாரா - யாதொரு பயனையுந் தராமொழிகளை, பண்பிற்சொற் - இசைபெறக் கூறுவதாயினும், பல்லாரகத்து - பலகலை யாய்ந்தோரில்லத்தி லேற்கார்களென்பது பதம்

**(பொ.)** நற்செயலில்லாதோரை நற்செயலுள்ளோர் நீக்குவதைப்போல் யாதொரு பயனையுந் தராமொழிகளை இசைபெறக் கூறுவதாயினும் பலகலை ஆய்ந்தோர் இல்லத்தில் ஏற்கார்கள் என்பது பொழிப்பு

**(க.)** கொடியச்செய லுள்ளோரை நல்லோர்கள் அகற்றிவிடுவதுபோல் பயனற்ற மொழிகளை பண்ணிசையுடன்

கூறுவதாயினும் பலகலைகளை ஆய்ந்தோர் அகத்துள் அவற்றை ஏற்கார்கள் என்பது கருத்து.

**(வி.)** துற்கிருத்தியமுடையோரை துட்டர்கள் என்று நல்லோர் அகற்றி விடுவது போலயாதாமொரு பயனையுந்தரா வீண்மொழிகளைப் பாட்டுப்பாடிக் கூத்தாடிப் பகர்ந்தபோதினும் பலகலை ஆய்ந்தோர் அவர்களை அகற்றுவதுடன் அவர்கள் இல்லத்தோர்களும் அகற்றி இழிவார்கள் என்பது விரிவு.

**5. சீர்மெ சிறப்பொடு நீங்கும் பயனில**

**தீரமெ யுடையார் சொலின்.**

**(ப.)** நீர்மெ - தூயதேகத்தை, யுடையார் - அடைந்தவர்கள், பயனில் - யாது பயனுமற்ற மொழிகளை, சொலின் - சொல்வதாயின் நீர்வர். உருவலட்சணம், சிறப்பொடு - கீர்த்தியுடன், நீங்கும் - அகன்றுப்போமென்பது பதம்

**(பொ.)** தூயதேகத்தை அடைந்தவர்கள் யாது பயனுமற்ற மொழிகளைச் சொல்லுவதாயின் உருவலட்சணங் கீர்த்தியுடன் அகன்றுப்போம் என்பது பொழிப்பு

**(க.)** சகல களங்கங்களுமற்ற சுத்ததேகிகள் என்போர் யாதொரு பயனையுந் கார வீண்மொழிகளைப் பேசுவார்களாயின் அவர்களது தேக்காந்தியுமற்று உள்ளக்கீர்த்தியும் போம் என்பது கருத்து.

**(வி.)** பொய்யாமெய் , கொல்லாமெய் , கள்ளாமெய் , கள்ளருந்தாமெய், பிறன்தார நயவாமெயாம் சீர்மெயுற்று சுகதேகியாக உலாவுவோனாயினும் எனையோரிடம் பயனற்ற மொழிகளைப் பேசித் திரிவானாயின் அவனது சீர்மெயாந் தூயதேக ஒளிகுன்றி உள்ளக் கீர்த்தியும் அகன்றுப்போம் என்பது விரிவு

**6. பயனில் சொல் பாராட்டு வானை மகனெனல்**

**மக்கட் பதடி யெனல்.**

**(ப.)** பயனில் - ஏதொரு பயனுமற்ற சொல் - மொழிகளை, பாராட்டுவானை பேசித்திரிவோனை, மகனெனல் - புத்திரனெனக் கூறுதலிலும், மக்கட் - அவனை மனுக்களுள், பதடியெனல் - பதரெனக் கூறலாமென்பது பதம்.

**(பொ.)** ஏதொரு பயனுமற்ற மொழிகளைப் பேசித் திரிவோனை புத்திரனெனக் கூறுதலிலும் அவனை மனுக்களுள் பதரெனக் கூறலாம் என்பது பொழிப்பு

**(க.)** தனக்கும் பிறருக்கும் ஏதொரு பயனையுந்தாரா வீண்மொழிகளைப் பேசித்திரிவோனை பதருக்கு ஒப்பானவனெனக் கூறலாம் என்பது கருத்து.

**(வி.)** உலக மக்களுக்குந் தனக்கும் பயனைத் தரக்கூடிய கல்வி விருத்தியைப் பற்றியும், வித்தியா விருத்தியைப்பற்றியும் ஞானவிருத்தியைப்பற்றியும், நீதியின் விருத்தியைப் பற்றியும் பேசிப் பயனை உண்டு செய்யாது தானுமறியா தன் தந்தையும் அறியாப் பொய் மொழிகளையும் வீண்மொழிகளையும் பிதற்றித்திரிவோனைப் பதரென்று கூறலாம் என்பது விரிவு.

**7. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்**

**பயனில சொல்லாமெ நன்று.**

**(ப)** நயனில் - இனிதற்ற, சொல்லினும் - மொழிகளைப் பேசினும், சொல்லுக - பேசலாம், சான்றோர் - பெரியோர் முன், பயனில் - யாதொரு பயனுமற்ற மொழிகளை, சொல்லாமெனன்று - பேசாதிருப்பதே நல்லதென்பது பதம்.

**(பொ.)** இனிதற்ற மொழிகளைப் பேசினும் பேசலாம் பெரியோர்முன் யாதொரு பயனுமற்ற மொழிகளைப் பேசாதிருப்பதே நல்லது என்பது பொழிப்பு

**(க.)** பலர் செவிகளுக்கும் இனியதான மொழிகளைப் பேசித்திரியினுந் திரியலாம் கற்றுணர்ந்து அடங்கியுள்ள மேன்மக்களிடத்து யாதொரு பயனுமற்ற
மொழிகளைப் பேசலாகாது என்பது கருத்து.

**(வி.)** உலக மக்கள் நன்கு வாசித்தவன் நன்றாய் பேசுகிறான் மிக்க மிருதுவாய மொழிகளை உடையவனெனக் கூறும்படியாகப் பேசித்திரியினுந் திரியலாம் கற்று ஆய்ந்தடங்கிய மேன்மக்களாம் சான்றோர்களிடத்து யாதொரு பயனையுந்தாரா வீண்மொழிகளைப் பேசலாகாது என்பது விரிவு.

**8. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்**

**பெரும்பய னில்லாத சொல்**

**(ப.)** அரும் - அரியதாய, பயனாயு - பலனை யாராய்ந்து திரியும், மறிவினார் ரும்பய - யாதொரு சிறந்த பலனும் , னில்லாத சொல் இல்லாத மொழிகளை, சொல்லார் - வீணிற் பேசார்களென்பது பதம்.

**(பொ)** அரியதாய பலனை ஆராய்ந்து திரியும் விவேகிகள் யாதொரு சிறந்த பலனுமில்லாத மொழிகளை வீணிற் பேசார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** உலகத்திற் சிறந்தவை எவையென ஆராய்ந்துணரும் விவேகிகள் யாதொரு வீண்மொழிகளையும் பேசார்கள் என்பது கருத்து.

**(வி.)** தோற்றும் பொருட்கள் யாவும் கடிகைக்குள் கடிகை அழியும் என்றுணர்ந்து அழியாதவை எவையென ஆய்ந்து திரியும்

அறிவுள்ளவர்கள் உலக மக்களுக்கு யாதொரு பயனையுந்தாரா வீண் மொழிகளைப் பேசமாட்டார்கள் என்பது விரிவு.

### 9. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த மாசறு காட்சி யவர்.

**(ப.)** மருடீர்ந்து - அஞ்ஞான விருளினின்றகன்று மாசறு - களங்கமற , காட்சியவர் - தோன்றும்படியானவர்கள், பொருடாந்த - அழியும் பொருட்க ளென்றுணர்ந்து, பொய்ச்சாந்தும் - மறந்து மதனுடன் கலந்தும், சொல்லார் - பேசார்களென்பது பதம்

**(பொ.)** அஞ்ஞான இருளினின்று அகன்று களங்கமறத் தோன்றும் படியானவர் அழியும் பொருட்களென்று உணர்ந்து மறந்தும் அதனுடன் கலந்தும் பேசார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** மனமாசகன்று மருள் தீர்ந்த பெரியோர்கள் மறந்தும் பொருளற்ற மொழிகளைப் பேசார்கள் என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோன்றும் பொருட்கள் யாவும் அழிந்தழிந்து தோன்றுகின்றவைகள் என்றுணர்ந்து அஞ்ஞான பாசபந்தங்களை அகற்றி மனமாசு கழுவினின்ற பெரியோர்கள் மறந்தும் அழியும் பொருட்களின் வார்த்தைகளை வீணிற் பேசித்திரியார்கள் என்பது விரிவு

## 10. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க சொல்லிற் பயனிலாச் சொல்.

**(ப.)** சொல்லிற் - பேசும் வார்த்தைகளில், பயனுடைய - பலனை யடையக்கூடிய வார்த்தைகளை சொல்லுக - பேசல் வேண்டும், சொல்லிற் - பேசுமொழிகளில், பயனிலா - யாதொரு பலனுமற்ற, சொல் - மொழிகளை, சொல்லற்க - பேசலாகாதென்பது பதம்.

**(பொ.)** பேசும் வார்த்தைகளில் பலனையடையக்கூடிய வார்த்தைகளைப் பேசல் வேண்டும். பேசுமொழிகளில் யாதொரு பலனுமற்ற மொழிகளைப் பேசலாகாது என்பது பொழிப்பு.

**(க.)** மக்களுடன் பேசுங்கால் அவர்களுக்கும் தங்களுக்கும் ஓர் பலனுண்டாகத்தக்க வார்த்தைகளைப் பேசல் வேண்டும் மற்றும் பயனிலா வீண் வார்த்தைகளைப் பேசலாகாது என்பது கருத்து.

**(வி.)** எப்போதும் மக்களுடன் கலந்து ஒருவருக்கொருவர் பேசுங்கால் அவர்களுக்கும் தனக்குமோர்பலனை உண்டாக்கத்தக்க விருத்தி மொழிகளைப் பேசவேண்டுமேயன்றி பயனற்ற வீண்மொழிகளைப் பேசி காலத்தை வீணே போக்கலாகாது என்பது விரிவு

## 25. பெண்வழிச்சேரல்

இல்வாழ்க்கையை விரும்புவோர் ஓர் இல்லாளைத் தேடிக் கொள்ளுங்கால் அவள் ஒழுக்கமிகுத்த நற்குடியிற் பிறந்திருப்பாளாயின் கணவனது குடும்பத்தையே தன் குடும்பமெனக் கருதி கணவனது சொற்கடவாது நடந்து மந்திரிபோலிருந்து இல்லறதன்மத்தை சரிவர நடாத்தி தன் கணவனை ஈடேறச்செய்வாள். அற்ப குடும்பத்துள் பிறந்தவளாயின் விலைமகளுக்கு ஒப்பாய் தன் குடும்பத்தையே போஷிக்க ஆரம்பித்துக் கொள்ளுவதுடன் தன் கணவனையும் வேணவழியில் வயப்படுத்தி அதன்மவழியில் விடுத்து அவனது ஈடேற்றத்தையுங் கெடுத்துவிடுவது இயல்பாதலின் இல்வாழ்க்கை விரும்புவோன் இல்லாளின்வழி சேறாது நல்வாழ்க்கை அடையும் நடையை விளக்குகின்றார்.

**1. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்**
**வேண்டாப் பொருளு மது.**

**(ப.)** மனைவிழைவார் - மனைவியினின்பத்தையே கருதுவோர், மாண்பய - சிறந்த பலனை, னெய்தார் - அடையார்கள், வினைவிழைவார் - தொழிலினை விரும்புவோர், வேண்டா - இச்சியாத, பொருளுமது - செல்வத்தி) கொப்பாகவென்பது பதம்.

**(பொ)** மனைவியின் இன்பத்தையே கருதுவோர் சிறந்த பலனை அடையார்கள். தொழிலினை விரும்புவோர் இச்சியாத செல்வத்திற்கு ஒப்பாகவென்பது பொழிப்பு. "

**(க.)** ஓர் தொழிலைச் செய்யக்கருதியும் அதனால் அடையுஞ் செல்வத்தைக் கருதாதவனுக்கு ஒப்பாக இல்லறதன்மத்தை யாசித்து இல் வாழ்க்கையில் அமர்ந்தும் சிற்றின்பத்திலேயே கிடப்பானாயின் மேலாய பயன் யாதையுமடையான் என்பது கருத்து.

**(வி.)** யாதாமோர் தொழிலை விருத்தி செய்யவேண்டுமென்று உழைத் தம் அதனால் பெறும் செல்வத்தைக் கருதாதவனுக்கு ஒப்பாக இல்லாதன் மதிலக விருத்தி செய்யவேண்டுமென்னும் அவா மிகுத்து இல்லாளை சேர்த்துக் கொண்டவன் அத்தன்மத்தை மறந்து இல்லாள் இன்பத்திலேயே ஆழ்ந்து விடுவானாயின் மேனோக்கும் தன்மபயன் யாதொன்றையும் அடையான் என்பது விரிவு

**2. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்**
**நாணாக நாணத் தரும்.**

**(ப.)** பேணாது - இல்லறத்தை யிச்சியாது, பெண்விழைவா பெண்ணினின்பத்தையே யிச்சிப்பவனது, னாக்கம் - செல்வமானது, பெரியதோர் - ஓர் பெரியதாயினும், நாணுக - ஒடுக்கத்திற்கொப்பாய, நாணு - அழிவை, தரும் - கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** இல்லறத்தை இச்சியாது பெண்ணினின்பத்தை இச்சிப்பவனது செல்வமானது ஓர் பெரியதாயினும் ஒடுக்கத்திற்கு ஒப்பாய அழிவை கொடுக்கும் என்பது பொழிப்பு

**(க.)** இல்லறத்திலிருந்து நல்லறத்தை நடாத்திக்கொள்ள விருப்புற்றவன் பெண்ணினின்ப விருப்பில் ஆழ்ந்துவிடுவானாயின் மிக்க செல்வமிருப்பினும் ஒடுங்கி ஒழிந்துபோமென்பது கருத்து.

**(வி.)** அதிக செல்வத்தைப் பெற்றும் இல்வாழ்க்கைப் பெறவேண்டு மென்னும் விருப்புற்றும் அவற்றைப் பேணாது இல்லாள் இன்பத்தில் ஆழ்ந்து அவள் வாய்மொழி கோணாது சேருவோனுக்குள்ள ஓர் பெரிய செல்வமும் ஒடுங்கி தனக்கும் அழிவைத்தரும் என்பது விரிவு.

**3. இல்லாள்கட் டாழ்ந்த வியல் பின்மெ யெஞ்ஞான்றும்**
**நல்லாரு ணாணுத் தரும்.**

**(ப.)** இல்லாள்கட் - தனது மனைவி வாக்கிற்கு, டாழ்ந்த - அடங்கி நடக்கும், வியல்பின்மெ - செய்கையையுடையோனுக்கு, யெஞ்ஞான்றும் - எக்காலத்தும், நல்லாரு - பெரியோர்கள் முன், ணாணுத்தரும் - அச்சத்தைக் கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** தனது மனைவி வாக்கிற்கு அடங்கி நடக்கும் செய்கையை உடையோனுக்கு எக்காலத்தும் பெரியோர்கள் முன் அச்சத்தைக் கொடுக்கும்

என்பது பொழிப்பு

**(க.)** துறந்த நல்லோர்வரினும் துறவா நல்லோர் வரினும் அவர்களுக்கு செய்ய வேண்டிய தன்மத்தை மனைவியை வேண்டி செய்வதானது எக்காலும் அவனை நாணும்படி செய்யும் என்பது கருத்து.

**(வி.)** இல்வாழ்க்கையே இல்லறத்தை நாடிநிற்றலால் இல்லோனை நாடிவரும் துறந்தார்க்குந் துறவாதவர்க்கும் இறந்தோர்க்குந் துணை முதலவன் தன்மனைவியை முதலாகக்கொண்டு அவள் வாக்குக்கு எதிர்பார்ப்பது தனக்கு வெட்கத்தை உண்டு செய்தலால் நல்லோர்முன் நாணுத்தரும் என்பது விரிவு.

**4. மனையாளை யஞ்சு மறுமெயிலாளன்**

**வினையாண்மெ விரெய்த லின்று.**

**(ப.)** லாளன் - மனையறம் நடாத்தும் புருடன், மனையாளை - தன் மனைவிக்கு, யஞ்சு - பயந்து நடந்துவருவானாயின், மறுமெயி - மற்று மெடுக்குந் தேக, வினையாண்மெ - செய்தொழிலுட் புருடச் செயலை, வீரெய்த - துணிந்து செய்த - லின்று - இல்லாமற்போமென்பது பதம்

**(பொ.)** மனையறம் நடாத்தும் புருடன் தன் மனையாளுக்கு பயந்து நடந்து வருவானாயின் மற்றும் எடுக்குந் தேகச் செய்தொழிலுள்

புருடச் செயலை துணிந்து செய்தல் இல்லாமற்போம் என்பது பொழிப்பு

**(க.)** இல்லறத்தை இனிது நடாத்தவேண்டிய புருடன் தன் மனையாளுக்கு பயந்து பயந்து நடத்திவரும் இயல்பால் மரித்து மறுமெய்தோன்றினும் புருடச்செயலற்று யாதொரு பயனுக்கும் உதவாமற்போவான் என்பது கருத்து.

**(வி.)** புருடனே பெண்ணுக்கு ஒப்பாகவும் பெண்ணே புருடனுக்கு ஒப்பாயிருந்து இல்வாழ்க்கை நடைபெற்றுவருமாயின் இறந்தும் பிறந்த போதினும் வினைக்கீடாயப் புருடச்செயலற்று வீரமற்று வீணாவான் என்பதில் பிறவி உண்டென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "இறந்த பிறப்பிற்றாஞ்செய்த வினையைப், பிறந்த பிறப்பாலறிக - பிறந்திருந்து, செய்யும் வினையாலறிக வினிப்பிறந், தெய்தும் வினையின் பயன்" எனக் கன்மத்திற்கு ஈடாய தோற்றம் உண்டென்றுணர்ந்த பெரியோன் மறுமெயில் வினையாண்மெ விரெய்தலின்று என்று கூறிய விரிவு.

**5. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று**
**நல்லார்க்கு நல்ல செயல்.**

**(ப.)** இல்லாளை - தன் மனையாளுக்கு, யஞ்சுவா - பயந்து நடப்பவன், மற்றெஞ்ஞான்று - மற்று மெக்காலத்தும், நல்லார்க்கு -

சான்றோர்க்கு, நல்ல செயல் - தன்மஞ்செய்தற்கும், னஞ்சு - அஞ்சு பயப்படுவானென்பது பதம்.

**(பொ.)** தன் மனையாளிக்கு பயந்து நடப்பவன் மற்றும் எக்காலத்தும் சான்றோர்க்கு தன்மஞ் செய்தற்கும் பயப்படுவான் என்பது பொழிப்பு

**(க.)** எப்போதும் தன் மனைவிவாக்குக்கு அடங்கியும் அவளுக்கு பயந்தும் நடந்து வருகிறவன் அருந்தவ னல்லோருக்குந் தன்மஞ்செய்வதற்கு அஞ்சுவான் என்பது கருத்து.

**(வி.)** எப்போது ஒரு புருஷன் தன் மனைவியை அடக்கியாளாமல் பயந்தும் அவள் வாக்குக்கடங்கியும் நடக்க ஆரம்பிப்பானாயில் அருந்தவ நல்லோர்களுக்கு தன்மத்தைச் செய்து சுகம் பெறுதற்கும் பயப்படுவதுடன் தன் தந்தைதாயாருக்கும் பந்துமித்திரருக்கும் இட்டுண்பதற்கும் பயந்து ஏனையோருக்குமோர் உதவியற்றவனாய் ஆண்மெயும் வீரமும் அற்றுப்போவான் என்பது விரிவு.

**6. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா**

**ளமையார்தோ ளஞ்சு பவர்.**

**(ப.)** இமையாரின் - கண்ணிமை யற்ற தேவர் போல், வாழினும் - இல்வாழ்க்கை பெறினும், யில்லா - மனையாளின், ளமையார்தோ -

அடங்கா செயல்களுக்கு, ளஞ்சுபவர் - பயந்து நடப்போர், பாடிலரே - யாதொரு பயனுமற்றவர்களே யென்பது பதம்.

**(பொ.)** கண்ணிமையற்ற தேவர்போல் இல்வாழ்க்கை பெறினும் மனையாளின் அடங்காச்செயல்களுக்கு பயந்து நடப்போர் யாதோர் பயனுமற்றவர்களே என்பது பொழிப்பு.

**(க.)** இரவு பகலற்ற வானவருக்கு ஒப்பாக இல்லத்தின் கண் சுகவாழ்க்கைப் பெற்றிருப்பினும் தன் மனையாளின் இன்பத்தையே பெரிதென்று எண்ணி அவளுக்கு பயந்து நடப்போன் யாதொரு பயனையும் அடைய மாட்டான் என்பது கருத்து.

**(வி.)** இரவென்றும் பகலென்றும் கண்ணிமையில்லா தேவர்க்கு ஒப்பாக சுப்ரதீபங்களால் அமைத்த மாடமாளிகைகளில் வாழினும் அம்மனையோன் மனையாளின் சொற்கடவாது அவ்வில்லத்திலேயே அழுந்தி கிடப்பானாயின் அவன் ஈடேற்றத்திற்கேற்ற விசாரிணையும் அறநெறியுமற்ற புருடச்செயல் ஏ

பயனில்லாமற்போவான் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் மவார்க்கில்லை பெருந்தூய்மெ பேணாதூன், உண்விழைவார்க் ராம்பல் - எப்பொழுதும், மண்விழைவார்க்கில்லை மறமின்மெ விழைவார்க்கில்லை தவம்" என்பது கொண்டு பெண்ணினது டவாதோருக்கு பெருஞ் சிறப்பில்லை என்பது விரிவு.

**7. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மெயி னாணுடைப் பெண்ணோ பெருமெ யுடைத்து.**

**(ப.)** பெண்ணேவல் - அனையாள் சொற்கடவாது, செய்தொழுகு - அவள் சொல்லுந் தொழிலை செய்துவருவோன், மாண்மெயி - புருட தேகியாயினும், னாணுடை - அவனது வொடுக்கத்தால், பெண்ணே - பெண்தேகமே, பெருமெயுடைத்து - மிக்கச் சிறந்ததாமென்பது பதம்.

**(பொ.)** மனையாள் சொற் கவாது அவள் சொல்லுந் தொழிலைச் செய்துவருவோன் புருட தேகியாயினும் அவனது ஒடுக்கத்தால் பெண்தேகமே மிக்கச் சிறந்ததாம் என்பது பொழிப்பு

**(க.)** சிறந்ததோர் புருடதேகம் எடுத்தும் பெண்ணினது மாயபோதனைக்கு அடங்கி அவள் சொற் கடவாது நடப்பானாயின் புருடனென்னும் சிறப்புக் குன்றி பெண்ணே சிறப்படைவாள் என்பது கருத்து.

**(வி.)** சகலவற்றையும் அடக்கியாளுஞ் செயலால் ஆண்மெயாம் புருடனென்னும் பெயர் பெற்றோன் பேதைமெயாம் பெண் உருவினது ஏவலுக்குட்பட்டு அவள் ஏவுத் தொழிலைச் செய்து அடங்கிவாழ்வானாயின் புருடவுருவினும் பெண்ணுருவே சிறந்ததென்று கூறும் இழிவைத் தரும் என்பது விரிவு,

**8. நட்டார்குறை முடியார் நன்னாற்றார் நன்னுதலாட்**

**பெட்டாங் கொழுகு பவர்.**

**(ப.)** நன்னுதலாட் - தனக்கோர் சிறிய வின்பத்தைத்தரு மனைவியினது, பெட்டாங் - வாக்குக்கடங்கி, கொழுகுபவர் - வாழ்க்கைப் பெறுவோர், நட்டார் - தன்னைப் பெற்று வளர்த்தோர், குறைமுடியார் - கோரிக்கையையும் முடிக்கமாட்டார், நன்னாற்றார் - தனக்காய நல்லாற்றலையு மடையார்களென்பது பதம்.

**(பொ.)** தனக்கோர் சிறியவின்பத்தைத்தரும் மனைவியினது வாக்குக்கடங்கி வாழ்க்கைப் பெறுவோர் தன்னைப் பெற்று வளர்த்தோர் கோரிக்கையையும் முடிக்கமாட்டார், தனக்காய நல்லாற்றலையும் அடையமாட்டார்கள் என்பது பொழிப்பு

**(க.)** மனையாளினது சொற் கடவாது அவள் இன்பத்தில் ஆழ்ந்து நிற்போர் தன்னைப் பெற்று வளர்த்தோர் கோறிய விரதத்தையும் முடிக்கமாட்டார், தான் ஆற்றலடையுந் தவத்தையும் அடையமாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** தன் மனைவியினது சொற்கடவாமலும் அவளது வாக்குக்கு பயந்தும் அவளினது சிறியவின்பத்தில் ஆழ்ந்தும் வாழ்க்கை புரிவோர் தன்னைப் பெற்று வளர்த்தோர் குலம் விளங்கவேண்டிய புத்திரனைப் பெற்றெடுக்க விரதங்கார்த்து ஈன்ற அவர்களது

கோறிக்கை நிறைவேறாமலும், தங்கள் துக்கமகன்று ஆற்றலடையும் நிலைபெறாமலும் போவார்கள் என்பது விரிவு.

### 9. அறவினைய மான்ற பொருளும் பிறவினையும் பெண்ணேவல் செய்வர்க ணில்.

**(ப.)** அறவினையு - தன்மச் செயலும், மான்ற - அதற்காய, பொருளும் - செல்வமும், பிறவினையும் - மற்றுந் தொழிற்களும், பெண் பெண்களினது வாக்குக்கடங்குந் தொழில், செய்வர் - செய்வோரிடத்து,ணில் - நில்லாதென்பது பதம்.

**(பொ.)** தன்மச் செயலும் அதற்காய செல்வமும் மற்றுந் தொழில்களும் பெண்களினது வாக்குக்கு அடங்குந் தொழில் செய்வோரிடத்து நில்லாது என்பது பொழிப்பு

**(க.)** பெண்களுடைய வாக்குக்கு அடங்கி அவர்களுக்கு ஏவல் புரிந்துவரும் புருடர்களிடத்து தன்மச்செயலும், செல்வமும், வேறு தொழிற்களும் நிலையாது என்பது கருத்து.

**(வி.)** புருடனானவன் தனது மனைவியுடைய வாக்குக்கடங்கியும் அவளுக்கு பயந்தும் தனது காரியங்களை நடத்திவருவானாயின் அவன் உதாரத்துவமாக நடத்தும் தன்மச்செயலற்று செல்வமும் ஒழிந்து தொழில்களும் ஒடுங்கி
பெண்வழிசேர் பேதையாவான் என்பது விரிவு.

**10. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்தாம் பேதைமெ யில்.**

**(ப.)** எண்சேர்ந்த - எட்டுவகை யுறுப்பினமைந்த, நெஞ்சத்திட - மனவுறுதி, னுடையார்க் - உடையவர்களுக்கு, கெஞ்ஞான்றும் - எக்காலத்தும், பெண்சார்ந்தாம் - மனைவியினது வாக்குக்கடங்கி நடக்கும், பேதை மெயில் - அறிவிலிச்செயல் தோற்றமாட்டாதென்பது பதம்.

**(பொ.)** எட்டுவகை உறுப்பினமைந்த மனவுறுதி உடையவர்களுக்கு எக்காலத்தும் மனைவியினது வாக்குக்கடங்கி நடக்கும் அறிவிலிச்செயல் தோற்றமாட்டாது என்பது பொழிப்பு

**(க.)** எண்வகை உறுப்பில் நிலைத்து மனவுறுதி பெற்றவர்கள் தங்கள் மனையாளை அடக்கி ஆண்டு வருவார்களேயன்றி அவர்கள் வாக்குக்கு அடங்கி
அவர்களால் ஆளும் அறிவிலிகளெனத் தோற்றமாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** எண்வகை உறுப்புகளாம் ஐயநீக்கல், அவாவறுத்தல், நிந்தையகற்றல், மயக்கொழித்தல் செய்பழி நீக்கல், அழிவோரைக் காத்தல், அன்பை வளர்த்தல், அறவுரை கூறலுடையச்செயலில் உறுதி பெற்ற மனோதிடமுள்ள புருடர்கள் தங்கள் மனையாளது

மையல்வாக்குக்கு அடங்கியும் அவர்களுக்கு ஒடுங்கியுந் தங்களை அறிவிலிகளென்றுகூற வைத்துக்கொள்ள மாட்டார்களென்பதற்குச் சார்பாய் எண்சேர்ந்த காட்சி அருங்கலைச்செப்பு "எட்டுவகையுறுப் பிற்றாகியியன்றது, சுட்டிய நற்காட்சிதான்", அறிநெறிச்சாரம் " ஐயமவாவே யுவர்ப்புமயக்கின்மெ, செய்பழிநீக்க நிறுத்துதல் - மெய்யாக, அன்புடைமே யான்ற வறவிளக்கஞ்செய்தலோ, டென்றிவையெட்டாமுறுப்பு என்பது கொண்டு எண்சேர்ந்தோர் பெண்சார்ந் தடங்கார்கள் என்பது விரிவு.

## 26. தீவினையச்சம்

இல்லறத்திருந்து நல்லறம் நடத்தவேண்டியவன் அஃதை மறந்து கொடுஞ்செயல்களாம் தீவினைகளைச் செய்வானாயின் வழிபாடு நல்லறங்கெடுவதுடன் அவனும் அவனில்லாளும் புத்திரர்களுங் கெடுவார்க ளென்று உணர்ந்த நமது நாயன் பெண்வழி சேரலை விளக்கி அதன்பின் தீவினையின் கேடுகளை உணர்த்தலானார்.

**1. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்**
**தீவினை யென்னுஞ் செருக்கு.**

**(ப.)** தீவினையா - கொடுஞ்செயலினையுடையோர், ரஞ்சார் - ஏதுக்கும் பயப்படார்கள், தீவினையென்னுஞ் - கொடியச்செயல்களென்னும், செருக்கு - அகங்காரத்திற்கு, விழுமியா - ஒடுங்கிய நல்லோர், ரஞ்சுவர் பயப்படுவார்களென்பது பதம்.

**(பொ)** கொடுஞ்செயலினையுடையோர் ஏதுக்கும் பயப்படார்கள், கொடியச் செயலென்னும் அகங்காரத்திற்கு ஒடுங்கிய நல்லோர் பயப்படுவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** எக்காலுங் கொடியச் செயல்களையே செய்துவருவோர் யாதுக்கும் அஞ்சார்கள் ஒடுக்கத்தை நாடியுள்ள நல்லோர்கள் கொடுஞ்செயல்கள் யாவற்றிற்கும் அஞ்சியே நிற்பார்கள் என்பது கருத்து.

**(வி.)** பொய், கொலை, களவு, விபச்சாரங், கள்ளருந்தல் முதலியத் தீயச்செயல்களையுடையோர் குருநிந்தையாகும் மற்றுங் கொடூரச் செயல்களுக்கு அஞ்சமாட்டார்கள், நீதி நெறியொழுக்கங்களைப் பின்பற்றிய பெரியோர் தீயவினைகளாகும் கொடுஞ்செயல்களுக்குப் பயந்து நிற்பார்கள் என்பது விரிவு

**2. தீயவை தீய பயத்தலாற் றீயவை**
**தீயிலு மஞ்சப் படும்.**

**(ப.)** தீயவை - கொடுஞ்செயற்களை, தீய - இன்னுங் கொடிதாக, பயத்தலாற் - செய்வதினால், றீயவை - அக் கொறூரச்செயலைக் காண்போர், தியிலு நெருப்பினும், மஞ்சப்படும் - அதிகம் பயப்படுவரென்பது பதம்.

**(பொ.)** கொடுஞ்செயல்களை இன்னுங் கொடி தாகர் செய்வதினால் அக்கொமாரச் செயலைக் கான போர் நெருப்பினும் அதிகம் பயப்படுவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** எக்காலுந் தீயர் செயல்களையே மேலுமேலுஞ் செய்து வருவோர்களைக் காண்போர் அவர்களை அக்கினிக்குங் கொடியோர் என அஞ்சி அகலுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** சீவகாருண்யம் என்னுஞ் செயலற்று மக்கள் ஈறாகவுள்ள சீவராசிகளுக்கு எக்காலுந் துன்பத்தையே செய்துவருவோர்களைக் காத்தும் கருவ சீவராசிகளும் தீயைக்கண்டு அஞ்சுவதினும் தீயச்செயலுள்ளோருக்கு அதிகம் அஞ்சுவார்கள் என்பது விரிவு

**3. அறிவினு ளெல்லாந் தலையென்பதிய**
**செறுவார்க்கு செய்யா விடல்.**

**(ப.)** அறிவினுளெல்லாந் - விவேகமிகுதியைநாடுபவற்றுள், தலையென்ப - விவேகமுதல் யாதெனில், தீய - கொடியத் தீங்குகளை, செறுவார்க்குஞ் - செய்யும் படியானவர்களுக்கு, செய்யாவிடல் - பிரதிதீங்கு செய்யாதிருப்பதா மென்பது பதம்.

**(பொ.)** விவேகமிகுதியை நாடுபவற்றுள் விவேகமிகுதி யாதெனில் கொடியத்தீங்குகளைச் செய்யும்படியானவர்களுக்குப் பிரதி தீங்கு செய்யாதிருப்ப தாம் என்பது பொழிப்பு.

**(க.)** அறிவினது விருத்திகள் யாவற்றினும் மேலாய அறிவுயாதெனில் அன்னியர் செய்யுந் தீங்குகளுக்கு பதிலாய தீங்கு செய்யாதிருப்பதேயாம் என்பது கருத்து

**(வி.)** கலை நூற்களைவாசித்து அறிவினை விருத்திச் செய்ய முயல்வோர்க்கு முதலாய அறிவின் செயல் யாதெனில் தங்களுக்கோர் துன்பத்தை விளைவிப்போருக்குத் தாங்களும் முயன்று பிரதி துன்பஞ் செய்யாதிருப்பதே தலையாய அறிவு என்பது விரிவு.

**4. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி**
**னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.**

**(ப.)** மறந்தும் - தான் கற்றவைகளை மறந்தும், பிறன்கேடு - அன்னியனது தீங்குகளை, சூழற்க - உள்ளத்தி லூன்றாதகற்றல் வேண்டும், சூழில் - உள்ளத்தி லூன்றுவதாயின், னறஞ்சூழ் - சேர்ந்துள்ள தன்மங்கள் யாவும், சூழ்ந்தவன் - தீங்கினை யூன்றியவனுக்கு கேடு - கெடுதியாக முடியுமென்பது பதம்.

றவைகளை மறந்தும் அன்னியனது தீங்குகளை உள்ளத்தில் ஊன்றாது அகற்றல் வேண்டும். உள்ளத்தில் ஊன்றுவதாயின் சேர்ந்துள்ள தன்மங்கள் யாவும் தீங்கினை ஊன்றியவனுக்குக் கெடுதியாக முடியும் என்பது பொழிப்பு

**(க.)** கற்றக் கலை நூற்களை மறந்த போதினும் அன்னியர் செய்த தீங்குகளை மனதில் ஊன்றாது அகற்றல் வேண்டும். அகலாது நிலைக்கச் செய்வதாயின் சேர்ந்துள்ள தன்மங்கள் யாவற்றிற்குங் கேடுண்டாகிப்போம் என்பது கருத்து.

**(வி.)** நீதி நூற்களை மறந்த போதினும் அன்னியனது தீங்குகளை மறவாதிருத்தல் செய்துள்ள தன்மங்கள் யாவையும் அகற்றும் வழிக்கு பீடமிட்டிடலால் அன்னியனது தீங்கினை மறத்தல் வேண்டும். மறவாதிருப்பின் அதுவே அவனுக்கோர் கேடாக முடியும் என்பது விரிவு.

**5. இலனென்று தீயவை செய்யற்க செய்யி**
**னிலனாகு மற்றும் பெயர்த்து.**

**(ப.)** இலனென்று - யாதொருவுதவியுமற்றவனென்று, தீயவை - கொடியச் செயல்களை, செய்யற்க - அவனுக்குச் செய்யாதகலுக, செய்யி - கொடுஞ்செயற்புரிவதாயின், மற்றும் - தனக்குள்ள சுற்றத்தோர், பெயர்த்து - அகன்று, னிலனாகி - உதவியில்லாமற் போமென்பது பதம்.

**(பொ.)** யாதொரு உதவியுமற்றவனென்று கொடியச்செயல்களை அவனுக்குச் செய்யலாகாது. கொடுஞ்செயற் புரிவதாயின் தனக்குள்ள சுற்றத்தோர் அகன்று உதவியில்லாமற்போம் என்பது பொழிப்பு.

**(க.)** யாதாமோர் உதவியும் இல்லாதவனென்று அவனுக்குத் தீங்கிழைப்பதாயின் இவனுக்குள்ள உதவிகள் யாவும் இல்லாமல் தானே விலகிப்போம் என்பது கருத்து.

**(வி.)** ஒருவனுக்கு சுற்றத்தோர் உதவியும் இல்லை பொருளுதவியும் இல்லை என்றறிந்து அவனைக் கெடுக்குந் தீயச் செயல்களைச் செய்துக் கெடுப்பதாயின் இவனுக்குள்ள மக்களுதவியும் பொருளுதவியும் இவனை அறியாது ஒழிந்து பெருந் துக்கத்திற்கு ஆளாக்கிவிடும் என்பது விரிவு.

**6. திப்பாலதான் பிறர்கட் செய்யற்க நோய்ப்பால**
**தன்னையடல் வேண்டா தான்.**

**(ப.)** நோய்ப்பால் - பிணியினது தோற்றம், தன்னையடல் - தன்னைச் சேரல், வேண்டாதான் - வெறுப்புற்றவன், தான் பிறர்கட் - தான் மற்றவர்கட்கு, தீப்பால் கொடிய துன்பந் தோன்றாவண்ணம், செய்யற்க - ஒழுகல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** பிணியினது தோற்றம் தன்னைச்சேர வெறுப்புற்றவன் தான் மற்றவர்கட்குக் கொடிய துன்பந் தோற்றாவண்ணம் ஒழுகல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** தனக்கோர் துன்பமும் அணுகாதிருக்க வேண்டுகின்றவன் பிறருக்கோர் துன்பத்தையும் விளைவிக்காது தன்னைக்

காத்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** கொடிய துன்பங்களாஞ் செயல்களும் பிணிகளுந் தனக்கு அணுகலாகாதென விரும்புகிறவன் தன்னால் மற்றவர்களுக்குத் துன்பச் செயல்களும் பிணியின் உபத்திரவமும் அணுகாது செய்துக்கொள்ள வேண்டும் என்பது விரிவு

**7. எனைப்பகை யற்றாரு முய்வர் வினைப்பகை**
**வியாது பின்சென் றடும்.**

**(ப.)** யுற்றாரு - தனதுரவின்முறையாரிடத்து, எனைப்பகை - எவ்வளவுதந் தோன்றினும், முய்வர் - அங்கனே யடங்கிவிடுவார்கள், வினைப்பகை - தான் செய்யுங் கொடிய துன்பவிரோதமானது, வீயாது - அடங்காது, பின் சென்றடும் பிறவிக்டோருந் தொடர்ந்தேவருமென்பது பதம்.

**(பொ.)** தனது உரவின் முறையோரிடத்து எவ்வளவு விரோதந் தோன்றினும் அங்கனே அடங்கிவிடுவார்கள். தான் செய்யுங் கொடிய விரோதத்துன்பமானது பிறவிகடோருந் தொடர்ந்தே வரும் என்பது பொழிப்பு

**(க.)** தனது குடும்பத்துள் எத்தகைய விரோதமுண்டாயினுங் கூடிய சீக்கிரம் அங்கனே அடங்கிப்போகும். தான் செய்தக் கொடிய

துன்பத்துக்குள்ளாய விரோதவினையாயது மாறாப் பிறவிக்டோருந் தொடர்ந்தே வரும் என்பது கருத்து.

**(வி.)** குடும்பத்தோருக்குள் தோன்றுங் கொடிய விரோதமாயினும் நாளுக்கு நாளகன்று அடங்கிப்போய்விடும். தான் அன்னியருக்குச் செய்யுங் கொடிய துன்பங்களும் பகைகளும் மாறாப்பிறவிகடோருந் தீராப்பகையையும் துன்பத்தையுங் கொடுத்துக்கொண்டேவரும் என்பவற்றிற்குச் சார்பாய் சீவகசிந்தாமணி "அல்லித்தாளற்றபோது மாறாத நூலதனைப்போலத் தொல்லைத் தன்னுடம்பு நீங்கத்தீவினை தொடர்ந்து நீங்கா, புல்லிக்கொண்டு இரைச்சூழ்ந்து புக்குழி புக்குப்பின்னின், றெல்லையிறுன்பவெந்தீச் சுட்டெரித் இருங்களன்றே" என்பது கொண்டே தீவினைக்கு அஞ்சி நடந்துக் கொள்ளுங்கோள் என்பது விரிவு.

**8. தீயவைச் செய்தார் கெடுத னிழறன்னை**

**வியா தடியுரைந் தற்று.**

**(ப.)** தீயவை - கொடிய துன்பங்களை, செய்தார் - செய்வோர்களுக்கு, கெடுத - கேடானது, னிழறன்னை - தன்னுடைய நிழல், வீயா - அகலாது, விரே தடியுரைந்தற்று - தனது பாதத்தைத் தொடர்ந்து நிற்பது போலிருக்குமென்பது பதம்.

**(பொ.)** கொடிய துன்பங்கடாச் செய்வோர்களுக்குக் கேடானது தன்னுடைய நிழலகலாது தனது பாதத்தைத் தொடர்ந்து நிற்பது போலிருக்கும் என்பது

பொழிப்பு

**(க.)** தன்னுடைய நிழலானது தனது பாதத்தைத் தொடர்ந்தே நிற்பது போல தான் செய்தத் தீவினையாங் கொடியச் செயல்களானது தன்னைக் கொடுத்தற்குத் தொடர்ந்தே நிற்கும் என்பது கருத்து.

**(வி.)** நடக்கினும் நிற்கினும் ஓடினுந் தன்னுடைய நிழலானது தன் பாதத்தைத் தொடர்ந்தே நிற்பது போல தான் அன்னியருக்குச் செய்தத் துன்பங்களானது ஓடினும் ஒளியினும் மறுபிறவி மாறினும் விடாது தொடர்ந்தே கேடினைத் தரும் என்பது

**9. தன்னைத்தான் காதல னாயி னெனைத் தோன்றுந்**
**துள்ளற்க தீவினைப் பால்.**

**(ப.)** தன்னைத்தான் - தானே தன்னை , காதலனாயி - நேசிப்பவனாயின், தீவினைப்பால் - கொடியச்செயலென்னு மொன்றை மட்டிலும், னெனைத் தோன்றுந் - எள்ளளவேனுந் தோன்றவிடாது, துன்னற்க - நேசிக்கா தகற்ற வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** தானே தன்னை நேசிப்பவனாயின் கொடியச் செயலென்னும் ஒன்றை மட்டிலும் எள்ளளவேனுந் தோன்றவிடாது,

நேசிக்காது அகற்ற வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** உண்மெய்யாந் தன்னில் அன்பை வளர்த்த வேண்டியவன் தன்னுள் எழுங் கொடியச்செயலை மட்டிலும் எழவிடாமல் அகற்றவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** தன்னைத்தானே நேசித்துத் தனக்கோர் துன்பமுமணுகாமல் காத்துக்கொள்ளவேண்டியவன் அன்னியனுக்கோர் துன்பத்தைத் தோன் வைக்காது காத்துக்கொள்ளவேண்டும் என்பது விரிவு.

**10. அருங்கோட னென்ப தறிக மருங்கோடித்**
**தீவினைச் செய்யா னெனின்.**

**(ப.)** மருங்கோடி - மக்கள் பக்கச்சென்று, தீவினை - கொடுஞ் செயல்களை, செய்யானெனின் - செய்யாதிருப்பானாயின், அரு - அருள் நிறைந்தோர், கோடனென்ப - மரபினையுடையோனென்று, தறிக - தெரிந்துக்கொள்ள வேண்டுமென்பது பதம்.

**(பொ)** மக்கள் பக்கஞ் சென்று கொடுஞ்செயல்களைச் செய்யாதிருப் பானாயின் அருள் நிறைந்தோர் மரபினையுடையோனென்று தெரிந்துக் கொள்ளல் வேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** அருளினைநிறைந்த கூட்டத்தைச் சேர்ந்தோன் மற்றுமுள்ள மக்களை நாடியவர் பக்கஞ்சேரினுந் தீவினையாங் கொடுஞ்

செயல்களைச் செய்யான் என்பது கருத்து.

**(வி)** அன்பின் பெருக்கத்தையே பீடமாக நின்றொழுகும் அருள் நிறைந்தோர் மரபில் நின்று ஒழுகினோன் மற்றுள்ள மக்கள் பக்கஞ் சேரினும் தீவினைச்செய் லற்றுள்ள தோற்றத்தாலவனை அருங்கோடன் என்றறிதற்கு ஆதாரமானான். தீயவினைகள் யாதெனில்:- தேகத்தால் நிகழுங் கொலை, களவு, காமம் மூன்றும், வாக்கால் நிகழும் பொய், குறளை, கடுஞ்சொல், பயனிலாச்சொல் நான்கும், மனத்தால் நிகழும் வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சி மூன்றும் ஆகிய பத்துமே என்பதற்குச் சார்பாய் மணிமேகலை "தீவினையென்பதியாதெனவினவி, னாய் தொடி நல்லாயாங்கது கேளாய், கொலையே களவே காமத்தீவினை, யலையாதுடம்பிற்றோன்று வமூன்றும், பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில், சொல்லே சொல்லிற் றோன்றுவ னான்கும், வெஃகல் வெகுளல் பொல்லாக்காட்சி, யென்றுளந்தனினுருப்ப மூன்றுமெனப், பத்து வகையாற் பயன்றெரி புலவ, ரித்திரம்படார்படர்குவராயின், விலங்கும் பேயும் நரகருமாகிக் கலங்கிய உள்ளக் கவலையிற்றோன்றுவர்" என்பது கொண்டு இல்லறத்தோன் தீவினைக்கு அஞ்சி ஒழுகல் வேண்டும் என்பதை விளங்கக்கூறிய விரிவு.

கனந்தங்கிய எலீஸ் துரையவர்கள் சங்கத்திலேயே முதலாவது அச்சிட்டக்குறளில் "அருங்கேடனென்ப தறிக" வென்பது பிழைப்பட்டுள்ளது கொண்டே உரையெழுதி யோர்காலத்தும் பிழைப்பட்டு பொருள் கெட்டும் வழங்கிவருகின்றது. அதன் திருத்தமொழியை அருங்கலைச் செப்பாலறிந்துக் கொள்ளலாம். வீடுபேறு "அருங்கோடர் சங்கமணுகி யறவுரை கேட் டிருமாந்திருப்பதேவீடு"

## 27. ஒப்புர ஒழுகல்

உலகத்தில் வாழும் மக்கள் தங்கள் யதார்த்த உரவினரோடு கூடிவாழ்தல் இயல்பாதலின் மற்றுந் தங்களையொத்த மக்களென ஒப்பி உரவாடும் பல்லோருக்கும் இட்டுண்டு வாழ்வதே இல்லறப்பேறாய ஒழுக்கமாதலின் பிரிதி பயனைக் கருதாது பெய்யும் வானின் உபகாரத்தை விளக்கி ஒப்புரவொழுகலின் சுகத்தையும் அதன் பயனையும் விளக்குகின்றார்.

**1. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்**

**டென்னாற்றுங் கொல்லோ வுலகு.**

**(ப.)** கைம்மாறு - ஏதொரு பிரிதி யுபகாரமும், வேண்டா - விரும்பாது கடப்பாடு - முடிவின்றி பெய்யும், மாரிமாட் - மழைக்கு, வுலகு - உலகமானது, டென்னாற்றுங் - என்ன மறு உபகாரஞ் செய்கிறதென்று கொல்லோ - சொல்லக்கூடு மென்பது பதம்.

**(பொ.)** ஏதொரு பிரிதி உபகாரமும் விரும்பாது முடிவின்றி பெய்யும் மழைக்கு உலகமானது என்ன மறு உபகாரஞ் செய்கிறதென்று சொல்லக்கூடும் என்பது பொழிப்பு

**(க.)** உலகமும் உலக சீவராசிகளும் மழைக்கு யாதொரு பிரிதி உபகாரமுஞ் செய்யாதிருந்தபோதினும் அம்மழையும் பிரிதி உபகாரங் கருதாது இடைவிடா காலத்திற்கு காலம் பெய்து காப்பது போல் மக்களும் ஒப்புரவோராம் மற்ற மக்களது உபகாரங் கருதாது காக்கவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** சீவகாருண்யத்தையும் ஒழுக்கத்தையும் மேற்கொண்டு உலக மக்களது வாழ்க்கையில் இல்லறத்தோன் ஒப்புரவோரின் பயனைக் கருதாது அவர்களுக்கு உபகாரியாயிருந்து வாழ்கவேண்டும் என்பதற்கு மழையை உவமித்துக் கூறிய விரிவாம்.

**2. தாளாற்றி தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு**
**வேளாண்மெ செய்தற் பொருட்டு**

**(ப.)** தாளாற்றி - காலையுங்கையையு மியந்திரமாகக் கொண்டு, தந்த - சேகரித்த, பொருளெல்லாந் - திரவியங்களெல்லாம், தக்கார்க்கு - உழைப்பாளிகளுக்கு, வேளாண்மெ - உழவின் சுக யீய்ந்து, செய்தற் பொருட்டு - உபகாரிகளாக விளங்கவைப்பதற்கேயா மென்பது பதம்.

**(பொ.)** காலையுங் கையையும் இயந்திரமாகக்கொண்டு சேகரித்த திரவியங்களெல்லாம் உழைப்பாளிகளுக்கு உழவின் சுகமீய்ந்து உபகாரிகளாக விளங்கவைப்பதற்கேயாம் என்பது பொழிப்பு

**(க.)** கையையுங் காலையும் ஓர் இயந்திரம் போற்கொண்டு சேகரித்தப் பொருளை பூமியில் உழைக்கத்தக்கப் புருடர்களுக்கு உதவி தானியவிருத்திச் செய்து சருவசீவர்களுக்கும் உதவும் பொருட்டேயாம் என்பது கருத்து.

**(வி.)** ஓடித் திரிந்து சேகரித்தப் பொருளைக்கொண்டு ஆற்றலுற்றுள்ளோர் பமியில் உழைக்கத் தக்கோர்களைக் கொண்டு தனமுதலிய்ந்து உழுது பண்படுத்தி தானியவிருத்திச் செய்து சருவசீவர்களுக்கும் உபகாரியாக இருக்கும்படி செய்ய வேண்டும் என்பது விரிவு.

**3. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலறிதே**
**யொப்புரவி நல்ல பிற.**

**(ப.)** யொப்புரவி - ஒப்பி உரவு கொண்டோர்களுக்கும், நல்ல - மற்றும் விவேகமிகுத்தப் பெரியோர்களுக்கும், பிற - அன்னியருக்கும் உபகாரஞ் செய்யாரேல், புத்தேளுலகத்து - புத்ததேவ னுலகத்தையும், மீண்டும் - வேறு சுகத்தையும், பெறலரிதே அடைத லரிதாமென்பது பதம்.

**(பொ)** ஒப்பி உரவு கொண்டோர்களுக்கும், மற்றும் விவேகமிகுத்தப் பெரியோர்களுக்கும் அன்னியருக்கும் உபகாரஞ்செய்யாரேல் புத்ததேவன் உலகத்தையும் வேறு சுகத்தையும் அடைதலரிதாம் என்பது பொழிப்பு.

**(க.)** தன்னுரவினர் உபகாரிகளாவது போல் ஒப்புரவினருக்கும் நலமிகுத்த பெரியோருக்கும் மற்றும் அன்னியருக்கும் உபகாரிகளாக விளங்காவிடின் புத்ததேவனுலகமும் மற்றுஞ் சுகங்களும் பெறுதலரிதாம் என்பது கருத்து.

**(வி.)** உலக மாக்கள் தன்னுரவினருக்கே உபகாரம் புரிவது இயல்பாதலின் அவ்வகைத் தன்னவரைமட்டிலும் நாடிச் செய்தல் உபகாரமென்னு மொழிக்கு உறுதி பெறாதாதலின் தன்னவரென்றே அன்னியரையும் நேசிப்பதே உபகாரமென்பதுகொண்டு புத்ததேவ னுலகாம் வானராட்சியத்தையும் மற்றுஞ் சுகத்தையும் விரும்புவோர் ஒப்புரவினருக்கும், நல்லோருக்கும், பிறருக்கும் உபகாரிகளாக விளங்கவேண்டும் என்பது விரிவு.

**4. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்**
**செத்தாருள் வைக்கப் படும்**

**(ப.)** ஒத்த - சகலமக்களிடத்தும் ஒத்து வாழும் வாழ்க்கையை, தறிவா - உணர்வோன் னுயிர்வாழ்வான் - சுகசீவியாக வாழ்வான்,

மற்றையான் - அவ்வகை வாழ்க்கையற்றவனோ, செத்தாருள் - மரித்தோருள் வைக்கப்படும் - ஒருவனாக சேர்க்கப்படுவானென்பது பதம்.

**(பொ.)** சகலமக்களிடத்தும் ஒத்து வாழும் வாழ்க்கையை உணர்வோன் சுகசீவியாக வாழ்வான். அவ்வாழ்க்கை அற்றவனோ மரித்தோருள் ஒருவனாக சேர்க்கப்படுவான் என்பது பொழிப்பு

**(க.)** தன்னுரவினரைப்போல் ஏனையோருக்கும் உபகாரியாக வாழ்வோன் சுகசீவியாக வாழ்வான். அவ்வகை உபகாரமற்று வாழ்வோன் மரித்தோருள் ஒருவனாக எண்ணப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம் என்னும் முதுமொழிக்கிணங்க சகலசீவர்களும் ஓங்கி தன்னிலையடைதற்கு உபகாரியாக விளங்குவோன் என்றென்றும் சுகசீவியாக வாழ்வான். அத்தகைய சீவகாருண்யமற்று வாழ்வோன் உலகத்தில் சீவித்திருப்பினும் மரித்தோருள் ஒருவனாகக் கருதப்படுவான். ஆதலின் ஒப்புர வொழுகலில் நல்லொழுக்கமே மேலென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "தானத்தின் மிக்க தருமமும் தக்கார்க்கு, ஞானத்தின் மிக்கவு சாத்துணையும் - மானம், அழியா

வொழுக்கத்தின் மிக்க தூஉமில்லை, பழியாமல் வாழுந்திறம் " என்பது கொண்டு ஒப்புர வொழுகல் வேண்டும் என்பது விரிவு

**5. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்**
**பேரறி வாளன் றிரு.**

**(ப.)** ஊருணி - தேசத்துள், நீர் நிறைந்தற்றே - நீர்வளம் பொருந்திய போது, யுலகவாம் - உலகமென்னும் சிறப்பைப்பெறும் (அவைபோல்) பேரறிவாளன் -விவேக மிகுதியால் ஒப்புர வொழுகுவோன், றிரு - செல்வனென்னும் சிறப்பைப் பெறுவானென்பது பதம்

**(பொ)** தேசத்துள் நீர்வளம் பொருந்தியபோது உலகமென்னும் சிறப்பைப்பெறும் (அவைபோல்) விவேக மிகுதியால் ஒப்புரவொழுகுவோன் செல்வன் என்னும் சிறப்பைப் பெறுவான் என்பது பொழிப்பு

**(க.)** நீர்வளம் பொருந்தி நிலவளமான போது உலக மக்கள் சிறப்படைவது போல விவேக மிகுத்தோன் உள்ளதைக்கொண்டு உபகாரியாக விளங்கின் செல்வன் என்று அழைக்கப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** நீர்வளம் பெருகி நிலவளம் ஓங்குமாயின் உலகமும் உலக மக்களும் சிறப்பைப் பெறுவது போல விவேக மிகுத்தோன்

தனக்குள்ள செல்வத்தைக் கொண்டே உபகாரியாக விளங்குதலினால் செல்வன் என்று அழைக்கப்படு கின்றான். செல்வமிருந்தும் உபகாரமற்று வாழ்வானாயின் உலோபியென்று அழைக்கப்படுவான் என்பது விரிவு.

**6. பயன்மர முள்ளூர்ப் பழத்தற்றாற் செல்வ**
**நயனுடை யான்கப் படின்.**

**(ப.)** பயன்மர - பிரயோசனமானக் கனியைக்கொடுக்கும் விருட்சம், முள்ளூர் - ஊர்மத்தியில், பழுத்தற்றாற் - கனிந்துவிழுவதுபோல், செல்வ - திரவியமானது, நயனுடையான்கட் - கிருபை நிறைந்தவனிடத்து, படின் - அமையி லென்பது பதம்.

**(பொ.)** பிரயோசனமானக் கனியைக் கொடுக்கும் விருட்சம் ஊர்மத்தியில் கனிந்து விழுவதுபோல் திரவியமானது கிருபை நிறைந்தவனிடத்து அமையில் என்பது பொழிப்பு.

**(க.)** நல்ல கனியைக் கொடுக்கும் மரத்தின் பழம் உள்ளூர் மத்தியில் கனிந்துவிழுந்து சகலசீவர்களும் உண்பதற்கு உதவுதல் போல் கிருபை நிறைந்தவனிடத்து செல்வமும் நிறையுமாயின் சகலமக்களுக்கும் உபகாரியாக ஒழுகுவான் என்பது கருத்து.

**(வி)** சகலசீவர்களும் உண்பதற்குரிய கனியைத்தரும் விருட்சமானது உள்ளூர் மத்தியில் கனியை உதிர்ப்பது போல

சீவகாருண்யம் நிறைந்தவனிடத்து செல்வமும் வந்தமருமாயின் ஒப்புரவோருக்கும் ஏனைய சீவராசிகளுக்கும் உபகாரியாக விளங்குவான் என்பது விரிவு.

**7. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்**
**பெருந்தகை யான்கட் படின்.**

**(ப.)** செல்வம் - திரவியமானது, பெருந்தகையான்கட் - பேராசை யுடையோனிடத்து, படின் - சேருவது, மருந்தாகி - எட்டிக்கனி, தப்பா - தவிராது, மரத்தற்றாற் - மரத்தடியில் கனிந்து வீழ்வதற்கொக்குமென்பது பதம்.

**(பொ.)** திரவியமானது பேராசை உடையோனிடத்து சேருவது எட்டிக்கனி தவிராது மரத்தடியில் கனிந்து வீழ்வதற்கு ஒக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** உலோபியி னிடத்துப் பொருள் சேருவது எவ்வகையாக விளங்குமென்னில் எட்டி மரத்தடியில் கனிகள் வீழ்ந்து குப்பல் சேர்வது போலாம் என்பது கருத்து.

**(வி.)** சருக்கரையைக் கையிலேந்தி மருந்தென்றுகூறி கொடுப்பதாயின் கசக்குமென்று பயந்து எட்டி அகல்வது இயல்பாதலின் எட்டி என்னும் மருந்தாய கனி ஏராளமாக மரத்தடியில் வீழ்ந்திருப்பினும் அக்கனி எச்சீவர்கள் உணவிற்கும் உதவாததுபோல

பேராசையுடையோனிடம் படியுந் திரவியமானது பல்லோருக்கும் பயன்படாது என்பதற்கு ஒக்கப் பழமொழி "எட்டிப்பழுத்தாலென்ன ஈயாதவன் வாழ்ந்தாலென்ன என்பது விரிவு,

ஒட்தி நிகண்டில் எட்டி யென்பதற்குப் பொருள் கசப்பு, மருந்து, என்னும் பொருளைத் தரும்.

**8. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்**

**கடனறி காட்சி யவர்.**

**(ப.)** இடனில் - தனக்கு வாசஞ்செய்ய யிடமில்லாத, பருவத்து - காலத்தினும், மொப்புரவிற் - ஒப்பிய வுரவினர்க்குச் செய்யும் உபகாரத்தில், கொல்கார் - களாமாட்டார்கள், கடனறி - தான் செய்ய வேண்டிய செயலினை யுணர்ந்த, காட்சியவர் - நற்காட்சி யுள்ளவர்களென்பது பதம்.

**(பொ.)** தனக்கு வாசஞ்செய்ய இடமில்லாதகாலத்தும் ஒப்பிய உரவினர்க்குச் செய்யும் உபகாரத்தில் தளரமாட்டர்கள், தான் செய்யவேண்டிய செயலினையுணர்ந்த நற்காட்சியுள்ளவர்கள் என்பது பொழிப்பு.

**(க.)** தான் வசிப்பதற்கு இல்லிடம் இல்லாவிடினுந் தனதீகையின் பயனை காட்சியால் அறிந்தவர்கள் ஒப்பிய உரவினர்க்கீயும் உபகாரங்களில் தளர்வடையார்கள் என்பது கருத்து.

**(வி.)** தாங்கள் தங்கியிருப்பதற்கு சுகமாய இல்லம் இல்லாதக் காலத்தினும் தன்மத்தின் பயனைக் காட்சியில் அறிந்தவர்கள் சருவசீவர்களுக்கும் உபகாரிகளாக விளங்குவார்கள் என்பது விரிவு.

**9. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயு நீர்மெ**

**செய்யா தமைகலா வாறு.**

**(ப.)** நயனுடையா - கருணை நிறைந்தவன். னல்கூர்ந்தானாதல் சகலராலும் நல்லவனெனப் போற்றுதற்கு, செயுநீர்மெ - செய்யு முபகாரச்செயலில், செய்யா - தவிராது, தமைகலாவாறு - நிலைத்து நிற்றல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** கருணை நிறைந்தவன் சகலராலும் நல்லவனென்று போற்றுதற்கு செய்யும் உபகாரச்செயலில் தவிராது நிலைத்து நிற்றல் வேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** கருணை நிறைந்த சகலராலும் போற்றத்தக்க உபகாரியானவன் அவ் வுபகாரச்செயலைத் தவிராதமைத்து நிற்றல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** சீவகாருண்யம் நிறைந்தவன் தனக்குள்ளக் காருண்யச்செயல் சீவர்களுக்கு வுபகாரியாக விளங்குதலால் அக்காருண்யன் என்னும் பெயரை சகலராலுங் கொண்டாடுவதற்காகும். அவ்வகையிற்

கொண்டாடப்படுவோன் தனதுபகாரச் செயலை மாறாது நிலைக்கச் செய்ய வேண்டும் என்பது விரிவு

**10. ஒப்புரவி னால்வருங் கேடனி னஃதொருவன்**
**வித்துக் கோட்டக்க துடைத்து.**

**(ப.)** ஒப்புரவினால் - ஒப்பிய வுரவினருக்குச் செய்யு முபகாரத்தால், வரும் - வருவது கேடனி - தீங்கேயாயினும் , னஃதொருவன் - அவ்வுபகாரஞ் செய்பவன், விற்றுக் கோட்டக்க - தன்னுடைய பொருளைக் கொடுத்துவிட்ட தென்றெண்ணி, துடைத்து - அகற்ற வேண்டு மென்பது பதம்

**(பொ.)** ஒப்பிய உரவினருக்குச் செய்யும் உபகாரத்தால் வருவது தீங்கேயாயினும் அவ்வுபகாரஞ் செய்பவன் தன்னுடையப் பொருளைக் கொடுத்துவிட்டதென்று எண்ணி அகற்றவேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** உரவினருக்கும் அன்னியருக்குஞ் செய்யும் உபகாரத்தால் ஏதொரு தீங்கு விளையுமாயின் அவற்றை யங்ஙனே மறந்து தனது உபகாரச்செயலிலேயே நிற்றல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** தனது கருணைமிகுத்த உபகாரச்செயலால் தனதுரவினருக்கும் ஒப்பிய வுரவினருக்கும் ஏனைய சீவராசிகளுக்கும் செய்யும் உபகாரத்தால் பிரதியுபகாரந் தீங்காக நேரினும் அதனை மனதிற்

பதியவிடாது துடைத்து தனது பகாரச் சிந்தையிலேயே உறுதிபட நிற்றல் வேண்டும் என்பது விரிவு.

## 28. ஈகை

இல்லற ஒழுக்கமுள்ளோன் ஒப்புர வொழுகலில் ஆதுலருக்கும் பிணியாளருக்கும் திக்கற்றவர்களுக்கும் இல்லை என்னாது ஈய்ந்து உண்டி கொடுத்து உயிர்கொடுத்தலே மேலாய தன்மமாதலின் ஒப்புரவொழுகலின் பின்னர் அதற்கு உறுதியாம் ஈகையின் பயனை விளக்குகின்றார்.

1. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

**(ப.)** வறியார்க் - ஏழைகளுக்கு, கொன்றீவதே - உதவிபுரிவதே, ஈகை - உதவியாகும், மற்றெல்லாங் - மற்ற வுதவிகளெல்லாம், குறியெதிர்ப்பை ஓர்பயனைக் கருதி யுதவுதற்கு, நீர - நேரா, துடைத்து - உடையதாமென்பது பதம்.

**(பொ.)** ஏழைகளுக்கு உதவி புரிவதே உதவியாகும் மற்ற உதவிகளெல்லாம் ஓர் பயனைக்கருதி உதவுதற்கு நேராய் உடையதாம் என்பது பொழிப்பு.

**(க.)** ஏதுமற்ற ஏழைகளுக்கு ஈவதே ஈகையாகும் மற்றுமுள்ள ஈகைகள் யாவும் தாம் கோறும் ஓர்பயனைக்கருதி ஈயும் ஈகைக்கு

நேராயதாம் என்பது கருத்து.

**(வி.)** மநுமக்களுள் யாது தொழிலுஞ் செய்தற்கற்ற ஏழைகளுக்கும் பிணியடைந்து வருந்துவோருக்கும், திக்கற்ற வறியருக்கும் சீவகாருண்யங் கொண்டு உண்டி கொடுத் தாதரித்தலே உயிர் கொடுத்தற்கு ஒப்பாகும். மற்றும் கருணையும் அன்புமற்று ஈயும் ஈகையானது ஓர் பயனைக்கருதி ஈயும் ஈகைக்கு நேராதலின் அஃது பயன் தாராதென்று எண்ணிய பெரியோன் பிரிதி பலன் கருதாது காருண்யமிகுத் தீயுந் தானமே பயனுடைத்தாம் என்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் செல்வத்தைப் பெற்றோர் சினங்கடிந்து செவ்வியராய், பல்கிளையும் வாடாமற்பாத்துண்டு நல்ல, தானமறவாத தன்மெயரே லஃதென்பார், வானகத்து வைப்பதோர் வைப்பு" என்பது கொண்டு பிரிதிபலன் கருதாது ஈயும் ஈகையே ஈகை என்பது விரிவு.

**2. நல்லா ரெனினுங் கொளறீது மேலுலக**

**மில்லெனினு மீதலே நன்று.**

**(ப.)** நல்லாரெனினுங் - பிரிதிபலனை யளிக்கும் நல்லவர்களாயினும், கொளறீது - அவர்களிடமப்பலனைப் பெறுதல் கொடிய தாம், மேலுலகம் - வானராட்சியம், மில்லெனினும் - இல்லாவிடினும், மீதலே - தானஞ்செய்தலே, நன்று - நல்லதாமென்பது பதம்.

**(பொ.)** பிரிதிபலனை அளிக்கும் நல்லவர்களாயினும் அவர்களிடம் அப்பலனைப் பெறுதல் கொடியதாம். வானராட்சியம் இல்லாவிடினும் தானஞ்செய்தலே நல்லதாம் என்பது பொழிப்பு.

**(க)** தானத்தைப் பெற்றவர்கள் நல்லவர்களாய் இருந்து பிரிதிபலனைச்செய்ய அதனைப் பெறுவதாயின் அஃது செய்த தன்மத்திற்கே கேடாக முடிதலான் கொடி தென்று கூறி வானராட்சியம் இல்லை என்பதாயினும் ஈகையின் செயலே இனிய பயனளிக்கும் என்பது கருத்து.

**(வி.)** ஒருவர் செய்த நன்றியாம் நல் உபகாரத்தை மறவாத நன்றியறிதலுள்ள நல்லோர்கள் அவ்வீகைக்குப் பிரிதியீகை செய்யவும் அதைப் பெறுவதுமாயின் தான் உள்ளன்புடனும் உதாரத்துவத்துடனும் ஈய்ந்த ஈகையின் பயன் கெட்டுப்போகின்றபடியால் அதனைக் கொடியதென்றும் வானராட்சிய ஓர்பயனையுங் கருதாது ஈவதே ஈகை நலமாதலின் மேலுலகம் இல்லாவிடினும் வறியார்க்கு ஈவதே இனிதாம் என்பது விரிவு.

**3. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்**

**குலனுடையான் கண்ணே யுள்.**

**(ப.)** இலனென்னு - வறியார்க் கில்லையென்று, மெவ்வ - எவ்வகையானு, முரையாமெ - கூறாதவனாகி, யீதல் கொடுக்குஞ்செயலானது, குலனுடையான் - நல்ல குடும்பத்திற் பிறந்தவன், கண்ணே - இடத்தே,யுள் – உள்ளதாமென்பது பதம்.

**(பொ.)** வறியார்க்கு இல்லை என்று எவ்வகையானுங் கூறாதவனாகி கொடுக்குஞ்செயலானது நல்ல குடும்பத்துள் பிறந்தவனிடத்தே உள்ளதாம் என்பது பொழிப்பு.

**(க.)** வறிஞராம் ஆதுலர்களுக்கு இல்லையென்னாமல் ஈயும் இனிய குணமானது நல்ல குடும்பத்திற் பிறந்த நல்லோனிடத்துள்ளதாம் என்பது கருத்து.

**(வி.)** ஏதோர் பொருளுமில்லா ஏழைகளுக்கும், பிணியாளருக்கும் இனிய உதவியாம் பொருளை இல்லையென்னாமல் ஈயுங் குணம் நல்லக் குடும்பத்துள் பிறந்து வளர்ந்த நல்லோரிடத்தே உண்டாம் என்பது விரிவு.

**4. இன்னா திரக்கப் படுத விரந்தவ**
**னின்முகங் கானு மளவு.**

**(ப.)** இன்னா - யாதொரு பொருளுமிராது, திரக்கப்படுத - இரஞ்சி கேட்கப்படுதலை, விரந்தவ - இரக்கப்படுவோனது, நின்முகங் -

நேராய முகத்தை, காணும் - பார்க்குங்கால், மளவு - இல்லாநிலை விளங்கிப்போமென்பது பதம்.

**(பொ.)** யாதொரு பொருளும் இராது இரஞ்சி கேட்கப்படுதலை இரக்கப்படுவோனது நேராய முகத்தைப் பார்க்குங்கால் இல்லா நிலை விளங்கிப்போம் என்பது பொழிப்பு.

**(க)** ஒன்றுமில்லையென்று இரக்கவந்தவனது முகக்குறிப்பால் ஏதுமில்லாமலே இரக்கவந்தான் என்பதை எளிதிலறிந்துக் கொள்ளலாம் என்பது கருத்து.

**(வி.)** ஏதுமில்லாது இரக்கவந்தவனது குறிப்பை அவனுக்குள்ள ஆயாசத்தாலும் முகச்சோர்வினாலும் இல்லாமலே இரக்கவந்தான் என்பதை எளிதில் உணர்ந்து ஈவதே ஈகை என்பது விரிவு.

**5. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை**
**மாற்றுவா ராற்றலிற் பின்**

**(ப.)** ஆற்றுவா - ஆறுதலுள்ளோர், ராற்றல் - மற்றோரை யாறுதற்செய்தலி யாதெனில், பசியாற்ற - பசியாக்கினியை யாற்றலேயாம், லப்பசியை - அத்தகையப் பசியாக்கினியை, மாற்றுவா - அகற்ற வேண்டியவர்கள், ராற்றலிற்பின் - முன் ஆற்றிப் பின்பு தன் பசியை யாற்றிக்கொள்ள வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** ஆறதலுற்றுள்ளோர் மற்றோரை ஆறுதற் செய்தல் யாதெனில் பசியாக்கினியை ஆற்றலேயாம். அத்தகைப் பசியாக்கினியை அகற்ற வேண்டியவர்கள் முன்பு ஆற்றி பின்பு தன் பசியை ஆற்றிக்கொள்ள வேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** காலப்புசிப்பைக் காலத்திலுண்டு ஆறுதலுற்றுள்ளவர்கள் மற்றோரை ஆறுதற் செய்வதியாதெனில் பசியுள்ளோரையறிந்து முன்பு அவர்கள் பசியை ஆற்றி பின்பு தங்கள் பசியைத் தணித்துக் கொள்ளவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** சகல சுகப்புசிப்புக்களையும் உண்டு ஆற்றலுற்றுள்ள கனவான்கள் மற்ற ஏனைய வரியர்களையும் ஆற்றலுறச் செய்வது யாதெனில் அவர்கள் முகங்கண்டு பசியை ஆற்றி பின்னர் தங்கள் பசியைத் தணித்துக்கொள்ளுவதே ஈகையின் ஏதுவாம் என்பது விரிவு

**6. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்**

**பெற்றான் பொருள்வைப் புழி.**

**(ப.)** அற்றா - ஏதுமில்லாதவருக்கு, ரழிபசி - மரணத்தைத் தரக்கூடிய பசியை, தீர்த்த - ஆற்றிய, லஃதொருவன் - அவ்வொருவன், பெற்றான் - அடைந்தான், பொருள் - மெய்ப்பொருள், வைப்புழி - நிலையை யென்பது பதம்

**(பொ.)** ஏது மில்லாதவருக்கு மரணத்தைத் தரக்கூடிய பசியை ஆற்றிய அவ்வொருவன் அடைந்தான் மெய்ப்பொருள் நிலையை என்பது பொழிப்பு.

**(க.)** யாதுமற்ற ஏழைகளது மரணத்தைத் தரக்கூடிய பசியையாற்றிக் குளிரச்செய்த ஒருவன் தானடைய வேண்டிய மெய்ப்பொருள் நிலையைச் சார்ந்தான் என்பது கருத்து.

**(வி.)** உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோர் என்னும் முதுமொழிக் கிணங்க யாதுமற்ற ஏழைகளது பசியை மாற்றி உயிர் கொடுக்கக்கூடிய சீவகாருண்யமமைந்த ஒருவன் தோன்றுவானாயின் அவனது கருணைநிலையே மெய்பொருள் வைப்பாதலின் சீவர்களின் பசியை ஆற்றி ரட்சிப்போன் மெய்ப்பொருள் நிலையை அடைந்தானென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் 'ஒன்றாக நல்ல துயிரோம்ப லாங்கதன் பின், நன்றாய்தடக்கினார்க்கித்துண்டல் - என்றிரண்டுங், குன்றாப் புகழோன் வருகென்று மேலுலகம், நின்றது வாயிற்றிறந்து" பொருளெனல் மெய்ப்பொருள் வைப்புழி விரிவு.

**7. பாத்தூண் மா யவனைப் பசியென்னுந்**

**தீப்பிணி தீண்ட லரிது.**

**(ப.)** பாத்தூண் - பசித்தோர் முகம்பார்த் துணவை, மரீஇ - அளிக்கும், யவனை - ஒருவனை, பசியென்னும் - பசியாக்கினியாம்,

தீப்பிணி - கொடுநோய், தீண்டலரிது - அணுகாதென்பது பதம்.

**(பொ.)** பசிப்போர் முகம்பார்த்து உணவை அளிக்கும் ஒருவனை என்பது பொழிப்பு. பசியாக்கினியாம் கொடுநோய் அணுகாது என்பது பொழிப்பு

**(க)** கடும் பசியால் வருந்துவோனது முகம் பார்த்து உணவளிக்கும் ஒருவனுக்கு அத்தகையக் கடும்பசி அடையும் அரிய காலம் வாராது என்பது கருத்து.

**(வி.)** சீவகாருண்யமுள்ள ஒருவன் பசியுள்ளோன் முகங்கண்டு உணவளிக்குஞ் செயலால் அக்கருணைச் செல்வமே நிறைந்து சுகசீவியாக வாழ்தலால் பசியென்னுந் தீப்பிணி அவனை என்றும் அணுகாது என்பது விரிவு.

**8. ஈத்துவக்கு மீன்ப மறியார்கொறா முடைமே**

**வைத்திழக்கு வன்க ணவர்.**

**(ப.)** ஈத்துவக்கு - ஈய்ந்து காக்கும், மின்ப - சுகத்தை, மறியார்கொ - தெரிந்துக்கொள்ளாதோர், ராமுடைமெ தங்கட்பொருட்களை,வைத்திழக்கு - சேர்த்திழந்துவிடுவார், வன்கணவர் - இதக்கமற்ற நெஞ்சினர்களென்பது பதம்.

**(பொ.)** ஈய்ந்து காக்குஞ் சுகத்தைத் தெரிந்து கொள்ளாதோர் தங்கள் பொருட்களை சேர்த்து இழந்துவிடுவார், இதக்கமற்ற நெஞ்சினர்கள் என்பது பொழிப்பு.

**(க.)** ஏழைகளுக்கு உண்டி கொடுத்து உண்ணும் சுகமறியாது இதக்கமற்ற நெஞ்சினார்கள் சேர்க்குஞ் செல்வத்தைத் தாங்கள் அறியாமலே இழந்து விடுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** வரியார்களுக்கு உண்டி கொடுத்து உயிரளிக்குஞ் சுகத்தையும் புண்ணிய பலத்தையும் அறியாது பொருளைச் சேர்த்துவைக்குங் கடின சித்தத்தையுடையவர் தாங்கள் தேடிய பொருளை தங்களை அறியாமலே இழந்துவிடுவார்கள் என்பது விரிவு

**9. இறத்தலி னின்னாது மன்ற நிரப்பிய**
**தாமே தமிய ருணல்.**

**(ப.)** நிரப்பிய - செல்வம் நிறைந்து, தாமே - தான், தமிய - தனியே, ருணல் - புசித்தல், இறத்தலி - மரித்தோனென்று, னின்னாது மன்ற – சொல்லுதற் கொப்பானவனே என்பது பதம்.

**(பொ)** செல்வம் நிறைந்து தான் தனியே புசித்தல் மரித்தோனென்று சொல்லுதற் ஒப்பானவனே என்பது பொழிப்பு

**(க.)** வேணசெல்வம் நிறைந்திருந்தும் தன்மட்டில் புசித்து சுகிப்பவன் இ றந்தவருள் ஒருவனாக எண்ணப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** உள்ள செல்வத்தை இன்று நாளை என்னாது சகலருக்கும் இட்டுண்டு சுகிப்பதே ஈகையின் இயல்பாதலின் நிறைந்த செல்வமிருந்து சகலருக்கும் இட்டுண்ணாது தானே புசித்து சுகிப்பவனுக்கும் மரணமடைந்தோனுக்கும் பேதமில்லை என்பதே விரிவு

**10. சாதலி னின்னாத லில்லை யினிததூஉ**

**மீத லியையாக் கடை.**

**(ப.)** சாதலி - மரணமடைதலினும், லின்னாத - கொடிய துன்பம், தில்லை - வேறொன்றுமில்லை, யினிததூஉ - மற்றுமினியதாகப் பொருள் சேர்த்தும், தே - ஈயுங் குணம், லியையா - இசையாதாயின், கடை - அதனினுங் கொடிதாமென்பது பதம்.

**(பொ.)** மரணமடைதலினும் கொடிய துன்பம் வேறொன்றுமில்லை. மற்றும் இனிதாகப் பொருள் சேர்த்தும் ஈயுங்குணம் இசையாதாயின் அதனினுங் கொடிதாம் என்பது பொழிப்பு.

**(க.)** மக்களுக்கு மரணமுண்டாவதே கொடிய துன்பமென்னப்படும். அதனினுங் கடையாய கொடிய துன்பம் ஆசையுடன் பொருள்

சேர்த்தும் ஈயுங்குணம் இசையாததே என்பது கருத்து.

**(வி.)** மரணமானது பிணியின் உபத்திரவத்தாலும் பஞ்சவவத்தையாலும் உண்டாய கொடிய துன்பமேயாயினும், செல்வத்தை இனிதாக சேர்த்தும் ஈயுங்குணம் எழாது அதை காப்பதுந் துன்பம், செலவழிவதுந் துன்பம், இழப்பதுந் துன்பமாகக்கொண்டழிவதால் ஈகையின் குணம் எழாதோன் மரண துன்பத்தினும் அதிக துன்பத்தை அனுபவித்தே தீருவான் என்பது விரிவு.

## 29. புகழ்

இல்லறத்தோன் மிக்க ஈகையுடன் வாழினும் அவைப் புகழ்பெற வாழ்தலே மேலாதலின் புகழ்வோர் நிலையையும் புகழ் பெறுவோன் பயனையும் இவ்விடம் விளக்குகின்றார்.

**1. ஈத லீசைபட வாழ்த லதுவல்ல**
**தூதிய மில்லை யுயிர்க்கு.**

**(ப.)** ஈத - வறியோர்க்கீவதில், லிசைபட - புகழ் பெற, வாழ்த - வாழ்வதே, லதுவல்ல - வஃதின்றி, தூதியம் - பயன், மில்லை - வேறில்லை, யுயிர்க்கு மனுடசீவர்களுக்கென்பது பதம்.

**(பொ.)** வறியோர்க்கு ஈவதில் புகழ்பெற வாழ்தலே நன்று. அஃதின்றி பயன் வேறில்லை மனுட சீவர்களுக்கு என்பது பொழிப்பு

**(க.)** ஏழைகளுக்கு ஈயுந் தன்மமானது அவர்களால் கொண்டாடும்படி ஈவதே நன்று. அதுவன்றி ஈயும் மக்களுக்கு மற்றோர் பயனுமில்லை என்பது கருத்து.

**(வி.)** ஈவோர் ஈயுஞ் செயலில் மிக்கோர் என்றும் நல்லவர் என்றும் வறியோர்களால் புகழத்தக்கக் கருணையின் செயலே நன்றாதலின் அக்கருணையி னிலையே காரணமாகக் கொண்டு ஈவோன் மிருதுவாக்கிற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "கொடுப்பான் வினையல்லன் கொள்வானுமல்லன், கொடுக்கப்படும் பொருளுமன்றால் - அடுத்தடுத்து, நல்லவையாதாங்கொல் நாடியுரையாய் நாப்பண் நயந்து என்பது விரிவு

**2. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்**
**றீவார் மேனிற்கும் புகழ்.**

**(ப.)** உரைப்பா - சொல்லும்படியானவர்கள், ருரைப்பவை - சொற்கள், யெல்லா - யாவும், மிரப்பார்க்கொன் - வறியார் கேட்கு மொன்றை, றீவார் - கொடுப்பவரை, மேனிற்கும் - சார்ந்தே நிற்கும், புகழ் - கீர்த்தி யென்பது பதம்.

**(பொ.)** சொல்லும்படியானவர்கள் சொற்கள் யாவும் வறியார் கேட்கும் ஒன்றை கொடுப்பவரை சார்ந்தே நிற்குங் கீர்த்தி என்பது பொழிப்பு

**(க)** புகழ்ச்சிபெற சொல்லும் சொற்கள் யாவும் ஏழைகள் கேட்குமொன்றை ஈவோனையே சார்ந்து நிற்கும் என்பது கருத்து.

**(வி.)** உலகமக்கள் புகழ்ந்து பேசும் வார்த்தைகளுள் ஏழைகள் கேட்கும் பொருளை இல்லையென்னாது ஈய்ந்து ரட்சிப்பவனது செயலையே பெரும்பாலுங் கொண்டுளதாம் என்பது விரிவு.

**3. ஒன்றாவுலகத் துயர்ந்த புகழல்லாற்**

**பொன்றாது நிற்பதொன் றில்**

**(ப.)** வுலகத் - உலகத்தினிடத்து, ஒன்றா - முதலாக, துயர்ந்த - சிறந்தது, புகழல்லாற் - கீர்த்தியே யன்றி, பொன்றாது - அதற்கொப்ப , நிற்ப - நிலையாக நிற்பது, தொன்றில் - வேறொன்றுமில்லையென்பது பதம்.

**(பொ.)** உலகத்தினிடத்து முதலாக சிறந்தது கீர்த்தியேயன்றி அதற்கொப்ப நிலையாக நிற்பது வேறொன்றும் இல்லை என்பது பொழிப்பு.

**(க.)** இல்லறத்தையே நல்லறமாகக்கொண்டொழுகும் மாக்கள் என்றும் அழியா புகழ்பெற வாழ்தலே வாழ்க்கை என்பது கருத்து.

**(வி.)** உலக வாழ்க்கையுள் முதலாக நிற்பது சிறந்த புகழ் ஒன்றேயாம் அப்புகழினும் வறியார்க்கு ஈய்ந்து ரட்சிக்கும் புகழே

ஒப்பற்ற அழியாப் புகழ் என்பது விரிவு

**4. நிலைவரை நீள்புக ழாற்றிற் புலவரை**

**போற்றாது புத்தே ளுலகு.**

**(ப.)** நிலவரை - பூமியினும், நீள் - பாதாளத்தினும், புகழாற்றிற் (கவியாறு புகழ்பெறினும், புலவரை - வித்வான்களை, போற்றாது - கொண்டாடாது, புத்தேளுலகு - புத்ததேவ னுலகென்பது பதம்.

**(பொ.)** பூமியினும் பாதாளத்தினும் கவியாற் புகழ்பெறினும் வித்வான்களை கொண்டாடாது புத்ததேவனுலகு என்பது பொழிப்பு.

**(க.)** மத்திய பாதாளம் வரைப் புகழத்தக்க நாற்கவிபாடினும் புலவரை சுவர்க்கமாம் வானராட்சியம் போற்றாது என்பது கருத்து.

**(வி.)** வறியார்க்கு ஈய்ந்து வருமெ அகற்றிக்கொள்ளுவோரையே புத்ததேவ னுலகாம் வானராட்சியம் புகழுமேயன்றி நாற்கவிபாடி பூவிலுள்ளோராலும் பாதாளத்துள் உள்ளோராலும் புகழ்பெறினும் வானுலகம் போற்றிப் புகழாது என்பது விரிவு.

**5. நத்தம்போற் கேடு முளதாகும் சாக்காடும்**

**வித்தகர்க் கல்லா லரிது.**

**(ப.)** நத்தம் போற் - இருளைப்போல, சாக்காடும் - மரணத்தின், கேடு - துன்பமானது, முளதாகும் - தன்னை மறைத்தலாகும்

(அத்தகைய துன்பமற்ற புகழ் ) வித்தகர்க்கல்லா - மெய்ஞ்ஞானப் புலவர்க்கன்றி, லரிது - மற்றயருக் கரிதாமென்பது பதம்.

**(பொ.)** இருளைப் போல் மரணத்தின் துன்பமானது தன்னை மறைத்தலாகும். அத்தகைய துன்பமற்ற புகழ் மெய்ஞ்ஞானப் புலவருக்கன்றி மற்றயருக்கு அரிதாம் என்பது பொழிப்பு.

**(க.)** இருளானது சகலவற்றையும் மறைத்து மயக்கிவிடுவது போல மரண துன்பம் தன்னை மயக்கும். அத்துன்பமயக்கத்தை ஜெயித்துப் புகழ் பெறுவோர் தெய்வப்புலவரன்றி ஏனையப்புலவர்களால் ஆகாது என்பது கருத்து.

**(வி.)** இருள்மூடி உலகத்தை மறைத்துவிடுவதுபோல மரண துன்பமானது தன்னை மறைத்துவிடுவது இயல்பாதலின் அத்தகைய மரண துன்பத்தை ஜெயித்துப் புகழ்பெறுவோர் தன்மபோதமும் மெய்ஞ்ஞானமும் நிறைந்த தெய்வப்புலவர்களேயன்றி சுவையற்றக் கவிபாடும் வித்தியாவிர்த்திகள் ஆகார் என்பது விரிவு.

**6. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்**
**தோன்றலிற் றோன்றாமெ நன்று.**

**(ப.)** தோன்றிற் - ஓர் காரியத்தைத் தொடுத்து வெளிதோன்றில், புகழொடு - அதனாலோர் கீர்த்தியுண்டாக, தோன்றுக - வெளிவரல் வேண்டும், அஃதிலார் அவ்வகையில்லாதோர், தோன்றலிற் -

அக்காரியத்தைக் தொடுத்து வெளிவருதலினும், றோன்றாமெ - உருதோன்றாதிருத்தலே, நன்று - நல்லதாமென்பது பதம்.

**(பொ.)** ஓர் காரியத்தைத் தொடுத்து வெளிதோன்றில் அதனாலோர் கீர்த்தியுண்டாக வெளிவரல்வேண்டும் அவ்வகையில்லாதோர் அக்காரியத்தைத் தொடுத்து வெளிவருதலினும் உரு தோன்றாது இருத்தலே நல்லதாம் என்பது

**(க.)** எதோர் காரியத்தைத் தொடுத்துச்செய்ய ஆரம்பித்தபோதினும் அதனால் ஓர் புகழுண்டாகச் செய்யல் வேண்டும். அத்தகை இல்லாவிடின் அக்காரியத்தைச் செய்யாமலிருப்பதே நன்று என்பது கருத்து.

**(வி.)** ஓர் காரியத்தைச் செய்யற்கு வெளிதோன்றிய கால் அக்காரியமானது சகல மக்களுக்கும் உபகாரமாயிருக்குமாயின் புகழைத்தரும், உபகாரமற்றிருக்கு மாயின் பயனில்லையென்பதைக் கண்ட பெரியோன் உபகாரமுற்றச் இதயவிலேயே தோன்றல் வேண்டுமென்றும் அத்தகைய உபகாரம் யாதொன்றும் இல்லாதாயின் அச்செயலில் தோன்றாமலிருப்பதே நன்றென்றுங்கூறிய விரிவு.

**7. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மெ**
**யிகழ்வாரை நோவ தெவன்.**

**(ப.)** புகழ்பட் - உபகாரி யென்னுங் கீர்த்தியுண்டாக, வாழாதார் - வாழ்க்கைப் பெறாதவர்கள், தந்நோவார் - தாங்களே துன்புறுவதுடன், தம்மெ - தங்களைக் கண்டு , யிகழ்வாரை - உலோபியென் றிகழ்வோரை, நோவதெவன் - பார்த்து வருந்துவோன் யாவனென்பது பதம்.

**(பொ.)** உபகாரி என்னுங் கீர்த்தி உண்டாக வாழ்க்கைப் பெறாதவர்கள் தாங்களே துன்புறுவதுடன் தங்களைக்கண்டு உலோபியென்று இகழ்வோரை பார்த்துவருந்துவோன் யாவன் என்பது பொழிப்பு.

**(க.)** தாங்களே மற்றோருக்கு உபகாரியாக வாழாமல் மற்றொரு உபகாரமற்று துக்கிப்பதுடன் தங்களை உலோபியென்று இகழ்வோரைக் கண்டு தான் துக்கிப்பதில் அவனுக்கு யாது பயன் கொல்லோ என்பது கருத்து.

**(வி.)** உலக மக்கள் தங்களுடைய சுக வாழ்க்கையில் ஏனைய மக்களையுஞ் சுகம் பெறச்செய்துப் புகழடையாது வாழ்வோர் தனக்கு ஏனையோர் உதவி உண்டாகாதிடத்து வருந்துவதுடன் தங்களையாதொரு உதவியுமற்றவன் என்று ஏனையோர் இகழக்கேட்டு அதனால் துக்கிப்பவனை எத்தகையோன் என்று கூறலாம் என்பது விரிவு.

**8. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு**

**மெச்சம் பெறாஅ விடின்.**

**(ப.)** மிசையென்னும் - புகழ்பேறென்னும், மெச்சம் - எஞ்சிய பயனை, பெறா அவிடின் - பெற்றுக்கொள்ளாவிடின், வையத்தோர்க்கெல்லா - சகலமக்களாலும், வசையென்ப - உலோபியென்னு மிழிச்சொல்லே யுண்டாமென்பது பதம்.

**(பொ.)** புகழ்பேறென்னும் எஞ்சிய பயனைப் பெற்றுக்கொள்ளாவிடின் சகலமக்களாலும் உலோபியென்னும் இழிச்சொல்லே உண்டாம் என்பது பொழிப்பு.

**(க.)** சகல மக்களுக்கும் உபகாரியாக விளங்கி மேலாயப் புகழை பெற்றுக்கொள்ளாவிடின் சகலராலும் உண்டாம் உலோபியென்னும் இழிச்சொல்லே துன்புறுத்தும் என்பது கருத்து.

**(வி.)** மநுமக்களென்னும் சிறந்த பிறப்பைப் பெற்றவர்கள் அச்சிறப்பைத் தங்கள் உபகாரத்தால் விளக்கிப் புகழ்பேறு பெறாவிடின் மனுக்களுள் மநுக்களாக பாவிக்காது போவதுடன் சகல மநுக்களாலும் உலோபியென்னும் வசைச்சொல்லாம் இழிவையும் அதனால் துக்கத்தையும் அனுபவிக்கவேண்டியது இயல்பாதலின் அவ்வசைச்சொல்லைக் கேட்டுத் துக்கிப்பதினும்

அச்சொல்லெழாமலும் துக்கிக்காமலும் உபகாரியென்னும் புகழ்பெற்று வாழ்வதே பயன் என்பது விரிவு.

**9. வசையலா வண்பயன் குன்று மிசையிலா**

**யாக்கை பொறுத்த நிலம்.**

**(ப.)** வசையலா - இழிய கூறுவது மட்டுமன்று, மிசையிலா - புகழற்ற, யாக்கை - உடலை, பொறுத்த - தாங்கிய, நிலம் - பூமியின், வண்பயன் - விளைவின் பலனும், குன்று - குறைந்து போமென்பது பதம்.

**(பொ.)** இழிய கூறுவது மட்டுமன்று புகழற்ற உடலைத் தாங்கிய பூமியின் விளைவின் பலனுங் குறைந்துபோம் என்பது பொழிப்பு.

**(க.)** ஈகையினது புகழற்றோனை உலோபி என்னும் வசைமொழி கூறுவதல்லாது அத்தகைய உலோபியின் உடலைத்தாங்கும் பூமியின் வளமுங் குன்றிப்போம் என்பது கருத்து.

**(வி.)** ஈதலென்னும் புகழற்றோனை உலக மக்கள் உலோபி என்னும் வசைமொழி கூறுவதல்லாது அவ்வுலோபி தங்கியிருக்கும் பூமியின் வளமுங் குன்றி தானியங்களும் விளைவில்லாமற் போம் என்பது விரிவு.

நாயன் கூறியுள்ள முதுமொழியினது அனுபவத்தை தற்காலமுள்ள உலோபிகளது செயல்களாலும் பூமிகளின் வளங் குன்றிவருங் காட்சியினாலுந்
தெரிந்துக் கொள்ளலாம்.

## 10. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய வாழ்வாரே வாழாதவர்.

**(ப.)** வசையொழிய - உலோபியென்னு மிழிமொழிபெறாது, வாழ்வாரே - வாழ்க்கைப் பெற்றோரே, வாழ்வா - சுகசீவிகளாக வாழ்வார்கள், ரிசையொழிய - ஈதலில்லாப் புகழகன்று, வாழ்வாரே - வாழ்பவர்களே, வாழாதவர் - சுகசீவவாழ்க்கையை யற்றவர்களென்பது பதம்.

**(பொ.)** உலோபியென்னு இழிமொழி பெறாது வாழ்க்கைப் பெற்றோரே சுகசீவிகளாக வாழ்வார்கள். ஈதலில்லாப் புகழகன்று வாழ்பவர்களோ சுகசீவவாழ்க்கையையற்றவர்கள் என்பது பொழிப்பு.

**(க.)** ஈதலென்னும் புகழ் பெற்று உலோபியென்னும் பெயரற்று வாழ்வோர்களே சுகசீவ வாழ்க்கையைப் பெறுவார்கள். உலோபியென்னும் பெயர்பெற்று ஈதலென்னும் புகழற்று வாழ்வோர்களோ சுகசீவ வாழ்க்கையைப் பெறார்கள் என்பது கருத்து.

**(வி.)** இறைக்குங்கிணறு சுரக்கும் என்னும் பழமொழிக்கிணங்க ஈவோனது செல்வம் என்றுங் குறையாது ஓங்குவதுடன் அவனது குணநலத்தால் வாழ்க்கையிலும் சுகசீவ வாழ்க்கையைப் பெறுவான், அங்ஙனமில்லா உலோபி தனது குணக்கேட்டினால் உள்ள செல்வமுமற்று சுகவாழ்க்கையுங் கெட்டு அல்லலடைவான் என்பது விரிவு

## 30. துறவியல்

பௌத்த தன்மத்தைச் சார்ந்த குடும்பியானவன் இல்லாளுடனிருந்து அறச்செயலை வழுவற நடாத்துவதில் கொல்லாவிரதத்து ஒழுகலால் சீவகாருண்யமிகுத்தும், பொய்யை அகற்றி வாழ்தலால் மெய்யென்னும் உண்மெ உணர்ச்சி தோன்றியும், களவு அகற்றி வாழ்தலால் பற்றுக்கள் சிலது அகன்றும், அன்னியர் தார இச்சையை அகற்றலால் காமாக்கினி குறைந்தும், மதியை கெடுக்கும் சுராபானங்களை அகற்றலால் நிதானமென்னும் விழிப்பிலிருந்து, இல்லறத்தோர் என்னும் பெயர் பெற்றவன் தனது விசாரிணை மிகுதியால் உலகத்தில் தோன்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்கு க்ஷணம் அழிந்து மாறுதலுறும் நிலையாமெயாதலின் நிலையுற்ற மெய்ப்பொருளைத் தன்னில்தான் உணர்ந்து ததாகதமாம் நிருவாணம் பெறுதற்கு இல்லறத்தை வழித்து துறவறமுற்று பௌத்த சங்கஞ் சேர்ந்து சீரற உடையணிந்து பிச்சா பாத்திரங் கையிலேந்தி

உண்மெய்யில் அன்பை வளர்த்திக் கடைத்தேறுமாறு நிலையாமெயை விளக்குகின்றார்.

**1. நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்**
**புல்லறி வாண்மெ கடை.**

**(ப.)** நில்லாதவற்றை - என்றும் நிலையில்லாப் பொருட்களை, நிலையின என்றும் உள்ளதென, வென்றுணரும் - எண்ணியிருக்கும், புல்லறி - அறிவற்றவன், வாண்மெ - மநுடரூபியாயினும், கடை- புற்பூண்டுக் கொப்பானவ னாவானென்பது பதம்.

**(பொ.)** என்றும் நிலையில்லாப் பொருட்களை என்றும் உள்ள தென அன்ணியிருக்கும் அறிவற்றவன் மநுடரூபியாயினும் புற்பூண்டுக்கு ஒப்பானவனாவான் என்பது பொழிப்பு

**(க.)** தோன்றி தோன்றி அழியும் பொருட்களைக் கண்ணினாற் கண்டிருந்தும் அதனை அழியாதென்றுணரும் அறிவற்றவன் மநுட ரூபியாயினும் கடை பிறவியாம் புற்பூண்டுகளுக்கு ஒப்பானவனாவான் என்பது கருத்து.

**(வி.)** பூமியின் கண் தாபரவர்க்கம் முதல் தோற்றமாயினும் செயலின் சிறப்பில் தேவர், மக்கள், விலங்கு, பட்சி, ஊர்வனம், நீர்வாழ்வனம், தாபரமென்னும் எழுவகைத் தோற்றங்களுள் தேவர்களை முதலாகவும் தாபரங் கடையாகவும் வகுத்துள்ளது

கொண்டு இரண்டாவது சிறந்த மநுவுருவனாயினும் அழியும் பொருட்களை அழியாதென்று உணரும் அறிவிலியாயின் கடை தோற்றமாம் புற்பூண்டுகளுக்கு ஒப்பானவனாவான் என்பவற்றிற்குச் சார்பாய் நீதி நூல் விவேகசிந்தாமணியார் "ஈயாரை யீயவொட்டானிவனுமீயா னெழு பிறப்பினுங் கடையா மிவன்பிறப்பே" என்பது விரிவு.

**2. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கு மதுவிளிந் தற்று.**

**(ப.)** கூத்தாட - கழைக்கூத்தாடியின், டவைக்குழாத் - சப்தங் கேட்டவுடன் கூட்டங்கூடி, தற்றே - நின்றவுடன் கலைந்து போவதுபோல, பெருஞ்செல்வம் - திரண்ட திரவியஞ் சேரினும், போக்கு - போகுங்கால், மதுவிளிந்தற்று - அங்கு பார்த்த கூட்டம் போல் நிலைக்காமற் போமென்பது பதம்.

**(பொ.)** கழைக் கூத்தாடியின் சப்தங்கேட்டவுடன் கூட்டங்கூடி நின்ற வுடன் கலைந்துபோவதுபோல திரண்ட திரவியஞ் சேரினும் போகுங்கால் அங்கு பார்த்தக்கூட்டம் போல் நிலைக்காமற்போம் என்பது பொழிப்பு

**(க.)** மாய செல்வஞ் சேர்ந்திருப்பினும் அஃது போகுங்கால் கழைக்கூத்தாடியின் சப்தங் கேட்டு பெருங்கூட்டங் கூடி ஆட்டம்

நின்றவுடன் ஓராளும் இல்லாமற் போய்விடுவதுபோல் பெருஞ்செல்வமும் நிலைக்காமல் போய்விடும் என்பது கருத்து.

(வி.) கழைக்கூத்தாடியின் சப்தங் கேட்டவுடன் பெருங்கூட்டங்கள் வந்து சூழவிருந்தும் அக்கழைக்கூத்தன் ஆட்டம் நின்றவுடன் அங்கொருவரும் நிலைக்காமற் போய்விடுவது போல பெருஞ்செல்வம் சேர்ந்திருந்த போதினும்
போகுங்கால் ஏதும் நிலைக்காமற் போய்விடும் என்பது விரிவு

**3. அற்கா வியல்புற்று செல்வமது பெற்றா**
**லற்குப வாங்கே செயல்.**

**(ப.)** வியல் புற்று - தனது முயற்சியால், அற்கா - நிலையற்ற, செல்வமது - திரவியத்தை பெற்றா - சேகரித்தபோதினும், லற்குப - அதற்குத்தக்க உபகாரத்தை,
வாங்கே - அங்ஙனே, செயல் - செய்யவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** தனது முயற்சியால் நிலையற்ற திரவியத்தை சேகரித்த போதினும் அதற்குத்தக்க உபகாரத்தை அங்ஙனே செய்யவேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** செல்வமானது நிலையற்றதாயினும் நன்முயற்சியால் அஃதை சேகரித்தவன் நல் உபகாரத்தால் அவற்றை செலவு செய்ய வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அற்கா , காலற்றவென்னும், நிலையற்ற செல்வத்தைத் தனது நன்முயற்சியாம் இயல்பிலேயே சேகரித்த ஒருவன் அதனை வரியருக்கும் நல்விருத்திச் செயல்களுக்கும் உதவல் வேண்டு மென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம் "ஈட்டியவொண்பொருளு மில்லொழியும் சுற்றத்தார், காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர் - மூட்டு, மெரியினுடம் பொழியும் ஈரங்குன்றநாட தெரியி ன்றமேதுணை என்பது கண்டு ஈதலும் ஏற்றலுமாய துறவறம் விளங்கவேண்டும் என்பது விரிவு.

**4. நாளென வொன்று போற் காட்டி யுயிரீரும்**

**வாள துணர்வார்ப் பெறின்.**

**(ப.)** நாளென - வாழ்நாட்களென்றும், வொன்றுபோற் - நிலையுள்ளது போல், காட்டி - நின்று, யுயிரீரும் - உயிர்போய்விடுமாதலின், பெறின் - உயிர் நிலைக்கவேண்டின், வாள - தனது வாழ்நாளை, துணர்வார் - உள்ளுணர்வில் நிலைத்தல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** வாழ்நாட்க ளென்றும் நிலையுள்ளதுபோல் நின்று உயிர் போய்விடுமாதலின் உயிர் நிலைக்கவேண்டின் தனது வாழ்நாளை உள்ளுணர்வில் நிலைத்தல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** தனது வாழ்நாளானது நிலையாயுள்ள வொன்றுபோல்காட்டி உயிர்போய்விடுமாதலின் அவ்வுயிரினைப் போகாது தன்னைக் காப்போர் நிலையாய உணர்வால் உண்மெயில் அன்பை வளர்த்தல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** வாழ்நாளானது என்றும் நிலையாயுள்ள வொன்றுபோல்காட்டி உயிர் நீங்கி விடுவது இயல்பாதலின் அவ்வகை நீங்காது உயிர் நிலைப்பெற வேண்டுவோர் தங்களது வாழ் நாள் உணர்வையும் அன்பையும் உணமெய்யில் வளர்த்த வேண்டு மென்பது விரிவு.

**5. நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை**
**மேற்சென்று செய்யப் படும்.**

**(ப.)** நாச்செற்று - வாயடங்கி, விக்குண் - பிராணயிடையூறு, மேல் - தன்னை நோக்கி, வாராமு - வருவதற்குமுன், நல்வினை - துறவறச்செயலை, மேற்சென்று - முநிந்துபோய், செய்ய - செய்வதாயின், படும் - பயமகன்று போமென்பது பதம்.

**(பொ.)** வாயடங்கிப் பிராண இடையூறு தன்னை நோக்கி வருவதற்குமுன் துறவறச்செயலை முநிந்துச் செய்வதாயின் பயமகன்றுப்போம் என்பது பொழிப்பு

**(க)** கண்பஞ்சடைந்து கடைவாய் வீழ்ந்து பிராணாவத்தை அடைவதற்குமுன் துறவற நெறியைக் கடைபிடித்து ஒழுகுவதாயின்

அப்பிராணாவத்தையின் பயம் பட்டுப்போம் என்பது கருத்து.

**(வி.)** நல்வினையாம் துறவறச்செயலில் வழுவறநின்று புறப்பற்று அகப்பற்று ஒழிக்கும் நிட்டையிலிருப்போருக்கு மரணபயமில்லையாதலின் நாவிழுந்து பிராண இடையூறு வருவதற்கு முன்பு நல்லறமாந் துறவறத்தைக் கடைபிடித்து ஒழுகும் நன்வினைச்செயலில் சதா நிற்றல் வேண்டும் என்பது விரிவு.

**6. நெருன லுளனொருவ னின்றில்லை யென்னும்**
**பெருமெ யுடைத் திவ்வுலகு.**

**(ப.)** நெருன - தன்னையடுத்து, லுளனொருவ - உள்ள வொருவன், னின்றில்லை - இன்றே யில்லாமற் போனான், யென்னும் - என்று கூறும், பெருமெ - தடித்த யாக்கையை, யுடைத்திவ்வுலகு - உலகம் உடைத்தாயுள்ள தென்பது பதம்.

**(பொ.)** தன்னை அடுத்து உள்ளவொருவன் இன்றே இல்லாமற் போனான்யை உலகம் உடைத்தாயுள்ளது என்பது பொழிப்பு.

**(க.)** இன்று என்னுடனிருந்தான் இன்றே இறந்தானென்னும் பெருத்த உடலை தோற்றவைத்துள்ளது உலகமென்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் தோற்றியுள்ள பெருத்த உடலானது இன்று என்னுட னிருந்தான் கிடந்தான் தன்கேள் அலறச் சென்றான் என்னும்

நிலையற்றுள்ளதை நிலையென்று எண்ணிக்காம வெகுளி மயக்கங்களை பெருக்கலாகாது என்பது விரிவு.

**7. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப**
**கோடியு மல்ல பல.**

**(ப.)** கோடியுமல்லபல - பலகோடி மக்களையும், கருதுப் - உணருங்கால், ஒருபொழுதும் - முக்காலத் தொருகாலும், வாழ்வ - நிலையாக வாழ்ந்தவரை, தறியார் - கண்டிருக்கமாட்டர்க ளென்பது பதம்.

**(பொ.)** பலகோடி மக்களையும் உணருங்கால் முக்காலத்து ஒருகாலும் நிலையாக வாழ்ந்தவரைக் கண்டிருக்கமாட்டார்கள் என்பது பொழிப்பு

**(க.)** பலகோடி மக்களது வாழ்க்கைகளையும் உய்த்துணர்ந்து நோக்குங்கால் நிலையாக வாழ்ந்திருப்பவர்கள் ஒருவரையுங் கண்டிருக்க மாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** செல்காலம், நிகழ்காலம், வருங்காலமென்னும் முக்காலங்களில் ஒருகாலத்தேனும் பலகோடி மக்களுள் ஒருவரேனும் நிலையாக வாழ்ந்தவரைக் கண்டிரார்களென்பதைக் கருதிப்பார்க்க விளங்கும் என்பது விரிவு.

**8. குடம்பை தனித்தொழியப் புப்பறந் தற்றே**

**யுடம்போ டுயிரிடை நட்பு**

**(ப.)** குடம்பை - முட்டை வோடானது - தனித்தொழிய - தனியே யகல, புட்பறந் - பட்சி பறந்து, தற்றே - நீங்கிவிடுவதுபோல, யுடம்போ - உடலோடாடிய , டுயிரிடை - மனோ தத்துவத்தினது, நட்பு - நேயமென்பது பதம்.

**(பொ.)** முட்டை ஓடானது தனியே அகல பட்சி பறந்து நீங்கி விடுவது போல உடலோடு ஆடிய மனோரதத்தின் நேயம் என்பது பொழிப்பு.

**(க.)** முட்டையிலுள்ள பட்சியானது பறந்துபோய்விட் முட்டையோடு தனியேயொழிவதுபோல் உடலோடாடு மனோதத்துவம் அகல உடலும் ஒழிந்து நிலையில்லாமற்போம் என்பது கருத்து.

**(வி.)** முட்டையை முட்டையென்று கூறுவாரேயன்றி முட்டையுள் பட்சியென்று கூறுவோரில்லை. அம் முட்டையிற் பட்சி பறந்து வெளிபோன்ற போது முட்டையென்னும் பெயரற்று ஓடென்னும் நிலையற்றழிவதுபோல் உடம்பை உடம்பென்று கூறுவாரேயன்றி உடம்புள் உயிரென்று கூறுவாரில்லை. அவ்வுடம் போடாடிய உயிர்நிலையாம் மனோதத்துவம் அகன்றபோது உடம்பென்னும் பெயரற்று பிணமென்னும் நிலை இல்லாமற் போம் என்பது விரிவு.

**9. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி**

**விழிப்பது போலும் பிறப்பு.**

**(ப.)** உறங்குவது - தூங்குவது, போலும் - போல, சாக்கா - மரணமுண்டாதலும், டுறங்கி - தூங்கி, விழிப்பது - எழுந்திடுதல், போலும் - போலவும், பிறப்பு - தோற்றமுமென்பது பதம்.

**(பொ.)** தூங்குவதுபோல் மரணம் உண்டாதலும் தூங்கி எழுந்திடுதல் போல் தோற்றமும் என்பது பொழிப்பு

**(க.)** உலகத்தில் தோற்றும் பொருட்கள் யாவும் தோன்றி தோன்றி நிலையற்று மறைவது இயல்பாதலின் தூங்குவதே மரணத்திற்கு ஒப்பாயதென்றும் தூங்கிவிழிப்பதே பிறப்பிற்கு ஒப்பாயதென்பதுங் கருத்து.

**(வி.)** தூங்கினேன் தூங்கினேனென்பது நித்திய நிறையாம் மரணத்திற்கு ஆளாக்கி நிலைகெடச் செய்கின்றபடியால் நிலையாமெயாம் உடலம் தூங்கினானென்னும் மறைவையும் விழித்தானென்னும் பிறவியையும் விளக்கிய விரிவு.

**10. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்**

**டுச்சி விருந்த வுயிர்க்கு**

**(ப.)** வுடம்பினுட் - தேகத்தினது, டுச்சி - சிரசில், லிருந்த - தங்கி யொளிரும், வுயிர்க்கு - மனவொளிவுக்கு, புக்கி - நிலை புகுந்து,

லமைந்தின்று - அடங்குவதன்றோ நிலைமெய், கொல்லோ - சொல்லுவாயென்பது பதம்.

**(பொ.)** தேகத்தினது சிரசில் தங்கி ஒளிரும் மன ஒளிவுக்கு நிலை புகுந்து அடங்குவதன்றோ நிலைமெய் சொல்லுவாய் என்பது பொழிப்பு.

**(க.)** உடலுக்கு சிரசே பிரதானமாகி அங்கு நின்று ஒளிரும் உயிர் நிலையை அங்ஙனே கண்டு அடங்குவதே நிலைமெய் என்றும் அவ்வகை அடங்காமெய் நிலையாமெய் என்பது கருத்து.

**(வி.)** ஆசையால் தோற்றுவதே பாசமென்னும் உடலாகவும் அதுவதுவாய் உலாவுவதே பசுவென்னும் உயிராகவும், அது ஒளிரும் உச்சியினது நிலைகண்டு ஒடுங்கும் நிலைமெய்யே பதியாகவுங்கண்ட பெரியோன் பயிரங்க உடலாந் தோற்றத்தை நிலையாமெயென்றும் அதன் உச்சியினுள் ஒடுங்கி பதிவதையே நிலை மெய்யாம் மெய்ப்பொருளென்றுங் கூறியுள்ளற்குச் சார்பாய் ஞானக்கும்மி "உச்சிக்கு நேரே வுண்ணாவுக்குமேல்நிதம், வைச்ச விளக்கே யெறியுதடி
அச்சுவிளக்கதே வாலையடி அவியாமலெறியுதுஞானப்பெண்ணே " என்றும், கடவுளந்தாதி "மெய்ப்பொருளுச்சிக்குளுச்சிதாகவிருக்குமப்பா, வைப்பினின்

மாணிக்கப் பொக்கிஷமே மணிமாமகுடச், செப்புக்குளேற்றுத் திருவிளக்குள்ளொளி தீபமது, கைப்பொருடன்னினு மெய்ப்பொருளாமது கண்டவர்க்கே" பட்டினத்தார் பூரணமாவை "பாசமுடலாய்ப் பசுவதுவுந்தானுயிராய் , நேசமுடநிபொருளாய் நின்றனையே பூரணமே என்பது கொண்டு நிலையாயமெயாம் பொய்ப்பொருள் காட்சியையகற்றுங்கால் நிலையாய மெய்ப்பொருள் ஏதேனும் உண்டோவென்னும் வினாவெழுஉ மென்று எண்ணி நிலைமெய்யை விளக்கிய விரிவு.

## 31. ஊழ்

ஊழ் என்பது நல்வினை தீவினைகளது பயனிலை. தீச்செயலாம் தீவினைக்கு உட்பட்டவன் இல்லறவியல் மாளாதுன்புற்று, மாறிமாறி பிறக்கும் பிறப்பினால் முற்பிறப்பிற் செய்த தீவினையின் பயனை இப்பிறப்பில் அவனவன் செய்யும் முயற்சி கூடுவதிலுங் கெடுவதிலும் அறிந்துக் கொள்ளுவது போல், தோற்றும் பொருட்கள் யாவும் நிலையில்லாததென்று உணர்ந்து புத்தசங்கஞ் சேர்ந்த துறவிதான் முற்பிறப்புற் செய்த நல்வினைப்பயனால் சத்திய சங்கஞ் சேர்ந்து சமண நிலையைப் பெற்று, அதனின்று நல்வினையை தினேதினே பெருக்கிப் பிறவித் துன்பத்தை நீக்கிக் கொள்ள வேண்டுமென்னும் உறுதி பெறுதற்காய் நல்வினை தீவினையாம் ஊழினை விளக்கலானார்.

## 1. ஆகூழாற் றோன்று மசைவின்மெ கைப்பொருள்
## போகூழாற் றோன்று மடி

**(ப.)** அசைவின்மெ - நிலையாய மெய்ப்பொருள், ஆகூழாற் - ஆகக்கூடு முயற்சியால், றோன்று - காணப்படும், கைப்பொருள் - தான் முயன்று சேகரித்தப் பொருள் போகூழாற் - தன்னை யறியாமற்போகுஞ் செயல்போல், றோன்றும் - விளங்கும், மடி - நிலையமென்பது பதம்.

**(பொ.)** நிலையாய மெய்ப்பொருள் ஆகக்கூடும் முயற்சியால் காணப்படும். தான் முயன்று சேகரித்தப் பொருள் தன்னையறியாமற் போகுஞ் செயல்போல் விளங்கும் நிலையம் என்பது பொழிப்பு

**(க.)** தானே முயன்று சேகரித்தக் கைப் பொருள் தன்னை அறியாது ஒழிந்து விடுவது போல தான் சேகரிக்க முயன்ற நல்வினையாம் அசைவிலா மெய்ப்பொருட் காட்சி தன்னை அறியாது தானேதானாக விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** தானேதானே இடைவிடாது பயின்று வந்த நல்வினையின் பயனாய மெய்பொருட்காட்சித் தானே தானாகவிளங்கும். அஃதெவ்வகையால் என்னில் தானே தானே முயன்று சேகரித்தப் பொருள் தன்னையறியாது அகன்று விடுவது போல என்பது விரிவு.

## 2. பேதை படுக்கு மிழவூழறிவ கற்று

**மாகலூ பற்றக் கடை.**

**(ப.)** பேதை - அஞ்ஞானியானவன், படுக்கு - தோய்ந்து நிற்கும், மிழலூழ் - கெடுவினையானது, ழறிவகற்று - விவேகத்தைக் குறைப்பதன்றி, மாகலூ - இ னியாகவேண்டிய நல்வினை யேதுக்கும், ழுற்றக்கடை - இல்லாது இழி பிறவியிற் சேர்ப்பிக்குமென்பது பதம்.

**(பொ.)** அஞ்ஞானியானவன் தோய்ந்து நிற்கும் கெடுவினையானது விவேகத்தைக் குறைப்பதன்றி இனியாகவேண்டிய நல்வினை ஏதுக்கும் இல்லாது இழிபிறவியிற் சேர்க்கும் என்பது பதம்.

**(க.)** அறிவற்றவன் செய்துவருங் கொடுவினைகளால் உள்ள அறிவுங் கெடுவதுடன் இனி மேற்பிறவிக்கு ஏகும் நல்வினைக்கு ஏதுவின்றியுந் தாழ்ந்த நிலையே அடைவான் என்பது கருத்து.

**(வி.)** அறிவற்று தனது மனம்போனவாறு செய்துவரும் கொடிய வினைகளால் உள்ள அறிவும் பாழாகிவிடுவதுடன் மாளாபிறவி துக்கத்திற்கு ஆளாகுந் தாழ்ந்த கடைநிலையையும் அடைவானென வருந்திக் கூற வேண்டியதியாதெனில் பூமியினின்று நல்லே துவால் புற்பூண்டுகள் தோன்றி, புற்பூண்டுகளினின்று புழுக்கீடாதிகள் தோன்றி, புழுக்கீடாதிகளினின்று ஊர்வனங்கள் தோன்றி, ஒல வனங்களினின்று மட்சம் பட்சிகள் தோன்றி, மட்சம் பட்சிகளினின்று மிருகாதிகள் தோன்றி, மிருகாதிகளினின்று மக்கள் தோன்றி,

மக்களினின்று தேவர்கள் தோன்றி, மேனோக்குதற்குக் காரணம் விவேகமிகுதியால் உண்டாம் நல்வினையே ஆதலின் அவற்றை மறந்து விவேகக்குறைவால் மாளாக் கொடுவினைகளையே செய்வோன் மேனோக்கும் சுகநிலையற்று கீழ்நோக்காம் தாழ்ந்த பிறவியிற் சுழன்று தீராதுக்கத்திற்கு ஆளாக்குங் கொடுவினைப்பயனை சங்கஞ்சேர்ந்து மேநோக்குவோனுக்கு விவரித்த விரிவு. அறநெறிச்சாரம் "இறந்த பிறப்பாற்றான் செய்தவினையைப் , பிறந்த பிறப்பாலறிக - பிறந்திருந்து, செய்யும் வினையா வறிகவினிபிறந், தெய்தும் வினையின் பயன்.

**3. நுண்ணிய நூற்பல கற்பினு மற்றுந்தன்**
**னுண்மெ யறிவே மிகும்.**

**(ப.)** நுண்ணிய - அறிவை வளர்க்கும் நுட்பமாகிய, நூல்பல - பலநூற்களை, கற்பினு - வாசிக்கினும், மற்றுந்தன் - தான் கற்றுவிட்ட, லுண்மெயறிவே - விவேகநுட்பமே, மிகும் - மேலாக வளருமென்பது பதம்.

**(பொ)** அறிவை வளர்க்கும் நுட்பமாகிய பல நூற்களை வாசிக்கினும் தான் கற்றுவிட்ட விவேக நுட்பமே மேலாக வளரும் என்பது பொழிப்பு.

**(க.)** அறிவை வளர்க்கும் பலவகையான நூற்களைப் படித்தபோதினும் தன் அறிவை வளர்த்துவிட்ட குறைவே மேனோக்கி வளரும் என்பது கருத்து.

**(வி.)** ஒருவன் தனது அவாவின் மிகுதியால் பலவகையான கலை நூற்களைக் கற்கினும் தான் முற்பிறவியில் கற்றுவிட்டக்குறைவே இப்பிறவியில் தொடர்ந்து மேலாக வளரும் என்பது விரிவு.

**4. இருவே றுலகத் தியற்கை திருவேறு**
**தெள்ளிய ராதலும் வேறு.**

**(ப.)** வேறுலகத்தியற்கை - நல்வினையினியல்பா லுலகத்தில் தோன்றுவது, இரு - இரண்டுவகைப்படும், திருவேறு - செல்வந்தனாக வாழ்தலொன்று, தெள்ளியராதலும் - விவேகமிகுத்த ஞானிகளாதலாகிய, வேறு - மற்றொன்றுமேயாமென்பது பதம்.

**(பொ.)** நல்வினையின் இயல்பால் உலகத்தில் தோன்றுவது இரண்டு வகைப்படும், செல்வந்தனாக வாழ்தல் ஒன்று விவேகமிகுத்த ஞானிகளாதலாகிய மற்றொன்றுமேயாம் என்பது பொழிப்பு

**(க.)** உலகத்தில் நல்வினைப்பயனால் தோற்றுவோர் செல்வமுடையோ ரொருவரும் விவேகமிகுத்த ஞானிகளொருவருமாகிய இருவர்களுமேயாம் என்பது கருத்து.

**(வி.)** உலகத்தில் உடலெடுத்த மக்கள் தங்களது நல்வினைப்பயனால் இரு வகை சுகங்களை அனுபவிக்கின்றார்கள். அதாவது செல்வத்தைப் பெற்று அதனால் கிஞ்சித்து சுகமடைவோரும், விவேகமிகுத்த ஞானிகளாகி அனந்தானந்த சுகமடைவோரும் ஆகிய விரு வகுப்போருள் துறவு பூண்டோரே மேலோராதலின் தெள்ளியோரை வருவித்துக் கூறிய விரிவு.

**5. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தியவு**
**நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.**

**(ப.)** செல்வஞ் - ஊழ்வலியால் சேர்ந்த திரவியத்தை, செயற்கு - செலவ செய்யுங்கால், நல்லவை - நற்கருமங்கள், யெல்லாம் - யாவும், அந்தீயவாந் - அங்கு தீதாக முடியும், தீயவு - துற்கருமங்களைச் செய்யின், நல்லவாஞ் - அஃது நல்லவையாக முடியுமென்பது பதம்.

**(பொ.)** ஊழ் வலியால் சேர்ந்த திரலியத்தை செலவு செய்யுங்கால் நற்கருமங்கள் யாவும் அங்கு தீதாக முடியும், துற்கருமங்களைச் செய்யின் அஃது நல்லவையாக முடியும் என்பது பொழிப்பு.

**(க.)** புண்ணியவசத்தால் பொருள் சேரின் அஃது நற்செயல்களுக்கும், பாபவழியாற் பொருட் சேரில் அஃது துற்செயல்களுக்கும் செலவாகும் என்பது கருத்து.

**(வி.)** நான்காவது செய்யுளில் ஞானிகளையும் இருவகையாகப் பிரித்ததின் சிறப்பைக் கூறியவிடத்து செல்வமானது ஆரியராம் மிலேச்சரிடத்தும் சேரும். அரியராம் நீதிமான்களிடத்துஞ் சேரும். இவற்றுள் மிலேச்சரிடத்துள்ள செல்வத்தைக் கொண்டு நற்கருமங்களைச் செய்யின் அஃது துற்கருமங்களாகவே முடியும். நீதிமான்களிடத்துள்ள செல்வத்தைக் கொண்டு துற்கருமங்களைச் செய்யின் அஃது நற்கருமங்களாகவே முடியும். அதாவது புண்ணியவசத்தால் சேர்ந்த செல்வம் புண்ணியகருமங்களுக்கும், பாவவசத்தால் சேர்ந்த செல்வம் பாவகருமங்களுக்கும் உரித்தாயதால் ஒன்றை நினைத்துச்செய்ய மற்றொன்றாக முடிதல் ஊழின் பயன் என்பது விரிவு.

**6. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்து**

**சொரியினும் போகா தம்.**

**(ப.)** பரியினும் - அதி யவாவால் பொருளைச் சேர்க்கினும், மாகாவாம் - சேராவாம், பாலல்ல - பொருளைப் பொருளாக பாவியாது, வுய்த்து - நிதானித்து, சொரியினும் - வேண தானஞ் செய்யினும், போகா - குறையாது, தம் - தங்கள் ஊழின் பயனென்பது பொழிப்பு.

**(பொ.)** அதி அவாவால் பொருளைச் சேர்க்கினும் சேராவாம். பொருளைப் பொருளாக பாவியாது நிதானித்து

வேணதானஞ்செய்யினுங் குறையாது தங்கள் ஊழின் பயன் என்பது பதம்.

**(க.)** பேராசையாற் பொருளைச் சேர்க்க முயலினும் பூர்வ தீவினைவசத்தால் பொருள் சேராவாம். உள்ள பொருளை வேணதானஞ் செய்யினும் பூர்வ நல்வினை வசத்தால் அஃது குறையாவாம் என்பது கருத்து.

**(வி.)** ஒருவனுக்கு முற்பிறப்பிற் செய்த தீவினை தொடர்ந்து நிற்க வினைவழிமாறுற்று தனது பேராசையால் பொருளைச் சேர்க்க முயலின் அஃது சேராது மற்றொருவன் வினைவழியூடு சேர்ந்திருந்த பொருளைச் செலவு செய்யினுங் குறையாமல் வளரும் என்பது விரிவு.

**7. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி**

**தொகுத்தார்க்குத் துய்த்த லரிது**

**(ப.)** வகுத்தான் - நல்வழியால் சேர்த்த தொகையே, வகுத்த - தொகைநிலையில் நிற்கும், வகையல்லால் - நல்வழியி லல்லாது, கோடி - நூறாயிரமென்னும், தொகுத்தார்க்கு - கணக்கிட்டுவைப்பினும், துய்த்தலரிது - அத்தொகை நிலைத்தலில்லாமற்போமென்பது பதம்.

**(பொ.)** நல்வழியால் சேர்த்த தொகையே தொகையில் நிற்கும் நல்வழியிலல்லாது நூறாயிரங் கணக்கிட்டுவைப்பினும் அத்தொகை நிலைத்தல் இல்லாமற்போம் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவன் தனது ஊழ்வழியின் துற்கன்மத்தால் சேர்க்குந் தொகையானது கணக்கில் நிலைக்காமலே கழியும் மற்றொருவன் தனது ஊழ்வழியின் நற்கருமத்தால் சேர்க்குந்தொகை அவனது கணக்கில் நிலைத்தோங்கும் என்பது கருத்து.

**(வி.)** ஈகையின்றி உலோபத்தாலுங் குடி கெடுப்பாலும் வஞ்சினத்தாலுஞ் சோருந்தொகை தனக்கும் உதவாது, சுற்றத்தோருக்கும் உதவாது, தொகை கணக்கிலும் நிலைக்காது போம். நல்முயற்சியாலும் கருணைநிலையாலும் சேரும் பொருள் தனக்கும், தன் சுற்றத்தோருக்கும், ஏனையோருக்கும் உதவுவதுடன் கணக்கிலும் நிலைக்கும் என்பது விரிவு.

**8. துறப்பார்மற் றுப்புர லில்லா குறற்பால**
**வூட்ட கழியு மெனின்.**

**(ப.)** காப்பார் - இவைகளைக்கண்டு இல்லந் துறந்தோர், மற்றுப் புரலில்லா - வேறொரு பற்றுக்களுமின்றி, ருறற்பா - திடநிலையினிற்பரேல்,ஆட்டா - உடுடே, கழியு - அகலும், மெனின் - என்னலாமென்பது பதம்.

**(பொ.)** இவைகளைக்கண்டு இல்லந்துறந்தோர் வேறு பற்றுக்களுமின்றி திடநிலையில் நிற்பரேல் உடூடே அகலுமென்னலாம் என்பது பொழிப்பு. '

**(க.)** ஆகையால் பொருள் சேருவதையும் அழிவதையுங்கண்டு துறவு பூண்டவர்கள் மற்றுமுள்ள பற்றுக்களை அகற்றுவரேல் நாளுக்குநாள் அவை கழிந்துபோம் என்பது கருத்து.

**(வி.)** பேராசையாற் பொருளைச் சேர்த்துப் பயன்படாதோரையும், அதியாசையின்றி சேர்த்த பொருள் பயனுறுவதையுங்கண்டு நிராசையுறில் நித்திய சுகம் உண்டென்று உணர்ந்த பெரியோர் துறவு பூண்டு சங்கஞ்சேர்ந்து சமணநிலை பெரினும் ஊழ்வலியிலுள்ளப் பற்றுக்களையும் நீக்குவதாயின் உடூடே கழியுமென்று முன்னூழினது முநிவை முற்றுஞ் சாதிக்க விளித்த விரிவு.

**9. நன்றாங்கா நல்லவாக் காண்பவ ரன்றாங்கே**

**லல்லற் படுவ தெவன்.**

**(ப.)** நன்றாங்கா - எண்ணிய காரியம் சுகமாக முடியின், நல்லவா - அதனை யானந்தமாக, காண்பவ - பார்ப்போர், ரன்றாங்கே - உடனே அக்காரிய முடியாவிடில், லல்லற்படுவ - துக்கத்தை யனுபவிப்போன் , தெவன் - யாவனென்பது பதம்.

**(பொ.)** எண்ணிய காரியம் சுகமாக முடியின் அதனை ஆனந்தமாகப் பார்ப்போர் உடனே அக்காரியம் முடியாவிடில் துக்கத்தை அனுபவிப்போன் யாவன் என்பது பொழிப்பு.

**(க.)** இஃது ஊழின் பயனைத் துறவோர்க்கு ஊட்டியக் கருத்தாதலின் எடுத்த முயற்சி உடனுக்குடன் முடியின் ஆனந்திப்பதும் அவ்வகை முடியாது நாள் பெருகின் அங்கு துக்கிப்பது துறவியின் செயலல்ல என்பது கருத்து.

**(வி.)** துறவு பூண்டோன் நான், நீ என்னும் பின்னபாவம் இரண்டும், நாமரூபம் என்னுந் துவிதமாய இரண்டும், சுகதுக்கம் என்னுங் காட்சிகளிரண்டும் அறவேண்டியவனாதலின் சமணநிலைக்கு முனிந்தோன் எடுத்த காரியம் இனிது முடியில் ஆனந்திப்பது, முடியாதுறில் துக்கிப்பதில் யாது பயன். விடாமுயற்சியால் சாதித்து சித்திப்பெறுவதே அழகு என்பது விரிவு.

**10. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**

**சூழினுந் தாமுந் துறும்.**

**(ப.)** ஊழிற் - முற்பிறவியிற் செய்த தீவினை, பெருவலியாவுள - மிகு வலுபெற்றிருக்கின், மற்றொன்று - அதற் கெதிரிடையாய நல்வினை, சூழினும் - அதனைக் கடக்க முயலினும், தாமுந்துறும் - தீவினையே முன்வந்து நிற்குமென்பது பதம்.

**(பொ.)** முற்பிறப்பிற் செய்த தீவினை மிகு வலு பெற்றிருக்கின் அதற்கெதிரிடையாய நல்வினை அதனை கடக்க முயலினும் தீவினையே முன்வந்து நிற்கும் என்பது பொழிப்பு.

**(க.)** துறவு பூண்டோர் எவ்வகையாய நற்சாதனங்களைப் புரியினும் முற்பிறவியிற்செய்த துற்சாதன ஊழே முன்வந்து முயலுமாதலின் மேலும் மேலும் நற்சாதனத்தைப் பெருக்க முயலவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** இல்லறம் விடுத்துத் துறவறம் பூண்டோர் தங்கள் தங்கள் ஞானசாதனமாம் இதயசுத்தஞ் செய்யுங்கால் முற்பிறவியிற் சேர்ந்துள்ள இதய களங்குகள் மேலும் மேலும் வந்து மூடும் ஆதலால் சங்கஞ்சேர்ந்து சமணநிலை பெற்றவர்கள் மனத்தினது மாசுகளை அகற்றுஞ் சாதனத்திலேயே முனிந்து முன்மாசுகளை அறக்கழுவிவிடவேண்டும் என்பது விரிவு.

## 32. துறவு

ஊழ்வலியிற் துறந்த முனிவர் சங்கஞ்சேர்ந்து ஒருபொருளுண்டென்றும் இல்லையென்றும் ஓதுதலில் தானேதானாய் நிலைக்கவேண்டி பற்றறுக்கும் வகைவழிகளை விளக்கலானார்.

**1. யாதனின் யாதனி வீங்கியா னோத**

**லதனி தைனி நிலன்.**

**(ப.)** யாதனின் - யாதாமொரு பொருளுண்டென்றும், யாதனி - யாதொரு தனிப்பொருளில்லையென்றும், னீங்கியா - துறந்தோன், னோத - விசாரிணையால், லதனி - தானே, னதனி - தானாய், நிலன் - நிலைபெற வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** யாதாமொரு பொருள் உண்டென்றும் யாதொரு தனிப்பொருள் இல்லை என்றும் துறந்தோன் விசாரிணையால் தானேதானாய் நிலைபெற வேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** துறவுற்றோன் தனக்கப் புறப்பட்ட பொருளொன்று உண்டென்று எனும் இல்லை என்றேனுங் கருதாது தானேதானாய் நிலைக்க வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** இல்லறம் முடித்து துறவறம் ஆசித்து சங்கஞ் சேர்ந்தோன் தனக்கு அப்புறப்பட்டத் தனிப்பொருள் வேறொன்று உண்டு என்றேனும் இல்லை என்றேனுங் கருதாது ஐம்புலன் தென்பட சாதித்து தென்புலத்தானாகி தானேதான் என்னுந் ததாகதனாக வேண்டும் என்பது விரிவு.

**2. வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபி**

**விண்டியற் பால் பல.**

**(ப.)** வேண்டி - சுகத்தைக் கருதி, ளுண்டாக - பெருக்கவேண்டி, துறக்க - இல்லறம் விட்டவன், துறந்தபி - துறவறத்தை யாசித்தும்,

னீண்டியல் - மனதை நீட்டுவனாயின், பல - பலவகைத் துக்கங்களுஞ் சூழ்ந்து, பால் – வெறும் னாவானெனன்பது பதம்.

**(பொ.)** சுகத்தைக் கருதி பெருக்க வேண்டி இல்லறம் விட்டவன் துறவறத்தை ஆசித்தும் மனதை நீட்டுவானாயின் பலவகைத் துக்கங்களுஞ் சூழ்ந்து வெறுமனாவன் என்பது பொழிப்பு.

**(க.)** துக்கத்தை அகற்றவேண்டுமென்று துறவறம் பூண்டவன் தனக்கப்புறப்பட்ட வேறு பொருள் உண்டென்று மனதை நீட்டுவானாயின் பலவகை துக்கங்களுஞ் சூழ்ந்து வெறுமனாசிப் பாலை நிலத்திற்கு ஒப்பாவான் என்பது கருத்து.

**(வி.)** பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்குவகை துக்கங்களை அகற்ற வேண்டி துறவறத்தை யாசித்து சங்கஞ் சேர்ந்து தனக்கப் புறப்பட்ட வேறு பொருளுண்டென்று விரும்புவானாயின் இல்லறம் விடுத்தும் மனம் நிலையாது மாளா துக்கத்தில் ஆழ்ந்து தானெண்ணிய எண்ணமும் முடியாது ஏனையோர்க்கு ஓர்பலனும் இன்றி பாலைநிலத்திற்கு ஒப்பாவான் என்பது விரிவு.

**3. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல் வேண்டும்**
**வேண்டிய வெல்லா மொருங்கு.**

**(ப.)** அடல் வேண்டும் - ஒடுங்கல் வேண்டும், மைந்தன் - அவ்வகை பொடுங்குவோன், புலத்தை - ஐம்புல நுகர்ச்சியை, விடல்வேண்டும் -

அகற்றல் வேண்டும், வேண்டிய - கோறிய, வெல்லா - சகலக்கங்களும், மொருங்கு - ஒழுங்காமென்பது பதம்.
வா விடுங்கல் வேண்டும், அவ்வகை ஒடுங்குவோன் ஐம்புல நுகர்ச்சியை அகற்றல் வேண்டும், கோரிய சகல சுகங்களும் ஒழுங்காம் என்பது பொழிப்பு.

**(க.)** துறவுபூண்போன் மனதையடக்கல் வேண்டும். அவ்வகை அடக்குவதில் பாங்கலன்வழியாகச் செல்லும் நுகர்ச்சியை விட்டுவிடல் வேண்டும். அவ்வகை விடுவானாயின் அவன் கோரும் சுகங்கள் யாவும் ஒழுங்குற முடியும் என்பது கருத்து.

**(வி.)** இல்லறம் விடுத்துத் துறவறம் விரும்பி சங்கஞ்சேர்ந்து நித்திய சுகம் பெற வேண்டியவன் மனதை அடக்கும் வழியைத் தேடல் வேண்டும். அஃதமைதற்கு கண்ணினாற் பார்த்தப் பொருளை இச்சிப்பதும், மூக்கினால் முகர்ந்தப்பொருளை இச்சிப்பதும், செவியினாற் கேட்ட தொனியை இச்சிப்பதும், நாவினால் உருசித்தப் பொருளை இச்சிப்பதும், உடலால் சுகித்த சுகத்தை இச்சிப்பதுமாகியப் பஞ்சபுல நுகர்ச்சியை விடல் வேண்டும். அவ்வகை விடுவானாயின் அவன் கோரும் நித்திய சுகம் யாவும் பெருகி நான்குவகைத் துக்கங்களையும் போக்கிக் கொள்ளுவான் என்பது விரிவு

### 4. இயல்பாகு நோன்பிற் கொன்றின் மெயுடைமெ

## மயலாகு மற்றும் பெயர்த்து.

**(ப.)** இயல்பாகு - சாதாரணமாய, நோன்பிற் - விரதத்திற்கு, கொன்றின்மெ - முன்னிலைச்சுட்டாக வோருருவுங் கிடையா, யுடைமெ - அவ்வகை யுருவொன்றுண்டென வெண்ணுவதாயின், மற்றும் பெயர்த்து - சகல சுகங்களையும் போக்கிக் கொள்ளும், மயலாகு - அஞ்ஞானமா மென்பது பதம்.

**(பொ.)** சாதாரணமாய விரதத்திற்கு முன்னிலைச்சுட்டாய ஓர் உருவுங் கிடையா, அவ்வகை உருவொன் றுண்டென எண்ணுவதாயின் சகல சுகங்களையும் போக்கும் அஞ்ஞானமாம் என்பது பொழிப்பு.

**(க.)** இயல்பில் நிறைவேற வேண்டிய இதயசுத்த விரதத்தை விடுத்து முன்னிலைச்சுட்டாய ஓர் உருவுண்டென்று நோக்குவதாயின் அஃது பலவகைக் கேட்டிற்குங் கொண்டு போகக்கூடிய மயக்கம் என்பது கருத்து.

**(வி.)** மனிதன் மேனோக்க வேண்டிய துறவு பூண்டும் மனமாசினை அகற்றும் இயல்பாய விரதத்தை விடுத்து தனக்கப்புறப்பட்ட ஓர் உரு உண்டென்று சிந்திப்பானாயின் மனமாசகலாது மேலும் மேலுந் துக்கமாயைக்கு உள்ளாவதுடன் சகலசுகங்களையும் இழந்துவிடுவான் என்பது விரிவு.

## 5. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை.

**(ப.)** மற்றுங் - அதற்கு வேறாய, தொடர்ப்பாடெவன் - பற்றிவருங்கேடு யாதென, கொல் - சொல்லவேண்டுமாயின், பிறப்பறுக்க - மாளா பிறவி துன்பத்தைப் போக்கிக் கொள்ளுவதற்கின்றி, லுற்றார் - சுற்றத்தார், குடம்பூ - உடல் துன்பத்தையும், மிகை - மிக்கப் பெருக்கிவிடுமென்பது பதம்.

**(பொ.)** அதற்கு வேறாய பற்றிவருங்கேடு யாதென சொல்லவேண்டுமாயின் மாளா பிறவிதுன்பத்திற்கு ஆளாவதின்றி சுற்றத்தார் உடல் துன்பத்தையும் மிக்கப் பெருக்கிவிடும் என்பது பொழிப்பு.

**(க.)** சகலசுகங்களையும் இழப்பதுடன் வேறாயக் கேடு யாதென்று சொல்லவேண்டுமாயின் மாளா பிறவி துன்பத்திற்கு ஆளாகி குடும்ப துக்கத்திலும் அவதி யுறுவான் என்பது கருத்து.

**(வி.)** இஃது நான்காவது செய்யுளைத் தொடர்ந்தே ஐந்தாவது செய்யுள் தோன்றியதால் மற்றும் அவற்றைத் தொடர்ந்து நிற்கும் பிறவியின் துன்பத்தையும் குடும்பத்தின் அல்லலையும் விளக்கித் துறவு பூண்டவன் தன்னைவிட்டு தனக்கப்புறமாய வேறொரு

பொருளுண்டென்று நோக்காது தன் இதயக்களிம்பை அகற்றவேண்டும் என்பது விரிவு.

**6. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்.**

**(ப.)** யானெனதென்னும் - நான் என்பதும் என்னுடையதென்பதுமாய, செருக்கறுப்பான் - அகங்கரிப்பாம் பற்றினையறுப்போன், வானோர்க்குயர்ந்த - மேலோர்க்குகந்த, வுலகம் - புத்தே ளுலகம், புகும் - சேருவானென்பது பதம்.

**(பொ.)** நான் என்பதும் என்னுடையது என்பதுமாய அகங்கரிப்பாம் பற்றினை அறுப்போன் மேலோர்க்கு உகந்த புத்தேள் உலகம் சேருவான் என்பது பொழிப்பு.

**(க.)** நான் நீயென்னும் புறப்பற்றையும் என்னது உன்னது என்னும் அகப்பற்றையும் அறுத்த துறவி மேலோர்க்கு உரியதாம் வானுலகஞ் சேருவான் என்பது கருத்து.

**(வி.)** இல்லறம் விடுத்து பற்றுக்கவேண்டி துறவறம் பூண்டவன் யான், எனதென்னுஞ் செருக்காம், நான் நீ என்னும் பற்றினையும், என்னுடையது உன்னுடையது என்னும் பற்றினையும் அறுக்காவிடிற் பயனில்லை. அதனை அறுப்பவனே துறவு பூண்ட பயனாம்

மேலோர்க்குரிய வானராட்சியமாம் புத்ததேவன் உலகஞ் சேருவான் என்பது விரிவு.

**7. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு.**

**(ப.)** பற்றி - துறவைப்பற்றினோர், விடாஅ - அதனை விடலாகாது. பற்றி துறவைப்பற்றியும், பற்றினை - உலக பாசபற்றுடைய, தவர்க்கு - அவர்களுக்கு, விடும்பைகள் - நான்குவகை துக்கங்களும், விடாஅ - விடாது என்பது பதம்.

**(பொ.)** துறவைப் பற்றினோர் அதனை விடலாகாது. துறவைப்பற்றியும் உலக பாசபற்றுடைய அவர்களுக்கு நான்குவகைத் துக்கங்களும் விடாது என்பது பொழிப்பு

**(க.)** இல்லறம் விடுத்து துறவறம் அடைய வேண்டும் என்னும் ஓர் பற்றினையுடையோர் மற்றும் இல்லறப்பற்றை பற்றுவாராயின் நான்குவகைத் துக்கங்களும் அவர்களைவிட்டு அகலாது என்பது கருத்து.

**(வி.)** பிறப்பின் இடும்பை பிணியின் இடும்பை, மூப்பின் இடும்பை, மரண இடும்பை நான்கையுங் கண்டு பயந்து இல்லறப்பற்றை யொழித்து துறவறப்பற்றை பற்றினோன் மற்றும் இல்லறப்பற்றை நாடுவானாயின் துறந்து பற்றிய முயற்சிகள்

யாவுங்கெட்டு நான்குவகை துக்கங்களில் அழுந்தியே உழல்வான் என்பது விரிவு

**8. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்.**

**(ப.)** தலைப்பட்டார் - நன்முயற்சியில் முறிந்து தீர - துக்கமகல, துறந்தார் - துறவு பூண்டோர், மயங்கி - மற்றும் உலகயின்பத்தை நாடி, வலைப்பட்டார்-பாசபந்தக் கயிற்றால் கட்டுப்படுவராயின், மற்றையவர் - இல்லறத்தோரே யாவரென்பது பதம்.

**(பொ.)** நன்முயற்சியில் முறிந்து துக்கமகல துறவு பூண்டோர் மற்றும் உலக இன்பத்தைநாடி பாசபந்தக் கயிற்றால் கட்டுபடுவராயின் இல்லறத்தோரே யாவர் என்பது பொழிப்பு.

**(க.)** துக்கந்தீர இல்லம் விடுத்து துறவு பூண்டோர் அந்நெறி தவறி மறுபடியுமிழிந்து மாயவலைக்கு உட்படுவராயின், அவர் இல்லந் துறந்தவராகார் என்பது கருத்து.

**(வி.)** தனது இடைவிடா முயற்சியால் இல்லந்துறக்கின் நான்குவகைத் துக்கங்களும் ஒழிந்து சுகம் பெறலாம் என்று எண்ணி துறவோர் சங்கஞ் சேர்ந்து, சமண நிலையுற்றோர் அந்நிலை பிறழ்ந்து பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை என்னும் பாசபந்தக்

கயிற்றில் கட்டுப்படுவராயின் துறவறத்தான் என்னும் பெயரற்று இல்லறத்தோனே என்றழைக்கப்படுவான் என்பது விரிவு.

**9. பற்றற்றக் கண்ணே பிறப்பறுக்கு மற்று**
**நிலையாமெ காணப் படும்.**

**(ப.)** பற்றற்றக்கண்ணே - தோற்றும் பொருட்களில் அவாவற்றலே, பிறப்பறுக்கு - பிறவியின் துன்பம் போக்கும், மற்று - அவ்வவா வறாவிடில், நிலையாமெ - மாறிமாறி துன்புற்று தோற்றுமுடலை, காணப்படும் - எங்கும் பார்க்கலாமென்பது

**(பொ.)** தோற்றும் பொருட்களில் அவா அற்றலே பிறவியின் துன்பம் போக்கும், அவ்வவா அறாவிடில் மாறிமாறி துன்புற்று தோற்றும் உடலை எங்கும் பார்க்கலாம் என்பது பொழிப்பு.

**(க.)** காணும் பொருட்களாம் மண், பெண், பொன் என்னும் மூவாசையற்றிருத்தலே பிறவியின் துன்பத்தைப் போக்கும் வழியாகும். அம் மூவாசை அறாவிடின் மாறிமாறி நிலையா துன்புற்று தோற்றும் உடலை எவ்விடத்துங் காணலாம் என்பது கருத்து.

**(வி.)** தோற்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்கு மணம் அழிந்து கொண்டே போவது இயல்பாதலின் அவைகளின் மீது ஆசைவையாது அகற்றலே பிறவியின் துன்பத்தைப் போக்கும்,

அங்ஙனமிராது காணும் பொருட்கண்மீது ஆசை கொண்டு அலைவதாயின் மாராப்பிறவியின் துன்பத்தால் அல்லலடைய வேண்டும் என்பது விரிவு

**10. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்**

**பற்றுக பற்று விடற்கு.**

**(ப.)** பற்றுவிடற்கு - மூவாசையினது பற்றுக்கள் விடவேண்டுமாயின், பற்றுக - பற்றவேண்டியதாய, பற்றற்றான் - மூவாசையை யொழித்த புத்தர்தன் பற்றினை - உண்மெயில் அன்பை வளர்க்கும் பற்றாம், யப்பற்றை - அந்தப்பற்றினை, பற்றுக - உறுதி பெற பற்றல் வேண்டுமென்பது பதம்.

**(பொ)** மூவாசையினது பற்றுக்களை விடவேண்டுமாயின் பற்ற வேண்டியதாய மூவாசையை ஒழித்த புத்தர் தன் உண்மெயில் அன்பை வளர்க்கும் பற்றாம் அந்தப்பற்றினை உறுதிபெறப் பற்றல் வேண்டும் என்பது
பொழிப்பு.

**(க.)** பற்றறுக்க வேண்டியவன் புத்தபிரான் பற்றிய உண்மெயில் அன்பை வளர்க்கும் பற்றைப் பற்றுவானாயின் க்ஷணத்திற்கு க்ஷணம் தோற்றி அழியும் பொருட்கள் மீது அவாகொண்டழியும் பற்று தானே அகன்றுப்போம் என்பது

கருத்து.

**(வி.)** புத்தபிரான் இராஜாங்கத்திலுள்ள சகல சுகபோகப் பற்றுக்களையும் அறுத்து உண்மெயில் அன்பை வளர்த்திய பற்றை ஒருவன் பின்பற்றுவானாயின் மற்றும் பிறவி துன்பத்திற்குக் கொண்டுபோகும் பெண்ணாசை பற்று, மண்ணாசை பற்று, பொன்னாசை பற்று மூன்றுந் தானே விட்டுப்போம் என்பது விரிவு.

## 33. புலால் மறுத்தல்

புத்தசங்கஞ் சேர்ந்து சமணநிலையுற்று சித்திப்பெற வேண்டியவர்கள் அதிகாலையில் எழுந்து உடலஞ் சுத்தி செய்து பச்சரிசியும் பாசிப்பயறும் இட்டுக் காய்த்துள்ளக் கஞ்சியைச் சாப்பிட்டு மனோ சுத்தஞ்செய்யவேண்டிய நீதி நூற்களையும், ஞான நூற்களையும் வாசிப்பதுடன் உலக மக்களுக்கு உதவுவதாய நூற்களையும் எழுதிவிட்டு உதையாதி பதினைந்து நாழிகைக்குள் காய், கீரை, கிழங்குகளைக் கொண்டு செய்தக் குழம்புடன் சோறுண்டு இரவு முழுவதும் யாதொரு பொருளையும் புசியாது சுத்த நீரருந்தி ஞான சாதனத்தினின்று விழித்து இரவு பகலற்ற இடஞ் சேரவேண்டியவர்களாதலின் துறவு பூண்டும் ஒடுக்கத்தைப் பெறாது தன்னூன் பெருக்கப்பிரி தான் புசிப்பதாயின் காம வெகுளி மயக்கம் பெருகி துறவின் செயலைக் கெடுத்துவிடுமென்றறிந்த பெரியோன் இல்லறத் தோரையே புலால் அகற்றி வாழ்கவேண்டுமென்று

கூறியுள்ள புத்ததன்மத்தை மற்றுந் துறவோர்க்குக் கருணைநிலை பூர்த்தி பெறுமாறு தெளிவுறக் கூறுகின்றார்.

**1. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தானுண்பா**
**னெங்கண் மாளூ மருள்.**

**(ப.)** தன்னூன் - தன்னுடலது புலாலை, பெருக்கற்கு - பெருகுதற்கு, தான் பிறி - தான் மற்றோருடலது, தூனூண்பா - புலாலைப் புசிப்போனை, னெங்கன - எவ்வகையால், மாளூ - ஆண்டுக்கொள்ளும், மருள் - கருணை யென்பது பதம்.

**(பொ.)** தன்னுடலது புலாலைப் பெருக்குதற்கு தான் மற்றோர் உடலது புலாலைப் புசிப்போனை எவ்வகையால் ஆண்டுக்கொள்ளும் கருணை என்பது பொழிப்பு.

**(க)** கருணை என்பதின்றி ஏனய உயிரை வதைத்துப் புலால் உண்போனைக் கருணையானது எவ்வகையால் ஆண்டுக் கொள்ளும் என்பது கருத்து.

**(வி.)** கருணை, ஈகை, சாந்தம், இம்மூன்றும் மெய்ப்பொருளின் சுயவடிவமாதலின் அம்மெய்யமைந்த பிற மெய்வளர்த்தற்கு சீவகாருண்யமின்றி சீவன்களைக் கொன்று அதனூன் புசிப்பதாயின் இவனுள் காருண்ய பெருக்கமாம் அருள் நிலை எவ்வகையால் வளரும். ஆகலின் துறவு பூண்டோன் அருளை வளர்த்து தெய்வகதி

அடைய வேண்டின் புலால் உண்பதை அகற்றவேண்டும் என்பதற்குச் சார்பாய், சீவகசிந்தாமணி "ஊன்சுவைத் துடம்புவீக்கி நரகத்தி லுறைதனன்றோவூன்றினாதுடம்பு வாட்டித் தேவராயுறை தனன்றோ, வூன்றியிவ்விரண்டி னுள்ளுமுறுதி நீயுரைத்திடென்ன, வூன்றினாதொழிந்து புத்தேளாவதே யுறுதியென்றான்" என்று கூறிய சார்பு நூலாதார விரிவு.

**2. பொருளாட்சி போற்றா தார்க்கில்லை யருளாட்சி**
**யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.**

**(ப.)** பொருளாட்சி - பொருளினிலையை, போற்றாதார்க்கில்லை - போற்றி வாழாதார்க்கு அஃது நிலையாதது போல், யூன்றின்பவர்க்கு - புலாலை யுண்போர்க்கு, யருளாட்சி - கருணைநிலை, யாங்கில்லை அவர்களிட மிறாதென்பது பதம்

**(பொ.)** பொருளின் நிலையை, போற்றி வாழாதார்க்கு அஃதுநிலையாதது போல் புலாலை உண்போர்க்கு கருணைநிலை அவர்களிடமிராது என்பது பொழிப்பு

**(க.)** பொருளினை உறுதி கொண்டு சேர்க்காதவர்களுக்கு அவை சேராதது போல் சீவகாருண்யமின்றி புலால் உண்போருக்கு அருள் நிலை ஒங்காது என்பது கருத்து.

**(வி.)** பொருளை நிலை பெற பெருக்கவேண்டியவன் அப்பெருக்க முயற்சியில் இருப்பானாயின் அஃது பெருகி ஆட்சிபெறும். அங்ஙனம் முயலாவிடில் பெருகாதது போல் அருளை வளர்க்கவேண்டியவன் சீவகாருண்யத்தால் பலாலை அகற்றல் வேண்டும் அகற்றாது புலால் உண்போனுக்கு சீவகாருண்யம் இராதாதலின் அருளும் ஆட்சியுமுறாது என்பது விரிவு

**3. படை கொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற**
**னுடல் சுவை யுண்டார் மனம்.**

**(ப.)** படை கொண்டார் - யுத்த களத்தில் நிற்போர் நெஞ்சம்போ - மனம் போல், னன்றூக்கா - நற்சுகமிறாததை, தொன்ற - ஒக்கும், னுடல்சுவை - புலாலை யின்பமாக, யுண்டார் - உண்போர், மனம் - மனமுமென்பது பதம்.

**(பொ.)** யுத்தகளத்தில் நிற்போர் மனம் போல நற்சுகமிறாததை ஒக்கும் புலாலை இன்பமாக உண்போர் மனமும் என்பது பொழிப்பு.

**(க.)** புலாலினை இன்பமாக உண்போர் மனமானது யுத்தகளத்திற் போர்பரிவோன் கலக்கமுற்ற நெஞ்சத்தை ஒக்கும் என்பது கருத்து.

**(வி)** யுத்தகளத்தில் இவன் மற்றொருவனைக் கொல்லமுயன்று மற்றொருவன் இவனைக் கொல்ல முயலும் பயத்தால் நெஞ்சம் கலங்கி விழித்திருப்பது போல மற்றொரு உடலை வதைத்து அதன்

புலாலைத்தின் போன் தன் புலாலைத் இன்ன மற்றொன்று காக்கும் என்னுங் கலக்கத்திலுள்ளக் கண்கலங்கி நிற்கும் என்பது விரிவு

**4. அருளல்லதியா தெனிற் கொல்லா மெகோறல்**
**பொருளல்ல தவ்வூன் றினல்.**

**(ப.)** கொல்லாமெகோறல் - ஒருடலையும் வதையாதேயென்று வேண்டுதல், பொருளல்ல - ஓர் கருணைமொழி யாகாவாம், அருளல்ல - கருணை யில்லாதவை, தியாதெனில் - எதுவென்றால், தவ்வூன்றினல் கொல்லதேயென்று கோறிய வுடலின் புலாலைப் புசித்தலென்பது பதம்.

**(பொ.)** எவ்வுடலையும் வதையாதேயென்று வேண்டுவது கருணைமொழி யாகாவாம் கருணை இல்லாதவை யேதென்றால் கொல்லாதே என்று கோறிய உடலின் புலாலைப் புசித்தல் என்பது பொழிப்பு.

**(க.)** சீவராசிகளைக் கொல்லுவோனைக் கண்டு கொல்லாதே என்று கோறுதல் கருணைமொழியாகாவாம். கருணையில்லையென்பதற்குக் காரணம் கொல்லாதேயென்று கூறிய வுடலின் புலாலைப் புசித்லே யென்பது கருத்து.

**(வி.)** அவ்வுடலை வதையாதே இவ்வுடலைக் கொல்லாதே என்று கோறி கருணையுள்ளவன் போல் பகட்டுவது பெரிதல்ல அவ்வகைக்

கொன்ற புலாலைப் புசியாதிருப்பானாயின் கருணையுள்ளான் என்பது விளங்கும், அப்புலாலை புசிப்பானாயின் கருணை இல்லாதவன் என்பதே விரிவு.

**5. உண்ணாமெ யுள்ள துயிர்நிலை யூனுண்ண**
**வண்ணாத்தல் செய்யா தளறு.**

**(ப.)** உண்ணாமெயுள்ள - புலாலைப் புசியா தருவெறுக்கத்தக்க, துயிர்நிலை - சீவகதி, யூனுண்ண - புலாலைப் புசிக்க, வண்ணாத்தல் இதயசுத்தம், செய்யா - செய்வதற்கேதுவிடாது, தளறு - களங்கினைப் பெருக்குமென்பது பதம்

**(பொ.)** புலாலைப் புசியாது அருவெறுக்கத்தக்க சீவகதி புலாலைப் புசிக்க இதயசுத்தம் செய்வதற்கு ஏதுவிடாது களங்கினைப் பெருக்கும் என்பது பொழிப்பு

**(க.)** புலால் உடம்பை ஏற்றும், புலாலைப் புசிப்பதற்கு ஏற்கா உயிர்நிலை புலாலைப் புசிப்பதாயின் மனமாசு கழுவுவதற்று மேலும் மேலும் மனக்களங்கம் மூடும் என்பது கருத்து.

**(வி.)** ஊனுடலானது பிரிதோர் ஊனை சுவைத்து உண்பதாயின் உயிர்நிலையாம் சிவகதி நிலைபெறாதும், களங்கம் அறாதும், அஞ்ஞான பாசபந்தக் களிம்பால் மூடும் என்பதற்குக் காரணமோவென்னில் ஊனினைக் கண்டு அகற்றியும் முகர்ந்து

வெறுத்துமுள்ள உயிர்நிலையை உடலின் சுவைமிகுதியாற் புசித்துக் களங்கமுறுதலே காட்சியாம் என்பது விரிவு.

**6. தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்**
**விலைபொருட் டாலூன்றரு வாரில்.**

**(ப.)** தினற் பொருட்டா ஊனினைவுண்ணுவதற்காக, துலகெனின் - உலகமக்கள் கொள்ளா - வாங்கா திருப்பார்களாயின், யாரும் - மற்றும், விலை பொருட்டா - விற்பனைக்கு, லூன்றருவாரில் - புலாலினைக் கொடுப்போ ரிராரென்பது பதம்.

**(பொ.)** ஊனினை உண்ணுவதற்காக உலக மக்கள் வாங்காதிருப்பார்களாயின் மற்றும் விற்பனைக்குப் புலாலினைக் கொடுப்போர் இரார் என்பது பொழிப்பு

**(க.)** புலாலினை வாங்கியுன்ணும் மக்கள் உலகத்திராவிடில் சீவர்களைக் கொன்று புலாலினை விற்போர் இரார் என்பது கருத்து.

**(வி.)** காருண்யமாம் அன்பினை வளர்க்கவேண்டியவர் புலாலை அகற்ற வேண்டும் என்பது துணிபு. அங்ஙனம் அகற்றாது உண்பதாயின் அச்சீவர்களைக் கொன்று விற்போனொருவன் தோன்றுகின்றான். அத்தோற்றத்திற்குத் தின்போனே காரணன் ஆதலின் புலாலினை உண்போன் இராவிடின் கொன்றுவிற்போன் இரான் என்பது விரிவு.

**7. உண்ணாமெ வேண்டும் புலா அல் பிறிதொன்றன்**

**புண்ண துணர்வார்ப் பெறின்.**

**(ப.)** பிறிதொன்றன் - தனக்கன்னியமாகத் தோன்றும், புலாஅல் - மாமிஷ வுடலிலுண்டாய, புண்ண - இரணத்தினது கோரத்தை, துணர்வார்ப் பெறின் உற்று நோக்கப்பெற்றானாயின், உண்ணாமே வேண்டும் - அன்றே புலாலுண்பதை விடுவானென்பது பதம்.

**(பொ.)** தனக்கு அன்னியமாகத் தோன்றும் மாமிஷ உடலில் உண்டாய இ ரணத்தினது கோரத்தை உற்றுநோக்கப்பெற்றானாயின் அன்றே புலால் உண்பதை விடுவான் என்பது பொழிப்பு

**(க.)** அன்னிய சீவராசிகள் உடலிலுள்ளப்புண்ணினைக்கண்டு அருவெறுப்பவன் அன்றே புலால் உண்ணலைத் தவிர்ப்பான் என்பது கருத்து.

**(வி.)** புலாலினை அதி இன்பமோடு உண்டு வருவோன் மற்றுமோர் புலால் உடம்பிலுள்ளப் புண்ணினது கோரத்தை உற்று உணர்வானாயின் புண்ணினைக்கண்டு அருவெறுப்பதுப்போல் அப்புலாலினை உண்பதையும் அருவெறுப்பானென்பதற்கு சார்பாய் அறநெறிச்சாரம் "தம்புண்கழுவி மருந்திடுவர் தாம்பிரிதின் செம்புண்வறுத்து வறைதின்பர் - அந்தோ நடுநின்றுலக நயனிலா

மாந்தர், வடுவன்றோ செய்யும் வழக்கு" என்று கூறியவற்றே சான்றாம் என்பது விரிவு.

### 8. செயிரிற் றலைபிரிந்த காட்சியா ருண்ணா ருயிரிற் றலை பிரந்த வூன்

**(ப.)** செயிரிற் - அவாவினின்று, றலை பிரிந்த - விடுபட்ட, காட்சியா - உருவமுற்றோர், ருண்ணா - புசியார்கள், ருயிரிற் - சீவர்களின், றலைபிரிந்த - சிரசினைக்கொய்த, வூன் - புலாலை யென்பது பதம்.

**(பொ.)** அவாவினின்று விடுபட்ட உருவமுற்றோர் புசியார்கள் சீவர்களின் சிரசினைக் கொய்த புலாலினை என்பது பொழிப்பு

ல்லறத்தை விடுத்து துறவறம் பூண்டவர்கள் சிரசினைக் கொய்து ஒருயிரினை வதைத்தப் புலாலைப் புசிக்கமாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** இல்லறத்திலிருந்து உண்பதினாலும் உடுப்பதினாலும் பலவகைச் செயல்களினாலும் காம வெகுளி மயக்கங்கள் அறாதென்று எண்ணித் தங்கள் அன்பினை வளர்க்கத் துறவறம் பூண்டவர்கள் சீவகாருண்ய மற்றச் செயலாம் கொல்லுதலும் கொல்லாததுமாயப் புலாலை மறந்தும் புசியார்கள் என்பது விரிவு.

### 9. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற னுயிர்செகுத்துண்ணாமெ நன்று.

**(ப.)** தாயிரம் வேட்டலி - ஆயிரங் கலியாணங்களைச் செய்து, அவிசொரிந் - அதிக நெய் பிசைந்த சோற்றை யளிப்பவனாயினும்,

னொன்ற - ஓர், னுயிர்செகுத்து - சீவனைக்கொன்று, துண்ணாமெ அதன் புலாலைப் புசியாதோனென்போனே, நன்று - நல்லவனென்பது பதம்.

**(பொ.)** ஆயிரங் கலியாணங்களைச் செய்து நெய்பிசைந்த சோற்றை அளிப்பவனாயினும் ஓர் சீவனைக் கொன்று அதன் புலாலைப் புசியா தோன் என்போனே நல்லவன் என்பது பொழிப்பு.

**(க.)** அயிரம் விவாகங்களைச் செய்து நெய்பிசைந்த அன்னதானஞ் செய்வோனாயினும் சிறப்படைய மாட்டான். ஓர் உயிரினை வதையாமலர் அதன் புலாலை உண்ணாமலும் உள்ளவன் எவனோ அவனே சிறப்படைவான் என்பது கருத்து

**(வி.)** கருணையே புகழிற்குங் கருணையற்ற நிலையே இகழிற்குங் காரணமாயுள்ளதால் ஆயிரம் வேட்டலைச் செய்து அன்னத்தில் நெய் சொரிந்து பிசைந்து ஊட்டுவதினும் ஓர் உயிரினைக் கொன்றும் அதன் புலாலைப் பசித்தும் சுகியாதிருப்பதே நல்லதென்று துறவோர்க்குக் கருணை நிலையை விவரித்த விரிவு.

**10. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**யெல்லா வுயிருந் தொழும்**

**(ப.)** கொல்லான் - சீவப்பிராணிகளை வதையாதவனும், புலாலை - ஊனினை, மறுத்தானை - தின்னாதொழித்தவனுமானோனை,

கைகூப்பி - சரணாகதியென, யெல்லாவுயிருந் - சருவவுயிர்களும், தொழும் - வணங்கு மென்பது பதம்.

**(பொ.)** சீவப்பிராணிகளை வதையாதவனும் ஊனினைத் தின்னாது ஒழித்த வனுமானோனை சரணாகதியென சருவசீவர்களும் வணங்கும் என்பது பொழிப்பு.

**(க.)** கருணை நிறைவால் சீவப்பிராணிகளைக் கொல்லாதவனும் அவா அறுத்தலால் புலாலினை உண்ணாதவனும் ஆகிய ஒருவனது கருணாகர முகங் கண்டபோதே சருவசீவன்களுங் கைகூப்பி வணங்கும் என்பது கருத்து.

**(வி.)** சருவசீவர்கள் மீது இதக்கமுற்று காக்குங் கருணையாளன் ஓர் உயிரினையும் துன்பஞ்செய்யமாட்டான். நாவில் உருசிக்கும் பொருட்களின் மீது அவா அற்றவன் புலாலை விரும்பமாட்டான். இவ்விரு வகைச் செயல் முதிர்ந்தவிடத்து உண்மெய் விளக்கத்தால் தண்மெய் உண்டாகி கருணாகரமுகங் காணலால் சருவசீவர்களும் அம்முகத்தைக் காணும் போதே அவைகளுக்கு அவ்வன்பு எழுவி வணங்குஞ் செயல் உண்டாதலால் ஒருயிரை வதையாதும் புலாலை உண்ணாதுமுள்ள பெரியோனை சருவ சீவர்களும் வணங்கும் என்பது விரிவு.

## 34. இன்னா செய்யாமெய்

இன்னாமெய் என்னும் மொழியினது பொருள் ஒருவனுள்ளத்தினின்று எழுஉங் கெட்ட எண்ணங்களேயாம். அதாவது ஓர் உயிரினை வதைப்பதினும் அதன் புலாலையுண்பதினும், அன்னியன் குடியை கெடுப்பதற்கும், அன்னியனை துன்பஞ் செய்வதற்கும், அன்னியனை சீர்பெறவிடாம லழிப்பதற்கும், பொறாமையை வளர்ப்பதற்கும், வஞ்சினத்தை நிறப்புதற்குமாய துற்கன்மங்களே பெரிதாதலின் அத்தகைய இன்னாவென்னும் கொடுஞ்சயல்களை துறவிகள் உள்ளத்தில் தோன்றவிடாமலும், தோன்றினும் அவற்றை நிலைக்கவிடாமலும் மனமாசு கழுவும் வழிவகைகளை விளக்குகின்றார்.

**1. சிறப்பினுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா**
**செய்யாமெ மாசற்றார் கோள்.**

**(ப.)** சிறப்பீனுஞ் - துறவி அட்டமாசித்தியால், செல்வம் - நிறைந்த பாக்கியத்தை பெறினும் - அடைந்தபோதினும், பிறர்க்கின்னா - அன்னியருக்குத் துன்பமுண்டாகுஞ் - செயலை செய்யாமெ - செய்யாதவனே, மாசற்றார் - மனக் களங்கமற்றோர், கோள் - கொள்கையுடையவனாவ னென்பது பதம்.

**(பொ.)** துறவி அட்டமாசித்தியால் நிறைந்த பாக்கியத்தை அடைந்த போதினும் அன்னியருக்குத் துன்பமுண்டாகுஞ் செயலைச்

செய்யாதவனே மனக்களங்கமற்றோர் கொள்கையை உடையவனாவன் என்பது பொழிப்பு.

**(க.)** துறவியானவன் தனது யாகமென்னு நற்கால பலனால் அட்டமாசித்துக்களை ஆடியபோதினும் அச்சித்தினால் ஒருவருக்கும் தீங்குநேராவண்ணம் ஆடுவதே களங்கமற்றோர் செயலை உரித்தாம் என்பது கருத்து.

**(வி.)** துறவு பூண்டோர் புத்த சங்கஞ் சேர்ந்து சமண நிலையுற்று சதா சாதன சுவாசசேர்க்கைப் பெற்று, மனேலயமுற்று, உலகத்தின் சகல சிறப்பினும் மேலாய அட்டமாசித்தி சிறப்பைப் பெறினும் அச்சித்தினால் ஏனையோர்க்கு இடுக்கண் உண்டு செய்வதாயின் மனமாசறுக்குஞ் செயலற்று களங்கமிகும். ஆதலின் கிஞ்சித்தடைந்த மனேசுத்தத்தால் சிறந்த, இர்த்தியுறும் சித்தினைப் பெற்றும் அதனாற் பிறரைத் துன்புறச் செய்யின் மீண்டுங் களங்கமேறி துன்புறு வார் என்றறிந்த மேலோன் சிறப்பாய சித்தியினைப் பெற்ற துறவோர் ஓர் உயிரினுக்குந் தீங்கிழையாது மேலும் மேலும் இதயசுத்தம் உண்டாக்கிக் கொள்ளவேண்டுமென்று கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய், மச்சமுநியார் " நித்திமுந் சுத்தமதாய் நின்று பார்த்தால் நின்தேகம் பிரம்மடம் நீதான் காண்பாய், சுத்தமுடன் சோதிமனக் கண்ணாலந்த சுருதிமுடிவானசுட ரொளியைக் கண்டால், பத்தியுள்ள தேகமது சுத்தமாச்சு பாலகனே பலமிருத்துப்பரந்து போச்சு, வெத்தியுள்ள

வட்டசித்துங்கைக்குள்ளாச்சு வேதாந்த புருவமய்ய மேவி நில்லே" என்னும் ஆதாரங்கொண்டு துறவு பூண்டுந் துன்பத்திற் காளாகலாகாது என்

**2. கறுத்தின்னா செய்தவக் கண்ணுமறுத்தின்னா**
**செய்யாமெ மாசற்றார் கோள்.**

**(ப.)** கறுத்தின்னா - பிடிவாதத்தாற் கொடுஞ்செயலை, செய்தவக்கண்ணு - செய்ததினாலுண்டாந் துன்பத்தைக் கண்டவன் மறுத்தின்னா - மறுபடியு மத்துன்பத்தை, செய்யாமெ - செய்யாதவனே, மாசற்றார் - மனமாசினைக் கழுவினோர், கோள் - கொள்கையோன் என்பது பதம்.

**(பொ.)** பிடிவாதத்தாற் கொடுஞ்செயலை செய்ததினால் உண்டாங் கொடுந்துன்பத்தைக் கண்டவன் மறுபடியும் (ஓர் வரி தெளிவில்லை) என்பது பொழிப்பு.

**(க.)** தனது மீளாகோபக்கிளர்ச்சியால் மற்றொருவனுக்குத் தீங்கு செய்து அவன் படுந் துன்பத்தைக் கண்ணாற் கண்டவன் மீண்டும் அத்தகையத் துன்பத்தை ஏனையோருக்குச் செய்யாக் காருண்யமுடையவனே மனமாசினைக் கழுவினோருக்கு ஒப்பானவன் என்று எண்ணப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** துறவுபூண்டவன் சாந்தம், ஈகை, அன்பென்னு மூன்றையுமே த வேண்டியவனாதலின் அவற்றை மறந்து மற்றொருவனுக்குத் தீங்கு புரிந்து அதனாலவன்படுந் துன்பத்தை கண்ணாறகண்டு இதக்கமுற்று மற்றொருவனுக்குத் தீங்கு புரியாதவனே மனமாசினைக் கழுவினானுக்கு ஒப்பானவன் என்பது விரிவு.

**3. செய்யாமெ செற்றார்க்கு மின்னாத செய்தபி**
**னுய்யா விழுமந் தரும்.**

**(ப.)** செய்யாமெ - யாதொரு துன்பமும் பிறர்க்கு செய்யலாகாதென்றே துறந்தவன், செற்றார்க்கு - தனக்கோர் துன்பஞ்செய்தவர்களுக்கு, மின்னாத செய்தபி - கொடுந்துன்பத்தைக் செய்வதாயின், னுய்யா - மாறத, விழுமந் துன்பத்தை தரும் - கொடுக்கும் என்பது பதம்.

**(பொ.)** யாதெரு துன்பமும் பிறர்க்குச் செய்யலாகாது என்றே துறந்தவன் தனக்கோர் துன்பஞ் செய்தவர்களுக்கு கெடுந்துன்பத்தைச் செய்வதாயின் மாறாதுன்பத்தைக் கொடுக்கும் என்பது பொழிப்பு,

**(க.)** சருவசீவர்களையுந் தன்னுயிரால் காக்கத் துறந்தவன் ஒருயிரால் கனக்கோர் துன்பமுண்டாயபோது அதை மன்னியாமல் மீண்டும் அவற்றிற்குத் துன்பஞ் செய்வதாயின் மாளா துன்பம் அனுபவிக்க வேண்டிவரும் என்பது கருத்து. |

**(வி)** இல்லறத்திருப்பதால் பாசங்கொண்டு பலவகைத் துன்பத்தையுஞ் செய்ய ஆளாக்குமென பயந்து துறவறமாஞ் சங்கஞ்சேர்ந்து சமணநிலை பெற்றவன் தனக்கோர் துன்பஞ்செய்தவனை மன்னிக்காது மீண்டுந் துன்பஞ்செய்வானாயின் உணர்ந்துங் கேடுண்ட பயனாம் பிறவி துக்கத்தை அனுபவிப்பான் என்பது விரிவு

**4. இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண**
**நன்னயஞ் செய்து விடல்.**

**(ப.)** இன்னா - கொடுந்துன்பமுண்டாக, செய்தாரை - செய்தவர்களை, பொறுத்த - பொறுப்பவை யெவையெனில், லவர்நாண - அவர்களே யஞ்சி யொடுங்கற்கு. நன்னயம் - அவர்களுக்கு வேண்டிய சுபபலனை, செய்துவிடல் - அளித்துவிட வேண்டுவதென்பதே பதம்.

**(பொ.)** கொடுந்துன்பமுண்டாகச் செய்தவர்களை பொறுப்பவை யெவையெனில் அவர்களே யஞ்சி யொடுங்கற்கு அவர்களுக்கு வேண்டிய சுப்பலனை யளித்துவிட வேண்டுவதென்பதே பொழிப்பு.

**(க.)** துறவியை ஒருவன் பலவகையாய துன்பஞ்செய்த போதிலும் அத்துன்பத்தை இன்பமாகக் கருதி அவனுக்கோர் பிறிதி துன்பத்தைச் செய்யாது இன்பம் பயக்கும் பலனை அருளுவதாயின் தன்னில்

தானே நாணமுற்று பிறிதோர் துன்பமுஞ் செய்யாது அடங்குவான் என்பது கருத்து.

**(வி.)** சாந்தம், அன்பு, ஈகை இம்மூன்றையும் உருதிரட்ட சங்கஞ் சேர்ந்த சிரமணன், ஒருவன் செய்த கொடுந்துன்பத்தை இன்பமாகக் கருதி அவனுக்குப் பிறிதி துன்பஞ்செய்யாது இன்பம் பயக்கும் நற்பயனைத் தருவானாயின் துன்பஞ்செய்தோன் தன்னில் தானே நாணி மற்றொருவருக்குந் தீங்கு செய்யாது சுகநிலை பெறுவான் என்பது விரிவு.

**5. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்**
**தந்நோய்போற் போற்றாக் கடை.**

**(ப.)** அறிவினா - துறந்தானென்னுமொழியால், னாகுவதுண்டோ ஆவதொன் றுண்டோவெனில், பிறிதினோய் - மற்றசீவர்களுக்குண்டாய துன்பத்தை, தந்நோய் போற் - தனக்குற்ற துன்பம் போற் கருதுவதேயாம். போற்றா - அங்ஙனம் கருதாதோன், கடை - புற்பூண்டுகளுக்கு ஒப்பாவான் என்பது பதம்.

**(பொ.)** துறந்தான் என்னும் மொழியால் ஆவதொன்றுண்டோவெனில் மற்ற சீவர்களுக்குண்டாய துன்பத்தை தனக்குற்ற துன்பம் போல் கருதுவதேயாம். அங்ஙனங் கருதாதோன் பற்புண்டுகளுக்கு ஒப்பாவான் என்பது பொழிப்பு

**(க.)** விவேக மிகுதியால் துறவுற்ற பயன் யாதெனின் மற்ற சீவர்களுக்கு உண்டாய துன்பத்தை தனக்குற்ற துன்பம் போல் கருதி காத்தலேயாம். அவ்வகைக் கருதாவிடில் புற்பூண்டுகளுக் கொப்பாவானென்பது கருத்து.

**(வி.)** துறவின் சிறப்பு அறிவின் பெருக்கத்தால் உண்டாதலின் அதன்பயன் ஏதேனும் உண்டோவெனில் அன்னிய சீவப்பிராணிகளுக்கு உண்டாம் துன்பத்தை தனக்குண்டாய துன்பம் போல் கருதி காப்பதேயாம். அவ்வகைக் கருதாது காக்காதுமுள்ளோனைத் துறவியெனக்கூறாது கடைப்பிறவியெனக் கூறத்தகும் என்பது விரிவு.

**6. இன்னா வெனத்தானு ணர்ந்தவை துன்னாமெ**
**வேண்டும் பிறன்கட் செயல்.**

**(ப.).** இன்னா - பிறர்க்குத் துன்பத்தை யுண்டாக்குஞ் செயல், வெனத்தா - யீத்தென்று, னுணர்ந்தவை - தெரிந்து கொண்டபோது, பிறன்கட் - அன்னியர் கட்கு, செயல் - செய்யுங் கிரித்தியங்களில், துன்னாமே - மறந்துங் கொடுஞ் செயல் புரியாதவனாக, வேண்டும் - இருத்தல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** பிறர்க்குத் துன்பத்தை உண்டாக்குஞ் செயல் ஈது, ஈது எனத் தெரிந்து கொண்டபோது அன்னியர்கட்கு செய்யுங் கிரித்தியங்களில்

மறந்துங் கொடுஞ்செயல் புரியாதவனாக இருத்தல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** இன்னின்னச் செயல்களால் பிறருக்குத் துன்பமுண்டாம் என்றுணர்ந்த துறவி மறந்தும் அச்செயலை செய்யாதிருத்தல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** துறவியானவன் பிறரது செயலாலும், மொழியாலுந், தனது மொழியாலுஞ் செயலாலும் அன்னியருக்கு உண்டாந் தீங்கினை உணர்ந்த போது அத்தகைத் தீங்குண்டாக்குஞ் செயலையுந் துன்பத்தையுமுண்டு செய்யும் மொழியையும் மறந்தும் பேசாமலும் மறந்துஞ் செய்யாமலும் இருத்தல் வேண்டும் என்பது விரிவு.

**7. எனைத்தானுமெஞ்ஞான்றுயார்க்கு மனத்தானா**
**மாணா செய்யாமெ தலை.**

**(ப.)** எனைத்தானு - எவ்விடத்திலேனும், மெஞ்ஞான்று - எக்காலத்திலேனும், யார்க்கு - யாதாமொருவருக்கு மனத்தானா - தன்மனமே கரியாக மாணா செய்யாமெ - மீளா துன்பத்தைச் செய்யாதவனே, தலை - முதலவனாவன் என்பது பதம்.

**(பொ.)** எவ்விடத்திலேனும் எக்காலத்திலேனும் யாதாமொருவருக்கு தன்மனமே கரியாக மீளா துன்பத்தைச் செய்யாதவனே முதலவனாவன் என்பது பொழிப்பு.

**(க.)** தன்னை ஒருவர் காணும் இடத்திலேனும், காணா காலத்திலேனும் தன் மனமே கரியாய் உள்ளதென்று உணர்ந்து யாதா மொருவருக்கு ஏதொரு துன்பமும் செய்யாதிருப்பவனே துறவிகளில் முதலவனாவன் என்பது கருத்து.

**(வி.)** அன்னியர் தங்களைக் காணுங்காலங்களில் ஏதொரு துன்பமும் செய்யாதவன் போல் நடித்து காணாவிடத்து துன்பஞ் செய்வோரும் உண்டாதலில் எவ்விடத்தும், எக்காலத்தும், தன்மனமே தனது தீச் செயலுக்குக் கரியாயுள்ளதென்று அறிந்து யாதொரு சீவப்பிராணிகளுக்குந் துன்பஞ் செய்யாதிருப்பவனே சகல துறவிகளினும் மேலானவன் எனக் கருதப்படுவான் என்பது விரிவு.

**8. தன்னுயிர்க் கின்னாமெ தானறிவா னென்கொலோ**
**மன்னுயிர்க் கின்னா செயல்.**

**(ப.)** தன்னுயிர் - தனக்கு, கின்னாமெ - துன்பம் உண்டாதலை, தானறிவா -தானேயறிந்தபின் மன்னுயிர் - அன்னிய சீவர்களுக்கு, கின்னா - துன்பத்தை, செயல் - செய்வது, னென்கொலோ - என்னென்று கூறுவாமென்பது பதம்.

**(பொ.)** தனக்குத் துன்பமுண்டாதலை தானே அறிந்தபின் அன்னிய சீவர்களுக்கு, துன்பத்தைச் செய்வதை என்னென்று கூறவாம் என்பது பொழிப்பு.

**(க.)** தனக்கோர் தீங்கு நேரிட்டு அதனால் உண்டாந் துன்பத்தைத் தானே அனுபவித்துணர்ந்தும் பிறருக்கு அத்தகைய துன்பத்தை உண்டு செய்வதாயின் அச்செயலை என்னென்று கூறலாம் என்பது கருத்து.

**(வி.)** தன்னாலேனும் பிறராலேனும் தனக்குண்டாகும் தேக துன்பத்தையும் மனக்கவலையையும் தானே நன்றாக உணர்ந்தும் அத்தகையத் துன்பத்தையும் மனக்கவலையையும் பிறருக்கு உண்டு செய்வதாயின் அச்செயலுள்ளோனை எத்தகையத் துறவியென்று பரிந்து கூறிய விரிவாம்.

**9. பிறர்க்கின்னாமுற்பகற் செய்யிற் நமக்கின்னா**

**பிற்பகற் றாமே வரும்.**

**(ப.)** பிறர்க்கின்னா - அன்னியருக்கோர் துன்பத்தை, முற்பகற் செய்யிற் - முதற்பொழுதிற் செய்வதாயின், நமக்கின்னா - தமக்கே யத்தகையத் துன்பம், பிற்பகற் - மறு பொழுதில், றாமெவரும் - தானேவந்து சேருமென்பது பதம்.

**(பொ.)** அன்னியருக்கோர் துன்பத்தை முதற்பொழுதிற் செய்லதாயின் தமக்கே அத் துன்பம் மறுபொழுதிற் தானே வந்து சேரும் என்பது பொழிப்பு

**(க.)** முதனாளில் அன்னியனுக்கு ஓர் துன்பம் நேரிடச் செய்வதாயின் மறுனாளே யத்தகையத் துன்பம் அறியாமலே தன்னை வந்து சாரும் என்பது கருத்து.

**(வி.)** தானொருவனைப் புதைக்கத் தோண்டிய குழியில் தன்னையே புதைக்க நேரிடுவதுப் போல் தானொருவனுக்கு முதநாள் செய்த தீங்கு மறுநாள் தன்னையறியாமலே வந்து தீருமென்பது விரிவு

**10. நோயெல்லா நோய் செய்தார் மேலவா நோய் செய்யார்**
**நோயின்மெ வேண்டு பவர்.**

**(ப.)** நோயெல்லா - அவரவருக்குத் தோற்றுந் துன்பங்கள் யாவும், நோய் செய்தார் - பிறருக்குச் செய்த துன்பப்பயனை, மேலவா - தோற்றுவித்தற்கே யாகலின், நோயின்மெ - தனக்குத் துன்ப மணுகாதிருக்க, வேண்டுபவர் - கோறுவோர், நோய் செய்யார் - பிறர்க்குத் துன்பஞ்செய்யார் களென்பது பதம்.

**(பொ.)** அவரவருக்குத் தோன்றுந் துன்பங்கள் யாவும் பிறருக்குச் செய்தத் துன்பப்பயனைத் தோற்றுவித்தற்கே யாதலின் தனக்குத் துன்பமணுகாதிருக்கக் கோறுவோர் பிறருக்குத் துன்பஞ்செய்யார்கள் என்பது பொழிப்பு

**(க.)** மக்களுக்குத் துன்பமுண்டாதல் யாவுந் தாங்கள் பிறருக்குச் செய்த துன்பத்தின் பிறிதிபயனே ஆதலின் தனக்கோர் துன்பம்

அணுகாதிருக்க வேண்டும் என்று துறந்த துறவிகள் பிறருக்கோர் துன்பமுஞ் செய்யார்கள் என்பது கருத்து.

**(வி.)** உலக மக்கள் மற்ற சீவராசிகளுக்குச் செய்துவந்த துன்பங்களின் பிறிதி பலனே தங்களைத் துன்புறுத்த வந்து தோன்றுவது இயல்பாதலின் துக்கம் அகலவேண்டி துறவுற்ற முநிவர் பிறவுயிர்களுக்கோர் துன்பமுஞ் செய்யார்களென்பதாம். அங்ஙனஞ் செய்வார்களாயின் தாங்கள் கோறி துறந்த துக்கம் அகலாது என்பது விரிவு.

## 35. கூடாவொழுக்கம்

அதாவது இல்லறவொழுக்கம் துறவறவொழுக்கம் இவ்விரண்டினுள் இல்லறத்தினின்று இதயசுத்தமாகாதென்று எண்ணி சங்கமென்னுந் தெய்வசபை சேர்ந்து பொன்னாடைப் பூண்டு பாத்திரங் கையிலேந்தி இல்லறத்தாரோடு கூடாதுறவி அவர்கள் தீய ஒழுக்கத்திலுங்கூடாது ஒழுகல் வேண்டுமென்பதை விளக்குகின்றார்.

**1. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க**
**ளைந்து மகத்தே நகும்.**

**(ப)** வஞ்சமனத்தான் - மனதிற் கொடுஞ்செயலையே குடியாகக் கொண்டவன், படிற்றொழுக்கம் - அடங்கி செய்யுங் கொடுஞ்செயல்களுக்கு, பூதங்களைந்து - ஐம்பூதங்களும், மகத்தே - தன்னிற்றானே, நகும் - இடம் விட்டகலுமென்பது பதம்

**(பொ)** மனதிற் கொடுஞ் செயலையே குடியாகக் கொண்டவன் அடங்கிசெய்யுங் கொடுஞ் செயல்களுக்கு ஐம்பூதங்களும் இடம் விட்டு விலகும் என்பது பொழிப்பு

**(க.)** துறந்தும் வன்னெஞ்சமுடையவனாயின் அதுவே அவனது ஐம்பூதச் சேர்க்கையைப் பிரித்து ரணதுக்கத்துக் ஆளாக்கும் என்பது கருத்து.

**(வி)** இல்லறப் பற்றுக்களை ஒழித்து துறவு பூண்டவன் தனதுள்ளப் பற்றாகிய வஞ்சினத்தைத் துறக்காது தீங்கு புரிவானாயின் அவ்வுள்ளக் கொதிப்பால் பஞ்ச பூதங்களின் சேர்க்கைகள் பிரிவுற்று மீளா துக்கத்திற்கு ஏதுவாம் மரணத்திற்கு ஆளாவான் என்பது விரிவு.

**2. வானுயர் தோற்ற மெவன் செய்யுந் தன்னெஞ்சந்**
**தானறி குற்றப் படின்.**

**(ப.)** தன்னெஞ்சந் - தனதுள்ளக் கொடுஞ்செயலை, தானறி - தானே தெரிந்து, குற்றப்படின் - தப்பென் றுணர்ந்தவன், வானுயர் - வானராட்சியமாம் வீடுபேற்றின், தோற்ற - சுகப்பார்வையை, மெவன் செய்யு - எவ்வகையிலடையக் கூடுமென்பது பதம்.

**(பொ.)** தனதுள்ளக் கொடுஞ்செயலைத் தானே தெரிந்து தப்பென்றுணர்ந்தவன் வானராட்சியமாம் வீடுபேற்றின்

அகப்பார்வையை எவ்வகையால் அடையக்கூடும் என்பது பொழிப்பு

**(க.)** துறவி தனது உள்ளத்தில் நின்றெழுங் கொடுஞ்செயலைத் தப்பென்றுணர்ந்தபின் வீடுபேறாம் நிருவாண சுகநிலையை எங்ஙனம் அடைவான் என்பது கருத்து.

**(வி.)** இல்லந்துறந்து துறவேறி பற்றற்ற நிருவாண நிலையை அடைய வேண்டியவன் தன துள்ளப்பற்றாம் வஞ்சினச் செயலைத் தானே அகற்றாது குற்றமென்றறிந்தபின் அவனுக்கு நிருவாண நிலை தோற்றுமோ என்பது விரிவு.

**3. வலியி னிலைமெயான் வல்லுருவம் பெற்றம்**
**புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.**

**(ப)** வலயினிலைமெயான் - இயல்பிலேயே மனத்திடனில்லா னொருவன், வல்லுருவம் பெற்றம் - துறவியின் துருவங்காட்ட லெவ்வாறெனில், புலியின்றோல், புலியினுடைய தோலால், போர்த்து - மறைந்து, மேய்ந்தற்று - புலிகளுடன் மேய்வதற் கொக்குமென்பது பதம்,

**(பொ.)** மனத்திட னில்லா ஒருவன் துறவியினது உருவங்காட்டல் எவ்வாறெனில் புலியினுடைய தோலால் மறைத்து புலிகளுடன் மேய்வதற்கு ஒக்குமென்பது பொழிப்பு

**(க.)** மனமாசற்ற துறவிகளுடன் மனமாசறாதோன் சேர்க்கை எவ்வாறுள்ள தென்னில் எருதானது புலியின் தோலைப் போர்த்துக்கொண்டு புலியுடன் உலாவுவதற்கு ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** மனக் களங்கங்களை அறுக்கவும், தேவர்கள் உலாவும் தெய்வசபையில் மீளா வன்னெஞ்சக் களங்கம் நிறைந்தோன் சேர்ந்து வாழ்தல் எவ்வாறுள்ள தென்னில் ஓர் எருதானது புலித்தோலைப் போர்த்துக்கொண்டு புலிகளது கூட்டத்து உலாவலை ஒக்கும் என்பது விரிவு.

**4. தவமறைந் தல்லவை செய்தல் புதன் மறைந்து**
**வேட்டுவன் புட்சிமீழ்த் தற்று.**

**(ப)** தவமறைந் - துறவின துடைபூண்டும், தல்லவை - அதற்கடாதவைகளை செய்தல் - செய்வதானது, வேட்டுவன் - வேடனானவன் புதன் மறைந்து - புதறுக்குள்ளொளிந்திருந்து, புட்சிமீழ்த்தற்று - பட்சிகளைப் பிடித்தலை யொக்குமென்பது பதம்.

**(பொ.)** துறவின் உடைபூண்டும் அதற்கடாதவைகளை செய்வதானது வேடனானவன் புதருக்குள் ஒளிந்திருந்து பட்சிகளைப் பிடித்தலை ஒக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** துறவு பூண்டு, சங்கஞ்சேர்ந்தும் இல்லறத்தோரை வஞ்சித்துப் பொருள் பரிப்பதாயின், அவர்களது செய்கை புதருக்குள் மறைந்து பட்சிகளைப் பிடிக்கும் வேடனுக்கொப்பாம் என்பது கருத்து.

**(வி.)** துறந்து சித்திப் பெற்றோரையே உலகத்தோர் தெய்வமென்று கொண்டாடுவது இயல்பாதலின் தானுமோர் துறந்தவனென்னுந் தவவேடம் பூண்டு இல்லத்தோரை வஞ்சித்து பொருள்பறித்தல் எவ்வாறுள்ள தென்னில் புதருக்குள் மறைந்து பட்சிகளைப் பிடித்து வதைக்கும் வேடனுக்கு ஒப்பாம் என்பது விரிவு

**5. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்**
**றேகம் பலவந் தரும்.**

**(ப)** பற்றற்றே - சகல பாசபந்தங்களையும் விட்டோம், மென்பர் - என நடிப்போர்க்கு, படிற்றொழுக்க - தங்களுட்படிந்துள்ளத் தீச்செயல்களே மெற்றெற்றென் - எப்போதெப்போதென, றேகம் - துன்பங்களை, பலவுந்தரும் - பலவாற்றானுங் கொடுக்குமென்பது பதம்

**(பொ)** சகல பாசபந்தங்களையும் விட்டோமென நடிப்போர்க்குத் தங்களுட் பழந்துள்ளது இச்செயல்களே எப்போதெப்போதெனத் துன்பங்களை பலவாற்றானுங் கொடுக்கும் என்பது பொழிப்பு

**(க.)** துறவு பூண்டுந் தங்களுக்குள்ளத் திச்செயல்களை உள்ளத்தினின்று அகற்றாது வெறுமனே பற்றற்றோமென் நடிப்போரை துன்பம் எப்போதெப்போ தெனத் தொடர்ந்தே நிற்கும் என்பது கருத்து.

**(வி.)** பல்வகைத் துக்கங்களையும் போக்குதற்குத் துறவு பூண்டு தனக்குள்ள இயகுணங்களை அகற்றாது துறவியென் நடிப்பினும் உள்ள வஞ்சினமே எப்போதெப்போதெனக் கார்த்து மீளாதுக்கத்திற்கு ஆளாக்கிவிடும் என்பது விரிவு.

### 6. நெஞ்சிற் றுறவார் துறந்தார் போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணா ரில்.

**(ப.)** நெஞ்சிற்றுறவார் - மனக்களங்கங்களையகற்றாதோர், துறந்தார்போல் - மனக்களங்கமற்ற துறவிகளாம் சமணமுநிவர்களைப்போல், வஞ்சித்து - கபடவேஷமிட்டு, வாழ்வாரின் - சங்கத்திற் சேர்ந்து வாழ்வோர்களினும், வன்கணாரில் - வேறு கொறுறப்பார்வையுடையோரிராரென்பது பதம்.

**(பொ.)** மனக்களங்கங்களை அகற்றாதோர் மனக்களங்கமற்ற துறவிகளாம் சமணமுநிவர்களைப்போல் கபடவேஷமிட்டு சங்கத்திற் சேர்ந்து வாழ்வோர்களினும் வேறு கொறூரப்பார்வை உடையோர் இரார் என்பது பொழிப்பு

**(க)** மனமாசினைக் கழுவாது மனமாசற்றத்துறவிகளாம் அறஹத்துக் களைப் போல் பொன்னாடை புனைந்தும் கரத்தில் ஓடு ஏந்தியும் இல்லறத்தோரை வஞ்சித்தும் பொருள் பறிப்போருமாய் இருப்பராயின் அவர்களைவிட வேறு கொடூரப்பார்வை உடையார் இராரென்பது கருத்து.

**(வி.)** மனத்தினின்றெழூஉங் குடிகெடுப்பு, வஞ்சினம், பொறாமெ, பொருளாசை முதலியக் களங்கங்களை அகற்றாது இவைகள் யாவையும் அகற்றியுள்ள முநிந்தோர்களாம் சமண முனிவர்களைப்போல் வேஷம் பூண்டு பேதை மக்களை வஞ்சித்துப் பொருள் பரிப்போரினுங் கொடுங்கண்ணுள்ளார் உலகத்தில் வேறும் உளரோ என்பது விரிவு.

**7. புறங்குன்றி கண்டனையரேனு மகங்குன்றி**

**மூக்கிற் குரியா ரிடத்து.**

**(ப.)** புறங்குன்றி - தேகந் தளர்வுறக், கண்டனையரேனு - காணக்கூடியவர்களாயினும், மகங்குன்றி - உள்ள பாவங்களற்றுள்ள, மூக்கிற் முகத்தால், குரியாரிடத்து - ஞானக்கருணைநிலை விளங்குமென்பது பதம்

**(பொ.)** தேகங் தளர்வுறக் காணக்கூடியவர்களாயினும் உள்ள பாவங்களற்றுள்ள முகத்தால் ஞானக்கருணைநிலை விளங்கும் என்பது பொழிப்பு.

**(க.)** துறவிக்கு மூப்பினால் தேகந் தளர்வுறினும் உள்ளக் களங்கமற்ற நிலை ஞான கருணாகர முகத்தால் விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** துறவு பூண்டு சங்கஞ் சேர்ந்தும் தனக்குள்ள வஞ்சகச்செயலானது தனது கொடியப்பார்வையில் விளங்குவதுபோல துறந்தோன் மூப்புநிலை அடையினும் அவனது மனமாச கன்றச் செயலானது கருணை நிறைந்த முகத்தால் விளங்கும் என்பது கூடாவொழுக்க விரிவு.

**8. மனத்தது மாசாக மாண்டார் நீராடி**

**மறைந்தொழுகு மாந்தர் பலர்.**

**(ப.)** மாந்தர் பலர் - துறவடைந்த மக்களுடபலர், நீராடி - தேகசுத்தஞ் செய்து, மறைந்தொழுகு - பொன்னாடையுள் மறைந்தும், மனத்தது - தன்மனத்துள்ள, மாசாக - களங்கமறாது, மாண்டார் - மரணமுற்றாரென்பது பதம்.

**(பொ.)** துறவடைந்த மக்களுட் பலர் தேகசுத்தஞ் செய்து பொன்னாடையுள் மறைந்தும் தன்மனத்துள்ளக் களங்கமறாது மரணமுற்றார் என்பது பொழிப்பு.

**(க.)** மரணதுக்கத்தைப் போக்கி பிறப்பறுக்கற்கு துறவு பூண்டு தேகசுத்தமட்டிலுஞ் செய்து மஞ்சளாடையுள் மறைந்தும் தன்மனோ சுத்தஞ்செய்யாது மரணதுக்கத்திற்கு ஆளானார்கள் பலர்கள் என்பது கருத்து.

**(வி.)** பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்குவகைத் துக்கங்களுள் மரணத்தை ஜெயித்துக் கொண்டால் மற்றும் மூன்றுவகைத் துக்கங்களுந் தானே ஒழிந்து போமென்று எண்ணி துறவற முன்னி, சங்கஞ்சேர்ந்து சமணநிலை பெற்று சகலருங்காண முப்போதுங் குளித்து உடல் சுத்தஞ்செய்து மஞ்சளாடையுள் மறைந்தும் பொன் போன்ற தன்னுள்ளத்தை சுத்தஞ்செய்யாது மரணதுக்கத்திற்காளாவது என்னோவென்னும் இரஞ்சல் விரிவு.

**9. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன**
**வினைபடு பாலாற் கொளல்,**

**(ப)** கணைகொடிது - வில் வளையில் துன்பத்தைக் கொடுக்கும், யாழ்கோடு வணைவளையில், செவ்விதாங் - இன்பத்தைக்கொடுக்கும், கன்ன - அதுபோல், வினைபடு - துறவிகளது செயல்களா லுண்டாம் பயனை, பாலாற் - நல்வினை தீவினையென்னு மிருவகுப்பால், கொளல் - தெரிந்துக் கொள்ளவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** வில்வளையில் துன்பத்தைக் கொடுக்கும் வீணைவளையில் இன்பத்தைக் கொடுக்கும் அதுபோல் துறவிகளது செயல்களால் உண்டாம் பயனை நல்வினை தீவினையென்னும் இருபகுப்பால் தெரிந்து கொள்ள வேண்டு மென்பது பொழிப்பு.

**(க.)** வில்லால் துன்பம் உண்டாதலையும் வீணையால் இன்பமுண்டா தலையுங் கண்டறிந்துக் கொள்ளுவதுபோல் துறவிகள் தங்கள் தீவினையா ககவிருத்தியையும் நல்வினையாலடையுஞ் சுகவிருத்தியையும் இருபகுப்பினால் தெரிந்துக்கொள்ள வேண்டுமென்பது கருத்து.

**(வி.)** துறவியானவன் வில்லைப்போன்று வளைந்து ஒடுங்கினவனாகக் காட்டி துன்பத்தைச் செய்தலும், வீணையைப் போன்று வளைந்து ஒடுங்கினின்று யின்பத்தைத் தருதலுமாயதுகெ துக்கவிருத்தி அடைதலையும், துறந்து நல்வினையைப் பெருக்கி சுவிருத்தியடைதலுமாய இருவகுப்பாலுங் கண்டுக் கொள்ளலாம் என்பது விரிவு.

**10. மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்**
**பழித்த லொழித்து விடின்.**

**(ப)** உலகம் - துறவு பூண்டும் உலக மக்களால், பழித்த - மரணமடைந்தானென்றிழிவுகூறலை, லொழித்துவிடின் - நீக்கிக்

கொள்ளுவானாயின், மழித்தலும் - சிரமயிர் கழித்தலும், நீட்டலும் - சிரமயிர் வளர்த்தலும், வேண்டா - கருதாமற்போமென்பது பதம்.

**(பொ.)** துறவுபூண்டும் உலகமக்களால் மரணமடைந்தானென இழிவு கூறலை நீக்கிக்கொள்ளுவானாயின் சிரமயிர் கழித்தலும் சிரமயிர் வளர்த்தலுங் கருதாமற்போம் என்பது பொழிப்பு.

**(க.)** இறந்தானென்னு இழிமொழியை உலகமக்களாற் கேளாது ஜெயம் பெற்றானாயின் சிரோமயிரைக் கழித்தல் வேண்டும் வளர்த்தல் வேண்டுமென்பது இல்லாமல் போம் என்பது கருத்து.

**(வி.)** சங்கஞ்சேர்ந்த சிரமணன் மரணஜெயம் அடையும் வரையில் சிரமயிர் கழித்தே வரவேண்டுமென்பதுபூர்வவிதியாதலின்உ லகோர் இறந்தானென்று இழிமொழி கூறாது சிறந்தானென்று மரணஜெய மடைவானாயின் மயிர் கழித்தலும் வளர்த்தலுமாய இருவகைச் செயல்களும் வேண்டாமற்போம், இறந்தானென்னும் பழித்தல் உண்டாயின் வேண்டுமென்பதற்குச் சார்பாய் மச்சமுநியார் ஞானம் "இறந்து போனவர்க்கென்ன மெஞ்ஞானங்காண் ஏச்சியேச்சி யிகத்துள்ளளோர் தாஷிப்பார் , மறந்து செத்து மறு ஜென்மம் புக்கினால் வருவதாகிய சஞ்சலமென்னவோ, பிறந்துநிற்கின்ற பெரியதிரோதகைப் பெண்ணைப்போல் வந்து பேயாக்கிப் போடுவாள், துறந்துவிட்டுக் கரையேறக் கற்பங்கேள்

சொல்லுவேனிந்த சூட்சத்தைக் கேட்டிடே" என்னும் மரணத்தை ஜெயித்து பிறவி துக்கத்தைப் போக்குங் கியான போதத்தை அனுசரித்து துறந்தும் இ நத்தா னென்னில் உலகோர் பழித்தல் எவ்வகையென்னில் துறந்து பிறந்தானேயென்னும் பரிதாபத்தால், ஐயோ பாபம் பாபமென்னும் இமொழியே பழித்தலாகும், துறந்தும் புண்ணியம் பெருகாது பாவம் பெருகியது கொண்டு இறந்தானென்று கேழ்வியுற்றவுடன் பாவம், பாவமென்னு மொழி தோற்றுதல் இயல்பாம். இறப்பிற்கு எதிரடையாய சம ஆதியானான், இரு பிறப்படைந்தான் என்றவுடன் கேட்போர் ஆ!ஆ! வென்னும் ஆனந்தக் கிளர்ச்சியுற்று ஆதிதேவனுக் கொப்பனையாகக் கொண்டாடுவார்கள். ஆகலின் துறவு பூண்டோன் இறந்தானென்னும் பழித்தலுக்குள்ளாகாது ஜெயம் பெருவனேல் அன்றுமுதல் சிரமயிர் கழிக்க வேண்டுமென்றும், சடைமுடி வளர்க்கவேண்டுமென்றுங் கூறும் விதிகளற்றுப் போவான் என்பது விரிவு.

## 36. வெகுளாமெய்

தன்னைத்தூற்று மொழிகளை செவியிற் கேட்டவுடன் கோபம் எழுதலும் தனது சத்துருவைக் கண்ணிற் கண்டவுடன் கோபம் எழுதலுமாய இருவகைச் செயலினுந் தன துள்ளத் தடக்கிவைத்தெழுவும் வெகுளியே உடலையும் உள்ளத்தையுங் கெடுத்து தான் துறவு சென்று சேர்ந்த சங்கத்தின் பயனுமில்லாமற்

போமாதலின் வெகுளாமெயின் சுகத்தையும், வெகுளுமெய்யின் கேட்டையும் விளக்கலானார்.

**1. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்**
**காக்கிலென் காவாக்க லென்.**

**(ப.)** னல்லிடத்து - இல்லத் திருந்து, சினங்காப்பா - கோபத்தை யடக்க முயலுவோன், காக்கிலென் - அடக்கிலென், காவாக்காலென் - அடக்காதுவிடிலென், செல்லிடத்து- துறவு பூண்டு சேர்ந்த சங்கத்திடத்து, காப்பான் - அடக்குவோனே மேலானவனென்பது பதம்.

**(பொ.)** இல்லத்திருந்து கோபத்தையடக்க முயலுவோன் அடக்கிலென் அடக்காது விடிலென், துறவு பூண்டு சேர்ந்த சங்கத்திடத்து அடக்குவோனே மேலோன் என்பது பொழிப்பு.

**(க.)** இல்லத்திலுள்ளோனுக்குக் கோபம் எழினும் எழாது நிற்கினும் ஏனையோர் அவற்றைக் கருதமாட்டார்கள். சருவமுந்துறந்த சங்கத் தோனுக்குக் கோபம் எழுமாயின் கருதுவார்கள் ஆதலின் துறந்தோனே சினத்தைக் காக்கவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** இல்லந்துறந்து சங்கஞ் சேர்ந்த காரணம் இராகத்துவேஷ மோகம் என்னுங் காம, வெகுளி, மயக்கத்தை அகற்றற் கேயாதலின் தான் சென்ற சங்கத்திடத்து சினத்தைக் காத்தலே சிறப்பாம்

இல்லத்தோன் தொல்லொத்தோனாதலின் அவன் சினத்தைக்காத்தான் காக்கவில்லையென் நோக்குவதாற் பயனில்லை என்பது விரிவு.

**2. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து**
**மில்லானிற் றிய பிற.**

**(ப.)** செல்லாவிடத்து- இல்லந் துறவாதவனிடத்தும், சினந்தீது - கோபமடங்காவிடிற் கொடிதாம், செல்லிடத்து - சேர்ந்த சங்கத்திடத்து, மில்லதெனில் - அக்கோபமடங்காவிடின், றீயபிற - அதனினுங் கொடிய துன்பம் வேறில்லை என்பது பதம்

**(பொ.)** இல்லந் துறவாதவனிடத்தும் கோபம் அடங்காவிடிற் கொடிதாம், சேர்ந்த சங்கத்திடத்து அக்கோபம் அடங்காவிடின் அதனினுங் கொடிய துன்பம் வேறில்லை என்பது பொழிப்பு.

**(க.)** இல்லத்தில் வாழ்வோனுக்கே கோபமெழுவில் அதனால் அவனடையுந் துக்கத்தைக் காண்கின்றோம். சாந்தத்தை நிறப்ப வேண்டுமென்று சங்கஞ் சேர்ந்துங்கோபத்தை அடக்கானாயின் அதனினுங் கொடிய துன்பம் வேறில்லை என்பது கருத்து.

**(வி.)** இல்லத்தில் வாழ்பவன் தொல்லத்தோனென்பது முதுமொழி ஆதலின் அவனுக்குக் கோபமெழுவி அடையுந்துக்கத்தைக்கண்டு பயந்து துறவு பூண்டு சங்கஞ்சேர்ந்தும் வெகுளியை அடக்காது

மயக்கத்தில் அழுந்துவானாயின் இல்லத்தோனடையுந் துக்கத்தினுந் தீய துக்கத்தையடைவான் என்பது விரிவு

**3. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய**
**பிறத்த லதனால் வரும்.**

**(ப.)** யார்மாட்டும் - யாவர்மீதும், வெகுளியை - எழுங் கோபத்தை, மறத்தல் துறவியானவ னகற்றல் வேண்டும், தீய - கொடிய கோபாக்கினியை யகற்றாவிடின், பிறத்தல் - மாறிமாறி பிறக்குந் துன்பம், லதனால் - அதுகொண்டே வரும் வந்தேதீருமென்பது பதம்.

**(பொ.)** யாவர்மீதும் எழுங் கோபத்தை துறவியானவன் அகற்றல் வேண்டும். கொடிய கோபாக்கினியை யகற்றாவிடின் மாறிமாறி பிறக்குந் துன்பம் அதுகொண்டே வந்தே தீரும் என்பது பொழிப்பு.

**(க.)** சாந்தத்தை நிறப்பத் துறவு பூண்டவன் சகலர்மீதுந் தன் கோபத்தை விடுவானாயின் அதுவே தன்னை பிறவித் துன்பத்திற்கு ஆளாக்கிவிடும் என்பது கருத்து.

**(வி.)** முகமலர்ச்சியும் மிருதுவானமொழியுங் களங்கமற்ற குணமும் பெறவேண்டியவன் தன் கோபத்தை அடக்கியாளாது சகலர்மீதுஞ் சினந்து சீர்கெடுவானாயின் மீளா பிறவிதுன்பத்தில் உழல்வான் என்பது விரிவு.

**4. நகையு மூவகையுங் கொல்லுஞ் சினத்திற்**
**பகையு முளவோ பிற.**

**(ப.)** நகையு - முகமலர்ச்சியையும், முவகையுங் - சாந்தம் யீகை அன்பு மூன்றினையும், கொல்லும் - அழிக்கும், சினத்திற் - கோபத்தினும், பிற - வேறு விரோதமும், முளவோ - உண்டோவென்பது பதம்.

**(பொ.)** முக மலர்ச்சியையும், சாந்தம் அன்பு ஈகை மூன்றினையுமழிக்கும் கோபத்தினும் வேறு விரோதம் உண்டோ என்பது பொழிப்பு

**(க.)** நகைமுகத்தையும் சாந்தம் அன்பு ஈகையையுங் கெடுக்கத்தக்கக் கோபத்தைவிட வேறு விரோதிகள் உளரோ என்பது கருத்து.

**(வி.)** தனது முகமலர்ச்சியையும், தனது சாந்தத்தையும், தனது அன்பினையும், தனது ஈகையையுங் கெடுத்துப் பாழ்படச் செய்யுங் கோபத்திற்கும் மேலாய அன்னியமான வேறு விரோதிகள் இல்லையாதலின் வெகுளியை அகற்றவேண்டும் என்பது விரிவு.

**5. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்கக் காவாக்காற்**
**தன்னையே கொல்லுஞ் சினம்.**

**(ப.)** தன்னைத்தான் - தானேதானே தத்துவமாக, காக்கிற் - நிலைக்கவேண்டியவன், சினங்காக்க - தனக்குள்ளெழுங்

கோபாக்கினியை அவித்தல் வேண்டும், காவாக்கால் அவ்வகையவிக்காவிடின், சினம் - கோபாக்கினியாயது, றன்னையே - தன்னைத்தானே, கொல்லும் - மரணதுக்கத்திற் ஆளாக்கிவிடும் என்பது பதம்.

**(பொ)** தானேதானே தத்துவமாக நிலைக்கவேண்டியவன் தனக்குள் எழுங்கோபாக்கினியை அவித்தல் வேண்டும், அவ்வகை அவிக்காவிடின் கோபாக்கினியாயது தன்னைத்தானே மரணதுக்கத்திற்கு ஆளாக்கிவிடும் என்பது பொழிப்பு.

**(க.)** தன்னை ஆய்ந்து சாந்தம் அன்பு ஈகையைப் பெருக்கித் தன்னிலை அடைய வேண்டிய துறவி தனது கோபத்தை அடக்காமற்போவானாயின் அக்கோபமே அவனைக் கொன்றுவிடும் என்பது கருத்து.

**(வி.)** தனக்குள் எழுங் கோபாக்கினி , காமாக்கினி , பசியாக்கினியாகிய மூன்றையும் அவித்து தன்னைத்தான் காத்து ததாகதமடைய வேண்டிய துறவி தனதுடற்சத்துருவாகிய கோபத்தை மட்டிலுங் காவாது விட்டுவிடுவானாயின்
அக்போபாக்கினியே தகித்துத் தன்னைக் கொன்றுவிடும் என்பது விரிவு.

**5. சீனமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்வி**

**யினமென்னு மேமப் புணையைச் சுடும்.**

**(ப.)** சினமென்னுஞ் - கோபமானது, சேர்ந்தாரை - தன்னை யடுத் தோரை, கொல்லி - கெடுப்பதுடன், யினமென்னு - துறவினனுக்குரவி னராகும், மேமப்புணையை - சாதுசங்கத்தையும், சுடும் - தகிக்குமென்பது பதம்.

**(பொ.)** கோபமானது தன்னை அடுத்தோரைக் கெடுப்பதுடன் துறவினனுக்கு உரவினராகும் சாதுசங்கத்தையும் தகிக்கும் என்பது பொழிப்பு

**(க.)** துறவியானவன் தனதுள்ளத்தில் வெகுளியைப் பதித்திருப்பானாயின் தன்னைக் சேர்ந்தோர் கெடுவதுடன் தனக்குயினமாக விளங்கும் சங்கத்து சிரமணர்களையுஞ் சுடும் என்பது கருத்து.

**(வி.)** துறவியானவன் சாந்தத்தை நிறப்பற்குச் சங்கஞ்சேர்ந்து தனது கோபத்தை யடைக்காமற் போவானாயின் அக்கோபத்தால் தன்னையடுத்தோர் கெடுவதுடன் சேர்ந்துள்ள சங்கத்தில் கூடிவாழ்கும் சமணமுநிவர் களையும் அஃதுசுடும் ஆதலின் வெகுளியை வுள்ளத்திலெழவிடாமல் அவிக்க வேண்டும் என்பது விரிவு.

**6. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு**

**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.**

**(ப.)** சினத்தை - கோபத்தை. பொருளென்று - ஒருபொருளென்று, கொண்டவன் - சேர்த்துள்ளவனுக்கு, கேடு - முடிவின் துக்கம் யாதெனில், நிலத்தறைந்தான் - மடிந்து மண்ணிற் புதைத்தலே, கைபிழையாதற்று - கைகண்ட தீவினையாக முடியு மேயன்றி வேறில்லை என்பது பதம்

**(பொ.)** கோபத்தை ஒருபொருளென்று சேர்த்துள்ள துறவிக்கு முடிவின் துக்கம் யாதெனில் மடிந்து மண்ணிற்புதைப் படுதலே கைகண்ட தீவினையாக முடியுமே அன்றி வேறில்லை என்பது பொழிப்பு.

**(க.)** துறவியானவன் கோபத்தை ஓர் பொருளாகக் கொண்டு அதனை நிலைக்கச் செய்துக் கொள்ளுவானாயின் முடிவில் அவனடையும் துன்பம் யாதெனில் மடிந்து மண்ணில் மறைவதே யன்றி வேறு சுகம் என்றும் அடையமாட்டான் என்பது கருத்து.

**(வி.)** மெய்ப்பொருளை நாடி துறவு பூண்டு சங்கஞ் சேர்ந்தவன் அதற்கு எதிரடையாயக் கோபத்தை ஓர் பொருளாக எண்ணி சேர்த்துக் கொள்ளுவானாயின் அதுவே அவன் மெய்ப் பொருளை மறைத்து மரணாவத்தையைக் கொடுத்து மண்ணில் மறைக்கச் செய்யும் என்பது விரிவு.

**8. இணரெரி தோய் வன்னவின்னா செயினும்**

**புணரின் வெகுளாமே நன்று.**

**(ப.)** இணரெரி தோய் - நெருக்க முற்றோர் சகிக்க வொண்ணாத, வன்ன வின்னா - கொடிய துன்பத்தைச் செய்யினும், புணரின் - துறவிசார்ந்தவரிடம், வெகுளாமெ - உள்ளத்தினும் உடலினுங் கோபக் கிளர்ச்சியை எழவிடாததே, நன்று - நல்லதாகும் என்பது பதம்.

**(பொ.)** நெருக்க முற்றோர் சகிக்க வொண்ணாத கொடிய துன்பத்தைச் செய்யினும் துறவி சார்ந்தவரிடம் உள்ளத்தினும் உடலினுங் கோபக் கிளர்ச்சியை எழ விடாததே நல்லதாகும் என்பது பொழிப்பு.

**(க.)** துறவிக்கு அன்னியரால் சகிக்க முடியாத துன்பம் நேரினும் சங்கத்தோர் முன்னிலையில் தனது கோபக் கிளர்ச்சியை எழவிடாமல் தடுப்பதே சுகநிலை என்பது கருத்து.

**(வி.)** சங்கஞ்சேர்ந்து சிரமணம் பெற்றோன் அன்னியரால் உண்டாந்துன் பத்தைச் சகித்து, சேர்ந்த சிரமணர் முன் தனது வெகுளியை அடக்கி காத்தலே நல்லதாகும். அவர்கள் முன்னிலையில் சினத்தைக் காக்கா விடின் போதனை சரிவாராது என்பதே விரிவு.

**9. உள்ளிய வெல்லா முடநெய்து முள்ளத்தா**
**லுள்ளான் வெகுளி யெனின்.**

**(ப.)** முள்ளத்தா - துறவிதன் னுள்ளத்தில், வெகுளி - கோபத்தை, லுள்ளான் அடக்கியுள்ளான், யெனின் - என்பதாயின், உள்ளிய - தானெண்ணிய, வெல்லா - சுகங்கள்யாவும், முடனெய்தும் - உடனேகைக்கூடுமென்பது பதம்.

**(பொ.)** துறவி தன்னுள்ளத்தில் கோபத்தை அடக்கியுள்ளான் எனின் தான் எண்ணிய சுகங்கள் யாவும் உடனேகைக் கூடும் என்பது பொழிப்பு

**(க.)** இல்லந்துறந்த துறவியானவன் தனது கோபத்தை அவித்தான் என்பதற்கு அடையாளம் யாதெனில் அவன் எண்ணிய எண்ணங்கள் யாவும் கைகூடுதலே காட்சியாம் என்பது கருத்து.

**(வி.)** துறவுற்றோன் தனக்குள் எழும் வெகுளியைத் துறந்துள்ளானாயின் தான் எண்ணிய சுகங்கள் யாவும் உடனுக்குடன் முடிவதுடன் சுகானந்த சுசுவாரி நிலையை அடைவான் என்பது விரிவு.

**10. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை**

**(ப.)** இறந்தா - மரண பயமுற்றும் வெகுளி பயமில்லா துறவிகள், ரிறந்தாரனையர் - மரிப்போருக் கொப்பானவரே யாவர், சினத்தை - தங்கள் கோபத்தை, துறந்தார் - அகற்றியவர்களே, துறந்தார் - தங்களுள்ளந் துறந்து மரணபயமற்ற மேன்மக்களின், துணை - சார்பை யடைவார்களென்பது பதம்.

**(பொ.)** மரண பயமுற்றும் வெகுளி பயமில்லா துறவிகள் மரிப்போருக்கு ஒப்பானவரேயோவர், தங்கள் கோபத்தை அகற்றியவர்களே தங்கள் உள்ளந் துறந்து மரணபயமற்ற மேன்மக்களின் சார்பையடைவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** மரணதுக்கத்திற்கு பயந்து துறவு பூண்டு சங்கஞ் சேர்ந்தவன் எழுங் கோபத்திற்கு பயந்து அடக்காவிடின் அவன் மரிப்போர்க்கு ஒப்பானவனேயாவன், கோபத்தை அவித்துவிட்டவனோ வென்னில் மரண ஜெயம் பெற்ற மேலோர்களாம் அந்தணர்களின் துணையை அடைவான் என்பது கருத்து.

**(வி.)** வெகுளி அகற்றி தண்மெயுற்று மரணஜெயம் பெற்றோரே பின் அவர்களைத் துணைக் கொள்ளுவோருந் தங்கள் வெகுளியை அகற்றி தண்மெய்பெற வேண்டியதேயாம். துறவு பூண்டு சங்கஞ் சேர்ந்தவன் தனது வெகுளியை அடக்காவிடின் இல்லத்திலிருந்து மரிப்போரில் இவனும் ஒருவனாவான் என்பது விரிவு.

## 37. அவா அறுத்தல்

இல்லறத்திலிருந்து உலகப்பற்றறுக்க இயலாதென்று துறவு பூண்டவன் தெய்வசபையாம் புத்த சங்கஞ் சேர்ந்து கண்ணினாற் பார்க்கும் பொருளின் மீது ஆசை வையாமலும், நாவினால் உருசிக்கும் பொருளின் மீது ஆசை வையாமலும், மூக்கினால் முகறும் பொருளின் மீது ஆசை வையாமலும், செவியினாற் கேட்கும் இசையின் மீது ஆசைவையாமலும் உடல் சுகித்த இச்சையின் மீது ஆசை வையாமலும் பற்றறுக்கும் ஆசையே பெரிதென்று எண்ணி சாதிப்பதே சிரமணர்க்குரிய விதியாதலின் துறவிகள் அவாவினை யகற்றும் வழி வகைகளை வகுக்கலானார்.

### 1. அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாஅப் பிறப்பினு வித்து.

**(ப.)** அவாவென்ப - ஆசையென்று சொல்லும்படியானது, வெல்லாவுயிர்க்கு - சருவசீவராசிகளுக்கும், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், தவா அப் - ஒன்றைவிட்டொன்றை தாவி, பிறப்பீனு - மறுபிறப்பினை தோற்றுவித்தற்கு, வித்து - ஓர் விதையாகுமென்பது பதம்.

**(பொ.)** ஆசையென்று சொல்லும்படியானது சருவ சீவராசிகளும் எக்காலத்தும் ஒன்றை விட்டு ஒன்றை தாவி மறுபிறப்பினைத்

தோற்றுவித்தற்கு ஓர் விதையாகும் என்பது பதம்.

**(த.)** சருவ சீவராசிகளும் மாறிமாறி பிறத்தல் என்னுந் தோன்றி தோன்றி மறைதற்கு ஆசையே காரணம் என்பது கருத்து.

**(வி.)** மனதினின்று எழும் அவாவென்னும் பற்றுதலே பிறவிக்கு வித்தாகவும் அவ் அவாவினை அறுத்தலே பிறவியின் துக்கத்தைப் போக்குதற் கேதுவாக முள்ளது கண்டு அவாவென்னும் வித்தாகியப் பற்றுதலே பிறப்பதற்கு மூலமென்று கூறியுள்ளவற்றிற்குச் சார்பாய், இடைகாடர் பற்றே பிறப்புண்டாக்கும் தாண்டவக்கோனே அதை பற்றாதறுத்துவிடு தாண்டவக்கோனே, என்றும் " ஆசைக்கோரளவில்லை லகிமெல்லாங் கட்டி யாளினுங் கடன் மீதிலே" என சதகத்தோர் கூறியுள்ளவற்றிற்கும் பகரமாய் ஆசையென்னும் விதையே சருவ சீவர்களின் தோற்றத்திற்கும் ஏதுவாய் உள்ளதென்பது விரிவு

**2. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமெ மற்றது**
**வேண்டாமே வேண்ட வரும்.**

**(ப.)** பிறவாமெ - மறுபடியும் பிறவா சுகநிலையை, வேண்டுங்கால் - உறுதிபெறக்கருதுங்கால், வேண்டும் - அவை விரும்பி நிற்கும் - அவை விரும்பி நிற்கும், மற்றது - பிறக்குந் துக்கநிலை யானது,

வேண்டாமெ - பிறவியினுருவை கருதாது, வேண்ட - அவாவைக்கருத, வரும் - வந்து தீருமென்பது பதம்.

**(பொ.)** மறுபடியும் பிறவா சுகநிலையை உறுதி பெறக்கருதுங்கால் அவை விரும்பி நிற்கும் பிறக்குந் துக்க நிலையானது பிறவியின் உருளை அவாவைக் கருத வந்து தீரும் என்பது பொழிப்பு

**(க.)** பிறவியின் துக்கத்தைப் போக்கிக் கொள்ள வேண்டுமென்னும் அவா மிகுத்தோனுக்கு சுகநிலை வந்தே கூடும் அவ்வகைய அவாவற்று உலக இன்பத்தை வேண்டுவோனுக்கு துக்க நிலை வந்தே தீரும் என்பது கருத்து.

**(வி.)** துறவு பூண்டவன் பிறப்பின் துக்கத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்னும் அவாவில் நிலைத்து பஞ்சபுலன்களின் செயலை அறிந்துக் கொள்ளுவதினால் தென்புலத்தோனாகி சுகநிலை பெறுவான், அங்ஙனந் துறவு பூண்டும் பிறவியின் துக்கத்தை நோக்காது பஞ்சபுலனின் இன்ப நுகர்ச்சியை வேண்டுவானாயின் பிறவியின் துக்கம் வந்தே தீரும் என்பது விரிவு,

**3. வேண்டாமெ யன்ன விழுச்செல்வ மீண்டில்லை**
**யாண்டு மஃதொப்ப தில்.**

**(ப.)** வேண்டாமெ - புலன்வழியாயுண்டாமின்பத்தை நாடாதும். யன்ன - அதனை கருதாதுமாய, விழுச்செல்வ - அழியாச்செல்வம்,

மீண்டில்லை - வேறொன்றுங்கிடையா, யாண்டு - இப்போதுமெப்போதும், மஃதொப்பதில் - அதற்கு நிகராயதொன்றில்லை என்பது பதம்.

**(பொ.)** புலன் வழியால் உண்டாம் இன்பத்தை நாடாதும் அதனை கருதாதுமாய அழியாச்செல்வம் வேறொன்றுங் கிடையா இப்போதும் எப்போதும், அதற்கு நிகராயது ஒன்றில்லை என்பது பொழிப்பு

**(க.)** துறவியானவன் அவாவற்ற வாழ்க்கையே அழியாச்செல்வமென்றும் அதற்கு நிகராய இன்பம் வேறொன்றுமில்லை என்பது கருத்து.

**(வி.)** துறவு பூண்டு சங்கஞ்சேர்ந்துள்ள சிரமணனுக்கு உலக இன்பத்தில் இச்சையும் அவிச்சையுமற்று ஆனந்தித்திருப்பதே அழியாச் செல்வத்திற்கு ஒப்பாவதுடன் அதற்கு ஒப்பிட்டுக் கூறுவதற்கும் வேறு பொருள் கிடையாது என்பது விரிவு

**4. தூஉயமெ யென்பத வாவின் மெ மற்றுது**
**வாஅய்மெ வேண்ட வரும்.**

**(ப.)** தூஉய்மெ - சுத்ததேகி, யென்ப - என்று சொல்லும்படியானது, தவாவின்மெ - ஆசையற்றவனாதல், மற்றது - மற்றுமதற்கு உதவியோயென்னில், வா அய்மெ - நான்கு வகை

சத்தியமொழிகளை, வேண்ட- கருத, வரும் - வந்து தீரும் என்பது பதம்.

**(பொ.)** சுத்த தேகியென்று சொல்லும் படியானது ஆசையற்றவனாதல், மற்றும் அதற்கு உதவியோ வென்னில் நான்கு வகைசத்தியமொழிகளைக் கருத வந்து தீரும் என்பது பொழிப்பு.

**(க.)** உலக இன்பத்தில் ஆசையற்றவனாயிருப்பானாயின் களங்கமற்றோன் என்பார்கள் அதனுடன் நான்கு வாய்மெகளையும் உணர்வானாயின் தூய உடம்பினனே யாவன் என்பது கருத்து.

**(வி.)** சகல களங்கங்களாம் மனமாசுகளற்று தூய உடம்பினனாக வேண்டிய துறவி ஆசையை அகற்றல் வேண்டும். அதற்கு உதவி வேண்டுமேல், நான்கு மெய்வாய் மொழிகளாம், பிறப்பின் துக்கம், பிணியின் துக்கம், மூப்பின் துக்கம், மரணதுக்கங்களைக் கண்டுணர்ந்த யிடத்தே வந்து தீருமென்பது
விரிவு.

**5. அற்றவ ரென்பார வாவற்றார் மற்றையா**

**ஏற்றாக வற்ற திலர்.**

**(ப.)** அற்றவரென்பா - சகலவாசைகளையு மொழித்தோமென்று கூறும் படியானவர்கள், ரவாவற்றார் - ஆசைகளைப்

பற்றறவொழித்துள்ள, மற்றை - வேறொருவரைப்போல், ரற்றாக - பூர்த்தியாக, வற்றதிலர் - ஒழித்தவர்களாகா ரென்பது பதம்.

**(பொ.)** சகல ஆசைகளையும் ஒழித்தோமென்று கூறும்படியானவர்கள் ஆசைகளைப்பற்றற ஒழித்துள்ள வேறொருவரைப்போல் பூர்த்தியாக ஒழித்தவர்கள் ஆகார் என்பது பொழிப்பு

**(க)** சகல ஆசைகளையும் ஒழித்துவிட்டேன் என்று எத்துறவி வெளியிற்கூறித் திரிகின்றானோ அவன் முற்றும் ஒழித்த முநிவர்கள் போலாகாது சிற்சில அவா உடையவனே என்பது கருத்து.

**(வி.)** உலகமக்களுள் யாவனொருவன் தன்னை முற்றுந் தெரிந்தவன், முற்றுந்தெரிந்தவன் எனச் சொல்லித் திரிகின்றானோ அவனை விவேகிகள் சற்றுந் தெரியாதவன் என்று எண்ணிக் கொள்வது போல் ஓர் துறவி, நான் சகல ஆசைகளையும் ஒழித்தேன் என சொல்லித் திரிவானாயின், சகல ஆசைகளையும் ஒழித்து முதிந்துள்ள முனிவர்கள் அவனை சிற்சில ஆசை அறாதவன் என்றே மதிப்பார்கள் என்பது விரிவு.

**6. அஞ்சுவ தோரு மறனே யொருவனை**

**வஞ்சிப்ப தோரு மவா.**

**(ப.)** யொருவனை - யாதா மொருவனை, வஞ்சிப்பதோரு - குடிகெடுக்க முயல்வதே, மவா - ஆசையின் மூலமென்னப்படும், அஞ்சுவதோரு - அவற்றிற்கு பயந்து நடத்தலே, மறனே - புத்தரது தன்மமா மென்பது பதம்

**(பொ.)** யாதாமொருவனைக் கெடுக்க முயல்வதே ஆசையின் மூலமென்னப்படும் அவற்றிற்கு பயந்து நடத்தலே புத்தரது தன்மமாம் என்பது

**(க.)** தீவினையாம் வஞ்சினைச்செயலுக்கு பயந்து அவாவை அறுத்தலே புத்த தன்மமென்றும் ஒருவனை வஞ்சித்துக் குடிகெடுத்தலே அவாவின் அதர்மமாம் என்பது கருத்து.

**(வி.)** ஒருவனை வஞ்சித்துக் கெடுப்பதாகியத் தொழில்கள் யாவும் ஆசையின் பெருக்கத்தால் உண்டாஞ் செயல்கள் என்னப்படும் வஞ்சினத்திற்கும் திருத்தும் பயந்து நடத்தலே தீவினைகளை அகற்றும் புத்ததன்மமே என்பதற்குச் சார்பாய் சீவகசிந்தாமணி "கொடுவெஞ் சிலைவாய்க் கணையிற் கொடிதாய், நடுநாளிரவின்னவை தான் மிகுமா, னெடுவெண்ணில் வின்னிமிர் தேர்பரியா தடுமால்வழி நின்றறனேயருளாய்" என்றும் பாட்டியல் "தீவினையை வெல்லும் அறவாழி தெய்வமஞ்சல்" என்பது கொண்டு

வஞ்சினப்பெருக்கமே ஆசையின் பீடமென்றும் அவற்றிற்கு பயந்து அவாவை அறுத்தலே புத்த தன்மம் என்றும் கூறிய விரிவு.

**7. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை**
**தான் வேண்டு மாற்றான் வரும்.**

**(ப.)** அவாவினை - ஆசையை யொழித்து, யாற்ற - ஆறுதலுற்றவனுக்கு, வறுப்பிற் - பிறவியின் பின்னலறுந்து போம், றவாவினை - ஆசையினை தான் வேண்டு - தானே கருதிநிற்பானாயின், மாற்றான் வரும் - மரண துன்பம் வந்தே தீருமென்பது பதம்.

**(பொ.)** ஆசையை ஒழித்து ஆறுதலுற்றவனுக்குப் பிறவியின் பின்னலறுந்து போம், ஆசையினைத்தானே கருதி நிற்பானாயின் மரண துன்பம் வந்தே தீரும் என்பது பொழிப்பு.

**(க.)** உலக விபத்தில் ஆசையைப் பெருக்கி நிற்போனுக்கு மரண துன்பம் உண்டாவதுடன் மறுபிறவியில் மீளா துன்பத்தையும் அடைவான், ஆசைகளை அறுத்து ஆறுதலுற்றவன் மரணதுக்கத்தைப் போக்கிக் கொள்ளுவதுடன் மறுபிறவியுமற்ற சுகநிலை பெறுவான் என்பது கருத்து.

**(வி.)** ஆசையினால் ஒன்றை தாவிதாவி அலைவதின் செயலே மாறிமாறி பிறத்தற்கு ஏதுவாகி, பிறப்பின் துக்கம், பிணியின் துக்கம்,

மூப்பின் துக்கம், மரணதுக்கம், இன்னான்கையும் பெருக்கிக்கொண்டே வரும் உலக இன்பத்தின் ஆசைகளற்றபோது மாற்றான் வருவான் என்னும் பயமும் மரணத்தின் துன்பமும் பிறவியின் தோற்றமும் அற்று சுகவாரி என்னும் ஆனந்த நிலையில் இருப்பான் என்பது விரிவு.

**8. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்**
**றவாஅது மேன்மேல் வரும்.**

**(ப.)** அவாவில்லார்க் - ஆசையற்றவர்களுக்கு, துன்பம் - துக்கமானது, கில்லாகும் - இல்லையென்பதாகும், மஃதுண்டேல் அதுயிருக்குமாயின், றவா அது - ஆசையின் பெருக்கமே, மேன்மேல் - மேலு மேலும், வரும் - வந்தே தீருமென்பது பதம்

**(பொ.)** ஆசையற்றவர்களுக்கு துக்கமானது இல்லை என்பதாகும், அது இருக்குமாயின் ஆசையின் பெருக்கமே மேலும் மேலும் வந்தே தீரும் என்பது
பொழிப்பு

**(க.)** நிராசையுற்றோர் நிமலநிலைப் பெற்றவர்களாதலின் அவர்களை யாதொரு துன்பமும் அணுகாவாம், ஆசையென்பதுள்ளோருக்கு மேலும் மேலும் ஆசை வளர்ந்தே தீரும் என்பது கருத்து.

**(வி.)** கண்ணினால் பார்க்கும் பொருளிலாசையும் நாவினால் உருசிக்கும் பொருளிலாசையும் மூக்கினால் முகரும் பொருளிலாசையும் செவியினால் கேட்கும் பொருளிலாசையும் உடலால் சுகிக்கும் பொருளிலாசையு மாயச்செயல்களில் இச்சையை விடாதோர்க்கு அஃது மேலும் மேலும் பெருகி மீளாதுக்கத்திற்கு ஆளக்கிவிடும். பஞ்ச புலநுகற்சியின் ஆசைகளற்று சுக நிலைபெற்றோருக்கு துக்கமென்பதே அணுகாது என்பது விரிவு.

### 9. இன்பமிடையறா தீண்டு மவாவென்னுந் துன்பத் துட்டுன்பங் கெடும்

**(ப.)** துன்பத்துட்டுன்பங் - மேலு மேலுந்துக்கத்தையே கொடுத்துவரும், மவா வென்னுந் - ஆசையானது, கெடும் - அற்றொழியுங்கால், இன்பம் - பேரின்ப நிருவாணமானது, மிடையறா - மத்திய தடைகளின்றி, தீண்டு - வந்து கூடுமென்பது பதம்.

**(பொ.)** மேலும் மேலுந் துக்கத்தைக் கொடுத்துவரும் ஆசையானது அற்றொழியுங்கால் பேரின்ப நிருவாணமானது மத்திய தடைகளின்றி வந்து கூடும் என்பது பொழிப்பு

**(க.)** உலக இன்பத்தை நாடி தினேதினே பெருகும் ஆசையினால் உண்டாந் துக்கமானது சகலமும் ஒழிந்து நிராசையுற்றபோது

பேரின்பமாம் நித்திய சுகம் யாதாமொரு தடையுமின்றி வந்து கூடும் என்பது கருத்து.

**(வி.)** பாசபந்த இன்பத்தை நாடி ஆசையின் பெருக்கில் உலைந்த துறவி அவற்றை அகற்ற வேண்டியே சங்கஞ் சேர்ந்தவனாதலின் மற்றுமுண்டாம் ஆசையின் பெருக்கங்கள் யாவையும் பற்றற ஒழித்து விடுவானாயின் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பி பூரணமுற்று தானே தானே தத்துவனாவான் என்பது விரிவு.

**10. ஆரா வியற்கை யவாநீப்பினந் நிலையே**
**பேரா வியற்கை தரும்.**

**(ப.)** ஆரா - துறவி தன்னையாராயுங்கால், வியற்கை - தன்னிற்றானே, யவா ஆசையென்பது தோன்றி கெடுத்தலால், நீப்பி - அவற்றை யொழித்து, னந்நிலையே-ஒழிந்த நிலையினிற்பானாயின், பேரா- என்று மழியா, இயற்கை - தண்மெயை, தரும்- கொடுக்கு மென்பது பதம்.

**(பொ.)** துறவி தன்னை ஆராயுங்கால் தன்னிற்றானே ஆசை என்பது தோன்றி கெடுத்தலால் அவற்றை ஒழித்து ஒழிந்த நிலையில் நிற்பானாயின் என்றும் அழியா தண்மெயைக் கொடுக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** இயல்பிலேயே தன்னிற்றானே உண்டாவது ஆசையின் குணமாதலின் அவற்றை பற்றற ஒழித்து, ஒழிந்த நிலையில் நிற்பானாயின் இயல்பிலேயேயுள்ள தண்மெயாம் சாந்தவுருவந்தானே தானாக விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** உலக ஆசையின் பெருக்கமானது இயற்கையிலேயே தன்னிற்றானே தோன்றி கெடுப்பதை ஆராய்ந்து உணர்ந்த துறவியானவன் அவ்வாசையைப் பற்றற நீக்கி நீங்கிய நிலையில் நிற்பானாயின் சாந்தமாம் என்றும் இயற்கையா யுள்ளப் பழம்பொருள் தானே தானேயாக விளங்கும் என்பது விரிவு

## 38. தவம்

அதாவது தவமென்னும் நல் ஊக்கமாய சீவகாருண்யத்தை நிறப்பவேண்டிய துறவி தனக்கோர் துன்பமும் அணுகாதுத்தானே தன்னைக் காத்துக் கொள்ள வேண்டியவனாதலின் அதற்கு பலமாக சருவ சீவர்களுக்கும் ஏதோர் துன்பமும் அணுகாதுகாத்தலும், தவமாம் நல்லூக்கத்திற்கெதிறடையாய அவமாம் பொல்லூக்கத்தை அகற்றலு மாய வழி வகைகளை விளக்குகின்றார்.

### 1. உற்றநோய் தோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமெ யற்ற தவத்திற் குரு.

**(ப.)** உற்றநோய் - தனக்குள்ளெழும் பிணிகளை, தோன்ற - எழவிடாமற்காத்தலும் , லுயிர்க்குறுகண் - மற்றுஞ்

சீவப்பிராணிகளுக்குத் துன்பத்தை, செய்யாமெ - செய்யாதொழிதலுமாய, யற்றே - அதுவே, தவத்திற் - நல்லூக்கத்திற்கு, குரு - அச்சாணியாகுமென்பது பதம்.

**(பொ.)** தனக்குள் எழும் பிணிகளை எழவிடாமற் காத்தலும் மற்றுஞ் சீவப்பிராணிகளுக்குத் துன்பத்தைச் செய்யா தொழிதலுமாயதுவே நல்லூக்கத்திற்கு அச்சாணியாகும் என்பது பொழிப்பு

**(க.)** தனக்குள் நின்றெழுவி கெடுக்கும் பிணிகளாம் காமவெகுளி மயக்கங்களை எழவிடாமற் தடுத்தலும் அன்னியப் பிராணிகளுக்கோர் துன்பம் அணுகாது காத்தலுமாயச்செயல்களெதுவோ அதுவே தவத்தின் சுகநிலை என்பது கருத்து.

**(வி.)** ஓர் மனிதன் தனக்குள்ளெழும் இராகத் துவேஷமோகங்கள் என்னுங்காமாக்கினி, கோபாக்கினி பசியாக்கினியாம் பிணியினுற்பவத்திற்கு இடங்கொடாமல் காத்தலும் அன்னிய சீவப்பிராணிகளுக்கோர் துன்பமும் அணுகாது பார்த்தலுமாயச் செயல்களெதுவோ அதுவே தவமென்னும் நல்லூக்கத்திற்கு பீடமாம் என்பது விரிவு.

**2. தவமுந் தவமுடையார்க் காகும் வமதனை**
**யந்திலார் மேற்கொள் வது.**

**(ப.)** தவமுந் - துறவியினது நல்லூக்கமானது, தவமுடையோர்க்காகு - மற்பிறவியில் விட்ட தவத்தொடர் பால் யெளிதில் முடிவதாகும், யஃதிலார் தவத்தினது விட்டகுறையில்லாதோர்க்கு, மவமதனை - பொல்லாக்கமாமவச் செயலே, மேற்கொள்வது - முந்தநிற்கு மென்பது பதம்.

**(பொ.)** துறவியினது நல்லூர்க்கமானது முற்பிறவியில் விட்ட தவத்தொடர்பால் எளிதில் முடிவதாகும், தவத்தினது விட்டகுறையில்லா கோர்க்கு பொல்லூக்கமாம் அவச் செயலே முந்த நிற்கும் என்பது பொழிப்பு.

**(க.)** தவமாம் நல்லூக்கத்தில் முயன்ற துறவிக்கு முற்பிறவியின் நல்லூக்கத்தொடர்புந் தொடர்ந்திருக்குமாயின் தவத்தின் பயன் எளிதில் கைகூடும் தவத்தொடர்பின்றி அவத்தொடர் இருக்குமாயின் துறவியினது தவச்செயல் குன்றும் என்பது கருத்து.

**(வி.)** தவத்திற்கு முயன்ற துறவியானவன் தனது நல்லூக்கச் செயலைத் தன்னிற்றானே ஆராய்ந்து இறந்த பிறப்பில் தான் செய்தவினையை, பிறந்த பிறப்பின் வினையால் அறிவது இயல்பாதலின் தனது தபோபலன் முந்துமாயின் முன்தொடர்பு என்றறிந்து முடிக்கவும் பிந்துமாயின் தவமே ஆரம்பம் என்றறிந்து

விடாமுயற்சியால் தவனிலையாம் நல்லூக்கத்தில் நிலைக்க வேண்டும் என்பது விரிவு.

### 3. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார் கொன் மற்றை யவர்க டலம்.

**(ப.)** துறந்தார்க்கு இல்லறந் துறந்த சிரமணர்களுக்கு, துப்புரவு வேண்டி - உண்டியும் உடையுமளிக்குஞ் செயல் கொண்டு, மற்றையவர்க - இல்லறத்தோர், டவம் - தங்கள் நல்லூக்கத்தை, மறந்தார் கொன் - விட்டு மிருக்கின்றார்களா மென்பது பதம்.

**(பொ.)** இல்லறந்துறந்த சிரமணர்களுக்கு உண்டியும் உடையுமளிக்குஞ் செயல் கொண்டு இல்லறத்தோர் தங்கள் நல்லூக்கத்தை விட்டும் இருக்கின்றார்களாம் என்பது பொழிப்பு.

**(க.)** இல்லறத்தோர் தாங்களே தவத்தில் முறிந்து சுகம் பெறுவதை விடுத்து துறந்தோர் ஈடேற்றத்தையே பெரிதென்று எண்ணி சகல சுகங்களையும் அளித்து வருகின்றபடியால் துறவோர் தங்கள் தவத்தை அதிதீவிரத்தில் முடிக்க வேண்டும் என்பது கருத்து.

**(வி)** இல்லறத்தினின்று ஒழுகுவோர் தாங்களே தவத்தில் முறிந்து சுகப்பேற்றை பெறாது இல்லந்துறந்து சங்கஞ் சேர்ந்துள்ள சமண முநிவர்களுக்கே வேண உதவி புரிந்து அவர்கள் முன்னேற்றத்தைக்கருதி நிற்றலால் துறந்தோர் மறந்தும்

பொல்லூக்கமாம் அவநிலை சாராது நல்லூக்கமாம் தவநிலை சாரவேண்டும் என்பது விரிவு.

**4. ஒன்னார் தெறலு முவந்தாரை யாக்கலு**
**மெண்ணிற் றவத்தான் வரும்.**

**(ப.)** ஒன்னார் - தானேதானே, தெறலு - உறுதிபெறலும், முவந்தாரை - தன்னையடுத்தோரை, யாக்கலு - சீர்பெறச் செய்தலு மாய கருதுதற்கரிதாய, றவத்தான் - நல்லூக்கத்தால், வரும் வந்து தீருமென்பது பதம்.

**(பொ)** தானே தானே உறுதி பெறலும் தன்னை அடுத்தோரை சீர்பெறச் செய்தலுமாயது கருதுதற்கரிதாய நல்லூக்கத்தால் வந்து தீரும் என்பது பொழிப்பு.

**(க.)** துறவியானவன் நல்லூக்கமாம் தபோ நிலையிற்றிறம் பெற நிற்பானாயின் தான் உறுதியாய் சுகநிலை பெறுகுவதுடன் தன்னை அடுத்தோரையும் அத்தவநிலை சுகச்சீர்பெற செய்விக்கும் என்பது கருத்து.

**(வி.)** தானே தானே தத்துவமாகநிலைபெறுதலுந் தன்னையடுத்தோரைக் கடைத்தேறவைத்தலுமாயச்செயல்கள் யாவும் தபோபலப் புண்ணியமே ஆதலின் துறவியானவன் அத்தவநிலை வழுவாது வாழ்கவேண்டுமென்பதற்குச் சார்பாய் அறநெறிச்சாரம்,

"உடம்புங்கிளையும் பொருளும் பிறவுந் தொடர்ந்து பின் செல்லாமெ கண்டு மடங்கித் தவத்தோடு தானம் புரியாது வாழ்வா, ரவத்தங்கழிகின்ற நாள்." என்பது கொண்டு தபோபலத்தால் தான் சுகச்சீர் பெறுவதுடன் தன்னையடுத் தோரும் சுகச்சீர் பெறுவார்கள் என்பது விரிவு.

## 5. வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவ மீண்டு முயலப் படும்.

**(ப)** வேண்டிய - துறவிகோறிய தவத்தால், வேண்டியாங் - தாங்கோறியவைகள், கெய்தலால் - வந்து கூடுவதால், செய்தவ - நல்லூக்கத்தில், மீண்டு - இடைவிடாது முயலப்படும் - முறிந்து சாதித்தல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** துறவிகோறிய தவத்தால் தாங்கோறியவைகள் வந்து கூடுவதால் செய்யும் நல்லூக்கத்தை இடைவிடாது முறிந்து சாதித்தல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** துறவியானவன் நாடி நிற்குந் தபோபலத்தால் அவன் கோறியவைகள் முடிவது அநுபவமாதலின் மீண்டுந் தவச்செயலில் முநிந்தே நிற்கவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** இல்லந்துறந்து சங்கஞ்சேர்ந்த சிரமணன் தனது இடைவிடா தவச் செயலால் வேண்டியவைக் கைகூடுதல் அனுபவமுங்

காட்சியுமாதலின் துறந்தோன் தவச் செயலில் மீண்டும் முயன்று சாதித்து சித்தி பெற வேண்டும் என்பது விரிவு.

**6. தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லா**
**ரவஞ் செய்வாராசையுட் பட்டு.**

**(ப.)** தவஞ்செய்வார் - நல்லூக்கத்தில் முதிந்து நிற்போர், தங்கருமஞ் செய்வார் - தாங்களடைய வேண்டிய வீடுபேறாம் சுகநிலையந் தேடிக் கொள்ளுவர், மற்றல்லா - அவ்வகை முனியாதோர், ராசையுட்பட்டு - பேராசையிற் சிக்குண்டு, ரவஞ்செய்வார் - தங்களுக்குத்தாங்களே கேட்டையுண்டு செய்துக் கொள்ளுவார் என்பது பதம்.

**(பொ.)** நல்லூக்கத்தில் முறிந்து நிற்போர் தாங்களடைய வேண்டிய வீடுபேறாம் சுகநிலையந் தேடிக்கொள்ளுவர், அவ்வகை முநியாதோர் பேராசையிற் சிக்குண்டு தங்களுக்குத் தாங்களே கேட்டை உண்டு செய்துக்கொள்ளுவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** தன்னை அடைக்கியாளுந் தவநிலையில் ஊக்கம் பெற்றிருப்போர் தானே தானே சுயம்பாம் சுகநிலையைப் பெறுவார்கள் அவ்வகையில்லாதோர் துக்க நிலையடைவார்கள் என்பது கருத்து.

**(வி.)** இரசோகுணம், தமோகுணம் இரண்டு மற்று சத்துவ குணம் நிறம்பத் தவத்திற்கு முநிந்த துறவி இடைவிடாசத்துவ சாதனத்தில்

முதிந்து நிற்பானாயின் சதா சுகநிலையைப் பெறுவான். அங்ஙனமில்லாது பேராசையுற்று உழல்வோன் மீளா துக்க நிலையிற் சுழல்வான் என்பது விரிவு

**7. சுடச்சுடப் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்**

**சுடச்சுட நோக்கிற் பவர்க்கு.**

**(ப)** துன்பஞ் - துக்கவிருத்தியின் காரணங்களை, சுடச்சுட - உடனுக்குடன், நோக்கிற் பவர்க்கு - உய்த்துணறுவோருக்கு, சுடச்சுட - புடமிடப்புடமிட, பொன் போலொளி - பொன்னானது பிரகாசிப்பது போல, விடுந் - சாந்தம் ஒளிவிடுமென்பது பதம். *

**(பொ.)** துக்கவிருத்தியின் காரணங்களை உடனுக்குடன் உய்த்து ணறுவோருக்கு புடமிடப்புடமிடப் பொன்னானது பிரகாசிப்பது போல சாந்தம் ஒளிவிடும் என்பது பொழிப்பு.

**(க.)** பொன்னைப் புடமிடப்புடமிட ஒளிவீசுவது போல் துக்கம் எதனால் நண்டாயின என்று உடனுக்குடன் உசாவி உணர்வானாயின் துக்கந்தோற்றும் நிலைய கன்று சுகவொளிபெறுவான் என்பது கருத்து.

**(வி.)** பொன்னினை எடுத்துச் சுடசுடப் புடமிடுவதாயின் தள்ளக்களங்கமற்று மேலும் மேலும் பிரகாசிப்பது போல் துறவி தனது காலமுயற்சியால் துக்கம், துக்க உபத்திரவம் துக்கபோற்பவ காரணம், துக்க நிவாரணமாகும் வழிவகைகளை உடனுக்குடன்

உய்த்துணர்ந்து துக்கோற்பவக் காரணத்தை அகற்றுவனாயின் சுகவொளியானது தன்னிற்றானே விளங்கும் என்பது விரிவு.

**8. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய**
**மன்னுயி ரெல்லாந் தொழும்.**

**(ப.)** தன்னுயிர் - தனது யிரென்னும் பற்றினை, தானற - தானே தான றுத்து, பெற்றானை - நிருவாணம் பெற்றோனை, யேனைய - மற்றுமுள்ள, மன்னுயிரெல்லாம் - சீவராசிகள் யாவும், தொழும் - வணங்குமென்பது பதம்.

**(பொ.)** தனது உயிரென்னும் பற்றினை தானேதான் அறுத்து நிருவாணம் பெற்றோனை மற்றுமுள்ள சீவராசிகள் யாவும் வணங்கும் என்பது பொழிப்பு.

**(க.)** உயிரென்னும் நாமத்தையும் உடலென்னு முருவத்தையுந் தானாக அகற்றி வீடு பேறுபெற்றோனை சருவ சீவர்களும் வணங்கும் என்பது கருத்து.

**(வி.)** துறவுபூண்டு தவநிலை உறுதி பெற சாதிப்போன் நான் நீயென்னும் பின்ன பாவமும், உடலுயிரென்னும் இரண்டும் அற்றுஞானவரம்பு கடவாது என்றும் அழியா நிருவாண சுகமடைவோன், ஆதலின் அவ்வகையடைந் தோனை சருவசீவர்களுங் கைகூப்பித் தொழூஉம் என்பது விரிவு.

**9. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றவி**

**னாற்ற லைப்பட் டவர்க்கு.**

**(ப.)** நோற்றலி - தவவிரதத்தினால், னாற்ற - ஆறுதலுற , றலைப்பட்டவர்க்கு - முநிந்தவர்களுக்கு, கூற்றங் - மரணபயத்தை, குதித்தலுங் - கடக்கக்கூடிய, கை கூடு - வழியுண்டாம் என்பது பதம்.

**(பொ.)** தவ விரதத்தினால் ஆறுதலுற முநிந்தவர்கள் மரண பயத்தைக் கடக்கக் கூடிய வழியுண்டாம் என்பது பொழிப்பு.

**(க.)** துக்கத்தை போக்கி சுகநிலை பெறும் தபோ பலத்தால் ஆறுதலுற்றோருக்கு மரணபயம் அகன்றுப்போம் என்பது கருத்து

**(வி.)** பிறப்பின் துக்கம், பிணியின் துக்கம், மூப்பின் துக்கம், மரண துக்கங்களாகிய நான்கையுங் கடக்க வேண்டி தவநிலை நாடிய துறவி, பாவஞ் செய்யாதிருத்தல் நன்மெய்க்கடைப்பிடித்தல், இதையத்தை சுத்தி செய்தலாகிய மூவகை சாதனத்தில் ஒன்றில் நிலைபெற முயன்று முந்துவானாயின் மரணநிலை கடந்து சுகநிலை பெறுவான் என்பதற்குச் சார்பாய், ஔவையார் ஞானக்குறள் "துரியங்கடந்த சுடரொளியைக் கண்டால், மரணம் பிறப்பில்லை வீடு" என்றும், தாயுமானவர் "சந்தமும் வேதமொழி யாதொன்றை பற்றினது தான் வந்து முற்றுமெனலால், சகமீதிருந்தாலுமரணமுண்டடென்பது சதா நிஷடர் நினைவதில்லை" என்னும் ஆதாரங்கொண்டு தவநிலையில்

உறுதி பெற்றோருக்கு மரண நிலையை கடக்கும் வழியுண்டாம் என்பது விரிவு.

**10. இலர் பலராகிய காரண நோற்பார்**
**சிலர்பல நோலா தவர்.**

**(ப.)** இலர் பலர் - மரணசெயமில்லார், பலராகிய காரண - பலருண்டாகுங் காரணமியாதெனில், நோலாதவர் - தவநிலையில் நில்லாததினாலாம், நோற்பார் தவநிலையுறுதி பெற்று மரணத்தை செயித்துக் கொள்ளுவோர் சொற்பமாகக் காணப்படுவார்களென்பது பதம்.

**(பொ.)** மரணசெயமில்லார் பலருண்டாங் காரணம் யாதெனில் தவநிலையில் நில்லாததினாலாம், மரணத்தை செயித்துக் கொள்வோர் சொற்பமாகக் காணப்படுவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** மரணத்தை செயித்து பிறவியை அறுக்கவேண்டுமென்னும் ஊக்கமில்லா தோர் பலரும் மரணத்தை செயித்து பிறவியை அறுக்க வேண்டுமென்னும் ஊக்கமுடையோர் சிலருமாயிருக்கின்றார்கள் என்பது கருத்து.

**(வி.)** உலகமக்கள் பெரும்பாலும் பாசபந்தத்திற் சிக்குண்டு மூவாசையுள் பதிந்துள்ளோராதலின் துறவுபூண்டு சங்கங்சேர்ந்தும் பலர் மரணபயமின்றி பிறவியை அறுக்கும் வழியிற்

பிந்துகின்றார்கள், சிலரோ தாங்கள் பூண்ட துறவில் நிலைத்துதவ உறுதி பெற்று சதா நல்லூக்கத்தில் நின்று எடுத்த நோன்பை தொடுத்து முடித்து மரணத்தை செயித்து பிறவியை அறுத்துக் கொள்கின்றார்கள் என்பது விரிவு.

## 39. அருளுடைமெய்

அருளுடைமெய் என்பது கிருபை நிறைந்தோன் என்னும் பொருளைத்தரும். அதாவது அன்பின் நோக்கும், மிருதுவாயவாக்கும், கிருபையே ஆக்கலாய் சேர்க்குமுடலுக்கு அருளுடைமெயோர் என்றும், தனச்செல்வம், தானியக் மனைச்செல்வம், மக்கட் செல்வ முடையோரைப் பொருளுடைமெயோர் என்றுங் கூறப்படும். அத்தகைய பொருளோ மிலேச்சர்களாகிய ஆரியர்களிடத்திலுமுண்டு. அருளோ அவ்வகைத்தன்று சாந்தம் அன்பு யீகை எவ்வுடலிற் சேருகின்றதோ அவனையே அருளுடை மெயோன் என்றுக் கூறப்படுதலால் துறவி அதனை நன்காராய்ந் தொழுகும் வகைகளை விளக்குகின்றார்.

### 1. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வ மாரியார் கண்ணு மூள.

**(ப.)** அருட்செல்வஞ் - கிருபையை நிறப்புஞ்சீரே, செல்வத்துட் செல்வம் - சீரினுஞ் சீரென்னப்படும், பொருட்செல்வ -

தனதானியச்சீரோ, மாரியார் கண்ணுமுள் - மிலேச்சரிடத்து முண்டுயென்பது பதம்.

**(பொ.)** கிருபையை நிறப்புஞ் சீரே சீரினுஞ் சீரென்னப்படும் - தனதானியச் சீரோ மிலேச்சரிடத்தும் உண்டு என்பது பொழி
பாழிப்பு

**(க.)** மேன்மக்கள் சேர்த்துள்ளக் கிருபை யென்னும் அழியாச் செல்வமே சிறந்த செல்வமென்னப்படும் மற்றும் அழியும் தனதானியச் செல்வமோ மிலேச்சராம் கீழ்மக்களிடத்தும் உண்டு என்பது கருத்து.

**(வி.)** முற்றுந் துறந்து சங்கஞ்சேர்ந்த துறவிகள் பொருட் செல்வத்தை சேர்க்காது அருட்செல்வமாம் கிருபையின் நிறைவே அடைய வேண்டியவர் களாதலின் பொருட்செல்வம் கீழ்மக்களாம் ஆரியரிடத்தும் உண்டு, அதனால் மேன்மகனாம் விவேகமிகுக்குந்துறவி அருள்செல்வத்தையே சேர்க்கும் வழிவகைகளை விளக்கலானார்.

இவற்றுள் இத்திரிக்குறள் மூலத்தையும், நாலடி நாநூறையும் ஜர்ஜ் ஆரங்டியன் துரை பட்ளர் கந்தப்பன் என்பவரால் கொண்டு போய், தமிழ்ச்சங்கத்து அதிபதி மேம்பட்ட எலீஸ் துரையவர்களிடம் ஏட்டுப்பிரிதியாகக் கொடுத்து அச்சிட்டு வெளிவந்தபோது

ஒலைப்பிரிதிக்கு மாறுதலாக சாற்றுக்கலிகளில் சிலது அதிகரித்தும் அறத்துப்பாலிலுள்ள சில செய்யுட்களைப் பொருட்பாலிற் சேர்த்தும், இச்செய்யுளில் ஆரியாரென்று வந்த மொழியைப் பூரியாரென்றும் மற்றும் செய்யுட்களை மாற்றியுள்ளதை கந்தப்பனவர்கள் சங்கத்திற்கு எழுதி கேட்டபோது மறுமொழி கிடைக்காமல் போய்விட்டது என்பது விவேகிகளறிந்த விடயங்களேயாம் அம்மொழி சங்கை யவ்வகையாயினும் முன்கலை திவாகரத்தில், "மிலேச்சராரிய" ரென்றே குறிக்கப்பட்டிருக்கின்றன. அதற்குக் சார்பாய், பாகுபலி நாயனார் பின்கலை கண்டு ஏட்டுப்பிரிதியிலும், மார்க்கலிங்க பண்டாரம் பின்கலை நிகண்டு ஏட்டுப்பிரிதியிலும், "ஆரியர் மிலேச்சர்கிழோரென்றும் " "மன்னுமாரியருங் கீழோரென்றும்," வரைந்துள்ள மொழிகளைத் தற்காலம் அச்சிட்டுள்ளவர்கள் "ஆரியர் மிலேச்சர் நல்லோரென்றும்" "மன்னும் பூரியருங் கீழோரென்றும்" மாறுபடுத்தியுள்ளார்கள். இதுகொண்டே அம்மொழியும் மாறுபட்டுள்ளன என்பதற்கு ஐயமிறாவாம் ஆரியர் மிலேச்சரென்போரையே கீழ்மக்க ளென்பதற்குக் காரணம் யாதெனின்,

**சூளாமணி**

தேசமிலைச்சரிற் சேர்வுடையாரவர்
மாசின் மனிதர் வடி விரையினுங்
சின் மனத்தர் கொடுந்தொழில் வாழ்க்கையர்

நீசரவரையு நீரினிழிப்பாம். வஞ்சினம்,

பொறாமெய், குடிகெடுப்பு, கரவடம் கொடுஞ்செயலுடையக் கீழ்மக்களை மிலேச்சரென்றும், ஆரியரென்றும், நீசரென்றும் பொங்கல் வழங்கிவந்த மொழிகளைக்கொண்டு தனச்செல்வம், தானியச்செல்வமென்னும் பொருட்கள் ஆரியராம் மிலேச்சரிடங்களிலுமுண்டு, அதனால் அவை சிறப்பெய்தாது, அருட்செல்வமாம் பொருளே சிறப்பெய்தும் என்று கூறியவற்றுள், பூரியர் கண்ணும் பொருளுள்ளதென்பதாயின் கல்விப் பொருளுக்கு பொருந்தாவாம். அதாவது பூரியென்பது பதரென்னும் பொருளைத்தரும், பூரியரென்பது, பதருக்கொப்பானவர்கள் ஏழை, ஆதுலர்களென்னும் பொருளைத்தரும் இவற்றுள் தானிய மணியற்றபோது பதர், பூரியென்றும் வழங்குதல் போல் தனப்பொருள் தானியப் பொருளற்றவர் களை பூரியரென்றும் ஏழைகளென்றுங் கூறுமொழியை மாற்றி பௌத்தர்களால் வழங்கிவந்த ஆரியரென்னு மொழியை வரைந்துள்ளோமாக. ஆரியரென்னு
மொழியே குணசந்தியால் ஆரியாரென மறுவிற்று என்பது விரிவு

**2. நல்லாற் றானாடி யருளாள்க பல்லாற்றாற்**

**றேரினு மஃதே துணை.**

**(ப.)** நல்லாற்றானாடி - சுகவாற்றலுற்று, யருளாள்க - கிருபையை நிறப்புவீராக, பல்லாற்றாற் - பலவகையாற்றலுற்று, றேரினு - முன்னேறினும், மஃதே துணை - கிருபையாமருளே ஆதாரமாகுமென்பது பதம்.

**(பொ.)** சுகவாற்றலுற்று கிருபையை நிறப்புவீராக பலவகையாற் றலுற்று முன்னேறினும் கிருபையாம் அருளே ஆதாரமாகும் என்பது பொழிப்பு

**(க.)** சுகமாய நல்வாழ்க்கைப் பெற்றிருப்பினும் கிருபையாம் அருளையே நிறப்பற்கு முயல்வீராக, அவ்வருளே பற்பல சுகங்களுக்குத் துணையாக நிற்கும் என்பது கருத்து.

**(வி.)** எத்தகையாய சுகவாழ்க்கைப் பெற்று வாழினும் தங்கடங்கள் உள்ளத்தின்கண் அருளென்னும் பொருளையே சேர்த்தற்கு முயலல் வேண்டும், அவ்வருளின் மிகுதியால் எடுக்கும் பல காரியங்களுங் கைகூடுமென்பதற்குச் சார்பாய், தாயுமானவர் "ஞான கருணாகர முகங் கண்ட போதிலோ நவநாத சித்தர்களு முன்னட்பினை விரும்புவா" ரென்னு மாதாரங் கொண்டு பல்லாற்றாற்றேரினும் அருளே துணை நிற்கும் என்பது விரிவு.

**3. அருள் சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள் சேர்ந்த**
**வின்னா வுலகம் புகல்.**

**(ப.)** யிருள் சேர்ந்த - அஞ்ஞானத்தாற் பிறவியுற்று, வுலகம் புகல் மண்ணுலகத்தில் தோன்றி, வின்னா - துன்பத்தைய நுபவிக்குஞ் செயல் அருள் சேர்ந்த - கிருபை நிறைந்த, நெஞ்சினார்க் - உள்ளத்தினர்க்கு, கில்லை - இராவென்பது பதம்

**(பொ.)** அஞ்ஞானத்தால் பிறவியுற்று மண்ணுலகத்தில் தோன்றி துன்பத்தை அனுபவிக்குஞ் செயல் கிருபை நிறைந்த உள்ளத்தினார்க்கு இரா என்பது பொழிப்பு

**(க.)** இருள்நிறைந்த பாசத்தால் மண்ணுலகத்திற் பிறந்து மீளா துன்பத்தை அனுபவிக்குஞ் செயல் அருள் நிறைந்த துறவிக்கு அணுகாது என்பது கருத்து.

**(வி.)** துறவியானவன் சங்கஞ்சேர்ந்து தனது இடைவிடா சாதனத்தின் கண் அருளாம் கிருபையினை தன துள்ளத்தில் நிறப்பிக்கொள்ளுவானாயின் அருளொளியால் அஞ்ஞான இருளகன்று உலகின்கண் மாறாப்பிறவியினால் உண்டாந்துன்பங்கள் நீங்கி சுயம்பாவான் என்பது விரிவு.

**4. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப**

**தன்னுயி ரஞ்சும் வினை.**

**(ப.)** மன்னுயிர் - அன்னிய சீவப்பிராணிகளை, ரோம்பி - காத்து, யருளாள்வார் கிருபையுடன் ஆதரிப்போர், தன்னுயி தனதுயி

ருக்கோர் துன்பம் வருமென்று, ரஞ்சும் - பயப்படும்படியான, வினை - செயல், கில்லென்ப இல்லையாகு என்பது பதம்.

**(பொ.)** அன்னிய சீவப்பிராணிகளை காத்து கிருபையுடனாதரிப்போர் தனதுயிருக்கோர் துன்பம் வருமென்று பயப்படும்படியான செயல் இல்லை யாகும் என்பது பொழிப்பு

**(க.)** மன்னுயிர்க்கோர் துன்பம் அணுகாமல் சிருபை வைத்து கார்ப்போர் தன்னுயிர்க்கோர் துன்பம் வருமென்று அஞ்ச வேண்டியது இல்லை யாகும் என்பது கருத்து.

**(வி.)** இல்லந்துறந்து சங்கஞ்சேர்ந்த துறவி சருவ சீவர்களையுந் தன்னுயிர் போல் பாதுகாத்து கிருபாநோக்கமுடையவனாய்த் தனதருளைப் பெருக்கிக் கொள்ளுவானாயின் தன்னுயிர்க்கோர்த் துன்பம் அணுகாதிருப்பதுடன் அருளமைந்து ஆற்றலுடையவனுமாவன் என்பது விரிவு.

**5. அல்ல வருள்வார்க் கில்லை வளிவழங்கு**
**மல்லல்மா ஞாலங் கரி.**

**(ப.)** அல்ல - பலவகையாய துன்பங்களும், லருள்வார்க்கில்லை - கிருபை நிறைந்த துறவிகளுக்கில்லை யென்பது, வளிவழங்கு -

வீடுபேற்றை யளிக்கும், மல்லல் - வளந்தங்கி, மாஞாலங் - சிறப்புற்ற பூமியே, கரி - போதுஞ் சாட்சியென்பது பதம்.

**(பொ.)** பலவகையாய துன்பங்களும் கிருபை நிறைந்த துறவிகளுக்கில்லை யென்பது வீடுபேற்றையளிக்கும் வளந்தங்கி சிறப்புற்ற பூமியே போதுஞ் சாட்சி என்பது பொழிப்பு.

**(க.)** அருள் நிறைந்த துறவிக்கு ஓர் ஆபத்தும் வாராதென்பதற்கு என்றும் அழியா பூமியே சாட்சி என்பது கருத்து.

**(வி.)** என்றும் அழியாது நிலையாய் நின்று நிலமென்னும் பெயர்பெற்ற பூமியின்கண் சருவ உயிர்களுந் தோன்றி மாறிமாறிப் பிறழ்ந்துழல்வதில் பிறப்பை நீக்கி அருள் நிறைந்தோன் ஆனந்தத்திற்கு சிறந்த பூமியே சாட்சி என்பது விரிவு.

**6. பொருணீங்கிப் பொய்ச்சாந்தா ரென்பரருணங்கி**
**யல்லவை செய்தொழரு வார்.**

**(ப.)** பொருணீங்கி - மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளை விட்டோமென்று, பொய்ச் சார்ந்தாரென்ப - பொய்யைச் சொல்லி துறவு பூண்டவர்கள், ரருணீங்கி - கிருபையென்பதே அற்று, பல்லவை - அவற்றிற்கு நேர்விரோதமாயத் தீச்செயல்களையே செய்தொழுகுவார் - செய்யத்தலைப் படுவார்களௌன்பது பதம்

**(பொ)** மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளை விட்டோமென்று பொய்யைச் சொல்லித் துறவு பூண்டவர்கள் கிருபை என்பதே அற்று அவற்றிற்கு நேர் விரோதமாயத் தீச்செயல்களையே செய்யத் தலைப்படுவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** இல்லறத்திருந்து சகல ஆசைகளையும் விட்டேன் எனப் பொய்யைச் சொல்லி சங்கஞ்சேர்ந்து துறவறத்தை யாசிப்பினும் உள்ளப்பற்றுக்களினால் தீச்செயலில் முறிந்து நிற்பான் என்பது கருத்து.

**(வி.)** இல்லறத்திருந்தே பஞ்சசீலத்தொழுகி சகல பற்றுக்களையும் அறுக்காது, பற்றுறுத்தவன் போல் பொய்யைச் சொல்லி சங்கஞ் சேர்ந்து துறவறத்தை யாசிப்பினும் உள்ளப் பற்றுக்களினால் தீச் செயலில் முதிந்து தீய கன்மங்களையே செய்வான் என்பது விரிவு.

**7. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்கு கிவ்வுலக யில்லாது யாங்கு.**

**(ப.)** பொருளில்லார்க் - தனப்பொருள், தானியப் பொருளில்லாதவர் களுக்கு கிவ்வுலகமில்லாது - இல்லற சுகமில்லாது, யாங்கு - போல, அருளில்லாராம் கிருபை நிறைவில்லா துறவிக்கு கவ்வுலக - வான ராட்சியமாம் புத்தேளுலக சுகம், மில்லை - கிடையாவென்பது பதம்,

**(பொ)** தனப்பொருள், தானியப் பொருளில்லாதவர்களுக்கு இல்லற சுகமில்லாது போல கிருபை நிறைவில்லாத துறவிக்கு வான்ராட் யமாம் புத்தேளுலக்க்கங் கிடையா என்பது பொழிப்பு

இல்லறத்தோனாகிய உலகத்தோனுக்கு தனப்பொருள், தானி பொருளாற்ற போது உலக சுகம் யாதுமில்லாதது போல் துறவுண்டோனுக்கு அன்பு நிறைவில்லாதாயின் ரைனே ராட்சியமம் புத்தேளுலக சுகமில்லை என்பது கருத்து

**(வி.)** உலகமக்களுக்கு தனக்கெல்னம், தானியச் செல்வம், மனை செல்வம், பக்க. ரெல்வமில்லாத போது யாது ஆகமில்லையோ அது போல் அன்பின் பெருக்கம் கையின் பெருக்கம், சாந்தப் பெருக்கலாம் கிருபையின் நிறைவில்லாவிடின் பிறவியற்றோர் வாழும் மத்தியக்காராம் புத்தேளுலகம் இல்லை என்பது விரிவு

**8. பொருளற்றார் பூப்ப ரொருகால ருளற்றா**

**நற்றார் மற்றாத லரிது.**

**(ப.)** பொருளற்றார்.தனப் பொருள், தானியப் பொருளில்லாதோர், ரொருகா - மற்றொரு காலத்தில், பாப் - பொருள் தேய்ந்து முகாமவாய்கள் வருவற்ற - கிருபையென்பதில்டை துறவிகள், ரற்றாம் - வள்ளக்கமுமற்று, மற்றாதலரிது - மற்றந்தாங் கோறிசென்ற முத்திக்கமுங்கிடையாமற் போவார் என்பது பதம்,

**(பொ.)** தனப் பொருள் தானியப் பொருள் இல்லாதோர் மற்றொரு காலத்தில் பொருள் சேர்ந்து முகமலர் வார், திருபை என்பதில்லா துறவிகள் உள்ள சுகமுாற்று மற்றுந்தான் கோழிகென்ற முத்திக்கமுங்கிடையாமற் போவார் என்பது பொழிப்பு

**(க.)** இல்றை மக்கள் தனப்பொருள், தானியப் பொருளற்று யாதொரு ககாற்றிருப்பினும் மற்றொருகால் பொருள் சேர்ந்து முகமலர்ச்சியடைவார்கள், துறவியோதான் நிறப்பவேனடியக்கிருபையை நிறப்பாமற் போவானாயின் நள்ள கமுங்கொடுத்தான் கோறி துறந்த துறவின் சுகமும் கிடையாமற் போவான் என்பது கருத்து.

**(வி.)** உகமக்கள் தனச்செல்வம் தானியங்கெல்லாம் மனைச் செல்வம் மக்க செல்வமாகியப் பொரு களற்று முகசோர்வுற்றிருப்பவர்கள் ஓர் காால்பொருட்கள் போடுது முகமலர்ச்சியழினும் உருவம், துறவிகளே தாங்கள் கோறிச்சென்ற கிருபையை நிறப்பாது போவார்களாயின்தள்ள சுகமுங் கெட்டு கோறியக்கமுமற்றே போவார்கள் என்பது விரிவு

**9. தெருளாதான் மெயப்பொருள் கண்டற்றாற்றேரி**

**னருளாநான் செய்ய மறம்.**

**(ப.)** தெருளாதான் - அறிவின் தெளிவில்லா துறவி, மெய்ப்பொருள் உண்மெய்ப் பொருளை கண்டற்றாற் - கண்டு தெளிந்தவன் போல், றேரி - காட்டிக் கொள்ளுதல், னருளாதான் - கிருபையில்லான், செய்ய மறம் - தருமஞ் செய்கின்றானென்று சொல்லுவதற் கொக்குமென்பது பதம்

**(பொ)** அறிவின் தெளிவில்லா துறவி உணமெய்ப் பொருளைக் கண்டு தெளிந்தவன் போல் காட்டிக்கொள்ளுதல் கிருபையில்லாதான் தருமஞ் செய்கின்றான் என்று சொல்லுவதற்கு ஒக்கும் என்பது பொழிப்பு

**(க)** விவேகம் முதிரா துறவி தன்னைத் தானறிந்து கொண்டேனென் நடித்தல் அருளில்லா ஒருவன் தருமத்தைச் செய்கின்றான் என்பது போலாம் என்பது கருத்து.

**(வி.)** மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் ஐம்பொறியின் வழியாமண்டாம் சுவை, ஒளி, காறு, ஓசை, நாற்றம், என்னும் ஐம்புல நுகர்ச்சியைக் கண்டடையாது தன்னை அறிந்தவன் போல் நடித்து தென்புலத் தோன் எனக் காறித்திரியும் துறவியாவருக்கு ஒப்பானவனென்னில் கிருபை என்பதே கனவிலும் இல்லாலோபி தருமஞ் செய்கின்றா னென்று கூறுவது போலாம் என்பது விரிவு

**10. வலிமார் முற்றன்னை நினைக்கத்தான் றன்னின்**

**மெலியார் மேற்சொல்லு மிடத்து**

**(ப.)** வலியார்முற் - விவேகமிகுத்தத் துறவிகள் முன்னிலையில், றன்னை - விவேகமற்ற துறவி தன்னையும், நினைக்க - ஓர் விவேகியென்று நடித்தல், தான்றன்னின் - தன்னறிவுமற்ற, மெலியார் - அறிவிலிகள், மிடத்து - வசத்து, மேற்சொல்லு - மேலாக விளங்குமென்பது பதம்.

**(பொ.)** விவேகமிகுத்தத் துறவிகள் முன்னிலையில் விவேகமற்ற துறவி தன்னையும் ஓர் விவேகியென நடித்தல் தன்னறிவுமற்ற அறிவிலிகள் வசத்து மேலா விளங்கும் என்பது பொழிப்பு.

**(க.)** ஐம்புலன் தென்படா துறவி ஐம்புலன் தென்பட்டதென் புலத்தார் போல் நடிப்போனை அவனினும் அறிவிலிகளே கொண்டாடுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** கண்ணினாற் பார்க்குஞ் செயலுக்கும் மூக்கினால் முகருஞ் செயலுக்கும், நாவினால் உருசிக்குஞ் செயலுக்கும், செவியினாற் கேட்குஞ் செயலுக்கும், உடலால் ஊருஞ் செயலுக்கும் பீடமெஃதென்றாய்ந்து தன்னை உணர்ந்தடங்கி தன்னை போற்றினுந் தூற்றினும், ஒருவர் இகழினும் புகழினும், பூசிக்கினுந் தூஷிக்கினும் அவற்றை நோக்காது தாங்கள் நோக்குற்ற நிலையில்லயித்து ஆனந்தித்திருக்குந் துறவியைப்போல் இடம்பம், பொறாமெய்,

கோபம் நிறைந்த துறவி நடிப்பானாயின் அவனைப் போன்ற அவிவேகிகளே அத்துறவியைக் கொண்டாட இடம் உண்டாம் அன்றி வேறில்லையாதலின் விவேகமிகுத்த மேலோர் கொண்டாடும் துறவையடைந்து அருளை வளரச் செய்ய வேண்டும் என்பது விரிவு.

## 40. மெய்யுணர்தல்

அதாவது, இவ்விடங்கூறியுள்ள மெய்யென்னும் பதம் இருவகைப்படும் அதாவது உண்மெயென்றும் புண்மெயென்றும் அந்தரங்கமென்றும், பகிரங்கமென்றுமாம். இஃது சகலருக்கும் விளங்குவதரிதாகும். இராகத் துவேஷ மோகங்களென்னும் காம வெகுளி மயக்க மூன்றும் அற்று சாந்தம் அன்பு ஈகை மூன்றுந் திரண்டு, பிறப்புப்பிணி மூப்புக்சாக்காடென்னும் நான்கு வகைத் துக்கங்களும் ஒழிந்து புளியம் பழம் வேறு ஓடுவேறாவது போல் உடல் வேறு உள்ளொளி வேறாகி, உயிரென்றும் உடலென்றும் வழங்கும் பெயரற்று அநித்திய அநாத்தும் நிருவாணமாம் சத்து சித்து ஆனந்த நிலைபெறும். இதையே உண்மெயென்றும் இவற்றிற்கு ஆதாரமாம் உடலையே புலாலமைந்த புண்மெயென்றுங் கூறப்படும். இல்லறமக்கள் பாசபந்தப் பற்றுக்கள் நிறைந்துள்ளவரையில் புளியங்காயிற்கு சமமாகவும், துறவடைந்து சங்கஞ் சேர்ந்து உலக பற்றுக்களற்றபோது புளியம்பழத்திற்கு சமமாகவும் உடலினின்று உள்ளொளியை மாற்றிப் பிரிப்பதே பரிநிருவாணமென்றும், அத்துறவிகளையே தாயின் வயிற்றிருந்து பிறந்த பிறப்பொன்றும்,

உடலினின்று உள்ளொளியாய் மாற்றி பிறக்கும் பிறப்பொன்றுங் கண்டு இருபிறப்பாள ரென்றும் வழங்கப்படுவார்கள். இத்தகையப்பேரானந்தமெய்யுணர்வறிதற்கே துறவி சங்கஞ் சேர்ந்தும் பொருளல்லாதவற்றை உணராது மெய்ப்பொருளை உணரும் வழிவகைகளை விளக்கலாயினர்.

## 1. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு மருளாணா மாணாப் பிறப்பு.

**(ப.)** பொருளல்லவற்றை - துறவி தனக்கப்புறப் பட்டப் பொருளை, பொருளென்றுணறு - மெய்ப்பொருளென்றுணரும், மருளாணா - அஞ்ஞானமருண்ட நிலையடைவானாயின், மாணாப்பிறப்பு - மீளாப்பிறப்பில் சுழலுவானெனன்பது பதம்.

**(பொ.)** துறவி தனக்கப் புறப்பட்டப் பொருளை மெய்ப்பொருளென்றுணரும் அஞ்ஞானமருண்ட நிலையடைவானாயின் மீளாப்பிறப்பிற் சுழல்வான் என்பது பொழிப்பு.

**(க.)** மெய்ப்பொருளுணரத் துறவு பூண்டவன் புலன் தென்பட தன்னை உணராது தனதஞ்ஞான மருளால் தனது முன்னிலை சுட்டாக ஓர் பொருள் உண்டென்று மலைவானாயின் மீளா பிறப்பு இறப்பிற் சுழன்று மாளாதுக்கத்தில் அழுந்துவானெனன்பது கருத்து.

**(வி.)** அகப்பொருள் ஆய்வதே ஆனந்தம் என்றும் புறப்பொருள் ஆய்வதே துக்கமென்றும் புத்த தன்மம் முறையிடுகின்றதாதலின் அகப்பொருளாம் உண்மெய்ப் பொருள் உணருமாறு துறவு பூண்டவன் தனதுள்ளச் செயலையாயுங் குறைவுற்று அஞ்ஞானமருட்சியால் புறப்பொருளொன்று உண்டென்று மலைந்து நிற்பானாயின் அம்மலைவே பிறப்புக்கும் இறப்புக்கும்
ஏதுவாகி நான்குவகை துக்கத்திற்குங் கொண்டுபோம் என்பது விரிவு.

**2. இருணங்கி யின்பம் பயக்கு மருணங்கி**

**மாசறு காட்சி யவர்க்கு.**

**(ப.)** மருணீங்கி - துறவிகள் தங்களுக்கப்புறப்பட்ட ஒரு பொருள் உண்டென்னும் அஞ்ஞானமகன்று, மாசறு - களங்கமற்ற, காட்சியவர்க்கு உட்பார்வையை அடைவார்களாயின், இருணீங்கி - மனமாசகன்று, இன்பம் பயக்கு - அழியாபேரின்பத்தைப் பெறுவார்கள் என்பது பதம்.

**(பொ.)** துறவிகள் தங்களுக்கப்புறப்பட்ட ஒரு பொருள் உண்டென்னும் அஞ்ஞானம் அகன்று களங்கமற்ற உட்பார்வையை அடைவார்களாயின் மனமாசகன்று அழியாப்பேரின்பத்தைப் பெறுவார்களென்பது பொழிப்பு

**(க.)** பூண்டு சங்கஞ் சேர்ந்த சமணர்கள் தங்களது முன்னிலைச் சட்பாக ஒரு பொருள் உண்டென்று அலைவுறும் அஞ்ஞானம்

அகன்று மனமாசு கழுவி உட்பார்வையிலிருப்பார்களாயின் அழியாப்பேரின்பத்தை அடைவார்கள் என்பது கருத்து.

**(வி.)** தங்களுக்குள்ள மனக்களங்கங்களினால் தங்களுக்கப்புறப்பட்ட ஒரு பொருளுண்டென்று மயங்கி மலைவுபடும் அஞ்ஞான இருளகன்று மெய்ப்பொருளுணர்ந்து உட்பார்வையில்லயித்து ஞானோதயம் பெறுவார் களாயின் என்றும் அழியா பேரின்ப சுகமாம் நிருவாணமடை வாரென்னும் மெய்யுணர்வுக்கு சார்பாய் அறநெறிச்சாரம் "உணர்ச்சியச்சாக உசாவண்டியாகப் புணர்ச்சிப்புலனைந்தும் பூட்டி உணர்ந்ததனை ஊர்கின்ற பாகனுணர்வு டையனுகுமேல்,போகின்றதாகும் பிறப்பு" என்பது கொண்டு அஞ்ஞானம் அற்றோரே மெஞ்ஞான இன்படைவார்கள் என்பது விரிவு

**3. ஐயத்தி னங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**

**வான நணிய துடைத்து.**

**(ப.)** ஐயத்தினீங்கி - உள்ளோ புறம் போவென்னு மச்சமற, தெளிந்தார்க்கு - உண்மெயுணர்ந்தோர், வையத்தின் - பூமியின் கண்ணிருப்பினும், வான - வானவர்களுடன், நணிய - பொருந்த, துடைத்து - உடையவர்களாவரென்பது பதம்.

**(பொ.)** உள்ளோ புறம்போ என்னும் அச்சமற உண்மெயுணர்ந்தோர் பூமியின் கண்ணிருப்பினும் வானவர்களுடன் பொருந்தவுடையவர்களாவர் என்பது

பொழிப்பு.

**(க.)** மெய்ப்பொருள் தனக்கப்புறப்பட்டது அன்றென்று எண்ணும் ஐயம் நீங்கி மெய்ப்பொருளுணர்ந்த துறவி பூமியின் கண்ணிருப்பினும் வானராட்சியத்திற்குரிய தேவர்களுக்கொப்பாவான் என்பது கருத்து.

**(வி.)** மெய்பொருளுண்டோ இல்லையோ என்னும் மலைவும், அஃது அகத்திலுண்டோ புறத்திலுண்டோ என்னும் அச்சமும் நீங்கி தன்னிற்றானே உண்மெய்ப்பொருளை உணர்ந்தடங்கிய துறவி சகலருடன் பூமியில் வாழினும் வானராட்சியத்தின் கண் இரவு பகலற்று நித்தியவொளியாய் உலாவும் தேவர்களுக்கு ஒப்புடைத்தானவனேயாவன் என்பது விரிவு.

**4. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே**
**மெய்யுணர் வில்லா தவர்க்கு**

**(ப.)** ஓயணர் - ஐம்புல நுகற்சியில், வெய்தியக் - சென்றுணர்ந்த, கண்ணும் - கியான பார்வையும், பயனின்றே - உதவியற்றுப்போம், மெய்யுணர் - உண்மெய்பொருளின் மீது, வில்லாதவர்க்கு - உள்விழி நோக்கில்லாதவர்க்கு என்பது பதம்.

**(பொ.)** ஐம்புல நுகர்ச்சியிற் சென்றுணர்ந்த கியானபார்வையும் உதவியற்றுப்போம், உண்மெய்ப் பொருளின் மீது உள்விழி

நோக்கில்லாதவர்க்கு என்பது பொழிப்பு,

**(க.)** துறவியானவன் ஐம்புல நுகர்ச்சியுணர்ந்து தென்புலத்தானாயினும் மெய்ப்பொருளுணராமற்போவானாயின் யாதொரு பயனுமில்லை யென்பது கருத்து.

**(வி.)** சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்னும் ஐம்புல நிலைகள் ஈது என்றுணர்ந்த துறவியேயாயினும் புண்மெய் ஈதென்றும் உண்மெய் ஈதென்றும் பகிரங்கம் ஈதென்றும் அந்தரங்கம் ஈதென்றும் தன்னிற்றானே ஆய்ந்து மெய்ப்பொருளுணராமற் போவானாயின் யாதொரு பயனும் அடையான் என்பது விரிவு.

**5. எப்பொரு ளெத்தன் மெத்தாயினு மப்பொருள்**
**மெய்ப்பொருட் காண்ப தறிவு.**

**(ப.)** எப்பொரு - காணும் பொருட்களவற்றுள், ளெத்தன்மெத்தாயினு - எவ்வகையாய சிறந்த குணந்தோன்றினும், அப்பொருள் - அவற்றை விடுத்து, மெய்ப்பொருட் - உண்மெய்ப்பொருளை, காண்பதறிவு - கண்டுணர்வதே சிறந்த ஞானமாமென்பது பதம்,

**(பொ.)** காணும் பொருட்களவற்றுள் எவ்வகையாய சிறந்த குணந்தோன்றினும் அவற்றை விடுத்து உண்மெய்ப்பொருளைக் கண்டுணர்வதே சிறந்த ஞானமாம் என்பது பொழிப்பு.

**(க.)** துறவியினது முன்னிலைக்கட்டில் எத்தகையாய சிறந்த உருவந்தோன்றினும் அவ்வுருவால் அனந்த அற்புதங்கள் நிகழினும் அதனையோர் பொருளென்று கருதாது தனதுண்மெய்ப் பொருளைக் கண்டறிவதே பேரறிவாம் என்பது கருத்து.

**(வி.)** நானே கடவுள் நானே சாமியென்று தோன்றி மரித்தோர்க்குயிரும் பிணியுற்றோர்க்கு சுகமுமாய அனந்த அற்புதங்களைச் செய்யினும் அவனவனாலாய நற்செயலின் காட்சியென்றுணர்ந்தகற்றி தன்னைத்தான் ஆய்ந்து மெய்பொருட் கண்டடைவதே சிறந்த ஞானமும் அதன் பயனும் என்பது விரிவு.

### 6. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி.

**(ப.)** கற்றீண்டு - எடுத்த விம்மெயிற் கற்றுணர்ந்து, மெய்ப்பொருள் - உண்மெய்ப்பொருளை, கண்டார் - கண்டவர்கள், தலைப்படுவர் - துறவிகளில் முதலவராவார், மற்றீண்டு - இதுவே யினி யெடுக்கு மறுமெய், வாராநெறி தோன்றா நிலை யென்னப்படும்.

**(பொ.)** எடுத்த இம்மெய்யிற் கற்றுணர்ந்து உண்மெய்ப்பொருளைக் கண்டவர்கள் துறவிகளில் முதலவராவர் இதுவே இனி எடுக்கு மறுமெய் தோன்றா நிலையென்னப்படும்.

**(க.)** இப்போதெடுத்துள்ள தேகத்திலேயே கற்றுணர்ந்து உண்மெய்ப் பொருளைக் கண்டடைந்த துறவிகளே மேலோராவர் அதாவது மறுமெய் தோற்றாது காத்துக் கொண்டதினாலேயேயாம் என்பது கருத்து.

**(வி.)** இப்பிறவியில் எடுத்துள்ள மெய்யில் தெண்ட படிப்பைக் கல்லாது கண்டு படிக்குங் கலை நூற்களைக் கற்று உண்மெய்ப் பொருளைக் கண்டவர்களே மேலாய துறவிகள் எனப்படுவர்கள், எதனாலென்னில் மாணாவத்தைக்கு உள்ளாகி மறுமெய்யெடுத்து மாளாதுக்கத்திற்காளாகாது தன்னைத்தான் வெற்றிக்கொண்டதினாலேயாம் என்பது விரிவு.

## 7. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாய்ப் பேர்த்துள்ள வேண்டாபிறப்பு.

**(ப.)** வர்த்துள்ள - தன்னைத்தானாய்ந்துள்ள நெறியால், முள்ள துணரி - உள்ள மேய்ப்பொருளை உணர்ந்துக்கொள்ளுவானாயின், னொருதலையாய்ப் - தனக்கப் புறப்பட்ட ஒரு பொருள் உண்டென்னும், போர்த்துள்ள - உள்ளத்தினஞ்ஞானமகன்று, வேண்டாபிறப்பு - மறுபிறவி உண்டென்னும் அச்சமுமில்லாமற்போமென்பது பதம்.

**(பொ.)** தன்னைத்தான் ஆய்ந்துள்ள நெறியால் உள்ள மெய்ப்பொருளை உணர்ந்துக் கொள்ளுவானாயின்

தனக்கப்புறப்பட்ட ஒரு பொருள் உண்டென்னும் அஞ்ஞானம் அகன்று மறுபிறவி உண்டென்னும் அச்சமும்
இல்லாமற்போம் என்பது பொழிப்பு

**(க.)** துறவி தன்னைத்தான் ஆய்ந்தறிந்த உணர்வால் உண்மெய்ப் பொருளை உணர்ந்துக் கொள்ளுவானாயின் தனக்கப்புறப்பட்ட ஒரு தலையாய மறு பொருளுண்டென்னும் மயக்கம் நீங்கி மறுமெய்யயுண்டென்னும் பயமுமில்லாமற் போம் என்பது கருத்து.

**(வி.)** உலக மக்கள் தங்கள் அஞ்ஞான மயக்கத்தால் தங்களுக்கு அப்புறப்பட்ட ஒரு பொருள் உண்டென்று மயங்கி மீளா பிறவியிற் சுழன்று மாளா துக்கத்திலாழ்ந்தி கிடப்பதை அறிந்து துறவு பூண்டு சங்கஞ் சேர்ந்து சமணனானவன் தன்னைத்தானாய்ந்து உண்மெய்ப்பொருளை உணர்ந்துக் கொள்ளுவானாயின் தனக்கப்புறப்பட்ட பொருளுண்டென்னும் மயக்கம் பேர்ந்தொழிவதுடன் பிறவி உண்டென்னும் பயமும் வேண்டாது ஒழிந்து போம் என்பது விரிவு.

**8. பிறப்பென்னும் பேதெமெ நீங்கச் சிறப்பென்னும்**
**செம்பொருள் காண்ப தறிவு.**

**(ப.)** பிறப்பென்னு - மாறிமாறி பிறந்துழலும், பேதைமெ - கருமறுவிய காயத்தை, நீங்க - நிருமலமாக்கி, சிறப்பென்னும் -

அழியா - கீர்த்தியுடைத்தாய் செம்பொருள் - செவ்விய வுண் மெய்பொருளை, காண்பதறிவு - கண்டானந்திப்பதே அறிவின் பூரண நிலையாமென்பது பதம்.

**(பொ.)** மாறி மாறி பிறந்துழலுங் கரு மறுவிய காயத்தை நிருமலமாக்கி அழியாக் கீர்த்தியுடைத்தாய செவ்விய வுண்மெய்ப்பொருளை கண்டானந் திப்பதே அறிவின் பூரண நிலையாமென்பது பொழிப்பு.

**(க.)** அறிவினது பூரண நிலையாதெனில் நான் என்னும் அஞ்ஞான உடலை நிருமலமாக்கி தான் என்னும் அழியாப் பழம் பொருளாம் உண்மெய்யை அறிவதேயாம்.

**(வி.)** இறப்பிற் பிறப்பிற் கடிகைக்குக்கடிகை தோன்றி தோன்றி மறையும் பேதையுடலைப் பற்றிய பற்றுக்கள் யாவும் ஒழிய செம்மெயாய என்றும் அழியாவுண்மெய்ப் பொருளுதயமாம் என்பதற்குச் சார்பாய் தாயுமானவர் "தானான தன்மயமே யல்லா லொன்றைத் தலையெடுக்க வொட்டாது தலைப்பட்டாங்கே, கோனாலுங் கற்பூர தீபம் போல போயொளிப்பதல்லாது புலன் வேறின்றி ஞானாகாரத்தினொடு ஞேயமற்று ஞாதுருவமில்லாமல் நழுவி நிற்கும், ஆனாலுமதன் பெருமெயெவர்க்கார்

சொல்வாரதுவானால் துவாரதுவே சொல்லும்" என்னுமஃதே அறிவறிவாய காட்சியுமாம் என்பது விரிவு

**9. சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்**
**சார்தரா சார்தரு நோய்,**

**(ப.)** சார்புணர்ந்து - துறவி தனக்குள்ளப் பற்றுக்களேதேதென்றறிந்து, சார்பு கெட - அப்பற்றுக்களற, வொழுகின் - சாதிப்பானாயின், மற்றழித்து பற்றுக்களறுவதுடன், சார்தரு நோய் - தன்னைச் சேர்ந்து கொடுக்கும் பிறப்புப்பிணி மூப்புச் சாக்காடென்னும் துக்கங்களுக்கும், சார்தாரா இடங்கொடுக்காதென்பது பதம்.

**(பொ.)** துறவி தனக்குள்ள பற்றுக்கள் ஏதேதென்றறிந்து அப்பற்றுக்களம் சாதிப்பானாயின், பற்றுக்களறுவதுடன் தன்னைச் சேர்ந்து கெடுக்கும் பிறப்புப்பிணி மூப்புச்சாக்காடென்னுந் துக்கங்களுக்கும் இடங்கொடுக்காது என்பது பொழிப்பு

**(க.)** துறவியானவன் தன் மனதிலெழூஉம் அவாவின் பற்றுகள் எது யெதுவென்றாய்ந்து அவைகளை அகற்றுவானாயின் அவைகள் ஒழிவதுடன் அவைகளால் உண்டாம் நான்குவகைத் துக்கங்களுமிடம் பெறாமற் போம் என்பது கருத்து.

**(வி.)** கண்ணினால் பார்க்கும் பற்றும், மூக்கினால் முகரும் பற்றும், நாவினால் உருசிக்கும் பற்றும், செவியினால் கேட்கும் பற்றும், உடலால் ஊறும் பற்றுமாகிய ஐவகைப்பற்றுக்களில் எவை மிகுந்துள்ளன என்றுணர்ந்து அவைகளை அகற்றுவானாயின் அவைகள் தானே ஒழிவதுடன் மீளாதுக்கதிலாழ்ந்திவரும் பிறப்புப்பிணி மூப்புச் சாக்காடென்னும் நான்குவகை நோய்களும் இடம் பெறாமல் அகன்றுப்போம் என்பது விரிவு.

**10. காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற**
**னாமங் கெடக்கெடு நோய்.**

**(ப.)** காமம் - துறவி தன் அவாவாலெழுமின்பம், வெகுளி - கோபம், மயக்கம் - அஞ்ஞானவிருள், மிவை மூன்ற - இம்மூன்றினது, னாமங் கெட - பெயர்களுங்கெட்டொழிய சாதிப்பானயின், கெடுநோய் - நான்குவகைத்
துக்கங்களு மொழிந்துபோமென்பது பதம்.

**(பொ.)** துறவி தன்னவாவால் எழும் இன்பம் கோபம் அஞ்ஞான இருள் இம்மூன்றினது பெயர்களுங் கெட்டொழிய சாதிப்பானாயின் நான்குவகைத் துக்கங்களு மொழிந்துபோம் என்பது பொழிப்பு.

**(க)** இன்பத்தால் எழூஉங் காமாக்கினியும் பற்றினால் எழூஉங் கோபாக்கினியும் உணவின் மயக்கத்தால் எழூஉம் பசியாக்கினியும்

ஆகிய மூன்றும் அவிய சாதிப்பானாயின் அவை மூன்றும் அவிந்து ஒழிவதுடன் நான்குவகை துக்க
நோய்களும் அகன்றுப்போம் என்பது கருத்து.

**(வி.)** துறவியானவன் பிறப்பின் துக்கம், பிணியின் துக்கம், மூப்பின் துக்கம் மரண துக்கம், நான்குவகைத் துக்க நோய்களைப் போக்கிக் கொள்ளுவதற்கே இல்லந் துறந்தவனாகலின் தனக்குள்ளெழூஉம் காமாக்கினி கோபாக்கினி பசியாக்கினியாகிய மூன்றும் அவியவும் சாந்தம் நிறம்பவும் சாதிப்பானாயின் உண்மெய்யில் நிலைத்து சதானந்த முற்று நிருவாண மடைவதுடன் என்றும் அழியா வீடு பேறாம் பரிநிருவாண முற்று நட்சேத்திரம் பெற்று அகண்டத்து உலாவுவானென்பதற்குச் சார்பாய் வடநுலார், இராகத்து வேஷ மோகங்களற்றபோது சதானந்தமும் அம்மூன்றும் அறாவிடத்து சதா துக்கமும் உண்டெனக் கூறியுள்ள மொழியே போதுஞ் சான்றாம் என்பது விரிவு.

இவ்வறத்துப்பாலுள் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்பமாகிய மூன்றுப் புதைப்பொருளும் அடங்கியுள்ளதால் இல்லறத்தோர் முதல் துறவிகள் ஈராகவுள்ள சகல மக்களும் தங்கள் தங்களுக்கு உண்டாந் துக்கங்கள் அற்று சுகப்பேற்றையடைய இஃது போதிய போதமாக்கும். ஆதலின் ஒவ்வோர் விசாரணைப்புருஷரும் இதிலடங்கியுள்ள அதிபத்தராங்கடவள் வார்த்து முதல் மெய்யுணர்வுவரையில் தேறவாசித்து உணர்வரேல் பொய்யாய

வேதாந்த மாய்கையை விட்டுத் தெளிந்து மெய்யாய வேத அந்தத்தில் நிலைத்து பிறப்புப்பிணி மூப்புச்சாக்காடென்னும் நான்கு வகை துக்கங்களையும் ஒழித்து உண்மெய்யில்லயித்து என்றும் அழியா நித்தியானந்த சுகத்தை அடைவார்கள்
என்பது சாத்தியம் சாத்தியமேயாம்.

**திருவள்ளுவ நாயன் - திருவடிகளே சரணம்**

**அறத்துப்பால் முற்றிற்று**

## பொருட்பால்

## 41. நாடு

"இவ்விடங்கூறும் பொருட்பால் யாதெனில் முற்கூறியுள்ள உண்மெய்ப் பொருளல்லாது செல்வப்பொருள் கல்விப்பொருளையே குறிப்பதாகும் அதாவது ஓர் தேசமும் மக்களும் அரசனும் சுகம்பெற்று வாழ்கவேண்டுமாயின் நாட்டின் வளமாம் தானியப் பொருளே முதற்பொருளென்னப்படும் அதுகொண்டே நீருயரவரப்புயரும் வரப்புயர பயிருயரும், பயிருயர குடியுயரும் குடியுயர கோனுயரும் என்பது முதுமொழியாதலின் நாட்டின் வளப்பத்தையுஞ் செயலையும் உலக மூலப்பொருளாக விளக்கலானார்.

**1. தள்ளாவிளையுளுந் தக்காருந் தாழ்விலாச்**

**செல்வருஞ் சேர்வது நாடு.**

**(ப.)** தள்ளாவிளையுளுந் - சோர்வில்லா உழைப்பாளிகளும், தக்காரும் - விவேகமிகுத்தோரும், தாழ்விலா-குறைவில்லா, செல் வரும் - தனமுள்ளோரும், சேர்வது - சேர்ந்து வாழ்வது, நாடு - வளநாடென்பது பதம்.

**(பொ.)** சோர்வில்லா உழைப்பாளிகளும் விவேகமிகுத்தோரும் குறைவில்லா தனவந்தரும் சேர்ந்து வாழ்வது வளநாடென்பது பொழிப்பு.

**(க.)** உழைப்பிற்கஞ்சா உழவாளிகளாம் வேளாளரும் அறிவுள்ளோரும் தனவந்தருங் கூடி வாழ்குமிடத்திற்கே நாடு என்பது கருத்து.

**(வி.)** பூமியைத் திருத்தி காடுபோக்குவதற்கு அஞ்சாமலும், வரப்புயர்த்தி நீர்கட்டி புழுதியடையக் கலைக்கி நஞ்சையாக்குவதற்கஞ்சாமலும் உழுது பயிரிடும் வேளாளர்களும் காலங்களை அறிந்து இன்னின்ன தானியங்களை இவ்விவ்வகையாக விளைக்க வேண்டுமென்னும் மதியூட்டும் விவேகிகளும் உழவாளருக்கு தனமுதலுந் தானிய முதலும் உதவிவரும் முதலீவோர்களுஞ்
சேர்ந்து வாழ்வதே நாடென்பது விரிவு.

**2. பெரும்பொருளாற் பெட்டக்க தாகிய ருங்கேட்டா**

**லாற்ற விளைவது நாடு.**

**(ப.)** பெரும் பொருளாற் - சிறந்த தனவுதவியால், பெட்டக்கதாகி - பூமியைப் பெட்டகம்போல் வரப்புயர்த்தி, யருங்கேட்டா - அதனை யழுகப் புழுக நஞ்சையாகக் கெடுத்து, லாற்றவிளைவது - தானியங்கள் சுகமாக வோங்கி வளர்வது, நாடு - வளநாடென்பது பதம்.

**(பொ.)** சிறந்த தனவுதவியால் பூமியைப் பெட்டகம் போல் வரப்புயர்த்தி அதனை அழுகப்புழுக நஞ்சையாகக் கெடுத்து தானியங்கள் சுகமாக ஓங்கி வளர்வது வளநாடென்பது பொழிப்பு

**(க.)** தனவுதவியால் பூமியைப் பெட்டகம் போன்ற வரப்புயர்த்தி, நீர்கட்டி, எருவிட்டு அழுகப்புழுக்கக் கலக்கி நஞ்சையாக்கிப் பல தானியங்களும் ஓங்கி வளர்ந்திருப்பதே நாடு என்பது கருத்து.

**(வி)** தனவுதவி கொண்டும், தானியவுதவி கொண்டும் பூமியைத் திருத்தி, சுற்றிலும் பெட்டகம் போன்ற வரப்புயர்த்தி பிள்ளைகளை தெண்டித்து மதியூட்டல் அறக்கருணையென்றும், தெண்டித்துக் கொல்லுதல் மறக்கருணை யென்றும் வழங்குதல் போல் பெருங்கேடென்றும் அருங்கேடென்றும் இரு வகையுண்டு அவற்றுள் பெருங்கேடாயது சகலவற்றையுந் துன்புறுத்தி அழித்து விடுதல்,

அருங்கேடு என்பது துன்புறுத்தி பலனடையச் செய்தல். அதாவது பூமியைப் பழுதுபட வழுகக் கலைக்கி நஞ்சையாம் அருங்கேடடை செய்து நற்பலனாம் தானியங்களை ஓங்கி வளர்த்து சுகம் பெறுமிடமே நாடென்பது விரிவு.

இதனந்தரார்த்தங்கொண்டே பூமியைப் பலவகைக் கொத்திப்புழுதி யாக்கிப் பழுக வழுகக்கலைக்கித் துன்புறச் செய்யினும் அஃது மேலாய நற்பலனைத் தருவதே சுவாபமாதலின் அம்மண்ணிற்கு மறுபெயர் பிரமமென்றும், மநுக்களுள் ஒருவனைப் பல்லோர் பல்வகையாயக் கொடூரத் துன்பஞ் செய்யினும் அத்துன்பங்களைப் பொறுத்து அவர்களுக்குப் பிரிதி தீங்கு செய்யாது நற்பயனை அருளி உபகாரியாக விளங்குவோனை பிரமமென்றும் பௌத்த சாஸ்திரிகள் வரைந்துள்ளார்கள்.

### 3. பொறையொருங்கு மேல் வருங்காற் றாங்கி யிறைவற் கிறையொருங்கு நேர்வது நாடு.

**(ப.)** பொறை - பூமியில் விளைப்பொருட்கட் யாவும், யொருங்கு - ஒன்று சேர்ந்து, மேல்வருங்காற் - ஓங்கி வளர்ந்த காலத்தில், றாங்கி - அறுத்து சேர்த்துக்கொண்டு, யிறைவற் - அரசருக்கு சேர்க்கவேண்டிய வரியிறைக்கு, கிறையொருங்கு - மேலாக வொருபங்கு வரியிறை, நேர்வது - செலுத்திவருவது, நாடு-வளநாடென்னப்படும்.

**(பொ.)** பூமியில் விளைப்பொருட்கள் யாவும் ஒன்று சேர்ந்து ஓங்கிவளர்ந்த காலத்தில் அறுத்து சேர்த்துக்கொண்டு அரசருக்கு சேர்க்க வேண்டிய வரியிறைக்கு மேலாக ஒருபங்கு வரியிறை செலுத்தி வருவது வளநாடென்பது பொழிப்பு

**(க.)** பூமியின் கண் பலவகையான தானியங்களும் ஓங்கி வளர்ந்து பெரும்பயன்தருமாயின் அவற்றை ஆனந்தமாக பண்டியிற் சேர்த்து அரசனுக்குச் சேர்த்து வரும் வரி யிறையோடு ஒருபங்கு சேர்த்தளித்து வருவதே வள நாடென்பது கருத்து.

**(வி.)** நஞ்சைதானியம் புஞ்சைதானியமென்னும் பலவகைப் பொறை தானியங்களுங் குறைவற ஓங்கிவளருங் காலத்து அறுத்துத் தாங்கிக் கொண்டு அரசருக்குச் செலுத்திவரும் வரியிறைக்கு மேலாக ஒருபங்கு வரியிறை செலுத்தி வருவதாயின் விளைவில்லாத காலத்து செலுத்தும் வரியிறையிற் குறைத்தே அளிப்பதற்காதாரமாய முன்னிறை வரிவிளக்கிய நாட்டின் சிறப்பாமென்பது விரிவு

### 4. உறுபசிய மோவாப்பிணியுஞ் செறுபகையுஞ் சேரா தியல்வது நாடு.

**(ப.)** உறுபசியு - பசியால் வருந்துவோரும், மோலாப்பிணியுஞ் - சகிக்க வொன்றாத நோயால் வாதைப்படுவோரும், செறுபகையுஞ் -

ஏதொன்றுக்கும் பகை பாராட்டுவோரும், சேராதியல்வது - அணுகாது வாழ்க்கை சுகம் பெற்றிருப்பது, நாடு - வளநாடென்பது பதம்

**(பொ.)** பசியால் வருந்துவோரும் சகிக்க வொன்றா நோயால் வாதைப்படுவோரும் ஏதொன்றுக்கும் பகை பாராட்டுவோரும் அணுகாது வாழ்க்கை சுகம் பெற்றிருப்பது வளநாடு என்பது பொழிப்பு

**(க.)** பசியென்பதே தெரியாமலும் நோயென்பதே அணுகாமலும் பகைவரென்பதே இல்லாமலும் ஆனந்த சுகவாழ்க்கைப் பெற்றிருப்பதே வளநாடு என்பது கருத்து.

**(வி.)** பூமியின் உழவோராம் வேளாளருக்குள்ள அன்பின் பெருக்கினாலும் ஈகையின் செயலாலும் நீர்வளம் பெருகி நிலவள ஓங்குதலால் பசியற்ற சுகமும் நோயற்ற தேகமும் பகையற்ற வாழ்க்கையுங் கொண்டு வளநாடு பசியற்றும் பிணியற்றும் பகையற்றும் உள்ளதாம் என்பது விரிவு.

**5. பல் குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்**
**கொல் குறும்பு மில்லது நாடு.**

**(ப.)** பல்குழூவும் - பல்வகைக் கூட்டங்களையும், பாழ்செய்யு - கெடுத்தற் கேதுவாய, முட்பகையும் - வஞ்சினமும், வேந்தலைக்குங் - அரசரைய சட்டைச் செய்தாலும், கொல்குறும்பு - சீவர்களைக்

கொன்று திரியுஞ் சேட்டைகளும், மில்லது - இல்லாதது, நாடு - வளநாடென்பது பதம்.

**(பொ.)** பலவகைக் கூட்டங்களையும் கெடுத்தற்கேதுவாய, வஞ்சினமும் அரசரை அசட்டைச்செய்தலும் சீவர்களைக் கொன்று திரியுஞ்சேட்டைகளும் இல்லாதது வளநாடு என்பது பொழிப்பு

**(க.)** மக்கள் கூட்டங்களையும் ஆடுமாடுகளின் பட்டிகளையுந் தானியக்குவியல்களையுங் கெடுப்பதற் ஏதுவாய வஞ்சினமில்லாமலும் அரசரை அவமதிக்குங் கர்வமில்லாமலும் பட்சிகள் மட்சங்கள் முதலிய சீவராசிகளைக் கொன்று திரியும் சேட்டைகளில்லாமலும் ஆனந்த சுகவாழ்க்கைப் பெற்றிருப்பதே வளநாடு என்பது கருத்து.

**(வி.)** கங்களுக்குள்ள உட்பகையால் மக்களை வஞ்சிப்பதும், ஆடுமாடுகளைத் துன்புறுத்துவதும், தானியப்போர்களை அழிப்பதுமாய துற்செயல் களில்லாமலும் அரசருக்கு வரி இறை செலுத்தாதலக்கழிக்குங் கர்வமில்லாமலும் விளையாட்டைப்போல் பட்சிகளையும் மச்சங்களையுங் கொன்றுத் திரியுங் குறும்பில்லாமலும் ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டி, சீவராசிகளைத் தன்னுயிர்போல் காத்து இராஜ விசுவாசத்தில் நிலைத்து நீர்வளம் நிலவளம் ஓங்க அன்பும் ஈகையும் பெருக நிற்பதே நாடு என்பது விரிவு.

## 6. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா நாடென்ப நாட்டிற் றலை.

**(ப.)** கேடறியாக் - குறைவற்ற தானியம் விளைந்து, கெட்டவிடத்தும் - ஒருகால் விளைவுகுறையினும், வளங்குன்றா - நீர் வளம் நிலவளங் குன்றா திருப்பதே, நாடென்ப - நாடென்று சொல்லப்படுவதினும், நாட்டிற்றலை - அதன் சகல நாடுகளுக்குந் தலையாய வளநாடெனனப்படும் என

**(பொ.)** குறைவற்ற தானியம் விளைந்து ஒருகால் விளைவு குறையினும் நீர்வளம் நிலவளங் குன்றாதிருப்பதே நாடென்று சொல்லப்படுவதினும் அதனை சகல நாடுகளுக்குந் தலையாய வளநாடென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** நன்றாக விளைந்தும் பூமி ஒருகால் விளைவு குன்றினும் நீர்வளம் நிலவளம் பொருந்தியுள்ள நாடே சகல நாட்டிற்கு மேலாய வளநாடென்று கூறத்தகும் என்பது கருத்து.

**(வி.)** முதலீவோர் உதவியற்றும் உழைப்பாளிகள் சுகமற்றும் நன்றாக விளைந்திருந்த நாடு விளைவு குன்றுமாயினும் நீரின் வசதிகளும் நிலவசதிகளும் மட்டிலும் மாறாதிருக்குமாயின் அந்நாட்டையே சகலநாடுகளிலும் மேலாய வளநாடெனக் கூறத்தகும் என்பது விரிவு.

## 7. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் வல்லாணும் நாட்டிற் குறுப்பு.

**(ப.)** நாட்டிற் குறுப்பு - நாடுகளுக்கு முக்கிய வங்கங்கள் யாதெனில், இரு புனலும் - மழைநீர் ஆற்றுநீர் இரண்டுடன், வாய்ந்த - நெருங்கியமைந்த, மலையும் - மலையினின்று, வருபுனலும் - இறங்கும் நீருற்றும், வல்லாணும் - வல்லப மிகுத்த அரசன் வாழும் நகரமுமாமென்பது பதம்

**(பொ)** நாடுகளுக்கு முக்கிய அங்கங்கள் யாதெனில் மழைநீர், ஆற்றுநீர் இரண்டுடன் நெருங்கியமைந்த மலையினின்றிறங்கும் நீருற்றும் வல்லபமிகுத்த அரகன் வாழும் நகரமுமாம் என்பது பொழிப்பு.

**(க.)** காலமழையும் ஆற்றுநீர் பாய்ச்சலும் மலையருவி நீரும் வல்லப மிகுத்த அரசன் வாழும் அரண்மனையும் நாடுகளுக்கு முக்கிய அங்கங்களெனக் கூறுத்தகும் என்பது கருத்து.

**(வி.)** விசேடவளநாடு என்பதற்கு முக்கியமாய அங்கங்களென்னும் உறுப்புக்கள் ஏதென்னில் காலமழைத் தவராமல் பெய்துவருமிடமும் ஆற்றுநீர் பாய்ச்சலும் மலையருவி நீர்வடிதலும் இராட்சியபாரஞ் சகலவற்றையுந் தாங்கும் வல்லபமிகுத்த அரசன் வாழும் நகரமுமாம் என்பது விரிவு

**8. பிணியின்மெ செல்வம் விளைவின்பமேம**

**மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.**

**(ப.)** பிணியின் மெ - நோயற்றவுடலும், செல்வம் - குறைவற்ற தனமும், விளை - பயிறுகள் ஓங்கி வளர்தலும் , வின்பம் - ஆனந்த நிலையும், மேம் - தங்களை யடக்கியாண்டுக் கொள்ளும் விரதமுமாய, நாட்டிற் கிவ்வைந்து இவ்வைந்தும் வளநாட்டில், மணியென்ப - தானியக் குவியல் நிறைவதற்கோராதாரமா மென்பது பதம்.

**(பொ.)** நோயற்றவுடலும் குறைவற்ற தனமும் பயிறுகள் ஓங்கிவளர்தலும் ஆனந்த நிலையும் தங்களை அடக்கி ஆண்டுக்கொள்ளும் விரதமுமாய இவ்வைந்தும் வளநாட்டில் தானியக் குவியல் நிறைவதற்கோர் ஆதாரம் என்பது பொழிப்பு |

**(க.)** நாடுகளில் தானிய மணிகள் குவிதற்கு தங்களைக் காக்கும் விரதமும் சுகமும் பயிரோங்கும் ஆனந்த நிலையும் நோயற்ற வுடலும் குறைவற்ற செல்வமுமாய யிவ்வைந்துமே ஆதாரமாம் என்பது கருத்து.

**(வி.)** வளநாட்டில் தானிய மணிகள் நிறம்பப் போரிடுவதற்கு ஆதாரங்கள் யாதெனில் மனோவாக்குக் காயங்களை அடக்கியாளும் விரதமும் பயிறுகளை ஓங்கி வளரச்செய்யும் முயற்சியும் சுகமும்

பிணியணுகாதிருக்கும் உடலுங் குறைவற்ற செல்வமுமாகிய ஐந்துமேயாம் என்பது விரிவு.

**9. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**

**நாட வளந்தரு நாடு.**

**(ப.)** நாடென்ப - நாடென்று சொல்லும்படியானது, நாடா - வரியோர்களை நாடாது, வளத்தன - விளைவை மட்டிலும் நாடுதல், நாடல்ல - நாடென்று சொல்லுவதற்காதாரமில்லை, நாட - வரியோர்களைத் தேடியவர்களுக்கீவதாயின், வளந்தரு - தானியமணிகள் பெருகுவதுடன், நாடு - அதனை வளநாடென்றுங் கூறத்தகுமென்பது பதம்.

**(பொ.)** நாடு என்று சொல்லும்படியானது வரியோர்களை நாடாது விளைவை மட்டிலும் நாடுதல் நாடு என்று சொல்லுவதற்கு ஆதாரமில்லை, வரியோர்களைத் தேடி அவர்களுக்கு ஈவதாயின் தானிய மணிகள் பெருகுவதுடன் அதனை வளநாடு என்றுங் கூறத்தகும் என்பது பொழிப்பு

**(க.)** தங்கள் தங்கள் பயிறுகளை ஓங்க வளர்ப்பது போல் ஏழை வரியோர்களை ஓங்க வளர்க்காதது நாடாகாவாம், தங்கள் பயிற்றை சீர்தூக்கி வளர்ப்பது போல் ஏழைக்குடிகளையும் ஓங்க

வளர்ப்பதாயின் தானியமணி வளம் பெருகுவதுடன் வளநாடென்று அவற்றைக் கூறத்தகும் என்பது கருத்து.

**(வி.)** தாபர வர்க்கங்களாகிய மணிகளை மட்டிலும் ஓங்கச் செய்வோர்கள் தங்களை ஒத்த மநுமக்களாகிய ஏழைகளை ஓங்கச் செய்யார்களாயின் அந்நாடு வளநாடாகாததுடன் அவர்களோங்க வளர்க்கும் தானிய மணிகளும் ஓங்காவாம். தானியங்கள் ஓங்கிப் பலன் பெறவேண்டியவர்கள் தங்களை ஒத்த மனுமக்களாம் ஏழைகள் ஓங்கிப்பலுகிப் பெருகக்கருதி ஈவார்களாயின் அவர்கள் விளைவிக்கும் தானியங்களும் ஓங்கிவளருவதுடன் அந்நாட்டையும் வளநாடென்று கூறத்தகும் என்பது விரிவு.

### 10. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
### வேந்தமை இல்லாத நாடு

**(ப.)** வேந்தமை - அரசன் தங்கி, வில்லாத - இராத, நாடு - நாடேயாயினும், ஆங்கமை வெய்திய - ஏழைகளமர்ந்தோங்கி வளரப்பார்க்கும், கண்ணும் - பார்வைக்கு, பயமின்றே - யாதொரு பயமுமில்லையா மென்பது பதம்.

**(பொ.)** அரசன் தங்கியிராத நாடேயாயினும் ஏழைகள் அமர்ந்தோங்கி வளரப்பார்க்கும் பார்வைக்கு யாதொரு பயமுமில்லையாம் என்பது பொழிப்பு

**(க.)** தங்களை பாதுகாக்கும் அரசனில்லாத நாடேயாயினும் ஏழைகளை யோங்கி வளரச்செய்யும் பார்வை நாட்டாருக்கிருக்குமாயின் யாதொரு பயமும் இராதென்பது கருத்து.

**(வி.)** முற்பாடலில் பயிறுகளை வோங்கும்படி கருதுவோர் தங்களை யொத்த மதுமக்களில் ஏழைகளாயுள்ளோரும் ஓங்கவேண்டுமெனக் கருதல் வேண்டுமென்று கூறியுள்ளவற்றை அநுசரித்தே ஆங்கமை வெய்தியக் கண்ணென்று ஏழைகளை ஓங்கிவளரச் செய்யும் யீகையாளரும் வேளாளருமாகிய உழவாளிகள் வாழும் நாட்டிற்கு அரசனில்லாத காலத்தும் பயமில்லையென்பது விரிவு

## 42. அரண்

இதுவே நகரத்தின் சிறப்பையும் அவை அமையவேண்டிய நிலையையும் அவ்விடம் அமைவோர் செயலையும் விளக்கி நாட்டிற்குப் பேராதரவாகும் நகரமாம் அரணை விளக்குகின்றார்.

**1. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்**

**போற்றுபவர்க்கும் பொருள்.**

**(ப.)** மரண்பொரு - அரசன் வாழும் நகரப் பொருளாயது, ளஞ்சித்தற் - வீரம் அற்றவர்க்கல்லாது, ஆற்றுபவருக்கு - குடிகளைக்

காத்து ரட்சிப் போருக்கும், போற்று பவருக்கும் - சுத்த வீரர் எனக் கொண்டாடத் தகுவோருக்கும், பொருள் - அது யிடமென்னப்படும்.

**(பொ.)** அரசன் வாழும் நகரப்பொருளாயது வீரம் அற்றவர்க்கு அல்லாது குடிகளைக் காத்து ரட்சிப் போருக்கும் சுத்த வீரர் எனக் கொண்டாடத் தகுவோருக்கும் அது பொருளென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** அரண்மனை என்னும் பொருள் யாவருக்குரியது என்னில் வல்லபம் இல்லார்க்கு அல்லாது வல்லபமிகுத்த அரசருக்குங் குடிகளைப் பாதுகாத்து ரட்சிப் போருக்குமே அஃது பொருளென்னப்படும் என்பது கருத்து.

**(வி.)** அரணென்றும் நகரமென்றும் வழங்கும்படியானது அழகென்னும் பொருளையே குறித்து அரசன் வாழ்க்கைக்குரியப் பீடத்தைக் குறித்தலால் அதற்குரிய மன்னன் ஆற்றலுற்ற நிதானியாய் தன் குடிகளைக்காக்குஞ் செயலும் எதிரிகளுக்கு அஞ்சாது வல்லபமிகுத்தோனுமாகி அஞ்சாத் தலைமெயும் கருணையும் மிகுத்த வாழ்க்கைக்குரிய அரண் சிறப்பைக் குறிப்பித்துக் கூறிய விரிவாம்.

**2. மணிநீரு மண்ணுமலையு மணிநிற்**

**காடு முடைய தரண்.**

**(ப.)** மணி - தானியப்பண்டிகளும், நீரு - சுத்த நீரோடைகளும், மண்ணு - சுகந்த மணலும், மலையு - அருவி நீரோடுங் குன்றுகளும், மணிநிழற்காடு - அணியணியாக நிழலைத்தரும் நந்தவனங்களும், முடைய - அமைந்துள்ளதே,
அரண் - அழகிய நகரமா மென்பது பதம்.

**(பொ.)** தானியப் பண்டிகளும் சுத்த நீரோடைகளும் சுகந்த மணலும் அருவி நீரோடுங் குன்றுகளும், அணியாக நிழலைத்தரும் நந்தவனங்களும் அமைந்துள்ளதே அழகிய நகரமாம் என்பது பொழிப்பு.

**(க.)** பல தானிய நிறைவின் பண்டிகளும், நீரோடைகளும் எக்காலும் புதுமணல் பரப்பும் வீதிகளும் அருவி நீர் பாயுங்குன்றுகளும் சுகந்தமலரும் இனியக் கனியும் அளிக்கக்கூடிய நந்தவனங்களுங் கூடியிருப்பதே அரண்மனை
என்று கூறத்தகுமென்பது கருத்து.

**(வி.)** நகரமென்று கூறும் அரசனது அரண்மனைக்கு அழகாயது சுத்த நீரோடையே யாதலின் அவற்றிற்கு நீர் அரணென்றும் புதுமணல் பரப்பலே நில அரணென்றும், குன்றுகளருவியே மலை அரணென்றும், நந்தவனத்தையே காட்டரணென்றுங் கூறியுள்ளவற்றிற்குப் பொருள் கொண்டு மன்னனது வாழ்க்கை

பீடமாம் அரணுக்கு இத்தியாதி சிறப்பு அமைந்திருத்தல் வேண்டும் என்பது விரிவு.

**3. உயர்வ கலந் திண்மை யருமை யிந்நான்கி**
**னமைவர ணென்றுரைக்கு நூல்.**

**(ப.)** உயர் - மதில்வுயரமும், வகல - விசாலமும், திண்மை - உறுதியும், யருமை - பார்வைக்கழகுமாய, யிந்நான்கி - இந்நான்கும், னமைவர ணென்றுரைக்கு - அரணுக்கமையவேண்டுமென்று கூறும், நூல் - சிற்ப நூலென்பது பதம்.

**(பொ.)** மதில் உயரமும் விசாலமும் உறுதியும் பார்வைக்கழகுமாய இந்நான்கும் அரணுக்கு அமையவேண்டுமென்று கூறும் சிற்ப நூல் என்பது பொழிப்பு,

**(க)** அரணுக்கு ஆதாரமாம் சுற்றுமதில் எழுப்புங்கால் மிக்க விசாலமாகவும் உயரமாகவும் நல்லுறுதிவும் பார்ப்போர்க்கு அரியதாகவும் கட்ட வேண்டும் என்பது சிற்பநூல் உறுதிமொழி என்பது கருத்து.

**(வி)** இவற்றையே அரண்காப்பு என்றும் கோட்டை மதிலென்றுங் கூறப்படும். நாட்டுக்கு ஆதாரமாம் நகரத்திற்கு கோட்டையின் மதிலே காப்பு ஆதலின் அவை அகலமாகவும் உயரமாகவும் சாந்துமைகூட்டிய உறுதியாகவும் அழகிய வெண்தூளிதம்

பூசியதாகவும் இருக்க வேண்டும் என்பது சிற்ப நூலின் குறிப்பு என்பது விரிவு.

### 4. சிறுகாப்பிற் பேரிடத்து தாகி யுறுபகை யூக்க மழிப்ப தரண்.

**(ப.)** சிறுகாப்பிற் - சிறியக்காப்பாளராயினும், பேரிடத்ததாகி விசாலமுற்றயிடமுடையதாய், யுறுபகை - தங்களையெதிர்த்துவரும் பகைவரின், யூக்க மழிப்ப - மனேவுற்சாகத்தைக் கெடுக்கக்கூடியதே, தரண் - நகரமென்னைப்படு மென்பது பதம்.

**(பொ)** சிறிய காப்பாளராயினும் விசாலமுற்ற இடமுடையதாய் தங்களை எதிர்த்து வரும் பகைவரின் மனேர் உற்சாகத்தை நகரமென்னப் படும் என்பது பொழிப்பு

**(க.)** சிறிய படையால் காக்கக்கூடியதாயினும் கோட்டையானது விசாலமும் உறுதியும் பெற்றிருப்பதே எதிரியின் மனோ உற்சாகத்தைக் கெடுப்பதற்கு ஆதாரமாயுள்ள அரணெனத் தகும் என்பது கருத்து.

**(வி.)** நகரக்கோட்டையானது விசாலமும் உறுதியும் பெற்றிருக்குமாயின் சிறு படையைக் கொண்டே எதிர்நோக்கி வரும் பெரும்படையின் உற்சாகத்தைக் கெடுத்துப் பின் போகச் செய்யும் என்பது விரிவு.

**5. கொளற்கரிதாய்க் கொண்ட கூழ்த்தாகி யகத்தார்**

**நிலைக்கெளிதா நீர தரண்.**

**(ப.)** கொளற்கரிதாய்க் - எதிரி யெளிதிற் கைப்பற்றக் கூடாததாகவும், கொண்ட கூழ்த்தாகி - வேணவுணவு பொருள் நிறப்புதற் கிடமாகவும், யகத்தார் - நகரவாசிகள், நிலைக்கெளிதா - பயமின்றி தங்கியிருப்பதற்காதாரமாகவும், நீரதரண் - நேர்ந்திருப்பதே கொத்தள் மென்னப்படு மென்பது பதம்.

**(பொ)** எதிரி எளிதிற் கைப்பற்றக் கூடாததாகவும் வேணவுணவு பொருள் நிறப்புதற்கு இடமாகவும் நகரவாசிகள் பயமின்றி தங்கியிருப்பதற்கு ஆதாரமாகவும் நேர்ந்திருப்பதே கொத்தளமென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** எதிரி படையால் உடனுக்குடன் கைப்பற்றக்கூடாத்தும் பலவகைத் தானியங்களை ஏராளமாக நிறப்பி வைப்பதற்கு இடமாகவும், நகரவாசிகள் ஏதொரு பயமுமின்றி நிலைத்திருப்பதற்கு விடுதிகளாகவும் அமையப் பெற்றுள்ளதே அரயன் வாழ் நகரமெனத் தகும் என்பது கருத்து.

**(வி.)** நகரத்திற்கு ஆதாரமாயக் கோட்டையின் கட்டிடமானது எதிரி அரசர்களால் எளிதாகக் கைப்பற்றக்கூடாததாகவும் எத்தனை காலம் யுத்தம் நடப்பினும் உணவு பொருளில்லை என்னாது

நிறப்பிவைத்தற்கு இடமா மாகவும் எவ்வகை யுத்த நடப்பினும் அவ்விடம் வசித்துள்ளக் குடிகளுக்கு பயமின்றி வாசஞ்செய்யும் இருக்கைகளாகவும் அரணமைந்திருத்தல் வேண்டும் என்பது விரிவு.

**6. எல்லாப் பொருளு முடைத்தா யீடத்துதவு**
**நல்லா ளுடைய தரண்.**

**(ப.)** எல்லாப் பொருளு - அரசனுக்கு வேண்டிய சகல பொருட்களும், முடைத்தா - உடையதாகி, அவ்விடத்தே நிறைந்திருப்பதுடன், நல்லா - ஒழுக்கமுற்ற வாணியும், ளுடைய - உடையதே, தரண் - அரண்மனையென்னும், யிடத்துதவு - இடத்திற்குப் பலமாமென்பது பதம்.

**(பொ.)** அரசனுக்கு வேண்டிய சகல பொருட்களும் உடையதாகி அவ்விடம் நிறைந்திருப்பதுடன் ஒழுக்கமுற்ற அரணியும் உடையதே அரண்மனை என்னும் இடத்திற்கு பலமாம் என்பது பொழிப்பு அரயனுக்கு வேண்டும் பலவகையாய பொருட்களும் ஒழுக்கமும் விவேகமு மிகுத்த நல்மனையாளும் இருப்பதே அரணுக்காதாரமாம் என்பது கருத்து.

**(வி.)** ஓரில்லத்தில் நல்லாளாம் ஒழுக்கமிகுத்த மனைவி இருப்பாளாயின் சகல பொருட்களும் உண்டென்பது போல் அரயனுக்கு சகலவகைப் பொருட்களிருப்பினும் நீதியும்

ஒழுக்கமுமற்ற மனையாள் இருப்பாளாயின் சகல பொருட்களிருந்தும் இல்லையென்னப்படுதலால் அரண்மனைக்கு அதிபனாம் அரயனுக்கு சகலமாய பொருட்களோடு நல்லாளாம் உத்தம மனையாளும் இருப்பாளாயின் அரணுக்குப் பலமாம் என்பது விரிவு.

**7. முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்**
**பற்றற் கரிய தரண்.**

**(ப.)** முற்றியு - கோட்டையை பகைவரால் முற்றிகை இடினும், முற்றாதெறிந்து - அவ்வகை முற்றிகை இடாது ஆயுதங்களை எறியினும், மறைப்படுத்தும் - காக்கக் கூடியதும், பற்றற்கரிய - பகைவரால் கைப்பற்றுதற் கரிதாயதுமே, தரண் - நகரமென்னப்படும் என்பது பதம்.

**(பொ.)** கோட்டையை பகைவரால் முற்றிகை இடினும் அவ்வகை முற்றிகை இடாது ஆயுதங்களை எறியினும் காக்கக் கூடியதும் பகைவரால் கைப்பற்றுதற்கு அரிதாயதுமே நகரமென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** பகைவர் கோட்டைவாயலை நெருங்கி வந்து முற்றிகையிடினும் முற்றிகையிடாது வெளியிலிருந்தே ஆயுதங்களைப் பிரயோகிக்கினும் உள்ளிருப்போரை

மறைத்துக்காக்கக்கூடியதும் பகைவரால் கைப்பற்றக் கூடாததுமாய் இருப்பதே அரணென்னப்படும் என்பது கருத்து.

**(வி.)** கோட்டையை நெருங்கி விட்டோமென்னும் பகைவரது அடையாளமாம் முற்றிகையிடினும் அவ்வகை முற்றிகையிடாது வெளியிலிருந்துக்கொண்டே ஆயுதங்களை யெறியினும் கோட்டைக் குள்ளிருப்போர் அவைகள் யாவற்றிற்கும் அஞ்சாதிருக்கவும் எதிரிகள் எளிதிற் கைப்பற்றக் கூடாததுமாயிருப்பதே மதிலரணென்றும் நகரமென்றுங் கூறத்தகும் என்பது விரிவு.

**8. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்**
**பற்றி யார்வெல்வ தரண்.**

**(ப.)** முற்றாற்றி - பகைவராலிட்ட முற்றிகையை யகற்றியும், முற்றியவரையும் - முற்றிகையிட்டப் பகைவரையும், பற்றாற்றி - கைப்பற்றி, பற்றியார் - வீரமுறுவோர், வெல்வ - வெல்லுவதற்காதாரமாயிருக்க வேண்டியது, தரண் - நகரக்கோட்டை யென்பது பதம்.

**(பொ.)** பகைவராலிட்ட முற்றிகையை அகற்றியும் முற்றிகை இட்டப் பகைவரையுங் கைப்பற்றி வீரமுறுவோர் வெல்லுவதற்கு ஆதாரமாய் இருக்க வேண்டியது நகரக்கோட்டை என்பது பொழிப்பு.

**(க.)** பகைவர் முற்றிகையை உடைக்கக் கூடியதும் அவர்களைக் கைப்பற்றி அடக்கக் கூடியவர்களுமாய சுத்த வீரர்களுக்கு வசதியாகவும் அக்கோட்டையின் அரண் அமைந்திருக்க வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரயனுக்குக் காப்பாக விளங்கும் சுத்த வீரர்கள் எதிரிகளின் முற்றிகையை அடைக்கவும் அவ்வெதிரிகளைக் கைப்பற்றவுங் கூடிய உபாயத்தில் அமைந்திருக்க வேண்டியது அவ்வரண் என்பது விரிவு.

**9. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து**
**விரெய்தி மாண்ட தரண்.**

**(ப.)** முனைமுகத்து - முனிந்து செய்யும் யுத்தத்தில், மாற்றலர்சாய - பகைவர் மடிய, வினைமுகத்து - முந்திய செயலால், வீரெய்தி - மேலு மேலும் சுத்த வீரமுண்டாக, மாண்ட - முடிந்திருக்க வேண்டியது, தரண் - கொத்தளமென்பது பதம். |

**(பொ)** முனிந்து செய்யும் யுத்தத்தில் பகைவர் மடிய முந்திய செயலால் மேலும் மேலும் சுத்த வீரமுண்டாக முடிந்திருக்க வேண்டியது கொத்தளம் என்பது பொழிப்பு.

**(க.)** அரணானது பகைவரை முனைந்துவென்றும் அவ்வீரங் குன்றாத செயலுடைத்தாகி சுத்த வீரமெழுவற்கு ஆதாரபீடமாக

முகிந்திருத்தல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரண் காப்பாளராம் சுத்த வீரர் முனைமுகத்து நின்று வெல்லினும் அத்திடவீரங் குன்றாது மேலும் மேலும் வீரத்தை உண்டு செய்வதற்கோர் சூத்திர பாகமாக முடிந்திருக்க வேண்டியதே அரண் என்னும் நகரமென்னப்படும் என்பது விரிவு

**10. எனைமாட்சித் தாகிய கண்ணும் வினைமாட்சி**

**யில்லார்க ணில்ல தரண்.**

**(ப.)** எனை மாட்சித் - எத்தகையவரணிலை யுற்றிருப்பினும், தாகியக் கண்ணும் - அதனை நோக்குற்றிராத பார்வையும், வினைமாட்சி - அதனை சீர்திருத்திவரும் முயற்சியினிலையும், யில்லார்க - இல்லாதவர்களிடத்து, தரண் - கொத்தளமானது, ணில்ல - நிலையாதென்பது பதம்.

**(பொ.)** எத்தகைய அரணிலை யுற்றிருப்பினும் அதனை நோக்குற்றிராத பார்வையும் அதனை சீர்திருத்திவரும் முயற்சியினிலையும் இல்லாதவர்களிடத்து கொத்தளமானது நிலையாது என்பது பொழிப்பு.

**(க.)** பலவகை யூகையாகக் கோட்டையை அமைத்திருப்பினும் அரசன் அதன் மீது கண்ணோக்கமும் எக்காலும் வற்றை

சீர்திருத்திவரும் முயற்சியும் இல்லாமற் போவானாயின் அரண் அவனுக்கு நிலையாது என்பது கருத்து.

**(வி.)** மண்ணரண் , மலையரண், காட்ட ரண் நாட்டரண்யாவுங் குறைவர அமைக்கப்பெற்றிருப்பினும் அரசனது பார்வையும் அதனை மேலு மேலும் சீர்திருத்து முயற்சியுமில்லாமற் போமாயின் அரண் சீரழிவதுடன் அரசனது வீரமுங் குன்றிப்போமென்பது விரிவு

## 43. இறைமாட்சி

பொருளியலில் நாட்டியல் நகரவியலை விளக்கி அவைகட்காதாரபீடமாம் அரசியலின் விதிவழிகளை விளக்கலானார்.

**1. படைகுடி கூழமைச்சு நட்பரணாறு**
**முடையா னரசரு ளேறு.**

**(ப.)** படை - நால்வகை சேனையும், குடி - நல்வாழ்க்கையிற் கூடிவாழு மக்களும், கூழ் - தானிய நிறை பண்டிகளும், அமைச்சு ஆலோசினை மிகுத்த மந்திரவாதிகளும், நட் - விளைநாடும், பரணாறு - நகரமோடாறும், முடையா - உடையவனே, னரசரு - அரசருக்குள், ளேறு - சிம்மத்திற்கு நிகராவானென்பது பதம்.

**(பொ.)** நால்வகை சேனைகளும், நல்வாழ்க்கையிற் கூடி வாழும் மக்களும் தானிய நிறை பண்டிகளும், ஆலோசினை மிகுத்த

மந்திரவாதிகளும், விளை நாடும், நகர மோடாறும் உடையவனே அரசருள் சிம்மத்திற்கு நிகராவான் என்பது பொழிப்பு

**(க.)** நாடும் நகரமும் நால்வகை சேனைகளும் சீரமைந்த குடிகளும் பண்டிகள் நிறம்பிய தானியங்களும் விவேகமிகுத்த அமைச்சர்களுமாய அறுவகைத்தானையுடைய அரசன் சிம்மத்திற்கு நிகராவன் என்பது கருத்து.

**(வி.)** வளந்தங்கிய நாடும், சிறப்பற்ற நகரமும், வீரமிகுந்த சேனைகளும் செல்காலம், நிகழ்காலம் வருங்காலம் மூன்றினையுமறிந்து சொல்லக்கூடிய மந்திரிகளும், இராஜ விசுவாசம் அமைந்த குடிகளும் குறைவற்ற தானியப் பண்டி களுமாய அறுவகை நிறைவகளும் அமையப்பெற்ற அரசன் சகல மிருகங்களையும் அடக்கி ஆளும் சிம்மத்திற்கு நிகராவான் என்பது விரிவு. இவற்றையே சேந்தனார் "கூட்டத்தொரு பெயருள் படையுங்குடியுங் கூழுமமைச்சு மரணு நட்பு மாசியலாறே" என்றுக்கூறியவற்றுள் உரைவாணர் நட்பை வளநாட்டமைதியென்றும், நட்டாற்றாமென்றும், நட்டுவிளை பொருளென்றும் பூமியின் ந பேஓங்குமாயின் உலக மக்கள் நட்பும் ஓங்குமென வரைந்துள்ளார்கள் என்பது விரிவு

**2. அஞ்சாமெ யீகை யறிவூக்க மிந்நான்கு**

**மெஞ்சாமெ வேந்தர்க் கியல்பு.**

**(ப.)** அஞ்சாமெ - திடதேகமும் , யீகை - தன்மசிந்தையும், யறிவு - விவேகமிகுதியும், வூக்க - விடாமுயற்சியும், மிந்நான்கு - ஆகிய வின்னான்கும், மெஞ்சாமெ - குறைவற விருப்பவனே, வேந்தற்கியல்பு - அரசரது செயலுக்குரியவனாவனென்பது பதம்.

**(பொ.)** திடதேகமும் தன்ம சிந்தையும் விவேக மிகுதியும் விடாமுயற்சியும் ஆகிய இன்னான்குங் குறைவற இருப்பவனே அரசர்களது செயலுக்குரிய வனாவன் என்பது பொழிப்பு.

**(க)** எதிரிகளுக்கு அஞ்சாதவனும் ஈகையை உடையவனும் அறிவுடையவனும், முயற்சியுள்ளவனுமாயிருப்பவனே அரசரது இயல்புடையோன் என்னப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தன்மசிந்தையை உடையவனும் எதிரி அரசர்களுக்கு அஞ்சாதவனும் விவேகத்தில் மிகுத்தவனும் எடுத்தச் செயலில் விடா முயற்சியுமாய நான்கும் இயல்பாகவே அமைந்துள்ளவனாயிருத்தல் வேண்டும் என்பது விரிவு.

**3. தூங்காமெ கல்வி துணிவுடைமெ யீம் மூன்று**
**நீங்கா நிலனாள் பவர்க்கு.**

**(ப.)** நிலனாள் பவர்க்கு - பூமியை யாளுமரசர்களுக்கு, தூங்காமெ - மயக்கமின்மெயும், கல்வி - கலை நூல் விருத்தியும், துணிவுடைமெ -

யுத்த முநிவும், யிம்மூன்று - ஆகிய விம்மூன்றும், நீங்கா - அகலாதிருத்தல் வேண்டும் என்பது பதம்.

**(பொ.)** பூமியை ஆளும் அரசர்களுக்கு மயக்கம் இன்மெயும், கலை நூல் விருத்தியும் யுத்தமுநிவும் ஆகிய இம்மூன்றும் அகலாதிருத்தல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க)** எக்காலும் சதாவிழிப்பிலும் கல்வியின் பெருக்கிலும் யுத்தத் துணியிலுங் கலங்காதிருப்பவனே அரசன் என்னப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** அரசனுக்கு தனது ஆளுகையில் விழிப்பும் கல்வி கற்றலின் மிகுப்பும் யுத்தத்திற்பின் முதுகொடா எதிர்ப்பும் ஆகிய இம்மூன்றும் அகலாதிருத்தல் வேண்டும் என்பது விரிவு.

### 4. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா மான முடைய தரசு.

**(ப.)** அறனிழுக்கா - தன்மநெறி பிறழாமல், தல்லவை - அதன்மவழிகள் யாவையும், நீக்கி - அகற்றி, மறனிழுக்கா - திடவீரங்குன்றாது, மானமுடைய - சகலருமதிக்கத்தக்க நிலைநிற்றலே, தரசு - மன்னு நிலை யென்னப்படு மென்பது பதம்.

**(பொ.)** தன்மநெறி பிறழாமல் அதன்மவழிகள் யாவையும் அகற்றி திடவீரங்குன்றாது சகலரும் மதிக்கத்தக்க நிலை நிற்றலே மன்னுநிலை என்பது பொழிப்பு

**(க.)** அதன்மச் செயல்கள் யாவையும் நீக்கி அறநெறி மாறாமலும் வீரங்குன்றாமலும் சகலரும் மதிப்புற வாழ்தலே அரசர் நிலை என்பது கருத்து.

**(வி.)** அரசதன்மமாவது யாதெனில் தனக்குள் எழுங்காம, வெகுளி, மயக்கங்களை நீக்கி சத்திய சங்கங்களைப் போற்றலும், சமண முனிவர்களைக் காத்தலுங் குடிகளை நிலை நிறுத்தலும், சுத்த வீரங் குன்றாது சகலரும் போற்ற வீற்றிருத்தலுமேயாம் என்பது விரிவு.

**5. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த**
**வகுத்தலும் வல்ல தரசு.**

**(ப.)** இயற்றலு - தனதரசை செங்கோலாக்கலும், மீட்டலுங் - தனக்கப் புறப்பட்டுள்ள பூமிகளையும் மக்களையுஞ் சேர்த்தலும், காத்தலும் - அவைகள் யாவையுஞ் சீர்பெற வாதரித்தலும், காத்த வகுத்தலும் - தனக்காதரவாய நால்வகை சேனைகளைப் பிறித்துவைத்தலுமாயதே, வல்ல - வல்லபமிகுத்த தரசு -
அரசென்னப்படு மென்பது பதம்.

**(பொ.)** தனதரசை செங்கோலாக்கலும் தனக்கப் புறப்பட்டுள்ள பூமிகளையும் மக்களையுஞ் சேர்த்தாலும் அவைகள் யாவையுஞ் சீர்பெற ஆதரித்தலும் தனக்காதரவாய நால்வகை சேனைகளைப் பிரித்து வைத்தலுமாயதே வல்லபமிகுத்த அரசு என்னப்படுமென்பது பொழிப்பு.

**(க.)** அரசை செவ்விய வழியில் நடாத்தலும், சிதறியுள்ள பூமிகளையும் மக்களையுஞ் சேர்த்தலும் அவைகளைக் காத்தலும் நால்வகை சேனைகளை வகுத்தலும் ஆகிய நான்குவகை உறுதியே அரசனுக்கு வல்லபத்தை உண்டு செய்யும் என்பது கருத்து.

**(வி.)** நீதிநெறி வழுவா செவ்வியக்கோலாம் செங்கோலைக் கையிலேந்தி இராட்சிய பாரந்தாங்கி இயற்றலும் தன்னை விட்டு சிதறியுள்ள பூமிகளையும் மக்களையும் கன்று காலிகளையும் மீட்டு தனதாளுகைக்குள் சேர்த்தலும், சேர்த்தவைகள் யாவற்றையும் சீர்திருத்திக் காத்தலும் தனக்குந் தனதரணுக்கும் ஆதரவாக நான்கு வகை சேனைகளை வகுத்தலுமே அரசனுக்கு வலதாம் என்பது விரிவு.

**6. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல நல்லனேல்**

**மீக்கூறு மன்ன நிலம்.**

**(ப.)** காட்சிக்கெளியன் - பார்வைக்கு எளியவன் போல் காட்டிக் கொள்ளுவதுடன், கடுஞ்சொல்ல - கொடுமொழியற்றவனாகவும், நல்லனேல் - சகலருக்கும் நல்லவனாகவுமிருக்கும், மன்னநிலம் - அரசனது தேசத்தை, மீக்கூறு - மேலாகக் கொண்டாடுவார்களென்பது பதம்.

**(பொ.)** பார்வைக்கு எளியவன் போல் காட்டிக்
யவன் போல் காட்டிக்கொள்வதுடன், கொடுமொழியற்றவனாகவும், சகலருக்கும் நல்லவனாகவுமிருக்கும் அரசனது தேசத்தை மேலாகக் கொண்டாடுவார்கள் என்பது பொழிப்பு

**(க)** பார்வைக்கு டம்பமில்லாதவனும் மிருதுவாக்குடையவனும் சகலருக்கும் நல்லவனாகவும் விளங்கும் அரசனது தேசம் சகலராலும் புகழப்படும் என்பது கருத்து.

**(வி.)** சகலருடைய பார்வைக்கும் வீண்டம்பாகாரச் செயல்களைக் காட்டிக் கொள்ளாதவனும் எக்காலுங்கடுஞ்சொற்களற்று மிருதுவான வார்த்தைகளைப் பேசுபவனும், தன்னவரன்னிய ரென்னும் பட்ச பாத மற்ற நல்லவனுமாக விளங்கும் அரசனது தேசத்தை சகலரும் மேலாகக் கொண்டாடுவார்கள் என்பது விரிவு.

**7. இன்சொலா லீத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலாற்**

**ரான்கண்ட னைத்தில் வலகு.**

**(ப.)** இன்சொலா - இனியமொழியால், லீத்தளிக்க - ஈய்ந்து காக்கும், வல்லார்க்கு - வல்லபமிகுத்த வரசருக்கு, தன்சொலாற் - தனது வாக்கினால், றான் கண்டனைத்திவ்வுலகு - உலகத்திற் கண்டு கேட்டப் பொருளில்லை என்னாதமையுமென்பது பதம்.

**(பொ.)** இனிய மொழியால் ஈய்ந்து காக்கும் வல்லபமிகுந்த அரசருக்கு தனது வாக்கினால் உலகத்திற் கண்டு கோட்டப் பொருளில்லை என்னாதமையுமென்பது பொழிப்பு.

**(க)** எக்காலும் இனிய மொழியுடன் குடிகளைக் காத்து ரட்சிக்கும் அரசனுக்கு உலகத்தில் கண்ட பொருள் எவை வேண்டினும் அவை கிடைக்கும் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் குடிகளிடத்து முகமலர்ந்து இனிய மொழிகளாற் பேசி சீர்திருத்துவதுடன் அவர்களுக்கு வேண்டிய பொருட்களை அளித்துப் பாதுகாத்து ரட்சித்து வருவனேல் அவனுக்கு உலகத்தில் வேண்டும் பொருட்கள் எவையோ அவைகள் யாவும் அக்குடிகளால் கிடைத்து ஆனந்த சுகத்திலிருப்பான் என்பது விரிவு.

**8. முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்**
**கிறையென்று வைக்கப் படும்.**

**(ப.)** முறை செய்து - தரும நெறியினின்று, காப்பாற்று - குடிகளை ரட்சிக்கு, மன்னவன் - அரசனை, மக்கள் - மனுக்கள், கிறையென்று - தருமராசனாம் புத்தரென்றே, வைக்கப்படும் - தங்களிதயத்திற் பதிய நினைப்பார்களென்பது பதம்.

**(பொ.)** தருமநெறியினின்று குடிகளை ரட்சிக்கும் அரசனை மனுக்கள் தருமராசனாம் புத்தரென்றே தங்கள் இதயத்திற் பதிய நினைப்பார்கள் என்பது பொழிப்பு

**(க.)** எக்காலுந் தருமநெறி பிறழாது குடிகளைக் காப்பாற்றிவரும் அரசனை அக்குடிகள் யாவரும் இறைவறனாம் புத்தருக்கு ஒப்பாகவே இதயத்திற் கொள்ளுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** வரியிறைக்கொள்ளும் அரசனாகப் பிறந்து தருமநெறியினது சுகங்கண்டு உலக மக்களுக்கு அத்தன்ம நெறிகளைப் போதித்து நித்தியானந்த மடையச்செய்து இறைவனென்னுங் காரணப்பெயரை பெற்றவர் புத்தரே யாகலின் அத்தகைய தருமநெறி பிறழாது குடிகளைக் காப்பாற்றும் மன்னனை மனுமக்கள் யாவரும் இறைவனாம் புத்தருக்கு ஒப்பானவன் என்றே தங்கள் இதயத்தில் எண்ணுவார்கள் என்பது விரிவு. முறையெனல் தருமநெறி முறையேயாம்.

### 9. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்

**கவிகைக்கீழ் தங்கு முலகு.**

**(ப.)** செவிகைப்பச் - தன்காதில் கொடூரமாய, சொற் - சொல்லினைக் கேட்டும், பொறுக்கும் - மன்னித்துக்கொள்ளும், பண்புடைய - குணநலமுடைய, வேந்தன் - அரசனது, கவிகைக்கீழ் - குடையினுள்ளே , தங்குமுலகு - உலகம் நிலைக்குமென்பது பதம்.

**(பொ.)** தன்காதில் கொடூரமாய சொல்லினைக் கேட்டும் மன்னித்துக் கொள்ளும் குணநலமுடைய அரசனது குடையினுள்ளே உலகம் நிலைக்கும் என்பது பொழிப்பு .

**(க.)** உலக மக்கள் அரசனை செவியிலுறக் கொடுஞ் சொற்களால் வையினும் அவற்றைப் பொறுத்துக் காப்பதே தரும கவிகையாமென்பது கருத்து.

**(வி.)** நல்வழி தெரிந்து குடிகளை நடாத்தும் அரசனை நல்லோர் நலமாகக் கொண்டாடுவதும் தீயோர் கொடூரமாக வைவது இயல்பாதலின் அவ்விருமொழிகளையும் அரசன் செவியிற் கேளாது குண நலத்தால் குடிகளை ஆதரிக்குஞ் செயலையே மேற்கொண்டு நிற்பானாயின் உலக மக்கள் யாவரும் அவனது அரிய நீழலிலமர்ந்து வாழ்வார்கள் என்பது விரிவு.

**10. கொடையளி செங்கோல் குடியோம்ப நான்கு**

**முடையானாம் வேந்தர்க் கொளி.**

**(ப.)** கொடை - தருமசிந்தையும், யளி - ஈகை மிகுதியும், செங்கோல் - வழுவாநீதியும், குடியோம்ப - குடிகளைக்காக்கு மன்புமாய, னான்கு - இன்னான்கும், முடையானாம் - அமைந்துள்ளவன், வேந்தர்க்கொளி - அரசருக்குள் பிரகாசமுற்றவனாவானென்பது பதம்.

**(பொ.)** தருமசிந்தையும், ஈகை மிகுதியும் வழுவா நீதியும் குடிகளைக் காக்கும் அன்புமாய இன்னான்கும் அமைந்துள்ளவன் அரசருக்குள் பிரகாசமுற்றவனாவான் என்பது பொழிப்பு.

**(க.)** அறநெறி தவறாமலும் ஈகையின் குணமாறாமலும் தனதரசகோலை செவ்விய வழியில் நடாத்தி குடிகளைக் காப்பதே நோக்கமாயிருக்கும் மன்னன் சகல அரசர்களிலும் மேலாக விளங்குவான் என்பது கருத்து.

**(வி.)** இவ்விடங்கொடையும் ஈகையும் ஒரு பொருட் தரினும் கவிழ்ந்து காத்தலென்னும் சத்தியதன்மத்தை மேற்கொண்டு கொடையை நிலையாய தன்மமென்றும், அளித்தலை ஈகையென்றும், செங்கோலை நீதியினாளுகை என்றுங் குடியோம்பலை ஆளுகைக்குட்பட்டோரை ஆதரிக்குஞ் செயலென்று முன்னி இந்நான்கு வழியில் தனதரசை நடத்தும் அரசன் சகல அரசர்களினும் மேலாகப் பிரகாசிப்பான் என்பது விரிவு.

## 44. கல்வி

இஃது அரசயோகம் அமையினும், ஊன்றி நிலைக்கும் எண்ணமும் உறுதிபெறச்செயலுமாயக் கல்வியைக் கற்று தெளிவதில் வரிவடிவு அட்சரங்களாம் எழுத்துக்களை எண்ணத்தூன்றும் மொழி முதலாய்ந்துப் பொருளது தேர்ந்து அவற்றால் குவிந்துள்ள முத நூல், வழி நூல், சார்பு நூற்களை யுணர்ந்து நீதியிலும் நெறியிலும் ஒழுக்கத்திலும் அமைந்து தனது ராட்சிய பாரத்தைத் தாங்கி முத்தி பேறாம் நித்தியானந்த நிருவாணமடைதற்கு கல்வியே ஊன்று கோலும் நிமையா விழியுமாதலின் அரசருக்கு வேண்டிய கல்வியை விளக்குகின்றார்.

**1. கற்க கசடறக் கற்பவை கற்றபி**

**னிற்க வதற்குத் தக.**

**(ப.)** கற்க - கல்வியைக் கற்குங்கால், கசடற - அதைக் களங்க மறக்கற்றல் வேண்டும், கற்பவை - கற்றுணர்ந்த யாவும், கற்றபி - தெரிந்தபின், வதற்குத்தக - கற்றுணர்ந்தவற்றிற்குத் தக்கவாறு நிற்க - நிலைத்தொழுகல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** கல்வியைக் கற்குங்கால் அதைக் களங்கமறக் கற்றல் வேண்டும், கற்றுணர்ந்தயாவுந் தெரிந்தபின் கற்றுணர்ந்தவற்றிற்குத் தக்கவாறு நிலைத்தொழுகல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** கல்வியைக் கற்க முயலுங்கால் அவற்றைச் தெள்ளறக் கற்றல் வேண்டும் தெளிந்தபின் அவைகளுள் போதித்துள்ள நீதி நெறி வழுவா நிலையில் நின்றொழுகல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசன் கல்வியென்னும் அட்சரவித்தை அப்பியாசிப்பதில் எழுத்து சொல், பொருள், யாப்பு, அணியென்னும் பஞ்ச லட்சணங்களில் தேர்ந்து எல் திரட்டியுள்ள நீதி நூல் ஞான நூற்களைக் கசடறக் கற்றுத் தெளிந்து அப்போதனைகளாம் உலக நீதியொழுக்கத்திற் கற்ற வழி நிற்றல் வேண்டும் என்பது விரிவு.

**2. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டு**

**கண்ணென்ப வாழு முயிர்க்கு.**

**(ப.)** எண்ணென்ப - எண்ணென்னும் எட்டாம் அகரமாய முதலெழுத்தும், வேனை - அதன் சார்பாய, யெழுத்தென்ப - மற்ற யெழுத்துக்களின், வில்விரண்டுங் - பிரிவுரண்டும், கண்ணென்ப - உள்விழியென்பதாம், வாழுமுயிர்க்கு - வாழ்க்கை நலம் வேண்டும் மக்களுக்கென்பது பதம்.

**(பொ.)** எண்ணென்னும் எட்டாம் அகரமாய முதவெழுத்தும் அதன் சார்பாய மற்ற எழுத்துக்களின் பிரிவுரண்டும் வாழ்க்கை நலம் வேண்டும் மக்களுக்கென்பது பொழிப்பு

**(க.)** அகரமாய முதலெழுத்து ஞான சாதனத்திற்கு உறிதியாகவும் அதன் சார்பாய வேனைய எழுத்துக்கள் விவேக விருத்திக்குறிதியாகவும் உள்ளது கொண்டு மக்களது ஈடேற்றத்திற்கு ஆதாரமாயக் காரணக்கண்ணா யுள்ளதாம் என்பது கருத்து.

**(வி.)** கல்வி கற்றலில் கண்டு படித்தலே கல்வி, காணாது படித்தல் தெண்டக்கல்வியென முதுமொழிக் கூறலால், அகர உயிர் ஆதியாகத் தோன்றி அனந்தமெய் அசைவுற்றதும், அதன் பயனுஞ் செயலும் ஞானசாதகர்க்கு விளங்குமேயன்றி ஏனையோருக்கு விளங்காவாம். எண்ணென்பதை கணிதமாகவும் எழுத்தென்பதை இலக்கணமாகக் கொள்ளினும் கணிதமும் எழுத்தின்றியமையாவாம் இவ்விடம் ஏனை எழுத்தென்றமைந்துள்ளது கொண்டு மோனை எழுத்தாய முதலெழுத்தாம் அகரத்தையே ஓர் தனி முதற்பாகமாகவும் ஏனைய எழுத்துக்கள் யாவையும் ஓர் பாகமாகவும் வகுத்து, மக்களிவ்விரண்டையுங் கண்டு படிப்பரேல் உள்விழியாம் ஞானக்கண் உதயமாமென்று உயிர்நிலை வருக்க வீடேற்றத்தைக் கூறிய விரிவு. "ஊனக்கண்ணன்றென்றுளக் கண்ணளித்தபின், ஞானவநுபவ முரையென்று ரைத்தது" என்று ஞானிகள் வகுத்துள்ள ஆதாரங்கொண்டு ஆதியாய அகரவட்சரத்தின் சிறப்பையும் அஃது ஆதியாகத் தோன்றிய மதிப்பையும் அறத்துப்பால் சிறப்புப்பாயிரத்துட் கூறியுள்ளோம்.

**3. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத் திரண்டு**

**புண்ணுடையர் கல்லா தவர்.**

**(ப.)** கண்ணுடையரென்பவர் - ஞானக் கண்ணினையுடையோர் யாவரென்னில், கற்றோர் - கண்டு படித்தோரே யாவர், கல்லாதவர் - கண்டு கல்லாதவரோ, முகத்திரண்டு - முகத்தினிலிரண்டு, புண்ணுடையர் - புண்ணினை உடையேரென்பதற்கு ஒக்கும் என்பது பதம்.

**(பொ)** ஞானக்கண்ணினை உடையோர் யாவரென்னில் கண்டு படித்தோரே யாவர், கண்டு கல்லாதவரோ முகத்தினில் இரண்டு புண்ணினை உடையோர் என்பதற்கு ஒக்கும் என்பது பொழிப்பு

**(க.)** கற்றோரென்பது மேலோர், மேதாவியர், ஞானிகளென்னும் பொருளைத் தரும், ஆகலின் கற்ற வழியினின்று ஒழுகுவோரே கண்ணுடையாரும் கற்ற வழியினில்லாதோர் முகத்திலிரண்டு புண்ணுடையோரு மாவர் என்பது கருத்து.

**(வி.)** கல்லாதே கசடுற்றோரும் கற்றுங் கசடுற்றோரும் உள்ளாராதலின் அன்னோர் கற்றுங் கற்ற வழியில் நில்லாதது கொண்டு முகத்தில் இரண்டு கண்ணற்றப் புண்ணுடையாரென்றும் தாம் கற்ற வழியில் நின்ற மேலோரைக் கண்ணுடையா ரென்றுங் கூறியவற்றிற்குச் சார்பாய் "முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற

மூடர்காள் அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்" என்னும் உள்விழியினது சிறப்பையே ஊன்றி கற்றோரைக் கண்ணுடையாரென்று கூறிய விரிவாம்.

### 4. உவப்பத் தலைக் கூடியுள்ளப் பிரித் லனைத்தே புலவர் தொழில்.

**(ப.)** உவப்பத் - சகல பற்றுக்களற்று, தலைக்கூடி - பழம்பொருட் சேர்ந்து, யுள்ளப் பிரித - உண்மெய்ப்புறமெய்ப் பிரிதலாய, லனைத்தே - அவ்வளவும் புலவர் - கற்றமைந்தோரின், தொழில் - செயலென்னப்படு மென்பது பதம்.

**(பொ.)** சகல பற்றுக்களற்று பழம் பொருட் சேர்ந்து உண்மெய்ப்புற மெய்ப்பிரிதலாய அவ்வளவும் கற்றமைந்தோரின் செயலென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** புலவர் தொழில் யாதெனில் பற்றுக்களற்று புலன் ஐந்து ஒடிக்கிப் பழம் பொருள் தேர்ந்து இருபிறப்பாளராகப் பிரியும் அவ்வளவுமாம் என்பது கருத்து.

**(வி.)** காம வெகுளி மயக்கங்களால் உண்டாஞ் சகல பற்றுக்களுமற்று முதற் பொருளாம் மெய்ப்பொருட் கண்டு புளியம்பழம் போலும் ஓடுபோலும் உண்மெய்ப் புறமெய்ப்பிரிக்கும் ஐம்புலனடக்கி தென்புலத்தோராகும்

அனைத்தும் புலவரது தொழில் என்பது விரிவு.

**5. உடையார்முனில்லார்போ லேக்கற்றுங் கற்றார்**

**கடையரே கல்லா தவர்.**

**(ப.)** உடையார்மு - செல்வமுடையோர் முன்னிலையில், னில்லார் போலே - செல்வமில்லாதார் நிலையாதது போல, கற்றுங் - கல்வியைக் கசடறக் கற்று, கற்றார் - தேர்ந்தோர் முன்பு, கல்லாதார் - கற்றுத் தேராதவர்கள், கடையரே - விலகி நிற்போரே யாவரென்பது பதம்.

**(பொ.)** செல்வமுடையோர் முன்னிலையில் செல்வமில்லாதார் நிலையாதது போல கல்வியைக் கசடறக் கற்று தேர்ந்தோர் முன்பு கற்றுத் தேராதவர்கள் விலகி நிற்போரே யாவார் என்பது பொழிப்பு.

**(க.)** தனவந்தர்கள் முன்னிலையில் ஏழைகள் விலகி நிற்பது போல் கற்றவர்கள் முன்னிலையில் கல்லார் விலகியே நிற்பார்கள் என்பது கருத்து.

**(வி.)** ஈட்டி எட்டியவரையிற் பாயும் பணம் பாதாளம் வரையிலும் பாயுமென்னும் பழமொழிக்கு ஒக்க தனமுடையோன் மனிதனேயாயினும் மனிதன் மனிதனுக்கு அஞ்சாது அவனிடமுள்ள பணத்திற்கு அஞ்சி விலகி நிற்பதுபோல, கற்றவன் மனிதனேயாயினும் அவனுக்குள்ளக் கல்வியின் சிறப்பையும் அதன்

மகத்துவத்தையுங் கண்டு கல்லாதோர் விலகியே நிற்பார் என்பது விரிவு.

## 6. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்கு கற்றனைத் தூறு மறிவு.

**(ப.)** மணற்கேணி - மணற்பாங்குள்ள பூமியை, தொட்டனைத் - தூறு தோண்ட தோண்ட நீர்பெருகுவதுபோல், மாந்தர்க்கு - மக்களுக்கு, கற்றனைத்தூறு - கற்கக் கற்கப் பெருகும், மறிவு - ஞானமென்பது பதம்.

**(பொ.)** மணற்பாங்குள்ள பூமியை தோண்ட தோண்ட நீர் பெருகுவது போல மக்களுக்கு கற்கக் கற்கப் பெருகும் ஞானம் என்பது பொழிப்பு

**(க.)** மணலுள்ள பூமியிற் பள்ளம்பரிக்கப் பரிக்க நீர் சுறப்பதுபோல் விசாரிணைமிகுத்த மக்களுக்கு கல்வியை கற்கக்கற்க விவேகம் விருத்திப்பெறும் என்பது கருத்து.

**(வி.)** மக்களுக்குள் கல்வி கற்றலில் ஊக்கமும் விசாரிணையும் மிகுத்திருப்பார்களாயின் பேரானந்த ஞானோதயமாம் என்பதற்கு உபமானமாக மணலுள்ள பூமியைத் தோண்டத் தோண்ட நீர் சுரக்குமெனக் கூறிய விரிவாம்.

**7. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்**

**சாந்துணையுங் கல்லாத வாறு.**

**(ப.)** லென்னொருவன் - எவனொருவன், கல்லாதவாறு - கல்வியைக் கற்காதிருக்கின்றானோ , சாந்துணையுங் - அவன் மரணபரியந்தம் , யாதானு - ஏதொன்றை, நாடாமா - நாடினு மவைக் கிட்டாமலும், லூராமா - அதன் சுகத்தை யநுபவிக்காமலுமே போவன் என்பது பதம்.

**(பொ.)** எவனொருவன் கல்வியைக் கற்காதிருக்கின்றானோ அவன் மரண பரியந்தம் ஏதொன்றை நாடினும் அவைக் கிட்டாமலும் அதன் சுகத்தை அனுபவிக்காமலுமே போவன் என்பது பொழிப்பு.

**(க.)** கல்வியைக் கல்லாத ஒருவன் ஏதொன்றை நாடினும் அவன் மரிக்குமளவும் அதன் சுகத்தை அடையானென்பது கருத்து.

**(வி.)** கல்லாதவனது நிலை சொல்லாமலே அவன் செயலால் விளங்குகலால் ஏதொன்றை நாடினும் மரணபரியந்தம் அதன் சுகம் ஊராமலே போவன் என்பது விரிவு

**8. ஒருமெக்கட் டான்கற்ற கல்வி யொருவற்**

**கெழுமெயு மேமாய் புடைத்து.**

**(ப.)** ஒருமெக்கட் - எடுத்துள்ள வோர் தேகத்தில், டான் கற்ற - தான் கற்றுத் தேர்ந்த, கல்வி - கலை நூலின் பயனாயது, யொருவன் -

அவனது இகமெய் - எழுவகைப் பிறப்பையும், மேமாப் - களங்கமறத் தெரிந்துக் கொள்ளற்கு, புடைத்து - உடையதாகுமென்பது பதம். '

**(பொ.)** எடுத்துள்ள ஓர் தேகத்தில் தான் கற்றுத்தேர்ந்த கலை நூலின் பயனாயது அவனது எழுவகைப் பிறப்பையும் களங்கமறத் தெரிந்துக்கொள்ளற்கு உடையதாகும் என்பது பொழிப்பு.

**(க.)** மனிததேகம் எடுத்துள்ளோன் அத்தேகம் விழுமுன் கலை நூற்களைக் கற்றுத் தெளிவானாயின் அதன் பயனால் தான் தோற்றி தோற்றி மறைந்த யெழுவகைப் பிறவிகளையுங் கண்டடங்குவான் என்பது கருத்து.

**(வி.)** மனிதனென்னும் ஆறாவது தோற்றத்தில் தான் கற்றுத்தேர்ந்த கலை நூல் தெளிவால் தேவனென்னும் ஏழாவது தோற்றமுண்டாகி தான் தோன்றி தோன்றி மறைந்த எழுவகை பிறப்பையும் அறியத்தக்க ஏதுவினை உடையவனாவன் என்பது விரிவு.

**9. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு**

**காமுறுவர் கற்றறிந் தார்.**

**(ப.)** கற்றறிந்தார் - கல்வியைக் கற்றுத் தேர்ந்த மகா ஞானிகள், தாமின் புறுவ - தாங்களடைந்துள்ள பேரின்ப சுகத்தை, துலகின் புறக்கண்டு - மற்றும் உலக மக்களு மடையக் காணுவராயின், காமுறுவர் - அன்பு பாராட்டுவாரென்பது பதம்.

**(பொ.)** கல்வியைக் கற்றுத்தேர்ந்த மகா ஞானிகள் தாங்கள் அடைந்துள்ள பேரின்ப சுகத்தை மற்றும் உலக மக்களும் அடையக் காணுவார்களாயின் அன்பு பாராட்டுவாரென்பது பொழிப்பு.

**(க.)** கற்றுத் தேர்ந்த மேலோர்கள் தாங்களடைந்துள்ளப் பேரின்ப சுகத்தை ஏனைய உலகமக்களுங் கற்றுத்தேர்ந்தடைவார்களாயின் அவர்களது நட்பினை விரும்புவார்கள் என்பது கருத்து.

**(வி.)** கலை நூல் கற்று தேர்ந்த கியானிகளின் கருத்து யாதெனில் தாங்கள் கற்றடைந்த பேரின்ப சுகத்தை உலகமக்களுங் கற்று அவ்வின்பசுகத்தை அனுபவிப்பார்களாயின் அவர்கள் மீதன்பு பாராட்டுவதுடன் கூட்டுரவின் ஞான கருணாகர நட்பையும் பாராட்டுவார்கள் என்பது விரிவு.

**10. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு**

**மாடல்ல மற்ற யவை.**

**(ப.)** யொருவற்கு - ஒருவனுக்கு, கேடில் - என்று மழியாது, விழு - வேரூன்றி நிலைக்கும், செல்வம் - செல்வமாயது யாதெனில், கல்வி - கற்றுத்தேர்ந்த பொருளேயாம், மாடல்ல - பொன்னோடு, மற்ற - ஏனைய மண்பெண்யாவும், யவை - அழிந்து போமென்பது பதம்.

**(பொ.)** ஒருவனுக்கு என்று மழியாது வேரூன்றி நிலைக்கும் செல்வமாயது யாதெனில் கற்றுத் தேர்ந்த பொருளேயாம், பொன்னோடு ஏனைய மண்ணும் பெண்யாவும் அழிந்துபோம் என்பது பொழிப்பு

**(க.)** மண்பெண் பொன்னென்னும் யாவும் அழிந்துபோம் கற்றுத் தேர்ந்த கல்வியொன்றே அழியாது என்பது கருத்து.

**(வி.)** கற்றுத்தேர்ந்த கல்வியின் நல்வினைத் தொடர்ந்தே நிற்றலால் அஃதையழியாச்செல்வமென்றும் மற்றய மண்பெண் பொன்னென்பவைகள் யாவும் மாறுதலுற்றே வருகின்றபடியால் அவற்றை அழியுஞ் செல்வமென்றுங் கூறிய விரிவாம்.

## 45. கல்லாமெய்

இவற்றுள் கல்லாதேகியின் செயலையும், அவன் தன்னை நிரம்ப நோக்காக் கேட்டையும் படவேண்டி நேரும் அல்லலையும், விளக்குகின்றார்.

**1. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய**

**நூலின்றிக் கோட்டி கொளல்.**

**(ப.)** அரங்கின்றி - சதுரக்கோடுகளில்லாது, வட்டாடி - வட்டமாய பில்லையிட்டாடி யற்றே - முடிவது போல, நிரம்பிய - தன்னைத்தானறியக்கூடிய நூலின்றிக் - கலை நூற்களைக் கல்லாது,

கோட்டி தன்னைப்போற்றி, கொளல் - கொள்ளுவதை யொக்குமென்பது பதம்.

**(பொ.)** சதுரக்கோடுகளில்லாது வட்டமாய பில்லையிட்டாடி முடிவது போல கலைநூற்களைக் கல்லாது தன்னைப் போற்றிக் கொள்ளுவதை யொக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** ஒருவன் கலை நூற்களைக் கற்றுணராது கற்றவனைப்போல் தன்னைக காட்டிக் கொள்ளுவது எவ்வாறிருக்குமென்னில் கோடின்றி வட்டாடுங் கொள்கையை ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** கல்வியைக் கற்காமலும் அதனது அறநெறி ஒழுக்கத்தில் நடவாமலும் கற்ற வழியில் நில்லாமலும் உள்ளவன் தன்னை மேலோன் என பாராட்டிக் கொள்ளுவது எவ்வாறிருக்கின்றன வென்னில் சதுராங்கமோ, கோபுராங்கமோ விளை யாடுவதாயின் அதற்குத்தக்கக் கோடுகள் கீரி, வட்டென்னும் பில்லைகள் கொண்டு விளையாடி கெலுப்புத் தோற்பைக் கூறுவதியல்பாம். அத்தகைய வங்கமுமின்றி கோடுமின்றி வட்டாடி கெலித்தேன் என்று கூறுவதை ஒக்கும் என்பது விரிவு

**2. கல்லாதான் சொற்காமுறுதன் முலையிரண்டு**
**மில்லாதாள் பெண்காமுற் றற்று.**

**(ப.)**கல்லாதான் - கல்வியைக் கல்லாதவனுடைய , சொற்காமுறுதன் - மொழியை சபையோரேற்பதெவ்வாறிருக்கு மென்னின் முலையிரண்டு - இரண்டு ஸ்தன்னியங்களே காணப்படாத, பெண்காமுற்றற்று - பெண்ணினை இச்சியாதது போலாகுமென்பது பதம்.

**(பொ.)** கல்வியைக் கல்லாதவனுடைய மொழியை சபையோரேற்பது எவ்வாறிருக்குமென்னின் இரண்டு ஸ்தன்னியங்களே காணப்படாத பெண்ணினை இச்சியாதது போலாகும் என்பது பொழிப்பு

**(க.)** இரண்டுஸ்தன்னியமும் இல்லாப் பெண்ணினைப் புருஷர்கள் இச்சியாதது போல கல்வியைக் கற்காதவனுடைய மொழிகளை சபையோர்கள் மதியார் என்பது கருத்து.

**(வி.)** பெண்களுக்கு ஸ்தன்னியங்களே முதற் குறிப்பாகும் அதன் பயனோ பாலமுதூட்டி பாலரைப் பெருக்குவிப்பதாகும் அதன் பார்வையே புருஷரைக் காமுறுத்துவதாகும். அது காணாவிடத்து பெண்ணெனும் இச்சைப் புருஷர்களுக்குத் தோன்றாதது போல மனிதன் வாக்கினின்று எழுஉம் இன்சுவையற்றக் கல்லான் மொழியை சபையோர் நன்மொழியாக இச்சியார்கள் என்பது விரிவு.

**3. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்**

**சொல்லா திருக்கப் பெறின்.**

**(ப.)** கல்லாதவரு - கல்வியைக் கற்காதவர்களாயினும், கற்றாமுற் - கல்வியைக் கற்றோர் முன் சென்று, சொல்லா - யாதொரு வார்த்தையையும், திருக்க - பேசாதிருக்கும், பெறின் - நிலையைப் பெற்றமைவாராயின், நனி நல்லர் - மிக்க நல்லவராவரென்பது பதம்.

**(பொ)** கல்வியைக் கற்காதவர்களாயினும் கல்வியைக் கற்றோர் முன் சென்று யாதொரு வார்த்தையையும் பேசாதிருக்கும் நிலையைப் பெற்றமைவாராயின் மிக்க நல்லவராவர் என்பது பொழிப்பு.

**(க.)** கற்றுணர்ந்த பெரியோர்கள் முன்பு கல்லாத ஒருவன் சென்று கற்றவனைப்போல் பேசாதிருப்பதே மிக்க நல்லதாகும் என்பது கருத்து.

**(வி.)** கண்டு படித்துள்ள விவேகமிகுத் தோராங் கற்றோர் முன் சென்று கல்லாதார் பேசி இழுக்கடைவதியல்பாதலின் கல்லார் கற்றுணர்ந்தோர் முன்வாய் பேசாமலிருக்கப் பெருவதே மிக்க நல்லதாகுமென்பது விரிவு

**4. கல்லாதா னொட்பங் கழிய நன் றாயினுங்**

**கொள்ளா ரறிவுடை யார்.**

**(ப.)** கல்லாதா - கல்விக்கல்லாத வொருவனை,னொட்பங்கழிய - தங்களேவன் முடிய , நன்றாயினுங் - நல்ல மனிதனாக்க

கொள்ளினும், ரறிவுடையார் - விவேக மிகுத்தோர், கொள்ளார் - அவனை யோர் மனிதனாக வேற்கார்களென்பது பதம்.

**(பொ)** கல்விகல்லாத ஒருவனைத் தங்களேவல் மூடிய நல்ல மனிதனாகக் கொள்ளினும் விவேகமிகுத்தோர் அவனையோர் மனிதனாக ஏற்கார்கள் என்பது பொழிப்பு.

**(க)** கல்வியைக் கல்லாத ஓர் மனிதனை சில வேலையின் ஆளாக விரும்பி நல்லவனாகக் கொள்ளினும் கற்றுத் தெளிந்த விவேகிகள் கல்லாதவனை ஓர் மனிதனாக கொள்ளமாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** கற்றுணர்ந்த விவேகிகள் தங்கள் எவ்வாற்றானும் மானியென மேலாக்கிக் கொள்ளுவார்கள். கல்லாதவர்களோ தங்களை மிருகத்தினுங் கீழாக்கிக்கொள்ளுவது இயல்பாதலின் கல்லாதவனை மாடு, குதிரையைப் போன்று ஏவலுக்குரிய நல்ல மனிதனென பாவிக்கினும் கலை நூற் கற்றுணர்ந்தோர் அவனை மனிதனாக பாவிக்கமாட்டார்கள் என்பது விரிவு.

**5. கல்லாவொருவன் றகை மெய் தலைப்பெய்து**
**சொல்லாம் சோர்வு படும்.**

**(ப.)** கல்லாவொருவன் - கல்வியைக் கல்லாதோன் றகைமெய் - சிறந்த தேகியாகி, தலைப்பெய்து - முதல்வனாக விளங்கினும்,

சொல்லாட - கற்றோர் முன் பேசுவானாயின், சோர்வுபடும் - தாழ்த்தப்பட்டுப் போவானென்பது பதம்

**(பொ.)** கல்வியைக் கல்லாதோன் சிறந்த தேகியாகி முதலவனாக விளங்கினும் கற்றோர் முன் பேசுவானாயின் தாழ்த்தப்பட்டுப் போவான் என்பது பொழிப்பு.

**(க)** கல்லாதவன் வடிவுள்ள தேகமுடையவனாகியும், தன் முதல், தானிய முதலுள்ளவனாக இருந்துங் கற்றோர் முன் பேசுவானாயின் தாழ்ச்சியடைந்து போவான் என்பது கருத்து.

**(வி.)** கல்லாதவன் எவர்களிடத்து எம்மொழி பேசவேண்டுமென்றும், எக்காலத்தில் எம் மொழி கூறவேண்டுமென்னும் பகுத்தறிவு அற்றவனாதலின் அவன் எத்தகைய வடிவுள்ளவனாயினும், தன முதல், தானியமுதலுக்குத் தலைவனாக விளங்கினும் அவன் பேசும் வார்த்தையால் கற்றோர் முன் சோர்வடைந்தே போவான் என்பது விரிவு.

**6. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்**

**களரனையர் கல்லா தவர்.**

**(ப.)** உளரென்னு - தனது தேசமென்னும், மாத்திரைய - பற்றினையுடையோரா, ரல்லாற் - இல்லாதோர், பயவா - யாதொரு

பயனுமடையாததுபோல, கல்லாதவர் - கற்கும் பற்றில்லாதோர், களரனையர் - பாலை நிலத்திற் கொப்பாவரென்பது பதம்.

**(பொ.)** தனது தேசமென்னும் பற்றினை உடையோராய் இல்லாதோர் யாதொரு பயனுமடையாததுபோல, கற்கும் பற்றில்லாதோர் பாலை நிலத்திற்கு ஒப்பாவார் என்பது பொழிப்பு.

**(க.)** தனது தேசப்பற்றில்லாதோர் பயனடையாதது போலும், களர்நிலம் யாதோர் விளைவிற்கும் உதவாதது போலும், கற்கும் பற்றில்லாதோர் யாது விருத்திக்கும் பயனாகார்கள் என்பது கருத்து.

**(வி.)** தேசம் விருத்தி பெறும் மார்க்கமாகும் விவசாயமும் வித்தையும் அற்றிருப்போன் யாதொரு பயனுக்கும் உதவாதது போலும் பாலை நிலமானது யாதொரு தானிய விருத்திக்கும் பயனற்றது போலும் கல்வியைக் கற்றுத்தேராதோர் யாதோர் உபகாரத்திற்கும் உதவார் என்பது விரிவு.

**7. நுண்மா னுழை புலமில்லா னெழினல**

**மண்மாண் புனைபாவை யற்று.**

**(ப.)** மண்மாண் - பூமியை பண்படுத்தாது, புனைபாவை - அதன் பலனை, யற்று - அடையாதது போல, நுண்மா - நுண்ணிய கலை நூற்களைக் கற்று, னுழை புல - ஐம்புலநுகர்ச்சி, மில்லா -

அடையாதோர், னெழினல - சிறப்பாய பலனை யடையார்களென்பது பதம்.

**(பொ.)** பூமியைப் பண்படுத்தாது அதன் பலனை அடையாதது போல நுண்ணிய கலை நூற்களைக் கற்று ஐம்புல நுகர்ச்சி அடையாதோர் சிறப்பாய் பலனை அடையார்கள் என்பது பொழிப்பு

**(க.)** பூமிக்குடையோன் அதனை ஆழவுழுது பண்படுத்தியதன் பலனை அநுபவியாதது போல கலை நூற்களைக்கற்று ஐம்புலனாம் தென்புலன் டையாதோர் மனிதன் என்னுஞ்சிறப்பை ஏது வகையாலுமடையார்கள் என்பது கருத்து.

**(வி.)** உலக சிறப்பிற்கு மிக்க பூமியை உடையோனென்னும் பெயரை வைத்துக் கொண்டு அதனை சீர்திருத்தி ஆழவுழுது பண்படுத்தி அதன் பலனை அநுபவியாதது போல மனிதனெனத் தோன்றியுங் கலை நூற்களைக் கற்று தனதைம்புலனிலையையும் அதன் செயலையும் அறிந்தடங்காதோன் யாது சிறப்பையும் சுகத்தையும் அடையமாட்டான் என்பது விரிவு

**8. நல்லார்கட் பட்ட வறுமெயி னின்னாதே**

**கல்லார்கட் பட்ட திரு.**

**(ப.)** நல்லார்கட் - நல்லவர்களென்னுங் கற்றோராயினும், மறுமெயி - அவர்கள் பின்னெடுக்குந்தேகத்தில், பட்ட - படும், னின்னாதே -

துன்பத்தினும், கல்லார்கட் - கல்வியைக் கல்லாரெடுத்ததேகத்தின் கண், திரு - செல்வஞ்சேரினும், பட்ட - அதுகொண்டே துன்பப்பட்டுழல்வார்களென்பது பதம்.

**(பொ.)** நல்லவர்கள் என்னுங் கற்றோராயினும் அவர்கள் பின்னெடுக்குந் தேகத்தில் படும் துன்பத்தினும் கல்வியைக் கல்லாரெடுத்த தேகத்தின் கண் செல்வஞ்சேரினும் அது கொண்டே துன்பப்பட்டு உழல்வார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** கற்றும் நல்லோராகி தன்னை மறந்து மறுபிறவியுற்று துன்பத்தை அடைவதினும் கல்லாதான் எடுத்துள்ள தேகத்தின் கண்ணே செல்வமும் அடைவானாயின் அதுகொண்டே மீளா துன்பப்பட்டு உழலுவான் என்பது கருத்து.

**(வி)** கற்றுத்தேர்ந்து கல்விப்பொருள், செல்வப்பொருள் பெற்று சகலருக்கும் நல்லவர்களாக விளங்கி மறந்து, செத்து, மறுஜென்மம் புக்கித்துன்பத்தை அநுபவிப்பதினினும் கற்று கல்விப் பொருளை சேர்க்காது செல்வப்பொருளை சேர்ப்போர் அதுகொண்டே கெட்டவர்கள் என்றிழுக்குற்று எடுத்த தேகத்தின்கண்ணே பலவகைத் துன்பப்பட்டு உழல்வார்கள் என்பது விரிவு.

**9. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்பிறந்துங்**

**கற்றா ரனைத்திலர் பாடு**

**(ப.)** மேற்பிறந்தா - கல்வி, செல்வம் பெற்ற சிறந்த குடிப்பிறந்தோர், ராயினும் அனபோதினும், கல்லாதார் - கல்வியைக் கற்காதோரிழுக்கடைந்தே போவார்கள், கீழ் பிறந்தும் - கல்வி செல்வமற்ற தாழ்ந்த குடியிற் பிறந்தும், கற்றா - கல்வியைக்கற்றுத் தெளிவாராயின், ரனைத்திலர் - சகல மக்களாலும், பாடு - சிறப்பாடுடையோராவ ரென்பது பதம்.

**(பொ.)** கல்வி செல்வம் பெற்ற சிறந்த குடிப்பிறந்தோரானபோதினும் கல்வியைக் கற்காதோர் இழுக்கடைந்தே போவார்கள், கல்வி செல்வமற்ற தாழ்ந்த குடியிற் பிறந்தும் கல்வியைக் கற்றுத் தெளிவாராயின் சகல மக்களாலும் சிறப்பாடுடையோராவர் என்பது பொழிப்பு.

**(க.)** கல்வியும் செல்வமும் அடைந்த மேலாய குடும்பத்திற் பிறந்தோராயிருப்பினும் கல்வியைக் கல்லாராயின் தாழ்த்தப்பட்டே போவார்கள். கல்வி செல்வமற்ற எழிய குடும்பத்திற் பிறந்துங் கல்வியைக் கற்று தெளிவாராயின் சகலராலும் மேலோரெனக் கொண்டாடப்படுவார்கள் என்பது கருக்க

**(வி.)** சில வித்துவான்கள் மேற்பிறந்தார் என்பதை மேற்சாதியிற் பிறந்தோர் என்றும் கீழ்ப்பிறந்தார் என்பதைக் கீழ்ச்சாதியிற் பிறந்தோர் என்றும் உரை கூறுவர். அஃது எத்துணையும் பொருந்தாவாம். கல்வியுமற்று செல்வமுமற்று யாசிப்போனை மேற்சாதியோனென்றும்

கல்வியும் செல்வமுமுற்று சுகசீவியாக வாய வோனைக் கீழ்ச்சாதியோன் என்றும் வழங்கிவருவது இத்தேசத்தற்கால இயல்பாதலின் மேற் செய்யுளுக்கும் அன்னோர் உரைக்கும் நிறைபடாதது கண்டு திரண்ட செல்வமுமறிவு மிகுத்த மேலாய குடும்பத்திற் பிறந்தோராயினுங் கல்வியில்லாதோர் கனங் குலைவாரென்றும் செல்வமுமறிவுமற்றக் கீழாயக் குடும்பத்திற் பிறந்துங் கல்வியைக் கற்றுத் தெளிவாராயின் சகலராலுங் கனப்படுவார்கள் என்பது விரிவு.

பௌத்தர்களது நூலுக்கு பொய்யாய சாதி சம்மந்தவுரை கூறுவது இழுக்காம்.

**10. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்**
**கற்றாரோ டேனை யவர்.**

**(ப.)** விலங்கொடு - மிருகங்களுடன், மக்க - கல்லாமனுக்களும், ளனைய - பொருந்துவோராகலின், ரிலங்குநூல் - அறிவை வளர்க்குங் கலை நூற்களை கற்றாரோ - கற்றவர்களோ, டேனையவர் - அவர்களுக்கு வேறாகவே விளங்குவார்களென்பது பதம்.

**(பொ.)** மிருகங்களுடன் கல்லாமனுக்களும் பொருந்துவோராதலின் அறிவை வளர்க்குங் கலை நூற்களை கற்றவர்களோ அவர்களுக்கு வேறாகவே விளங்குவார்களென்பது பொழிப்பு

**(க.)** கல்வியைக் கண்டு கல்லாதார் மிருகத்திற்கு ஒப்பானவர்களாதலின் கண்டு கற்றோர் அவர்களை அணுகார் என்பது கருத்து.

**(வி.)** கல்வியைக் கற்று தெளிவுறா மக்களை மிருகத்திற்கு ஒப்புவமெயிட்டுக் கூறியவை யாதெனில் கல்லாதோர் மனுவுருவாகத் தோன்றியும் செயல்கள் யாவும் மிருகத்துக்கு ஒத்துளதைகண்ட நாயன் கற்றுணர்ந்த விவேகிகள் கல்லார்களது செயலுக்கு வேறாகவே விளங்குவார்கள் என்பது விரிவு

இச்செய்யுளில் கல்லாரை மிருகத்திற்கு ஒப்பிட்டும் கற்றோரை மனுக்களுக்கு ஒப்பிட்டுங் கூறியுளதால் இவ்வழிநூல் பொய்யாய சாதிசம்பந்த உரைகளுக்குப் பொருந்தா என்பதே துணிவு

## 46. கேள்வி

அதாவது கல்வியைக் கற்றலில் மாத்திரம் பயனில்லை, கற்ற மொழி முதல் யதார்த்தங்களையும் செய்யுள் முதல் யதார்த்தங்களையும் ஞான முதல் அந்தரார்த்தங்களையுங் கேட்டுத்தெளிய வேண்டியதே பயனாதலின் முதநூல் வழிநூல் சார்புநூற்களுக்குரியவர்களாம் சமணமுனிவர்களைக் கொண்டே கேட்டுத் தெளியுங் கேள்வியை விவரிக்கலானார்.

**1. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்**

**செல்வத்து ளெல்லாந் தலை.**

**(ப.)** செல்வத்துட் - தனப்பொருள் யாவற்றிற்கு மேலாய, செல்வஞ் - தனப்பொருள், செவிச்செல்வ - காதினாற் கேட்குங் கேள்விப்பொருளேயாம், மச்செல்வஞ் - அக்கேள்விப்பொருளாயது, செல்வத்து - சகலதனப்பொருட்கள், ளெல்லாந்தலை எல்லாவற்றிற்கும் முதலதாமென்பது பதம்.

**(பொ.)** தனப்பொருள் யாவற்றிற்கும் மேலாய தனப்பொருள், காதினாற் கேட்குங் கேள்விப் பொருளேயாம், அக்கேள்விப்பொருளாயது சகல தனப் பொருள் எல்லாவற்றிற்கும் முதலதாம் என்பது பொழிப்பு

**(க.)** தனச்செல்வம் யாவற்றிற்கும் மேலாய செல்வம், காதினாற் கேட்டுத் தெளியும் செவிச்செல்வமேயாம் என்பது கருத்து.

**(வி.)** தனச்செல்வம், தானியச்செல்வம், மக்கட்செல்வம், மனைச்செல்வம் யாவுங் கள்ளர்களாலுங் காலயேதுக்களாலு மொழிந்துபோம். செவியினாற் கேட்கும் பொருளோ எவ்வாற்றானும் ஒழியாது நித்திய சுகமாம் வரை தொடர்ந்தே பயன் தருதலால் சகல செல்வங்களிலும் மேலாய செல்வம் செவிச்செல்வமே என்பது விரிவு.

**2. செவிக்குண வில்லாத போழ்து சிறிது**

**வயிற்றுக்கு மீயப் படும்.**

**(ப.)** செவிக்குண - காதுகளுக்கு கேள்வி யுணவு, வில்லாத - கொடாத, போழ்து - காலத்தில், சிறிது - சொற்ப வுணவை, வயிற்றுக்கு - தன் வயிற்றிற்குமட்டும், மீயப்படும் - கொடுக்கப்படுவதால் யாது பயனென்பது பதம்.

**(பொ.)** காதுகளுக்கு கேள்வி உணவு கொடாத காலத்தில் சொற்ப உணவை தன் வயிற்றிற்கு மட்டும் கொடுக்கப்படுவதால் யாது பயன் என்பது பொழிப்பு.

**(க.)** நேரம் தவராது வயிற்றிற்கு மட்டிலும் உணவை ஊட்டி வளர்ப்போன் தன் செவிக்காய கேள்வி உணவை ஊட்டாத போது யாது பயன் என்பது கருத்து.

**(வி.)** இச்செய்யுளுள் வயிற்றை சுட்டி உண்ணும் உணவையும் செவியைச் சுட்டிக் கேள்வி உணவையும் வகுத்துள்ளக் காரணம் யாதெனில் காலந்தவராது வயிற்றிற்கு உணவை ஊட்டி உடலை வளர்ப்பவன், செவிக்குணவாம் கேள்வியில் முயன்று அறிவை வளர்க்காதவன் யாது பயனையும் அடையான் என்பது விரிவு.

**3. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி**

**னான்றாரோ டொப்பர் நிலத்து.**

**(ப.)** செவியுணவிற் - காதுக்குணவாம், கேள்வியுடையா - கேள்வியில் முயன்று நிற்போர், நிலத்து - பூமியின்கண், ரவியுணவி - உணவாக்கினியை யவித்துள்ள, னான்றாரோ - மகா ஞானிகளுக்கு, டொப்பர் - ஒப்பாவரென்பது பதம்.

**(பொ.)** காதுக்குணவாம் கேள்வியில் முயன்று நிற்போர் பூமியின் கண் உணவாக்கினியை அவித்துள்ள மகா ஞானிகளுக்கு - ஒப்பாவார் என்பது பொழிப்பு.

**(க.)** இப்பூமியின் கண் பசியாக்கினியை அவித்துள்ள பக்குவர்களுக்கு ஒப்பாவர் கேள்வியில் முயன்று நிற்போர்கள் என்பது கருத்து.

**(வி.)** கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் கல்விப் பொருளியலில் தெளிந்தோராம் முற்றும் உணர்ந்தோரே காமாக்கினி கோபாக்கினி பசியாக்கினி மூன்றினையும் அவித்த முத்தராகுவர் இவர்களையே தேவர்கள் என்றும் கூறப்படும். இவற்றுள் கேள்வியில் முயன்று நிற்போர் பசியாக்கினியை அவித்தப் பெரியோர்களுக்கு ஒப்பாவர் என்பது விரிவு.

**4. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்**

**கொற்கத்தி னூற்றாந் துணை.**

**(ப.)** கற்றிலனாயினுங் - கலை நூற்களை கல்லாதவனாயினும், கேட்க - அறநெறியையேனுங் கேட்ட, வஃதொருவன் - ஒருவனுக்கு, கொற்கத்தி - கொடிய வாபத்து காலத்தில், னூற்றாந்துணை - லோக வூற்று நீரிபோலுதவுமென்பது பதம்.

**(பொ.)** பொங்கலை நூற்களை கல்லாதவனாயினும் அறநெறியையேனுங் கேட்ட ஒருவனுக்கு கொடிய ஆபத்து காலத்தில் லோகவூற்று நீர்போலுதவும் என்பது பொழிப்பு.

**(க.)** கம்சனி நீராடு என்பதைக் கல்லாவிடினும் கேள்வியாலாடி சுகமடைவது இயல்பாதலின் கல்லாதவனுங் கேள்வியால் சுகமடைவான் என்பது கருத்து.

**(வி.)** உலோகத்தி நின்று ஊற்றுநீர் சனிக்கு மிடங்களில் குளிப்போர் சில கொய வியாதியினது துன்பம் நீங்கி சுகமடைதற்குத் துணையாயிருப்பது கற்றலின்றி சனி நீராடென்னுங் கேள்வியேயாதலின் கல்லாதவனாயினுங் கேள்வியில் முயலுவானாயின் கொடிய ஆபத்துக்களிலவை துணையாகும் என்பது விரிவு,

**5. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே**

**யொழுக்க முடையார்வாய் சொல்**

**(ப.)** இழுக்கலுடையுழி - நோயின் துன்பநிலை, யொழுக்கமுடையார் - சமணமுநிவர்களது வாய் சொல் - நாவினின் றெழூஉம் வார்த்தையைக் கொண்டு, யூற்றுக்கோ - உலோக ஹூற்றினால், லற்றே - நீங்குவதே கேள்வியின் பயனென்பது பதம்.

**(பொ.)** நோயின் துன்பநிலை சமணமுநிவர்களது நாவினின்று எழூஉம் வார்த்தையைக் கொண்டே உலோக ஊற்றினால் நீங்குவதே கேள்வியின் பயனென்பது பொழிப்பு.

**(க.)** ஒழுக்கமிகுத்த சமணமுநிவர்களின் வாய்மொழிக் கேட்டு அக்கேள்வியில் முயல்வோர் கல்வி கல்லாரேயாயினும் லோக ஊற்றின் பயனை ஒக்கப் பல துன்பங்களினின்றும் நீங்குவார்கள் என்பது கருத்து.

**(வி.)** "ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம் ஓதலி நன்றே வொழுக்க முடைமெய்" என்னும் பௌத்தர்களது நீதி நூலின்படி கல்வியை ஓதாதார்களாயினும் சமண முநிவர்களது வாய்மொழி கேட்டு அவ்வொழுக்கத்தில் நடப்போர் சனிநீர் என்னும் சனிக்கும் உலோக ஊற்றில் குளிப்போர் சகலவியாதிகளும் நீங்கி சுகம் பெறுவார்கள் என்னும் வாய்மொழி கேட்டு அவ்வழி நடந்தோர் சுகமடைவதுபோல கல்லாரேயாயினும் ஒழுக்க மிகுத்துள்ளோர் கேள்வியில் முயன்று ஒழுகுவாராயின் செவியாற் கேட்டலின் பயன் செவ்வனே

விளங்குவது கண்ட நாயன் கேட்டுத் தெளிதலின் செயலை விளங்கக் கூறிய விரிவு.

## 6. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு மான்ற பெருமெ தரும்.

**(ப.)** எனைத்தானு - எத்தகையோனாயினும், நல்லவை - நன்னீதிகளை, கேட்க - கேட்டுணர்வானாயின், வனைத்தானும் - கேட்ட அவ்வளவும், மான்ற - மேலாய, பெருமெதரும் - சிறப்பைக் கொடுக்கு மென்பது பதம்.

**(பொ)** எத்தகையோனாயினும் நன்னீதிகளைக் கேட்டுத் தெளிவானாயின் கேட்ட அவ்வளவும் மேலாய சிறப்பைக் கொடுக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** கல்லாதவனாயினும் சமணமுநிவர்களையடுத்து அறவுரைக் கேட்டுணர்வானாயின் அக்கேள்வியின் பயனே அவனை மேலாய சிறப்படையச் செய்விக்கும் என்பது கருத்து.

**(வி.)** பொய்யுரைகூறி பொருள் பறித்து உண்ணுங் காரிய குருக்களை அணுகாது மெய்யுரை கூறி மக்கள் ஈடேற்றத்தை நோக்கிநிற்கும் சமணமுநிவர்களாம் காரண குருக்களை அணுகுங் கல்லாதவனாயினும் அவர்களது அறநெறிக்கேள்வியால் சுகமுற்று மேலாய சிறப்பைப் பெருவான் என்பது விரிவு.

**7. பிழைத்துணர்ந்தும் பேதைமெ சொல்லா ரிழைத்துணர்ந்**

**தீண்டிய கேள்வி யவர்.**

**(ப.)** ரிழைத்துணர்ந் - ஒத்துவுணர்வால், தீண்டிய - பெற்ற, கேள்வியவர் - அறவுரைக்கேள்வியால், பிழைத்துணர்ந்தும் - தாங்கள் சுகசீவியம் பெறுவதுடன், பேதெமெ சொல்லா - அறிவிலி மொழிகளையும் பேசார்களென்பது பதம்.

**(பொ.)** ஒத்தவுணர்வால் பெற்ற அறவுரைக்கேள்வியால் தாங்கள் சுகசீவியம் பெறுவதுடன் அறிவிலி மொழி களையும் பேசார்கள் என்பது பொ

**(க.)** சமணமுநிவர்களது அறநெறி போதத்தைக் கேட்டுத் தெளிந்து சுகமுற்றவர்கள் ஒருவரையும் மனங்குன்றப் பேசார்கள் என்பது கருத்து.

**(வி.)** கல்லாதவர்களேயாயினும் மேலோர்களது அறநெறிகளைக் கேட்டுத் தெளிந்து சுகவாழ்க்கையிலிருப்பவர்கள் தங்கள் நாவினால் எவரையும் மனநோகப் பேசமாட்டார்கள் என்பது விரிவு.

பேதைமெயால் அறிவிலிகள் கொடுஞ்சொற்களைக் கூறினும் அறவுரைக் கேள்வியில் முயன்றோர் மறந்துங் கொடுஞ்சொற் கூறார்கள் என்பதேயாம்.

**8. கேட்பினுங் கேளா தகையவே கேள்வியாற்**

**றோட்கப் படாத செவி.**

**(ப.)** கேட்பினுங் - செவியாலறவுரைக் கேட்டும், கேளாதகையவே - கேட்காதவன் போலகலுவோன், கேள்வியாற் - அறவுரைகளால், றோட்கப்படாத - திறக்கப்படாத, செவி - புலனற்ற காதனென்னப்படு வானென்பது பதம்.

**(பொ.)** செவியாலறவுரைக் கேட்டும் கேட்காதவன் போல் அகலுவோன் அறவுரைகளால் திறக்கப்படாத புலனற்ற காத னென்னப்படுவான் என்பது பொழிப்பு.

**(க.)** சமணமுநிவர்களது சத்திய தன்மங்களைக் கேட்டுங் கேளாதவன் அறவுரையால் திறக்கப்படாத செவிப்புலன் அற்றவன் என்பது கருத்து.

**(வி.)** கேட்டல், சிந்தித்தல் தெளிதல் என்னும் மாற்றலுக்கு செவிபுலனே காரணமாகக் கொண்டு தென்புலத்தாராதல் இயல்பாதலின் அறவுரைக்கேட்டும் கேளாத செவிடு என்னப்படுதலால் அறவுரையால் திறக்கப்படாதகாதென்று கூறத்தகும் என்பது விரிவு,

**9. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய**

**வாயின ராத லரிது.**

**(ப.)** நுணங்கிய - நுட்பமாய, கேள்விய - அறநெறிகளை, ரல்லார் - கேட்டுத் தெளியாதோர், வணங்கிய - நெறுக்கமாய, வாயின - முத்திவழி செல்லுவோர், ராதலரிது - ஆவது கடினமாமென்பது பதம்,

**(பொ.)** நுட்பமாய அறநெறிகளைக் கேட்டுத் தெளியாதோர் முத்திவழி செல்லுவோர் ஆவது கடினமாம் என்பது பொழிப்பு

**(க.)** அறநெறிகளின் நுண்ணிய பொருட்களைக் கேட்டுத் தெளியாதோர் முத்தி வழியின் நெறுக்க பாதையிற் செல்லுவது அரிதாம் என்பது கருத்து.

**(வி.)** நிரயம் என்னுங் கேட்டிற்குப் போகும் வழி விசாலமாகவும், டம்பமாகவும், முத்தியென்னும் மோட்சத்திற்குப் போகும் வழி நெறுக்கமாகவும் ஒடுக்கமாகவுள்ளபடியால் அறநெறியாம் ஞானவிசாரிணைக் கேள்வியில் முயலாதோர் முத்திநெறியாம் ஒடுக்கமாய வாயல்வழி செல்லாதவர்களாவர் என்பது விரிவு.

### 10. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க ளவியினும் வாழினு மென்.

**(ப.)** செவியிற் - தங்கள் காதுகளால், சுவை யுணரா - அறநெறிகளைக் கேட்டு சுவைக்காது, வாயுணர்வின் - நாவினால் மட்டுஞ் சுவைத்துணரும், மாக்கள் - மனுக்கள், ளவியினும் -

கெட்டாலும், வாழினு - வாழ்ந்தாலும், மென் - என்னாவாமென்பது பதம்.

**(பொ)** தங்கள் காதுகளால் அறநெறிகளைக் கேட்டு சுவைக்காது நாவினால் மட்டுஞ் சுவைத்துணரும் மனுக்கள் கெட்டாலும் வாழ்ந்தாலும் என்னாவாம் என்பது பொழிப்பு

**(க.)** அறுவகை யுணவை நாவினால் உண்டு சுவைத்து செவியினாற் கேட்டுக் தெளியும் ஞான அமுதினை சுவைக்காத மனுக்கள் வாழ்ந்தாலுமென்ன, கெட்டாலும் என்ன என்பது கருத்து.

**(வி.)** கேட்குஞ் செவியே கேட்டை விலக்குமென்னும் முதுமொழிக்கு ஒக்கும் விசாரிணையாம் அறநெறிக்கேள்வியால் ஞான அமுதினை சுவைத்து பிறவியின் துக்கங்களை ஒழித்து சதானந்தத்தில் நிலைப்பது அதுபவமுங் காட்சியமேயாதலின் கேட்டலென்னும் செவியுணவை சுவைக்காது நாவினால் மட்டும் அறுவகை உணவின் சுவையை உண்டு களிக்கும் மக்கள் உலகத்தில் வாழ்ந்தாலும் என்ன, கெட்டாலும் என்ன என்பது விரிவு.

## 47. அறிவுடைமெய்

அரசர்கள் கல்விக்கேள்வியில் சிறந்த போதினும் அந்தரங்கம் பயிரங்கமென்னும் உண்மெய்ப்புறமெய்யினை அறியும் அறிவுடை மெய்யனாதலே சிறப்பென்றுணர்ந்த நாயன், சதுரங்க சேனையால்

தன்னரசைக் காப்பதினுந் தானே தானுண்மெய் அறிந்து தன்னைக் காப்பதற்காதாரமாம்
அறிவை வளர்க்கவேண்டிய வழிவகைகளை விளக்கலானார்.

## 1. அறிவற்றல் காக்குங் கருவி செறுவார்க்கு முள்ளழிக்கலாகா வரண்.

**(ப.)** அறிவற்றல் - தனதறிவை மயங்கவிடாது, காக்கும் - விருத்தி செய்யுங், கருவி - கல்விக்கேள்வியாம் ஆயுதங்களை யுடையவரசனது, வரண் - அரண்மனையை, செறுவார்க்கு - சத்துருக்களாய வேற்றரசர், முள்ளழிக்க - உட்பிரவேசித்துக் கெடுத்தற்கு, லாகா - ஒருபோது மாகா வென்பது பதம்.

**(பொ.)** தன்னறிவை மயங்கவிடாது விருத்தி செய்யும் கல்விக் கேள்வியாம் ஆயுதங்களையுடைய அரசனது அரண்மனையை சத்துருக்களாய, வேற்றரசர் உட்பிரவேசித்துக் கெடுத்தற்கு ஒருபோதும் ஆகா என்பது பொழிப்பு.

**(க.)** கல்வி கேள்வி மிகுத்து அறிவை வளர்த்துள்ள அரசரது அரண்மனையை வேற்றரசர் எளிதிற் கைப்பற்றலாகாது என்பது கருத்து.

**(வி.)** அரசன் தன் கல்விக்கேள்விகளாம் ஆயுதங்களைக்கொண்டு அறிவை விருத்தி செய்துக் கொள்ளுவானாயின் அவனது

அரண்மனையை வேற்றரசர் கைப்பற்றி ஆளுவதற்கிடங்கொட மாட்டான் என்னும் அரசர்காய அறிவின் பயனை விளக்கிய விரிவு.

## 2. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரி நன்றின் பாலுயப்ப தறிவு.

**(ப.)** சென்ற விடத்தாற் - தான் வேற்றரசரிடம் சென்றபோது, தீதொரீஇ - தனக்குள்ளெழுங்கொடுஞ் செயலை, செலவிடா - காட்டாதகல்வதே, நன்றின்பா - பிரிதியுபகாரங் கருதி, லுய்ப்ப - உணர்ந்த, தறிவு - அறிவினது பயனாமென்பது பதம்.

**(பொ.)** தான் வேற்றரசரிடஞ் சென்ற போது தனக்குள் எழுங்கொடுஞ் செயலைக் காட்டாது அகல்வதே பிரிதியுபகாரங் கருதியுணர்ந்த அறிவினது பயனாம் என்பது பொழிப்பு.

**(க.)** வேற்றரசரிடஞ் சென்றபோது அவர்கள் நன்றியை ஏற்று தனது தீய குணங்களை எழவிடாது பிரிதி நன்றியளிப்பதே அறிவின் விருத்தி என்பது கருத்து.

**(வி.)** ஓரரசன் வேற்றரசனிடஞ் சென்றபோது அவனால் அன்புடன் வரவேற்கப் பெற்று அவன் சுகவாழ்க்கையை தன் சுகம்போற் கருதாது பொறாமெக்கொள்ளுவது அறிவின் குறைவென்றும் சென்றவிடத்து அன்பு பாராட்டிப் பிரிதி நன்றியைக் கருதி நிற்பதே அறிவின் விருத்தி பேறாம் என்பது விரிவு.

**3. எப்பொருள் யார்யார்வாய் கேட்பினு மப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

**(ப.)** எப்பொருள் - கண்டடைய வேண்டிய பொருளை, யார் யார் வாய் - எவரெவரிடஞ் சென்று, கேட்பினு - கேட்ட போதினும் விளங்காவாம், மப்பொருள் - அப்பொருளை, மெய்ப்பொருள் - தன்னிற்றானே, காண்பதறிவு - கண்டுக்கொள்வதே பேரறிவாமென்பது பதம்.

**(பொ.)** கண்டடைய வேண்டிய பொருளை எவரெவரிடஞ் சென்று கேட்ட போதினும் விளங்காவாம், அப்பொருளை தன்னிற்றானே கண்டுக்கொள்வதே பேரறிவாம் என்பது பொழிப்பு.

**(க.)** அறிவின் விருத்தியால் கண்டடைய வேண்டிய பொருளை தன்னிற்றானே கண்டடையவேண்டுமே அன்றி ஏனையோரால் கண்டடையலாகாது என்பது கருத்து.

**(வி.)** பேரறிவினால் ஆய விருத்தியின் பயன் யாதெனில் மெய்ப் பொருளைத் தன்னிற்றானே கண்டடைவதாகும். அங்ஙனமின்றி யாவர்பாற் சென்ற போதினும், கேட்ட போதினும் விளங்கா நிற்பது அறிவின் குறைவும் மெய்யுள் மெய்ப்பொருளை கண்டடைவதே அறிவின் விருத்தியாம் என்பது விரிவு.

**4. எண்பொருளவாகச் செலச்சொல்லி தான் பிறர்வாய்**

**நுண்பொருள் காண்ப தறிவு.**

**(ப.)** எண்பொருள் - எண்ணும் பொருளெது, வாகச் - அதுவாக, செலச்சொல்லி - கண்டுரை யாடுவதுடன், தான் பிறர்வாய் - தானும் அந்நியர் நாவினின்று எழூஉம், நுண்பொருள் - அரிய பொருளை, காண்ப - கண்டுத் தெளிவதே, தறிவு - பேரறிவாம் என்பது பதம்.

**(பொ.)** எண்ணும் பொருளெது அதுவாகக்கண்டு உரையாடுவதுடன் தானும் அன்னியர் நாவினின்று எழூஉம் அரிய பொருளைக் கண்டுத் தெளிவதே பேரறிவாம் என்பது பொழிப்பு.

**(க.)** பொருளெதுவது என்று தன்னிற்றானே கண்டு உரையாடுவதோடு அன்னியர் ஓதும் அரிபொருளை ஆய்ந்தமைவதே அறிவாம் என்பது கருத்து.

**(வி.)** பொருளென்றாலெப் பொருளென்றும், அது என்றால் எதுவென்றும், அவர் என்றால் எவரென்றும் எதிர்மொழி எழுவதே பப்பொருளெது என்றாராயுமிடத்து எண்ணும் பொருளே அதுவாதலின் அவற்றை மறைக்கும் முக்குற்றங்களை அகற்றும் நுண்ணிய பொருளைக் கேட்டதுவாக நிற்றலே அறிவாம் என்பது விரிவு.

**5. உலகந் தழிய தொட்ட மலர்தலுங்**

**கூம்பலு நிலை தறிவு.**

**(ப.)** உலகந் - உலகத்தில் தோன்றுவதற்கும், தழீஇய - கெடுவதற்கும், தொட்ட - ஒப்பாக, மலர்தலுங் - விரிதலும், கூம்பலு - குவிதலும், மில்ல - இல்லாததே, தறிவு - அறிவென்னப்படுமென்பது பதம்.

**(பொ.)** உலகத்தில் தோன்றுவதற்கும் கெடுவதற்கு ஒப்பாக விரிதலும் குவிதலும் இல்லாததே அறிவென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** உலகத்தில் தோன்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்குக்க்ஷணம் அழிந்து கொண்டே போவது இயல்பாதலின் கண்டறியும் அறிவோ அவ்வகை அழியாது என்பது கருத்து.

**(வி.)** நினைத்தாலும் மறத்தலும் நிற்றலும் விரிதலும் நிதானித்தலும் கெடுதலுமாய எண்ணங்கள் யாவும் அறிவென்னும் பொருளைப் பெறாவாம். அஃது உலகத்தில் தோன்றி தோன்றி க்ஷணத்திற்கு க்ஷணம் அழிந்து கொண்டே போகும் பொருட்களுக்கு ஒப்பனையாகும் அத்தகையென்றுங் கெடாது எண்ணு மெய்ப்பொருள் விரித்தலும் குவிதலும் அற்று அதுவாய் நிற்பது அறிவென்னப்படும் என்பது விரிவு.

**6. எவ்வ துறைவ துலக முலகத்தோ**

**டவ்வ துறைவ தறிவு.**

**(ப.)** துலக - உலக மக்கள், துறைவ - அடையும் விருத்தி, எவ்வ - எவ்வெவ்வகையோ, டவ்வ - அவ்வவ்வகையே, முலகத்தோ - உலகத்தோடு தறிவு - அறிவும், துறைவ - விருத்தியடையுமென்பது பதம்.

**(பொ.)** உலகமக்களடையும் விருத்தியெவ்வகையோ அவ்வகையே உலகத்தோடு அறிவும் விருத்தியுடையும் என்பது பொழிப்பு.

**(க.)** உலக மக்கள் எவ்வகையால் விருத்தி அடைகின்றனரோ அவ்வகையே உலகத்தில் அறிவும் விருத்தியடையும் என்பது கருத்து.

**(வி.)** கல்வி விருத்தியிலோ கைத்தொழில் விருத்தியிலோ சுயக்கியான விருத்தியிலோ உலகமக்கள் எவ்வகையாய விருத்தியடைகின்றனரோ அவ்வவ்வகையே உலகத்தில் அறிவும் விருத்தியடையும் என்பது விரிவு

**7. அறிவுடைய ராவ தறிவா தறிவிலா**

**ரஃதறி கல்லா தவர்.**

**(ப.)** அறிவுடையவராவ - அறிவின் விருத்தியை யடையவேண்டுவோர், தறிவா - அவ்வறிவின் விருத்தியை யறிவர், ரஃதறி - அவ்வறிவின் விருத்தியையுங் குறைவையும், கல்லாதவர் - கலை நூற்களைக் கல்லாதவர், ரறிவிலா - அறியார்களென்பது பதம்.

**(பொ.)** அறிவின் விருத்தியை அடைய வேண்டுவோர் அறிவின் விருத்தியை அறிவர் அவ்வறிவின் விருத்தியையுங் குறைவையுங்கலை நூற் கல்லாதவரறியார் என்பது பொழிப்பு.

**(க.)** கலை நூற்களைக் கல்லாதோர் அறிவின் விருத்தி அறியார். கலைநூற் கற்று அறிவின் விருத்தியை அடைய வேண்டியவர்கள் அவ்வறிவின் விருத்தியை அறிவார்கள் என்பது கருத்து.

**(வி.)** கலை நூற்களை கற்றுணராதவர்கள் அறிவினது விருத்தியையும் அதன் குறைவையும் அறியார்கள். கலை நூற்களைக் கற்று அறிவின் விருத்தியடைய வேண்டுவோர் அவ்வறிவின் விருத்தியையும் அறிவின் குறைவையுந் தங்களுக்குத் தாங்களே அறிந்துக் கொள்ளுவதுடன் ஏனையோர் அறிவின் விருத்தியையும் குறைவையும் எளிதில் அறிந்துக் கொள்ளுவார்கள் என்பது விரிவு.

**8. அஞ்சுவ தஞ்சாமெ பேதைமெ யஞ்சுவ**
**தஞ்ச லறிவார் தொழில்.**

**(ப.)** அஞ்சுவ - அடங்கவேண்டிய காலமறிந்து, தஞ்சாமே - அடங்காதவன், பேதைமெ - அறிவற்றவனேயாகும், வறிவார் - அறிவின் விருத்தியுள்ளவர்களோ, தஞ்ச - அடங்கவேண்டிய காலமறிந்து, யஞ்சுவ - அடங்குவதே, தொழில் - அவர்களது செயலாகுமென்பது பதம்.

**(பொ.)** அடங்கவேண்டிய காலமறிந்து அடங்காதவன் அறிவற்ற வனேயாகும் அறிவின் விருத்தியுள்ளவர்களோ அடங்க வேண்டிய காலமறிந்து அடங்குவதே அவர்களது செயலாகும் என்பது பொழிப்பு. -

**(க.)** அறிவினது விருத்தியே அற்றவர்கள் அடங்கவேண்டிய க அடங்கவேண்டிய காலமறிந்து அடங்கமாட்டார்கள். அறிவின் விருத்தியை உடையவர்களோ அடங்க வேண்டிய காலமறிந்து அடங்கிக் கொள்ளுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** மனிதனுக்குள்ள அறிவென்னும் விசேஷித்தச் செயலை யறியாதவன் அடங்காச் செயலால் வருந் தீவினைகளை அனுபவித்தே தீருவன் அறிவென்னும் விசேஷித்தச் செயலை அறிந்தவனோ அடங்க வேண்டிய காலங்களிலடங்கி வருந் தீவினைகளை விலக்கிக்கொள்ளுவான் என்பது விரிவு.

**9. எதிரநாக் காக்கு மறிவினார்க் கில்லை**
**யதிர வருவதோர் நோய்.**

**(ப.)** எதிரநாக்காக்கு - வருங்காலச் செயல்களை யறிந்து காத்துக்கொள்ளும், மறிவினார்க் - அறிவின் விருத்தியுள்ளோர்க்கு, யதிரவருவ . நடுங்கத்தக்கதாகவரும், தோர் நோய் - ஓர் துக்கமானது, கில்லை - வராதென்பது பதம்.

**(பொ.)** வருங்காலச் செயல்களை அறிந்துக் காத்துக்கொள்ளும் அறிவின் விருத்தியுள்ளோர்க்கு நடுங்கத்தக்கதாகவரும் ஓர் துக்கமானது வராது என்பது
பொழிப்பு.

**(க.)** அறிவின் விருத்தியால் எதிர்காலச் செயல்களைத் தெரிந்து நடப்போர்க்கு தேகம் அதிரத்தக்க யாதாமொரு துன்பமும் அணுகாது என்பது கருத்து.

**(வி.)** அறிவிலார் தனக்கு வரும் துன்பங்களைத் தெரிந்தும் அனுபவிப்பது போல அறிவின் விருத்தியுள்ளோர் செல்காலம் நிகழ்காலம் வருங்கால மூன்றினையும் உணர்ந்து தங்களுக்கினி எதிர்காலத்து வருந்துன்பங்களை அணுகாதுகாத்துக் கொள்ளுவார்கள் என்பது விரிவு.

**10. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா**

**ரென்னுடைய ரேனு மிலர்.**

**(ப.)** அறிவுடையா - அறிவின் விருத்தியை யுடையவர்கள், ரெல்லாமுடையா - சகல பொருட்களுமுடையவர்களாக விளங்குவார்கள், ரறிவிலா - அறிவின் விருத்தி இல்லாதவர்களோ, ரென்னுடையரேனு - எத்தகைத்தாய பொருளுடையவர்களே

ஆயினும், மிலர் - இல்லாதவர்களாகவே விளங்குவார்கள் என்பது பதம்.

**(பொ)** அறிவின் விருத்தியை உடையவர்கள் சகல பொருட்களும் உடையவர்களாக விளங்குவார்கள். அறிவின் விருத்தி இல்லாதவர்களோ எத்தகையத்தாயப் பொருளுடையவர்களே ஆயினும் இல்லாதவர்களாகவே விளங்குவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** அறிவுள்ளவர் பால் யாது பொருளில்லாவிடினும் சகல பொருட்களும் உள்ளவர்களாகவே விளங்குவார்கள். அறிவில்ல பொருட்களிருப்பினும் இல்லாதவர்களாகவே விளங்குவார்கள் என்பது கருத்து.

**(வி.)** அறிவினது விருத்தியையுடையவரிடத்து சொற்பப் பொருட்களிருப்பினும் அவற்றை மேலும் மேலும் விருத்தி செய்து சகலருக்கும் உபகாரிகளாக விளங்குகிறபடியால் எல்லாப் பொருளும் உடையவர்கள் என்றும் அறிவினது விருத்தியில்லாரிடத்து சகல பொருட்களுமிருந்தும் அவைகளை விருத்தி செய்வதற்கு ஏதுவில்லாமலும் சகலருக்கும் உபகாரிகளாகாமலும் இருக்கின்றபடியால் யாதும் இல்லாதவர்கள் என்றுங் கூறப்படும் என்பது விரிவு.

## 48. குற்றங்கடிதல்

அரசனானவன் தன் தேசத்தையும் தேசமக்களையும் அடக்கி ஆண்டு ரட்சிப்பவனாகலின் முதலாவது தனது குற்றங்களையுஞ் செயலையும் ஆண்டு அடக்கி தேசத்தையும் தேச மக்களையும் சீர்திருத்தி ஆளவேண்டியவற்றில் அறிவின் பயனை விளக்குமாறு குற்றங் கடிதலை தொடர்ந்தே விவரிக்கலானார்.

**1. செருக்குஞ் சினமுஞ் சிறுமெயு மில்லார்**
**பெருக்கம் பெருமித நீத்து.**

**(ப.)** செருக்குஞ் - அகங்கரிப்பும், சினமுஞ் - கோபமும், சிறுமெயு - சோம்பநிலையு,மில்லார் - இல்லாததுடன், பெருமிக - சிற்றின்பப் பெருக்கையும், நீத்து - அகற்றி நிற்போருக்கு, பெருக்கம் - சுக பெருக்க முண்டாமென்பது பதம்.

**(பொ.)** அகங்கரிப்பும் கோபமும் சோம்ப நிலையும் அல்லாததுடன் சிற்றின்பப் பெருக்கையும் அகற்றி நிற்போருக்கு சுகபெருக்கம் உண்டாம் என்பது பொழிப்பு.

**(க.)** அகங்கரிப்பும், கோபம், சோம்பல் முதலியவைகளை அகற்றி நிற்பதுடன் காமிய பெருக்கத்தையும் ஒழித்துள்ள வரயன் சுகநிலை அடைவான் என்பது கருத்து.

**(வி.)** தனக்குள்ளெழும் அகங்காரக் குற்றத்தை அகற்றியும் கோபகுற்றத்தை அகற்றியும் சோம்பற்குற்றத்தை

அகற்றியுமிருப்பதுடன் பெருமின்பமாகத் தோற்றிக்கொடுக்கும் காமத்தையும் ஒழித்து நிற்குமரசன் சகல சுகமும் பெருக வாழ்வான் என்பது விரிவு.

**2. இவறலு மாண்பிறந்த மானமு மாணா**
**வுவகையு மேத மிறைக்கு.**

**(ப.)** இவறலு - மறதியும், மாண்பிறந்த - ஆண்மெயற்ற, மானமு - வலிவும், மாணா - மீளாத வுவகையு - களியாட்டும், மிறைக்கு - அரசனுக்கு, மேத குற்றமாமென்பது பதம்.

**(பொ.)** மறதியும் ஆண்மெயற்ற வலிவும் மீளாத களியாட்டும் அரசனுக்குக் குற்றமாம் என்பது பொழிப்பு.

**(க.)** மறத்தலும் வீரங்குன்றுதலும் ஆனந்தவிளையாட்டிலேயே சுகத்தைவைத்தலுமாயச் செயல்களே அரசனுக்குக் குற்றமாம் என்பது கருத்து.

**(வி.)** ஒன்றை ஆலோசித்து அவற்றை அப்போதைகப்போதே மறத்தலும், போக இச்சையால் தேகத்தைக் குன்றச் செய்துக் கொள்ளலும், வீண் விளையாட்டுகளிலேயே காலத்தைக் கழித்தலும் அரசனுக்குக் குற்றம் என்பது விரிவு.

**3. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்**

**கொள்வர் பழிநாணு வார்.**

**(ப.)** தினைத்துணையாங் - தினையரிசிக்கொப்பாய சிறிய குற்றத்தைக் காணினும், பழிநாணுவார் - குற்றத்திற்கஞ்சி நடப்போரவற்றை, பனைத் துணையாக் - பனைமரத்தை யொப்பப்பெருங் குற்றமாக, கொள்வா - ஏற்பரென்பது பதம்.

**(பொ.)** தினையரிசிக்கு ஒப்பாய சிறிய குற்றத்தைக் காணினும் குற்றத்திற்கஞ்சி நடப்போர் அவற்றை பனைமரத்தை ஒப்பப்பெருங் குற்றமாக ஏற்பர் என்பது பொழிப்பு.

**(க.)** குற்றங்கள் யாவற்றிற்கும் அஞ்சி நடக்கும் மேலோர் சிறிய குற்றத்தைக் காணினும் அவற்றை பெருங்குற்றமாகவே பாவிப்பார் என்பது கருத்து.

**(வி.)** தன்னாலுண்டாங் குற்றங்களையும் பிறராலுண்டாங் குற்றங்களையும் அறிந்தடங்கிய பெரியோர்கள் அரயன் பால் தினையளவாய சிறிய குற்றத்தைக் காணினும் பனையளவாய பெருங்குற்றமாகக் கருதுவார்கள் என்பது விரிவு.

**4. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே**

**யற்றத் தருஉம் பகை.**

**(ப.)** குற்றமே - பலவகையாயக் குற்றங்களையே, பொருளாக - பெருந்தனமாக, காக்க - சேர்த்துள்ள வரசனுக்கு குற்றமே -

அக்குற்றங்களே, யற்றத் - வேற்றரசரது, பகை - விரோதத்தை, தரூஉம் - உண்டு செய்து விடுமென்பது பதம்.

**(பொ)** பலவகையாயக் குற்றங்களையே பெருந்தனமாக சேர்த்துள்ள அரசனுக்கு அக்குற்றங்களே வேற்றரசரது விரோதத்தை உண்டு செய்துவிடும் என்பது பொழிப்பு

**(க.)** செல்வத்தை சேர்ப்பதுபோல் அரசன் பலவகையாயக் குற்றங்களையே சேர்த்து வருவானாயின் அக்குற்றங்களால் வேற்றரசர் பகைவந்தே நேர்ந்து போம் என்பது கருத்து.

**(வி.)** அரசன் தனது வீணாய களிவிளையாட்டின் நோக்கத்தால் வேற்றரசர் ஓலைகளைக் கவனியாதும் தனது காமிய இச்சையின் பெருக்கத்தால் வேற்றரசர் தூதுவர்களுக்குத் தக்க உத்தரங் கூறாமலும் தனது கோபப் பெருக்கத்தால் தூதுவரைச் சீறிச் சினத்தலாலும் வேற்றரசர் பகைதானே விளைவதற்கு ஏதுண்டாதலால் குற்றங்களை பொருளாகக் கொண்ட அரசனுக்கு வேற்றரசர் பகைத்தானே தோன்றும் என்பது விரிவு.

**5. வருமுன்னர் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும்.**

**(ப.)** வருமுன்னர் - தன் குற்றத்தால் கேடு வருதற்கு முன்னரே, காவாதான் - அவற்றைத் தடுத்துக் கொள்ளாத வரசனது, வாழ்க்கை -

குடி நலமானது, யெரிமுன்னர் - நெருப்பினது முன்னில், வைத்தூறு போல - இட்டக் கூளங்களைப் போல, கெடும் - அழிந்துபோமென்பது பதம்.

**(பொ.)** தன் குற்றத்தால் கேடு வருதற்கு முன்னரே அவற்றைத்தடுத்துக் கொள்ளாத அரசனது குடி நலமானது நெருப்பினது முன்னிலிட்டக் கூளங்களைப் போலழிந்து போம் என்பது பொழிப்பு.

**(க.)** கேடு வருமென்று அறிந்தும் அவற்றைத் தடுத்துக்கொள்ளாத வரசனது வாழ்க்கை சுகமானது தீயின் முன்னிட்டக் கூளங்களைப் போல் எரிந்து போம் என்பது கருத்து.

**(வி.)** நெருப்பினது முன்னிலிட்ட சிறுச்செடி கூளங்கள் எரிந்து பூண்டற்று போவதுபோல அரசன் தனது குற்றத்தால் தோன்றி எழூஉங் கேடுகள் தீதென்று அறிந்தும் அவற்றைத் தடுத்துக் கொள்ளாது போவானாயின் தனது வாழ்க்கை சுகமும் ஒழிந்து குடும்பமும் அழிந்து கேடடைவான் என்பது விரிவு.

**6. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி**
**னென்குற்ற மாகு மிறைக்கு.**

**(ப.)** தன்குற்ற - தனது கொடுஞ் செயல்களை, நீக்கி - அகற்றி, பிறர்குற்றங் - அன்னியர்களது கொடுஞ்செயல்களை, காண்கிற்பி -

பின்பு நோக்குவதாயின், மிறைக்கு - அரசனுக்கு, னென்குற்றமாகு - ஏது பழியுண்டாமென்பது பதம்.

**(பொ.)** தனது கொடுஞ்செயல்களை அகற்றி அன்னியர்களது கொடுஞ் செயல்களை பின்பு நோக்குவதாயின் அரசனுக்கு ஏது பழியுண்டாம் என்பது பொழிப்பு.

**(க.)** அரசன் தனது குற்றச்செயல்களை அகற்றிவிட்டு பின்பு பிறர் குற்றச்செயல்களை அகற்ற முயலுவானாயின் யாதொரு பழியும் வாரா என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தனது ஆளுகையில் தானோர் குற்றச்செயல்களுக்கு ஆளாகாது அகற்றி பிறரது குற்றங்களைக் கண்டு தெண்டித்தும் அகற்றுவானாயின் யாதொரு பழி பாவங்களும் நேராது என்பது விரிவு.

**7. செயற்பால செய்யா திவறியான் செய்வ**
**முயற்பால தன்றி கெடும்.**

**(ப.)** செயற்பால - குற்றமற செய்ய வேண்டிய காரியங்களை, செயயா - செய்யாத, திவறியான் - முன்னாலோசனையற்றவன் செய்வ - செய்யும்படியானக் காரியங்கள் யாவும், முயற்பாலதன்றி - ஒருவர் கெடுப்பாரின்றி, கெடும் - தானே யழிந்து போமென்பது பதம்.

**(பொ.)** குற்றமறச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாத முன்னாலோசனை அற்றவன் செய்யும்படியானக் காரியங்கள் யாவும் ஒருவர் கெடுப்பாரின்றி தானே அழிந்துபோம் என்பது பொழிப்பு.

**(க.)** அரசனானவன் ஏதொரு குற்றமும் அணுகாது முன்பு ஆலோசித்து ஓர் காரியத்தை நடத்தாவிடின் அஃது ஒருவரால் கெடுக்காமலே தானே கெட்டுப்போம் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தான் செய்ய வேண்டிய காரியங்கள் யாவற்றினும் குற்றமாம் பழி பாவங்களணுகாது முன்பின்பு ஆலோசித்து செய்தலே அழகாம். அங்ஙனம் முன்பின்பு ஆலோசியாது குற்றங்கூறச் செய்துக் கொள்ளுவானாயின் அக்காரியங்கெடுதற்கு ஏதொருவருமின்றி தானே அழிந்து போம் என்பது விரிவு.

**8. பற்றுள்ளமென்னு மிவரன்மெ யெற்றுள்ளு**

**மெண்ணணப் படுவதொன் றன்று.**

**(ப.)** பற்றுள்ள மென்னு - குற்றப்பற்றுள்ளோமென்னு, மிவரன்மெ - தங்களது செயல், யெற்றுள்ளு - ஏனையோருள்ளத்திலு முள்ளதென்று, எண்ணப்படுவ
நினைப்பது, தொன்றன்று - ஒரெண்ணமாகாதென்பது பதம்.

**(பொ.)** குற்றப்பற்றுள்ளோம் என்னுந் தங்களதுச் செயல் ஏனையோர் உள்ளத்திலும் உள்ளதென்று நினைப்பது ஓர் எண்ணமாகாது என்பது பொழிப்பு

**(க.)** தங்களுக்குள்ளக் குற்றமாயப் பற்றுக்கள் யாவும் ஏனையோரிடத்திலும் உண்டென்னுமோர் எண்ணம் சரியான எண்ணமாகாது என்பது கருத்து.

**(வி.)** தங்களுள்ளத்தின்கண் காமகுற்றம், கோபகுற்றம், லோபகுற்றமாய பற்றுக்களை நிறப்பிக்கொண்டு ஏனையோரிடத்தும் இக்குற்றப் பற்றுக்கள் உண்டென்னுமோர் எண்ணங் கொள்ளுதல் ஆகாதென்பது விரிவு.

**9. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க**
**நன்றி பயவா வினை.**

**(ப.)** வியவற்க - குற்றமற்றவனெனப் புகழ்ந்து கொள்ளலாகாது, வெஞ்ஞான்றும் - எக்காலத்தும், தன்னை நயவற்க - தன்னை நல்லவனென்று எண்ணிக் கொள்ளவுமாகாது, நன்றி - அஃது பிறருபகாரத்தை, பயவா - கருதா, வினை - செயலென்னப்படு மென்பது பதம்.

**(பொ.)** குற்றமற்றவனெனப் புகழ் கொள்ளலாகாது, எக்காலத்தும் தன்னை நல்லவனென்று எண்ணிக் கொள்ளவுமாகாது அஃது

பிறருபகாரத்தை கருதா செயலென்னப்படும் என்பது பொழிப்பு.

**(க.)** தன்னை யாதொரு குற்றமற்றவனென்று புகழ்ந்து கொள்ளவு மாகாது, நல்லவனென்றெண்ணிக் கொள்ளவுமாகாது அதுவே பிறர் நன்றி மறந்த குற்றமாம் என்பது கருத்து.

**(வி.)** ஏனையோராலடைந்த விவேக விருத்தியின் நன்றியை மறந்தும் செயல்பற்றிய நன்றியை மறந்தும், தன்னைக் குற்றமற்றவனென்றும் நல்லவ னென்றும் எண்ணுதலே குற்றமாம் என்பது விரிவு.

**10. காதல் காதல றியாமெ யுய்க்கிற்பி**
**னேதில் வேதிலார் நூல்.**

**(ப.)** காதல் - அன்பற்று, காதலறியாமெ - அன்பரை யறியாதோனை, யுய்க்கிற்பி - உய்த்தாலோசிக்குங்கால், வேதிலார் நூல் - நீதிநூற்களை வாசியா, னேதில் - நீதியற்றவனென்னுங் குற்றமுமுண்டா மென்பது பதம்.

**(பொ.)** அன்பற்று அன்பரை அறியாதோனை உய்த்து ஆலோசிக்குங்கால் நீதி நூற்களை வாசியா நீதியற்றவன் என்னுங் குற்றமும் உண்டாம் என்பது பொழிப்பு.

**(க.)** தனக்குள் அன்பென்பதே அற்று அன்பரைக் கண்டறியாதவனை நோக்குங்கால் நீதியின் நூற்களைக்

கல்லாதவனும் நீதி என்பதே அறியாதவன் என்னுங் குற்றமுண்டாம் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் நீதி நூற்களைக் கல்லாமலும் நீதியின் வழி நடவாமலுமிருப்பானாயின் அவனுக்கு அன்பென்பதே இராதாதலின் பேரானந்த அன்பு நிலையுற்றோரை அறியானென்னும் பெருங்குற்றம் உண்டாம் என்பது விரிவு.

## 49. பெரியாரைத் துணைக்கோடல்

அதாவது சுடர் விளக்காயினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோல் ஒன்று வேண்டும் என்னும் முதுகொழிக்கியைய அரசனானவன் கல்விக் கேள்விகளிற் சிறந்து குற்றமற்றவனாக விளங்கினும் பெரியோர்களென்னும் விவேகமிகுத்த மேலோர்களைத் துணையாகக் கொண்டு தனது ராட்சிய பாரந் தாங்கவேண்டும் என்பதேயாம் இவற்றுட் சில அறிவிலிகள் பெரியோர் என்பதையும் மேலோர் என்பதையும் வேஷசாதித்தலைவர்களையே கூறும் மொழியென்பாரும் உண்டு. அவை பௌத்த நீதி நூற்களுக்குப் பொருந்தாவாம். எத்தேச எப்பாஷைக்காரனாயினும் கோபங் குறைந்து, மோகங் குறைந்து, பேராசைக்குறைந்து, விவேகம் நிறைந்திருப்பவன் யாரோ அவனையே மேலோன் என்றும் பெரியோன் என்றுங் கூறத்தகும் இதனினும் வஞ்சகம், பொறமெ,

வபாதனாதை துா தொடுப்பு கட்கொலைகாமம் சோம்பல் மிகுத்க குடும்பத்தோரை கீழ்மக்களென்றும், சாந்தம் ஈகை அன்பு விடாமுயற்ச்சி உழைப்பு மிகுத்தோரை மேன்மக்களென்றுங் கூறுவது நீதி நூற்றுணிபாம்.

### 1. அறனறிந்து முத்தவறிவுடையார் கேண்மெ திறனறிந்து தேர்ந்து கொளல்.

**(ப.)** அறனறிந்து - தன்மநெறியை யுணர்ந்து, மூத்த - தன்னிலும் விவேக முதிர்ந்த, வறிவுடையார் - விவேக மிகுத்தோராம், கேண்மெ நேயரது, திறனறிந்து - வல்லபமறிந்து, தேர்ந்து கொளல் - சேர்த்துக்கொள்ளல் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** தன்மநெறியை உணர்ந்து தன்னிலும் விவேகமுதிர்ந்த விவேக மிகுத்தோராம் நேயரது வல்லபமறிந்து சேர்த்துக்கொள்ளல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** அரசன் தன்மநெறி ஒழுக்கந் தவிராது தன்னிலும் விவேகமிகுத்தப் பெரியோரை சேர்ந்து வாழ்கவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் அறிவுடையவனாகி தன்மநெறியிலும் ஒழுக்கத்திலும் சீர்பெற்றிருப்பினும் தன்னிலும் மேலாய

விவேகமிகுத்தோரது கேண்மெய் இருந்தே தீரவேண்டும் என்பது விரிவு.

## 2. உற்றநோய் நீக்கி யுறா அமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்.

**(ப.)** உற்றநோய் - தோன்றியுள்ள துக்கங்களை, நீக்கி - அகலச்செய்து, யுறா அமை - இனியேது மவைபோன்ற துக்கங்களணுகாது, முற்காக்கும் - முன்னாலோசனை சொல்லக்கூடிய, பெற்றியார் - மேன் மக்களை, பேணிக்கொளல் - தெரிந்து சேர்த்துக் கொள்ளவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** தோன்றியுள்ள துக்கங்களை அகலச்செய்து இனியேதும் அவை போன்ற துக்கங்கள் அணுகாது முன் ஆலோசனை சொல்லக்கூடிய மேன்மக்களை தெரிந்து சேர்த்துக்கொள்ளல் வேண்டும் என்பது பொழிப்பு.

**(க)** தனக்குத் தோன்றியுள்ள துக்கங்கள் அகலவும் இனி அத்தகைய துக்கங்கள் அணுகாமல் காக்கவும் முன் ஆலோசனைக் கூறும் விவேகிகளை சேர்த்துக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசனுக்குத் தோற்றியுள்ள துக்கங்கள் யாவும் அகலத்தக்க ஆலோசனைகளையும் அத்தகைய துக்கங்கள் இனி அணுகாதிருக்கும்

ஆலோசனையும் ஆய்ந்து கூறக் தக்கப் பெரியயோர்களாம் விவேக மிகுத்தோரை சேர்ந்து வாழ்கவேண்டும் என்பது விரிவு.

### 3. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரை பேணி தமராக் கொளல்.

**(ப.)** அரியவற்று - அரசன் தான் தேடியுள்ள சிறந்த பொருட்கள், ளெல்லா - யாவற்றினும், மரிதே - மேலாய சிறந்த பொருள் யாதென்னிலோ, பெரியாரை - விவேகமிகுத்தோரை, பேணி - தேடி, தமராக்கொளல் - அவர்களை தன்னவர்களாக சேர்த்துக்கொள்ளுவதேயாமென்பது பதம்

**(பொ.)** அரசன் தான் தேடியுள்ள சிறந்த பொருட்கள் யாவற்றினும் மேலாய சிறந்த பொருள் யாதென்னிலோ விவேக மிகுத்தோரை தேடி அவர்களைத் தன்னவர்களாகச் சேர்த்துக் கொள்ளுவதேயாம் என்பது பொழிப்பு

**(க.)** அரசன் தேடிவைத்துள்ள சிறந்த பொருட்கள் யாவற்றினும் விவேகமிகுத்த பெரியாரை சேர்த்து வாழ்தலே மேலாய சிறப்பாம் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தனக்கென்று தேடி வைத்துக்கொள்ளும் தனச்செல்வம், தானியச்செல்வம், மக்கட்செல்வம், மனைச்செல்வம், சுற்றச் செல்வமாம் அரிய பொருட்கள் யாவற்றினும் விவேகமிகுத்தப்

பெரியோரைத் தெரிந்து அவரைத்தன் சுற்றத்தாரில் ஒருவராக சேர்த்துக் கொள்ளுதலே மிக்க சிறப்பாம் என்பது விரிவு.

**4. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்**
**வன்மெயு ளெல்லாந் தலை.**

**(ப.)** தம்மிற் - தனதறிவிற்கு மேற்பட்ட பெரியார் - விவேகமிகுத்தோரை தமரா - தமது சுற்றத்தாரிலொருவராகக் கொண்டு, வொழுகுதல் - நல்வாழ்க்கைப்புரிதல், வன்மெயு - தனது திடச்செயல், ளெல்லாந் - யாவற்றிற்கும், தலை - முதலதாமென்பது பதம்.

**(பொ.)** தனதறிவிற்கு மேற்பட்ட விவேக மிகக் கோரை தமது சுற்றத்தாரில் ஒருவராகக் கொண்டு நல்வாழ்க்கைப் புரிதல் தனது திடச்செயல் யாவற்றிற்கும் முதலதாம் என்பது பெ

**(க.)** அரசனானவன் எத்தகைய சுத்த வீர வல்லபமிகுத்திருப்பினும் தன்னறிவிற்கு மேற்பட்ட அறிவாளிகளை சேர்த்து வாழ்தலே மேலாய வல்லபமாம் என்பது கருத்து.

**(வி.)** அரசனுக்கு யானையேற்ற வல்லபம் குதிரையேற்ற வல்லபம், வில்வித்தை வல்லபம், வாகுவித்தை வல்லபமாகிய சுத்த வீரம் இருப்பினும் வருங்காலப் போங்காலச் செயல்களை அறிந்து தனக்கு

மேற்பட்ட மதியூட்டத்தக்க மந்திரவாதிகள் தன்னுடனிருப்பதே சகல வல்லபங்களினும் மேலாய வல்லபமாம் என்பது விரிவு.

### 5. சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

**(ப.)** மன்னவன் - அரசனானவன் சூழ்வார் - தன்னைச் சேர்ந்து வாழ்வோர் மீது, கண்ணாக - நோக்கமுடையவனாக, வொழுகலான் - நல்வாழ்க்கைப் புரிதலால், சூழ்வோரை - மதியூகிகளை, சூழ்ந்து கொளல் - வாழ்வோரோடு சேர்த்து வாழ்கவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** அரசனானவன் தன்னைச் சேர்ந்து வாழ்வோர்மீது நோக்க முடையவனாக நல்வாழ்க்கைப் புரிதலால் மதியூகிகளை வாழ்வோரோடு சேர்த்து வாழ்கவேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** அரசன் தன்னைச் சூழ்ந்து வாழும் சுற்றத்தோர் மீது கண்ணோக்கம் உற்றிருப்பதுபோல் அவர்களுடன் ஓர் மதியூகியாகும் மந்திரவாதியையுஞ் சேர்த்து வாழ்கவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தன் மனைவி மக்கள் மீதும் தாய் தந்தையர்மீதும் உடன் பிறந்தார் மீதும் எத்தகையாயக் கண்ணோக்கமும் அன்பும் வைத்து வாழ்கின்றானோ அவைபோல் தனக்கு வருங்காலப் போங்காலச் செயல்களை யூகித்து

சொல்லக்கூடிய மதியூகி ஒருவரைத் தன் சுற்றத்தார் போல் சேர்த்து வாழ்கவேண்டும் என்பது விரிவு

**6. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்**
**செற்றார் செயக் கிடந்த தில்.**

**(ப.)** தக்கா - விவேகமிகுத்த மேலோரோடு ரினத்தனாய் - நற்குடும்பத்துடன், தானொழுக - நல்வாழ்க்கைப் புரியும், வல்லானைச் - வல்லபமிகுந்த வரசனை, செற்றார் - எதிரியரசர், செயற்கிடந்த - வெல்லுவதற்கு, தில் - இடமில்லாமற் போமென்பது பதம்.

**(பொ.)** விவேகமிகுத்த மேலோரோடு நற்குடும்பத்துடன் நல்வாழ்க்கை புரியும் வல்லப மிகுத்த அரசனை எதிரியரசர் வெல்லுவதற்கிடமில்லாமற் போம் என்பது பொழிப்பு

**(க.)** நீதிநெறியமைந்த குடும்பத்துடன் விவேகமிகுத்தப் பெரியோரையுஞ் சேர்ந்து வாழும் வல்லபமிகுத்த வரசனை பகைவராம் அரசர்கள் வெல்லுவதற்கிடமில்லாமற் போம் என்பது கருத்து

**(வி.)** நீதியும் நெறியும், ஒழுக்கமும் அமைந்த சுற்றத்தாருடன் வருங்காலச் செயல்களையும் போங்காலச் செயல்களையும் யூகித்து சொல்லக்கூடிய மதியூகியொருவரைச் சேர்த்து வாழுந்திடதேகியாம்

அரசன் மீது வேற்றரசர் படையெடுப்பதற்கும் வெல்லுவதற்கும் ஏதுவில்லாமற் போமென்பது விரிவு.

**7. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே**
**கெடுக்குந் தகமெ யவர்.**

**(ப.)** இடிக்குந் - வற்புறுத்தி மதிகூறும், துணையாரை - கூட்டுரவோரை, யாள்வோரை - துணையாகக் கொண்டுவாழு மரசனை, யாரே - வேற்றரசர் யாவரேயாயினும் , யவர் - அவர்களால், கெடுக்குந் - அழிக்க, தகமெ. வல்லமெயாகாதென்பது பதம்.

**(பொ.)** வற்புறுத்தி மதிகூறுங் கூட்டுரவோரை துணையாகக் கொண்டு வாழும் அரசனை வேற்றரசர் யாவரேயாயினும் அவர்களால் அழிக்க வல்லமெயாகாது என்பது பொழிப்பு.

**(க.)** அரசனுக்கு வற்புறுத்திமதி கூறுங்கூட்டுரவோர் ஒருவரிருப்பாராயின் வேற்றரசர்களால் அவ்வரசனை மேற்கொள்ளும் வல்லபம் எழா என்பது கருத்து.

**(வி.)** அரசனது நட்பைக்கருதி சீவிப்போனாயிராது அவனது ராட்சிய சிறப்பையும் அரசன் சுகத்தையுங் கருதி கண்டித்து மதியூகங்களை ஊட்டி வரும் விவேகமிகுத்த பெரியார் ஒருவரை துணை கொண்டொழுகும் அரசனை வேற்றரசர் மேற் கொள்ளலாகாது என்பது விரிவு.

**8. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்**

**கெடுப்பா ரிலானுங் கெடும்.**

**(ப.)** இடிப்பாரை - வற்புறுத்தி மதிகூறுவோரை, யில்லாத - சேர்ந்துவாழ்காத, வேமரா - ஆலோசனையற்ற, மன்னன் - அரசனது வாழ்க்கை , கெடுப்பா - தன்னை மேற்கொள்ளு மரசர், ரிலானுங் - இல்லாவிடினும், கெடும் - தானே யழிந்துபோமென்பது பதம்.

**(பொ.)** வற்புறுத்தி மதிகூறுவோரை சேர்ந்து வாழ்காத ஆலோசனை அற்ற அரசனது வாழ்க்கை தன்னை மேற்கொள்ளும் அரசனில்லாவிடினும் தானே அழிந்துபோம் என்பது பொழிப்பு.

**(க.)** அப்போதைக்கப்போது கண்டித்து மதியூட்டிவரும் பெரியோர் துணையற்று வாழும் ஆலோசனையற்ற அரசனது ராட்சியம் எதிரி அரசர்களால் அழிபடா விடினுந் தானே அழிந்து போம் என்பது கருத்து.

**(வி.)** அரசன் செய்துவரும் ஆலோசனையுள்ள நற்காரியங்களுக்கு இடங்கொடுத்தும் ஆலோசனையற்ற துற்காரியங்களுக்கு இடங்கொடாதுங் கண்டித்து மதியூட்டி வரும் பெரியோரது கேண்மெயின்றி ஆலோசனையற்று வாழும் அரசனது ராட்சியத்தை வேற்றரசர் கைபற்றாவிடினும் அவ்வரசு தானே அழிவதற்கு ஏதுண்டாகிப் போம் என்பது விரிவு.

**9. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்**

**சார்பிலார்க் கில்லை நிலை.**

**(ப.)** முதலிலார்க் - தனமுதல் தானிய முதலில்லார்க்கு, கூதியமில்லை - வியாபார விருத்தி விவசாய விருத்தியில்லாதது போல, மதலையாஞ் - அறியார்க் கறிவூட்டும், சார்பிலார்க் - பெரியோரைச் சேர்ந்து வாழ்கா வரசனுக்கு கில்லைநிலை - அரசுநிலை பெறாதென்பது பதம்.

**(பொ.)** தன முதல் தானிய முதலில்லார்க்கு வியாபார விருத்தி விவசாய விருத்தியில்லாதது போல் அறியார்க்கறிவூட்டும் பெரியோரைச் சேர்ந்து வாழ்கா அரசனுக்கு அரசு நிலை பெறாது என்பது பொழிப்பு.

**(க.)** கைம்முதலில்லார்க்கு சகல காரணவிருத்தியுமில்லாது போல விவேக மிகுத்தப் பெரியோரைச் சேர்ந்து வாழ்கா அரசனுக்கு இராட்சிய விருத்தியும் இல்லாமற் போம் என்பது கருத்து.

**(வி.)** மனுமக்களுக்கு தனமுதலில்லாது வியாபார விருத்தியில்லாதது போலும் தானிய முதலில்லாது விவசாய விருத்தியில்லாததுபோலும் அரசனுக்கு அறிவை ஊட்டி வரும்மந்திரவாதிகளாம் பெரியோர்கள் இல்லாவிடின் அவ்வரசும் விருத்தியற்றுப்போம் என்பது விரிவு

## 10. பல்லார் பகை கொளலிற் பத்தடுத்த தீமெத்தே நல்லார் தொடர்கை விடல்.

**(ப.)** நல்லார் - மேன்மக்களது, தொடர்கை - சேர்க்கையை, விடல் - நீங்கி வாழுமரசன், பல்லார் - பலபேருடனும், பகைகொளலிற் - விரோதத்தை யுண்டாக்கிக் கொள்ளுவதுடன், பத்தடுத்த - அதன் பற்றுதலால், தீமெத்தே - தீய தேகியென்று மெண்ணப்படுவானென்பது பதம்,

**(பொ.)** மேன் மக்களது சேர்க்கையை நீங்கி வாழும் அரசன் பலபேருடன் விரோதத்தை உண்டாக்கிக் கொள்ளுவதுடன் அதன் பற்றுதலால் தீயதேகி என்றும் எண்ணப்படுவான் என்பது பொழிப்பு.

**(க)** மதியூகிகளாம் நல்லோர்களைச் சேர்ந்து வாழ்காத அரசன் பலபேர்களின் விரோதத்தைச் சேர்த்துக்கொள்ளுவதுடன் பலபேருக்குத் தானும் தீயவனென்று எண்ணப்படுவான் என்பது கருத்து.

**(வி.)** செல்காலச் செயல்களையும் நிகழ்காலச் செயல்களையும் வருங்காலச் செயல்களையும் ஆய்ந்து மதியூட்டத்தக்கப் பெரியோர்களைச் சேர்ந்து வாழ்காத அரசன் தன் தேசக்குடிகளின் செயல்களை நன்காராயாது கண்டிப்பதினாலுந் தெண்டிப்பதினாலும் பலபெயர் பகையைத் தேடிக் கொள்ளுவதுடன் அப்பகையினது

பற்றினால் பலருக்குந் தீயவனாகத் தோன்றி அரசும் நிலைகுலைந்து போம் என்பது விரிவு.

## 50. சிற்றினஞ் சேராமெய்

அதாவது பெரியோர்களாம் விவேக மிகுத்தோர்கள் பொருளாசை யற்றவர்களும் சீவகாருண்யமிகுத்தவர்களுமாகிய மேன்மக்களைத் துணைக் கோடலுமாகியக் கூட்டுறவை உறுதிபடுத்தி சிற்றினமாம் அறிவிலிகளையும் பேராசை மிகுத்தோர்களையும் சீவகாருண்யமற்றவர்களையும் கரவடர்களையும் பொறாமெ மிகுத்தோர்களையும் வஞ்சினமே உருவாகத் தோன்றியவர்களையும் பஞ்சபாதகர்களையும் அரசன் துணை கோடலாகாது என்னும் விதி விலக்குகளை இவ்விடம் விளக்கலானார்.

**1. சிற்றின மஞ்சும் பெருமெ சிறுமெதான்**

**சுற்றமாச் சூழ்ந்து விடும்.**

**(ப.)** சிற்றின - அறிவிலிகளின் கூட்டுறவிற்கு, மஞ்சும் - பயப்படுவார்கள், பெருமெ - அறிவுள்ளோர்கள், சிறுமெதான் - அறிவிலிகளோ, சுற்றமா - அறிவிலிகளையே உறன்முறையோராகக் கொண்டு, சூழ்ந்துவிடும் - சேர்ந்தே வாழ்வார்களென்பது பதம்.

**(பொ.)** அறிவிலிகளின் கூட்டுறவிற்குப் பயப்படுவார்கள் அறிவுள்ளோர்கள் அறிவிலிகளோ அறிவிலிகளையே

உறன்முறையோராகக் கொண்டு சேர்ந்தே வாழ்வார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** விவேகமிகுத்தப் பெரியோர் அவிவேகிகளைச் சேர்ந்து வாழார்கள், அவிவேகிகளோ அவிவேகிகளையே கூடி வாழ்வார்கள் என்பது கருத்து.

**(வி.)** நீதியின் பேரிலும் நெறியின் பேரிலும் விவேக விருத்தியின் பேரிலும் பசிதாகம் உள்ளவர்கள் அறிவிலிகளை யடுத்தே வாழ்கமாட்டார்கள் அறிவிலிகளோ துட்டர்களையும் பேராசையோரையும் வஞ்சினரையும் சூதரையுங் பொய்யரையுங் கள்ளரையுமே உறவினராகக் கொண்டொழுகு வார்கள் என்பது விரிவு.

**2. நிலத்தியல்பா னீர்திரித் தற்றாகு மாந்தர்க்**
**கினத்தியல்ப தாகு மறிவு.**

**(ப.)** நிலத்தியல்பா - பூமியினது குணத்திற்குத் தக்கவாறு, னீர்திரிந் - நீரும் மாறுபட்டு, தற்றாகு - அவை பேதமுண்டாதல்போல, மாந்தர்க் - மனுகுலத்தோரது, கினத்தியல் - குடும்பத்தின் செயலினளவே, தாகு - மாறுபட வளரும், அறிவு - விவேகமுமென்பது பதம்.

**(பொ.)** பூமியினது குணத்திற்குத் தக்கவாறு நீரும் மாறுபட்டு சுவைபேதம் உண்டாதல் போல மனுகுலத்தோரது குடும்பத்தின்

செயலினளவே மாறுபட வளரும் விவேகமும் என்பது பொழிப்பு.

**(க.)** பூமியினது குணபேதத்தால் நீரும் சுவைபேதமடைதல் போல மனுக்களின் குடும்ப பேதச் செயல்களைப்போல அறிவும் பேதப்பட்டே விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** ஆகாயமானது உப்பைக் கிரகித்து கொண்டு சுத்தநீரை மழையாகப் பெய்தபோதிலும் மருத நிலத்தில் தோய்ந்த நீர் இனியதாகவும், நெய்த நிலத்தில் தோய்ந்த நீர் துவர்ப்பாகவும், பாலை நிலத்தில் தோய்ந்த நீர் உவர்ப்பாகவும் குறிஞ்சி நிலத்தில் தோய்ந்த நீர் சிறு கசப்பாகவும், முல்லை நிலத்தில் தோய்ந்த நீர் கசப்பும் இனிப்புமாகவும் மாறுகொளற்போல மனுக்கூட்டமென்பது மேலாயப் பிறவியாகத் தோன்றிய போதினும் பேராசையுள்ளக் குடும்பத்திற் பிறந்தோர் பேராசையிலும் , வஞ்சினமிகுத்தக் குடும்பத்திற் பிறந்தோர் வஞ்சினத்திலும், கள்ளர் கூட்டத்திற் பிறந்தோர்களவிலும், குடியர் கூட்டத்திற் பிறந்தோர் குடியிலும், தோய்ந்து நிற்பதற்களவே அறிவும் தியங்கி நிற்கும் என்பது விரிவு.

**3. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா**
**மின்னா னெனப்படுங் கொல்.**

**(ப.)** மாந்தர் - மனிதவகுப்போர், மனத்தானா - எண்ணிச் செய்யுஞ் செயல்களை, குணர்ச்சி - ஆய்ந்துணர்வோர், யினதானா - குடும்பங்களில், மின்னானெனப்படும் இவன் நல்ல குடும்பத்தான்

தீய குடும்பத்தானென்றறிந்து, சொல் - சொல்லி விடுவார்களென்பது பதம்.

**(பொ.)** மனித வகுப்போர் எண்ணிச் செய்யும் செயல்களை ஆய்ந்துணர்வோர் குடும்பங்களில் இவன் நல்ல குடும்பத்தான், தீயகுடும்பத்தான் என்று அறிந்து சொல்லி விடுவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** அவனவன் எண்ணிச் செய்யும் நற்செயல்களைக் கண்டு நல்ல குடும்பத்தோனென்றும் துற்செயல்களைக்கண்டு தீய குடும்பத்தோனென்றும் பெரியோர் மதித்து விடுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** ஒவ்வோர் மனிதனுந் தன் மனதிற் கருதிச்செய்யுஞ் செயல்களில் பொய்யைச் சொல்லி பிச்சை இரந்துண்பானாயின் அவனை சோம்பேறித் தீயக்குடும்பத்தோனென்றும், மெய்யைச் சொல்லி மெய்வருந்த உழைத்துண்பா னாயின் அவனை சுகசீவிய நற்குடும்பத்தோனென்றும் பெரியோர் பிரித்தறிந்து கூறுவார்கள் என்பது விரிவு.

**4. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்**

**கினத்துள தாகு மறிவு.**

**(ப.)** மனத்து - ஒருவனது மனத்தின் செயல், ளதுபோல - செய்கையில், காட்டி - விளங்குதல் போல், அறிவு - விவேகமானது, யொருவற் - அவரவர், கினத்துளதாகு - குடும்பச்செயலினளவே விளங்குமென்பது பதம்.

**(பொ.)** ஒருவனது மனத்தின் செயல் செய்கையில் விளங்குதல் போல் விவேகமானது அவரவர் குடும்பச்செயலினளவே விளங்குமென்பது பொழிப்பு.

**(க)** ஒருவன் எண்ணும் எண்ணம் கருமத்தால் விளங்குவதுபோல குடும்பத்தின் செயலால் அவனது அறிவும் விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** இதை அனுசரித்தே நமது மூதாட்டி " குலத்தளவேயாகுங் குண" மென்றும் கூறியுள்ளது ஓர் கூட்டுறவாயக் குடும்பத்தையே குலமென்னப்படும். அக்குலத்தோர் துற்செயலைக்கொண்டே தீய குலமென்றும் நற்செயலைக் கொண்டே நல்ல குலமென்றுங் கூறுவர் அவைபோல் எண்ணுங் கருத்து செய்கையில் விளங்குவது போல் அந்தந்தக் குடும்பத்தின் செயலால் அவரவர்கள் அறிவும் விளங்கிப் போம் என்பது விரிவு.

**5. மனத்தூய்மெ செய்வினை தூய்மெ யிரண்டு**

**மினத்தூய்மெ தூவா வரும்.**

**(ப.)** மனத்தூய்மெ - களங்கமற்ற மனமும், செய்வினை தூய்மெ - குற்றமற்றச் செயலுமாகிய, இரண்டும் - இவ்விரண்டுமுடையவனது, மினத்தூய்மெ - குடும்பத்தின் நல்லொழுக்கமானது. தூவா - சிதறாது, வரும் - வந்து கூடுமென்பது பதம்.

**(பொ.)** களங்கமற்ற மனமும் குற்றமற்றச் செயலுமாகிய இவ்விரண்டும் உடையவனது குடும்பத்தின் நல்லொழுக்கமானது சிதறாது வந்து கூடும் என்பது பொழிப்பு

**(க.)** மனமாசில்லாமலும் செய்தொழிலில் யாதொரு குற்றம் வாராமலுமிருப்போன் குடும்பத்தில் முடிக்குங் காரியங்கள் யாவும் முட்டின்றி முடியும் என்பது கருத்து.

**(வி.)** நல்லொழுக்கமுள்ள குடும்பத்தில் பிறந்தவன் நற்குணமுடையவனாகவும் நற்செயல் புரிபவனாகவே விளங்குவான், அவன் தொடுத்து முடிக்கும் நற்காரியங்கள் யாவும் சுபமாகவே முடியும், அவனைச் சேர்ந்தோர்களும் சுகசீவியாவார்கள் என்பது விரிவு.

**6. மனத்தூயார்க் கெச்ச நன்றாகு மினத்தூயார்க்**
**கில்லை நன்றாகா வினை.**

**(ப.)** மனத்தூயார் - இதய சுத்தமுள்ளோர், கெச்ச - எடுக்கு முயற்சிகள் யாவும், நன்றாகு - நல்லதாகவே முடியும், மினத்தூயார் -

குடும்பத்தில் நல்லொழுக்கமுடையவர்களோ, வினை - தாங்கள் முடிக்குஞ் செயல்கள் யாவும், நன்றாகு - முடியா தென்று சொல்லுதற்கு, இல்லை - இல்லாமலே முடியுமென்பது பதம்.

**(பொ.)** இதய சுத்தமுள்ளோர் எடுக்கும் முயற்சிகள் யாவும் நல்லதாகவே முடியும், குடும்பத்தில் நல்லொழுக்கம் உடையவர்களோ தாங்கள் முடிக்குஞ் செயல்கள் யாவும் முடியாதென்று சொல்லுதற்கில்லாமலே முடியும் என்பது பொழிப்பு,

**(க.)** மனக்களங்கமற்றோர் எடுக்கும் முயற்சி முட்டின்றி முடிவதுபோல நல்லொழுக்கமுள்ள குடும்பத்தோரெடுக்கும் முயற்சி முடியாதென்று சொல்லுதற்கில்லாமலே முடியும் என்பது கருத்து,

**(வி.)** இராகத்துவேஷ மோகங்களென்னுங் காமவெகுளி மயக்கங்களாம் மனமாசகன்ற மேலோர் எடுக்குஞ் செயல்கள் யாவும் இடையூறின்றி முடிவன போல் ஓர் குடும்பத்தோர் நல்லூக்கம் நன்முயற்சி நற்கடைபிடியாய நல்லொழுக்கத்தில் வாழ்க்கை புரிவார்களாயின் அவர்கள் எடுத்துச் செய்யும் நன்முயற்சிகளும் முடியாதென்று கூறுவதற்கின்றி முடிவதோடு அவர்கள் சந்ததியோரும் நல்லொழுக்கச் செயலையே நாடி நிற்பர். தீயொழுக்கக் குடும்பத்தோராய சிற்றினத்தோரோ இவற்றிற்கு மாறுபட்டே நிற்பர் என்பது

விரிவு.

**7. மனநல மன்னுயிர் காக்கு மினநல**

**மெல்லாப் புகழுந் தரும்.**

**(ப)** மனநல - மனத்தின் களங்கமற்ற நிலையானது, மன்னுயிர் - தன்னுயிரைப் போல் மன்னுயிரையும், காக்கும் - ஆதரிக்கும், மினநல - குடும்பத்தின் நல்லொழுக்கச் செயலானது, மெல்லாப்புகழு - இகபர சகல கீர்த்தியையும், தரும் - கொடுக்குமென்பது பகம்.

**(பொ.)** மனத்தின் களங்கமற்ற நிலையானது தன்னுயிரைப்போல் மன்னுயிரையும் ஆதரிக்கும். குடும்பத்தின் நல்லொழுக்கச் செயலானது இகபர சகல கீர்த்தியையுங் கொடுக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** மனமாசற்ற அறவோர் தன்னுயிரைப்போல் பிறவுயிரையும் காப்பர் நல்லொழுக்கக் குடும்பத்தோரோ இகபரத்தில் சகல புகழும் பெற்று வாழ்வார்கள் என்பது கருத்து.

**(வி.)** இதய சுத்தமுண்டாகித் தண்மெயுற்ற மேலோர் சருவ சீவர்களையும் தன்னுயிர்போல் காத்து புகழடைவார்கள். இனநலமாகும் நல்லொழுக்கக் குடும்பத்தோர்களோ இகத்தில் வாழும் மக்களாலும் பரத்தில் வாழுந் தேவர்களாலும் புகழப்படுவார்கள். மனமாசுற்ற சிற்றினத்தானோ தன்னைச் சார்ந்த

சகலரையுங் கெடுப்பான். சகல கேடும் நிறைந்து தீயொழுக்கமுள்ள குடும்பமாம் சிற்றினத் தோரால் சருவ சீவர்களுங் கெட்டழிவதுடன் பல்லோரால் இகழவும் படுவார்கள் என்பது விரிவு.

**8. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்**

**கினநல மேமாப் புடைத்து.**

**(ப.)** மனநல - மனமாசற்று, நன்குடைய - சுகச்சீரை, ராயினுஞ் - பெற்றுள்ள வனாயிருப்பினும், சான்றோர் - அறஹத்துக்களாகிய சாந்தரூபிகளுக்கு, கினநல - நல்லொழுக்கமுற்றக் குடும்பத்தின் மீதிலேயே, மேமாப் - மாறா, புடைத்து - நோக்கமுடைத்தாகுமென்பது பதம்.

**(பொ.)** மனமாசற்று சுகச்சீரைப்பெற்றுள்ளவனாயிருப்பினும் அறஹத்துக்களாகிய சாந்தரூபிகளுக்கு நல்லொழுக்கமுற்றக் குடும்பத்தின் மீதிலேயே மாறா நோக்கமுடைத் தாகும் என்பது பொழிப்பு.

**(க)** சாந்தரூபிகளாகிய மேன்மக்கள் மனமாசற்ற ஒருவனைவிட நல்லொழுக்க மிகுத்த நற்குடும்பத்தையே மேலாகக் கருதுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** சற்சங்கமாம் புத்த சங்கஞ் சேர்ந்த ஒருவன் நன்மனசுடையோனாக விளங்கினபோதினும் மே

வம் மேலோர்களாகிய சான்றோராம் அறவணவடிகள்வர்களை மிக்க கருத மாட்டார்கள். நற்செயல், நல்லூக்கம், நற்கடைபிடியில் ஒழுகும் நல்ல குடும்பத்தோரையே மிக்க கருதுவார்கள். அவைபோல் தீயவனொருவனை மேலோர் கண்டிடினும் ஒருகாற் காண்பர், தீய குடும்பமாம் சிற்றினத்தோரைக் கண்ணெடுத்தும் பாரார்கள் என்பது விரிவு.

**9. மனநலத்தி னாகு மறுமெ மற்றஃது**

**மினநலத்தி னேமாய் புடைத்து.**

**(ப.)** மனநலத்தி - நன்மனச்செயலின் பயனாயது, னாகுமறுமெ - பின்னரெடுக்குந் தேகத்தால் விளங்கிப்போம், மற்றதை - அவையே தென்னிலோ, மின நலத்தி நல்லொழுக்கக் குடும்பத்தில், னேமாப் - மாறாது தோற்றலே,
புடைத்து - உடையதாமென்பது பதம்.

**(பொ.)** நன்மனச் செயலின் பயனாயது பின்னரெடுக்குந் தேகத்தால் விளங்கிப்போம் அவையே தென்னிலோ நல்லொழுக்க குடும்பத்தில் மாறாதோற்றலே உடையதாம் என்பது பொழிப்பு.

**(க.)** நல்லொழுக்க மனமுடையவனாகிய பயன் நல்ல குடும்பத்தில் மறுமெய் எடுத்தலால் விளங்கும் என்பது கருத்து.

**(வி.)** சகலருக்கும் உபகாரியாக விளங்கும் ஒருவன் மரணமடையினும் பின்னரெடுக்கும் பிறவி நற்குடும்பத்திலேயே தோன்றி நற்பயனையே விளக்குவான். அவைபோல் தீயச் செயலிலொழுகுவோன் மரணமுறினும் தீயக்குடும்பமாம் சிற்றினத்திலேயே பிறந்து முன் விட்டு தோன்றிய தீவினைகளையே விளைவிப்பான் என்பது விரிவு.

**10. நல்வினத்தி னூங்குந் துணையில்லை தியினத்தி**

**னல்லற் படுவதூஉ யில்.**

**(ப.)** நல்லினத்தி - நல்லொழுக்கக் குடும்பத்தை, னூங்கு - சேர்ந்து வாழ்வதினும், துணையில்லை - வாழ்க்கையுதவி வேறில்லை, தீயினத்தி - கீயொழுக்கக் குடும்பத்தைச் சார்ந்து, படுவதூஉ - அனுபவிக்கும், னல்லற் - துன்பத்தினும், மில் - வேறு துன்பமில்லையென்பது பதம்.

**(பொ.)** நல்லொழுக்கக் குடும்பத்தைச் சேர்ந்து வாழ்வதினும் வாழ்க்கையுதவி வேறில்லை, தீயொழுக்கக் குடும்பத்தைச் சார்ந்து அனுபவிக்குந் துன்பத்தினும் வேறு துன்பமில்லை என்பது பொழிப்பு

**(க.)** நல்லினத்தை சார்ந்து வாழ்வதினுஞ் சுகம் வேறில்லை. தீயவினத்தைச் சார்ந்து வாழ்வதிலுங் கேடு வேறில்லை என்பது கருத்து

**(வி.)** நற்செயல்களையே நோக்கிச் செய்வோர்களும் நன்மார்க்கத்தையே கண்டு நடப்போர்களும், நல்வாய்மெயே அறிந்து பேசுவோர்களும், நன்னோக்கமே கண்டு நிலைப்போர்களும், நல்லவர்களாகவே சகல சீவர்களுக்கும் விளங்குவோர்களும், நற்கடைபிடியே சாதனமாக ஒழுகு வோர்களுமாய நற்குடும்பத்தோரையே நல்லினத்தோரென்றும் மேன்மக்க ளென்றுங் கூறப்படும். இத்தகைய இனத்தைச் சேர்ந்து வாழ்வதே சிறப்பாம்.

தன் சுகத்தை நாடி பிறர் சுகத்தைக் கெடுக்கும் தீயோர்களும் தான் ஒரு குடி பிழைக்க நூறு குடிகளை கெடுக்குந் தீயோர்களும் வஞ்சினமே குடி கொண்டவர்களும் பொறாமெயே உருவெடுத்தவர்களும், கருணை என்பதே கனவிலும் இல்லாதவர்களும் சீவகாருண்யமே சிந்தையிலற்றவர்களும், பஞ்சபாதகமே பரக்கச் செய்வோர்களுமாயத் தீயக்குடும்பத்தோரையே சிற்றினத்தோரென்றும் கீழ்மக்களென்றும் கூறப்படும்.

இத்தகைய சிற்றனத்தோரது குணாகுணச்செயல்களை நன்காராய்ந்து அரசன் சேர்க்காது அகற்ற வேண்டும் என்பது விரிவு.

## 51. தெரிந்து செயல் வகை

அதாவது அரசன் நல்லோராம் விவேகிகளைக் சேர்த்துக்கொண்டும் பொல்லோராம் அவிவேகிகளைச் சேர்க்காது அகற்றுவதுடன் தான் செய்யவேண்டிய காரியங்கள் யாவற்றையுங் தெரிந்து செய்யவேண்டியது மேலாயதாதலின் மேலாய ஆலோசனைக் கூறும் மந்திரவாதிகள் ஓதியபோதினும் அவற்றின் பாகுபாடுகளைத் தானுமாய்ந்து செய்ய வேண்டுமென்பதேயாம்.

**1. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு**
**மூதியமுஞ் சூழ்ந்து செயல்**

**(ப.)** அழிவதூஉ - எடுக்கு முயற்சி கூடாவிடினும், மாவதூஉ - கூடிடினும், மாகி - சேர்ந்து, வழிபயக்கு - சுகபாதைக்குக் கொண்டு போமாயின், மூதியமுஞ் -அச்சுகவழிபயனை, சூழ்ந்து தன்னைச் சூழ்ந்துள்ளக் குடிகளும் - அநுபவிக்கச் செய்ய வேண்டுமென்பது பதம்.

**(பொ)** எடுக்கும் முயற்சிக் கூடாவிடினும், கூடிடினும் சேர்ந்து சுகபாதைக்குக் கொண்டு போமாயின் அச்சுகவழி பயனை தன்னைச் சூழ்ந்துள்ளக் குடிகளும் அனுபவிக்கச் செய்யவேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** தானெடுத்துச் செய்யும் நற்கருமமானது கூடினுங் கூடாவிடினும் விடா முயற்சியில் கூடும் பயனைத் தன்னோடு தன்

தேசத்தோரும் அனுபவிக்கச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசன்தான் கோறிச் செய்யுஞ் செயல்களுக்கு அங்கத்தவருங் குடிகளுமே ஒன்று கூடி செய்யவேண்டுவது இயல்பாதலின் அக்கருமத்தா லடையும் பயனை அரசன் அனுபவிப்பதுடன் குடிகளும் பகிர்ந்து அனுபவிக்கவுதவுவானாயின் எடுக்குஞ் சகல காரியாதிகளுக்குக் குடிகளும் உப்பலமாயிருந்து உற்சாகத்துடன் நடத்துவார்கள் என்பது விரிவு.

**2. தெரிந்த வினத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்**
**கரும்பொருள் யாதொன்று மில்.**

**(ப.)** தெரிந்து - தான் நல்லவர்களென் றறிந்து கொண்ட, வினத்தோடு - நற்குடும்பத்தோடு சேர்ந்து தேர்ந்தெண்ணி - எடுக்குங் காரியத்தை முன்பின்னாலோசித்து, செய்வார்க்கு - செய்யும்படியானவர்களுக்கு, கரும்பொருள் - கைக்கூடாவரிய பொருள், யாதொன்றுமில் - ஏதொன்று மில்லையென்பது பதம்.

**(பொ)** தான் நல்லவர்கள் என்றறிந்து கொண்ட நற்குடும்பத்தோடு சேர்ந்து எடுக்குங் காரியத்தை முன்பின்னாலோசித்து செய்யும்படியான வர்களுக்கு கைக்கூடாவரிய பொருள் ஏதொன்றுமில்லை என்பது பொழிப்பு.

**(க.)** நல்லவர்களை சேர்த்துக்கொண்டு தேற ஆலோசித்து ஓர் காரியத்தை முடிப்போர்க்கு அக்காரியம் முடியாமற் போகா என்பது கருத்து.

**(வி.)** தீயோர்களாகிய நயவஞ்சகர்களை அகற்றி நல்லோர்களாம் மேன்மக்களைச் சேர்த்துக்கொண்டு எடுக்குங் காரியத்தை நன்காராய்ந்து முடிக்க முயலுவோருக்கு அக்காரிய சித்தியாகாமற் போகாது என்பது விரிவு.

**3. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை**
**பூக்கா ரறிவுடை யார்.**

**(ப.)** ஆக்கங்கருதி - பேராசையால் பெரும் லாபத்தை நோக்கி, முதலிழக்கும் - உள்ள பொருளையு மழிக்கும், செய்வினை - காரியத்தில், யூக்கா - முயற்சிக்கமாட்டார்கள், ரறிவுடையார் - விவேகமிகுத்தோர்களென்பது பதம்.

**(பொ.)** பேராசையால் பெரும் லாபத்தை நோக்கி உள்ள பொருளையும் அழிக்குங் காரியத்தில் முயற்சிக்கமாட்டார்கள் விவேக மிகுத்தோர்கள் என்பது பொழிப்பு

**(க.)** அறிவின் மிகுத்தோர் அவாவின் மிகுதியால் பெரும் லாபத்தைக் கருதி தனக்குள்ள பொருளையும் போக்கடித்துக் கொள்ளமாட்டார்கள் என்பது கருத்து

**(வி.)** அறிவின் மிகுத்தோரும் நல்லினத்தைச் சேர்ந்தவர்களும் பேராசை மிகுதியால் அதிலாபத்தைக் கருதி தனக்குள்ள பொருட்களை வீணே யழித்துவிடமாட்டார்கள் என்பது விரிவு.

**4. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு**

**மேதப்பா டஞ்சு பவர்.**

**(ப.)** தெளிவி - நிதானியாது. லதனை - ஓர் காரியத்தை, தொடங்கா - ஆரம்பிக்க மாட்டார்கள், ரிளிவென்னு - அதனாற் குறை யுண்டாமென்று, மெதப்பா - முன் பரிந்து, டஞ்சுபவர் - அடங்கி நடப்போர்களென்பது பதம்.

**(பொ.)** நிதானியாது வோர் காரியத்தை ஆரம்பிக்கமாட்டார்கள் அதனாற் குறையுண்டாம் என்று முன்பறிந்து அடங்கி நடப்போர்கள் என்பது பொழிப்பு.

**(க)** நிதானமும் அடக்கமும் முன்பே ஆலோசிப்போருமானவர்கள் முடியா காரியத்தை முடிக்க முயன்று இழிவடையார்கள் என்பது கருத்து.

**(வி.)** எக்காலும் நிதானமும் தன்னடக்கமும் முன்னாலோசினையும் உள்ளவர்கள் நிறைவேறாது என்றறிந்த காரியத்தை நிறை வேற்றவும்

முடியாத காரியத்தை முடிக்கவும் முயன்று அதனால் தாழ்ச்சியடையார்கள் என்பது விரிவு.

**5. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்**

**பாத்திப் படுப்பதோ ராறு.**

**(ப.)** வகையற - தான் நடத்தும் யுத்தத்தை முற்றும் ஆலோசியாமலும், சூழா - தன்னைச் சூழ காக்கும் படையுதவியில்லாமலும், பகைவரை - எதிரியரசர் மீது, தெழுதல் - படையெடுத்தலாயது, பாத்தி - தானே யோர் கால்வாய் வெட்டி, படுப்பதோராறு - ஆற்றுநீரை ஊருக்குள் திருப்பிக் கொண்டது போலாகுமென்பது பதம்.

**(பொ)** தான் நடத்தும் யுத்தத்தை முற்றும் ஆலோசியாமலும் தன்னை சூம காக்கும் படையுதவி இல்லாமலும் எதிரியரசர் மீது படையெடுத்தாலயது தானே ஓர் கால்வாய் வெட்டி ஆற்று நீரை ஊருக்குள் திருப்பிக்கொண்டது போலாகும் என்பது பொழிப்பு,

**(க.)** எதிரியரசன் வல்லபமறியாதும் தன்னைச் சூழ்ந்து காக்கும் படையுதவியில்லாதும் படையெடுத்தல் புறம் ஓடிக்கொண்டிருந்த ஆற்றைக் கால்வெட்டி ஊருக்குள் திருப்பி தேசத்தை நாசஞ்செய்துக்கொள்ளுவதற்கு ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** அரசன் ஓர் யுத்தத்திற்கு முனியுங்கால் எதிரி அரசன் வல்லபத்தையுந் தன்னைச் சூழ்ந்து காக்கும் படைகளின் வல்லபத்தையும் ஆய்ந்து முனிதல் வேண்டும் அங்ஙனம் வகையறியாது யுத்தத்திற்கெழுவதாயின் ஆற்றுநீரை வெட்ட தளருக்குள் திருப்பி தானே தன் தேசத்தையும் தேசமக்களையும் அழித்துக் கொள்ளுவதற்கு ஒக்கும் என்பது விரிவு.

**6. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க**

**செய்யாமெ யானுங் கெடும்.**

**(ப.)** செய்தக்க - தக்கவழியிலோர் காரியத்தை , வல்ல - செய்ய முடியாதென்றறிந்தும், செயக்கெடும் - செய்யில் முடியாமலே போகும், செய்தக்க - முடியக்கூடிய காரியத்தை, செய்யாமெயானுங் - முடிக்காமல் விட்டுவிடலாலும், கெடும் - அதுவுமழிந்து போமென்பது பதம்.

**(பொ.)** தக்க வழியில் ஓர் காரியத்தை செய்ய முடியாதென்று அறிந்தும் செய்யில் முடியாமலே போகும், முடியக்கூடிய காரியத்தை முடிக்காமல் விட்டுவிடலாலும் அதுவும் அழிந்து போம் என்பது பொழிப்பு.

**(க.)** ஆரம்பிக்கும் போதே அக்காரியம் முடியாதென்று அறிந்தும் முடிக்க முயல்வதால் கெட்டுப்போம், முடியக்கூடியக் காரியத்தை

முடிக்காமல் விட்டுவிடலால் அதுவுங் கெட்டுப்போம் என்பது கருத்து.

**(வி.)** சமுத்திர நீரை எடுத்துவிட்டு சமபூமியாக்க முடியாது என்பதை தெரிந்தும் அந்நீரை எடுக்க முயன்று பயனடையாது போவதுங் குற்றமாம். தேசத்துக் குட்டைநீரால் பற்பல புழுக்கள் தோன்றி அதனது துர்நாற்றத்தால் மக்களுக்குப் பிணியுண்டாவதென்று அறிந்தும் அந்நீரை எளிதில் எடுத்துவிட்டு சமபூமியாக்கிவிடலாம் என்று தெரிந்தும் அவவகை செய்யாமலிருப்பதுங் குற்றமாம். அதுபோல் செய்வனவற்றைச் செய்யலும் செய்யாதனவற்றைச் செய்யாமலும் தெரிந்துச் செய்வதே அழகாம் என்பது விரிவு.

**7. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி**
**னெண்ணுவ மென்ப திழுக்கு.**

**(ப.)** கருமந் - ஓர் காரியத்தை யாரம்பிக்கும்போதே, எண்ணித் துணிக - முன் பின்னாலோசித்துவாரம்பிக்க வேண்டியது, துணிந்தபி - காரியத்தைச் செய்ய முயன்ற பின்னர், னெண்ணுவமென்ப அதையாலோசிப்பது, திழுக்கு - குற்றமாமென்பது பதம்.

**(பொ.)** ஓர் காரியத்தை ஆரம்பிக்கும் போதே முன்பின் ஆலோசித்து ஆரம்பிக்கவேண்டியது. காரியத்தைச் செய்ய முயன்ற

பின்னர் அதை ஆலோசிப்பது குற்றமாம் என்பது பொழிப்பு

**(க.)** ஏதோர் காரியத்தை முடிக்க முயலும் போதே அதனை தேற ஆலோசித்தே முயலல் வேண்டும், அங்ஙனஞ் செய்யாது காரியத்தில் முயன்றபின் அவற்றை யோசிப்பது இழுக்காம்.

**(வி.)** அரசனானவன் எதிரி அரசன் மீது படையெடுப்பின் காரியத்தையேனும் குடிகளின் சீர்திருத்தக் காரியத்திலேனும் தேற ஆலோசித்து பின்னர் முனியல் வேண்டும் காரியத்தை ஆரம்பித்த பின்னர் துன்பம் நேருங்கால் ஆலோசிப்பது இழுக்காம் என்பது விரிவு.

**8. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று**
**போற்றினும் பொத்துப் படும்.**

**(ப.)** ஆற்றின் - தன் சுகத்தை நாடி செய்யுங் காரியத்தை, வருந்தா - அதிகஷ்டத்துடன் யூகித்துச் செய்யாது, வருத்தம் - பின்னர் துன்புறுங்கால், பலர் நின்று - பல்லோரொன்றுகூடி, போற்றினும் - உதவி புரியினும், பொத்துப்படும் - யாதொரு பயனுமில்லாமலே யழிந்து போமென்பது பதம்.

**(பொ.)** தன் சுகத்தை நாடி செய்யுங் காரியத்தை அதி கஷ்டத்துடன் யூகித்துச் செய்யாது பின்னர் துன்புறுங்கால் பல்லோரொன்றுகூடி

உதவி புரியினும் யாதொருபயனுமில்லாமலே அழிந்துபோம் என்பது பொழிப்பு.

**(க.)** ஓர் காரியத்தை ஆரம்பிக்கும் போதே தெரிந்து செய்யாது அவை முடியாது தடையுறுங்கால் பலபேர் கூடியவற்றிற்கு உதவி புரியினும் முற்றுங் கூடாமலே பொய்யாய்ப் போம் என்பது கருத்து.

**(வி.)** ஒருவனோர் காரியத்தை முன்பின் ஆலோசித்துத் தேறத் தெரிந்து செய்யாது, அக்காரியம் முடியாது துன்புறுங்கால் பலபேரவற்றிற்கு உதவியாயிருந்து முடிக்க முயலினும் அவை முடியாமலே பொய்த்துப்போம் என்பது விரிவு.

**9. நன்றாற்ற லுள்ளுந் தவருண் வரவர்**
**பண்பறிந் தாற்றாக் கடை.**

**(ப.)** நன்றாற்றலுள்ளுந் - உபகாரச் செயலையே செய்ய முயல்வதினும், தவருண் - குற்றமுண்டாம், டவரவர் - அதாவதவரவருடைய, பண்பறிந் - குணச்செயலறிந்து, தாற்றா - செய்விக்காத, கடை - முடிவாமென்பது பதம்.

**(பொ.)** உபகாரச்செயலையே செய்ய முயல்வதினும் குற்றமுண்டாம் அதாவதவரவருடைய குணச்செயலறிந்து செய்விக்காத முடிவாமென்பது பொழிப்பு.

**(க.)** அரசன் தன் குடிகளுக்குச் செய்யும் உபகாரங்களில் குலபண்பு அறியாது கீழ்மக்களுக்குச் செய்யும் உபகாரத்தால் தீதே வந்து முடியும் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தனது குடிகளுக்குச் செய்யவேண்டிய உபகாரத்தை ஒழுக்கமும் சீலமும் காருண்யமும் நன்றியறிதலும் பரோபகாரமும் உழைப்பாளிகளுமாய பண்பமைந்த மேன்மக்களுக்குச் செய்வதாயின் அவர்கள் சீர்பெற்று நன்றி மறவாது இராஜவிசுவாசத்தில் லயித்து தங்கள் வாழ்க்கை இன்னும் சுகம் பெற அரசனது சுகவாழ்க்கையை மேலும் மேலுங் கருதி அரசனுக்கோர் துன்பம் அணுகாது உபபலமாக நிற்பார்கள், பஞ்சபாதகமும் பேராசையும் வஞ்சினமும் சோம்பலும், நிறைந்து சீவகாருண்யமும் பரோபகாரமுமற்றப் பண்பமைந்த கீழ்மக்களுக்குச் செய்வதாயின் தாங்கள் அரசனது உபகாரத்தால் சீர்பெற்றவுடன் நெருப்பில் விழுந்த தேளை எடுத்துவிட கொட்டுவது போலும் வலையிற் சிக்குண்ட பாம்பை எடுத்துவிட கடிப்பது போலும் அரசனுக்கே தீங்கிழைத்து அரசைக் கைப்பற்ற முயல்வார்களாதலின் குடிகளுக்கு உபகாரஞ் செய்வதிலுந் தெரிந்து செய்யல் வேண்டும் என்பது விரிவு

**10. எள்ளாத வெண்ணிச் செயல் வேண்டுந் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளா துலகு.**

**(ப.)** எள்ளாத - அரசனானவன் செய்யும் சகல காரியங்களையும், வெண்ணி - தேறத் தெரிந்தே, செயல்வேண்டும் - செய்வித்தல் வேண்டும், தப்மொடு - தன்னோடுடன்படாச் செயலை, கொள்ளாத - தானே யேற்காத போது, கொள்ளா துலகு - உலகமு மேற்காதென்பது பதம்.

**(பொ.)** அரசனானவன் சகல காரியங்களைத் தேறத் தெரிந்தே செய்வித்தல் வேண்டும். தன்னோடு உடன்படாச் செயலை தானே ஏற்காதபோது உலகமும் ஏற்காது என்பது பொழிப்பு.

**(க.)** சகல காரியாதிகளையும் அரசன் தெரிந்து செய்வதே சுகமாம் அக்காரியங்களிலொன்று தனக்கே ஒப்பாதிருக்குமாயின் உலக மக்களும் ஒப்பாரென்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் எக்காரியாதிகளையும் நன்காய்ந்து தேறத் தெரிந்து செய்யல் வேண்டும் அக்காரியங்களிலொன்று தனக்கே நற்பயன்றாராது போமாயின் உலக மக்களுக்கும் அதுவேயாதலின் தான் தெரியாது செய்து தானே கொள்ளாததை உலகமுங் கொள்ளாது என்பது விரிவு.

## 52. வலியறிதல்

அரசன் தான் தொடுக்குஞ் செயல்களில் கூடுங் கூடா என்னும் வினையின் வலியறிந்தும் தனது தேக திடனிலை அறிந்தும்

எதிரிகளின் வலியறிந்தும் தனது துணைவரின் வலியறிந்தும் ஓர் காரியத்தில் முநியல் வேண்டும் என்பதாம்.

**1. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்**
**துணைவலியுந் தூக்கிச் செயல்.**

**(ப.)** வினைவலியுந் - தான் தொடுக்குஞ் செயல் கூடுங் கூடா வல்லபத்தையும், தன் வலியு - தனது தேக வல்லபத்தையும், மாற்றான் வலியுந் - தனது சத்துருவாய வரசன் வல்லபத்தையும், துணைவலியுந் - தனக்குப் பலமாயப் படைவீரர் வல்லபத்தையும், தூக்கி - சீர்தூக்கி, செயல் - ஆலோசித்துச் செய்ய வேண்டும் என்பது பதம்.

**(பொ)** தான் தொடுக்குஞ் செயல் கூடுங் கூடாவல்லபத்தையும் தனது தேக வல்லபத்தையும் தனது சத்துருவாய அரசன் வல்லபத்தையும் தனக்குப் பலமாய படைவீரர் வல்லபத்தையும் சீர் தூக்கி ஆலோசித்து செய்ய வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** தனது முற்செயல் தொடர்வலியுந் தனது வலியுந் தன் சத்துருவின் வலியுந் தனது துணைவரின் வலியும் ஆய்ந்து ஓர் காரியத்தில் முநியல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** தனது ஊழ்வலியால் சில தொடுக்குஞ் செயல்கள் முட்டின்றி முடிந்தே வருவதும், சிலது முடியாது மயங்குமாதலின் வினையின்

நுட்பமறிந்தும் தான்வாகு வல்லவனாயிருந்துங் கதைவல்லபனுடன் போர்புரியலாகாது ஆதலின் தனது வித்தை பலமறிந்தும், தனது எதிரி சகல வல்லபங்களும் நிறைந்திருக்க தான் எவற்றிலேனுங் குறைந்துள்ளவனாவெனத் தெரிந்தும், தன்னோடு தன் துணைவரும் உப்பலமாக நிற்பார்களா என்றறிந்தும் அக்காரியத்தில் முயலல் வேண்டும் என்பது விரிவு.

**2. ஒல்ல தறிவ தறிந்ததன் கட்டங்கிச்**

**செல்வார்க்குச் செல்லாத தில்.**

**(ப.)** ஒல்வதறிவ - தனக்குள்ள வல்லபமறிந்து, தறிந்து - தேறத்தெரிந்த நிலையில், தன் கட்டங்கி - தானே நிலைத்து, செல்வார்க்கு - ஓர் காரியத்தில் முநிவோருக்கு, செல்லாததில் - முடியாத காரியமொன்று மிராவென்பது பதம்.

**(பொ.)** தனக்குள்ள வல்லபமறிந்து தேறத்தெரிந்த நிலையில் தானே நிலைத்து ஓர் காரியத்தில் முனிவோருக்கு முடியாத காரியமொன்றும் இரா என்பது பொழிப்பு

**(க.)** தனக்குள்ள நான்குவகை வல்லபமும் சரியாயிருக்கின்றதா என்றாய்ந்து நிலைபெற நின்றுயுத்தத்தில் முநிவானாயில் வெற்றியடையாமற் பின்னிடையான் என்பது கருத்து.

**(வி.)** அரசனது வினைபலம் தன்பலம் எதிரிபலம் துணைவர்பலம் நான்கும் தனக்குள்ளதா என்று ஆய்ந்து தேறத் தெளிந்து எதிரியின் மீது முனைவானாயின் சகல வெற்றியுமடைவான் என்பது விரிவு.

**3. உடைத்தம் வலியறியா ருக்கத் தினூக்கி**
**யிடைக்கண் முரிந்தார் பலர்.**

**(ப.)** உடைத்தம் - தனக்குள்ள நான்கு வகைத்தான, வலியா வல்லபத்தையாய்ந்தறியாது, ரூக்கத்தி - வீண்முயற்சியால், னூக்கி - முயன்று, யிடைக்கண் - மத்தியில், முறிந்தார் - முரிந்தோடி மாய்ந்தோர், பலர் பலபேரென்பது பதம்.

**(பொ.)** தனக்குள்ள நான்கு வகைத்தான வல்லபத்தை ஆய்ந்து அறியாது வீண்முயற்சியால் முயன்று மத்தியில் முறிந்து ஓடிமாய்ந்தோர் பலபேர் என்பது பொழிப்பு

**(க.)** தனக்குள்ள வல்லபங்களை நன்காராயாது எதிரி அரசின் மீது படையெடுத்துத் தங்களே முறியடிப்பட்டு மாண்ட அரசர்கள் பலருண்டு என்பது கருத்து.

**(வி.)** வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும் துணைவலியும் நன்காய்ந்தறியாது எதிரியின் மீது பெருமுயற்சியால் படையெடுத்து முறியடிப்பட்டு மாண்டார் பலவரசர்கள் என்பது விரிவு.

**4. அமைந்தாங் கொழுகான ளவறியான் றன்னை**

**வியந்தான் விரைந்து கெடும்.**

**(ப.)** அமைந்தாங் - தன் வல்லபங்களை யாய்ந்தொடுங்கி, கொமுகா - வாழ்க்கைப் புரியாதோன், ளளவறியான் - தன் வல்லபத்தையும் எதிரியின் வல்லபத்தையுமறியான், வியந்தான் - அறியாது தன்னை மேலாகப் புகழ்ந்துகொள்பவன், விரைந்து - கூடிய சீக்கிரம், கெடும் - அழிவானென்பது பதம்.

**(பொ.)** தன் வல்லபங்களை ஆய்ந்தொடிங்கி வாழ்க்கைப்புரியாதோன் தன் வல்லபத்தையும் எதிரியின் வல்லபத்தையும் அறியான், அறியாது தன்னை மேலாகப் புகழ்ந்து கொள்பவன் கூடிய சீக்கிரம் அழிவான் என்பது பொழிப்பு.

**(க.)** தனது வலியை ஆய்ந்தறிந்து அரசு செலுத்தாதவன் எதிரியின் வலியையும் அறியான், அறியாது தன்னை மதித்துச் செல்வோன் துரிதத்தில் தானே கெடுவான் என்பது கருத்து.

**(வி.)** அரச ஒழுக்கத்தைப்பற்றினோன் அரசவல்லப ஒழுக்கத்தை அறியானாயின் எதிரியரசன் வல்லபத்தையும் அறியான், தன் வல்லபத்தையும் எதிரியின் வல்லபத்தையும் அறியாது தன்னரசைத் தானே புகழ்ந்து இருமாப்புற்றிருப்பவன் விரைந்து கெடுவான் என்பது விரிவு.

**5. பீலிபெய் சாகாடு மச்சிறுமப் பண்டஞ்**

**சால மிகுத்துப் பெயின்.**

**(ப.)** பீலிபெய் - மயிலின் இறகுகளையேற்றும், சாகாடு - சகடென்னும் பண்டியில், மப்பண்டம் - அதேயிறகுகளை, சால - மேலு மேலும், மிகுத்துப் - அதிகமாக, பெயின் - ஏற்றுவதாயின், மச்சிறு - இரும்பினிரிசியும் முரிந்து போமென்பது பதம்.

**(பொ.)** மயிலின் இறகுகளை ஏற்றும் சகடென்னும் பண்டியில் மேலும் மேலும், அதிகமாக ஏற்றுவதாயின் இரும்பின் இரிசியும் முறிந்துபோம் என்பது பொழிப்பு

**(க.)** காற்றிலடித்துப் போகக்கூடிய மயிலிறகேயாயினும் அவற்றை அதிகமாக வண்டியிலேற்றுவதாயின் வண்டியினது அச்சாணி முரிந்துபோம் என்பது கருத்து.

**(வி.)** மிக்க மெல்லியதாய மயில் இறகினை அதிகமாகக்கொண்ட வண்டி அச்சாணி முறிவதுபோல் எளிதாகத் தன்னை மேலாக மதித்துக்கொண்டவரசன் மேலும் மேலும் மதிப்பை அதிகரித்துக் கொள்ளுவானாயின் தாங்குவோரகன்று தானே கெடுவான் என்பது விரிவு.

**6. நுனிகொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி**

**னுயிர்க்கிறுதி யாகி விடும்.**

**(ப.)** நுனிகொம்ப - மரத்துக்கிளையின் உச்சியில், ரேறினா - ஏறினவன், ரஃதிறந் - அவ்விடம் விட்டு, தூக்கி - இன்னும் மேலேறுவானாயின், னுயிர் - தன்னுயிருக்கே, கிறுதியாகிவிடும் - கேடாக முடியுமென்பது பதம்.

**(பொ.)** மரத்துக்கிளையின் உச்சியிலேறியவன் அவ்விடம் விட்டு இன்னும் மேலேறுவானாயின் தன்னுயிருக்கே கேடாக முடியும் என்பது பொழிப்பு.

**(க.)** வர் மரத்துக் கிளையினது உச்சியிலேறியவன் இன்னும் மேலேறுவானாயின், கிளையும் ஒடிந்து தானும் மடிவான் என்பது கருத்து.

**(வி.)** மரக்கிளையின் உச்சியிலேறி அதன் வலியறியாது மேலும் ஏறி இளையொடிந்து தானு மடிவதுபோல தன் வலியறியாது எதிரியரசர் மீது போருக்குச் செல்பவன் தானே முதல் மடிவான் என்பது விரிவு.

**7. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்**

**போற்றி வழங்கு நெறி.**

**(ப.)** அற்றி - தனக்குள்ள பொருளின், னளவறிந் - அளவினையறிந்து, தீக - தருமஞ்செய்யல் வேண்டும், வதுபொருள் -

அதுவே தனக்குள்ள பொருளை, போற்றி - விருத்தி செய்து, வழங்கு - பலர்க்குபகாரமாக விளங்கும், நெறி - ஒழுக்கமாமென்பது பதம்.

**(பொ.)** தனக்குள்ள பொருளின் அளவினை அறிந்து தருமஞ்செய்யல் வேண்டும், அதுவே தனக்குள்ள பொருளை விருத்தி செய்து பலர்க்கு உபகாரமாக விளங்கும் ஒழுக்கமாம் என்பது பொழிப்பு

**(க.)** ஒருவன் தனக்குள்ள வரவை அறிந்து செலவு செய்தல் வேண்டும், அதுவே பொருளினை போற்றி வளர்த்து பலருக்கும் உபகாரமாக விளங்கும் நெறியென்பது கருத்து.

**(வி.)** தனக்குள்ள ஆற்றலாகிய பொருளின் பெருக்கமறிந்து தருமஞ் செய்தல் வேண்டும், அதுவே பொருளினது பெருக்கமறிந்து செய்யும் உபகாரம் எனப்படும் அவைபோல் தனக்குள்ள வலியின் பெருக்கமறிந்து போருக்கு முனிவது அழகாம் என்பது விரிவு

**8. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை**

**போகா ரகலாக் கடை.**

**(ப.)** ஆகா - பொருளில்லாது, ரளவிட்டி - அளவு கடந்த தானத்தை, தாயினுங் செய்வதாயினுங் கேடில்லை - ஓர் கெடுதியும் வாராது, ரகலாக்கடை செல்லலாகா வலியின் முடிவறிந்தோரோ , போகா - முனைமுகஞ் செல்லார்களென்பது பதம்.

**(பொ)** பொருளில்லாது அளவு கடந்த தானத்தைச் செய்வதாயினும் ஓர் கெடுதியும் வாராது, செல்லலாகா வலியின் முடிவறிந்தோரோ முனைமுகஞ் செல்லார்கள் என்பது பொழிப்பு.

**(க)** வரவு பொருளில்லாது தானத்தைச் செய்யினுங் கெடுதிவராது, தனக்குள்ள வல்லபமில்லாது யுத்தத்தில் முனிவதால் கெடுதியுண்டாம் என்பது கருத்து.

**(வி.)** தருமஞ் செய்யக்கூடாதவனாயிருந்துந் தருமத்தை அளவு கடந்து செய்வானாயின் ஒரு கேடும் அடையான், யுத்த வலிதில்லாதவன் என்றிந்தும் யுத்தத்திற்கு முனிவதால் கேடுண்டாம் ஆகலின் வல்லபமில்லா முடியறிந்தோர் யுத்தமுகஞ் செல்லார்கள் என்பது விரிவு.

**9. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளிபோல**
**வில்லாகித் தோன்றாக் கெடும்.**

**(ப.)** அளவறிந்து - தனக்குள்ள வலியின் நிலையறிந்து, வாழதான் - அரசு புரியாதவன் வாழ்க்கை - அரணிலையானது, யுள்போல் உள்ளது போல் காட்டி, வில்லாகி - மறைந்து தோன்றாக் கெடும் - இல்லையென்றே யழிந்துபோமென்பது பதம்.

**(பொ)** தனக்குள்ள வலியின் நிலையறிந்து அரசு புரியாதவன் அரணிலையானது உள்ளது போல் காட்டி மறைந்து இல்லையென்றே அழிந்துபோம் என்பது பொழிப்பு

**(க.)** தனது வல்லபமறியாது வாழ்கும் அரசனது அரணிலையானது உள்ளது போல் தோன்றி இல்லையென்றே அழிந்துபோம் என்பது கருத்து.

**(வி.)** ஓர் தேசத்தை ஆளும் அரசனாகத் தோன்றியவன் தன் வலியும் உபபல வலியும் பெருக்கித் தனதரசவாழ்க்கையை நடாத்தல் வேண்டும், அவ்வல்லபத்தை நோக்காது அரசுது அரசனென்று இருமாப்புற்று வாழ்வானாயின் அவனது அரணானது உள்ளது போல் தோன்றி சத்துருக்களலில்லாமலே அழிந்து போம் என்பது விரிவு

**10. உளவரை தூக்காது வொப்புர வாண்மெ**

**வளவரை வல்லக் கெடும்.**

**(ப.)** உளவரை - தனக்குள்ள வல்லபத்தை, தூக்காது - சீர்தூக்கியாராயாது, வொப்புர - சேர்ந்த வுறவின் முறையோரது வாண்மெ - வல்லபத்தைக் கொண்டு, வளவரை - அரசவாழ்க்கையை நடத்துவதாயின், வல்லக்கெடும் - வலியின்றி அழிந்து போம் என்பது பதம்.

**(பொ.)** தனக்குள்ள வல்லபத்தை சீர் தூக்கி ஆராயாது சேர்ந்த உறவின் மறையோரது வல்லபத்தைக் கொண்டு அரச வாழ்க்கையை நடத்துவதாயின் வலியின்றி அழிந்து போம் என்பது பொழிப்பு.

**(க.)** அரசன் தனது குடிப்படை வல்லபத்தை நிலைக்கச் செய்யாது ஒப்புரவினர் வல்லபத்தை நம்பி அரசுசெலுத்துவானாயின் வல்லபமில்லாது கொண்டே அரசழிந்து போம் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் நான்குவகை சேனைகளின் வல்லபமின்றி தனதுறவின் முறையோர் வல்லபத்தை நம்பி அரசு செலுத்துவானாயின் தேசக்காப்புக்குரிய வல்லபமின்றியே அரசநிலை அழிந்து போம் என்பது விரிவு.

## 53. காலமறிதல்

அரசனானவன் தனது பகைவர்மீது படையெடுப்பினும் தேச சீர்திருத்த காரியாதிகளை நடத்தினும் காலமறிந்து செய்யல் வேண்டுமென்பதாம் காலமாவது வெய்யற்காலம், பனிகாலம், மழை காலங்களையும் தனது அமைச்சர்களும் பிரதானிகளும் மித்துருவாகவேனும் சத்தாருவாகவேனும் இருக்கின்றார்களா என்னுங் காலங்களையும், தனது படை வீரர்களுந் தலைவர்களும் சுகமுற்ற வாழ்க்கை யிலிருக்கின்றார்களா பிணியுற்ற நிலையிலிருக்கின்றார்களா என்னுங்காலங்களையும், பண்டிகளில்

தானியம் நிறைந்துள்ள காலங்களையும் ஆயுதாசாலைகள் குறைவற்றுள்ள காலங்களையும் தனது முயற்சி கூடுங் காலங்களையுங் கூடா காலங்களையும் ஆய்ந்து தனது காரியத்தில் முயலல் வேண்டும் என்பதாம்.

### 1. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

**(ப.)** கூகையை - வலிது மிகுத்தக் கோட்டானை, காக்கை - காகமானது பகல் - பகல்காலத்தில், வெல்லும் - வெற்றிக்கொள்ளும். (அவைபோல்) யிகல் - பகைவரை வெல்லும் - வெற்றிபெறுதற்கு, வேந்தர்க்கு - அரசர்களுக்கு வேண்டும் பொழுது - காலம் வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** வலிது மிகுத்தக் கோட்டானை காகமானது பகல்காலத்தில் வெற்றிகொள்ளும், அவைபோல் பகைவரை வெற்றி பெறுதற்கு அரசர்களுக்குக் காலம் வேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** மிக்க வல்லபமிகுத்தக் கூகையை பகல்காலத்தில் காகமானது வெற்றிக் கொள்ளுவதுபோல் அரசனானவன் காலமறிந்து பகைவர் மீது படையெடுப்பின் வெல்லுவான் என்பது கருத்து.

**(வி.)** இரவுகாலத்தில் ஒரு கோட்டானை நூறு காக்கைக்கூடினும் வெற்றி பெறலாம், பகல்காலத்திலோ ஒரு காக்கையுடன் ஒரு

கோட்டான் வெற்றி பெறமாட்டாவாம், அவைபோல் சதுரங்க சேனைவல்லபமிருப்பினும் அதனதன் காலமறியாது பகைவர்மீது படையெடுக்கும் அரசன் வெற்றி பெறமாட்டான், காலமறிந்து படையெடுப்போனோ பகைவரை வெற்றி பெறுவான் என்பது விரிவு

**2. பருவத்தோ பொட்ட வொழுக திருவினை**
**தீராமெ யார்க்குங் கயிறு.**

**(ப.)** பருவத்தோ - அரசன் விருத்தி காலத்தை, டொட்ட - அநுசரித்து, வொழுக - எக்காரியத்தையும், நடாத்தல் வேண்டும், றிருவினை - வளர் பிறைச் செயல் தேய்பிறைச்செயலிரண்டினையும், தீராமெ - சரிவற வாராயாது செய்தல், யார்க்கும் - யாவருக்கும், கயிறு - தாங்களே சுறுக்கிட்டுக் கொள்ளுங் கயிற்றிற்கு ஒப்பாம் என்பது பதம்.

**(பொ)** அரசன் விருத்தி காலத்தை அனுசரித்து எக்காரியத்தையும் நடாத்தல் வேண்டும், வளர்பிறைச் செயல் தேய்பிறை செயலிரண்டினையும் சரிவர ஆராயாது செய்தல் யாவருக்கும் தாங்களே சுறுக்கிட்டுக் கொள்ளுங் கயிற்றுக்கு ஒப்பாம் என்பது பொழிப்பு

**(க.)** அரசன் தொடுக்குங்காரியாதிகள் யாவையும் விருத்திகாலங் குறைவ காலமறிந்து செய்யல்வேண்டும், அங்ஙனங் காலமறியாது

செய்தல் தங்கள் கழுத்தில் கயிறிட்டு தாங்களே சுறுக்கிட்டுக் கொள்ளுவது போலாம் என்பது கருத்து.

**(வி.)** புருவமென்னும் பிறை வளர்வது போலும் பிறை தேய்வதுபோலும் தொடுக்கு முயற்சிகள் சகலமுங் கூடிவருவதும் சிலது மாறுபட்டு குறைந்து வருவதும் இயல்பாம். இவற்றுள் கூடிவருங் காரியத்தில் முயன்று செய்வதாயின் சித்தியுண்டாம். மாறுபட்டு குறைவுபடுங்காலத்தில் முயல்வதாயின் சித்தியில்லாமற்போம். ஆதலின் அரசன் பருவமாகிய விருத்தி காலத்தையும் அமரமாகிய குறைவு காலத்தையுங் கண்டுணராது ஓர் காரியத்தில் முயல்வானாயின் கயிற்றினால் தன் கழுத்தை தானே சுறுக்கிட்டுக கொள்ளுவதற்கு ஒக்கும் என்பது விரிவு.

**3. அருவினை யென்வுளவோ கருவியாற்**

**கால மறிந்து செயின்.**

**(ப.)** கருவியாற் - தனது முயற்சியால், காலமறிந்து - அந்தந்த காலநிலையறிந்து, செயின் - அரசனோர் காரியத்தைத் தொடங்குவானாயின், அருவினை - முடியாத காரியம், யென்ப - என்று சொல்லும்படியானவை, வுளவோ - உளதோ வென்பது பதம்.

**(பொ)** தனது முயற்சியால் அந்தந்த காலநிலையறிந்து அரசனோர் காரியத்தைத் தொடங்குவானாயின் முடியாத காரியமென்று

சொல்லும் படியானவை உள்ளதோ என்பது பொழிப்பு.

**(க.)** அரசன் அந்தந்த கால பருவம் அறிந்து காரியத்தைத் தொடங்குவானாயின் முடியாத காரியம் ஒன்றுண்டோ , இல்லை என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் காலமறிந்து காரியத்தைத் தொடங்குவானாயின் முடியக் கூடாத அரிய காரியமாயினும் முடித்தே தீருவான் என்பது விரிவு.

**4. ஞாலங் கருதினுங் கை கூடுங் காலங்**
**கருதி யிடத்தாற் செயின்.**

**(ப.)** காலங்கருதி - அந்தந்த காலத்தை ய நுசரித்து, யிடத்தாற் - தன்னிட வலி கொண்டு, செயின் - காரியத்தைத் தொடங்குவானாயின், ஞாலங்கருதினும் - பூமியை முழுவதுமாள வெண்ணினும், கைகூடும் - அஃதமையுமென்பது பதம்.

**(பொ.)** அந்தந்த காலத்தை அநுசரித்து தன்னிட வலிகொண்டு காரியத்தைத் தொடங்குவானாயின் பூமியை முழுதும் ஆள எண்ணினும் அஃதமையும் என்பது பொழிப்பு.

**(க)** அரசன் காலபலமறிந்தும் இடபலமறிந்தும் எடுத்த முயற்சியில் முயன்று தேசமுழுவதும் ஆள எண்ணினும் அவை கைக்கூடும்

என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் எடுக்குங் காரிய காலபலமறிந்தும் தனதிட பலமாம் தன்பலந் தனது சதுரங்கசேனைபலம், தானிய பண்டி பலம், ஆயுதசாலை பலம், அரசவங்கத்தோர்பலம் யாவையுஞ் சரிபடத்திறுத்தி பூமி முழுவதையும் ஆளுதற்கு எண்ணினும் அவ்வெண்ணம் முடியும் என்பது விரிவு.

**5. காலங் கருதி யிருப்பர் கலங்காது**
**ஞாலங் கருது பவர்.**

**(ப.)** ஞாலங் - பூமி முழுவதையும், கருதுபவர் - ஆளும்படியாக வெண்ணுவோர், கலங்காது - யாதொன்றுக்கு மஞ்சாது, காலங் - அதற்குரிய காலத்தின்பேறில், கருதி - எண்ணம் வைத்து, யிருப்பர் - கார்த்திருப்பார் களென்பது பதம்.

**(பொ.)** பூமிமுழுவதையும் ஆளும்படியாக எண்ணுவோர் யாதொன்றுக்கும் அஞ்சாது அதற்குரிய காலத்தின் பேரில் எண்ணம் வைத்துக் கார்த்திருப்பார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** கன்யாதொன்றுக்கும் அஞ்சா அரசன் பூமி முழுவதையும் ஆளும்படியான எண்ணத்தைக் கொள்ளினும் அதற்குரிய காலத்தையே கருதி இருப்பான் என்பது கருத்து.

**(வி.)** எத்தகைய அரசர் வல்லபங்களுக்கும் அஞ்சாத சுத்த வீரத்தால் சகல தேசங்களையுந் தன்னாளுகைக்குட்படுத்திக் கொள்ள எண்ணினும் அதற்கு சித்தாய காலத்திற்கே கார்த்திருப்பான் என்பது விரிவு.

**6. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்**
**தாக்கர் க்குப்பேருந் தகைத்து.**

**(ப.)** ஊக்கமுடையா போருக்கு முயற்சியுடைய வரசன், னொடுக்கம் - காலம் நோக்கி நிற்கும் அடக்கமானது, தகா - ஆட்டுக்கிடா சண்டையில் பொரு - பின்னிக்குச் சென்று தாக்கர்க்கு - பிலக்கவிடித்தற்காய பேருந்தகைத்து - வல்லக் கிடாவின் வெற்றியை யொக்குமென்பது பதம்.

**(பொ.)** போருக்கு முயற்சியுடைய அரசன் காலம் நோக்கினிற்கும் அடக்கமானது ஆட்டுக்கிடா சண்டையில் பின்னுக்குச் சென்று பிலக்கவிடிக்கற்காய வல்லக்கிடாவின் வெற்றியை இக்கும் என்பது பொழிப்பு

**(க.)** போருக்கு முநிந்த வரசன் காலத்திற் கொடுங்கி நிற்றல் ஆட்டுக்கிடாவின் சண்டையில் பின்னுக்குச் சென்று முன்னோக்கி இடித்து வெற்றிபெறலை ஒக்கும் என்பது கருத்து.

**(வி.)** போருக்கு ஊக்கமிகுத்துள்ள அரசனுக்கு நால்வகை சேனை பலமும் புருஷ பலமும் மிகுதியாயிருப்பினும் காலத்தை நோக்கி ஒடுங்கினிற்றல் எத்தகைய தென்னில் ஆட்டுக்கிடாவானது சண்டையில் பின்னுக்குதைத்து முன்னேறி இடித்தலை ஒக்கும் என்பது விரிவு

**7. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம் பார்த்**

**துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.**

**(ப.)** காலம் பார்த் - யுத்தமாரம்பிக்கும் நேரம் பார்த்து. துள் வேர்ப்ப - தனதுட்பகையை, ரொள்ளியவர் - செலுத்தும் படியான வரசன், பொள்ளென - உடனுக்குடன், புறம்வேரார் - வேற்றரசர் மீது வாங்கே - யுத்தகளம் போகானென்பது பதம்.

**(பொ.)** யுத்தம் ஆரம்பிக்கும் நேரம் பார்த்து தனதுட்பகையை செலுத்தும் படியான அரசன் உடனுக்குடன் வேற்றரசர்மீது யுத்தகளம் போகான் என்பது பொழிப்பு.

**(க.)** காலம் பார்த்து யுத்தத்திற்குச் செல்லவேண்டிய அரசன் தன்னுட் பகையிருப்பினும் உடனுக்குடன் அங்கு செல்லான் என்பது கருத்து.

**(வி.)** காலத்தை முன்னோக்கி சகல காரியாதிகளையும், நடாத்தும் படியான அரசனுக்கு வேற்றரசர்களால் உள்ளக்கொதிப்பெழலாய பெரும்பகை தோன்றினும் உடனுக்குடன் வேற்றரசர் மீது

படையெடுத்துச் செல்லமாட்டான், காலம் நேர்ந்தபோது செல்லுவான் என்பது விரிவு.

**8. செறு நரைக்காணிற் சுமக்க விறுவரை**
**காணிற் கிழக்காந் தலை.**

**(ப.)** செறு நரைக்காணிற் - அரசன் பகைவரைக் கண்டபோது, சுமக்க - பாரமாகக்காணும், விறுவரை - அவர்கள் சிறையிற் கட்டுப்பட்டு, காணில் - அவர்களைக் காணு மிடத்து, கிழக்காந்தலை - தலைகுனிய நேர்ந்து போமென்பது பதம்.

**(பொ.)** அரசன் தன் பகைவரைக் கண்டபோது பாரமாகக்காணும், அவர்கள் சிறையிற் கட்டுப்பட்டு அவர்களைக் காணுமிடத்து தலை குனிய நேர்ந்து போம் என்பது பொழிப்பு

**(க.)** பகைவராம் அரசரைக் கண்டவுடன் பாரமாகத் தோன்றும். சிறையில் கட்டுப்பட்டு அவர்களைக் கண்டவுடன் தலையைக் கீழ்நோக்கும்படி யாகிவிடும் என்பது கருத்து.

**(வி.)** அரசன் தனது பகைவரைக் காணில் ராட்சியபாரந்தாங்கல தினம் அஃது பெருஞ்சுமையாகக் காணும் பகைவரது சிறையிற் கட்டுண் லோ அவர்களைக் கண்டவுடன் தலைக்கீழாகக் குனியும்படியாகும். ஆதலின் அரசனானவன் சாம தான பேத

தண்டமென்னும் சதுர்வித உபாயங்களைக் காலமறிந்து செய்யவேண்டும் என்பது விரிவு

**9. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே**
**செய்தற் கரிய செயல்.**

**(ப.)** எய்தற்கரிய - பகைவர் மீது தனதாயுதத்தைப் பிரயோகிக்கக்கூடிய, தியைந்தக்கா - காலம் நேர்ந்தபோது, லந்நிலையே - அக்காலத்திலேயே, செய்தற்கரிய - அரிய யுத்த முயற்சியை, செயல் - செய்ய வேண்டுமென்பது பதம்.

**(பொ.)** பகைவர்மீது தனது ஆயுதத்தைப் பிரயோகிக்கக்கூடிய காலம் நேர்ந்தபோது அக்காலத்திலேயே அரிய யுத்தமுயற்சியை செய்யவேண்டும் என்பது பொழிப்பு

**(க.)** அரசன் பகைவர்மீது தனதாயுதத்தை யெய்யுங்காலம் நேர்ந்தபோது அக்காலத்திலேயே யுத்தத்தை நடாத்த வேண்டும் என்பது கருத்து

**(வி.)** அரசனது யுத்தத்திற்கு வேண்டிய சகல காரியங்களுங் கைகூடுங் காலம் நேர்ந்தபோது அக்காலத்தையே முன்னிட்டு பகைவர் மீது படையெடுத்தலே வெற்றிக்கழகாகும் என்பது விரிவு.

**10. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**

## குத்தொக்க சீர்த்த விடத்து.

**(ப.)** கொக்கொக்க - கொக்கானது மீன் வருங் காலம் பார்த்து, கூம்பும் - பற்றிக்கொள்ளுமாபோல், பருவத்து - நேருங்காலமறிந்து, செய்வோன் - வெற்றிபெறுவான், மற்றதன் - காலமறியாது, சீர்த்தவிடத்து - கோபத்தால் யுத்தத்திற்கு முனிவதாயின், குத்தொக்க - தானே சோர்வடைவதற் கிடமுண்டாமென்பது பதம்

**(பொ.)** கொக்கானது மீன் வருங் காலமறிந்து பற்றிக்கொள்ளுமாபோல் நேருங்காலமறிந்து செய்வோன் வெற்றிபெறுவான், காலமறியாது கோபத்தால் யுத்தத்திற்கு முனிவதாயின் தானே சோர்வடைவதற்கிடமுண்டாம் என்பது பொழிப்பு

**(க.)** கொக்கானது ஒருமீன் வருமளவுங் கார்த்துப் பற்றிக்கொள்வது போல நேருங்காலம் பார்த்து படையெடுக்கும் அரசன் வெற்றியடைவான் அவ்வகையில்லாதவனோ தானே குத்துண்டு மடிவான் என்பது கருத்து.

**(வி.)** கொக்கின் உவமானமோ வருங்காலம் பார்த்தல் அவைபோலவே அரசனும் தனது பகைவரை வென்று அத்தேசத்தைக் கைப்பற்றுங்காலம் பார்த்து செய்வானாயின் வெற்றியடைவான். அவ்வகையக் காலம் பாராது தனது கோப வெறியால்

படையெடுப்பவனோ தானே குத்தூண்டு மடிவது ஒக்கும் என்பது விரிவு

## 54. இடனறிதல்

அரசனானவன் தனது வலியையுங் காலத்தையுமட்டிலும் பார்த்துக் கொண்டு யுத்தத்திற்கு முனைவதிற் பயனில்லை, எதிரியரசனது காட்டரண்மதில் நாட்டரண்மதில் மலையரண்மதில்கள் சூழ்ந்த இடங்களின் போக்கு வருத்துக்களை நன்குகண்டு தெளிந்து எவ்விடம் நின்று யுத்தம் புரியில் தனக்கு வெற்றியுண்டாமென்னு இடதிடமறிந்து படையை செலுத்த வேண்டியவற்றை விளக்கலானார்.

**1. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று**
**மிடங்கண்ட பின்னல் லது.**

**(ப.)** முற்று - யுத்தாரம்ப சகல முடிபையும், மிடங்கண்ட - எதிரியரசனிட நிலைகளைக்கண்டு, பின்னல்லது - தெளிந்த பின்பே யன்றி, மெள்ளற்க - அவர்களை மதியாது முயன்று, வெவ்வினையு - கடுஞ்சினத்தாலாய யுத்தச் செயலை, தொடங்கற்க - ஆரம்பிக்கலாகாதென்பது பதம்.

**(பொ)** யுத்தாரம்ப சகல முடிபையும் எதிரி அரசனிட நிலைக்கண்டு தெளிந்த பின்னரேயன்றி அவர்களை மதியாது முயன்று கருஞ சனத்த ஆரம்பிக்கலாகாது என்பது பொழிப்பு

**(க.)** அரசனானவன் யுத்தம் ஆரம்பிக்குங்கால் எதிரியரசன் இடங்கள் யாவையுங் கண்டு தெளிந்தபின்பே முநிதல் வேண்டுமென்பது கருத்து.

**(வி.)** எதிரியரசனது நாட்டரண், காட்டரண், மலையரண் முதலிய இடங்களின் போக்குவரத்து வழிகளையும் அங்கங்கு உண்டாம் இடுக்கண் களையும் தெரிந்து கொண்ட பின்பே யுத்தத்தை ஆரம்பித்து செல்லவேண்டும் என்பது விரிவு

**2. முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கு மரண் சேர்ந்தா மாக்கம் பலவந் தரும்.**

**(ப.)** முரண்சேர்ந்த - சகல விடுக்கமான வழிகளையு மறிந்து செல்லும், மொய்ம்பினவர்க்கு - திரண்ட சேனையையுடைய வரசனுக்கு, மரண்சேர்ந்தா - எதிரியரண்மனையைப் பற்றிய போது, மாக்கம் - பெருக்கமாய், பலவுந்ததரும் சகல சம்பத்து மடையக்கூடுமென்பது பதம்.

**(பொ.)** சகல இடுக்கமான, வழிகளையும் அறிந்து செல்லும் திரண்ட சேனையையுடைய அரசனுக்கு எதிரியரண்மனையைப் பற்றிய போது பெருக்கமாய் சகல சம்பத்தும் அடையக்கூடும் என்பது பொழிப்பு.

**(க.)** முரண்பட்டுள்ள சகல இடங்களையுங்கண்டு யுத்தத்திற்குச் செல்லும் அரசன் எதிரியினரண்மனையைக் கைப்பற்றி பல சுகமும் பெறக்கூடியவ என்பது கருத்து.

**(வி.)** படையெடுத்துச் செல்லும் அரசன் எதிரி தேசத்தின் முரண்பாடாய இடங்களின் வழிதெரிந்து செல்லுவோன் தன் சேனைகள் அதி சேதமுறாமலும் தனக்கோர் ஆபத்து வராமலும் அரண்மனையைக் கைப்பு இடங்கண்டறிந்து நடாத்திய செயலால் பல சுகத்தையுந் தரும் என்பது விரிவு.

**3. ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து**
**போற்றார்கட் போற்றிச் செயின்.**

**(ப.)** போற்றார்கட் - கோபத்தால் தன்னை மதியாவரசனை, போற்றிச் செயின் - மதிக்கச் செய்ய வேண்டுமாயின், விடனறிந்து எதிரி யெல்லையினிடமறிந்து யுத்தத்தில் முதியில், ஆற்றாரு - அடங்காகோபியும், மாற்றி - தன் கோபமடங்கி, யடுப் தனக்கடிமையாவானென்பது பதம்.

**(பொ)** கோபத்தால் தன்னை மதியா அரசனை மதிக்கச் செய்ய வேண்டுமாயின் எதிரி எல்லையினிடமறிந்து யுத்தத்திற்கு முநியில் அடங்காக்கோபியுந் தன் கோபமடங்கி தனக்கடிமையாவான் என்பது பொழிப்பு

**(க.)** தன்னை மதியா வரசனை மதிக்கச் செய்துக் கொள்ளவேண்டிய அரசன் அவர்கள் எல்லைக்கு இடுக்கமற்றதும் சுருக்க வழியும் எது என்னும் இடங்கண்டு யுத்தத்திற்குச் செல்லில் மதியா அரசனும் மதிப்புற்று ஒடுங்குவான் என்பது கருத்து.

**(வி.)** அவமதிப்பாக நடத்திவரும் அரசனை மதிக்கச் செய்துக்கொள்ள வேண்டிய அரசன் காலத்தையும் வலிமையுங் கண்டுக்கொள்ளுவதுடன் எதிரியின் இடங்களின் இடுக்கத்தையும், சுறுக்கத்தையும் நன்கறிந்து படையெடுத்து விடுவானாயின் அவனவன் அவமதிப்படங்கி மதிப்புற்று அடைக்கலம் புகுவான் என்பது விரிவு.

**4. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து**
**துன்னியார் துன்னிச் செயின்.**

**(ப.)** துன்னியார் - அடக்கமுடைய வரசர், துன்னி - இன்னு மடக்கமுற்று, பிடனறிந்து - எதிரி யரசனின் சுறுக்க வழியினிடங்களைத் தெரிந்து, செயின் - யுத்தஞ்செய்ய முயலுவாராயின், எண்ணியார் - தன்னை யவமதிப்பாக வெண்ணியிருந்த வரசர்களது , ரெண்ணமிழப்ப - எண்ணங்கள் யாவையு மிழந்து விடுவார்களௌென்பது பதம்.

**(பொ.)** அடக்கமுடைய அரசர் இன்னுமடக்க முற்று எதிரியரணின் சுறுக்கவழியினிடங்களைத் தெரிந்து யுத்தஞ் செய்ய முயலுவாராயின் தன்னை அவமதிப்பாக எண்ணியிருந்த அரசர்களது எண்ணங்கள் யாவையும் இழந்து விடுவார்கள் என்பது பொழிப்பு

**(க.)** அவமதிப்பின் எண்ணத்திற்குள்ளாய அரசன் தன்னரண்மனையை முத்திரிக்க வந்துவிடுவானாயின் அவ்வெண்ணத்தை இழந்தே விடுவார்கள் என்பது கருத்து.

**(வி.)** அரசருக்குள் மற்றோரரசரை மனப்பூர்வமாக அன்பு பாராட்டாது அவமதித்து நிற்பது இயல்பாம். அவற்றால் அவமதிப்புற்றுள்ள அரசன் எதிரியினிடமறிந்து படையெடுத்து அவனரண்மனையை முற்றிகையிட்டு விடுவானாயின் அவமதிப்பாய எண்ணங்கள் யாவும் ஒழிந்து மதிப்புற்று நாணுவான் என்பது விரிவு.

**5. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி**

**னீங்கின தனை பிற.**

**(ப.)** நெடும்புனலுள் - நிறைந்தவேரி நீரிலுள்ள, முதலை - நீர்ப்புலியானது, வெல்லு - சகல சீவர்களையும் வென்றுவிடும், யடும்புனலி - நிறைந்த நீர், னீங்கி - வற்றிய பூமியில், னதனை -

அம்முதலையை, பிற - அன்னிய சீவன்கள் யாவும் வென்றுவிடுமென்பது பதம்

**(பொ.)** நிறைந்த ஏரிநீரிலுள்ள நீர்ப் புலியானது சருவ சீவர்களையும் வென்று விடும், நிறைந்த நீர் வற்றிய பூமியில் அம்முதலையை அன்னிய சீவன்கள் யாவும் வென்றுவிடும் என்பது பொழிப்பு

**(க.)** நீர் நிறைந்த இடத்தில் வாழும் முதலை சருவ சீவர்களையும் வென்றுவிடும், நீரில்லாவிடமாம் பூமியில் வந்துவிடுமாயின் சருவ சீவர்களிடத்துந் தோல்வியடைந்து போம் என்பது கருத்து.

**(வி.)** நிறைந்த நீரில் வாசஞ்செய்யும் முதலையானது நீரிலுள்ளவரையில் புலிக்கொப்பாய பலனுற்று சருவ சீவர்களையும் வென்றுவருவதால் ஓடதி சாஸ்திரிகளால் நீர்ப்புலியென்னும் மறுபெயரையும் பெற்றிருக்கின்றது. அத்தகைய முதலையானது நீருள்ள இடத்தைவிட்டு பூமியில் வந்து விடுமாயின் சருவ சீவர்களிடத்தும் தோல்வியடைவது அனுபவமுங் காட்சியுமாதலின் அரசன் தன்னிட வலியையும் எதிரியினிட வலியையுங் கண்டு யுத்தத்திற்கு முனியல் வேண்டும் என்பது விரிவு.

**6. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு**

**நாவாயு மோடா நிலத்து.**

**(ப.)** கால்வ - பூமியிற் கால்விட்டோடும், னெடுந்தேர் - உயர்ந்த ரதமானது, கடலோடா - திரண்ட நீரினிலோடாவாம், கடலோடு - திரண்ட நீரினிலோடும், நாவாயு - பாய்மரக்கப்பலானது. நிலத்து - பூமியின் கண், மோடா - ஓடாவாமென்பது பதம்.

**(பொ.)** பூமியிற் கால்விட்டோடும் உயர்ந்தரதமானது திரண்ட நீரினில் டைாவாம் திரண்ட நீரினில் ஓடும் பாய்மரக்கப்பல் பூமியின்கண் ஓடாவாம் என்பது பொழிப்பு.

**(க.)** பூமியில் ஓடும் பெருத்த ரதம் நீரினில் ஓடாது நீரினி
டும் மரக்கலமானது பூமியில் ஓடாது அவைபோல் இடனறிந்து யுத்தத்திற்கு முநியல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** பூமியில் ஓடும் ரதம் நீரில் ஓடக் கூடாததும் நீரில் ஒடுங் கப்பல் பமியிலோடக்கூடாத துமாபோல் அரசன் சுத்த வீரனாயினும் இடமறிந்து யுத்தத்திற்கு முநிவனேல் வெற்றி பெறுவான், இடனறியாது யுத்தத்திற்கு முநிவனேல் தோல்வியடைவான் என்பது விரிவு.

### 7. அஞ்சாமெ யல்லாற்றுணை வேண்டா வெஞ்சாமெ
### யெண்ணி யிடத்தாற் செயின்.

**(ப.)** அஞ்சாமெயல்லாற் - எதுக்கும் பயப்படாத வரசனுக்கு, றுணைவேண்டா படைத்துணை வேண்டாதாயினும், யெண்ணி -

நன்காலோசித்து, யிடத்தாற் செயின் - இடமறிந்து யுத்தாரம்பஞ் செய்யின், வெஞ்சாமெ - ஏதுக்கு மஞ்சா வீரங்குன்றாதென்பது பதம்.

**(பொ.)** ஏதுக்கும் பயப்படாத அரசனுக்கு படைத்துணை வேண்டாதாயினும் நன்காலோசித்து இடமறிந்து யுத்த ஆரம்பஞ் செய்வானாயின் எதுக்கும் அஞ்சா வீரங்குன்றாது என்பது பொழிப்பு.

**(க.)** சுத்தவீரமுடைய அரசனுக்குத் துணைவேண்டாதாயினும் பகைவரிடம் அறிந்து முநிவானாயின் வீரங் குறைவுபடாது என்பது கருத்து.

**(வி.)** அரசன் தனது அதிவீர பராக்கிரமத்தால் துணை வேண்டாது யுத்தத்திற்குச் செல்லுவதில் எதிரிகளின் இடதிடநுட்பங்களைக் கண்டுகொண்டு செல்வானாயின் தனது வீரங்குறையாமலே வெற்றி பெறுவான் என்பது விரிவு.

**8. சிறுபடையான் செல்லிடஞ் சேரினு றுபடையா**
**னூக்க மழிந்து விடும்.**

**(ப.)** சிறுபடையான் - சொற்ப சேனைகளைக் கொண்டும், செல்லுமிடஞ் - யுத்தத்திற்குச் செல்லுமிடனுட்பமறியாமலும், சேரி - சென்றுவிடுவானாயின், னுறுப்படையா - அவ்விடமுள்ள சேனை பலத்தால்,னூக்க - தனது வீரமுயற்சி, மழிந்து விடும் - குன்றி போமென்பது பதம்.

**(பொ)** சொற்ப சேனைகளைக் கொண்டும் யுத்தத்திற்குச் செல்லுமிட நுட்பம் அறியாமலும் சென்று விடுவானாயின் அவ்விடமுள்ள சேனை பலத்தால் தனது வீரமுயற்சி குன்றிப்போம் என்பது பொழிப்பு.

**(க.)** தனது வீரத்தால் சேனைபலம் இல்லாமலும் எதிரியினிட பலம் அறியாமலும் யுத்தத்திற்குச் செல்லுவதாயின் அவ்விடமுள்ள சேனைகளால் வீரங் குன்றிப் போம் என்பது கருத்து.

**(வி.)** அரசன் தனக்குள்ள சுத்த வீரத்தால் சிறுபடையை அழைத்துக்கொண்டு எதிரியரசன் இடதிட்டங்களைக் கண்டறியாமல் யுத்தத்திற்குச் சென்று விடுவானாயின் இடங்களின் இடுக்கண்களாலும் எதிரி சேனையாலும் முறியடிப்பட்டு தனது சுத்த வீரம் யாவும் அழிந்து போம் என்பது விரிவு.

**9. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த**
**ருரைநிலத்தோ டொட்ட லரிது.**

**(ப.)** சிறைநலனுஞ் - அரசனது நற்காப்பும், சீரு - நற்சீரும், மிலரெனினு - இல்லாதவர்களென்றும் சொல்லப்படும், மாந்த - அரசர்கள், ருரைநிலத்தோ - தாங்கள் வாழும் பூமியில், டொட்டலரிது - நிலையாக வாழ்தலில்லாமற் போவார்கள் என்பது பதம்.

**(பொ.)** அரணது நற்காப்பும் நற்சீரும் இல்லாதவர்களென்று சொல்லப்படும் அரசர்கள் தாங்கள் வாழும் பூமியில் நிலையாக வாழ்தலில்லாமற் போவார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** அரண்மனையின் நற்காப்பும் நற்சீரும் இல்லாதவர்கள் என்று கருதப்படும் அரசர்கள் அவ்வரணில் பதியாக நிலைக்க மாட்டார்கள் என்பது கருத்து.

**(வி.)** அரணை சிறையாகக் காக்கும் மதில் காப்பு அகழி காப்பில்லாமலும் மதியூகச் சீரில்லாமலும் வாழும் அரசரென்றெண்ணப்படுவோர் தங்களரணுள்ள பூமியில் நிலையாக நிலைக்கமாட்டார்கள் என்பது விரிவு.

**10.- காலாழ் களரி னரியடுங் கண்ண ஞ்சா**

**வேலாண் முகத்த களிறு.**

**(ப.)** வேலாண் முகத்த - கூரியவேலேந்தியுடையவனுடைய முகத்தை, கண்ணஞ்சா - கண்டும் பயப்படாத, களிறு - யானையினது, காலாழ்களரி - தாங்களாம்ந்த சேற்றிலமுந்திவிடுமாயின், னரியடுங் - நரியினுக்கு பயந்து போமென்பது பதம்.

**(பொ.)** கூரியவேலேந்தி உடையவனுடைய முகத்தைக் கண்டும் பயப்படாத யானையினது கால்கள் ஆழ்ந்த

சேற்றிலமுந்திவிடுமாயின் நரியினுக்கு பயந்துபோம் என்பது பொழிப்பு.

**(க.)** அதிகக்கூராய வேலேந்தியுடையவனைக் கண்டஞ்சாத யானை யானது ஆழ்ந்த சேற்றிலழுந்திவிடுமாயின் நரிக்கு பயந்து ஒடுங்கிப்போம் என்பது கருத்து.

**(வி.)** கூரிய வேலேந்தியுடையவனுக்கு அஞ்சாத யானை சேற்றிலழுந்தி விடுமாயின் சிறிய ஓர் நரிக்கஞ்சி ஒடுங்கி விடுவதுபோல் அதிவீரமிகுத்த அரசனாயினும் இடுக்கணாய இடத்திலகப்பட்டுக் கொள்ளுவானாயின் வீரங்குன்றி தோல்வியடைவானாகலின் எதிரியினிடமறிந்து யுத்தத்தில் முநியல் வேண்டும் என்பது விரிவு.

## 55. தெரிந்து தெளிதல்

அதாவது அரசனானவன் தனது மந்திரவாதிகளாயிருப்பவருள் வஞ்சினம் பொறாமெ, பொருளாசை, குடிகெடுப்பு மிகுத்தவர்களே அதிகரித்திருக் கின்றார்களா அன்றேல் நீதியும் நெறியும் சீவகாருண்யமும் பகுத்தறிவும் கலை நுலாராய்ச்சியும் முன்பின் காலவகைகளை அறிந்து மதியூகங் கூறுவோரும் அரசனுக்கு நேரும் பழிபாவங்கள் தங்களையே சாருமென சத்தியதன்மத்தில் நிலைப்போருமாய பெரியோர்களாயுள்ளார்களா எனத் தெரிந்து

தெளிந்தும், இரதகஜ துரக பதாதிகளாகிய நால்வகை சேனைகளும் அரசாங்கப்பற்றில் அமைந்துள்ளதா என்றும், ஆயுதசாலைகள் நிறைந்துள்ளதாவென்றும் தானிய பண்டிகள் நிறைந்திருக்கின்றதாவென்றும் தெரிந்து தெளிந்தும் தானும் தனது சேனைகளும் சுகமுற்றிருக்கின்றார்களாவென்றுந் தெரிந்து தெளிந்தும் தனதுயிருக்கு ஓராபத்தும் வாராத காப்புகளைத் தெரிந்து தெளிந்தும் ஓர் காரியத்தில் முநியல் வேண்டும் என்பதேயாம்.

## 1. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
## றிறந்தெரிந்து தேறப் படும்.

**(ப.)** அறம் - தேசத்தில் தன்மநெறி பிசகாசெயலும், பொரு - சகலபொருட்களினிறைவும், ளின்ப - சகல சுகமும், முயிரச்ச - உயிர்காப்பும், நான்கின் - ஆகிய நான்கின் றிறந்தெரிந்து - திடங்களை யறிந்து, தேறப்படும் - உறுதிப்படவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** தேசத்தில் தன்மநெறி பிசகா செயலும் சகல பொருட் களினிறைவும் சகல சுகமும் உயிர்காப்பும் ஆகிய நான்கின் திடங்களை அறிந்து உறுதிப்பட வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** அரசனானவன் தன்மநெறி, பொருள் நிறைவு, சுகாதாரம், உயிர்காப்பு இந்நான்கையும் உறுதிபடுத்திக்கொள்ளல் வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அறநெறி வழுவா செங்கோலையும் சகல பொருட்களினிறைவையும் சகல சுக ஆதாரங்களையும் தனதுயிர் காப்புக் காயப்படைத்துணையையும் உறுதிபெறச் செய்துக்கொண்டு சகல காரியங்களிலும் முநிதல் வேண்டும்
என்பது விரிவு

**2. குடிபிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பறியு**
**நாணுடையான் கட்டே தெளிவு.**

**(ப.)** குடி பிறந்து - நல்லக்குடும்பத்திற்பிறந்து, குற்றத்தினீங்கி - தீவினைகளுக்கஞ்சி யொதிங்கி, வடுப்பறியு - குற்றங்களை யறிந்து நாணுடையான் - ஒடுங்கும் படியான தோழன், கட்டே - இடத்தே, தெளிவு - சகலவரிய பொருளும் விளங்குமென்பது பதம்.

**(பொ.)** நல்லக் குடும்பத்திற் பிறந்து தீவினைகளுக்கஞ்சி ஒதுங்கி குற்றங்களையறிந்து, ஒடுங்கும்படியான தோழனிடத்தே சகல அரிய பொருளும் விளங்கும் என்பது பொழிப்பு.

**(க.)** கருணையும் நீதியும் அமைந்த குடும்பத்திற்பிறந்து யாதொரு குற்றங்களுக்கும் ஆளாகாது அகன்று சகலவகைக் குற்றங்களுக்கும் ஒடிங்கி நடக்குந் தோழனால் சகல சுகத்தெளிவும் உண்டாம் என்பது கருத்து.

**(வி.)** நல்லொழுக்கக் குடும்பத்திற் பிறந்து நாணமுறுஞ் செயல்களுக்கு ஒதிங்கி சகல குற்றங்களையும் ஆய்ந்து அடங்கி நிற்போனை அரசன் தோழனாகக் கொள்ளுவானாயின் சகல தெளிவும் பெறுவான் என்பது விரிவு.

**3. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா**
**வின்மெ யரிதே வெளிறு.**

**(ப.)** அரியகற் - அரியகலை நூற்களைக் கற்று, றாசற்றார் - சகல குற்றங்களு மற்றுள்ளோரை, கண்ணுந் - கண்டு தெளிந்து. தெரியுங்கா - தோழனாகத் தெரிந்து கொள்ளு மரசனுக்கு, லின்மெயரிதே - ஒருபொருளுமில்லையென்று சொல்லுவோரிராரென்பதே, வெளிறு - வெளிப்படையா மென்பது பதம்.

**(பொ.)** அரிய கலை நூற்களைக் கற்று சகல குற்றங்களு மற்றுள்ளோரைக் கண்டு தெளிந்து, தோழனாகத் தெரிந்து கொள்ளும் அரசனுக்கு ஒரு பொருளும் இல்லையென்று சொல்லுவோரிராரென்பதே வெளிப்படையாம் என்பது பொழிப்பு

**(க.)** கலை நூற்களைக் கற்று சகல குற்றங்களு மற்றுள்ளப் பெரியோரைத் தோழராகக் கொண்ட அரசனுக்கு இல்லையென்னும் பொருளொன்று இராது என்பதே கருத்து.

**(வி.)** சகல கலை நூற்களையும் சரிவரக் கற்று மனமாசகன்ற பெரியோரை அரசன் தெரிந்தெடுத்துக் கொள்ளுவானாயின் அவனது தேசத்தில் ஒரு பொருளுண்டு ஒரு பொருளில்லையென்று கூறாது சகல வளமும் பொருந்தி நிற்கும் என்பதே விரிவு.

**4. குணனாடிக் குற்றமு நாடி யவற்றுண்**
**மிகைநாடி மிக்க கொளல்.**

**(ப.)** குணனாடி - அரசன் நற்குண முள்ளோரை நேசிப்பதுபோல, குற்றமுநாடி தீயகுணமுள்ளோரையும் நேசித்து, யவற்றுண் - அவர்களுக்குள், மிகைநாடி - நல்லோர்களையே தேடி, மிக்க கொளல் - அதிகமாக நேசிக்கவேண்டுமென்பது பதம்.

**(பொ.)** அரசன் நற்குணமுள்ளோனை நேசிப்பதுபோல தீய கணமுள்ளோரையும் நேசித்து அவர்களுக்குள் நல்லோர்களையே தேடி, அதிகமாக நேசிக்க வேண்டும் என்பது பொழிப்பு.

**(க.)** நற்குணமுள்ளோரை நேசிப்பது போலவே துற்குணமுள்ளோரையும் அரசன் நேசித்து அவர்களுக்குள் நற்குணமுள்ளோர் நேசிப்பையே மிக்க பாவிக்க வேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தேசக்குடிகள் யாவருக்கும் பொதுவாய தந்தையாதலின் சகலரையும் மைந்தர்போல் பாவித்து நல்லோரையும்

பொல்லோரையும் நேசித்து அவர்களுள் நல்லோர் வாக்கியங்களையே மிகுதியாக்கொண்டு தனது ராட்சியபாரத்தைத் தாங்கவேண்டும் என்பது விரிவு.

**5. பெருமெக்கு மேனைச் சிறுமெக்குந் தத்தங்**
**கருமமே கட்டளைக் கல்.**

**(ப.)** பெருமெக்கு - தம்மெ மேலாக வுயர்த்திக்கொள்ளற்கும், மேனை - மற்றும், சிறுமெக்குந் - தம்மெக் கீழாகத் தாழ்த்திக் கொள்ளற்கும், தத்தங் - தாங்கள் தாங்கள் செய்யும், கருமமே - செயல்களே காரணமென்பது, கட்டளைக்கல் - கல்லின் மீதெழுத்து போலாமென்பது பதம்.

**(பொ)** தம்மெ மேலாக வுயர்த்திக் கொள்ளற்கும் தம்மெக் கீழாகத் தாழ்த்திக் கொள்ளற்கும் தாங்கள் தாங்கள் செய்யுஞ் செயல்களே காரணமென்பது கல்லின் மீதெழுத்து போலாம் என்பது பொழிப்பு.

**(க.)** தன்னை உயர்த்திக் கொள்ளற்குந் தாழ்த்திக்கொள்ளற்கும் தங்கடங்கள் செயல்களே என்பதை கல்லின்மீது எழுத்தைப்போல் எண்ணவேண்டும் என்பது கருத்து.

**(வி.)** அரசனானவன் தெரிந்து தெளிதற்குத் தானே காரணன் ஆதலின் தம்மெயுயர்த்திக் கொள்ளற்குந் தாமே காரணன் என்பது

கல்லின் மீதெழுத்துப் போலுள்ளதால் சகலவற்றையுந் தெளிந்து செய்யல் வேண்டும் என்பது விரிவு.

### 6. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர் பற்றிலர் தாணார் பழி.

**(ப.)** அற்றாரை - சகல பற்றுக்களு மற்று நீதிநெறியமைந்த மேலோரை நேசித்து, தேறுத - அவர்பால் தெரிந்து தெளிதலை, வோம்புக - விரும்பல் வேண்டும், மற்றவர் - வேறு சிலராய, பற்றிலர் - நீதிநெறியிற் பற்றில்லாதவர்களோ, பழி - நிந்தனைக்கு, நாணார் - வெட்கமடையாரென்பது பதம்.

**(பொ.)** சகல பற்றுக்களுமற்று நீதி நெறி அமைந்த மேலோரை நேசித்து அவர்பால் தெரிந்து தெளிதலை விரும்பல் வேண்டும், வேறு சிலராய நீதிநெறி பற்றில்லாதவர்களோ நிந்தனைக்கு வெட்கம் அடையார்கள் என்பது பொழிப்பு.

**(க.)** நீதிநெறியிற் பற்றுள்ள மேலோரை நேசிக்கில் தெளிவுண்டாம், நீதிநெறியற்றவர்களை நேசிக்கில் பழிபாவத்திற்கு அஞ்சாதும் நாணமற்றும் அடுத்தோரைக் கெடுப்பார்கள் என்பது கருத்து.

**(வி.)** நீதிநெறியிற் பற்றுண்டாய் ஏனைய பற்றுக்கள் யாவும் அற்றுள்ள மேலோரைநோக்கில் தெளிவுண்டாகும் மதியூகமளிப்பர். நீதிநெறியிற் பற்றில்லாது சகல பற்றும் அமைந்துள்ள கீழோரை

நேசிக்கில் பழிக்கும் நாணத்திற்கும் அஞ்சாது தெளிவற்ற நிலையில் விடுத்து பாழ்படுத்தி விடுவார்கள் என்பது விரிவு.

**7. காதன்மெ கந்தா வறிவறியார்த் தேறுதல்**
**பேதைமெ யெல்லாந் தரும்.**

**(ப.)** காதன்மெ - காமிய பற்றுற்றோர், கந்தா - அதையே முகந்து நிற்பராதலின், அறிவறியார் - அவர்கள் தெளிவினிலையறியார், தேறுதல் - அவர்களை யடுத்துத் தெளிய வேண்டுமாயின், பேதைமெ - அறிவிலிச் செயலுக்குரிய, யெல்லாந்தரும் - சகல கேடுகளையுங் கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** காமியபற்றுற்றோர் அதையே முகர்ந்து நிற்பராதலின் அவர்கள் தெளிவினிலை அறியார். அவர்களை அடுத்துத் தெளியவேண்டுமாயின் அறிவிலிச் செயலுக்குரிய சகல கேடுகளையுங் கொடுக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** காமியப்பற்று மிகுத்தோர் அதையே நுகர்ந்து நிற்போராகலின் அவர்களைத்
ரத் தெளிவுற அடுத்தல் கேட்டிற்கே வழியாம் என்பது கருத்து.

**(வி.)** எவற்றானுந் தன்னை ஆய்ந்து தெளிதற்கு சற்று பேதமெயுற்றவன் காமியப்பற்று மிகுத்தோனை அடுத்துத் தெளிய

முயல்வானாயின் மேலும் மேலும் பேதைமெயுற்று அல்லலடைவான் என்பது விரிவு.

**8. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**

**திரா விடும்பை தரும்.**

**(U.)** தேரான் - தன்னிற்றானே சற்றுந் தெளிவில்லாதவன், பிறனை - அன்னியனை யடுத்தே, தெளிந்தான் - தெளிவதாயின், வழிமுறை - தனது குலமரபிற்கு, தீராவிடும்பை - மீளா துக்கத்தை, தரும் - கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** தன்னிற்றானே சற்றுந் தெளிவில்லாதவன் அன்னியனை அடுத்தே தெளிவதாயின் தனது குலமரபிற்கு மீளா துக்கத்தை கொடுக்கும் என்பது பொழிப்பு.

**(க.)** தான் தானே தெளிவுறாது ஏனையோரால் தெளிவுற முயல்வது மனுகுலவரம்பிற்கே வழுவாம் என்பது கருத்து.

**(வி.)** மனுகுலத்தானென்னும் சிறப்புப் பெயரைப் பெற்று தன்னிற்றான் தெளிவுறாது அன்னியனைக் கொண்டு தெளிவுற முயல்வது மனுகுல் சிறப்பு கெடுவதுடன் தானும் பலவகை இடும்பைக்குள்ளாவான் என்பது விரிவு

**9. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்**

**றேறுக தேறும் பொருள்.**

**(ப.)** தேறற்க யாரையுந் - ஒருவரை யடுத்து தெளிய முயலாமலும், தேராது - அவ்வகைத் தெளியாமலும், தேர்ந்த பிற் - தன்னிற்றானே தெளிந்து, றேறுக் - முன்னேறுவதால், தேறும் பொருள் - சகல பொருளும் உறுதி பெறுமென்பது பதம்.

**(பொ.)** ஒருவரை அடுத்து தெளிய முயலாமலும் அவ்வகைத் தெளியாமலும் தன்னிற்றானே தெளிந்து முன் தேறுவதால் சகல பொருளும் உறுதிபெறுமென்பது பொழிப்பு.

**(க.)** அன்னியரை அடுத்துத் தெளிவு பெறுவதினும் தன்னிற்றானே தெளிவு பெறுவானாயின் சகலபொருளும் நிலையாம் என்பது கருத்து.

**(வி.)** அன்னியனை யடுத்துத் தெளிவுறுவதில் ஐயமும் மறுப்பும் நிறைந்து தோற்றலால் தெரிந்து தெளிய வேண்டியவன் தன்னிற்றானே தெரிந்து தெளிந்த நிலையடைவானாயின் அவன் கோரிய சகல பொருளும் நிலைபெற்றுப்போம்
என்பது விரிவு.

**10. தேரான் தெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்**
**திரா விடும்பை தரும்.**

**(ப.)** தேரான் - தன்னிற்றானே தெரியாது, தெளிவுந் - தெளிவடைந் தேனென்பதும், தெளிந்தான்க - தெளிந்தவனெனத்தோன்றி, ணையுறவுந் - அதிலச்சமுறுவதுமாயச் செயல், தீராவிடும்பை - மீளா துக்கத்தை, தரும் - கொடுக்குமென்பது பதம்.

**(பொ.)** தன்னிற்றானே தெரியாது தெளிவடைந்தேனென்பதும், தெளிந்தவனெனத் தோன்றி அச்சமுறுவதுமாயச் செயல் மீளா துக்கத்தைக் கொடுக்குமென்பது பொழிப்பு.

**(க.)** தன்னை ஆய்ந்தறியாதவன் தெளிந்தோனென்பதும், தெளிந்தோ னென்பவன் தன் செயலால் அஞ்சி நடப்பதுமாயச் செயலால் மீளா துக்கத்திற்குக் கொண்டு போம் என்பது கருத்து.

**(வி.)** தன்னையுந் தன் செயலையுந் தெரிந்து தெளியாதவன் தெளிந்தேனென்பதும் தெளிந்தோனென வெளிதோன்றி தன் செயல்களில் அச்சமுறுவதுமாயின் மீளா துக்கத்தையே அனுபவிக்கவேண்டி வரும் என்பது விரிவு

(***திரிக்குறள் உரை புத்தகம் 5. இலக்கம் 24இல் தொடங்கி அயோத்திதாசர் இறக்கும் வரை தொடர்ச்சியாக வெளியிடப்பட்டது. உரை முற்றுப் பெறவில்லை.***)

## ஆசாரிய துரை க. அயோத்திதாஸ் பண்டித் தம்மதாயகா அவர்கள் பஞ்சஸ்கந்த பிரிவினை அடைந்த துக்க செய்தி

நாம் இங்கு விவரிக்க வேண்டியிருக்கிற துக்க செய்தியைக் குறித்து நினைக்கவும் மனம் தடுமாறுகிறது, சொல்லவும் வாய் குளறுகிறது. எழுதவும் கை கூசுகிறது. ஆயினும் மனதை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு நமது வாசகர்களுக்கு தமிழன் பத்திராதிபர் பண்டிதபெருமானவர்கள் பஞ்சஸ்கந்த பிரிவினை அடைந்த விசநகரமான சமாசாரத்தைத் தெரிவிக்கவேண்டிய கொடுங்கடமெய்க்கு உட்பட்டுள்ளோம். இந்தத் தமிழன் என்னும் வாராந்தரப் பத்திரிகையை எவ்வளவோ சிரமத்துடனும் சிரத்தையுடனும் துவக்கி எத்தனையோ இடையூறுகள் நேர்ந்தும், அவை யொன்றுக்கும் பின் வாங்காமல் பூர்வமான மனோபலத்துடன் தம் அறநெறியிலேயே நம்பிக்கை வைத்துச் சென்ற ஏழாண்டுகளாக தாம் அந்திம தசையை அடையுமட்டும், தமிழ்நாடு முழுவதும் பெருந்தகை என்று கொண்டாடும்படி புகழுடன் பத்திரிகையை நடாத்திவந்தார். நமது நாட்டு பூர்வக் குடிகளின் உத்தாரணத்தையும் தேசாசாரச்சீர்திருத்தத்தையும் முன்னிட்டே இவர் இப்பத்திரிகையை ஸ்தாபித்து அதின் ஆசிரியராயிருந்து வந்தாரென்பது நமது வாசகரனைவருக்கும் தெரிந்த விஷயம். தற்காலத்தில் இங்ஙனம் கைம்மாறு கருதாது தேசத்துக்காகவும் தாழ்ந்த வகுப்பாரென இழிவு படுத்திவரும் பிரஜைகளுக்காகவும் உழைப்பவர் இருப்பது வெகு

அருமெ. இவர் பிரிவு தமிழ் பாஷாபிவிருத்திக்கும், பௌத்ததன்மப் பரவுதலுக்கும், மநுகோடிகளின் சீர்திருத்தத்துக்கும் ஆற்றொணா துயரை விளைக்கும் பெரிய நஷ்டமே ஆகும். இம்மகானுடைய அன்பின் பெருக்கையும், அறநெறியைக் கைப்பிடித்தொழுகும் வல்லமெயும், கருணை தங்கிய பிரிடிஷ் ராஜாங்கத்தின் பூர்ண பக்தி விசுவாசமும் எம்மால் எடுத்துரைக்க இயலாது.

இப்புண்ணிய புருஷர் இவ்வளவு சீக்கிரம் மறைவார் என்று எள்ளளவேனும் யாம் எண்ணவில்லை. கடைசிவரையிலும் தாம் தம் வேலைகளை செவ்வையாகவே செய்து கொண்டு வந்தார். பௌத்த தன்மத்தைச் சேர்ந்த எமக்குத் திடீரென்று நேரிட்ட இப்பிரிவு சொல்லமுடியாத வியாகூலத்தைத் தருகிறது. அவர் அந்திமகாலத்தைக் குறித்து சொல்லும் போது ரோமம் சிலிர்க்கின்றது, மெய்ந்நடுங்குகின்றது. அவர் ஒருவாரங்கூடச் சரியாய் வியாதியுடன் படுத்திருக்கவில்லை. அவருக்குத் தாம் இப்பொய்யுடலை நீத்துப்போக வேண்டிய தருணம் வந்துவிட்டது என்பது தெரிந்துவிட்டது போலும், பௌத்த ஸாஸனத்துக்குரிய மனவமைதியோடு அவர் இறுதி வரையிலும் எப்போதும் போலத் தமக்கு வாய்ந்த வாக்கு சாமார்த்தியத்துடன் தம் நண்பர்களுக்கும் சீடர்களுக்கும் அறநெறியைக் கைப்பிடித்து வாழ்ந்துவரும்படி இதோபதேசம் செய்து கொண்டிருந்தார். தம்காலம் நெருங்கிவிட்டதைக் குறித்து ஒரு சிறிதும் கலக்கமடையாமல், தாம்

பௌத்ததன்மத்திற்காகவும், பூர்வக்குடிகளின் சீர்திருத்தத்திற்காகவும் பாடுபட்டுவந்த வேலை இடையுறாமல் மேன்மேலும் நடந்தேற வேண்டும் என்று புத்ததன்ம சங்கமென்னும் முத்திறமணியைத் தோத்திரித்துக் கொண்டிருந்தார். இம்மகானுடைய அருள் நிறைந்த மனமும், மரணத்துக்குப் பயப்படாத தூய்மெயும் இருந்தவாறு எம்மனதை வசுகரிக்கின்றது. இனி எம்மெய்ப்பற்றியே சிறிது சொல்ல வேண்டியிருக்கிறது. எமது அருமெ தந்தையராகிய தெய்வப்புலமெய் க. அயோத்திதாஸ பண்டிதர் அவர்கள் மறைந்தது எம்மெ அடியற்ற மரமாகச் செய்துவிட்டது. பௌத்ததன்ம ஏற்பாடுகளைத் தலைமேற் கொண்டு அநாதாரவாய் நிற்கிற ஏழையேம் எமது தந்தையார் நடாத்திவந்த தன்ம கைங்கர்யமாகிய "தமிழன்' பத்திரிகையின் பத்திரிகாசிரியராயிருக்கும் கடினமான தொழிலை ஏற்றுக்கொண்டோம். இது கோணாமல் நடந்தேறுவதற்கு சாத்தருமம் திருவருள் புரியுமாக. விசாகா தினத்திற்கு 4-நாளுக்கு முன் தினமாகிய 1914, மே மாதம் 5 நாள் செவ்வாய்கிழமை காலை 5மணி சங்கை பண்டிதரவர்கள் பஞ்சஸ்கந்த பிரிவினையடைந்தனர். அவர் வியாதியின் கொடுமையைப்பற்றிக் கொஞ்சமேனும் அவஸ்தைப்பட வில்லை. தாமே கைதேர்ந்த வைத்திய பண்டித சிகாமணியாயிருந்ததினாலும் தமக்கே தம்மாயுளைக் குறித்து உணர்ச்சி இருந்ததினாலும் வைத்திய ரொருவருடைய உதவியையும் அவர் கோரவில்லை . மே மாதம் 3உ அதிவாரங் காலை 5 மணிக்கு

பண்டிதரவர்கள் எல்லோரையும் பார்த்து இந்த தேகம் விழப்போகிறது என்றனர். அவருக்கு நெருங்கின பந்துக்களும் நண்பர்களும் அவர்களுடைய கதியைப்பற்றி பண்டித பெருமானை வினாவிய போது, அவர், உங்களுக்கு நான் சொல்லவேண்டியது ஒன்றே, அதாவது, உங்களுடைய தருமமும், கருமமுமே உங்களைக் காக்கும் என்று திருவாய்மலந்தருளினர். அடியேன் பத்திரிகையைக் குறித்து விண்ணப்பித்தபோது, அவர் திரிக்குறள் உரை இதுவரையிலும் நாம் எழுதியதோடு மாத்திரம் நிற்கவேண்டியிருக்கிறதே என்பது தான் குறை, இந்தப் பொய் சடலம் கூடியிருந்தவரையில் அவ்வளவுதான் செய்யமுடிந்தது. "தமிழன்" ஆகிய குழந்தையை உன் கையில் ஒப்பித்து விடுகிறேன், உன்னால் வளர்க்க முடியமல்லவா? என்றனர். அவரோடேயே அடியேன் இதுகாறும் உழைத்துவந்த அனுபோக்கத்தைக் கொண்டு பத்திரிகையை நடத்தக்கூடும் என்று நம்பிக்கையாக விடையளித்ததும் பண்டிதர் திருப்தி அடைந்து களித்தனர். அவரைத் தாம் ஸ்தாபித்துப் பாதுகாத்து வந்த சத்திய சங்கங்களைக் குறித்துக் கேட்டபோது புத்தரது ஆதிவேதம் என்னும் நூல் பற்றுக்கோயாக இருக்கட்டும். அதனை ஆராய்வோருக்கு தர்மம் விளங்கும் சங்கமும் நிலைநிற்கும் என்றனர். சென்னையில் கட்டவேண்டிய அறப்பள்ளியைக் குறித்து வினாவியபோது அவர் ஒரு தீர்க்கதரிசிபோல் பொன் சிகரங்களோடு கூடிய அறப்பள்ளி ஒன்று சீக்கிரம் ஸ்தாபிக்கப்படும் என்று பூர்ண

நம்பிக்கையுடன் சொன்னார். அவரது வார்த்தை நிறைவேறும்படி புத்தபகவான் திருவருள் புரிவாராக! மே மாதம் 5-ம் நாள் காலை பஞ்சஸ்கந்த பிரிவை அடைவதற்கு சில நிமிஷங்களுக்கு முன் அவர் தம்மெய்ச்சுற்றியிருந்த உறவினரையும் சீடர்களையும் நோக்கி சந்தடி செய்யாதேயுங்கள், இந்த தேகத்தைக் கொஞ்சநேரம் ஒன்றும் தொந்தரவு பண்ணவேண்டாம் என்று ஆக்ஞாபித்தார். பிறகு நிர்மயமாய் மன அனந்தத்துடன் புராதன பௌத்த முனீந்திரர்களைப் போல் கைகளைக் கூப்பிக்கொண்டு சவுபாதிஸேஸ நிருவாண மார்க்கத்தில் நின்று சுற்றி நின்றவர்களெல்லாம் பிரமிக்கும்படி பஞ்சஸ்கந்த பிரிவினை அடைந்தார்! இவ்வதிசயத்தை கண்ணாரக்கண்டு அருகிலிருந்த அனைவரும் செயலற்று, அழவும் வாய்வராமல், எங்களையும் அறியாமல் கண்ணீர்ப் பெருக ஸ்தம்பித்து நின்றோம். அன்பே உருவாயமைந்த திருமேனியையும் ஏழைகளிடத்தில் இரக்கம் நிறைந்த கண்களையும் எல்லோர் மனத்தையும் ரஞ்சிக்கச் செய்யும் புன்முறுவல் பூத்த திருமுக மண்டலத்தையும் இனி எப்போது காணப்போகிறோம் என்று எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கி நின்றோம். அவருடைய கிருபை நிறைந்த உபந்நியாசங்களைக் கேட்பது இனி கிடைக்குமோ வென்று துக்கக்கடலில் ஆழ்ந்தோம். ஆனால் மானுடராய்ப் பிறந்தோரெல்லாம் பஞ்சஸ்கந்த பிரிவினை அடைய வேண்டியது தானே.

பஞ்சஸ்கந்த பிரிவினை அடைந்த பிறகு இருந்த அவரது திருமுக விலாசத்தை யாவரே வருணிக்கத்தக்கவர். அன்று பகலெல்லாம் அவரது உறவினரும், நண்பர்களும், சீடர்களும் நூற்றுக்கணக்காக வந்து பார்த்துவிட்டுப் போய்க்கொண்டிருந்தனர். பகல் 3 மணிக்கு அவருக்குப் பரிசளித்திருந்த மூன்று மெடல்களையும் அணிந்து அலங்கரித்து அவரைத் தரிசித்தோம். மாலை 5.30 மணிக்கு வானத்தில் மேகங்கள் அடர்ந்து புஷ்பமாரிப் பெய்தாப்போல் தூறி நிலத்தைக் குளிரச்செய்தது மனோகரமாயிருந்தது.

"நல்லாரொருவருளரேவ் அவர் பொருட்

டெல்லார்க்கும் பெய்யுமழை"

மாலை 6 மணிக்கு சர்வாலங்கிருதங்களோடு அவரை வெள்ளைப் பெட்டியில் வைத்து புஷ்பங்களால் அலங்கரித்திருந்த விமானத்தில் இருக்கச் செய்து பௌத்தன்ம சின்னங்களுடன் முன்னால் புத்தரது ஆதிவேதத்திலிருந்து உருக்கமான பாடல்களைப் பாடிக்கொண்டுவர கோலம் புறப்பட்டது. அநேக பர்மிய பௌத்த பிஜீக்களும், இந்திய பௌத்தர்களும், பர்மிய பௌக்கர்களும் . ஆயிரங்கணக்கான ஜனங்களும் கோலத்துடன் வந்தனர். பண்டிதபெருமான் அவர்களே காருண்யம் பொருந்திய பிரிட்டிஷ் கவர்ன்மெண்டிலிருந்து பௌத்தர்களுக்காக வாங்கிய மயானத்திற்கு தேவ விமானம் கொண்டுபோகப் பட்டது. விமானத்தை இறக்கினதும் சென்ற 1500

வருடங்களாக நடந்திராத பௌத்த சடங்குகள் வெகுசிரத்தையுடன் நடத்தப்பட்டன.

பிறகு மிஸ்டர் ஏ.எஸ். முதலியாரவர்கள் பண்டிதபெருமானவர் களைப்பற்றி அங்கில பாஷையில் ஆரவாரத்துடன் உபந்நியாசித்தார். அதன்பின் கீழ்குறித்துள்ள பாடல்கள் முறையே பாடப்பட்டன.

இப்பாடல்கள் பாடி முடிந்ததும் அவருடைய விஷயங்களையெல்லாம் பார்த்துக் கொண்டுவந்த கோலார் தென்னிந்திய சாக்கைய பௌத்த சங்கத்தின் அக்கிராசனாதிபதியாகிய ஸ்ரீமந் எம். வொய். முருகேஸம் ஸாஸன் தாயக அவர்கள் முடிவுரை கூறி அமர்ந்தனர். பிறகு அடியேன் அவரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு புத்ததன்மக் கோட்பாட்டின்படி தகன கைங்கரியம் நிறைவேறியது. தொடர்ந்துவரும்.

சி.ஐ. பட்டாபிராமன்

7:48; ஜூன் 17, 1914





நவீன இந்தியாவின் மாபெரும் அறிஞர்களுள் ஒருவர் பண்டிதர் அயோத்திதாசர் (1845–1914). தமிழ்–பௌத்த மறுமலர்ச்சி இயக்கத்தைத் தோற்றுவித்து தீவிரமாகச் செயல்பட்டவர். காலனியாதிக்கத்தின் இக்கட்டான காலகட்டத்தில் வாழ்ந்த இவர், சமத்துவம், பகுத்தறிவு, நவீனத்துவம் முதலான கொள்கைப் போக்குகளில் தமிழக அளவில் பெரியாருக்கும் இந்திய அளவில் அம்பேத்காருக்கும் முன்னோடியாக விளங்கினார்.

அயோத்திதாசரின் சிந்தனைகள் 1907 முதல் 1914 வரை ஏழாண்டுகள் அவரால் நடத்தப்பட்ட *தமிழன்* என்னும் வார இதழில் எழுத்து வடிவம் பெற்றன.

தொகுப்பாளர் அலாய்சியஸ் கடின முயற்சி மேற்கொண்டு *தமிழன்* இதழ்கள் அனைத்தையும் தேடிக் கண்டுபிடித்து, அயோத்திதாசர் எழுத்துகளைக் காலக்கிரமத்தின்படி, இதழாதாரத்துடன் அரசியல், சமூகம், சமயம், இலக்கியம் என்ற 4 பெரும் பிரிவுகளுக்குள் அடுக்கியிருக்கிறார்.

தொகுப்பாசிரியர் ஞான. அலாய்சியஸ், சமூகவியல் மற்றும் வரலாற்றுத் துறை ஆய்வாளர். புதுதில்லி, ஜவகர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் தனது ஆய்வுப் படிப்பை 1991 முதல் 1997 வரை மேற்கொண்டிருந்தார்.

இதுவரை இரண்டு நூல்கள் எழுதியுள்ளார். **`Nationalism without a Nation in India'** என்ற முதல் நூல் ஆக்ஸ்போர்ட் யுனிவர்சிட்டி பிரஸ் மூலமாக 1997இல் வெளியானது. அயோத்திதாசர் மற்றும் தமிழ் பௌத்தம் குறித்த இவரது ஆய்வு நூல் **`Religion as Emancipatory Identity: A Buddhist Movement among the Tamils under Colonialism'** என்ற தலைப்பில் `நியூ ஏஜ் இண்டர்நேஷனல்' வெளியீட்டாளர்களால் 1998ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. தற்போது சூரத்திலுள்ள **`Centre for Social Studies'** என்ற ஆய்வு மையத்தில் ஆய்வாளராகப் பணிபுரிகிறார்.

